ஸ்ரீ

ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்.

ஸ்ரீமத்

# பாகவதபுராணம்.

புலவர் திலகராகிய

## ஆரியப்பப்புலவர்

அருளிச்செய்தது.

இது.

ம-ள-ள-ஸ்ரீ கரங்கம்பாடி,

**ந. வ. சுப்பராயலுநாயுடவர்கள்**

வேண்டுகோளால்,

சென்னை இராசதானி சருவகலாசாலைத் தமிழ்த் தலைமைப்புலவர்

கோமளபுரம்,

**இராசகோபாலபிள்ளையவர்களால்**

கையெழுத்துப் பிரதிகள் ஒன்றற்கொன்று பாட
பேதமாயிருத்தலைப் பலபிரதிகளைக்கொண்
டாராய்ந்து வழூஉக்களைந்த
பிரதிக்கிணங்க,

குயப்பேட்டை

**வீ. இராஜு முதலியாரால்,**

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

1907.

இதன் விலை ரூபா—௨.

ஸ்ரீ

    

ஹரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை.

ஸ்ரீமதே ராமாநுஜாய நமஃ

# ஸ்ரீமத்பாகவதபுராணம்.

## முதற்கந்தம்.

சிறப்புப்பாயிரம்.

தரவுக்கொச்சகக்கலிப்பா.

சீர்பூத்தபரஞ்சுடராய்ச்சித்தாகிக்கானவிடை
நீர்பூத்ததெனவுலகநிறைந்தொளிதன்பாற்றோன்ற
எர்பூத்தமுத்தொழிலுமினிதியற்றித்தனிநின்ற
கார்பூத்ததிருமேனிக்கடவுண்மலரடிநினைவாம். க

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சிந்தகத்துக்கீழமர்ந்து திருமதுரகவியடிகள்சிந்தையுட்க
சிந்தகத்துப்பேரின்பக்கடல்கோப்பத்திரைப்புணரிதிவள்வெண்முத்துச்
சிந்தகத்துமன்னுயிர்களொருபெருவீடடையுநெறிதெருண்டுசூழ்வி
சிந்தகத்துமலமறச்செந்தமிழ்மறைசொல்பெருமுனிதாள்சிந்தித்துய்வாம்.

பிறந்தபொழு தேதுறந்து பிறைக்குழவி போனடிப்பப் பின்போய்த்
தொன்னூல், அறைந்தபுகழ் வியாதமுனி யாதாத்தான் மதலாயென் றழை
ப்பச்செவ்வாய், திறந்துநறை பொழியுமலர்ச் செழுந்தருவு மேனென்ன
வுயிர்கள்யாவும், நிறைந்துறையுஞ் சுகமுனிவ னிரையிதழ்த்தா மரைமலர்
த்தா ணினைதல்செய்வாம். உ

கலிநிலைத்துறை.

சுழித்துநல்லமுதொழுகியஞ்சுகமுகஞ்சேர்ந்து
தழைத்தநான்மறைத்தடஞ்சினைக்கற்பகத்தருவின்
பழுத்துதிர்ந்ததுபரமபாகவதமென்றிசைக்கும்
விழுப்பெருங்கனிநுகர்ச்சியேவிரும்புவார்மேலோர். ௩

### கலிவிருத்தம்.

பூமடந்தைபுணர்ந்தவன்மாக்கதை
நாமடந்தைநவின்றனளாகலான்
காமடந்தையென்றோர்கவியான்சொலின்
பாமடந்தையள்பாடியதாகுமே. ரு

### வேறு.

உறைபடுமங்குல்வானுருவவோர்திறம்
சிறைபடுபுள்ளெலாஞ்செல்லவல்லவோ
இறைவனூலறிவினரெடுத்திசைத்தனென்
அறிவினதளவுமேயறைவன்யானுமே. சு

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## முதலாவது,

## மாயவனமிசாவதாரமுரைத்தவத்தியாயம்.

---

### கலிநிலைத்துறை.

தாமரைத்தவிசுறைதருசதுர்மறைக்கிழவன்
நேமியுய்த்தலானேமிசமெனநிலநிகழ்த்தும்
நாமமுற்றநல்வனத்திடைநவில்சவுனகரே
ஆமுதற்றவர்சத்திரவேள்வியாற்றினரால். க

அரியமாமகம்புரிதருசாலையிலடைந்த
உரியமாதவச்சூதனுக்குயர்தவிசளித்துப்
பெரியமால்கதைகேட்குறுபெட்பினராகித்
தெரியுநான்மறையந்தணர்செப்பலுற்றனரால். உ

வந்துவெங்கலிவளர்தலிற்றருமங்கடவங்கள்
சிந்தையுற்றொருகுறைவறச்செய்குவதரிதால்
நந்தலின்றியானந்தமாய்நண்ணியஞானம்
எந்தவாற்றினுலியைந்திடுமெனமதித்திருந்தேம். ங

வேதநான்கெனவிதித்தவன்விளம்புநற்புராணம்
ஓதுமொன்பதிற்றிரட்டியுமுணர்தருமுரவோய்
காதலோடுனைக்கண்ணனேகாட்டிடக்கண்டேம்
ஏதநீங்கினேமுத்தியுமெமக்கெளிதாமால். ச

தரையின்மேற்பொறைதவிர்த்திடத்தண்ணளிசுரந்து
விரியுமன்பினிற்றன்பதம்வேட்டவர்தமக்கும்
பரிவினிற்கொலைபற்றியவுளத்தொடுபகைத்துக்
கருதினோருக்கும்வீடருடன்மையேகருதி. ரு

உலகெலாந்தனதகல்வயிற்றொருபுடைகிடப்பக்
கலையரும்புறுகதிரிளமதியெழில்கவற்றும்
திலகவாணுதற்றேவகிதிருவயிற்றுதித்தோன்
குலவுமாக்கதைகூறுவாயென்றுகூறினரால். கா

முனிவரித்திறமுரைத்தலுமுழுதுணர்சூதன்
அநகன்மாக்கதைகேட்பவுள்ளன்புமிக்கதுதான்
வினையினீங்கியமெய்த்தவப்பயனெனுக்குருவைப்
புனிதமாலைநாமடந்தையைப்போற்றினன்புகல்வான். எ

அலர்பொலம்பொகுட்டரக்கிதழ்முளரியம்போதில்
குலவுசேயிழைகுவிமுகிழிளமுலைமணந்தோன்
கலையின்மன்னியகலைகளேகனைகடல்வேலி
உலகெலாநிறைந்தவன்றிறமெங்ஙனமுரைக்கேன். அ

கரைக்குறும்பெறிகனைகடற்றுயிலிறைதொன்னூல்
விரிக்கநாண்மடல்விரிமலரவற்குமற்றரிதால்
தெரித்தநான்மறைத்திருமுனியருளினாற்சிறிதிங்
குரைப்பலென்றுணர்சூதமாமுனியெடுத்துரைப்பான். கூ

உரைசெய்வெங்கலியுததியைக்கடந்திடற்கோடம்
பொருவிறன்பதந்தோற்றியகங்கையிற்புனிதம்
தெரிதரச்சொலக்கேட்கநற்றெவிட்டிடாவமுதம்
அரியவெம்பவநோய்க்கருமருந்தரிகதைதான். க0

புரியும்பாதகம்போக்கிடப்புனிதநீர்படிந்தால்
உரியமாதவருறவுந்துற்றிடுமுற்றால்
மருவுவெம்பவந்தீர்ந்திடுமால்கதைகேட்பப்
பெருகுமன்புபின்பிறப்பறுஞானமெய்திடுமால். கக

மன்னுமாயுளுமதிகளுமிக்கிலாக்கலியில்
தன்னையோர்முறைசாற்றியதவத்தினர்தமக்கும்
பன்னுதொல்கதைபத்தியிற்கேட்குநர்தமக்கும்
துன்னுவெம்பவந்தீர்த்துவீடருளுவன்றொல்லோன். கஉ

பவமெலாந்தொலைத்தருள்கதைபத்தியிற்கேளான்
புவியின்மேற்பிறந்தென்பயன்புனிதனற்கதையை
நவிலுநாவினோர்நண்ணியவன்பொடுகேட்கும்
செவியினோர்தவத்தால்வருஞ்சென்மமேசென்மம். கங

துளவினன்பதத்தன்பிலாய்நனிதுணிந்தே
அளவிலாதநற்கருமங்களாற்றினுமறிவின்
வளமிலாதவராயுடல்வருந்துநராமக்
கிளரும்வான்கதியடைந்திடக்கிடைப்பதொன்றிலையால். ௧௪

நலத்தினிற்றிகழ்நான்கெனும்வருணவாச்சிரமப்
புலத்தினிற்றமகருமங்கள்பத்தியிற்புரியின்
வலத்தின்மிக்குயர்மாயவன்மகிழ்தரமருவும்
பலத்தையிச்சியாதாற்றுவோர்பரஞ்சுடராவார். ௧௫

ஆற்றுமோர்வினையுருப்பெயரடைந்திடாவமலன்
சாற்றுதாமதத்தாலரனுருவெனச்சார்ந்தான்
போற்றிராசதத்தாலயன்புரமெனப்பொலிந்தான்
எத்துசாத்துவத்தாலரியுருவெனவியைந்தான். ௧௬

தாமதத்தனுத்தாவருந்தாவரஞ்சார்ந்த
தூமமற்றிராசதத்தனுச்சொல்லுசத்துவத்தின்
ஆமுதற்றனுவாங்கெழுமக்கினியதுதான்
வாமமூர்த்தியைத்தரிசனமாக்கிடும்வகையால். ௧௭

முத்தரானவர்பிரமமொன்றெனத்தனிமொழிவார்
வித்தைசேர்தருமுளத்தினோர்விராட்டுவைநயப்பார்
சுத்தரானவர்பரமவான்மாவெனச்சொல்வார்
பத்தியோர்பகவானெனவேநனிபகர்வார். ௧௮

கேடில்வேதமுமகங்களுஞ்செழுமியதவமும்
நீடியோகமுந்தானமுநிகழ்த்தியகதியும்
கூடுமாயையுந்தருமமுங்குலவியவீடும்
நாடுஞானமுநவிலினாராயணனெனுமால். ௧௯

பின்னபின்னமாத்தருக்களிற்பிறங்கியதழலின்
உன்னுகூத்தினிற்பற்பலவேடமுற்றவரின்
மன்னுமெவ்வுலகத்தினுமருவியேழ்பிறப்பாத்
துன்னுநல்லுருவாகவுந்துலங்குவன்றொல்லோன். ௨௦

ஆயிரந்தலையாயிரங்கண்மலரணிசேர்
ஆயிரம்புயமாயிரஞ்சேவடிதழைப்ப
ஆயிரந்தலையரவினினறிதுயிலமர்ந்த
ஆயிரம்பெயரிறைகலையளப்பிலவுளவால். ௨௧

இலகுமேழ்பிறப்பினில்வருசராசரத்தோடும்
உலகெலாந்தனியுதிப்பதுமொழிந்தடங்குவதும்
அலகிலாதவன்பாலலதிலையவயவமாம்
கலையலாதுவேறுல்கெனக்காட்டவுமிலையால். ௨௨

உரியமாயையா லுலகெலாம்படைத்திடவுவந்து
விரியுமண்டமாய்விளங்கியவிராட்டோம்புருடன்
மருவுதன்கலையாற்கவுமாரமாய்வயங்கவ்
வரியராஞ்சனகாதியராயவதரித்தான். ௨௩

ஆதியாமவதாரமாய்ப்புருடனையறைவார்
கோதிலாதவன்குலவிரண்டேமுதலாக
ஏதமீங்கவதாரங்களெடுத்தமையினிநான்
ஓதுகேனெனச்சூதமாமுனியெடுத்துரைப்பான். ௨௪

இறைவனனமாலேனமாயிருநிலமெடுத்தான்
மறைசொனாதனுப்பஞ்சாரத்திரம்வகுத்தான்
விறல்செய்மாநரநாரணராய்த்தவம்விரித்தான்
உறையுந்தாய்க்குநற்கபிலனாய்த்தத்துவமுரைத்தான். ௨௫

வித்தைசேர்தத்தாத்திரையனாய்விண்ணவர்போற்ற
அத்திரிக்குநன்மகனெனவுதித்தலர்க்கனுக்கும்
புத்தியாலரிதாண்வரப்போற்றுவோன்றனக்கும்
தத்துவந்தெரித்துரைத்தனன்றரணிமேன்முதல்வன். ௨௬

ஓதுநான்மறைருசியெனவுரைதருமுரவோன்
மாதவத்தினன்மாமகப்புருடனாயுதித்தே
ஆதியாகியமனுவினையடைந்தனனாபி
காதலாற்றாவிடபனாய்க்கருதுவீடுற்றான். ௨௭

பிருதுமன்னவனாகியேபெருவளஞ்சுரப்பக்
கருதுபூமியைக்கறந்தனன்மீனுருவெடுத்தே
மருவுசீர்த்திவைவச்சுதனெனும்பெயர்மனுவாம்
அரசர்கோனைமன்வந்தரத்தடைகெடக்கெடுத்தான். ௨௮

அந்தரத்துறையமாருமசுராருங்கடையும்
மந்தரத்தினைமறுகுமவ்வாரிதிமருவிச்
சுந்தரப்பெருங்கமடமாய்முதுகினிற்சுமந்தான்
கந்தரத்தினிற்கவுத்துவங்கவினியகண்ணன். ௨௯

மருவுவேலையின்வயங்குதன்வந்திரிபகவான்
உருவமாகிநல்லமுதுறைகடத்தொடுமுதித்தான்
பொருவின்மோகினிவடிவமாய்ப்புத்தமுதத்தை
இருவிசும்பின்வாழிமையவர்க்கீந்தனனிறைவன். ௩0

சனகாதியரேத்துறத்தயங்குதம்பத்தின்
அநகமாநரமடங்கலாயவதரித்திகலும்
கனகனாகியகடுந்திறலோனெஞ்சுகதழ்ந்த
சினகவாளினன்மாய்தரச்சினந்துடன்கீண்டான். ௩௧

சினக்கும்வாள்வலியவுணர்செய்தீமைசொல்லதிதி
தனக்குவாமனனாகிநற்றனிமுதலுதித்தே
உனக்குநீள்புகழுற்றிடவுவந்துமாவலிநீ
எனக்குமூவடியிடமருளென்றுமுனிரந்தான். ௩௨

பரசுராமனாய்ப்பாரினிற்றலைமுறைமூவேழ்
அரசர்மாமுடிதுணித்தனன்வியாதனாயிறைவன்
விரவுமாமறைநான்கெனவகுத்துமேன்முறையால்
உரைசெய்வேதத்தின்முன்மறைபயிலனுக்குரைத்தான். ௩௩

வழுத்துசீரிரண்டாமறைவைசம்பாயனற்கும்
முழுத்தசாமத்தைச்சயிமினியாமுதலவற்கும்
தழைத்துமேவுநான்காமறைதனைச்சுமந்துவுக்கும்
தொழத்தகும்படிபுராணமென்றந்தைக்குஞ்சொற்றான். ௩௪

அணிசெய்காவுசூழயோத்தியிலிராமனென்றடைந்து
பணிசெய்வானரப்படைகளாற்பரவையையடைத்து
மணிசெய்மாமதிளிலங்கையின்மருவிராவணனைத்
துணிசெய்தான்வந்துபதத்துணைவானவர்தொழுவோன். ௩௫

தெண்ணிலாநகையுரோகிணிதேவகிவயிற்பால்
வண்ணனாகியவிராமனுமலர்ந்தசெங்கமலக்
கண்ணனாகியகண்ணனுமெனவந்துகடல்சூழ்
பெண்ணினீடலைப்பெரும்பொறைதீர்த்தனன்பெரியோன். ௩௬

புனிதன்கீகடதேயத்திற்புத்தனென்றுதித்தும்
துணிசெய்வெங்கலியிறுதியிற்றுரகமாயெழுந்தும்
பணிசெய்தெண்டிரைப்பாரினிற்பகைஞரைத்துணித்தே
இனிதுநல்லறநிலையினினிறுத்துவனினியால். ௩௭

இருபதோடிரண்டெனுமவதாரங்கண்முறையே
மருவுமிங்ஙனமாயவன்கலைகளாலின்னும்
கருதுசீரவதாரங்கள்கணக்கிலையெண்ணின்
அரியவாரிதிமணலினுமநேகமென்றறைவார். ௩௮

போற்றுதேவர்கண்மனுக்கண்மற்றவரெழிற்புதல்வர்
சாற்றுமாந்தர்கண்மரீசியேமுதலியதவத்தோர்
ஆற்றுநீர்ப்பிறிவெனவவன்கலையினிற்பிறிவாய்த்
தோற்றுவாரிதையேத்துவார்தொல்வினையறுப்பார். ௩௯

திருந்துநல்லறிவாயவன்குணத்தொடுசேர்ந்து
வருந்துமுத்தொழிலியற்றுமாமாயையைமணந்தே
இருந்தனன்னெனத்தோன்றினுமிவையுளத்தறிவு
பொருந்திநோக்கின்வெங்கானலிற்புனலெனப்போமால். ௪௰

பற்றுநீக்கியபராசரற்குதித்தநற்பாலன்
கொற்றமால்கதைவகுத்தவன்குமாரனுக்கிசைப்ப
வெற்றிமாதவன்மைந்தனும்விண்டுராதனுக்குச்
சொற்றவாறியான்சொல்குவன்கேண்மினென்றுரைத்தான். ௪௧

மாயவனம்சாவதாரமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௪௭.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௨-வது, ஸ்ரீநாரதர் தோற்றமுரைத்தவத்தியாயம்.

---

உரைத்தவாசகங்கேட்டலுமுனிவரருவந்து
வரத்தின்மிக்கவவ்வியாதமாமுனிவன்மால்கதையை
விரித்தவாறெவன்காரணம்விளம்பயார்சொன்னார்
அருத்திமாதவசொல்கெனச்சூதனங்கறைவான். ௧

கடல்வயிற்றெழுகற்றைவெண்கதிர்மதிகடுப்ப
நெடுநிலாப்பொழிநிரையிதழ்முளரிவீற்றிருப்பாள்
வடமொழிப்பெயர்வயங்குநல்வளந்திகழ்பேர்யாற்
றடைகரைத்தலைவியாதமாமுனிவரனடைந்தான். ௨

நிலவரைப்பினிலுறைபவர்நெஞ்சகந்தெருளப்
பலவுரைத்தனம்புராணநூல்பாரதந்தெரித்தேம்
மலைவறப்பழமறைவகுத்துரைத்தனமென்னே
இலகியெம்முளந்தெருடரப்பெற்றிலமின்னும். ௩

வரிச்சுரும்பிமிர்வண்டுழாய்முகில்கதையினிது
விரித்திலேமினிவிளங்கயாம்விரிக்குவமென்னாக்
கருத்தினெண்ணினனிருந்துழிக்கனிந்ததெள்ளமுதைச்
சிரித்தவின்னிசையாழ்முனியவ்வழிச்சேர்ந்தான். ௪

சேர்ந்தயாழ்முனிசெழுமறைக்கிழவனைநோக்கி
ஆர்ந்தநூல்பலவுரைத்தனையாயினுமன்பால்
ஓர்ந்துமால்கதையுரைத்திலைபோலுமுட்டெளிய
வார்ந்துதெள்ளமுதொழுகமற்றவன்கதைவகுப்பாய். ௫

களிக்குமஞ்சிறைவண்டுணக்கலுழியந்தேறல்
துளிக்குந்தாமரைக்கிழவனோடுலகெலாந்தோற்றி
அளிக்குமாயவன்கதையலாலாருணெஞ்சம்
தெளிக்கவல்லதுபிறிதுமொன்றுளதுகொறெரியின். ௬

மானதப்பெருந்தடத்தினின்மருவியவன்னம்
கானகச்சிறுகாக்கைசேர்தடங்கருதாதால்
நீனிறச்செழுமுகில்கதைநிகழ்த்திடக்கேட்போர்
ஞானமிக்கவராய்ப்பிறிதொன்றையுநாடார். எ

கன்னியந்துழாய்க்கரியவன்கதைகளேயன்றிப்
பின்னைமற்றொருகதையும்வெம்பிறவிநோய்போக்கா
முன்னமால்கதைகேட்டதான்முடிந்ததென்பவநோய்
அன்னவாறுகேளெனமுனிநாரதனறைவான். அ

## எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

வழிந்துமட்டொழுகு முளரியம்பசுந்தார் வனையுமோர் மறையவன்றனக்குத், தொழும்புபட்டொழுகு மொருத்திதன்வயிற்றிற் றோன்றிமுற்பிறப்பினில்வளர்நாள், பொழிந்திடுந்தண்கார்ப் பருவம்வந்திறுக்கப் புகன்றவம்மறைவலான் மனைவாய்த், தழைந்தெழுமார்வம் வேர்முதறடிந்து தலைப்படுதுறவின ரடைந்தார். கூ

அடைந்திடுமெதிகடமக்கெனையேவலந்தணன்செய்திடப்பணித்தான்
கடந்தவர்மிகவுண்மகிழ்ந்திடும்படிசெய்கருத்தினனேவல்செய்தவர்சேர்
இடந்தனின்மருவிநுகர்ந்திடுசேடமிருந்தவர்சொல்லினுண்டதனால்
தொடர்ந்திடுபாவம்வேரொடுந்தொலையத்துலங்கியதுள்ளமுமாதோ. க0

சங்கொடுதிகிரிதாங்கியதடக்கைத்தாமரைக்கண்ணினன்சரிதம்
அங்கவாமுதமூற்றிருந்தொழுகவறைவதுகேட்டனனதனால்
கங்கைசூழ்கமலத்தாளினற்கன்புகனிந்திடவறிவொடுபொலிந்தேன்
பொங்காரத்தீண்டியீன்றவளிறப்பப்பொன்வரைச்சாரல்வாய்ப்புக்கேன். ()

தற்பரமாகியமலமாய்நின்ற தலைவனைக்காண்குதுமென்று,வெற்பினிற்றவஞ்செய்காலையிப்பிறப்பின் விழியெதிர்காண்கிலையெனவோர், சொற்பெருவிசும்பிலெழுந்ததுவினையாற் றோன்றுமவ்வுடலம்வீழ்ந்திடலும்; கற்பமொன்றொழியக்கண்படைபொருந்துங்கடிமலரவனிடத்துற்றேன்.()

உடைக்கும்வெண்டரங்கக் கருங்கடன்முகட்டி லுறங்குமவ்வுறக்கம்விட்டரும்பு, வெடித்தபூங்கமலமலர்புரைசெங்கண் விழித்தனன்விழித்துநான்மறைநூல், வடித்துணர்மரீசியங்கிராவாதி மாமறைக்கிழவரைமுறையின், படைத்தனன்படைக்குங்காலையில்யானும் பனிமலரவனிடத்துதித்தேன். கங

விளக்கழற்கொழியாவெண்மதிக்கலா விரிதிரைக்கருங்கடன்முகட்டின், முளைத்துயர்பசும்பொன்வரைவலந்திரியு மோட்டுவெங்கதிரவற்கேகா, உளத்திருள்கடியுமாயவன்றொன்னூ லுரைமதியென்றுபைந்தேறல், துளக்கறவொழுகியன்னபைந்தொடையாழ்த் தொன்முனிசொற்றனனகன்றான். கச

நாரதனகலநான்மறைக்கிழவனகுமணிச்சுடிகைநாகணையான்
பார்பொதிபசுந்தாட்டாமரைபரவிப்பழமறைபொருவுபாகவதம்
தேர்தொறுமமுதமூற்றிருந்தொழுகுதீஞ்சொலாற்றெள்ளிதிற்புனைந்தாங்
கார்வமொடிருந்துமுழுதுணர்சுகன்றனஞ்செவிநிறைத்தனனன்றே. கரு

ஸ்ரீநாரதர் தோற்றமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-சுஉ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௩-வது, தன்மபுத்திரன் அரசியலடைந்தவத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

அனையதுகேட்டவாறேயரும்பெறற்காட்சியெஃகின்
வினைவனமெறிந்துசாய்த்தவியாதமாமுனிவன்மைந்தன்
பனிமதிக்கவிகைநீழற்படுதிரைவையங்காக்கும்
குனிசிலைவிசயன்மைந்தன்குமரனுக்குரைசெய்தானால். க

என்னலுமுனிவர்சொல்வார்யாதினும்பற்றொன்றின்றித்
தன்னையேநோக்கிநின்றதபோதனன்றன்மைசாற்றின்
உன்னியவையங்கொள்வானோர்பசுப்பீர்கொள்காலம்
துன்னுவன்மனைகளன்றித்தொன்னகர்மனையின்வைகான். உ

மத்தர்போன்மூகரேபோல்வனைதுகிலின்றிஞான
வித்தகனோர்நாட்சென்றான்வியாதமாமுனிபின்செல்ல
அத்திசையரம்பைமாதரணிதுகிலின்றிக்கூலம்
தத்திவெண்டாளஞ்சிந்துதடநதியாடுவாரால். ௩

நீடியநதியிலாடுநேரிழையரம்பைமாதர்
வீடறிசுகனைக்கண்டுமென்றுகில்வனைந்திலாராய்
நாடிநான்மறைகள்சொற்றநற்றவவியாதனைக்கண்
டோடினார்கரைசென்றுற்றாருடுத்தனர்நாணித்தானே. ௪

வரம்பிலாமறையைநான்காய்வகுத்தவன்வனப்புவாய்ந்த
அரம்பையர்தம்மைநோக்கியரைக்கொருதுகிலிலாதான்
நிரம்பியவறிவன்சென்றுநீங்கியபின்னர்யாழின்
நரம்பைவெல்சொல்லீர்சொன்மினற்றுகிலுடுத்ததென்றான். ரு

எடலர்கூந்தன்மாதரிசைத்தவம்முனியைநோக்கி
ஆடவரிவர்கண்மற்றையரிவையரிவர்களென்ன

நாடுதனினக்குண்டாந்தாற்றவன்றனக்கதில்லை
பீடுசான்முனிவவென்றேபேசினாகன்றுபோனர். ௬

இவ்வண்ணமறிவுதானேயிலங்கியசுகன்றன்யாண்டு
மைவண்ணத்தடக்கையானைமருவினன்கண்டுசொன்னன்
கைவண்ணக்களிற்றன்கேட்டதென்னைகொல்கருதியென்றார்
ஐவண்ணப்புலன்செற்றோருக்கன்பொடுசூதன்சொல்லும். ௭

துன்னுவாளரவுதீண்டித்தொலைந்திடவுயிர்தானென்று
முன்னமோர்மறையோன்மைந்தன்மொழிதருசாபமேவி
மன்னவன்வெறுத்தியாவும்வாநதிக்கரையினுற்றன்
அன்னவன்றன்னையங்கேயருந்தவன்கண்டுசொன்னன். ௮

என்றலும்பாவைசூழ்ந்தவிருநிலங்காக்குமேந்தல்
ஒன்றியசெல்வமெல்லாமுடலொடும்வெறுத்தானென்றாய்
நன்றவன்செய்தியெல்லாநவிலுதியென்றுமோகம்
வென்றவர்கூறச்சூதன்விழுத்தவர்க்கியம்பலுற்றன். ௯

கருமுகிற்குலங்கள்பெய்யக்கடையுகக்கடனீர்வான்போய்ப்
பெருகுதல்போலவந்தபெய்முகிற்குலங்களாகக்
குருகுலத்தரசர்சேனைக்குரைகடலிகலித்தம்முள்
பொருதுடைந்தரசவெள்ளம்பொன்னுலகடைந்தபின்னர். ௧0

வேறு.

காற்றின்மாமகன்கடுங்கதைப்புடைப்பினுற்கவின்பெறுகவானற்றுச்
சீற்றவாளராவுயரியமன்னவன்செருக்களத்திடைவீழப்
பாற்றினஞ்சுழல்பரிதிவேற்றுருவதன்பாவைபாலகரைவர்
மாற்றருந்துயில்புரிவுழிமுருக்கினன்வன்றிறற்பரித்தாமா. ௧௧

மஞ்சர்மாய்தலுமஞ்சகங்கீண்டெழுமலர்கதிர்த்தடித்தன்ன
அஞ்சொலாயிழையழுதலுமழற்கினின்னரும்பெறன்மகராவி
துஞ்சவாளுறைகழித்தவன்கருந்தலைதுணிக்குவன்யானென்னச்
செஞ்சிலைத்தழும்பிருந்ததோட்டனஞ்சயன்றேறிவர்ந்தனன்சென்றன்.

கண்ணன்றன்னொடுகட்கடைசிவந்தனன்கனன்றெழுகாண்டீவ
வண்ணவார்சிலைத்தனஞ்சயன்வெஞ்சினமடங்கல்போல்வானேக்கி
அண்ணல்வாம்பரிவிரவியபெயரினனஞ்சினனகன்றோடித்
தண்ணந்தாமரைத்தவிசுறைதனிமுதறழற்படைதொடுத்தெய்தான். ௧௩

எழொடேழுலகங்களுமெரிதாவெறிதிரைக்கடன்மேய்ந்த
ஊழியாரழல்சுடுப்பவெங்கனற்றிரளுமிழ்ந்ததுவாலோடும்
ஆழியான்முகநோக்கினன்வரிபிடற்றஞ்சிறையளிகோடி
சூழுந்தண்டுணர்ச்சோலைவெந்தியுணத்தொடுசிலைவளைத்தோய்கேள். ௧௪

பாட்டுவெண்டிமிர்மலரினுன்படையிதுவிட்டனன்பரித்தாமா
மீட்டலாங்கவனறிகலனியுமவ்விறற்படைதொடுகென்னுச்
சூட்டராவணைத்துயிலொழிபரம்பொருடுவரிதழ்மலர்விள்ளக்
கோட்டினுன்சிலைதொட்டனனயன்படைகுலைந்ததுநிலமாதோ. கரு

தொட்டவெங்கணையூழியினுலகெலாஞ்சுட்டவெங்கதிரேபோல்
முட்டிநின்றெதிர்படையொடுபொரவெளிமுகடுதீந்ததுகாணு
விட்டிலங்கியவயன்படையிரண்டையுமீட்டனன்விரைந்தெய்திக்
கட்டினுன்மறைக்காளையையாயிரங்கண்ணினுன்றருகாளை. கசு

உருவப்பூணணியுயிர்புரைகாதலருறங்குழியுயிர்மாய்த்த
குருதிவாட்படைக்குரிசிலைக்கொல்லுதிகொல்லுதியெனப்பல்கால்
அரவவெண்டிரைப்பாற்கடன்முகட்டினினம்புயவிழிதுஞ்சும்
கருணைமாகடல்கூறினன்றனஞ்சயன்கருத்தினைத்தெரிகிற்பான். கஎ

ஆட்டுவெண்டயிர்தாரிணும்மத்தரையஞ்சினாடைந்தோரைக்
கோட்டினிற்புரிகொடிஞ்சியந்தேரொடுகொல்படையிழந்தோரைத்
தோட்டபூங்குழன்மகளிரைமழவரைத்துயில்புரிகுநர்தம்மை
வீட்டினார்தமைவீட்டனல்லறனெனவிரித்தனனுரைசெய்தான். கஅ

அரவணைத்துயிலஞ்சனப்புயலனைங்கனமெடுத்தோத
விரைவிற்கொண்டுபோய்த்துருவதன்மகண்முனம்விடுத்தனனவள்காணு
ஒருவனந்தணனுனக்குவிற்றொழில்புவிவியப்புறவுணர்த்திட்ட
குரவன்காதலன்கொல்லனீவிடுகெனக்குயிலெனக்கரைந்தாளால். கக

இறப்புவந்ததேயின்னெழிற்புதல்வனுக்கென்றிவன்றனையீன்ற
நறைக்கருங்குழனங்கையும்பொறுமுதனன்றுகொலெனத்தாழ்ந்து
மறுத்தவிந்தொளிர்மதிபுரைதிருநுதன்மடக்கிளிமொழிகூற
அறத்தின்மாமகன்முதலவருவந்தனரழன்றனன்படைவீமன். உ0

அரிவைசொன்னதுமரசர்தமுள்ளமுமாழியானநிந்தேதான்
பெரியவெம்பிழைமறையவர்செய்திடிற்பிடித்தருஞ்சிகைபோக்கி
உரியசெல்வமாமிருநிதிமுதலியவொழித்துறைதருமூர்விட்
டிரியமற்றவர்த்துரத்துதலேயவர்க்கிருங்கொலையெனச்சொன்னுன். உக

மல்லலைத்ததோண்மாயவனுரைத்ததுமஞ்சரைக்கொன்றுனைக்
கொல்வலென்றுதானுரைத்ததும்பிழைப்பறக்கோதில்சீர்க்குருநாடன்
பல்படைத்தொழில்விதியினிற்பயிற்றியபார்ப்பனச்சிறுவன்றன்
எல்விலங்கியசிகாமணியிருஞ்சிகையீர்ந்துகொண்டனன்மன்னே. உஉ

பதுமைசேர்தருமாயவன்றன்னெடுபாண்டவர்முதலாயோர்
கதிர்செய்மாமதிக்கவின்பெறுதிருமுகக்கருங்குழற்பாஞ்சாலி
புதல்வராதியாய்ப்பொருகளத்திடையுயிர்பொன்றினர்தமக்கெல்லாம்
விதியினீமக்கல்வினைபுரிந்துதகநீள்வினைமுடித்தனர்மாதோ. உங

மலர்ந்தசெங்கதிர்மாமணியிழந்தவன்மலர்விழிசிவப்பூர
அலர்ந்ததாமரைப்பொருட்டுறையயன்படையபாண்டவமெனத்தூண்ட
உலங்கலந்ததோளைவர்தமுயிர்பிழிந்துண்ணவந்துறல்பாரா
இலங்குமாழியைநோக்கினன்மறைமுதலிரிந்ததப்படைமாதோ. உச

மருவளைத்தளிகூட்டுணைமலர்ந்ததண்மரைமலரயன்வாளி
அரவிளைத்திடவெகுளிமீக்கொண்டழன்றம்புயமலரோடச்
செருவிளைத்துவேல்பொருவிழியுத்தரை திருவயிற்றகஞ்சேர்ந்த
கருவளைத்ததுகனன்றுவெம்புகையொடுகனற்றிரளுமிழ்ந்தன்றே. உரு

தீத்திகழ்ந்தொளிர்சினப்படைகருவினைச்சேர்தலுந்தெருமந்தாள்
பார்த்தன்றேர்விடுபரமனையடைந்தனள்பங்கயநறும்போது
பூத்தகாவியந்துணைவிழிகலுழ்ந்துநீர்போற்றுவாயெனமாழ்கக்
காத்தளித்தனனருள்சுரந்தலையெறிகமலலோசனன்மாதோ. உசு

வேறு.

ஆடெழுவனையதிண்டோளைவரைப்புரந்தவண்ணம்
நாடிநானுரைக்கவற்றோநட்பொடுபகையிலாதாய்
ஏடவிழ்கமலக்கண்ணவென்றிருபனைக்கைவேழக்
கோடடியகழ்ந்திட்டானைக்குந்தியங்கேத்தினாளால். உஎ

தளையவிழலங்கன்மாலைத்தண்குடைத்தருமனோடு
தெளிவுடைமுனிவர்நண்ணத்தெரிகணையணையின்மீதாக்
கிளர்புகழ்க்கங்கைமைந்தன்கிடந்துழியினிதுசென்றான்
அளியிளம்பிறைப்பற்பேழ்வாய்நச்சராவணையான்மன்னோ. உஅ

கடம்பொழிகளிறுகாத்தகருணையங்கமலச்செங்கட்
டடஞ்சிறைக்கலுழப்பாகன்றலைவருந்தோற்றநோக்கி
விடம்பொழிதழல்வாய்வாளிவெவ்வணைக்கிடந்தவீரன்
உடம்பெலாங்குளிர்ந்துசெந்தேனூறவாய்விண்டுகூறும். உகூ

எழிற்படையெடுக்கிலேனென்றிசைத்தநின்மொழிவிட்டுன்னை
விழுப்படையெடுப்பித்தன்றிவிடுகலனெனயான்சொற்ற
மொழித்திறம்பிழையாவண்ணமுறுகுவெஞ்சினத்தவாழி
அழற்படையெடுத்தாயன்பர்க்களியைநீபெரிதுமன்றே. ஙO

சுரும்புசூழ்தொடையல்சோரச்சுரிகுழல்வீழமார்பின்
விரிந்தபொன்னுத்தரீயம்வீழ்ந்திடவிரைந்துதேர்விட்
டெரிந்தபொற்றிகிரிதாங்கியெறுழ்வலிமடங்கலேறு
கருங்களிறெதிரல்போலென்கண்ணுறல்கண்ணதாமால். ஙக

எழில்விளையாடுமோர்பத்தெழுதியகலவைச்செஞ்சே
றழிதரப்பொடித்தவேர்மாருடலஞ்சிலைக்கைப்பார்த்தன்
கொழுமணிக்கொடிஞ்சித்திண்டேர்க்குரகதத்தூளிமூழ்கி
ஒழுகுசேருகவோடியுற்றதென்னுள்ளத்தாமால். ௩௨

சொரிகணைமாரிபாயத்துணிந்தபொற்கவசத்தோடு
மரகதகாந்திகான்றுவயங்குநின்பசுந்தார்மார்பும்
குரகதத்தூளிசேர்ந்துகுழல்விராய்க்குறுவேர்வார்ந்த
முருகவிழ்கமலச்செவ்விமுகமுமென்முகத்ததாமால். ௩௩

நறைவளந்திகழ்பூமேவுநான்முகன்வழுத்தவெட்டாய்
மறைவளந்திகழுஞ்செய்யமாதவராசராய
நிறைவளந்திகழும்வேலைநெருக்குறுவிராசசூயத்
திறைவளந்திகழ்முற்பூசைக்கேற்றனையென்சொல்கேனே. ௩௪

நச்சராவுச்சிமேயநானிலப்பொறைதீர்ப்பான்வந்
திச்சையாஞ்சூதென்றேதுமெரிசினத்தழலைமூட்டிக்
கச்சமார்களிற்றுவேந்தாங்கடுவனமெரித்தகண்ணா
பச்சைமாலேநின்மாயைபகருதற்கெளியதன்றால். ௩௫

மூட்டமர்க்களத்தினேற்றுமொய்த்தவென்றமரையெல்லாம்
வீட்டிலனெனமுன்சொற்றவிசயனுள்ளிழுதைநீக்கி
நாட்டினைஞானமுன்னேநானுடலொழிக்குமின்று
காட்டினைநின்பொற்கோலங்கடந்தனன்பிறவிவேலை. ௩௬

அருங்கதிரம்பொனுடையணிதராவந்ததோற்றம்
பொருந்தியமாயையாமீப்போர்வையாற்பொதியலுற்றுத்
திருந்துமேலோரால்வாசுதேவனென்றுரைக்கும்பேர்பெற்
றிருந்ததிவ்வண்ணமென்னுவெனக்குணர்வித்ததாமால். ௩௭

உண்மையானினக்குநாடினுருவிலையுரைக்கிற்பொய்க்கும்
பெண்மையாமாயையாலேபெருகுநல்லுருவென்றாலும்
திண்மைசேர்நின்னையன்றித்திகழ்சகமின்றேலென்னே
வண்மையால்வழுத்துவார்யார்வழுத்திடப்படுவோர்யாரே. ௩௮

என்றிருங்கங்கைமைந்தனியற்றுநற்றவத்திற்றன்முன்
நின்றநம்மிறைவன்கோலநெஞ்சினிற்றெரியநாடி
ஒன்றியகுடம்பைநீத்துளுவந்தெழுபறவைபோல
அன்றுடற்சுமைநீத்தொல்காவழிவில்வீடடைந்தான்மன்னே. ௩௯

அடைதருவேலைவானோரலர்மழைசொரிந்திட்டார்த்தார்
உடைதிரையுகளுங்கங்கையுயிர்த்தவன்றனக்கிமத்தின்
நடைதருகருமமெல்லாநாடினன்றருமன்செய்தான்
மிடைதருமுனிவர்மாலைமெய்ம்மனநிறுவிப்போனார். ௪௰

மலைதருதிணிதோண்மன்னர்மணிமுடிதுகளதாகச்
சிலைகடைகுழைத்தபார்த்தன்செழுமணித்தடந்தேர்ப்பாகன்
பலர்புகழ்தருமன்றன்னைப்பகர்பெருந்தாதைசொல்லால்
அலர்தலையவனிகாப்பவரியணையிருத்தினால். சக

கலிவிருத்தம்.

மண்ணியமணிமுடிமன்னரைச்செருத்
தெண்ணியவிருப்பொடுமிசைந்துளானலன்
கண்ணனுட்கருத்தினைக்கடக்கவஞ்சியே
நண்ணினனரசியனுமவேலினான். சஉ

மழைவளஞ்சிறந்திடவளங்கண்மிக்கன
குழைவொடுபிணிகளுங்குலைந்துசாய்ந்தன
விழைவொடுநல்லறம்வேர்படைத்தன
தழைபுகழொடுபுவிதருமன்காக்கவே. சந

நானிலத்தவர்களுநவையினீங்கினர்
வானகத்தமருமகிழ்வினோங்கினர்
பானிறமதிக்குடைநிழற்றிப்பார்மகள்
தானுவப்புறப்புகழ்த்தருமன்காக்கவே. சச

சுடர்தருநிதித்திறைசொரிந்துவாய்தலின்
அடையலரடிதொழவவனிகாத்தனன்
இடியுறழ்படையுடையிளைஞர்தன்னடி
மிடைதாமணிமுடிவேந்தர்வேந்தனே. சரு

தன்மபுத்திரன் அரசியலடைந்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௱எ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௪-வது, கண்ணபிரான்துவரையடைந்தவத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

உரவுநீரமுதின்சாயலுத்தரையொளிறுவேள்வேற்
றுருபதன்பாவைகாதற்சுபத்திரைகுந்திதம்மோ
டரசரோரைவர்வேண்டவருமறைமுதல்வன்வேழத்
திருநகர்சிறப்பத்திங்கள்சிலமகிழ்ந்துறைந்தானன்றே. க

அரசியலடைந்தவாற்றலடைந்தவெம்மாவியாய
பிரசநாறுருவப்பைந்தார்ப்பெருந்தகைபிரிவாளென்னு
உரைசெறிபுகழ்சாலைவருளங்குழைந்துருகும்வேலை
முரசொடுமுழவம்விம்மமுகிலெனவெழுந்தான்கண்ணன். உ

காத்துலகளிக்குங்கற்றைக்கதிர்மதிக்கவிகைபற்றிப்
பார்த்தனன்புடனிழற்றப்பகருமுன்னவன்றனோடு
சாத்தகிதடக்கையேந்திச்சாமரையிரட்டமிக்க
வேத்தவைதொடர்ந்துசெல்லவீதிவாயேகலுற்றான். ௩

வஞ்சித்துறை.

வண்ணவீதிவாய், நண்ணுநல்லதேர்
கண்ணன்கார்கொலென், றெண்ணவேறினான். ௪

அலகிலானையாள், வலவர்வாசிகள்
இலகுதேர்களேழ், நிலநிறைந்தவே. ௫

ஏகன்றேர்த்துகள், மாகமன்னல்பார்
மோகனேகமுன், போகல்போலுமே. ௬

கோதிறேர்க்கொடி, மீதுமேவன்மால்
பாதபங்கயப், போதுபோலுமே. ௭

வெற்றிமேவியம், பெற்றபேரொலி
பொற்றபூவண்டம், உற்றுடைத்தவே. ௮

வஞ்சிவிருத்தம்.

வெண்டுகிற்பதாகைமேல், கொண்டதேரின்கூம்பினால்
அண்டகோளம்விண்டறல், மண்டிவீழ்தன்மானுமே. ௯

காரையொத்தகைக்கிரி, வீரையொத்தவெம்பரி
பாரின்மொய்த்தபைங்கிரிச், சீரையொத்ததேர்களே. ௧0

தோளையுற்றதூணிவில், வாளையுற்றவாளொடங்
காளியொத்தடைந்தனர், வேளையொத்தவீரரே. ௧௧

சுந்தரத்தனைத்தொழா, அந்தரத்தினுசையால்
வந்துமொய்த்தவானவர், சிந்தினர்பொற்றேமலர். ௧௨

கண்ணன்செவ்விகண்டுகண், எண்ணினின்னமாயிரம்
நண்ணினன்றுநன்றெனு, விண்ணின்மன்விளம்பினான். ௧௩

உற்றுநோக்குமும்பர்நம், வெற்றிவேந்துபோல்விழி
பெற்றிலம்மெனப்பெருஞ், சுற்றமோடுசொல்லுவார். ௧௪

தண்ணசெய்யதாமரைப், பெண்ணினல்லபேதையர்
வண்ணமாடமன்னியே, கண்ணன்செவ்விகண்டனர். ௧௫

வீரவாளிதூவவேள், சேருமாழிசெங்கையின்
சோருமாதர்தூவிநின், றூர்வமோடழுங்குவார். ௧௬

நாடுநல்லசாளரத், தூடுசெவ்விகண்டுவந்
தாடன்மாரனம்பினால், மாடமீதுமாழ்குவார். கஎ

எண்ணிலாதவேழைமார், கண்ணன்செவ்விகண்களால்
உண்ணவாவியுண்ணுமால், நண்ணுவாடைநாடியே. கஅ

குல்லைவேய்ந்தகொண்டலே, மெல்லவந்துவெம்முலை
புல்லியின்றுபோகெனச், சொல்லிநின்றுசோர்குவார். ககூ

கண்ணகண்ணவெம்மிதழ், உண்ணவாவென்றோதியே
வண்ணமேவுகைவளை, சுண்ணமோடுதூவுவார். உ0

பண்டுவெண்ணெய்பாலொடும், அண்டர்மாதரார்நலம்
உண்டகாரெம்முண்ணிறை, கொண்டதென்றுகூறுவார். உக

மஞ்சுபோலும்வண்ணனை, நெஞ்சினோடுநேர்கலா
அஞ்சொலாருஞ்சுதை, நஞ்சுபோலநாடுவார். உஉ

நாகமேனடித்தவன், மோகவாரிமூழ்கினோர்
கோகிலங்கள்கூவலால், சோகவாரிதுன்னுவார். உந

துன்னியண்டர்தோகைமார், மன்னுகொண்டல்வண்புகழ்
இன்னரம்பின்யாழ்கொடு, பண்ணிநின்றுபாடுவார். உச

ஆணவாவுவானெழில், காணநூறுகோடிகண்
பாணியாற்படைத்திலன், வாணிமன்னவானென்பார். உரு

ஈறிலாவிக்காதலால், கூறமாதர்தேர்கொடு
வேறோர்வீதிமேவினான், மாறிலாதமாயனே. உசு

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மாதர்கள்வீதியெய்திமதுவனமதுரையாயிப்
போதணிமார்பன்றன்னாற்பொலிந்ததுசாலவென்பார்
காதல்செய்துவரைநங்கள்கண்ணாற்சிறந்ததென்பார்
ஓதுமிப்பிறவியங்கேயுதித்திலந்தவத்தானென்பார். உஎ

மதுகுலத்துடனிலங்கைமன்னவன்மலங்கவென்றோன்
விதுகுலத்தரசர்போற்றவீதிவாய்வருதனோக்கி
எதுகுலமாயதீறின்றேத்துறுகுலங்கட்கெல்லாம்
முதுகுலமாயதிந்தமுதல்வன்வந்ததனாலென்பார். உஅ

தெள்ளுதெண்டிரைசுலாமிச்செழும்புவிமுதலுலோகத்
துள்ளவர்மனங்கடோறுமொழிவிலாதுறைவானன்றே
[illegible]ள்ளவெம்முள்ளத்தூடேவிழிவழிபுகுந்துமேவும்
க[illegible]ளனென்றுரைப்பப்புந்திகருதிலசிறிதுமென்பார். உகூ

பொன்னியல்பழுத்துவானிற்பொலிதருமாடவீதி
துன்னியசாதகம்போற்சூழ்ந்துநோக்குநர்கட்கெல்லாம்
கன்னியந்துழாய்மிலைந்தகருமுகில்கடைக்கணோக்கால்
மன்னியகருணைவெள்ளமழைநனிவழங்குமென்பார். ௩௦

தாமநன்மறுகிற்செல்வான்றாமரைபோலுங்கண்கள்
ஏமமொடுளத்துக்காண்போர்க்கிடரெலாமொழிக்குமென்ப
காமனால்வருந்துன்பத்தைக்காதலோடினிதுகண்ட
வாமமேகலையார்க்கென்னோவளர்க்குதல்புதுமைத்தென்பார். ௩௧

வண்ணமாமுகில்போல்வீதிவருபவன்றன்னைநோக்கி
எண்ணிடினேழிரண்டாயியம்புபேருலகத்தோடே
தண்ணறுமலரோன்றன்னைத்தந்தினிதளிக்குஞ்செய்ய
கண்ணனிக்கண்ணனேயாங்கருத்துறநாடினென்பார். ௩௨

காட்டுவாரணமுன்சொல்லக்காத்துவெங்கஞ்சன்வாய்தற்
கோட்டுவாரணத்தைக்கொன்றகுரிசிலைவீதிநோக்கி
வேட்டுநாண்மலரிற்றோன்றும்விரிஞ்சனுங்காணுவண்ணம்
சூட்டுநாகணையிற்றுஞ்சுந்தோன்றலித்தோன்றலென்பார். ௩௩

கண்ணனைக்கண்கள்கண்டுகளிப்புறக்கருங்கார்போலும்
வண்ணனைமனங்கணீங்காவண்ணமாய்மகிழ்தலானே
நண்ணியயோகத்தாலிக்கண்ணனைநாடுமேலோர்
எண்ணிலாநந்தமாகியிருப்பதின்றறிந்தோமென்பார். ௩௪

சுரும்பிமிர்கூந்தல்சோரத்தொடர்ந்தனளசோதைவீக்க
விரும்பினையுரலோடும்போய்வேரொடுமருதஞ்சாய்த்தாய்
பெரும்பணைதுணித்தாயன்றுபெண்பழிகொள்ளும்வேடன்
கரும்பினைமுறிக்ககில்லாயெனச்சிலர்கழறிச்சோர்வார். ௩௫

கலிவிருத்தம்.

தாரமாரிதரப்புலவோரெழுநாள்
காரமாரிவிலக்கினைகண்ணமதன்
போரமாரிமலர்க்கணைபோகவிழி
நீரமாரிநிறுத்திலையென்பர்சிலர். ௩௬

பழிகூறவைநின்றுபறிக்குதலும்
கழியாமலளித்தனைகண்ணதுகில்
அழியாமலுவந்துநெகிழ்ந்தறுவை
ஒழியாமலுகந்திலையென்பர்சிலர். ௩௭

வண்ணந்திகழ்வாயமுதூறலுணத்
தண்ணங்கழைவைத்தனைசாருமெமை
உண்ணும்படியுற்றிலையென்றுதினம்
எண்ணும்படிவைத்தனையென்பர்சிலர். ௩௮

வளையாழினரம்புறழ்சொன்மலராள்
வளையாழிதரித்தணிவாய்விழியால்
வளையாழிவளைந்தவளுக்கெளியேம்
வளையாழிவழங்கலெனென்பர்சிலர். ௩௯

விழைவோடுறிவெண்ணெய்நுகர்ந்ததென
உழைமேவியகானழலுண்டனையால்
நிழன்மேவியசித்திலமாலையையென்
அழல்போலவமைத்தனையென்பர்சிலர். ௪0

கடியாதுகொல்காளியன்வெவ்விடமும்
படிமீதுதவிர்த்தல்செய்பைம்புயலே
விடமாமெனமெல்லியதென்றலினால்
இடர்நீசெயலெவ்வகையென்பர்சிலர். ௪௧

புள்ளின்பகுவாயதுபோலநனி
விள்ளுங்குயில்வெவ்வியவாய்கிழியாய்
தள்ளுந்தரமானதுதான்மொழியால்
எள்ளுந்தரம்வைத்தனையென்பர்சிலர். ௪௨

அள்ளித்தழன்முன்னமயின்றதையெம்
உள்ளத்தினினின்றுமிழ்ந்தனைகொல்
துள்ளிச்சுடநெஞ்சுதுடிக்குமென
வள்ளைக்குழைமங்கையர்சொல்வர்சிலர். ௪௩

களியோடெதிர்கண்டவர்கண்களைநீ
அளியோடுமறித்தும்விடாயதனால்
ஒளிசேர்பெயருற்றனைகண்ணனென
எளியேமதறிந்தனமென்பர்சிலர். ௪௪

மன்றற்செழுமாமதுரைப்பதியில்
குன்றத்தனுவீறழிகொற்றவனீ
ஒன்றித்தனுநாணையொழித்திடுதல்
இன்றைக்கரிதோபுகலென்பர்சிலர். ௪௫

வழியோடொருமங்கையைவாலனின்முன்
ஒழியாவுடலோடுமெடுத்தொழிவாய்
மொழிவேமுயிர்முற்றுமெடுத்தொழிதல்
எழில்சேருமுனக்கெளிதென்பர்சிலர். ௪௬

மைக்கார்நிகர்வோயிடைமாதர்துகில்
அக்காலமகற்றுபயிற்சிகொலோ
புக்கேமணிபொற்றுகில்பார்வையினால்
இக்காலமகற்றினையென்பர்சிலர். ௪௭

சென்றேடியதீயவனுகியகன்
றன்றேடியெறிந்தனையாசில்விழிக்
கன்றேடடியோமணியாழிகழன்
றின்றேடவெறிந்தனையென்பர்சிலர். ௬அ

தகைகொண்டுறுதானவனுகுமழல்
உகுகின்றடர்சூறையொழித்தனையால்
புகுமெம்முடனெஞ்சுபுழுங்கவழன்
றிகறென்றலொழித்திலையென்பர்சிலர். ௬௯

துதிசேர்விசயன்றுயராவகைவெங்
கதிரோனைமறைத்தல்செய்காவலநற்
பதியாகவெம்பாலணையாயெனினும்
மதிபோகமறைத்திலையென்பர்சிலர். ௭௦

மன்னிப்புலவோர்பொழிமாமலர்சூழ்
உன்னைப்புகழ்வோருனைநேர்வதுமெய்
துன்னிப்பொழிவேண்மலர்சூழ்தலினீ
என்னப்பொலிவேமிவனென்பர்சிலர். ௭௧

தோரம்வரைமீதுமெஞ்சிந்தையெனும்
நீரார்மலர்மீதுநெடுங்கணெனும்
ஆரார்கலிமீதுமம்மூவரென
ஏராகவிருந்தனையென்பர்சிலர். ௭௨

மைவண்ணமலர்க்குழன்மாதரெலாம்
கைவண்ணமலர்க்கணைகாமன்விலால்
நைவண்ணமனத்தொடுநாடினராய்
இவ்வண்ணமிரங்கிடவேகினனே. ௭௩

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

தூண்டுவாம்புரவிமேலுந் துளிமுகிலகடுகீண்டு
நீண்டபொற்கொடித்தேர்மேலுநிழல்பொருகளிற்றின்மேலும்
பாண்டவர்குருநாடெல்லாம்படர்ந்தனர்பரிவிற்புல்லி
மீண்டனர்வாடுநெஞ்சமீள்கிலாத்தொடரமாதோ. ௭௪

விண்ணகம்வணக்குமாற்றல்வெந்திறல்வுணரத்தேய்த்துக்
கண்ணகன்ஞாலங்காக்குங்காவலன்றன்னைக்காக்க
அண்ணல்வேற்றருமன்விட்டவாடலந்தானைவெள்ளம்
பண்ணமைபசும்பொற்றிண்டேர்ப்படையொடுநடந்ததன்றே. ௭௫

வளங்கொள்பாஞ்சாலநாடுமலர்ப்புனல்யமுனைநாடும்
தெளிந்தவெண்முத்தஞ்சிந்துந்தீம்புனற்சிந்துநாடும்
இளங்களியானைமன்னரெதிர்கொளவிறுத்துமாநீர்
விளிம்படுத்துயாநத்தமெல்லெனச்சென்றுசேர்ந்தான். ௭௬

அதிர்கடல்வேலிழுதூரணித்தெனக்குறுகியண்ணல்
இதழொலிமுத்தினூடேயெறித்தலிற்செவ்வாயன்ன
மதுவிரிமுளரிசேர்ந்தவண்ணமொத்திலங்குகற்றைக்
கதிர்வளை துவர்வாய்வைத்துக்கல்லெனமுழக்கினானால். ருஎ

குடவளைமுழக்கங்கேட்டுக்கொற்றவன்வந்தானென்னாக்
கடலுடைத்தெழுந்ததென்னக்கடாம்பொழிகளிற்றினோடும்
விடுகணைவிசையவாயவெம்பரிவெள்ளமீண்ட
இடிமுரசியம்பவெள்வேல்யாதவரெதிர்சென்றுற்றார். ருஅ

மண்ணவர்க்களப்பில்காலம்வைகுந்தமருவினோருக்
கெண்ணிடிற்கணமாம்போலவெங்களுக்களப்பில்காலம்
கண்ணநிற்சலந்துவைகிற்கணமரைக்கணமேயேனும்
அண்ணனிற்பிரியினென்னோவாயிரமுகமாமென்றே. ருகூ

நான்மறையாளர்வாழ்த்தநகுமுடியரசர்தாழ
மீனுயர்கொடியோனாதிவெந்திறற்குமரரெல்லாம்
தானையோடிறைஞ்சாநிற்பத்தாமரைமலரின்வாழும்
தேனவார்தெரியன்மார்பன்றிருநகர்சென்றுபுக்கான். சூ0

கண்ணனைக்கண்ணினாலுங்காதல்செய்மனத்தினாலும்
உண்ணெகிழ்ந்தன்பினாலேயுருகுறமழலைத்தீஞ்சொற்
றண்ணறுங்குமுதவாயாற்சாற்றியகிளவியாலும்
பெண்ணமுதனையநல்லார்பெட்பொடுதழீஇக்கொண்டாரால். சூக

எழில்வளர்செம்பொன்மார்பனிறைஞ்சியுந்தொழுவார்தம்மைத்
தழுவியுந்தடக்கைதொட்டுந்தண்ணகைமுகிழ்த்துநோக்கி
மொழியினிதுரைத்துஞ்செவ்விமுகமலர்ந்துவகைபொங்கச்
செழுநகர்மாந்தர்க்கெல்லாஞ்செய்தனன்சிறப்புமாதோ. சூஉ

தந்தைதாடொழுதுதாயர்தளிரடிசென்னிசூடிச்
சிந்தரிமழைக்கட்செவ்வாய்த்தேவியர்திவலைசிந்தி
வந்தெழுகருங்கார்கண்டமடமயிற்குழாத்தின்மொய்ப்பக்
கொந்தழலாழியான்றன்குருமணிக்கோயில்புக்கான். சூங

பண்ணெனப்பழுத்ததீஞ்சொற்பவளவாய்முளரிப்பாவை
கண்ணெனக்கிடந்தநீலக்கடலினுங்கறங்குதெண்ணீர்
மண்ணகமடந்தைகொங்கைவரையினுமுறைந்தமாயன்
விண்ணெனத்திகழ்துவிண்ணோர்பரவவீற்றிருந்தானன்றே. சூச

கண்ணபிரான் துவரையடைந்த அத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ாஎ௰க.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்,

## ரு-வது, பரிட்சித்துவின் றேற்றமுரைத்த வத்தியாயம்.

---

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

என்னலுமுனிவரிகற்பரித்தாமாவெய்கணையுத்தரைவயிற்றின்
மன்னியகுழவிசெருக்கலாவண்ணமாயவன்காத்தனனென்ருய்
கன்னியர்துளவோன்காத்ததும்பிறந்துகமலலோசனன்கதைகேட்ட
தன்மையும்புகலவேண்டுமென்றுரைப்பச்சாற்றினன்சூதமாமுனிவன். க

சூழ்தருபொலந்தண்முடியினன்வயிரத்தொடியினனிலகுபொற்றுகிலோ
தாழ்மணிக்குழையன்கடுங்கதைசுழற்றுந்தாமரைக்கரத்தினனுகி [ன்
ஊழிவெந்தீப்போலுத்தரைவயிற்றினுறுகணைகுழவிமேலுருமல்
ஆழியானுங்கோர்பெருவிரலளவையாயதோருருக்கொடுபுரந்தான். உ

கலிவிருத்தம்.

பரிவினிற்றிங்களோர்பத்துஞ்சென்றபின்
குருவிளந்திங்களங்குழவிபோன்மென
உருவளர்குழவியையொசியுநுண்ணிடை
வருமுலையுத்தரைவயிறுவாய்த்தனள். ௩

போற்றிடுதவமியன்முதலபுங்கவர்
தோற்றியபுதல்வனைச்சூழ்ந்துநான்மறை
சாற்றியவிதிமுறைச்சாதனல்வினை
ஆற்றினர்புவிமிசையறங்களிப்பவே. ௪

மழைவளஞ்சிறந்திடமலர்ந்தபாரெலாம்
நிழன்மதித்தனிக்குடைநிழற்றுகாவலன்
பொழிவதுபுரிந்தனன்பொருவில்பொன்மழை
முழுமறையந்தணர்முகந்துகொள்ளவே. ௫

தள்ளருங்கொடையினற்சார்ந்தவஞ்சிறைப்
புள்ளினுக்குயர்துலைபுக்கவேந்திவன்
எள்ளலிலன்பினுலெறிந்ததூணெழு
வள்ளுகிர்மடங்கலைவழுத்துதோன்றலே. ௬

மேதகுதயரதராமன்மெய்ம்மையால்
தீதகல்விசயன்வெஞ்சிலையினுலிவன்
ஏதமில்பொறுமையாலினியபார்மகள்
ஓதியதாயுலகுயிர்புரத்தலான். ௭

காட்சியாலிந்திரன்கநகமீட்டுநல்
மாட்சியால்வடதிசைத்தலைவன்மாதவத்
தாட்சியாலரும்புகழரசமாமுனி
பூட்சியோடுறைமதன்பொற்பினுலிவன். ௮

இருபொழுதுந்திகழ்ந்திடைவிடாமலே
மருவிளமதியெனவயங்குசீரினன்
பாதனின்மகன்செயும்பண்பினனிகல்
செருவிடைப்பகைஞரைச்செருக்குஞ்சிங்கமே. கூ

காந்துநீள்விழிக்கலிகடிந்துதிண்புயத்
தேந்துபார்முழுவதுமினிதிறண்டபின்
சாந்தமாதவரொடுசார்ந்துகங்கையின்
பாந்தளாலுடல்விழப்பரத்தினண்ணுவான். க0

கோதகல்கணிதநூல்குறித்தவாறெனு
மாதவாரசன்முன்வழங்கியிவ்வகைச்
சாதகமெழுதினர்தாழ்தடக்கைவெம்
போதகமென்வளர்புதல்வற்காங்கரோ. கக

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தீத்திரளுமிழுமிந்தச்சினப்படையடாதுநம்மைக்
காத்துறையிவன்யாரென்றுகருவினிற்கண்ணன்றன்னைப்
பார்த்தலிற்பரிட்சித்தென்றும்பரஞ்சுடர்நல்கலாலே
ஏத்துசீர்விண்டுராதனென்றுநன்னமமுற்றான். கஉ

மறமலிநெடுவேன்மன்னன்மணிக்குறங்கிருந்தும்வீமன்
துறுமலரலங்கன்மாலைத்தோளின்மேற்றவழ்ந்தும்பார்த்தன்
எறிகதிர்ப்பரிதியன்னவேந்தெழிலாரமார்பின்
குறுகுறுநடந்துஞ்செவ்வாய்க்கோமகன்வளர்கின்றானல். கங

துள்ளுவாம்புரவியூர்ந்துசுழித்துவெண்முத்தஞ்சிந்தும்
வெள்ளிவெண்டிரையிற்றோன்றும்விரிகதிர்த்திங்கள்காட்டும்
கொள்ளைமாமதத்தநால்வாய்க்குஞ்சரமிவர்ந்துபொற்கோட்
டொள்ளொளிநீலக்குன்றத்துதித்தசெங்கதிரைவெல்லும். கச

அலைக்கடற்பவளச்செவ்வாயஞ்சிறையன்னமேபோல்
கலைக்கடல்வடித்துப்பெற்றகாட்சியான்மாரிகாக்க
மலைக்குடையெடுத்துநின்றமௌவலந்தொடையினனே
இலக்கமற்றுயர்ந்தசோதியென்றுணரிளங்கோவேய்க்கும். கரு

நடைநவில்பரிக்குத்தங்கணகுலனைக்கடுக்குங்கூர்வாட்
படையினுக்குலகமெல்லாம்பழிச்சுநற்றதைநேரும்
உடல்குழைவரிவிலாண்மைக்கோங்கெழில்விசயனைக்கும்
கொடையினுக்கிருள்கால்சீக்குங்கொழுஞ்சுடர்மகனையெள்ளும். கசா

முழுவலிக்கெழுகுன்றேடுமுனிந்ததோள்வீமன்மானும்
தழையுநல்லளிக்குத்தண்டார்த்தருமனைப்பொருவுந்தாழா
அழகினுக்கழகுவாய்ந்தவம்புயமடந்தைபுல்லும்
நழகன்முன்னுயிர்த்தசெல்வக்கோவிளங்குமரன்போலும். கஎ

மங்குறோய்பசும்பொற்கோட்டுமால்வரையனைத்துந்தாங்கும்
துங்கவெண்டிரைப்பார்தாமேசுமந்திடப்பணைத்துவீங்கும்
குங்குமக்குவவுத்திண்டோட்குமரனல்வனப்புநோக்கித்
திங்களங்கவிகைமன்னன்செருக்கினன்றருக்கின்மிக்கான். கஅ

கண்ணனையழைத்துக்கண்ணன்காத்திடக்கறங்குதெண்ணீர்
மண்ணகம்புரக்குமாற்றன்மன்னவர்திறைகொடுப்ப
அண்ணலம்புரவிவேள்வியாற்றினனொருமூன்றென்ப
தண்ணளிதளிர்த்துப்பொன்னந்தருவெனத்திகழுநீரான். ககூ

எண்டிசைகடந்ததோளானியற்றியவேள்விகாத்து
வண்டுகொப்புளித்துமாந்தமதங்கலுழ்களிநல்யானை
ஒண்டிறல்விளங்குகூர்ங்கோடொசித்தவன்விசயனோடு
வெண்டலைப்புணரிவேலிவியனகரெய்தினானல். உ0

பரிட்சித்துவின்றோற்ற முரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௱கூ௰க.

ஸ்ரீகிருஷ்ண சகாயம்.

---

## சு-வது, தன்மன்முதலானவர்வீடுபெற்றவத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

அறநெறிகெழுமியவறத்தின்காதலன்
நிறைமதிக்குடைபுவிநிழற்றுநாளின்வாய்
விறல்கெழுதவர்புகழ்விதுரன்வீங்குநீர்த்
துறைபலபடிந்தனன்றுணைவிற்றோன்றினான். க

விதுரனைக்குலத்தொடும்வேந்துகைதொழாச்
சதுரநீயெவ்வழிச்சார்ந்துவைகினை
துதிதருமவ்விடனன்றிச்சொல்லிய
சதிதருதீர்த்தந்தான்கருதின்வேறுண்டோ. உ

மேதகுமாயவனோடுமேவிய
யாதவரினிதிருக்குநர்கொலோவென
ஓதலன்பட்டமையுலகுகாவல்செய்
காதலனெஞ்சகங்கலுழுமென்னவே. ங

வேற்றிறல்விதுரனவ்விழியின்மன்னனைக்
காற்றின்மாமகன்றருகவளமார்ந்தமெய்
போற்றுதியோவெனப்புகன்றுநல்லறம்
சாற்றியும்புகுத்தனன்றவவனத்தரோ. ச

தந்தையைக்காலைபோய்த்தருமன்கண்டிலன்
எந்தைமற்றெவ்வழியேகினானென
அந்தளிரலங்கறாழரசன்மார்பிடைச்
சிந்தினன்கட்புனறெருமந்தானுளம். ௫

நிலையிலாச்செல்வமேநினைந்துமைந்தரைக்
கொலைபுரிந்தனனெனக்குறித்தென்பாலிரான்
கடிபுனற்கங்கையிற்கவிழ்ந்திட்டான்கொலோ
வலவவென்றனனவன்வலவற்கண்டரோ. ௬

யாங்கிறந்தான்கொலோயானுங்காண்கிலன்
தேங்கமழ்தாரினாயென்றுதேர்விடும்
ஆங்கவனுரைப்பநின்றவலமெய்துழித்
தூங்கிசைநாரதன்றோன்றிச்சொல்லுமால். ௭

கரமிலாப்பசுமுதற்கரங்கள்காலிலா
மரமெலாமுதலதாவரங்களாய்வரும்
புரமெலாநின்றுயிர்போற்றியூட்டுறும்
பரமெலாம்பூண்டவனொருவன்பார்க்கினே. ௮

உடையவன்மூக்குறுங்கயிற்றினுய்க்குமேல்
விடையவன்கைவ்வழிமேவுமாறுபோல்
நடைபெறுமுயிர்களோர்நாதனாலென்றால்
படிமிசையொருவருக்கொருவர்பற்றெவன். ௯

இனையனீமன்னன்றனேழைதன்னொடு
வினையறநோற்றநல்விதுரனுய்த்திடப்
பனிவரைச்சாரலிற்படர்ந்துகண்ணிலான்
நினைவருமாதவநிரப்புகின்றனன். ௧0

எகினுங்காண்கிலையினியொரைந்துநாள்
போகுழிக்காட்டழல்பொத்திமெய்சுடத்
தோகையொடுயர்நெறிதுன்னுமென்றனன்
நாகணையாணிசைநவிற்றுநாரதன். ௧௧

நற்றவனடந்தபினறியபூந்தொடை
வெற்றிவேல்வீமனைநோக்கிவெய்துயிர்த்
தெற்றுவெண்டிரைநிலனேழுமேத்தல்செய்
கொற்றவெண்கவிகையான்கூறலுற்றனன். ௧௨

மழைமதம்புலர்தருமத்தவாரணம்
அழுதரும்வாம்பரியாத்தமாமழை
பொழிதருநெய்பொழிகின்றபொங்கழல்
எழுதருகின்றிலவிடிக்கும்வானமே. ௧௩

மண்ணகமதிர்தருமலைதுளக்குறும்
ஒண்ணிறக்கதிர்புகைக்தூர்வளைப்புறும்
அண்ணலங்கதிர்செய்கோளமர்விளைத்திடும்
கண்ணிடனுடுமாற்கலங்குநெஞ்சமே. ௧௪

ஆழியாற்காணியவாங்குச்சென்றனன்
பாழிசால்விறற்படைப்பார்த்தன்மீண்டிலன்
எம்மதியிறந்தனனென்செய்தான்கொலோ
சூழ்கலன்விளைந்ததுதோன்றிற்றில்லையால். ௧௫

எனமொழிந்திருந்துழியிறங்குசென்னியன்
பனிவருகண்ணினன்பார்த்தனெய்தினான்
தனிநெடுவெண்குடைத்தராணிகாவலன்
வனைகழற்சேவடிவந்துவீழ்ந்தனன். ௧௬

அடிமிசைவீழ்ந்தெழுமாடல்வெஞ்சிலைப்
படிபுகழ்பார்த்தனைநோக்கிப்பைம்பொனு
டையபுங்கவருமுள்ளுவக்குமெய்ம்மைசேர்
சுடர்விடுகுடையிவேற்றருமன்சொல்லுவான். ௧௭

மேவியதாயினைப்பயந்தவீரனும்
ஆவியின்வருமொழிலநுசர்தம்மொடும்
தேவகிமுதலெழுதேவிமாரொடும்
மாவுறைமார்பனைப்பயந்தமாமனும். ௧௮

யாதவர்யாவருமிராமன்றன்னொடு
தாதவிழ்தண்டுழாய்த்தாமமார்பனும்
கோதையங்குடுமிவேற்கொற்றமைந்தரும்
தீதிலரேகொலென்றெடுத்துச்செப்புவான். ௧௯

ஒருபொருளொருவருக்குதவன்மாற்றினோர்
பொருவரும்பிறர்மனைவியரைப்புல்லினோர்
தருமெழிலன்புடைத்தாயைத்தந்தையை
அருமைநற்புதல்வரையளித்திலாரென. ௨௦

வளரொளியிழந்தனைவதனம்வாடினை
அளியுளர்துளவினனகன்றனான்கொலோ
கிளைஞருக்காயிடைக்கெழீஇயதுண்டுகொல்
துளிவருகண்ணினைசொல்லுகென்றனன். ௨௧

என்றலுங்காவகமெரிக்குநல்கிய
வன்றிறற்சிலையினன்மறுகிக்கூறுவான்
குன்றெனவுயரியகொற்றமாதவர்
துன்றிவந்தருளியசாபஞ்சுற்றலால். ௨௨

வருணனால்விளைதருமட்டுமாந்தினர்
பொருகளிவிளைந்தனர்புகையுங்கண்ணினர்
திருகுவெஞ்சினத்தினர்செறிந்தயாதவர்
ஒருவரோடொருவர்போருழந்துமாண்டனர். ௨௩

உடையநஞ்செயலெனவுணரக்கண்ணினால்
முடிவறுபகைஞரைமுடித்துக்காத்தருள்
கடிமலர்த்துளவணிகண்ணனவ்வழி
நடலைசெய்திறத்தையானாடியென்சொல்கேன். ௨௪

ஈரொணாயிரர்முதலேழைமார்களைச்
சீரிலாவேடுவர்சினத்திற்கைக்கொளப்
போரினான்மிகுந்தகாண்டீவம்பூங்கணை
வீரமோடென்வலிவிசயங்கைக்கொடு. ௨௫

கன்னியந்துளவணிகண்ணன்கண்ணுறான்
என்னையுமொளித்தனனேகினானெனச்
சொன்னதுகேட்டலுந்துளங்கினானுளம்
மன்னன்மெய்யுணர்வினான்மனந்தெருண்டனன். ௨௬

எட்டினர்க்காவகமெரிவளைத்துணக்
கோட்டியசிலையினான்குமரன்மைந்தனுக்
காட்டினன்பூம்புனலவனிகாக்கெனச்
சூட்டினன்மணிமுடிசுடரெறிப்பவே. ௨௭

உலங்கெழுதோளநிருத்தனோங்கிய
நலங்கெழுநற்றவப்பயத்தினல்கிய
அலங்கல்வேல்வச்சிரற்கரசுநல்கினான்
மலர்ந்தபூங்காவுசூழ்மதுரைகாக்கவே. ௨௮

அங்கியைமனக்கணேயடைத்திலிங்கமாம்
துங்கவெந்தனுநனிதொலைந்துநீங்குறத்
தங்குமைம்பூதமேமுதலதத்துவம்
பொங்குமுன்னெழுமுறைமுறையிற்போக்கியே. ௨௯

நாக்கடைபுரட்டுபைந்நாகத்தாடிய
கார்க்கடல்வண்ணனைக்கருத்துணாடினன்
மாக்கடற்றானைதன்மருங்குசூழ்வது
நோக்கலன்வடதிசைநோக்கியேகினான். ௩௦

விரிதருகுஞ்சியன்விரித்துடுத்ததோர்
மாவுரியுடையினன்மலர்ந்தகாட்சியன்
உரையிலனூணிகந்தொற்றைவெண்குடைத்
தருமனாங்கேகியதன்மையென்சொல்கேன். ௩௧

தளையவிழ்நெஞ்சினன்றருமன்சென்றவா
றிளையருயேகினர்யாருமேத்துற
வளர்புகழ்த்துருவதன்வாத்திற்றோன்றிய
அளியபூஞ்சீறடியணங்குமேகினள். ௩௨

பயில்புகழைவரும்படர்ந்தநங்கையும்
உயர்வுறுபரன்கழலொன்றுபட்டனர்
மயிலெருத்துறழ்தருமாயன்சேவடி
குயின்மொழிக்குந்தியுஞ்சென்றுகூடினள். ௩௩

பொய்தபுகாட்சியிற்புலனடக்கிய
செய்தவன்சபித்தலிற்சேர்ந்தமெய்யினை
மெய்தலைமணந்தநல்விதுரன்விட்டனன்
எய்தினன்றென்புலக்கிறைமையென்பவே. ௩௪

ஓதியகாதையையுவந்துகேட்பவர்
காதல்செய்மாயனைக்கலப்பரென்றுசீர்
மேதகுவிண்டுராதன்செய்மெய்த்திறம்
சூதமாமுனிவரனெடுத்துச்சொல்லுவான். ௩௫

தன்மன்முதலானவர் வீடுபெற்றவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உ௱உ௬.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## எ-வது, பரிட்சித்துக்கலிகடிந்தவத்தியாயம்.

---

வேறு.

மண்டலீகர்மகுடமலர்ந்ததாட்
புண்டரீகம்புனையமுடிபுனைந்
தண்டகோளமளந்தபெரும்புகழ்
விண்டுராதன்வியனிலங்காத்தனன். க

வேந்தனுத்தரன்மெய்த்தவத்தீன்றருள்
ஏந்துகொங்கையிராவதியென்னுமோர்
காந்தண்மெல்விரற்கன்னியிளநலம்
மாந்தினன்கமழ்மன்றலந்தாரினன். உ

ஐயதார்ச்சனமேசயனுதியா
வையம்போற்றிடுமைந்தரோர்நால்வரைச்
செய்யவாய்ப்பசுங்கிள்ளையந்தேன்மொழிப்
பெய்மலர்க்குழற்பெண்ணணங்கீன்றனள். ௩

முரிதடந்திரைமுத்தெறிகங்கையங்
கரையில்வானங்களிப்பக்கடவுள்வாம்
புரவிவேள்வியோர்மூன்றுபுரிந்தனன்
அருநிதித்திரளந்தணர்க்காக்கினான். ௪

வேறு.

அடல்விளையிலெயிற்றண்ணல்வாளரிக்
கொடிவலனுயரியகொற்றமன்னவன்
விடுசுடர்க்குடுமிவேல்வெற்றிகாட்டுவான்
வடபுலத்தெழுந்தனன்வளைகலித்தவே. ௫

பாரிடைமிதிக்கிலபறக்கும்பச்சைமான்
தேரினனொற்றையந்திகிரிமன்னவன்
போர்கெழுதானையம்புணரியூடெழு
தேரிளங்கதிரெனவெழில்சிறந்தனன். ௬

தங்குலம்விளக்கியதரணிகாவலன்
வெங்கதிர்மரபின்வாழ்வேந்தர்போர்தெறும்
பொங்கொளிகண்டொளிபொலியத்தோன்றிய
திங்களேபோன்றதுதிலகவெண்குடை. ௭

வள்ளறன்றிருமகன்வழிவிளக்குறும்
அள்ளிலைவேலினனுடனேக்கிய
வெள்ளநீர்க்கங்கையின்வெள்ளிவெண்டிரை
துள்ளல்போன்றனதுணைக்கவரித்தோற்றமே. ௮

அடும்படைமன்னவனளவிருளையைப்
படுந்திரைக்கரையுறுபரவையென்பதென்
விடுஞ்சுடர்த்தேர்செலமிடைந்ததூளியால்
நெடுங்கடலேழுநன்னிலங்களாயவே. ௯

சூடியவாகைவேல்வேந்தைச்சுற்றியே
நாடியவாள்பரிநாகந்தேரொனும்
நீடியசேனையிந்நிலத்தடங்குதல்
ஆடியினடங்குமாகாயம்போலுமே. ௧௦

நிலவரைப்பினினனிநிமிர்ந்தசேனையால்
உலவியநற்றுகளும்பரோங்குதல்
மலர்தலைப்புவிமகண்மருவித்தொட்டிடாப்
புலவரைத்தொடவவட்போதல்போலுமே. ௧௧

கவட்டொடுமுயர்மாங்கைக்கொள்யானைமேல்
குவட்டெழுமதியெனுங்குடைகள்கண்டுமெய்ச்
சுவட்டொடும்பொலிபடைசூழ்தறிங்கள்கண்
டுவட்டெடுத்தெறிதிரையுத்தியொக்குமே. ௧௨

உரைபுகழ்மன்னவனோடுபோயின
நிரையணிவேழமாநெடியதானையை
வரையெனமொழிவதென்வரைகளுண்பொடித்
தரையெனநடந்தவத்தானையானையே. கங

வரங்களாலுயர்ந்தவன்வரம்பில்சேனைநீர்
உரங்கள்சேர்மனமெனவோடுமைங்கதித்
துரங்கமாப்படையினைச்சொல்வோர்காற்கதித்
தரங்கமாய்மொழிவதுதக்கதன்றரோ. கச

படையெனும்வரம்பிலாப்பரவைமேவிநல்
நடையொடுபொருதுடையாதநற்பரி
புடையகல்கரையினிற்பொருதுதத்தமில்
உடைதிரைநேர்சொல்வாருணர்விலோர்களே. கரு

மன்னவன்றேர்வடமேருமற்றதேர்
பன்னியவரைகள்சூழ்கடல்கள்பாய்பரி
துன்னியகரியிருள்சூழ்வரம்பென
உன்னியசேனையிவ்வுலகொடொக்குமே. கசு

வட்டவெண்கவிகையான்மல்லற்பாரதம்
இட்டினன்கிம்புருடத்தைநண்ணினான்
முட்டினனரிவருடத்தைமூரித்தேர்
விட்டனன்கேதுமாலத்தின்மெல்லவே. கஎ

எய்தினனிளாவிரதத்திலின்பமே
செய்தவிரமியகஞ்சென்றுசேர்ந்தபின்
மெய்திகழிரண்மயமேவிமெல்லெனப்
பொய்தபுமுத்தரகுருவிற்போயினான். கஅ

தடத்ததாமரைமலர்த்தடக்கைவில்லினான்
வடக்கொடுகுடக்கெலாம்வணக்கிமன்னவன்
சுடர்ப்பசுமேருவின்குணக்கிற்றோமிறேர்
விடுத்தனன்பத்திராச்சுவத்தைமேவினான். ககூ

எள்ளுநர்க்கிடியனானிறுத்ததிக்கெலாம்
உள்ளவர்பாண்டவரொழிவில்போர்த்திறல்
வெள்ளநீரமுதுகவிரித்திசைக்குமத்
தெள்ளிசையமுதமுஞ்செவிமடுத்தனன். உ0

வெருவரமறையவன்விடுத்தவெம்படை
கருவினில்வளைத்ததுங்கண்ணன்காத்ததும்
பெருவிறன்மரீஇயதான்பிறந்தவண்ணமும்
தெரிதரவிசைப்பதுஞ்செவியின்மாந்தினான். உக

முடித்தலைவணக்குபுமுடிவிலாத்திறற்
கொடிப்படைமன்னவர்குவித்துநீணிதி
வடித்திசைபாடினர்வணங்கியின்புறக்
கடைக்கணித்தனன்றனிக்கவிகைவேந்தனே. ௨௨

அமைவருமொன்பதுவருடத்தார்களும்
நமையளிப்பவனெனநவிற்றநல்லிசை
கமைவருகுணத்தொடுகருணைசெய்தவன்
இமையநல்வரைகடந்தெய்துங்காலையே. ௨௩

தெளிபொருள்வடசொலாற்றிருந்துமாதவர்
ஒளிவருநாமசட்குரைத்தபேர்பெறும்
வளநதியினுக்குநல்வடாதுநண்ணிய
இளர்புகழ்சேர்குருக்கேத்திரத்தினில். ௨௪

தூநிறப்பிறைபுரைதொளையெயிற்றதோர்
பாநிறப்பஃறலைப்பாந்தளேந்திய
மாநிலக்கிழத்திதன்மல்லன்மாண்பொரீஇ
ஆனுருத்தாங்கியாங்கழுதுநின்றனள். ௨௫

ஓடிவிலாவூழிதோறொவ்வொன்றுசால்
அடியொருமூன்றிழந்தண்ணனல்லறம்
படிமிசையோர்பதம்பாவும்பாலதாய்
விடையுருத்தாங்குபுமெலிந்துநின்றதால். ௨௬

பாணிறநல்விடைபாரிலூன்றிய
கானடுக்குறநெடுங்கதையினூற்புடைத்
தானழக்கருங்கழலார்த்ததாளினன்
நீணிறக்கடுங்கலிநின்றுதைக்குமால். ௨௭

குருதிவேற்பின்னவர்கொற்றமால்களிற்
றரசராய்நம்மைவந்தாள்வரென்றுகொல்
புரிகலாவந்தணர்பொருவில்வேள்விகள்
இருவிசும்புறைத்திடாவெனநினைந்துகொல். ௨௮

அடியொருமூன்றெனக்ககன்றவென்றுகொல்
உடல்சினக்கடுங்கலியுதைக்குமென்றுகொல்
நெடிதுயிர்த்தழுவதேனிகழ்த்துவாயென
விடைவகுத்துரைப்பவான்விளம்பிற்றென்பவே. ௨௯

கன்னியந்துளவணிகமலலோசனன்
பொன்னடித்தாமரைபொருந்தப்பெற்றனன்
என்னொடும்புரையுமேயிமைப்பினூட்டத்தோர்
மன்னுபொன்னுலகெனமகிழ்ச்சிகூர்ந்தனன். ௩௦

சடிகமழ்தாமரைக்கண்ணற்காதலால்
நெடிதுநற்றவம்புரிந்தெய்துநேமியான்
கொடியொடுதாமரைக்குலிசரேகைசேர்
அடிமலரொன்னைவிட்டகன்றுபோயதால். ௩௧

சாற்றியவலிகளுஞ்சமநதங்களும்
போற்றியபுனிதமும்புகழுஞானமும்
தேற்றமுஞ்செல்வமுஞ்சிறந்தமாலெனக்
காற்றியவருட்பதமகன்றுபோயதால். ௩௨

தஞ்சமுங்கருணையுந்தவமுஞ்சாந்தமும்
வஞ்சமின்மேன்மையும்வனப்புமேமுதல்
எஞ்சலினற்குணம்யாவுமேவிய
அஞ்சனமுகில்பதமகன்றுபோயதால். ௩௩

வாரமுமானமுங்கொண்டென்வன்றலைப்
பாரமும்பாவமும்பகையுநீத்தருள்
வீரமும்விசயமும்வீறுமேவிய
ஆரமுதவன்பதமகன்றுபோயதால். ௩௪

ஒளித்தனமூன்றடியுனக்குநம்மைவர்
தளிக்கலனருட்கடலகன்றுபோயினன்
களிக்கும்வெஞ்சினக்கலிகாயுமாலெனக்
கிளக்கலுமன்னவன்கெழீஇயானரோ. ௩௫

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

பானிறவிடையோர்காலினிற்பதும்பழங்கணெய்தி
ஆனழுகின்றவாறுமானழவுதைத்தவெய்ய
நீனிறவொருவனின்றநிலைமையுங்கண்ணிற்கண்டான்
கூனுடைவரிவிற்செங்கைக்குருகுலத்தரசரேறே. ௩௬

அழுகையென்னுலகத்தின்றாலழுதனென்னஞ்சஞ்சேதா
ஒழிவதென்னினக்குத்தாண்மூன்றுடல்பவன்யாவனுடி
முழுதுநீதெரித்தியென்றுமுன்னுறுவேந்துகூற
மழவிடையாசனுள்ளமகிழ்தரவழங்குமன்றே. ௩௭

எண்ணுமிவ்வினைகள்சில்லோரீசனலியன்றவென்பார்
பண்ணியகருமம்வந்துபலித்தவென்றுரைப்பர்சில்லோர்
நண்ணியநவக்கோளாலேநடந்தவென்றுரைப்பரெண்ணோர்
நுண்ணியவறிவோர்செய்யுமனனெனநுவலுவாரே. ௩௮

எனவிடைமொழிதலோடுமகிழ்ந்தனனிறைவனென்பால்
நினைவரும்பிறர்தமேதநிகழ்த்திடிற்றனக்குமந்த
வினைவருமென்றுநாடிவிளம்பியதானுமோர்தாள்
தலைநனிநிலத்தினூன்றிமூன்றுதாடவிர்தலானும். ௩௯

அறமெனப்படுமால்வெள்ளேறவனிமாதஞ்செஞ்சேதா
பொறைதவிர்த்தளித்தகண்ணன்போயினனென்றுமாழ்கும்
கறையணற்பாம்பிற்சீறிக்காய்பவன்கலியேயென்னு
மறுவறுமனத்தினுடிவாளுறைகழித்திட்டானால். ௪௰

எண்டிசைக்களிற்றுப்பாகனெரியெழத்திருகிநோக்கி
மண்டமர்கடந்தகொற்றவாளுறைகழித்ததோற்றம்
கண்டனன்கலங்கிவெங்கட்கடுங்கலிகமழுந்தெய்வத்
தண்டுறைக்கங்கைநாடன்றாண்மிசைவந்துவீழ்ந்தான். ௪௧

மூரிவாட்டடக்கைமன்னர்முடித்தழும்பிருந்தசெம்பொன்
வார்கழற்றாளின்வீழ்ந்தான்மறக்கலியென்பதோர்ந்தும்
ஆருயிர்செகுத்திலானலபயமென்றடைந்தோர்க்கெல்லாம்
கூரருண்மாரிபெய்தல்குருகுலத்தியற்கையன்றே. ௪௨

அறைகழற்றாளின்வீழ்ந்தவடுகலிதன்னைக்கங்கைத்
துறைவனீயஞ்சல்போதிதுன்னலென்காப்பிலென்ன
எறிகடல்வையமெல்லாமிறைவநின்காப்புமற்றெங்
குறைவதுபணித்தியென்னவுறுகலியுரைத்தல்செய்தான். ௪௩

சூதுயிர்கோறல்பானந்துவரெனத்துவர்த்தசெவ்வாய்
மாதர்செம்பொன்னிற்சொல்பொய்வருந்துனிமதம்வெங்காமம்
ஏதமாம்வயிரமாகியிருத்திநீபோதியென்று
கோதைவெண்குடையான்கூறக்கொடுங்கலிவணங்கிப்போயான். ௪௪

மெய்யெனுமொருதாளுநன்றிநின்றவெள்ளேறுமற்றைச்
செய்தவம்புனிதந்தீதிலளியெனத்தெரித்தமூன்று
மையறுதாளுமூன்றிமகிழ்ந்ததம்மாட்சித்தாய
மொய்திரைவேலிஞாலமுழுவளஞ்சுரந்ததம்மா. ௪௫

வஞ்சகக்கலிதான்போகமாய்ந்தனதீமையெல்லாம்
வெஞ்சினப்புலன்கள்செற்றோர்விழுத்தவர்ஞானமிக்கோர்
எஞ்சலின்மறையோர்வேள்வியாவையுமியற்றிவாழ்ந்தார்
நெஞ்சுவந்தமராரார்த்தார்நிலமகண்மகிழ்ந்தாளன்றே. ௪௬

கலியிருளிரியநூறிக்களிற்றுநன்னகரஞ்சேர்ந்தான்
நிலவுமிழ்திங்களன்னநித்திலக்கவிகைவேந்தன்
மலர்தலையுலகமெல்லாமறுவறவிளங்கும்வண்ணம்
அலர்கதிர்ப்பரிதிபோலவாழியெ[illegible]ருட்டினனால். ௪௭

இக்கதைவிரைந்துகேட்பவெய்துநற்றவத்தோர்பார்மேல்
தக்கநற்புதல்வர்கல்விசாற்றிருநிதிசொற்சீர்த்தி
மிக்கெழிற்செல்வமெல்லாமேவிவீற்றிருந்தபின்னர்ச்
செக்காக்கமலைமார்பன்றிருந்துலகெய்துவாரே. ௪௮

பரிட்சித்துக் கலிகடிந்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௨௱௭௪.

ஸ்ரீகிருஷ்ண சகாயம்.

# ௮-வது, பரீட்சித்துச் சாபமேற்றவத்தியாயம்.

---

## கலிவிருத்தம்.

என்றுகூறலுமேத்தியிக்கதை
நன்றுநன்றெனுநற்றவர்க்கெலாம்
வென்றிவேலவன்வேட்டமேற்செலல்
துன்றுமாதவச்சூதன்சொல்லுவான். க

காட்டின்வாளரிக்கணத்தினோடுபோர்
ஆட்டினுற்றெழுந்தன்னமாட்சிசால்
வாட்டிறற்படைவயவர்சூழ்தர
வேட்டமாடுவான்வேந்தனெய்தினான். உ

அண்ணலூருமவ்வணிசெய்தேர்நடு
வண்ணமாமுகில்வந்துசேர்வது
நண்ணுதாதைதன்றாதைநல்லதேர்
கண்ணனூர்ந்தவக்காட்சிபோலுமே. ௩

நெடியதேர்நடுநீலமாமுகில்
படிதலுட்பயங்கொண்டுபாரின்மேல்
கொடையின்வென்றிடுகோன்வந்தானெனா
அடியின்வீழவந்தணுகல்போலுமே. ௪

சிலைவளங்கொள்போர்ச்சேனையார்த்தெழப்
பொலமுகட்டினிற்பொங்குதூளிபோய்
அலர்வனத்தினைச்சூழ்தலாங்கெலாம்
வலைவளைத்ததோர்வண்ணமானுமே. ௫

நெடுங்கிரித்தலைநின்றிழிந்தவெம்
மடங்கல்போன்மெனமன்னன்மாமணி
இடங்கொடேரினின்றிழிந்துதோகைநல்
நடங்கொள்கானகநண்ணனண்ணினான். ௬

கல்வளைத்தவெங்கானநண்ணலும்
எல்வளைக்கரத்தெஃகநீக்கிவார்
வில்வளைத்துமாமேகமொத்தனன்
மல்வளைத்ததோண்மன்னர்மன்னனே. ௭

கடங்கவிழ்த்ததன்கரியின்றெவ்வினை
அடங்கமாய்த்ததற்காற்றுநன்றிபோல்
மடங்கலேற்றின்மேன்மன்னர்கோமகன்
விடங்கவிழ்த்தவெம்பகழிவீசினான். ௮

சிலைவணக்கிவெஞ்சினவயப்பெரும்
* புலிதுரத்தினன்பொருதுவாரிசூழ்
நிலவரைப்பினீடுவெம்பகை
வலனழித்தவாண்மன்னர்மன்னனே. ௯

மஞ்சதிர்ந்தெனப்பிளிறுமையலம்
குஞ்சரங்களின்கொலைமருப்பிறச்
செஞ்சரந்தொடுத்தெய்துசென்றனன்
அஞ்சமிக்கபேராளியென்னவே. ௧௦

வம்புசேர்மலர்வரையினுச்சியின்
அம்பினோடாற்றுணையோடுதல்
இம்பர்மன்னவனீதல்கண்டுகண்
டும்பர்மீதுகாரோடலொத்ததே. ௧௧

வெம்மைசேர்கணைமீதுதைத்தலால்
தம்மைமூசுறத்தாவில்சோரிதான்
மும்மையாமதத்தானைமுன்செலல்
செம்மைசேர்முகில்சேறல்போலுமே. ௧௨

விண்ணம்போழும்வாள்வெயிற்குவெம்புகால்
அண்ணலானையாளுடல்ராவிளைத்
துண்ணுநீர்நசையொருதவத்தினோன்
நண்ணுசாலைவாய்நடத்தனண்ணினான். ௧௩

அம்மென்கச்சினனுடுதாரினன்
வெம்மின்னன்னவார்கணையன்வில்லினன்
செம்மனண்ணியச்செய்தவன்றனைத்
தம்மினுண்ணுநீர்தம்மினென்றனன். ௧௪

தருகவுண்ணுநீர்தருகவென்றுவேல்
அரசனுங்கடைந்தறைதல்கேட்டிலன்
பரனைநெஞ்சினிற்பாவித்துள்ளநெக்
குருகியொன்றுபட்டுறையுமாதவன். ௧௫

புலனெறிந்தமெய்ப்போதமாதவன்
நிலைநினைந்திலனீரிரக்கலும்
தலைமையந்தணன்றந்திலானென
உலகுகாவலனுள்ளத்துள்ளினன். ௧௬

---

* புலிதுரத்தினன்புயல்கிழித்தபொன்
குலவரைத்தடங்குடுமிகொண்டசேல்
வலனுயர்த்தவாள்வழுதிமானவே.

செத்தபாம்பினைச்செய்யதாமரைக்
கைத்தலத்துவிற்கடையினாற்கொளீஇ
மெய்த்தவத்தினோன்றோளின்வீழ்த்தனன்
மத்தயானையம்மன்னனேகினான். கஎ

பழுத்தநான்மறைப்பாடறெள்ளிய
தழைத்தகாட்சியான்றவநினைந்திலேம்
இழைத்ததென்கொலென்றெண்ணியெண்ணியே
மழைத்தடக்கையான்மறுகினானரோ. கஅ

வேறு.

ஐந்தவித்தருந்தவமாற்றுமந்தணன்
மைந்தன்மாட்டருந்தவர்மைந்தர்வல்லைபோய்
வெந்திறல்வேந்தனோர்வீந்தபாம்பினை
நுந்தைதோளிட்டனனெனநுவன்றனர். ககூ

பகர்ந்ததுகேட்டலும்பாலன்மன்னெறி
இகந்ததுகண்டபாரெனதுமாதவம்
திகழ்ந்திடக்காண்கெனச்சிவந்தகட்கடை
புகைந்தவெந்தீயுகப்புழுங்கினானுளம். உ0

காழ்படுமிடற்றராக்கழிந்ததெந்தைதோள்
வீழ்படவிட்டவவ்வேந்துதக்ககன்
பாழிவாய்ப்பட்டெழுபகலின்மாய்கெனத்
தாழ்கிலாச்சினத்தினன்சபித்திட்டானரோ. உக

எழுந்தனன்சிருங்கிபோயின்றதாதைதாள்
விழுந்தனனழுதலும்விழித்துமைந்தமற்
றழுந்திறமென்னையோவறைதிநீயென
மொழிந்தனன்விளைந்ததுமுழுதுமென்பவே. உஉ

மகன்மொழிகேட்டலுமறுகிமாதவன்
இகலெறிந்திருநிலமேழும்போற்றுறு
தகைமலியரசனைச்சபிக்கத்தாழ்கிலா
வெகுளிமற்றெங்ஙனம்விளைந்ததென்றனன். உ௩

தடம்புயத்தரசனைச்சபித்ததன்றுநீ
அடர்ந்துகொல்வெங்கலிக்கரசுநல்கினை
மிடைந்திடுதருமத்தின்வேரறுத்தனை
தொடர்ந்திடுவெம்பழிதுணிந்துசெய்தனை. உச

உன்னிடிற்சிறுபிழையுஞற்றும்வேந்தனைப்
பன்னினைசாபநீபாலனாகலான்

துன்னியபிழைபொறுத்தாடல்சொல்லுசீர்க்
கன்னியர்துளவினோன்கடனென்றோதினான். ௨௫

நிந்தனைபுரியினுநின்றுதைப்பினும்
சிந்தனைவெகுள்கிலார்சீதரற்றொழா
வந்தனைபுரிபவரொன்றுமாமனம்
நொந்தனன்பலப்பலநுவன்றிட்டானரோ. ௨௬

முழுப்பெருங்காட்சியான்முனிவன்றன்மகன்
தழைத்தவெம்முனிவினிற்சபித்தவத்திறம்
அழற்படைமன்னனுக்கறியக்கூறென
விழுத்தவனொருவனைவிடுத்திட்டானரோ. ௨௭

விடுத்தவவ்வேதியன்விரைவினேகினன்
கடற்புவிகாக்குமக்காவன்மன்னனை
அடுத்தனன்பைப்பையவறியக்கூறினான்
தடுப்பருந்திறலினான்சபித்தவண்ணமே. ௨௮

உரைத்ததுகேட்டலுமுடல்கொண்டின்னமும்
திரைப்புவியிருந்துதீப்பழிசெய்யாமைநூல்
தரித்துரைநாவினான்சபித்தனன்றெனா
வரைத்தடந்தோளினான்மகிழ்ச்சிகூர்ந்தனன். ௨௯

மண்டுநீர்க்கங்கையினடைந்துமாறிலாக்
கொண்டனேர்வண்ணனைக்குறித்துநெஞ்சகம்
புண்டரீகப்பதம்பொருத்துவேனெனா
விண்டுராதப்பெயர்வேந்தனெண்ணினான். ௩௦

தவச்சனமேசயனென்னுந்தண்முகை
துவைத்திளஞ்சுரும்புசூழ்தொடையன்மைந்தனைப்
புவிப்பொறைபொறுக்கெனப்பொன்னமாமுடி
கவித்தனன்கங்கையங்கரைவந்தெய்தினான். ௩௧

ஒருமுதல்பொலமுகடுடையநீட்டிய
திருமலரடிபுனைதெய்வத்தண்டுழாய்
விரைகமழ்நதித்துறைவிரிந்தபுல்லின்மேல்
வரையெனக்கிடந்தனன்வரம்பில்கேள்வியான். ௩௨

வேறு.

பரத்துவாசன்சவுனன்பராசரன்
திருத்துமாதவஞ்சேருங்கவுதமன்
விரத்திமிக்கமேதாதிதியவுருவன்
வரத்தினுற்றபிருகுவண்முற்கலன். ௩௩

### வேறு.

மெய்த்தவநாரதன்வியாதன்காசிபன்
அத்திரிகோசிகன்வசிட்டனங்கிரா
முத்தமிழ்முனிமுதன்முனிவர்யாவரும்
தத்துநீர்க்கங்கையின்கரையிற்சார்ந்தனர். ௩௪

வந்தெதிர்முனிவரைவணங்கிமன்னவன்
ஐந்தவித்துயர்ந்தநீரடைந்தவாற்றினால்
சிந்தினன்வல்வினைசிமிழ்ப்புமாறினன்
உய்ந்தனனெனச்சிலவுரைக்குமெல்லையின். ௩௫

புரியவிழ்தாமரைபுரையுங்கண்ணினன்
முரிதிரைமுத்தெனமுகிழ்க்குமூரலன்
மரகதநிறத்தினன்மலர்ந்தமார்பினன்
சுருள்விரிகுஞ்சியன்சுகன்வந்தெய்தினான். ௩௬

செழுந்தவனெய்தலுஞ்செறிந்தமாதவர்
எழுந்தனரிளங்கதிரெழநெகிழ்ந்துதேன்
வழிந்ததாமரையுறழ்வாண்முகத்தினன்
விழுந்தனனிறைஞ்சினன்வேந்தர்வேந்தனே. ௩௭

எண்ணியநல்லறிவியைந்துருக்கொடு
நண்ணியவெனுநினையான்கண்டுய்யநம்
கண்ணனெம்மரபுளானென்றுகாட்டிய
வண்ணமென்றுரைத்தனன்மகிழ்ச்சிகூருவான். ௩௮

ஒன்றினும்பற்றிலாதொழுகுகின்றநீ
இன்றுவந்தென்னுழையெய்தப்பெற்றனன்
வென்றனன்வினையெனவியந்துபோற்றினான்
மன்றலந்தாமரைமலர்க்கைகூப்பியே. ௩௯

இறப்புவந்தெய்துழியென்னினைப்பது
திறப்படக்கேட்பதென்செப்புகின்றதென்
அறத்துறையறிந்தநீயறைதியென்றனன்
மறத்துறைகடிந்தவேன்மன்னர்மன்னனே. ௪௰

என்னலுமுனிவரனினிதுகூறினன்
மன்னியமாதவர்மகிழ்ச்சிகூர்தரப்
பன்னருஞ்சுகமுனிபணிந்தவேந்துக்குச்
சொன்னதுசொல்கெனச்சூதன்சொல்லுவான். ௪௧

பரிட்சித்துச் சாபமேற்றவத்தியாயம் முற்றிற்று.

முதற்கந்தம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩௱௰௫.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

# ௧-வது, மாயவனிலையுரைத்தவத்தியாயம்.

---

## எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

மன்னவனவ்வாறுரைசெயக்கேட்டமறைமுனிசுகன்வகுத்துரைப்பான்
கன்னியந்துளவப்பசுந்தொடைபுனைந்தகரியவன்றிருவுருக்கருதி
அன்னமாய்மறையன்றறைந்தவன்சரிதமஞ்செவிமடுத்துமாயவன்பேர்
பன்னியுமன்றிப்பழவினைத்தொடர்புப்பற்றினையெறியவேறுளதோ. ௧

வார்திரைபுரட்டுதடங்கடல்பொடித்தமழகதிர்பொழிவெயிற்கற்றை
காரிருங்குன்றிற்றவழுமாகடுப்பக்கண்கவர்கவுத்துவஞ்சொரியும்
சீர்கெழுசெக்கரொளிபரந்திமைக்குந்திருமறுமார்பனையுள்ளத்
தோரிருகன்னலாயினுமுணரினுடைந்துவல்வினையிருளோடும். ௨

கழிபுகழ்க்கட்டுவாங்கனென்றுரைப்போன்கடவுளர்சொல்லினுள்ளாவி
ஒழிவதற்கிரண்டுகன்னலுண்டினியென்றுணர்ந்தனனனைத்தும்விட்டொ
அழலவிர்மணிச்சூட்டரவினின்றுடுமமலனைநினைந்துவீடுற்றான் [ருவி
எழுபகல்கிடந்தனக்குமற்றென்னினென்னைகொல்பெறுவதற்கரிதே.

மனத்தினைக்கடந்து வாக்கினுக்கெட்டா மாட்சியதாகிமா மறையும்,
இனைத்தெனவின்னுந் தெரிதரற்கொல்லா தெங்குமா யமலமாய்நின்ற,
தனிப்பெருஞ்சுடரை நினைக்குமாறுனக்குச் சாற்றுவல்கேண்மதியென்று,
வினைக்குறும்பெறிந்த வியாதனீன்றெடுத்த விழுத்தவன் விரிக்கலுற்றன
னால். ௪

அதலமேமுதலசேவடிநடுவேயந்தராநாவியேழ்பரவை
உதரநீள்குடுமித்தடவரைக்குலமென்புயர்மரமயிர்நதிநரம்பு
மதிமனமுதுநல்லறமுலைகனல்வாய்மல்குநீர்நாவளியுயிர்ப்புக்
கதிருமிழ்பரிதிகண்மலர்படைப்புக்கருணையங்கட்கடைப்பிறழ்வே. ௫

கேழ்கிளருடுவெண்பல்லிருங்கூற்றுக்கிளைத்தொளிதவழுநெட்டெயிறு
வாழிமாமாயைமுகிழிளமுறுவன்மாதிரஞ்செவிமறைகிளவி
தாழ்தவலோகநெற்றிமேலுலகுதலைபுயல்சுரிகுழலாக
எழிரண்டுலகுமுருவமாய்நின்றவிறைவனைச்சிலர்நினைந்திருப்பார். ௬

கங்கையார்கழலுங்கதிர்செய்பொற்கலையுங்கடகமுமகுடமுங்குழையும்
சங்கொடுதிகிரிவெங்கதைதண்பூந்தாமரைமலரிவைதாங்கும்
அங்கையோர்நான்குந்திருமறுமார்புமருள்பொழிகமலலோசனமும்
திங்கள்வாண்முகமுமுறுவலுமாகச்சிலர்புயல்வண்ணனைநினைவார். ௭

காலினாற்கீழைவாயிலையடைத்துக்கலந்துலாமுயிர்ப்பினைவீக்கி
மூலமேமுதலாதாரமோராறுமுறைமுறையெழுப்பிமற்றதனால்
மேலதாம்பிரமத்தொளையதுவிண்டுவிண்ணெலாங்காணினுங்காண்பார்
சீலமேம்பட்டார்சிலர்பரந்தாமன்சேவடிபடரினும்படர்வார். ௮

## அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அடைதருமிருநான்கங்கத்தணிபெறும்யோகம்வல்லார்
சுடர்விடுதெய்வயானஞ்சொல்லுபிங்கலைதானென்பர்
இடைபிதிர்யானமென்பரெழிற்சுழுமுனையைநாடி
நடைபெறுபிரமயானமாமெனநவில்வார்மன்னே. ௯

அத்தகையோகங்காமத்தன்றியேயாற்றுவோர்தாம்
முத்தியிற்பொருந்துவார்கண்மொழியணிமாதிவேட்ட
புத்தியால்யோகமுற்றும்புரிந்தவரிலிங்கமென்னும்
ஒத்திடுதனுவினுலெவ்வுலகினும்பயன்றுய்ப்பாரால். ௧0

ஈங்கிதன்றீங்கிதன்றென்றெவையும்விட்டொழியநின்ற
ஆங்கதனுடைமைதானென்றறிவினலறிந்துதன்னை
நீங்கலாவுணர்வினுலேகினைந்துகொண்டிருப்பானண்ணல்
ஓங்கியபரமாநந்தவுருவினைநினைந்தானுமால். ௧௧

மஞ்சுசூழ்குடுமிவெள்ளிமலைக்கொழுந்திறைஞ்சினோர்க்கு
விஞ்சைதந்தருளுமின்பம்வெற்பிளங்கன்னிநல்கும்
செஞ்சுடர்வழங்குங்காந்திசெழுநிதியுதவுஞ்செம்பொற்
கஞ்சநாண்மலரின்வாழுங்கருங்கயனெடுங்கணுயே. ௧௨

கணந்திகழ்மருத்தென்போர்கள்கவின்பெறுவலிதந்தாள்வர்
வணங்கிடின்வருணனல்கும்வளர்புகழ்பிதிர்களென்போர்
குணம்பெறுபுதல்வர்நாளுங்குறைவறவருள்வர்வீரம்
இணங்குருத்திரர்தாமீவரியக்கர்காத்தருளுவாரால். ௧௩

வருமதிவழங்குங்காமம்வளருடல்புவிமானல்கும்
பொருவருமெழிறந்தாள்வர்போற்றுகந்திருவராயுள்
பெருகுமாறுதவிக்காப்பர்பிரிந்திடாப்புரவித்தேவர்
தருகுவர்தனம்வசுக்கடாளிணைவணங்குவோர்க்கே. ௧௪

பாட்டளிமுரன்றுமூசுபனிமலர்ப்பாரிசாதத்
தோட்டதார்மார்பரெல்லாந்துறக்கமேயுதவுகிற்பர்
தாட்டுழாயலங்கன்மாலைத்தனிமுதலழியாமுத்தி
வீட்டினையளிக்குமன்றிவிழைவுறின்விழைந்தநல்கும். ௧௫

தழுவுறுகிளைஞர்தந்தைதாய்முதவெவருநாளில்
கழிவதுகண்டுங்கண்டுங்கண்டிலார்போலவாழ்வர்
ஒழிவறவுள்ளத்துள்ளேயுறைபரஞ்சுடரையோரார்
விழைவெனநின்றதுன்பவித்தினைவிளைப்பரம்மா. ௧௬

விடங்கலுழெயிற்றுப்பேழ்வாய்வெயின்மணிச்சூட்டுநாகப்
படங்கெழுபாவைஞாலப்பாயலொன்றுண்டுசெய்ய
குடங்கைமெல்லணையுண்டெங்குங்குலவு * வற்கலைகளுண்டால்
அடங்கலாவாசைவேர்மற்றறிந்தவர்க்கிலதெனெம்மா. ௧௭

பெற்றனவுவந்துமாந்திப்பிறந்தநல்லமுதமெல்லாம்
பொற்றருநிழலில்வைகும்புலவர்கூட்டுண்ணநல்கும்
கொற்றவன்றன்னைச்செய்யாள்கொண்கனையுலகங்காக்கும்
ஒற்றையந்திகிரியானையுளத்திலென்னுணர்கிலாரே. ௧௮

திருநதித்துறைகளெல்லாந்தீம்புனல்வறந்தவேயோ
விரிகடலமுதமூறும்விழுச்சுவைக்கனியவாய
மரனெலாமாண்டவேயோமாநிதிச்செருக்கினார்கண்
குருடுபட்டவர்போலென்னோகுறையிரந்துழல்கின்றால். ௧௯

வண்டிமிர்தெரியன்மார்வவண்டுழாயலங்கலானைக்
கண்டனையற்றைஞான்றேகளைந்தனையார்வமெல்லாம்
உண்டுகொனினக்குக்கிட்டாவொருபொருளென்றுசெவ்வாய்
விண்டனனென்னலோடும்விழுத்தவர்விளம்பலுற்றார். ௨0

மாயவனிலையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨0.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## உ-வது, சௌனகாதியரன்பினிலையுரைத்த வத்தியாயம்.

### அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

இறந்தொழிந்ததுவெங்கூற்றமென்றுளத்துணர்ந்தார்போலும்
அறந்தலைமணந்தசெங்கோலைவர்பாரேழுங்காப்ப
கறுந்துழாய்ப்பகவன்றூதுநடந்ததாட்கமலப்போது
மறந்தனர்மாக்கள்வாளாவருபகல்கழிக்கின்றால். ௧

மழைதுளிமறுத்தகானின்வற்றனீண்மரமுமந்தண்
குழைதரவன்றிண்குன்றுங்குழைதரவமுதமூறும்
கழையினிசைவடித்தான்செவ்விகாண்கிலாக்கண்கண்மஞ்ஞைத்
தொழுதியங்கலவமேயதுஞ்சலில்வறுங்கணன்றே. ௨

காதமோர்நான்குதெய்வக்கடிகமழ்கமலைகொண்கன்
பாததாமரையிற்சார்த்தும்பசுந்துழாய்மோந்துமோந்து
தீதறவுயிர்த்திலானேற்செத்தவனுயிர்ப்பதெண்ணின்
ஊதுலைக்குருகுமற்றூங்குயிர்ப்பதுபோலுமாதோ. ௩

* கலைதிக்குண்டால் எனவும் பாடமுளது.

இடிக்குரல்யானைவெண்கோடிறுத்தவனிணைப்பொற்றாளின்
கடித்துணர்புனையாக்கைகள்கையறுகைகளாமால்
பொடித்தசெங்கதிர்போற்காந்திபொழிமணிச்சுட்டராவின்
நடித்தவனும்பாடாநாவழங்காதநாவே. ச

பனியிருவிசும்புதேடப்பழமறைமுடிவினின்ற
தனிமுதலடியிற்றாழாத்தலைதலையென்னலாகா
நினைதொறுமினியவாயநெடியவன்சரிதங்கேட்டுக்
கனிவுறுவுளமிரும்போகற்கொலோவறிகிலேமால். ரு

தவப்பொழிமாரிகாப்பத்தடவரைக்கவிகையன்று
கவித்தவன்கோயில்செல்லாக்கான்மரத்தியன்றகாலே
உவப்பினினமுதமூறியொழுகுமால்சரிதங்கேளாச்
செவித்தொளைநச்சுநாகஞ்செறிவதோர்தொளைமற்றுமால். சு

டிகதியாழ்முனிவனுதிமாதவரவையின்மாநீர்
அகனிலம்புரந்தகூர்வாளரசுளங்குழைந்துகேட்பச்
சுகமுனியுரைத்தவெல்லாஞ்சொல்லுவாயென்னலோடும்
வெகுளிவேரிந்தசூதன்விழுத்தவர்க்கினிதுசொல்வான். எ

சௌனகாதிய ரன்பினிலையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உஎ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௩-வது, சுகமுனிதத்துமுவரைத்த வத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

அலர்துழாயமலன்காதையமுதமூற்றெழுதலாலே
மலர்கதிர்த்திங்கள்போன்றுவயங்குவாண்முகத்தாய்மாநீர்
உலகெலாமுதித்தவண்ணமுரைத்திடவேண்டுமென்று
திலகவெண்குடையான்கூறச்சுகமுனிதெரிக்கலுற்றான். க

நன்னர்யாழ்முனிவன்பண்டுநான்முகன்றன்னைநோக்கி
முன்னவனீயேயீன்றாய்முழங்குநீருலகமெல்லாம்
என்னைநீதவஞ்செய்வாயென்றேத்தினனிசைப்பச்செங்கால்
அன்னமீதுயர்த்தவண்ணலரிபதந்தெரித்தல்செய்வான். உ

மாகதக்குன்றுபோலமாக்கடல்வளாநின்ற
முருகலர்துளவப்பைந்தார்முகுந்தனேமுதல்வனுமால்
அருள்பொழிகமலக்கண்ணலாங்கவனென்னைநோக்கித்
தருவினைவுலகமெல்லாந்தந்தனனென்றுசொற்றான். ௩

ஆழியானயனுக்கோதவயனுநாரதற்குக்கூற
யாழுடைமுனிவியாதற்கிசைத்திடவியாதனன்பால்
சூழுமாறெனக்குச்சொற்றதொல்கதைநினக்குச்சொல்வேன்
வாழிவாளரசவென்றுமறைமுனிவழங்கலுற்றான். ௪

திகழ்பரந்தாமமாகிச்சின்மயமாகிநீல
முகிலெனத்திகழ்ந்துதோன்றுமுழுமுதல்பார்க்கமூலப்
பகுதியின்மகானுண்டாகும்பகர்தருமகானினின்றும்
தகைமைசால்குணங்கண்மூன்றுந்தழுவகங்காரந்தோன்றும். ௫

தலைமைசால்சிறப்புவாய்ந்ததாமதவகங்காரத்தின்
ஒலியெழுமொலியிற்றோன்றுமோங்குவான்வானிற்றோன்றும்
மலியுமூறாற்றிற்றோன்றும்வளியெறிவளியிற்றோன்றும்
நிலவொளியொளியினின்றுநிமிர்சுடர்க்கனலிதோன்றும். ௬

சுடர்விடுகனலிதன்னிற்சுவையெழுஞ்சுவையினின்றும்
படுபுனல்வந்துதோன்றும்பாய்திரைப்புனலினின்றும்
ஒடிவிலாநாற்றமுண்டாமோங்கியநாற்றந்தன்னின்
நெடுநிலந்தோன்றுமென்றுநிகழ்த்துநான்மறையுநின்றே. ௭

விண்ணொலிதழுவுங்காற்றுமேவுறுமொலியுமூறும்
நண்ணுமாலொலியுமூறுநலந்திகழுருவஞ்செந்தீத்
தண்ணறலொலியுமூறுமுருவமுஞ்சுவையுஞ்சாரும்
மண்ணிவைநான்கினோடுமணத்தையும்புணர்ந்துமன்னும். ௮

ஒத்திராசதகுணத்தோடொன்றியவகங்காரத்தின்
பத்தெனுமிந்தியங்கள்படுமனந்தன்னோடம்மா
சத்துவகுணத்தினோடுதழுவகங்காரத்துண்டாம்
அத்தகையிந்தியங்கடமக்கதிட்டானதெய்வம். ௯

விரிதிசைகாற்றுவெய்யோன்வெண்டிரைக்கடலஞ்செல்வன்
புரவியின்பெயரந்தேவர்பொங்கொளிவளருஞ்செந்தீ
உரைபெறுமமரர்வேந்தனுபேந்திரன்மறலிவேதாச்
சொரிகதிர்த்திங்களென்பசொல்லுமத்தெய்வந்தாமே. ௧௦

அறைந்ததத்துவத்தின்கூட்டத்தண்டமொன்றுண்டாமாங்குச்
சிறந்தபேரண்டந்தன்னிற்செப்புதற்கரியனாகி
நிறைந்தவெப்பொருளுந்தானாய்நிகரிலாதோங்கியெங்கும்
உறைந்துறையாதுநின்றவொருபெரும்புருடன்றோன்றும். ௧௧

கலிநிலைத்துறை.

பாதம்பார்தலைபணியிருவிசும்புகண்பரிதி
வேதம்பாட்டுவெண்மதிமனந்திசைசெவியாக
ஓதுபேருலகனைத்துமோருருவமாம்புருடன்
ஆதியாமவதாரமென்றறைகுவரறிந்தோர். ௧௨

உலகம்யாவுநல்லவயமாகலினுரைக்கும்
அலகின்மாமறையந்தணராவுதிப்சுநெய்
இலகியேயெழுமுத்தழலினிதவிநுகர்வோர்
பொலியும்யூபமிம்முதலவப்புருடனேயாமால். கந

நீனிறக்கடல்வீழ்புவிகிழன்மருப்பெடுத்த
எனமாதியாவிலங்சொளிமரகதங்கடுக்கும்
தேனவாவுபைந்துளவிஞன்றிருவவதாரம்
வானமேத்திடநடந்தனவரம்பிலவுளவால். கச

நான்முகத்திறேன்மனுவின்னநாரதன்றுருவன்
தேன்மிகுத்தநற்செழுந்தொடைவீடணன்விலங்கு
கான்மலர்க்குழற்கன்னியர்முதற்கதியடைய
மான்மலர்ப்பதத்தன்புசெய்தார்வரம்பிலரால். கரு

கருந்துழாய்முகிலுந்தியங்கமலநாண்மலரின்
விரிஞ்சன்றேன்றினன்விதிக்குமாறறிகிலனுகி
இருந்தகாலையிற்றபவெனவெழுந்ததோர்மாற்றம்
தெரிந்துமற்றிதுசெப்பினர்யாரெனத்திகைத்தான். கசு

விரிதடந்திசையாவையும்விழிமலர்பரப்பி
ஒருவர்தம்மையுங்காண்கிலனுளங்குழைந்தமரர்
பருவமாயிரம்பழுதிலாநற்றவம்புரிந்தான்
மருவிருந்ததண்மலர்ப்பொகுட்டுறைபழமறையோன். கஎ

மீட்டுமாதவங்கண்டுமாலீறில்வைகுந்தம்
காட்டியவ்வழிக்கார்முகிற்கொழுந்தெனத்தோன்ற
நாட்டநீருகக்கண்டனனிறைஞ்சுநான்முகற்கு
வேட்டநல்வரங்கொடுத்தனன்படைத்தனன்விரிஞ்சன். கஅ

பாரும்வானமும்பாதமுஞ்சென்னியுமாக
ஒருமூதண்டவுருவனுயுயர்வறவுயர்ந்தோன்
நாரமாதியிற்றந்துநாராயணனென்னும்
பேரடைந்திடப்பெருகியநாரத்தினமர்ந்தான். கசூ

உறைந்தகாலையிற்றனியிராதுவந்தனனுகப்
பிறந்தவண்டமாம்விராட்டெனும்பிண்டத்தின்முகமோர்
சிறந்தவிந்தியஞ்சேர்குணந்தெய்வநற்சித்தம்
நிறைந்தவாயுவிம்முதலெலாநிலவினமாதோ. உ0

விதுரனித்திறம்வீறுசான்மித்திரையுயிர்த்த
மதலையாகியமயித்திரேயன்வகுத்துரைப்ப
அதிசயத்தொடுமென்பொடுங்கேட்டனனென்று
முதுமறைக்கொழுந்தெனத்திகழ்முனிவரனுரைத்தான். உக

என்றுசூதமாமுனியெடுத்தியம்பலுமுனிவர்
வென்றிவேலவன்விதுரன்முன்கேட்டவாறரசுக்
கன்றுநற்றவச்சுகமுனியறைந்ததையெமக்கும்
நன்றுகூறெனநான்மறையவர்க்கவனவில்வான். ௨௨

சுகமுனிதத்துவமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௪௯.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

# ச-வது, உத்தவர் விதுரனுக்குக் கண்ணன் சரித்திரமுரைத்தவத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வித்தகன்விதுரனென்போன்வேழநன்னகரநீங்கற்
கொத்திடுநிமித்தமென்கொலொழிந்ததெக்காலமன்னோன்
எத்தலத்திருந்துகேட்டானினிதுநீயுரைத்தியென்று
மத்தவெங்களிற்றான்கூறமறைமுனிவகுத்துக்கூறும். ௧

அன்னமென்னடையினாள்பாஞ்சாலியையவையினுய்த்து
மின்னென நுடங்கியேங்கமென்றுகில்கவரலுற்ற
மன்னிளங்குமரன்றன்மேல்வாரநீவிடுதியென்னா
முன்னவன்றனக்குச்சென்றுமொழிந்தனன்விதுரன்மாதோ. ௨

கழைசுளிகளிநல்யானைக்காவலற்குரைத்தமாற்றம்
அழன்மணிச்சுடிகைநெற்றியாடரவுயர்த்தோன்கேளாப்
பழிபடுசிலதிபெற்றபாலனீயுறுதிகூறல்
ஒழிதிவிட்டொழிதியென்னவுருமெனவுலம்பினானால். ௩

மறங்கனிந்தொழுகுகூர்வேன்மன்னவன்சிறுவனிவ்வா
றறைந்திடக்கேட்டலோடுமறத்துறையொழுகாநின்ற
செறிந்ததார்விதுரனென்பான்செருமலிதடக்கைவல்வில்
எறிந்தனனிறுத்துமற்றாங்கெழுந்தனன்போயான்மன்னோ. ௪

புண்ணியவேள்விசெய்துபுகழ்மிகவறத்தின்மைந்தன்
கண்ணகன்ஞாலங்காக்குங்காலையிற்றுவரையாதி
எண்ணறுந்தலங்களேகியிருநதியாடிவெய்யோன்
பெண்ணெனவுலகுபோற்றப்பிறங்குகாளிந்திசேர்ந்தான். ௫

கலிபுனல்யமுனையாற்றங்கரையினுத்தவனைக்கண்ணுற்
றலரொளிகழுமுபூணார்யாதவர்தீதிலார்கொல்
இலைவிரிதுளவத்தாரானெழிற்றிறமுரைத்தியென்ன
நிலைபெறுகாதலன்பனெஞ்சகங்கலுழ்ந்துசொல்லும். ௬

கலிவிருத்தம்.

எண்ணிடினுருச்செயலிலாதமுன்னவன்
கண்ணனென்றுதித்ததுங்கஞ்சனுக்குளம்
துண்ணெனவஞ்சினன்போற்சொற்கோகுலம்
நண்ணினன்வளர்ந்ததுநந்தன்செய்ததும். ௭

பூதனைக்கும்மருள்புரிந்துதாளெனும்
தாதுறுமலர்கொடுசகடுதைத்ததும்
ஓதுரன்மருதிறவுருளச்சென்றதும்
மேதகுகன்றினமேய்த்தவண்ணமும். ௮

கன்றெனுமசுரனற்கனியுகுத்ததும்
வன்றிறற்புள்ளின்வெவ்வாய்கிழித்ததும்
சென்றிடுநீணெறிச்செழும்பொற்குன்றையும்
வென்றுயர்பாந்தளின்மிடறுகீண்டதும். ௯

மறையவன்கன்றொடுமிழவர்தம்மையும்
கறைகெழுமாயையிற்கரந்ததோர்ந்தவண்
குறைவறவாயர்தங்குமார்தம்மொடு
நிறைதருகன்றுமாய்நிறைந்துநின்றதும். ௧௦

மலாவனேத்துறமகிழ்ந்தவண்ணமும்
தொலைவறுதேனுகாசுரனென்றேசொலக்
குலவுறுவெங்கரங்கொடுகரத்திறல்
நிலமிசைப்பனைவிழநின்றெறிந்ததும். ௧௧

பச்சிளம்புல்லுணப்பசுக்கண்மேய்த்ததும்
நச்சரவுச்சியினடங்குயின்றதும்
அச்சமுற்றிடவருமட்வித்தீயினை
இச்சைசெயவேயெனவெடுத்துளுண்டதும். ௧௨

பட்டபாதவந்தளிர்படைப்பதன்றியும்
மட்டுவேய்ங்குழலுமாந்தளிர்படைத்தல்போல்
தொட்டுநீள்விரலினற்றொளைகள்பொத்தியும்
விட்டுநல்லிசையினைவிரித்தவண்ணமும். ௧௩

கோவியர்பூந்துகில்கொண்டவண்மையும்
தாவினல்வேள்விசெய்தவத்தினோர்கடம்
ஆவியினிகரணிமாதர்போனகம்
மேவினரளித்திடவிருப்பினுண்டதும். ௧௪

தாதலர்தாமரைத்தடக்கையொன்றினால்
எதமில்வரைக்குடையெடுத்துநின்றதும்
காதல்செய்கழையிசைகாட்டியாயர்தம்
மாதர்கள்யாரையுமருவுவண்ணமும். ௧௫

தீந்தொடையாழ்முனிசெப்பக்கேட்டபின்
காந்தினிபுதல்வனைக்கஞ்சன்விட்டதும்
போந்ததுமதுரையிற்போந்துசாலையில்
எந்தெழில்வரையின்வில்லிறுத்தவண்ணமும். ௧௬

கொடியவெங்குவலயாபீடக்கோட்டினை
அடியொடுமகழ்ந்தவெந்திறனுமார்ப்பொடும்
இடியெனமுன்னம்வந்தெதிர்ந்தமல்லர்கள்
படிமிசைவீழ்ந்துடல்பதைப்பமாய்த்ததும். ௧௭

கந்தநாண்மலர்முடிக்கஞ்சற்கொன்றதும்
தந்தைதாய்மலரடிதாழ்ந்தெதன்னான்மிக
நொந்தனிர்போன்மெனநுவன்றவண்ணமும்
சிந்தையையுருக்குமென்றெடுத்துச்செப்பினான். ௧௮

செப்பியவுத்தவன்பின்னுஞ்செப்புவான்
இப்புவியுக்கிரசேனற்கீந்ததும்
முப்புரிநூல்கர்க்கமுனியிற்பெற்றதும்
தப்பில்சாந்தீவினிதன்னைச்சார்ந்தவன். ௧௯

விதியினிற்பழமறைவிளம்பக்கற்றதும்
அதிசயத்தொடுகுருவகமகிழ்ந்திட
முதலைவவ்விடவுயிர்முன்பிறந்தவம்
மதலைநீகொள்கெனவழங்கிவந்ததும். ௨௦

துன்னிணைகோகுலந்துணைவிற்றுன்புறும்
அன்னையைத்தந்தையையாற்றியவ்வழி
மன்னியகோவியர்மனந்தெருட்டெனத்
தன்னைமுன்விடுத்ததுஞ்சார்ந்ததன்மையும். ௨௧

இக்குவார்சிலைமதனெனச்சொலைவரை
மக்கள்போற்கண்ணிலான்மகிழ்ந்துளான்கொலோ
அக்குரூரன்றனையத்தினாபுரம்
புக்குநீயறிகெனப்போக்குவண்ணமும். ௨௨

மிக்கவெம்பகைக்குளம்வெருவினானெனத்
தக்கசீர்மதுரையிற்சார்ந்துளார்களை
ஒக்கலோடுறைகெனத்துவரையுய்த்தடி
முக்குறும்பறுமுசுகுந்தற்கீந்ததும். ௨௩

தாமநீண்மார்பகஞ்சார்ந்துநீங்கலா
தேமுறுகமலையையெடுத்துவேட்டதும்
காமனையுயிர்த்ததுங்கழறுசத்திய
பாமையேமுதலெழுபாவைமார்களை. உச

சீர்மணம்புரிந்ததுஞ்சினத்தின்மிக்கெழும்
தார்நரகாசுரன்றன்னைச்செற்றதும்
பார்மிசைப்பதித்ததும்பாரிசாதத்தை
ஓர்தினத்தீரெண்ணுயிரவுருக்கொடு. உரு

எண்ணிரண்டாயிரரென்னுமாதரை
நண்ணிமுன்வேட்டதுநலந்துய்த்தொவ்வொரு
தண்ணறுங்குழலினர்தநயரீரைந்தும்
பெண்ணொன்றுமாகவேபெற்றவண்ணமும். உசு

உருகுகாதலின்முனமுயிர்த்தமைந்தர்க்குப்
பொருவறுதிருமணம்புணர்த்தவண்ணமும்
மருவுவாணசுரன்வளக்கையீர்ந்ததும்
நிருதனுக்கருளினனின்றவண்ணமும். உஎ

தழற்படைப்பவுண்டரன்றனைச்செறுத்ததும்
வழுத்திடநாரதன்வந்துகண்டுகண்
டெழிற்கதிர்ப்பூணினுரீரெண்ணுயிரர்
நிழற்பொலிமனைதொறுநிலவுவண்ணமும். உஅ

நெடிதவைக்களத்துளோர்காணநிந்தைசொல்
படைமிகுதிறற்சிசுபாலனென்னுமோர்
கொடியனும்படிமிசைக்குலவுகாந்தியாய்
அடிமலரடைந்திடவளித்தவண்ணமும். உகூ

அசைவறுநிதியமந்தணருக்கீந்ததும்
மிசைவருபரிதியைவிரைந்துநீண்டுற
விசைதருவெவ்வராவியைந்தகாலமெண்
டிசைபுகழ்சமந்தபஞ்சகத்திற்சென்றதும். ௩0

கஞ்சனலிறந்திடுகாதன்மைந்தரை
அஞ்சொலாடேவகியளித்தியென்றலும்
துஞ்சியேசுதலலோகத்திற்றுன்னிய
மஞ்சரோராறுவரைவருவித்தீந்ததும். ௩க

ஏத்தெழிற்சுபத்திரையென்னுந்தங்கையைப்
பார்த்தனன்மணஞ்செயப்பணித்தவண்ணமும்
நாத்தழும்பாகச்சீர்நவிற்றுமன்பர்க்காப்
பூத்திரட்சோலைசூழ்மிதிலைபுக்கதும். ௩உ

கொடுமைசெயரவுயர்கொடியனேமுதல்
அடையுமீரொன்பதாமக்குரோணியாய்
மிடைதருசேனையைவெஞ்சமத்தினல்
மடிதரப்புணர்த்ததுமகிழ்ந்துநின்றதும். ௩௩

காதலோடைவரைக்காத்தவண்ணமும்
ஓதும்யாதவர்தமையொறுக்கும்வீரர்பார்
மீதிலையெனநினைந்தகற்றுமிக்கவுற்
பாதமென்றேபிரபாதத்துய்த்ததும். ௩௪

கருமுகின்மாயையாற்கலந்துநான்மறை
மருவியமாதவர்வழங்குசாபத்தால்
பெருகியவோகம்பிடுங்கிக்கைக்கொளாப்
பொருவருயாதவர்பொருதுமாண்டதும். ௩௫

பன்னினனழுதனன்பதைபதைத்தனன்
தன்னையுமறந்தனன்சாற்றுமுத்தவன்
மன்னியவுணர்வினுன்மனந்தெருண்டனன்
பின்னருஞ்சிலமொழிபேசுவானரோ. ௩௬

கடல்வருமதியினைக்கண்டுகண்டுமீன்
இடைவருசெந்துவென்றெண்ணுமாறுபோல்
நெடியனைநரனெனநினைந்தேயன்றி
அடிதொழயாதவறிந்திலார்களால். ௩௭

மருவிடக்காலின்மேல்வலதுகாலைவைத்
தரசினன்மூலத்தினமரவாழியான்
விரைவினன்மித்திரைபெற்றமெய்யனும்
புரிதருபரிவொடும்யானும்போயினேம். ௩௮

மன்னியவென்றனைமாயனேக்கிய
உன்னியசனனமொன்றில்லையோதுநின்
முன்னைநீவசுவெனமொழியவுற்றனை
என்னிடத்தன்புதானினிதுகெட்டனை. ௩௯

ஆதலாலென்னிடத்தன்புசான்றனை
கோதிலாய்தந்தனன்முத்திகூறிய
நீதிலாத்தத்துவஞ்சேர்ந்தமாதவர்க்
கோதிநீவாவெனவொளித்திட்டானென்றான். ௪0

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

விளைந்தமைவிதுரன்கேட்டுவிழிமலர்கலுழ்ந்துநெஞ்சம்
துளங்கினனுணர்விற்றேறித்தோடவிழ்கமலச்செங்கட்
களங்கனிவண்ணத்தண்ணல்காதலானினக்குமுன்னம்
விளங்கதத்துவங்கள்யாவுங்கிளத்திடல்வேண்டுமென்றான். ௪௧

மல்லடுகுவவுத்திண்டோண்மாயவன்மயித்திரேயன்
அல்லியங்கமலமன்னவானனமன்றுநோக்கிச்
சொல்லுதிதத்துவங்கள்சூழ்ச்சிசால்விதுரற்கின்னே
செல்லுதியவன்பாலென்றுசெப்பலுஞ்சேறலுற்றான். சுஉ

வெந்திறல்விதுரனென்பான்விளம்பியவண்ணங்கேளா
அந்தமிலாழிமாயனமர்ந்தவக்காலத்தென்னைச்
சிந்தையினினைந்தவ்வாறுசெப்பினனென்றாலென்போல்
உய்ந்தவரில்லையென்றானெனச்சுகனோதினனால். சுங

உத்தவர் விதுரற்குக் கண்ணன் சரித்திரமுரைத்த
வத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கூஉ.
உ-வது, ஸ்கந்தம் முற்றிற்று.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ங-வது, ஸ்கந்தம்.

## க-வது, மைத்திரேயர்விதுரற்குத் தத்துவமுரைத்த வத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

என்னலுமுனிவர்சாபமெய்தியாதவர்களெல்லாம்
பொன்னுலகடைந்தார்தம்மிற்போர்புரிந்தென்றாயெங்ஙன்
அன்னவெந்திறல்கொள்சாபமுத்தவனடைதலின்றி
மன்னினனெனக்கடாவமன்னன்மாமுனிவன்கூறும். க

சாற்றுதியுலகுக்கெல்லாந்தத்துவமென்றுசாபம்
மாற்றுபுகமலச்செங்கண்மாயவன்பணித்தவாற்றால்
ஊற்றெழுநறவப்பைந்தாருத்தவனுறுவர்போற்ற
வீற்றிருந்தனனன்மேவிவெதிரிகாச்சிரமத்தன்றே. உ

காய்கதிர்ப்பரிதிபெற்றகடவுண்மாநதிநீராடி
ஆயிரமுகத்ததாகியலைகடலகடுகிண்டு
பாய்புனற்கங்கையாற்றின்பணிமலர்த்துறையினோர்சார்
மேயினன்மயித்திரேயனவனுழைவிதுரன்சென்றான். ங

கலிநிலைத்துறை.

பொறிசெறிக்குமம்முனிவனைவிதுரனும்போற்றி
முறைவகுத்துரைமுதலகுதித்தவாறென்னே
மறைவகுத்தமெய்ம்மாதவன்மதலைநீதெருளாத்
துறைமற்றுண்டுகொலென்றனன்சோறலுற்றனனால். ச

மறைகளென்பனவமருளறத்தெளிந்துமற்றின்னும்
அறைவதற்கரிதாயுயாாநந்தமயமாய்
நிறைபரஞ்சுடர்நெடுமலர்க்கட்கடைசிறிது
பிறழமாயையிற்பிறந்தனனொருபெரும்புருடன். ௫

புருடன்றன்னுழைப்பொருவருஞ்சத்தியைவைத்தான்
உருவந்தோறுநற்சீவனென்றுரைப்பவனிவனே
மருவுசீவனும்புருடன்றன்மருங்கினின்மகானும்
பெருமகானிடைப்பிறங்ககங்காரமும்பிறந்த. ௬

சிறந்துதோன்றகங்காரமுஞ்செப்புமுக்குணத்தால்
நிறைந்துமூன்றகங்காரமாய்நிகழ்த்திடப்படுமால்
அறைந்ததாமதந்தழுவகங்காரத்திலேந்தாய்
உறைந்தமாத்திரைதம்மொடுபூதமைந்துதித்த. ௭

துதித்தராசதந்தழுவகங்காரத்திற்றுலங்கி
உதித்தவிந்தியம்பழுத்துமுன்னுரைத்தசத்துவத்தை
மதித்துமேவகங்காரத்தின்மனத்தொடுபொறிக்கு
விதித்தசீரதிட்டானமாம்விண்ணவருதித்தார். ௮

உயர்மகானகங்காரமாமொலிமுதலேந்து
பயிலும்பூதமைந்திந்தியம்பத்தொடுமனமென்
றியலுந்தத்துவமோரிருபத்துமூன்றியற்றும்
செயறமக்கிலதனிமுதல்சேவடிபுனைந்த. ௯

ஏங்குதத்துவமெமக்குநீயளித்திகண்ணென்ன
நீங்கிநின்றனவழுத்தலுநிலவுபேரொளியாய்
ஓங்குமுன்னவனவற்றினைப்பொருந்தியொன்ருக்க
வீங்குநீரினிற்பிறந்ததுவிளங்குபேரண்டம். ௧0

எங்குமாய்நிறைதெய்வமோடியற்றுறுகருமம்
தங்குமிச்சையென்றுரைபெறுசத்திகளுடனே
அங்கொழுஞ்சுடாவிர்தருபொன்மயமாகிப்
பொங்குமண்டத்தின்விராட்டெனப்பொலிந்தனன்புருடன். ௧௧

கலிவிருத்தம்.

தகைபெறுவிராட்டெனத்தயங்குபிண்டத்தின்
நகைபெறுநாடியுநவிற்றுபத்தென
இகலுறுவாயுவுமியையமுன்னமே
முகபிலங்கழலொடுமுளைத்தெழுந்தபின். ௧௨

கண்ணுருவோடுவெங்கதிர்செய்பானுவும்
வண்ணநாச்சுவையொடுவருணதேவனும்
நண்ணியசெவியொலியொடுநற்றிக்குமேல்
எண்ணுதொக்கூற்றொடுமினியவாயுவும். ௧௩

நாசிவாசத்தொடுநவையில்வாசிக்குப்
பேசியபெயர்பெறுபிறிவிறேவரும்
காசில்வாய்மொழியொடுகனலின்றேவனும்
வீசுகைதொடலொடுவிண்ணில்வேந்தனும். ௧௪

இதமுறுகோசநல்லெழில்செய்விந்துவை
விதியினில்விடலொடுவிரிஞ்சனும்மடி
துதிநடையொடுமுபேந்திரனுஞ்சொல்லிய
குதமலம்விடலொடுகூற்றுமாகவே. ௧௫

கல்லைவசெய்புலன்களோர்பத்துங்காதலின்
செவ்வகைவிடயமாய்ச்சேர்குணங்களும்
அவ்வகைப்பொறிக்கதிட்டானதெய்வமும்
இவ்வகையுதித்தனவிராட்டுக்கென்பவே. ௧௬

நடைபெறுமனத்தொடுநவிலுமையமும்
சுடர்தருதிங்களுந்தோன்றயாளென
அடையகங்மாரமுமறிவிலாமையும்
உடல்சினவுருத்திரனோடுமுற்றவே. ௧௭

புத்தியுந்துணிதரப்பொருந்துஞானமும்
ஒத்திறைவிரிஞ்சனுமுதிக்கவோங்குசீர்ச்
சித்தமுநினைப்பதுஞ்சிறந்தசீவனும்
அத்தகைவிராட்டுவுக்கடைந்தவென்பவே. ௧௮

உரைதருசீவனையுற்றுமன்னுபு
பிரிதலிலாதநற்பிராணவாயுவும்
மருவுதனாற்செயல்வளர்புலன்களும்
அரசனுமணுக்கனும்போலுமாலரோ. ௧௯

முன்னுறுமுகத்தினந்தணர்முளைத்தனர்
மன்னவர்வாகுவில்வந்துமன்னினார்
பொன்னுறுவணிகர்பூந்தொடையிற்போந்தனர்
பின்னவர்தாளினிற்பின்னர்த்தோன்றினார். ௨௦

நால்வகைவருணமாநவின்றுளோர்கடம்
பால்வருமுரியநற்கருமம்பார்மிசை
மேல்வளரன்பினால்விருப்பினாற்றிடின்
மால்பெரிதுவந்தவர்மகிழ்ந்தநல்குமே. ௨௧

தலையெனுமும்பரிற்சத்துவத்தினால்
மலைவறுதேவர்கள்யாரும்வந்தனர்
நிலைபெறுதாளெனுநெடியபாரின்மேல்
உலவுராசதத்தினாரர்வந்தோன்றினார். ௨௨

அணிதருநாபியாமந்தாத்தினில்
தணிவுறுதாமதகுணத்திற்சார்ந்ததால்
கணிதமில்பூதம்வேதாளங்கண்முதற்
பிணியுறுகுழிந்தகட்பேயின்கூட்டமே. உ௩

வீறுயர்விதியினல்விராட்டுத்தன்மையை
நூறியாண்டிறப்பினுநுவலொணுதெனின்
கூறுவார்யார்சிறிதேனுங்கூறினல்
தேறுமெய்யுணர்வுறுமென்றுசெப்பினன். உ௪

என்னலும்விதுானுங்கியம்புவான்முனம்
மன்னுருக்குணமிலான்மருவுமாயையால்
துன்னுருக்குணத்தொடுதொழிலுற்ருனென்ருய்
உன்னுறினென்கொலீதுரைத்தியாலென்ருன். உ௫

வேறு.

கனவிற்காணுங்கடுஞ்செயல்பொய்ப்பதும்
புனல்விகாரம்புனன்மதிக்குற்றதும்
நினையிற்பொய்ப்பதுபோனிகழ்மாயைசேர்
வினைகளொன்றும்விமலனுக்கில்லையால். உ௬

பற்றில்பண்ணவர்பற்றும்பாமனுக்
குற்றநோக்கினுருக்குணமில்லையென்
றற்றநீங்குமருந்தவன்சொற்றலும்
வெற்றிவேற்கைவிதுரன்விளம்புமால். உ௭

உந்திநாண்மலர்மேலயனுற்றதும்
சிந்தைகூர்தவஞ்செய்துபடைத்ததும்
பந்தநீங்குகாலத்தின்பகுதியும்
வந்துதீங்கறமாயவன்காத்ததும். உ௮

துதிசெயுஞ்சுராதியர்தோற்றமும்
மதியின்மிக்கமரீசிமுதலியர்
பதின்மர்வந்துபடைத்தபகுதியும்
விதியளித்தமனுச்செய்விழுப்பமும். உ௯

மனுவினன்னர்மாபும்வெம்மாயையும்
நினைவரும்பெருநித்தியஞானமும்
முனிவில்வண்மைமுனிவமொழியுமென்
வினையறவிளம்பென்னவிளம்புவான். ௩0

மைத்திரேயர் விதுரற்குத் தத்துவமுரைத்த
வத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௩0.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## உ-வது, மலரவன்றோற்றமுரைத்தவத்தியாயம்.

கலிநிலைத்துறை.

சாந்தமால்பதத்தன்பொடுதயங்குதென்றிசைக்கு
வேந்தனும்விறல்விதுரனிவ்வாறெலாம்வினவப்
பாந்தளேந்துபார்விசும்புபாதலஞ்சொல்பாகவதம்
ஓர்ந்ததன்மைகேளென்றுமித்திரைமகனுரைக்கும். ௧

ஊழிசென்றுழியுலகெலாமுருகவெள்ளெயிற்றுப்
பாழிவாயழலூட்டுமைப்பஃறலைச்சேடன்
தாழுநன்பிலனுற்றுநற்சனகனேமுதலாச்
சூழுமாதவர்க்குரைத்தனன்றூயவத்தவத்தோர். ௨

புலத்தியற்குமுன்புகன்றனர்புலத்தியன்புரிவின்
நலத்தநான்மறைப்பராசரனுளங்கொளநவின்றான்
நிலத்தினீள்கதைபராசரனிகழ்த்தினனெனக்கு
வலத்தின்மிக்கசீர்நினக்குநான்வகுப்பலென்றுரைப்பான். ௩

வெண்டிரைக்கனைகடனெடுவேலிமூதுலகம்
உண்டுபைத்தலைநாகபோகத்தினிலுறங்கும்
தண்டுழாய்முகிலுந்தியந்தடத்தினிற்றொளைத்தாட்
புண்டரீகமொன்றலர்ந்ததுபுவியெலாம்பூப்ப. ௪

நீலமால்வரைநெற்றியிற்பொடித்தசெங்கதிரே
போலவான்சுடர்பொழிதருமுளரியம்பொகுட்டின்
மேலதாகவந்தெழுந்ததுவெயில்விரிபசும்பொற்
கோலமேவியகுலமறைமழலைவாய்க்குழவி. ௫

கொங்குவிம்மியகொழுமடற்றாமரைக்குழவி
எங்குவந்தனமெவ்வழியிருந்தனமென்று
அங்கண்மாதிரமனைத்தையும்பார்த்ததுபார்ப்பத்
திங்கள்போற்றிகழ்திருமுகநான்கெனச்சிறந்த. ௬

ஒன்றுங்காண்கலனுறைந்தசெந்தாமரைகண்டான்
பொன்றயங்குமிப்போதுவந்தெழுந்ததெங்கென்று
மன்றலம்புயமாமலர்நாளத்தின்றொளையில்
சென்றுதேடலுற்றனன்றனிச்செங்கணெட்டுடையான். ௭

சேயதாமரைமுதலவன்றேவர்தம்பருவம்
ஆயிரந்தனித்தேடியுங்காண்கிலனலந்து
மீயெழுந்தனன்விரிமலர்ப்பொகுட்டுவீற்றிருந்தான்
தூயமாதவந்துணிந்தனன்புரிந்தனன்றொழுதே. ௮

காயும்வெஞ்சினக்கட்செவியரசுமேற்கவிப்ப
ஆயிரம்பணாமணிபொழியலர்கதிர்க்கற்றைப்
பாயலந்தில்வானுருவினன்கிடந்தபைந்துளவ
மாயவன்றனைமலர்விழிமகிழ்வுறக்கண்டான். ௯

கண்டுநெஞ்சகங்கனிந்துசெங்கைம்மலர்கூப்பி
அண்டகோடிகளனைத்தையும்படைத்தளித்தழிக்கும்
கொண்டல்வண்ணனைக்குறித்தலொல்லாத்தனிமுதலைப்
பண்டைநான்மறைப்பரமனைப்பாவினன்பணிந்தான். ௧௦

அருள்சுரந்தலையெறிசெழுந்தாமரையன்ன
திருநெடுங்கணனோக்கியத்திருமறுமார்பன்
உரைசெய்ஞானம்வந்துறுமுலகியாவையுநன்கு
தருதிநீயிருந்தவம்புரிகென்றனன்கரந்தான். ௧௧

பெருகுதண்புனலலையினற்பெரிதலைமலர்மேல்
பொருவருந்தவமீட்டுநூறாண்டயன்புரிந்தான்
மருவிஞானம்வந்துறக்கடுவெளியெறிபுனலைப்
பருகியோங்குலகியாவுமம்மலர்வயிற்படைத்தான். ௧௨

உரைசெய்மானகங்காரமொண்பூதமிந்தியங்கள்
மருவுதெய்வமன்னவிச்சைதாவரம்விலங்காதி
நரர்கடேவர்கண்முதலினோரெண்முறைநவின்ற
விரியுமோர்பத்துவிதம்பெறுபடைப்பினைவிளம்பின். ௧௩

முந்துவந்தமான்மொழியகங்காரமொண்பூதம்
இந்தியங்களவ்விந்தியமியைந்துறுதேவர்
அந்தில்வாய்தமத்தவிச்சையென்றறுவகைப்படைப்பு
நந்தலில்பிராகிருதம்வைகிருதத்தைநவில்வாம். ௧௪

எத்திநான்முகனேழெனப்படைக்குறுபடைப்புப்
பூத்துக்காய்ப்பவும்பூவின்றிக்காய்ப்பவுமொருகால்
காய்த்துப்போவவுங்காழ்புறம்படைப்பவுங்கஞலித்
தேத்துளித்தபூங்கொடிகளுமுதலவாந்தெரிக்கின். ௧௫

இயங்குநற்பசுமுதலியவிருகுளம்பினவும்
வயங்குமொட்டகமாமுதலொருகுளம்பினவும்
நயங்கொளைந்நகம்பெறுமரிநரிசரிபறவை
பயங்கொளுஞ்சுருமுதலியபலவுமெண்படைப்பே. ௧௬

நவப்படைப்பெனநவிலுபநரர்களைநலஞ்சேர்
புவித்தலத்தினிற்படைத்திடுமானிடர்பொற்பும்
உவப்புறுந்திருத்தேவர்கள்பொற்புமங்கொழியாத்
தவத்தின்மிக்குயர்சனகனாதியர்பெறுகுவரால். ௧௭

பத்தென்றோதிடமலரவன்படைத்திடுபடைப்புச்
சத்துவத்தினாற்றேவர்கள்பிதிரர்சாற்றசுரர்
சித்தர்சாரணர்சிறந்தகந்திருவர்களியக்கர்
மொய்த்தபூதங்கள்கின்னராதியாமொழிவார். ௧௮

உணர்த்துநால்வகைப்படைப்புமவைகிருதமாவுரைப்பர்
குணத்திறைகியபடைப்பினைக்கூறிடினிறைமுன்
புணர்த்துபின்னிவையெனப்புகன்முறையின்றிப்புகுந்து
தணத்தல்சேர்தருநீர்ச்சுழிபோற்றயங்குறுமால். ககூ

படைக்குமிப்பெரும்படைப்பெலாம்பண்ணவராலும்
கடக்கருந்திறற்காலத்தைவிளக்குறும்படைப்பத்
துடைக்கக்காரணமாகியகாலத்தைச்சொல்வல்
அடைக்குமைம்பொறிவிதுரவென்றருந்தவனறைவான். உ0

மலரவன்றோற்றமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-ரு0.

ஸ்ரீகிருஷ்ண சகாயம்.

## ரூ-வது, காலமுரைத்தவத்தியாயம்.

### கலிவிருத்தம்.

உருவமற்றவுரைநிகழ்காலமாம்
பொருளினுக்குப்பொருந்தெழிலுண்மையாக்
கருதுமாக்கைகொலென்றுகற்பித்திட
மருவுமோர்பரமாவணுமன்னனே. க

காலமாயபொருட்குக்கருதிய
தூலமாயவுருவமுஞ்சொல்குவேன்
ஏலுதுண்பரமாணுவிரண்டுறின்
கோலமாரணுவொன்றெனக்கூறுவார். உ

பொருவிலாவணுமும்மைபொருந்துறின்
மருவுசாளரத்தூடுவயங்கிவெவ்
விரவிதன்கதிராலிலங்குற்றிடும்
திரிசரேணுவெனும்பெயர்சேருமால். ரூ

சொல்லுமன்னதுமூன்றுதுடியதாம்
புல்லுமூன்றுதுடியும்புகாற
ஒல்லும்வேதையாம்வேதையுமூன்றுறின்
எல்லுடல்லவமாகவிசைப்பவே. ச

ஓதுகின்றலவமொருமூன்றுறின்
நீதிவந்தநிமிடநிமிடமும்
கோதகன்றொருமும்மைகுலவிடின்
றீதெறிந்தகணமெனச்செப்புவார். ரு

கணமுமைந்துகலந்துறிற்காட்டையாம்
அணிசெய்காட்டைமூவைந்தணைந்தாலெழில்
தணிவிலாலகுவாமதுதானுறின்
உணருமோர்பதிணைந்தொருகன்னலே. ௮

இன்னவாறிங்கியையுங்கடிகைமற்
றுன்னுமாறுலகத்தரிதாகலால்
மன்னுசீர்மதியோர்கண்மனங்கொளப்
பன்னுமோர்வகைகேட்டிபகருவேன். ௭

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

வீறுறுநான்குமாடமாமளவைவிளங்குசெம்பொன்காவிரல்கள்
கூறியநான்கினீளமதாக்கிக்கொண்டுநீள்சலாகைகொள்புழையா
ஆறெனுந்தொடிசேர்செம்பினுழியமைவுறவமைத்தவள்ளத்தைத்
தேறியநீர்மேற்சேர்ப்பவங்காழிற்சென்றதோர்கடிகையென்றுரைப்பர்.

கடிகையோரிரண்டுமுகூர்த்தமாமுகூர்த்தங்கருதுமூவைந்தொருபொழு
நடைபெறுமப்போழ்திரண்டொருநன்னாளுமூவைந்தொருபக்கம் [து
படிபுகழ்பக்கமிரண்டொருதிங்கள்பகர்ந்திடுதிங்களோரிரண்டு [ர்.
தொடர்வுறினிருதவ்விருதுவோர்மூன்றுதுன்னிடினயனமென்றிசைப்ப

ஏற்றிடுமயனமிரண்டுமானிடருக்கியையுமோர்பருவமப்பருவம்
சாற்றிடுஞ்சௌரமானமாம்பருவஞ்சாந்திரமானமாம்பருவம்
தோற்றியநன்ஞண்மானமாம்பருவஞ்சுரர்குருவுதயமாம்பருவம் [தே.
போற்றுநாண்முப்பஃதுறுமுறைபோக்கப்புகுந்திடும்பருவமொன் றிசைந்

சொல்லியபருவநூறுமானிடர்தந்துகளாறுமாயுளென்றுரைப்பர்
புல்லியகடிகைகுறைந்திடும்பொழுதிற்புகன்றிடுமொருயாமம்
நல்லனகடிகைபொலிந்துறும்பொழுதினுழிகையேழொருயாமம் [தால்.
ஒல்லுமோர்பொழுதுக்குறைத்திடுஞ்சந்தி யுறுமுறைகடிகைநான்கொழித்

திங்களொன்றொருநாடென்புலத்தவர்க்குத் திங்களோர்பன்னிரண்டொ
ருநாள், அங்கண்வானவர்க்காமமராண்டீராறுயிரமூழிநான்களவை
பொங்கியநாலாயிரமுதலூழிபொருந்துமூவாயிரம்பொருந்தும்
தங்கியவிரண்டாமூழியென்றுரைப்பர்தகைப்பருகாலநன்குணர்ந்தோர்.()

வட்டவெண்குடையாய்துவாபரத்தெல்லைவருக்கினீராயிரமாமால்
கட்டுரைகடக்குங்கடுங்கலியெல்லையாயிரமாண்டெனக்கரைவர்
எட்டுநூறறுநூறீரிருநூறுங்கியலிருநூறெனுமாண்டு
பட்டநாலூழிமுறைமுறைபொருந்தும்பாற்படுசந்தியாப்பகர்வர். ௧௫

நால்வகையூழியாயிரநடக்கினன்முகற்கோர்பகல்பகல்போம்
காலையீரேழுமனுவுமிந்திரனுங்கழிவர்மண்ணுலகொடுவிசும்பின்
மேலிரண்டுலகுந்தீப்படச்சேடன்விளங்குவாண்முகத்தழல்பரக்கும்
சாலுமவ்வழலாற்றவர்மகாலோகத்தவர்சனலோகமேசார்வார். ௧

ஓரிருபாதத்தங்கழியுமேன்மலர்வீட்டுறைதருநான்முகனுலக்கும்
ஏர்கெழுபாதத்தமிரண்டுவெண்டரங்கமெடுத்தெறிதடங்கடன்முகட்டின்
கார்முகில்கமலக்காடுபூத்துறங்குகாட்சிபோற்கண்வளர்துளவத்
தாரவன்றனக்கோரிமையெனவுரைப்பர்சாற்றுமவ்வுரையுபசாரம். ௧௫

ஏற்படுகதிர்முத்தெறிதிரைப்பிறந்தவின்னிளங்கற்பகக்கொழுந்து
வெற்பினில்வளருந்தன்மையேபோலவேரியங்கமலைவீற்றிருக்கும்
பொற்புலாமார்பனுந்தியங்கமலப்போதிடையெண்கணன்பிறந்த
கற்பமாங்கதனைவீறுசால்பாற்பகர்பமென்றெடுத்தனரிசைப்பார். ௧௬

வளமலிந்தநேகவண்டகோடிகடாமணிவயிற்றொருபுடைகிடப்ப
அளவிகந்தொன்றாய்நித்தியமாகியாநந்தவுருவமாயமர்வான்
துளவணிந்தருளுமாயவனென்றுசொல்லியமுனிவரன்விதுர [ப்பான்.
உளமுவந்தயன்றன்படைப்பவையின்னமுணர்த்துவென்கேளெனவுரை

காலமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

௮௨ திருவிருத்தம் ௯௭.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௪-வது, சனகாதியர்தோற்றமுரைத்தவத்தியாயம்.

---

கலிநிலைத்துறை.

மாற்றுதற்கரிதாயதாமிச்சிரம்வருத்துச்
சாற்றுமந்ததாமிச்சிரமோகமாமோகம்
போற்றருந்தமமெனப்புகலைந்தையும்பசுந்தேன்
ஊற்றிருந்தொழுகம்புயத்தவன்முனமுயிர்த்தான். ௧

இனையவீன்றதென்னென்றுதன்னறிவினையெள்ளிப்
புனைபசுந்துழாய்ப்பூந்தொடையமலனைப்போற்றி
நினைதல்செய்தனனினைக்குறுமனமலர்மிசையின்
சனகனாதிநற்றவத்தினர்நால்வர்வந்தெழுந்தார். ௨

எழுந்தமாதவரின்னகைவாண்முகனோக்கி
மொழிந்தநான்மறைமுதல்வனீர்படைத்திரென்றிசைப்ப
ஒழிந்தநெஞ்சினருவந்திலரவ்வுரைபசுந்தேன்
பொழிந்ததண்டுழாய்ப்புனிதனைநினைந்தனர்போயார். ௩

படைத்திலாரிவர்படைக்கெனப்பணித்தவென்மாற்றம்
கடப்பதென்னெனச்சீறினன்கனன்றவச்சீற்றம்
அடக்கமற்றடங்காதவனணிமணிப்புருவத்
திடைப்பிறந்தனனீலலோகிதனெனவிசைப்ப ௪

நீலலோகிதனெனநவிலனிகழ்த்திடப்பிறந்த
பாலலோசனனமுதலாற்பங்கயப்பொகுட்டு
மேலமர்ந்துறைவிமலனைநோக்கினனெனக்குச்
சாலுநாமமென்னிடனெதுசாற்றுகென்றனனால். ௫

பெருமநீயழலாற்பெயருருத்திரனாகும்
விரியும்வான்வளிவெங்கனல்புனல்புவிநெஞ்சு
தெரியுமிந்தியஞ்சீர்கெழுதுறக்கம்வெண்டிங்கள்
பரிதியோர்திகழ்பிராணனென்றிவைபகரிடனால். ௬

உலவுவெண்மதிவாண்முகத்துமைமுதலாகப்
புவிவழுத்துபல்பேருடைப்பூவையைப்புணர்வாய்
பவன்முதற்பலநாமமும்படைத்தியாற்படைத்தி
அவிருந்திங்களங்கொழுந்தணியமலவென்றறைந்தான். ௭

கடைக்கண்டீயுகுமுருத்திரகணத்தையக்கடவுள்
படைக்கநோக்கியிப்படைப்புநீதவிர்கநீடுலகம்
துடைக்குமிவ்வெனத்தோடவிழ்மலரிறைசொல்ல
விடைக்கொடிப்பிரான்விதிக்குமத்தொழில்விடுத்தனனால். ௮

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

அத்திரிமரீசியங்கிராவசிட்டனகத்தியன்புலத்தியன்புலகன்
மெய்த்தவப்பிருகுநாரதன்கிருதுமேதகுதக்கனென்பவர்கள்
சித்தநெஞ்சுயிர்ப்புச்செவிதிருநாவிதிகழுமெய்குறங்குவெண்டிங்கள் [ர்.
ஒத்தொளிர்வதனம்பெருவிரற்றலையென்றுரைபெறுமிடனில்வந்துதித்தா

மலரவனிழலிற்கருத்தமனென்னுமாதவன்றோற்றினன்வலப்பால்
முலையினிற்றருமம்பிறந்ததுபாவமுதுகினிற்பிறந்ததுமனத்தில்
இலகெழிற்காமம்பிறந்ததுபுருவத்திடைப்பிறந்ததுதழற்சீற்றம்
ஒலிகடற்பவளமனையகீழிதழினுலோபம்வந்துதித்ததுமாதோ. ௧0

முழுக்கலின்கலுழுமுளரிவாண்முகங்கணான்கினுமுதுமறைபிறந்த, எ
ழுத்தொடுசெஞ்சொலியலெலாம்பிறந்தவேழிசைபிறந்தவெண்பிறந்த, ப
ழுத்ததொன்னூல்கள்யாவையும்பிறந்தபாடல்சாறொழுகுலப்பான்மை, த
ழைத்தநல்வேள்வியொழுக்கொடுவழக்குத்தண்டமென்றுரைப்பனபிறந்த

பொற்றருநிழல்வாழமரரைப்பயந்தாண்பொறிமுதலடக்கியமுனிவர்ப்
பெற்றனன்பெருகாதிப்படைப்பென்னைபெருகுமாறெனநினைந்திருப்ப
உற்றதண்மலரோன்மெய்யினோர்கூற்றினுதித்தனளெழிற்சதரூபை
மற்றொருகூற்றினுயர்சுவாயம்புமனுவெனுமன்னவன்பிறந்தான். ௧௨

தோற்றியமனுவின்வாண்முகநோக்கிச்சுடர்த்தொடியிவட்புணர்ந்தீங்குப்
போற்றுதிஞாலமென்றுசெங்கயலப்பூம்பொகுட்டுறைபிரான்புகல [ன்
மாற்றரும்பசும்பொன்மால்வரைமருளப் பணைத்ததோண்மனுமடக்கிளியி
சாற்றுமென்மழலையெயிற்சதரூபைதடமுலைமணந்தனன்மாதோ. ௧௩

உயர்புகழ்ப்பிரியவிரதனுத்தானபாதனென்றலகெடுத்துரைக்கும்
புபலுறழ்தடக்கைப்பூருறுந்தொடையற்புதல்வரோரிருவர்தோன்றினால்
வெயின்முகந்தவழவிரிந்துமட்டுயிர்த்துவிரைகமழ்தாமரைமணந்த
கயலெனப்பிறழ்ந்துகளித்தசேயரிக்கட்கன்னியர்மூவர்வந்துதித்தார். சச

ஆவெனுமெழுத்தைமுதலுறுநாமத்தரிமதர்மலைழக்கணுடனை
ஓவறுகாட்சிருசியெனவுலகமுரைக்குமாதவற்குதவினுல்
தேவினைக்குறித்தபெயர்புணர்நாமச்செல்வியைக்கருத்தமற்களித்தான்
பூவைநேர்பிரசூதியைப்பசுந்தேறல்பொழிந்ததார்த்தக்கனுக்கீந்தான். சரு

இசைக்குமிம்மூவர்மரபினுலுலகமெங்கணுநிறைந்ததுதென்னந்
திசைக்கொருதிலகமன்னவராககற்பமென்றெடுத்தனர்செப்பத்
தசைக்குவெம்பறவைதொடர்தருநேமித்தனிமுதலேனமாய்க்கடலுள்
அசைத்திடுமருப்பினவனியையெடுத்ததறைகுவலெனமுனியுரைக்கும்.

சனகாதியர்தோற்றமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் அரு.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ஆதிவராக நிலையுரைத்தவத்தியாயம்.

---

### கலிநிலைத்துறை.

மருக்கமழ்ந்ததண்மலரவன்முகமனுநோக்கிப்
புரத்தியென்றனைபுவியகன்புவியெலாம்பொங்கிக்
கரைக்குறும்பெறிகருங்கடல்கலந்ததாலென்று
உரைக்கமாயனையுன்னினனுேதிமமுயர்த்தோன். க

மாக்கண்வெம்முலைமலர்மகளமர்ந்துறைமார்பன்
போக்கில்பொன்னிறம்பொதியிதழ்ப்பூந்தவிசுறைவோன்
மூக்கினின்றுமாண்கேழலாய்மூரிவானளவக்
கோக்குந்தெண்டிரைக்கருங்கடலளறெழக்குளித்தான். உ

குளித்ததெண்டிரைக்குரைகடலெழுந்துளிதெறிப்ப
முளைத்தகோடுடைமுழுமுதல்வாரகமாமேனி
திளைத்ததண்புனற்றுளியிவையெனமகிழ்சிறந்தார்
அளிக்குலஞ்செறிமலரவனுலகின்வாழமரர். ங

படும்பணிக்கயத்தரும்புமோர்பங்கயம்பிடுங்கிக்
கடந்திரைத்தெழுகருங்கவுட்களிறெழுந்தென்னத்
தடங்கொள்வெண்மலையென்வலைதவழ்கடல்கவிழ்ந்த
நெடுந்திண்பார்கொடுநிவந்ததுநீண்மருப்பேனம். ச

அவிர்பொலங்கிரியனாவெனவளர்ந்தவாண்கேழல்
தவளவார்பிறைமருப்பிடைத்தரணிகொண்டெழலும்
புவியெனாதுநீகவரலென்றுரைபலபுகன்றான்
கவனமால்களிறென்னவந்தெதிர்ந்தபொற்கண்ணன். ௫

மற்கண்டோங்கியமல்லலந்தடம்புயம்வான்றோய்
கற்கண்டாலெனப்பணைப்பவெங்கடுங்கதைதாங்கி
நிற்கண்டாயினிநீரிடையொளித்திடலென்னாப்
பொற்கண்டியுகப்புணரிவாய்நடந்தனன்புடைத்தான். ௬

விண்டதேகொலோவிரிகதிர்பரப்புபொன்விசும்போ
டண்டகோளமென்றங்கண்வானவர்கிடந்ததிரக்
கொண்டலாமெனவதிர்ந்துவெங்கூற்றனான்புடைத்த
தண்டம்வல்லையிற்பறித்ததுதனிமுதல்வராகம். ௭

பாழிவாய்ப்பெரும்பாந்தள்போற்சீறுமவ்வவுணன்
ஊழியாரழலொழுகுவெஞ்சூலமொன்றெறிந்தான்
வாழிவானவர்மலர்பொழிந்தேத்தவெந்தழல்வாய்
ஆழியம்படையாங்கஃதழிவுகண்டதுவே. ௮

அலையின்மீதுமாவராவணைமீதுநல்லாலின்
இலையின்மீதும்வாழிறையவனாகியவேனம்
மலையின்மீதுவீழிடியெனமருவுபொற்கண்ணன்
தலையின்மீதும்வாண்முகத்தும்வந்தடித்திடத்தளர்ந்தான். ௯

குருதிமாமழைகன்மழைமண்மழைகுலவப்
பரிதிபோல்வெயில்பரப்புமுச்சிகைப்படைபற்றாஉ
நிருதமாதர்கடுகிலொழிந்தநேகர்நேர்வெருளக்
கருதிமாயைகள்புரிந்தனன்கனல்செய்பொற்கண்ணன். ௧௦

பையராவணைமேற்றுயில்பங்கயச்செங்கண்
ஐயனாகுமரேனமுன்னவுணர்கோனென்னும்
பொய்யின்வாழ்க்கையான்வெகுண்டனன்புரிந்தவம்மாயை
வெய்யபானுமுன்மின்மினிபோல்விளங்கினவால். ௧௧

என்னைநீவிளையாடலீங்கிவனுடனின்னே
மன்னுதிண்டிறலவுணனைமாய்த்தியெற்போகின்
துன்னும்வாள்வலியென்றுசொலாதியேனத்தைப்
பொன்னந்தாமரைப்போதுறைநான்முகன்புகழ்ந்தான். ௧௨

ஏற்றுவெண்ணிறக்கேழலோரிளங்கதிர்த்திங்கட்
கீற்றெனத்திகழ்மருப்பினாற்கேழ்கிளரகலம்
ஊற்றிருந்துசெங்குருதியாறொழுகிடப்பிளப்ப
மாற்றருந்திறற்பொற்கணனாருயிர்மாய்ந்தான். ௧௩

நீட்டலின்றியேதிகழ்தருபழமறைதெரிந்தோர்
வேட்டல்செய்யுமவ்வேள்வியினுருவவாண்கேழல்
கோட்டினேந்தியநெடுநிலங்கோளராவரசின்
சூட்டின்வைத்ததுசுடராடியிமையவர்துதிப்ப. ௧௪

எனலுமெண்டிசைகடந்துவீங்கெறுழ்வலித்திணிதோட்
கனகக்கண்ணன்யார்கண்ணனோடிகலுமாறெவன்கொல்
வினைமுருக்கியமெய்த்தவவிளம்பெனவிதுரன்
மனமுவப்புறவுரைத்தனனுயர்மயித்திரேயன். ௧௫

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

பூசன்மேலெழுந்துகாமன்பொருசிலைகுழையவாங்க
மாசிலாக்குழவித்திங்கள்வந்தெழுமாலைபோதில்
பாசிழைப்பரவையல்குற்படர்முலைத்திதிகாமுற்றுக்
காசிபன்றன்னைநோக்கிக்கலவியிற்களிப்பேமென்றாள். ௧௬

பேய்பலதொடரச்செந்தீப்பிறங்குவார்சடிலத்தண்ணல்
பாய்சினவிடைமேற்கொண்டுபடர்ந்துலாம்பதமீதாமால்
சாயுநுண்மருங்குறேய்க்குந்தடமுலைப்பவளச்செவ்வாய்
ஆயிழைகலத்தற்காலமன்றெனக்கூறினனால். ௧௭

காலமன்றெனலுங்காமங்கைம்மிகக்கலங்கியாற்றாள்
சேலமாந்தளிர்க்கைபற்றிச்சேயிழைகுழைந்தாளாகக்
கோலம்வீற்றிருந்தகொம்மைக்குவிமுலைகுழையப்புல்லிப்
பால்வளைகாமநோயைப்பண்ணவன்றீர்த்தான்மன்னோ. ௧௮

மதிநனிமயங்கியிர்ந்தமாலையின்மணந்தகுற்றம்
நதியரவணியும்வேணிநம்பனேபொறுத்தியென்னாத்
திதியுளங்குழைந்துமுன்னேசிறந்துதன்னோடுதோன்றும்
சதியெனுமடந்தைசேருந்தலைவனைவணங்கினாளால். ௧௯

செந்தளிருருவப்பேதைசெய்தவம்பராவலுற்ற
அந்தியின்மணந்தவாற்றாலழலுமிழ்ந்திலங்குகூர்வாய்
வெந்திறலாழியாற்குவிழுப்பகையாகிவீயும்
மைந்தரைப்பெறுவாயென்றுமறையவன்வழங்கநொந்தாள். ௨௦

சிறகர்வண்டுழுபூங்கூந்தற்றெரிவைநீயுயிர்க்குமைந்தன்
எறிதிரையுலகமுண்டவிறைவனுக்கன்பனாகி
மறைநெறியொழுகிவாழுமகப்பெறுமறுகலென்னாக்
கறையறுமதிமுகத்தாய்காசிபன்கூறினனால். ௨௧

## கலிவிருத்தம்.

கிளர்ந்ததுகேட்டலுங்கிளைத்துவண்டினம்
உளர்ந்தபூங்குழலிதனுளமகிழ்ந்ததால்
இளந்தளிர்புரைதருமெழில்வயிற்றிடை
வளர்ந்ததுகருப்பநீள்வானமஞ்சவே. ௨௨

வயிறுவாய்க்குறினுயர்வலத்தவைம்படைக்
குயின்மருண்மேனியான்கொல்லுமேயெனு
வியலுறுபருவநூறெதிர்ந்தவெங்களிக்
கயல்புரைகண்ணவள்கருப்பந்தாங்கினாள். ௨௩

காழவிர்கதிர்செயக்கதித்தவெம்முலைத்
தாழ்குழலங்ஙனங்கருப்பந்தாங்கலால்
சூழ்விசும்பிருண்டனசும்மைவெண்டிரை
எழ்புவியிருண்டனவிருண்டமாதிரம். ௨௪

விரிகதிராயிரம்பரப்பும்வீங்கெழிற்
பரிதிசூழ்விசும்பிருட்படலமுற்றலும்
அருமணிநெடுமுடியமரர்யாவரும்
உருவநாண்மலரவனுலகநண்ணினார். ௨௫

செருக்கியகயல்விழித்திதிவயிற்றினில்
கருப்பம்வந்துற்றதுகண்ணகன்றவான்
இருட்டுறலென்கொலாய்விளையுமீதென
விரித்தனர்விண்ணவர்விரிஞ்சற்போற்றியே. ௨௬

திகழ்ந்தபொன்னாட்டவர்செஞ்சொல்கேட்டலும்
மகிழ்ந்துவண்டாற்றுதார்மாயனுந்திமேல்
முகிழ்ந்ததாமரைமலர்முளைத்தமுன்னவன்
நிகழ்ந்ததுநெஞ்சகநினைந்துகூறுமால். ௨௭

## எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கனைகடல்வயிறுகீளவீழ்ந்தொழுகுகங்கையம்பெரும்புனல்பூத்த
தனிமுதல்பசுந்தாட்டாமரைப்போதுதாழ்தருவிருப்பமீதூர.
வினையறுசனகன்முதலியமுனிவர்விரியிருள்பருகுவான்போழ்ந்த
பனியிருவிசும்புகீண்டுவெண்டுவிப்பவளவாயெகினமொத்தெழுந்தார். ()

நிலவொளிகஞலிநிகர்தனக்கிகந்துநீடருட்பசுந்தளிர்பரப்பி
உலகெலாம்பூத்தமலர்க்கொடிபடரவுயர்வறவுயர்நலங்கனிந்து
விலைவரம்பறியாமணிபலகிளைத்துவிரிந்தபொற்கோட்டுமந்தார
மலர்கமழ்முத்திமணந்தலைமணந்துவயங்குவைகுந்தமெய்தினரால். ௨௯

எய்தியமுனிவராயிரகோடியிரவியின்வெயிலுமிழ்மணிசேர்
பைதிகழரவினறிதுயிலமர்ந்தபங்கயச்செங்கணுன்சரிதம்
மொய்கதிர்பரப்பியெழுவிமானத்தின்மொழிதருமனைவியரோடு
செய்தவத்தடைந்தோரமுதுகுமாறுசெப்புதல்செவியகமடுத்தார். ௯௦
கிஞ்சுகவதாநிலமகள்புணருங்கிளர்வரைப்புயத்தினுன்சரிதம்
எஞ்சலிலன்பின்வண்டொடுசுரும்பரிடையரு திசைப்பதுகேளா
அஞ்சுகமன்னம்புறவெழிலேனமியன்றிலங்குயின்மயில்பூவை
செஞ்சுகந்துருகியாற்றிடாதொன்றிநெருங்குதல்கண்டனர்களித்தார். ௯௧
சந்தனம்வகுளஞ்சண்பகம்பூகந்தாமரையுற்பலநாகம்
குந்தமங்குரவங்கற்பகமுதலாக்கொழுநறைவாய்மலர்திறந்து
செந்திருவுறையுந்திருமருமார்பந்திளைத்திடக்கிடைத்ததெத்தவமோ
நந்தலிறுளவுக்கெனவதன்சீர்த்திநவிற்றுதல்செவியின்மாந்தினரால். ௯௨
உரைதருபருவநாளுமோரைந்தேயுடையராய்த்திகம்பராகிப் [திர்ந்தோர்
பெருகுமோர்தவ நான் குருவெடுத்தென்னப் பிறங்குவாலுணர்வினின்மு
பொருவருமாயன்கதைகளிவ்வாறுபுகல்வதுகேட்டுளமகிழ்ந்தார்
மருவருதுளவோனமர்ந்தருள்கோயில்வாயில்சென்றெய்தினர்மாதோ ( )
மின்னெனமிளிருமிமையவர்மகுடகோடிகண்மிடைந்தொளிவிரிக்கும்
பொன்னெடுவாயிலாரிறந்தேகிப்பொலநிறத்தாமரைப்பொகுட்டில்
அன்னம்வீற்றிருக்குந்தடவரைமார்பனமர்வழிக்குறுகலுநின்மின்
நின்மினென்றுரைத்தார்விறற்சயவிசயரென்னுமந்நீள்கடைகாப்போர். ( )
தண்ணளிபெருகியலையெறிசெய்யதாமரைக்கண்ணினுன்பரவை
மண்ணகம்பொதிதாடொழவெழுசெலவுமாற்றுமற்றவர்தமைமுனிந்து
கண்ணன்மேலுள்ளங்கனியுமன்பொழிந்துகாய்ந்திகல்பிறவியோர்மூன்று
நண்ணுகவென்னச்சபித்தனரெழுந்தார்நான்மறையுருவெடுத்தனையார். ( )

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தடுத்தவவ்வாயில்காப்போர்சபித்ததுகேட்டலோடும்
விடுத்தநல்லுணர்வினேஞ்செய்வெம்பிழைபொறுத்திரங்கி
அடுத்தமாதவத்திரெம்மையளித்திராலென்றன்னோர்சீர்
எடுத்தனரிசைத்தார்தாள்வீழ்ந்திறைஞ்சினரிறைஞ்சுங்காலை. ௯௬
ஒற்றைவெண்கவிகையோங்கவுலகெலாமளந்ததாளும்
பொற்றபொற்றொடிசூழ்கையும்புரியவிழ்கமலமென்று
உற்றுலாவன்னமேய்ப்பவொள்ளொளிநிலவுகாலும்
கற்றைவெண்கவரிவீசக்கமழ்துழாய்முருகுவிம்ம. ௯௭
குண்டலந்திருவில்வீசக்குறுநகைநிலவத்திங்கள்
மண்டிலஞ்சுடரவொண்கேழ்மணிமுடிவெயிலெறிப்ப
வெண்டிரைசிவப்பத்தோன்றுவிழுமணியாரமின்ன
அண்டர்கண்மௌலிதேய்க்குமரைகழலிலகியார்ப்ப. ௯௮

வாள்விரிபசும்பொற்குன்றின்வயங்குபுள்ளரசின்மல்லற்
றோளினினிலவுவீசுந்தொடிக்கரமொன்றுசேர்த்தித்
தாளதாமரைமென்போதோர்தாமரைக்கரத்தின்வீசிக்
காளமேகத்தையொப்பத்தோன்றினன்கமலக்கண்ணன். ௩௯

முழுதுணர்சனகனாதிமுனிவரர்நெஞ்சினாடிப்
பழமறைமுடிவிற்கண்டபசுந்துழாயலங்கலானை
விழியெதிர்காண்டலோடுமெய்ம்மயிர்சிலிர்ப்பவிம்மும்
கழிபெருமகிழ்சிறப்பக்கைதொழுதிறைஞ்சினாரால். ௪௦

கொண்டநீள்கோலவண்ணங்குறித்துளத்துணர்வுதன்னால்
கண்டவர்பிறவிவேலைக்கரைநனிகாண்பரென்றால்
உண்டுகொலெதிர்கண்டோருக்கொருபிறப்பிருதாட்போதில்
வண்டெனமனஞ்சேரான்புவழங்கெனவழுத்தல்செய்தார். ௪௧

வழுத்தியமுனிவர்தம்மைமறைமுதலினிதுநோக்கித்
தழைத்தவிவ்வாயிலோரைச்சபித்தனன்றடிமையானோர்
இழைத்தனவிறைவன்பாலாயிருப்பதுபோலிக்குற்றம்
முழுத்தவத்தீரெம்பாலாய்போன்மெனமொழிதலோடும். ௪௨

நாயகன்மொழிதல்கேளாநற்றவர்மகிழ்ந்துநின்பால்
நேயமுற்றவர்களுள்ளநெகிழ்தரவுரைத்தும்பார்த்தும்
தூயைநீகாக்கும்வண்ணஞ்சொல்லுதற்கெளிதன்றென்று
மாயனைவணங்கியாங்குவழுத்தினர்பலவுமாதோ. ௪௩

மகிழ்தருமளியவாகிமன்றலங்கமலமென்ன
நெகிழ்தருசெய்யகண்ணனெஞ்சகநெகிழநோக்கித்
திகழ்வெயிற்கற்றைகாலுஞ்சேட்டிளம்பரிதியேய்ப்ப
நகைமணிகிடக்குமார்பனசைவிருந்தருளினானால். ௪௪

வேகவம்புள்ளிற்கன்றிவெஞ்சிலைவிசயன்றேர்க்கும்
பாகனென்றிசைப்பநின்றபைம்புயல்வண்ணன்செய்ய
போகிதழ்க்கமலமன்னபொன்னடிதொழுதுபோற்றி
ஏகினர்வலங்கொண்டுள்ளத்தின்புறுமுனிவர்மன்னோ. ௪௫

தூவுதண்டுவலைக்காருந்தோடுவாயவிழுமன்றற்
பூவையும்போலத்தோன்றும்புராதனன்கங்கைபூத்த
சேவடிக்கமலப்போதுசென்னியிற்றொழுதவாயில்
காவலர்வதனநோக்கிக்கட்டுரைகிளக்கலுற்றான். ௪௬

மாற்றிலமுனிவர்சாபமதிக்கின்மற்றதுவேயன்றிக்
கோற்றொடிக்கமலைவாயிற்குறுகுழித்தடுப்பச்சீறிச்
சாற்றியதழலின்வெய்யசாபமும்விளைந்ததாங்கண்
தோற்றுகவென்னத்தண்ணந்துழாய்முகில்கூறினானால். ௪௭

அன்னவாவவனிவீழாவமர்ந்தனர்திதிவயிற்றின்
கன்னியந்துழாயலங்கற்சருமுகிலவரைவீட்டும்
என்னுநீரிரங்கல்வேண்டாவேகுமினென்னத்தாழ்ந்து
பொன்னிணர்த்தருப்புத்தேளிர்போயினர்பொருமறீர்ந்தார். ௪௮

கலிவிருத்தம்.

தமரவண்டிமிர்குழற்றையலாள்வயிற்
றமரர்தம்பருவநூறமர்ந்துதோன்றினர்
இமையவரேங்குறவிரட்டைச்சேயென
உமிழ்கதிர்ப்பரிதிபோலொளிருமாங்கவர். ௪௯

அறங்குடிவாங்கினவாற்றன்மேவிய
மறந்தலையெடுத்தனமண்ணதிர்ந்ததால்
உறங்கினதகல்விசும்புருவநஞ்சனார்
பிறந்துழிப்பிறந்தனபேசற்பாலவோ. ௫௦

ஏறுழ்வலியிரணியனிரணியாக்கனென்
றாறுபெயர்படைத்தனரூறுமும்மதச்
சிறுகண்மால்களிறடச்செருக்குமிக்செழு
மறமிகுமடங்கல்வெங்குருளைமாண்பினார். ௫௧

எல்வளரிந்திரன்சாபங்கோட்டியும்
கொல்சினக்கூற்றுவன்கொற்றவெங்கதை
வில்லுமிழ்தொடிக்கரம்பற்றிவீசியும்
பல்படைபயின்றனர்பருஉத்தடக்கையார். ௫௨

அண்டர்கோனலங்குளைப்புரவியூர்ந்துமாங்
கெண்டிசைக்கடாக்களிற்றெருத்தமேறியும்
திண்டிறற்பரிதிபொற்றேர்கடாவியும்
வண்டுளர்தாரினார்வளர்ந்திட்டாரரோ. ௫௩

கலிகெழுகருங்கழற்கால்பெயர்க்குறின்
நிலமுதுகுளுக்குநீணிலவுசெஞ்சுடர்ப்
பொலநெடுமணிமுடிபொரவுடைந்திடும்
அலர்கதிர்க்ககனமூதண்டகோளமே. ௫௪

நெருக்குவதிசைகளைநிகரில்பொன்னெடும்
பொருப்பெதிர்ந்திரிதரப்பொருதடம்புயம்
கருக்குவகற்பகக்காடுவெம்படைச்
செருக்கினார்விழிக்கடைசிந்துதீத்திரள். ௫௫

அடலுடைவானவரஞ்சவந்தெழு
விடமெனத்திகழ்பவர்வெகுளிவெங்கனல்
சுடுதொறுஞ்சுடுதொறுஞ்சூடுண்டேகொலோ
கடலிடைக்கிடந்ததுகாலவெங்கனல். ௫௬

சமழலந்தார்முடிக்கனகனின்றியே
தமரவெண்டிரைக்கட்ற்றனைசூழ்தர
அமரர்மேலெழுந்தனனமர்விளைத்திட
இமைசுடவிழித்திடுமிரணியாக்கனே. ௫௭

வெந்திறலவுணர்கோன்வெகுண்டுதோன்றலும்
இந்திரன்முதலியவிமைப்பிலாட்டத்தோர்
வந்தமர்விளைத்தனர்மண்டுவெங்கனல்
சிந்தியபல்படைசிதறியோடினார். ௫௮

கைச்சிலைசோரவிண்காக்குமன்னவன்
பச்சிரத்தம்பொழிபரிதிவெஞ்சுடர்
வச்சிரப்படையெறிந்தோடவாய்கனல்
நச்சிலைவேலினனைத்துமீண்டனன். ௫௯

காற்றினைக்கடந்துவெங்கனலைக்காய்ந்துவெங்
கூற்றினைவென்றுசெங்குருதிகாலும்வெவ்
வேற்றிறனிருதியைவெருட்டிவல்லைபோய்
ஏற்றனன்வருணனைனடிகலுச்செகன்பவே. ௬௦

அஞ்சினன்வருணன்வாளமர்புரிந்திலன்
நெஞ்சசமறுகினனின்றுநின்றநெடும்
செஞ்சமமாற்றுவன்றிகிரிவெம்படைக்
கஞ்சநாண்மலர்க்கையங்கடவுளென்றனன். ௬௧

தொடையமையாழ்முனிதோன்றுற்றயிடைக்
கடலின்வீழிருநிலங்கவர்ந்துமாயவன்
பிடிபுணர்களிறெனப்பிறங்குகின்றனன்
நடவவண்வெஞ்சமநயக்கிலென்றனன். ௬௨

குளிறுதெண்டிரைநிலங்கொண்டுதோன்றிய
ஒளியிலங்காழியான்றன்னொடோங்குநீர்
அளறெழநடந்துசென்றருவிமாமதக்
களிறெனப்பொருதனன்களப்பட்டானரோ. ௬௩

வானவர்மலர்மழைபொழிந்துவாழ்த்தவே
தானவர்க்கிதம்புரிதலைவற்கொன்றெழில்
ஆனசீர்சேர்பரந்தாமத்ததியாண்
ஏனமாகியமுதற்கடவுளெய்தினான். ௬௪

ஆதியாகியவராகத்தருங்கதை
ஓதினாரினிதெனவுவந்துளோர்கள்பார்
மீதுதாம்விழைந்தனமேவித்தன்னடிச்
சோதிவானவர்தொழத்துன்னுவாரென்றான். ௬௫

என்னலும்விதுரனுங்கெரிபொற்றுமனை
முன்னயன்படைப்பெலாமுன்னியின்னமும்
பன்னுதிநீயெனப்பகர்தன்மேயினான்
மன்னியமாதவமயித்திரேயனே. ௬௯

ஆதிவராகநிலையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ௲ திருவிருத்தம் ௧௪௯.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## தேவர்முதலியோர்பிறப்புரைத்தவத்தியாயம்.

### எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

தழைந்திடுதாமிச்சிரமுதலாகச்சாற்றியவவிச்சையிற்பிறந்தார்
எழுந்துநான்முகனைவளைத்தனரலைப்பவென்னைநீர்புரத்திரென்றெடுத்து
வழங்கிடப்பட்டோர்யாவருங்குருதிவாட்படையிராக்கதரானார்
விழுங்கன்மினென்னமொழிந்திடப்பட்டோர்வெந்திறலியக்கராயினரால்

படைத்தல்செயயனத்தமத்தனுவிடுப்பப்பகரிரவாகியததனை
அடற்படையன்னோர்பயிறருமிடனாயடைந்தனரலரவன்முகனில்
சுடர்த்திருமேனிச்சுரரெவருந்தாந்தோன்றினர்தோன்றவக்காந்தி
விடுத்தனனதுதான்பகலெனவிண்ணோர்விரும்பிடன்மிகவிளங்கியதால்.

பனிமலரண்ண றிருவரைமருங்கிற் பட்டனரசுரர்க ளவர்தாம், நனி புணர்காமத் தயன்றனைத்தொடர நான்முகனாரணர் சார்ந்து, புனிதநின் னருளாற் படைத்தனனிவர்தாம் புணர்ச்சியின்வேட்கைமேற் கொள்ளா, எனையிவண் டொடர்ந்தா ரருளுதியெனவவ் விறைவன்வெவ் வுடல்விடு கென்றான். ௩

புனைபசுந்துளவோன்புகன்றவாறுந்திப்பூவருமயனுடல்விடுத்தான்
அனையதோர்யாக்கையையரிசிதறியம்பலைத்தகன்றவைத்தடங்கட்
குனிசிலைப்புருவக்கொடிபுரைநுசுப்புக்குமுதவாய்க்குவட்டுயர்கொங்கைக்
கனிவருகிளவிச்சந்தியாதேவியாயதுகண்டவர்மருள. ௪

### கலிவிருத்தம்.

போற்றியாரணமுகன்மருங்கிற்போந்தவர்
சாற்றியசந்தியாதேவிதன்னைநீ
மாற்றருங்காமநோய்வழங்குகின்றனை
ஆற்றுதியெனவவணலம்வந்தாரரோ. ௫

பூந்தவிசகத்தினிதமர்ந்தபுங்கவன்
காந்தியின்வந்துகந்திருவர்தோன்றினார்
கூந்தலம்பிடிநடைக்குமுதச்செய்யவாய்
எந்தெழிலரம்பையரெழிலிற்றோன்றினார். ௬

பொருந்தியகாந்தியைப்புனிதன்விட்டிடத்
திருந்தியநிலவெனச்சேர்ந்ததாங்கதை
விரும்பினர்விச்சுவாவசுவவைமேவிய
இருந்திறல்வேந்தெனவிருந்துளோர்களே. ௭

வெடித்தநாண்மலரவன்வெய்யசோம்பொடும்
அடுத்தவாவித்தலினளவில்பூதம்பேய்
பொடித்தனவவைதலைவிரித்தபொற்பொடு
சுடித்தனதானைநல்லாசையாகவே. ௮

மலரவன்கண்டுகண்முகிழ்த்துமன்னுசோம்
புலவுமத்தனுவினையொழிப்பவாங்கது
குலவுசோம்பந்துயிலாகக்கொண்டன
அலகைகடம்மொடுமயர்வில்பூதமே. ௯

சாத்தியர்பிதிரர்தம்மோடும்விஞ்சையர்
தேத்துளித்தாரணிசித்தர்தம்மொடும்
ஏத்துசீரயன்மறைந்தியற்றத்தோன்றினர்
பூத்தவன்விட்டவப்புராமுநண்ணினர். ௧௦

இன்னரரோடுகிம்புருடரென்பவர்
பொன்னவிர்தாமரைப்புனிதனீர்வயின்
தன்னிழனோக்குழிச்சார்ந்துதித்தவர்
அன்னதோர்சாயையையடைந்திட்டார்களே. ௧௧

கிளர்ந்தகின்னரர்கள்கிம்புருடனென்பவர்
வளர்ந்திகழெழிலொடுமருவியேழிசை
உளங்குழைந்துருகுவான்பாடியோகையின்
விசும்புழிமிதுனமாய்விளங்கினார்களால். ௧௨

படந்திகழ்பாழிவாய்ப்பாந்தளுந்தியத்
தடந்திகழ்தாமரைத்தலைவன்வெஞ்சினத்
திடந்திகழ்ந்துதித்தவனினிதின்விட்டவவ்
விடந்திகழ்வெஞ்சினம்விரைவின்மேயவே. ௧௩

இன்னணம்படைத்தவையினிதுநோக்கியுள்
உன்னியவுவப்பொடுமுறையுங்காலையில்
முன்னுறுபடைப்பெலாமேத்தமுன்னவன்
மன்னியமனத்திடைமனுக்கள்வந்தனர். ௧௪

மனத்திடைத்தோன்றியமனுவென்போருக்கு
நினைத்துறுதவங்கணீள்யோகம்விஞ்சைகள்
வினைத்திறங்கடக்குறும்விருத்தியாகவே
அனைத்தையும்படைத்தவனுக்கைநல்கினான். ௧௫

என்றவன்விதுரனுக்கியம்பினனென
நன்றறிசுகமுனிநவிற்றமன்னவன்
அன்றருந்தவனவற்கரைந்ததின்னமும்
ஒன்றுமாறுரைத்திநீயென்னவோதுவான். சசு

தேவர்முதலியோர் பிறப்புரைத்தவத்தியாயம் முற்றிற்று.
ஆ திருவிருத்தம் கசுஙு.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## கருத்தமன்மணம்புணர்ந்து கபிலர்ப் பெற்றவத்தியாயம்.

கலிநிலைத்துறை.

புனையுமோர்குடைநிழலிலேழிரும்பொழில்புரக்கும்
மனுவின்வந்தநன்மடவரல்வனமுலைமணந்து
கனியுமெய்த்தவக்கருத்தமனீன்றுளார்தம்மை
முனிவகூறெனவிதுரனுக்கருந்தவன்மொழியும். க

இல்லறத்தினைநடாவுநன்கெழில்கனிந்தொழுகு
முல்லையங்குழன்முகிணைகையெய்துகவென்றோர்
கல்லென்கௌவையாற்றடைகரைகருத்தமன்கதுவிச்
சொல்லருந்தவந்தொடங்கினனரிந்தமற்றொழுதே. உ

குண்டலத்திளவெயிலெழக்குளிர்மதிவதன
மண்டலத்திளவாணகைவெண்ணிலாமலர
விண்டலத்தெழுவிரிசிறைக்கருளன்மீதிவர்ந்து
கொண்டலிற்றிகழ்பரனவன்முனங்குறுகினனால். ௩

போதுசேர்விந்துசரசுபுக்காயிரம்பருவம்
காதலோடுநற்றவம்புரிகருத்தமன்காணு
ஆதிமால்பதத்தன்பொடுவணங்கினன்வழுத்தச்
சோதிமாயவனவனுளமுவப்புறச்சொல்லும். ௪

தெய்வஞ்சுட்டியபெயர்விராய்வரும்பெயர்சேர்ந்த
மவ்வலங்குழன்மடந்தையைமனுவினுக்குதித்த
கொவ்வைவாய்மலர்க்கோதையைக்குழைபொருதலைக்கும்
நவ்விநோக்கியைநாளைநீமணத்திநற்றவத்தோய். ௫

சிந்துநுண்டுளித்தேறல்வாய்மடுத்தளிசிலம்பும்
அந்தண்கோதையாவிளந்தளிர்புரையுமவ்வயிறு
வந்துதோன்றுவமென்றுசெவ்வாய்மலர்ந்தருளிப்
பைந்துழாய்புனைபரம்பொருளாயவன்படர்ந்தான். ௬

வாவுபச்சைமான்றேர்கொடுவால்வளையலறக்
கோவைசித்திலக்கொற்றவெண்குடைமனுவேந்தன்
பூவளத்தொடும்புள்ளொடும்பன்மரம்பொதுளும்
காவினுற்றனன்கருத்தமன்றனைக்கண்டுதொழுதான். எ

வணங்கநன்மொழிவழங்கியகருத்தமன்றனக்குன்
குணங்கணூதன்கூறமுன்கேட்டுனைவேட்கும்
அணங்கைநல்லெழிலரிவையைவேட்டருளென்னுக்
கணங்கொள்வண்டிமிர்தார்ப்புயன்கன்னியையளித்தான். அ

கலிவிருத்தம்.

அசும்புபொன்னூரமுமாரமாலையும்
விசும்பெலாம்விலைகொள்வெண்டுகிலுஞ்சாந்தமும்
ஓசிந்தநுண்ணிடைச்சதருபையொள்ளிணர்ப்
பசுந்தொடைபுனைகுழற்பாவைக்கீந்தனள். ௯

அங்கிருந்தவனெடுமரிவைவைகுறப்
பொங்கெழின்மாடமார்பொருவிறன்னகர்
சங்கவெள்வளைச்சதருபையோடுவெண்
டிங்களங்குடைமனுச்சென்றுமேயினன். ௧0

அழிவில்பல்வேள்விகளாற்றுபூழிநான்
கெழுபதோடொன்றெனவியைந்தவெல்லைபூஞ்
செழுமலர்த்துளவினன்சீர்நவின்றுபார்
முழுவதும்புரந்தனன்மொழிந்தவேந்தனே. ௧௧

அருந்தவன்மொழிந்தவம்மனுவின்கன்னியைச்
சுரும்பிமிர்பைந்தொடைசூட்டிவேட்டபின்
கருங்கயனெடுங்கணுள்கலவிவேட்கிலன்
பெருந்தவமீட்டுவான்பெட்பினென்பவே. ௧௨

தகைமலிபாசடைத்தண்ணந்தாமரை
முகிழெனமுகிழ்ந்துமுத்துரிஞ்சுமென்முலை
அகிலுணவிரிகுழலணங்குமாதவன்
நுகர்வனசாதலினுகர்ந்துநோற்பளால். ௧௩

ஒழுகரித்தடங்கணொளொழுக்கங்கண்டுவந்
தெழுதருஞ்செவ்விவீற்றிருந்தவீர்ங்கதிர்
முழுமதிமுகத்தினைமுனிவனோக்கிநீ
விழைவதென்றருகுவல்விளம்புகென்றனன். ௧௪

புனையுமோரில்லினிற்புனிதநின்னெடு
நனிபுணர்ந்தன்புசெய்நலஞ்சிறந்தெழில்
கனிமொழிமகப்பெறுகாதலேனென
மனையவள்கூறலுங்கேட்டமாதவன். ௧௫

ஓட்டறுபசும்பொனுலுருவுவாய்ந்தது
சேட்டிளங்கதிருறழ்செக்கர்மாமணிச்
சூட்டதுரித்திலத்தோரணத்தது
வேட்டதுவிளைவதோர்விமானஞ்செய்தனன். கசு

திருமணிதெளித்தெனத்திகழுநீரவாம்
விரைமலர்வாவிகள்விளிம்படுத்தது
மரவமுங்குருந்தமுமகிழுஞ்சாந்தமும்
குரவமுங்கமழுஞ்செய்குன்றுஞ்சேர்ந்ததால். கஎ

அன்னமும்பூவையுங்கிளியுமார்ப்பது
மின்னிடையாம்பையரீட்டமேயது
பன்னுதுப்புரவுகள்பலவும்பட்டது
பொன்னுலகத்தினும்பொலிவுபெற்றதால். கஅ

தீவியமலர்களுந்தெய்வச்சாந்தமும்
நாவியும்யோசனைநாறுகின்றது
பூவிரியமளியும்பொன்செய்பூண்களும்
ஆவியந்துகில்களுங்கழுமியார்ந்ததால். கக

எழுவுறழ்தோளிமையோர்கடம்மொடும்
எழுநிலத்தவர்களுமேத்துஞ்சால்பஃ
தெழுமினலெனவெழிலிலங்கவான்மிசை
எழுகதிர்மணிசெயேழ்நிலைபொலிந்ததால். உ0

இத்திறந்திகழுமானத்திலேறநீ
தத்துதெண்டிரைவிந்துசரசுமூழ்கென
மெய்த்தவக்கருத்தமன்விளம்பமெல்லியல்
அத்தகைமடுவினீராடினளரோ. உக

ஆங்குவந்தரம்பையரளவிலாதவர்
தேங்கமழ்மாலையுஞ்சாந்துஞ்செல்வமும்
பூங்கதிர்க்கலன்களும்புனையச்செல்விபோல்
வாங்குநுண்ணிடையவள்வயங்கினளரோ. உஉ

அன்னதோர்விமானமேலலர்ந்தபூந்தொடை
இன்னிளவேனிலானிவன்கொலோவென
நன்னலங்கனியுருக்கொண்டுநற்றவன்
மன்னினன்மனைவியுண்மகிழ்ச்சிகூறவே. உங

வேறு

விரைமலர்ப்பகழிவென்றிகொள்காமன்
உருவுற்றவனெடுற்றொருகோடி
அரமடந்தையரடைந்தனர்போற்ற
மருவிரிந்தகுழன்மாதுமகிழ்ந்தாள். உச

பொன்றயங்குபுளினங்கள்பொலிந்து
துன்றுகன்னிநதிதுன்னியிளந்தண்
தென்றலங்குழவிசென்றெதிர்கொள்ள
மன்றல்கூர்மலயமால்வரைசாரும். ௨௫

கங்கையாற்றடைகரைத்தலைசேரும்
மங்குரோய்கனகமால்வரையெய்தும்
வெங்கதிர்ப்பரிதிமண்டிலமேவும்
திங்கண்மண்டிலமணைந்துசிறக்கும். ௨௬

வண்ணமாமலர்கொண்மானதவாவி
கண்ணுநந்தனவனத்துநடக்கும்
கண்ணெகிழ்ந்துதுளிகற்பகநீழல்
விண்ணின்மாதரொடளாய்விளையாடும். ௨௭

எண்டவிர்ந்தபகலித்திறனாக
வண்டுகோடிசெறிவாரொலிகூந்தற்
றெண்டைவாய்வனிதைதோணலமாறா
துண்டுமாதவனுவந்தனனம்மா. ௨௮

காதல்கூர்தருகருத்தமனிவ்வா
றாதுவண்டுநறவுண்டுசெறிந்த
கோதைநங்கைவளர்கொங்கைமுயங்கா
மாதரொன்பதின்மர்வந்துபிறந்தார். ௨௯

வந்துமங்கையர்வளர்ந்திடுநாளின்
கொந்துலாவுவனமேசெலவுட்கொள்
அந்தமாதவனுளத்தையறிந்து
சிந்துநீர்விழிமடந்தைதெரிப்பாள். ௩0

துன்னுகானடைவுநீதுணிவுற்றால்
கன்னிமார்கள்கணவர்க்குரியாரால்
என்னையீங்கினிதளிப்பவர்யாரே
பன்னுமாதவவெனப்பரிவுற்றாள். ௩௧

மனைவிசொற்றதனைமாதவன்கேளா
இனையலுன்னெழில்வயிற்றினுதித்துப்
புனிதமானனிபுரந்திடுமென்னாக்
கனிபவெங்கிளவியோடுகலந்தான். ௩௨

படர்ந்தவாலினதுபாசிலைமீதே
கிடந்தபைங்குழவிகேழ்கிளர்செந்தீத்
தடஞ்சினைத்தருவினுற்றதுபோல
மடந்தையால்வயிறுமன்னியுதித்த. ௩௩

கலிநிலைத்துறை.

தபனன்போலொளிதழைந்தநல்விமானமேலிவர்ந்து
விபுதரேத்திடவிரைமலர்க்கிழவனுங்கெய்தி
உபயவெண்மதியுண்டுகொலெனவுதித்தவற்குக்
கபிலனென்றுபேர்கழறினன்பயந்தவர்களிப்ப. ௩௪

மறைவடித்துணர்மரீசியேமுதலியதவத்தோர்க்
கிறைவனாக்கைசின்புதல்வியர்தமைவழங்கென்று
நறைமலர்ப்பொகுட்டுறைபவனுரைத்தனனடந்தான்
அறிவினிற்றிகழ்கருத்தமனத்திறம்புரிந்தான். ௩௫

கத்திகைக்குழற்கலையினைவழங்கினன்மரீசிக்
கத்திரிக்கநசூயையைக்கொடுத்தனனலங்கல்
முத்தருஞ்சியமுகிண்முலையருந்ததிதன்னை
மெய்த்தவத்தினின்மேம்படுவசிட்டனுக்களித்தான். ௩௬

இங்கிராதினியிட்டிடையெனப்பணைத்தெழுந்து
மங்குறேய்வடவரையெனவளரிளங்கொங்கைத்
திங்கள்வாணுதற்சிரத்தையைத்தேங்கொள்பூங்கண்ணி
அங்கிராவெனுமருமறையந்தணற்களித்தான். ௩௭

அவிநுகர்ந்தவனெனப்பெயர்பெற்றவோரணங்கைப்
புவிவழுத்தியபுலத்தியற்களித்தனன்புலகற்
குவரியின்னமுதூறுசொற்குரும்பையேபோலும்
குவவுவெம்முலைக்கதியெனுமடந்தையைக்கொடுத்தான். ௩௮

பள்ளவாரிதிபட்டசெம்பவளவாய்ப்பச்சைக்
கிள்ளைமென்மொழிக்கிரியையைக்கிருதுவுக்களித்தான்
அள்ளியாரிருளயிலும்வெள்ளலர்கதிர்த்திங்கட்
பிள்ளைவாணுதற்கியாதியைப்பிருவுக்கீந்தான். ௩௯

சிறுமருங்கினியிறுமிறுமென்பபோற்றேனுண்
பறவையார்ப்புறப்பாயிருளொழுகுவார்குழன்மேல்
நறைவிரிந்ததண்மலர்புனைசாந்தியைநான்காம்
மறையின்பேர்பெறுமறையவற்களித்தனன்மாதோ. ௪௰

கலிவிருத்தம்.

உந்துதெண்டிரையினைத்துருகவொண்சுடர்
சிந்துசெங்கதிர்புரைதெய்வத்தாமரை
அந்தணனிழல்வருமண்ணன்மாதவன்
மைந்தனைவணங்கினன்வழுத்தன்மேயினான். ௪௧

சீரிளம்பரிதிசெம்முளரிசேர்ந்தென
ஆரழலாழியுற்றலங்குசெங்கையாய்
கூருமன்பினர்மனங்குறித்ததல்லதை
ஒருருவுண்டுகொலுனக்குநாடினே. ௪௨

உமிழுநூல்சிலம்பியாங்குண்ணுமாறுபோல்
இமிழ்கடலுலகெலாமெழில்கொளுந்தியம்
கமலநாண்மலரிடைக்காட்டியுண்ணுதி
அமலநின்னிலையையாரறியவல்லரே. ௪௩

ஒருருக்கொடுநிலம்படைத்தியொள்ளிதின்
சீருருக்கொடுதனிப்புரத்திசெந்தழற்
பேருருக்கொடுநனிதுடைத்திபேதையேன்
நாருருக்கொடுநினைநவிற்றற்பாலனோ. ௪௪

என்றுபற்பலபுகழ்ந்தேத்தவான்மழக்
கன்றெனத்திகழ்தருகபிலன்கூறுவான்
துன்றுவெண்டிரைக்கடல்சூழும்பூமிசை
நன்றறிகருத்தமநானுதித்தது. ௪௫

மல்கியதீயபொய்ம்மதங்களாற்பல
அல்லனீளார்கலியழுந்துவார்களை
ஒல்லையிற்சாங்கியயோகவோடத்தால்
எல்லையில்வீடெனுங்கரையிலேற்றுவான். ௪௬

அன்னையுமுத்திசென்றடையநன்னெறி
பன்னுவன்மாதவநீயும்பற்றுவிட்
டென்னுருமனத்தினிவினிதுநாடியே
துன்னுதிவீடெனச்சொல்லினானரோ. ௪௭

சொல்லியகபிலனைச்சூழ்ந்துதாடொழாக்
கல்லனைவனத்தினிற்கருத்தமன்னடந்
தில்லறந்துறந்தெழிற்றவமியற்றுபு
நல்லதோர்முத்தியினண்ணினானரோ. ௪௮

அகங்குழைந்தன்னையுமாங்குக்கைதொழா
நுகர்ந்தனமீளவுநுகர்ந்துபல்பகல்
இகந்தனவீறில்வீடெய்துமாறினிப்
புகன்றருள்வாயெனப்புதல்வற்போற்றினாள். ௪௯

பார்முதிர்பனிக்கடல்பருகுநுண்டுளிக்
கார்முகிலெனத்திகழ்கபிலன்கட்கடை
ஆர்தருமின்னருளலையெறிந்திட
மூரல்வாண்முகத்தினன்மொழிதன்மேயினான். ௫௦

பனிபடுதிரையெழுபரிதிகண்டுசூழ்
கனியிருளிரிவதுகடுப்பக்கட்டமை
வினையிருளிரிதரவிளங்குமென்னைநீ
நினைதரின்மேவுறுநிகரின்முத்தியே. ௫௧

கலைபயின்றுயிர்க்கெலாங்கருணைசெய்துறை
அலகிலாவறிஞர்பாலன்பினோடுபோய்க்
குலவுதன்முத்தியிற்குறுகக்கோதகன்
றிலகுநன்னெறியதாயியையுமென்பவே. ௫௨

ஈசனும்வேறியங்குயிரும்வேறெனு
நேசமுற்றெனைநினைப்பவற்குமீசற்கும்
பேசுபல்லுயிர்க்குமோர்பேதமில்லெனும்
மாசிலாதவற்கும்வந்தொன்றுமுத்தியே. ௫௩

தந்தைநற்றாய்தம்பிதம்முன்றானென
மைந்தர்கண்முதலினோரென்னவைகுவேன்
சிந்துசெங்கதிர்ச்செழும்பொன்னிற்செய்தசீர்
நந்தலிலாதநற்பணிகள்போலவே. ௫௪

என்னுருப்படிமிசையினிதினோடுவோன்
துன்னியசெல்வங்கடுய்ப்பன்றுய்த்தபின்
பன்னுவெங்கூற்றினாற்பயமுறானவன்
மன்னுமென்மலரடிமருவிவைகுவான். ௫௫

கூரெயிற்றுடலங்கூற்றங்கொல்வதும்
கார்மழைபொழிவதுங்கதிரெறிப்பதும்
மாருதமுளர்வதும்வாரிநிற்பதும்
ஆரழல்சுடலுமென்னாணையாகுமால். ௫௬

எத்திறத்தாயினுமென்னையேமனம்
வைத்திடின்வல்வினைமாயுமாறிலா
முத்திவந்தெய்துமான்முறையிற்றோன்றிய
தத்துவந்தெருளினுஞ்சாருமுத்தியே. ௫௭

என்னலுந்தத்துவமியம்பல்வேண்டுமென்
றன்னநேர்மென்னடையன்னைகூறலும்
பன்னுவல்கேளெனப்பகர்தன்மேயினான்
கன்னியந்துளவணிகபிலனென்பவே. ௫௮

கருத்தமன்மணம்புரிந்து கபிலர்ப்பெற்றவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨௨௩.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## ௮-வது, கபிலர்தத்துவ முரைத்தவத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

ஒலிமுதலாயவைந்துமோங்கியபூதமைந்தும்
மலியுமிந்தியங்கள்பத்துமனமுதனான்குமாக
நலமிகுநான்காறுநவையறுகாலத்தோடும்
இலகியதத்துவங்களியைந்திடுமையைந்தென்றே. க

மதியொடுவாக்குக்கெட்டாமாயவனருளினாலே
துதியுறுமாயைதன்னிற்றோன்றியமகானினின்று
விதியுறுகுணங்கண்மூன்றுமேவிமூன்றெனச்சேர்ந்து
சதியுறுமகங்காரந்தான்கவினவந்துதித்ததன்றே. உ

புகன்றராசதத்தினோடுபொருந்தகங்காரந்தன்னில்
பகர்ந்தவிந்தியங்கள்பத்தும்புந்தியும்பிராணன்றானும்
திகழ்ந்தசத்துவத்தினோடுசேரகங்காரத்தானை
அகன்றமாமனமும்வந்தங்கன்பொடுமுதித்தவன்றே. ௩

உரைதருசிறப்புவாய்ந்தமனமுதலாகவோங்கு
கரணநான்கினுக்குப்பாசநேசர்நற்காமதேவன்
அருமணிபுரைவண்ணத்தவநருத்தனநந்தன்செய்ய
மரைமலர்ச்செங்கண்வாசுதேவனுமரபின்மன்னோ. ௪

மனமெழிற்புந்திநற்சீர்மருவகங்காரஞ்சித்தம்
எனுமிவற்றியைந்துநாளுமிலங்கதிட்டானதேவர்
பனிவருகதிரோன்வேந்தன்பவர்சடையுருத்திரன்றன்
நினைவுறுசீவனென்றேநிகழ்த்துவர்மரபின்மாதோ. ௫

சொற்றதாமதத்தினோடுதோய்ந்துறுமகங்காரந்தான்
பெற்றநல்லொலியின்வந்துபிறந்தனசெவியும்வானும்
உற்றவானெழுந்தவூற்றினுதித்தனவளியுந்தொக்கும்
குற்றமில்வளியின்வந்துகுலாவியதுருவமாதோ. ௬

உருவினிற்கனலுங்கண்ணுமுதித்தனகனலின்வந்து
மருவியசுவையிற்றோன்றிவயங்கினபுனலுநாவும்
பெருகியபுனலினின்றும்பிறந்தநன்னாற்றந்தன்னின்
இருநிலமூக்குத்தன்னோடிலங்குறவுதித்ததன்றே. ௭

ஒலியினையோங்குவானுமூற்றினைவளியுமொன்றிப்
பொலிதருமுருவைத்தீயும்புகல்வருசுவையைநீரும்
நிலைபெறுநெஞ்சைமண்ணுநீங்கலாவண்மையோடு
குலவுநல்லுரிமையாயகுணமெனப்பொலிந்துதோன்றும். ௮

செவியொலிகளுநற்றொக்குச்சேர்பலவூறுஞ்செங்கண்
நவையறுமுருவம்யாவுநாவருஞ்சுவைகளாறும்
கவினநீண்மூக்கிதென்னக்கருதுமிந்தியத்திரளும்
புவியுறுகுணங்களென்னுமணங்களும்பொருந்துமன்றே. ௯

கருதுகண்செவிநாமூக்குக்கதுவுறுதொக்குவாக்கு
வருசெங்கைகாலிலிங்கங்குதமிவைமருவுந்தெய்வம்
பரிதிநற்றிசைநீர்வேந்தன்பரிப்பெயர்த்தேவர்திண்கால்
விரிதழல்விண்ணின்வேந்தனுபேந்திரன்விரிஞ்சன்கூற்றே. ௰

பண்டைநான்மறைக்குமெட்டாப்பாற்பானருளினானண்
கெண்டகுதத்துவங்களிலங்குபொன்னுருவமாகி
வெண்டிரைநீரிலண்டமாகவேவிளங்கவந்த
அண்டத்துள்விராட்டுவந்துற்றடல்கொடுவளர்ந்ததன்றே. ௧௧

புலன்கள்பத்தகங்காரஞ்சேர்புந்திநன்மனமிவற்றோ
டிலங்கதிட்டானதேவரியைந்துறவெழுந்ததில்லை
துலங்கெழுவிராட்டுமற்றைச்சொல்லியசித்தத்தோடு
நலங்கிளர்சீவன்வந்துநண்ணவாங்கெழுந்ததன்றே. ௧௨

உடம்பெனப்படுவதம்மவொன்றினுக்கொன்றுதோன்றி
மிடைந்துறுதத்துவத்தின்குழுவினால்விளைந்ததாகும்
அடைந்ததத்துவங்களெல்லாமன்றியேநிற்பதேது
தொடர்ந்துமற்றதனைத்தானேயுயிரெனத்துணிவர்மாதோ. ௧௩

பொய்வகையாகுமாயைப்புணர்ப்பினாற்பட்டதன்றி
மெய்வகைதெரியநாடின்மேவருகுணனுமில்லை
செய்வினையொன்றுமில்லைசெலவில்லைவரவுமில்லை
உய்வதொருணர்வாய்ந்தவுள்ளுயிர்க்கோரின்மாதோ. ௧௪

புனலுறுவிதிர்ப்புத்தண்ணம்புனல்வயிற்றோன்றுநின்ற
பனிமதிமேலதாக்கிப்பகர்வதோர்பான்மைபோல
மனமுதலாகிநின்றமாட்சிசால்கரணத்துற்ற
வினையினையுயிர்மேலேற்றிவிளம்புவர்புனைந்துமன்னோ. ௧௫

உரைத்திடுகனவுபோலவுபாதிபொய்யாகுமென்றும்
விரித்தமூன்றவத்தையுள்ளும்விளங்குவன்புருடனென்றும்
திருத்தியவறிவிற்றேறித்தேர்ந்துகொண்டிருப்பான்முத்தி
தரித்திடுமும்மையாயதனுவொரீஇயடைவானென்றான். ௧௬

உண்ணெகிழ்ந்துருகவிங்ஙனுரைத்ததுகேட்டவன்னை
மண்ணினின்மணமுநீரின்மருவுறுசுவையும்போல
நண்ணியமாயையோடுநனிகலந்தோனைத்தேர்ந்திங்
கெண்ணுவதெங்ஙன்மாயையெப்பரிசொருவுமென்றாள். ௧௭

என்றலுங்கபிலன்சொல்லும்யாதினுமியையுநீத்து
நின்றமாதவத்தினோர்பானீங்கலாதுறைந்தென்சீர்த்தி
நன்றவர்மொழிதல்கேட்டானவிற்றரும்பத்தியோகம்
ஒன்றுறுமொன்றுங்காலத்துற்றிடுஞானமாதோ. கஅ

அரணியிலனல்வந்துற்றவ்வரணியையழிப்பதேய்ப்பக்
கருதியஞானம்வந்துகலந்துறுமுபாதிநீக்கும்
புரிதுயினீத்தோன்றன்பாற்பொருந்திடாக்கனவுபோற்பின்
உரைசெயுமாயைசேராதுண்மையையுணரலாமால். கக

விழுச்சிறப்புடையவூழின்வினைவகையறியமாட்டான்
அழித்திடுமாசைப்பௌவத்தளறெழவிழுந்தழுழ்கி
இழைத்தனன்யானேயென்னவெண்ணியதிறத்தினலே
தழைத்திடும்வினைகளெல்லாந்தன்னைவந்தடையாநிற்கும். உ0

அந்தாமீதுகாற்றுலருங்கதியடையாநின்ற
கந்தாங்காற்றினுலிக்கதியெனக்கருதாதேபோல்
இந்திரன்வேதனாதியிமையவரானும்வெல்லா
வெந்திறற்காலந்தன்னால்விளைந்தனவினையொன்றோரான். உக

இருவினைக்குறும்புதீர்ப்பானெனதுநானவிற்றல்வேண்டும்
வருவவந்துறுமென்றெண்ணாஉவைகுறல்வேண்டும்பெற்ற
ஒருவனுவப்பவேண்டுமுயிர்க்கெலாமிரங்கல்வேண்டும்
தருமவிகானந்தன்னிற்றனித்தினிதுறையல்வேண்டும். உஉ

கலைமதிமுகமுஞ்செய்யகமலலோசனமுங்காமன்
சிலைபொருநுதலுஞ்செக்கர்சிறந்தவொண்பவளவாயும்
மலர்துழாயலங்கன்மார்பும்வலம்புரிபொறுத்தகையும்
இலகுபொற்றுளுமாகவென்னுருக்கருதல்வேண்டும். உ௩

இழைத்திடல்வேண்டும்யோகம்யோகநன்றிழைத்தானுயின்
பழுத்திடத்தழலிற்சுட்டபசுஞ்சுடர்க்கனகம்போலத்
தழைத்தெழுகின்றவுள்ளந்தன்னுழைப்பற்றிநின்ற
அழுக்கறுமற்றகாலத்தமலனையறியலாகும். உச

புல்லெறும்பாதியாகப்புகல்சராசரங்களெல்லாம்
சொல்லிடினென்றினொன்றுதுலங்கதிசயத்தவாகும்
எல்லையிலவைகடம்மினிலங்கதிசயத்தனுவான்
நல்லநூற்பொருள்கடேர்ந்தொண்ஞானமிக்குயர்ந்தநல்லோன். உரு

தன்னைத்தானறியானுயிற்றலைத்தலைத்துன்பஞ்சாரா
மின்னெனத்தோன்றிவீயும்யாக்கைகள்பலவுமேவும்
என்னதோர்யாக்கைதன்னையெடுப்பினுமெடுத்துநின்ற
அன்னதோர்யாக்கைநீங்கலாற்றலனுசைகூடும். உசா

## கலிவிருத்தம்.

விழைவெனப்படுகின்றதுமென்மெல
அழலவிர்ந்தசனனத்தரும்பிமெல்
மழலைமாதர்மருங்கிற்படர்ந்துபைங்
குழவிமீதுகொழுந்துவிட்டோங்குமால். ௨௭

குழனரைப்பவெண்கோத்தமுத்தாமென
எழில்படைத்தவெயிறிடைவீழ்தரப்
பழிபடைத்துடனாளிற்பழுக்கவும்
விழைவினுக்குவிளையுமிளமைபோம். ௨௮

உழுதுபல்வளமுய்த்தமழவிடை
கிழவுபட்டிடிற்போற்றல்செழீஇயதே
விழுமெய்யாங்குமுதிர்ந்திடின்வேட்டதன்
மழலைமாதருமைந்தரும்போற்றிலார். ௨௯

இம்பர்வாழ்வுழியீறிலதாகிய
உம்பர்வாழ்வதற்கொன்றுமியற்றிலன்
ஐம்பொறிக்கிரைதேடியலமந்து
வெம்புகின்றவெறிவிருந்தாவனால். ௩0

தீக்கண்சிந்துறச்சீறியமபடர்
வீக்கவந்துவிழியெதிர்ப்பட்டிடின்
ஆக்கைசோர்தரவாங்குப்படுந்துயர்
வாக்கினெங்ஙன்வகுத்துமொழிவதே. ௩௧

எண்ணில்யோசனையெண்பத்தாருயிர்
நண்ணுகின்றவருநெறிநஞ்சுகால்
கண்ணநாய்க்குலங்கவ்வியுடற்றசை
உண்ணச்செல்வுழியூறுமற்றென்சொல்கேன். ௩௨

பாறுகோடிபடாக்குருதிநீர்
ஊறுகின்றதன்னூனரிந்துண்டுபோய்
ஆறுகன்னலிற்செல்லுமழலெனச்
சீறுகூற்றமுறுகின்றதென்புலம். ௩௩

சிந்துகின்றதெறுசினப்பாழிவாய்ப்
பாந்தளன்னவர்பற்றியலைக்குறக்
காந்துதீநரகாழ்ந்துகழிந்தபின்
மாந்தர்மீளவும்வந்துபிறப்பரால். ௩௪

ஒளிகொணித்திலமொண்பவளச்செறு
விளையவித்தியதென்னநல்வீரியம்
தளிர்நிறத்தெழுதாய்கருவிற்பணித்
துளியிற்சென்றுபொருந்தித்துளக்குறும். ௩௫

ஒருமைந்துபகலினுடைதிரை
நீரின்வந்தெழுமொக்குணிகர்த்திடும்
எருலாய்வளர்ந்தீரைந்துவைகலின்
ஆருந்தூநிறவண்டம்பொருவுமால். ௩௬

ஒன்றுதிங்களினுற்றிடும்புன்றலை
சென்றதிங்களிரண்டனிற்றெண்டிரை
துன்றுகின்றசுடர்ப்பவளக்கிளை
வென்றசெங்கையுங்கால்களுமேவுறும். ௩௭

மயிர்நகங்கண்மரீஇத்திங்கண்மூன்றனில்
செயிரில்கண்செவிமூக்குச்செரிவுறும்
இயலுமீரிருதிங்களினெல்லையின்
பயிலவாய்க்கும்பலவகைத்தாதுவே. ௩௮

அஞ்செனப்படுந்திங்களடைந்துழித்
துஞ்சலின்றிச்சுடுபசிதோன்றுறும்
எஞ்சலின்றியியன்மதியாறினில்
பஞ்சிபோலுமொர்மையினகப்படும். ௩௯

திங்களேழினறிவுசிறந்தெழத்
தங்குதொல்லைப்பிறவிகடானுணர்ந்
திங்குத்தோன்றுமிடரினித்தீர்க்செனு
அங்கைகூப்பியமலனையேத்துமால். ௪0

குவிந்திருந்தமலத்திற்குளித்தெழாத்
தவழ்ந்துபல்புழுத்தன்னையரித்திடக்
கவிழ்ந்துசென்னிகிடப்பக்கவைஇவளைத்
தவிழ்ந்தபைங்குடரார்த்திடவார்ப்புறும். ௪௧

காய்தலுற்றகரிப்பிற்புளிப்புனில்
மேயதாயவுவர்ப்பின்மெலிவுறும்
ஏயதாய்ப்பசித்தீயினெரிந்திடும்
தாயருந்துவகொண்டுதளிர்ப்புறும். ௪௨

உற்றதிங்களொருபதுசென்றிடின்
மற்றொரர்மாருதம்வந்துதலைப்படாச்
சுற்றிச்சென்னிகீழாக்கிடத்தோன்றுமால்
அற்றைத்துன்பமறைவதற்கொண்ணுமோ. ௪௩

தோற்றஞ்செய்துழித்தொன்னிலமீதுளர்
காற்றுமேவக்கருவினிற்றோன்றிய
மாற்றிலாதமதிமறைந்தோவுற
ஆற்றல்யாவதுமின்றியழுங்குமால். ௪௪

அறப்பெருய்முன்னருத்தவருந்துழித்
துறப்பவாடித்துயர்வுறுமூர்வன
பறப்பவற்றிற்படருறுமென்மல
உறப்பெறுதனவுள்ளிக்கலுழுமால். ௪௫

ஆண்டுபெத்துடனைந்துசுழிவுறின்
காண்டருந்திறற்காளையெனவெழீஇ
மாண்டநல்லெழின்மாதர்மணிவடம்
பூண்டுவிம்மும்புணர்முலைகாமுறும். ௪௬

அம்பொற்றுதுகோதஞ்சிறைவண்டிமிர்
வம்புலாங்குழன்மாதரொனப்படும்
பைம்புன்மூசியபாழ்ம்பெருங்கூவலின்
நம்பிவீழுமவனிநகைப்பவே. ௪௭

வேதன்பெற்றதன்பெண்ணைவிரும்பியப்
பேதைமானுருக்கொண்டுபெயர்வுழிக்
காதல்கூர்கலையாய்த்தொடர்ந்தானெனின்
மாதர்வேட்கைமறுப்பவர்யாவரே. ௪௮

பாற்கடற்றலைப்பட்டகொடுவிடம்
தோற்பவெங்கொலைசூழ்ந்துகுழைபொரு
வேற்கணார்விளையாட்டுவிலங்கினைப்
போற்குலாய்முதுமூப்புறப்பொன்றுமால். ௪௯

பிறந்திறந்துநனிபடும்பேரிடர்
சிறந்தசங்கொடுபங்கயரேகைசேர்
நறுந்துழாய்புனைநம்பனறுங்கழல்
மறந்திடாமைமனக்கொளிற்றீருமே. ௫௦

புவியளந்தவன்பொன்னடித்தாமரை
தவழுங்கங்கையந்தண்புனல்பொன்னென
அவிர்சடாமுடிமீதுவைத்தன்றுகொல்
சிவனுமோர்சிவனாகித்திகழ்ந்தனன். ௫௧

ஆய்ந்துவேள்வியரிறபவாற்றிடின்
ஏந்துகொங்கையரம்பையரின்னலம்
மாந்தியின்புற்றுவைகியதன்பயன்
வீந்தகாலையின்விண்வழுக்குற்றிடும். ௫௨

கற்பமொன்றுகழியக்கழிந்திடும்
பொற்புவாய்ந்தபொன்னாடுபொற்றுமனை
நற்பெருந்தவனாடுநில்லாதென்றும்
நிற்பதாழிபனீள்பதமொன்றுமே. ௫௩

விளைவதோர்பயன்வெஃகலன்மாயவற்
களியினல்கியருமகமாற்றின்மீக்
கிளருஞ்செங்கதிர்மண்டிலங்கீண்டுபோய்
ஒளிசனாலுமுயருலகெய்துமால். ௫௪

காதல்விட்டுக்கருதியபேதமாம்
ஏதநீங்கினரெய்துவர்முத்தியின்
பேதமாகுமுபாசனைபெற்றிடின்
வேதனாயினுமீளவுந்தோற்றுமால். ௫௫

ஆவிவேறெனப்பேதமடைந்திடும்
தேவர்மாதவர்தேர்சனகாதியர்
பூவினானொடும்போயடைந்தன்னவன்
மேவுஞான்றிவண்மீட்டுமுதிப்பரால். ௫௬

மலத்திடைப்புழுப்போல்வளையாழிசூழ்
நிலத்துதித்துநிரயமுறுந்தொழில்
நலத்ததென்னநயப்பவர்ஞானமாம்
உலப்பிலுண்மையையோர்ந்துணரார்களே. ௫௭

சூட்டுநாகஞ்சுமப்பநிலத்தவர்
வேட்டவாறுநடப்பவிளங்கிழாய்
பாட்டுவண்டிமிர்பைந்துளவோன்பதம்
நாட்டமுற்றுநீநற்றவஞ்செய்தியால். ௫௮

மோகநீங்கிமுயல்வுறின்மாதவம்
ஆகமொன்றுதலின்றியபேதமாய்
மாகநாடர்வழுத்தவருசித்தோ
டேகமாகியியைகுதிநீயென்றான். ௫௯

என்றுகூறலுமேரிளமுல்லையை
வென்றமென்னகைமெல்லியறன்னுளம்
நன்றுதேறிநலங்கொளமிழ்தினைக்
கொன்றதீஞ்சொற்குமரனையேத்தினாள். ௬0

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

வந்துசெம்பவளநீலமால்கடல்கிளைத்ததேய்ப்பச்
சிந்துமொண்சுடரவாகித்திசைத்திசைவிரிந்தசெந்தோட்
டுந்தியங்கமலப்போதினுதித்துலகனைத்துமீன்றான்
தந்தைநீநுன்னைமற்றோர்தநயனென்றுரைக்கலாமே. ௬௧

மின்வயிற்பிறந்தசோதிவெருவரவெயில்சூழ்குன்றப்
பொன்வயிற்பிறந்தகாந்திபொழிந்தசெங்கமலைகேள்வ
உன்வயிற்றோர்பாலெல்லாவுலகமுமிருப்பநீவந்
தென்வயிற்றிருந்தாயென்னவேழையேனெண்ணலாமே. ௬௨

பொலமுகடுடையக்கொற்றப்புனனெடுங்கடலினாலத்
திலைமிசைக்கங்கைவெள்ளமெடுத்துவார்ந்தொழுகுபொற்றாள்
மலரடிக்கமலம்பற்றிமணிநகைத்துவர்வாய்வைத்துக்
குலவுபைங்குழவிநீயென்குழவியென்றுணரலாமே. ௬௩

முளைத்தனையுலகுக்கெல்லாமுன்னநீநினக்குஞாலம்
விளைத்தலுங்காத்தருளுமழித்தலும்விளையாட்டாமால்
அளிக்கடனினதுதன்மையறிகுநர்யாரேயென்னா
வளைத்தளிர்ச்செங்கைகூப்பிவாணுதல்வழுத்தினாளால். ௬௪

பவளநற்றுலாத்ததாகப்பாணிலாமுத்திற்செய்த
தவளமாளிகைவிண்ணோங்கித்தயங்கியமனையுநெஞ்சம்
கவர்தருகடவுட்செம்பொன்விமானமுங்கமழ்பூங்காவும்
துவரவிட்டொருவித்தண்ணந்துறைநதியொன்றுசார்ந்தாள். ௬௫

மின்றிகழ்பசும்பொன்னாரம்வெண்டுகின்மாலைசாந்தம்
குன்றெனக்குவிந்தகோலக்குலமணியிவைகணாடாள்
கன்றுதேர்கறவையென்னக்கபிலன்மேல்வைத்தகாதல்
ஒன்றுமாங்ககன்றிலாளவ்வோடரித்தடங்கணாளே. ௬௬

மாவுரியுடையளாகிவார்ந்துநெய்த்திருண்டமன்றற்
புரிகுழல்சடையதாகப்புகரறத்தவநன்காற்றிப்
பரனடிக்கமலஞ்சேர்ந்தாள்பனிமொழிப்பவளச்செவ்வாய்த்
தெரிவைநல்யாக்கைதெய்வத்திருநதியாயிற்றம்மா. ௬௭

அடலுடையிலங்கைவேந்தனசைத்தனனெடுத்தகாலை
விடுசுடரொழுகுவெள்ளிவெண்டிரல்வீழ்ந்தாலாங்குச்
சுடர்மணியருவிக்குன்றந்தோன்றுறுதிசையின்வீங்கு
கடலிடன்கொடுப்பச்சென்றுகபிலன்வீற்றிருக்கின்றானால். ௬௮

இல்லையேமறுமையென்போரறிவிலாவிவர்கட்கிந்நூல்
சொல்லுதலாகாதுள்ளந்தூயவர்க்கியம்பல்வேண்டும்
நல்லுணர்வோடுகேட்டோர்நண்ணுவர்துறக்கமென்னா
ஒல்லையிற்கூறிமீட்டுமுரைப்பனம்மயித்திரேயன். ௬௯

இருநிலம்புகழுமன்னவென்றனனென்னலோடும்
அரசனும்விதுரன்கேட்டதென்னைகொலன்பினோடு
திருமுனிதெரித்ததென்கொறெரிதரவெனக்குநாடி
உரைசெயல்வேண்டுமென்றான்சுகமுனியுரைக்கலுற்றான். ௭0

கோதவாம்புலன்கள்வென்றுகுலவுநான்மறையீரென்று
சூதமாமுனிவன்சொல்லக்கேட்டலுந்துளிலாத
தாதலர்வனத்திலுற்றுச்சவுனகாதியாக
மாதவம்புரிவோரெல்லாமகிழ்ந்தனர்பெரிதுமன்னே. எச

கபிலர் தத்துவமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உகூச.

ங-வது, ஸ்கந்தம் முற்றிற்று.

ஸ்ரீகிருஷ்ண சகாயம்.

---

## ச-வது, ஸ்கந்தம்.

## க-வது, மரீசிமுதலியோர்படைப்புரைத்த வத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கருத்தமன்மகிழ்வினீன்றகருங்குழலியரைவேட்டோர்
திருத்தகுமரபுமுன்னஞ்செப்பியருசியென்பான்றன்
அருத்திசெய்மரபுந்தக்கனணிதிகழ்மரபுஞ்செப்பென்
றுரைத்தலும்விதுரர்க்கன்போடுரைத்தனன்மயித்திரேயன். க

கலைமதியிரியவெல்வெண்கதிர்வளையேந்தியம்பொற்
கலையணிமாயனுந்திக்கமலநாண்மலரிற்றோன்றும்
கலைமகள்கொழுனனல்குங்காட்சிசான்மரீசிவேட்ட
கலையெனுமடந்தையீன்றாள்சாசிபன்றன்னைமன்னே. உ

பொன்னணிகுழையாண்மீட்டும்பூரணவானையீன்றாள்
அன்னவன்விரசனென்னுமருந்தவன்றனையுங்கங்கை
என்னுநன்னதியேயாகவியைகுவனினிதினென்று
பண்ணுவிச்சுவகையானபைந்தொடிதனையும்பெற்றாள். ங

அத்திரியாகந்தோய்ந்தவருளநசூயையென்பாள்
தத்தொளிகிளைக்குந்திங்கடகைகொடத்தாத்திரேயன்
தொத்துறுகனலிற்சீற்றந்துறுதுருவாசனென்னும்
மெய்த்தவர்க்கருவுயிர்த்தாள்விரைமலர்பொழிந்தார்விண்ணோர். ச

விடுசுடரெறிக்குந்திங்கள்விரைமலர்விரிஞ்சனுரும்
படிசொறத்தாத்திரேயன்பாற்கடற்சேர்ப்பனுமால்
சுடர்விடுபரிதியன்னதூய்த்துருவாசனென்போன்
மடலவிழ்கடுக்கைவேய்ந்தமணிமிடற்றீசனுமால். ரு

என்னவுமுலகுக்கெல்லாமிறையவராகின்ற
மூன்னவரிவற்குவந்துமூளைத்தவாறென்சொலீது
யன்னிடல்வேண்டுமென்னப்பாடல்சால்விதுரன்கேட்ப
நன்னர்நெஞ்சுவக்குமாறுநவிலுமான்மயித்திரேயன். சு

மேவருமக்கட்பேறுவேண்டியோர்குன்றுநண்ணி
ஆவயின்மலரோற்போற்றியத்திரிதவஞ்செய்தானால்
பூவொடுபுணரிவெள்ளிப்பொருப்பெனுமிடங்கணீங்கி
மூவருந்தோன்றினாம்முழுத்தவன்முன்னர்மாதோ. ௭

பாவியம்முனிவன்றாழ்ந்துபங்கயத்தொருவன்றன்னைக்
கருதிநற்றவஞ்செய்தேனீர்கண்ணுறலெவன்கொலென்னா
அருமறைக்கிழவநீநின்னகத்திடைநினைக்கலுற்ற
ஒருவனேயாங்கள்வேறென்றுள்ளலென்றுரைத்தாரன்னோர். ௮

இத்திறமியம்பியாங்கணின்னுழையுதித்துமென்றார்
அத்திறமுறைத்தலானேயத்திரிதனக்குவந்து
முத்தொழிலியற்றுகிற்குமூவருமுதித்தாரென்னா
மெய்த்தவமயித்திரேயன்மீளவும்விரிக்கலுற்றான். ௯

அல்லியங்கமலம்பூத்தவாயிதழ்க்குவளைபோலும்
சில்லரிபரந்தவுண்கட்சிரத்தைசீரங்கிராவைப்
புல்லினளுசத்தியன்சீர்பொருந்தியவியாழந்தம்மோ
டல்லுறழ்குழலிராதையாதியாநால்வர்ப்பெற்றாள். ௧௦

புலத்தியன்பொற்றார்மார்புபுணரவிபுக்குவென்னும்
அலத்தகமணியுமஞ்செஞ்சீறடியன்னமன்னாள்
குலத்தமிழ்பயந்துதென்றற்கொழுந்துலாந்தண்ணஞ்சாரல்
மலைத்தலையமர்ந்தவண்ணன்மாதவன்றன்னையீன்றாள். ௧௧

பின்னுமோர்பிறப்பினந்தப்பெரும்புகழ்ப்புலத்தியன்சீர்
மன்னுவிச்சிரவாவென்னுமாதவன்றன்னையீன்றான்
அன்னவனளகைவேந்தையளித்தனனளித்தபின்னர்
இந்நிலம்வெருளப்பெற்றானிராவணன்முதலியோரை. ௧௨

புலகனைமணந்தநீலப்புயல்புரைகரியகூந்தற்
கலவமாமயிலஞ்சாயற்கதிர்முலைக்கதியென்றோதும்
திலகவாணுதலாள்கன்மசிரேட்டனையாதியாக
உலகறிசிறப்புவாய்ந்தமூவரையுயிர்த்தாண்மன்னோ. ௧௩

முருகுவாய்மடுத்துவண்டுமூசுபூந்தாமம்வேய்ந்த
பிருகுமாமுனிவன்வேட்டபிறைநுதற்கியாதியென்பாள்
இருவிசும்பேத்துதாதாவின்னருள்விதாதாவென்னும்
அருமறையவரொடம்பொற்றாமரையணங்கையீன்றாள். ௧௪

கலிவிருத்தம்.

முனிவிகுபிருகுமாமுனியளித்தருள்
தநயர்களெனுமிருதவத்தினோர்கடாம்
வினையறவிளங்குபொன்மேருவீன்றருள்
வனிதையரிருவரைமணஞ்செய்தாரரோ. ௧௫

மாதராள்யாதியைமகிழ்புவேட்டவவ்
வோதுதாதாவினிதுயிர்த்தமைந்தனும்
வேதனுலுணர்மிருகண்டுமெய்த்தவன்
காதலார்மகவுமார்க்கண்டனென்பவே. கசு

அறைந்திடுபுகழ்விதாதாவணைந்தசீர்
நிறைந்தபேரழகிஞனியதிக்கன்பொடு
பிறந்தனன்பிராணனப்பிராணன்பெற்றனன்
சிறந்தநற்றவமறைச்சிரசென்போனையே. கஎ

உறுபுகழ்க்கிருதுவைமணந்தவொண்டொடி
நறுநுதற்கிரியைநல்வயிற்றினண்ணினூர்
அறுபதினுயிரவருந்தவத்தினர்
மறுவறுசிறப்புடைவாலகில்லியர். கஅ

வரம்பிலாமாதவவசிட்டன்வேட்டருள்
அருந்ததியென்னுமவ்வணங்குபெற்றனள்
திருந்தெழிற்சித்திரகேதுவாதியாம்
இருந்தவமுனிவரோரெழுவர்தம்மையே. கசு

அதர்வணன்வரைமருளகலம்புல்கிய
ததைமலர்க்கருங்குழற்சாந்தியீன்றனள்
முதுமறைமுழுதுணர்ததீசியேமுதற்
புதல்வரோர்மூவரைப்புவிவழுத்தவே. உo

ஆதியின்மனுவினிற்றேன்றியாய்மறை
ஓதியருசியினைமணந்தவொண்டொடி
மேதகுவேள்வியம்புருடன்றன்னெடு
பேதைதக்கிணையெனுமணங்கைப்பெற்றனள். உக

நேரிழைமகட்கொடைநேர்ந்தநாளினில்
எரெழின்மகற்பெறினெனக்குநல்கென
ஒருரைநடத்தலினுதித்தமைந்தனைக்
கூரயில்வேன்மனுக்கொடுசென்றனரோ. உஉ

நக்கபூந்தாமரைநங்கையாகிய
தக்கிணைவலம்புரித்தடக்கைமாயனும்
மிக்கவவ்வேள்வியம்புருடனைத்தழீஇ
மக்கள்பன்னிருவரைவயிறுவாய்த்தனள். உங

தோடவிழ்பசுந்தொடைத்தோடனுதியாம்
பாடல்சாலன்னவர்பரவைவெண்டிரை
ஊடெழுகதிரவரொப்பத்தோன்றினர்
மோடுகொள்காந்திமூவுலகுமொய்ப்பவே. உச

அன்னபன்னிருவருமாதியாமனு
மன்னவன்காலம்வானவர்களாயினார்
சொன்னவக்காலமம்மனுவிற்றோன்றினார்
பன்னசஞ்சுமந்தெழுபாலராயினார். ௨௫

தழைபுகழ்புனைமனுவேந்தித்தாரணி
விழைவொடுகாக்குநாள்விளங்குமாதவர்
எழுவரென்றிசைக்குறுமுனிவர்யாரெனின்
மொழிதருமரீசியேமுதலினோர்களே. ௨௬

கருதுமந்நாளரிகலையின்றோற்றமாம்
பொருவருவேள்வியம்புருடனன்னவன்
சுரபதியாகவுந்துன்னினானிந்த
உரைபெருமறுவகையோருமாயனே. ௨௭

கலிநிலைத்துறை.

தக்கன்மேவியபசூதிசெந்தாமரைமுகத்துச்
செக்கர்வானெழுதிங்களஞ்சிறுநுதற்றெண்ணீர்
மொக்குள்போலெழுமுகிண்முலைமுத்தவெண்மூரல்
மக்களோராறுபதின்மரைப்பெற்றனண்மாதோ. ௨௮

அன்பினாற்பதின்மூவரையறத்தினுக்களித்தான்
இன்புறத்தழற்கடவுளுக்கொருத்தியையீந்தான்
தென்புலத்தவற்கொருத்தியைவழங்கினன்சிறந்த
கொன்பிறங்குபூங்கொன்றையாற்கொருத்தியைக்கொடுத்தான். ௨௯

உரைத்தநல்லறக்கடவுள்சேரொள்ளிழையவரில்
சிரத்தையீன்றனள்சுவணவெற்பிணையெனத்திரண்டு
பெருத்தவெம்முலைமயித்திரிபசாதனைப்பெற்றாள்
அரத்தவேல்விழித்தயைவிளங்கபயனையுயிர்த்தாள். ௩௦

சாந்திதந்தனள்சுகனையந்தளிர்புரைமேனி
ஏந்துவெம்முலைத்துட்டிசந்தோடனையீன்றாள்
வாய்ந்தநல்லெழிற்புட்டிபெற்றனண்மயன்றன்னைப்
பூந்துணர்க்குழற்கிரியையோகத்தினைப்பூத்தாள். ௩௧

கத்திகைக்குழலுன்னதிகருப்பனைப்பெற்றாள்
புத்திபொங்கெழிலருத்தனைப்பயந்தனள்பொன்னேர்
உத்திதோய்முலைமேதையோர்மிருதியையுயிர்த்தாள்
தத்தைமென்மொழித்ததீக்கைநற்கேமனைத்தந்தாள். ௩௨

இருள்கனிந்துவார்ந்தொழுகுபூங்குழலிரீயென்பாள்
பெருநிலம்புகழ்குழைவொடுகல்வியைப்பெற்றாள்
முருகுவிம்மியமுளரிவாண்முகத்தெழின்மூர்த்தி
நரனொடோங்குநாராயணன்றனையுயிர்த்தனளால். ௩௩

இரண்டுமாதவத்தோர்களுமியைந்துவந்துதிப்ப
வெருண்டுதீயனவிடைகொளவிளங்கியதிசைகள்
சுருண்டுநெய்த்தபூங்கருங்குழற்றெரிவையரோடும்
திரண்டுவான்மிசைத்தேமலர்பொழிந்தனர்தேவர். ௩௪

நவையினற்றவம்புரிதருநரனெனுநாமன்
புவிவழுத்துசீரருச்சுனனெனப்புகுந்துதித்தான்
எவரும்போற்றுநாராயணனெனும்பெயருறுவோன்
கவின்விளங்கியகண்ணனென்றுதித்தனன்மாதோ. ௩௫

மேவுமாரழல்விபுதன்வேட்டனன்சுவாகாப்பேர்த்
தேவியாங்கவளகட்டினிற்றிகழொளிசிறந்த
பாவகன்பவமானனெண்சுசியெனப்பகரும்
மூவர்தோன்றினர்மூவகையுலகமுங்களிப்ப. ௩௬

சீலமுற்றவம்மூவருந்திகழுமொவ்வொருவர்
வேலைசுற்றுபார்விசும்பிடம்விளங்கமுன்வந்த
கோலமுற்றமாண்குழவிபெற்றனரெனக்கூறச்
சாலுநாற்பதோடைந்தெனெண்டநயரைத்தந்தார். ௩௭

வானம்போற்றுதென்புலத்தவரமிழ்தெனமாந்தும்
தூநிலாமதிவாண்முகச்சுதையெனும்பிணவவ்
வேனிலங்குயின்மென்மொழிமேனைவைதரணி
ஆணநல்லெழிலரிவையரிருவரையளித்தாள். ௩௮

மரீசிமுதலியோர் படைப்புரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௩௮.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௨-வது, தக்கன் வேள்வியழித்தவத்தியாயம்.

---

வேறு.

ஒளிகால்பசும்பொன்முடித்தக்கனுயிர்த்தவம்மென்
றளிர்போலுமேனிச்சதிதேவிமணம்புணர்ந்த
முளைநாண்மதியமிலைசெஞ்சடைமுக்கணன்மேல்
விளையாதசீற்றம்விளைவித்துவெறுத்தல்செய்தான். ௧

எனலொடுமுக்கணிறைமேன்முறைதீர்ந்துதக்கன்
முனிவாயதென்னைமுனிவேந்தமொழிந்திடென்ன
மனமாசிகந்துமறைதேர்ந்தமயித்திரேயன்
வினைவேர்கடிந்தவிதுரற்குவிளம்பலுற்றான். ௨

பைந்தாதுசிந்திப்பனிநுண்டுளித்தேறல்வாக்கு
மந்தாரநீழன்மருவானவர்வந்துசேரச்
செந்தாமரைக்கட்டிருமாலைவழுத்திஞாலம்
தந்தார்குழுமித்தனிவேள்வியியற்றினரால். ௩

புரிகின்றவேள்விக்குயிர்யாவையும்பூத்ததக்கன்
வருகின்றகாலைமலர்வீட்டுறைவள்ளலன்றி
விரிகின்றவொள்வாள்வயிரப்படைவேந்தனோடும்
எரிகின்றசெம்பொன்முடிவானவர்கண்டெழுந்தார். ௪

துளங்குஞ்சுடர்கால்சுடுபொன்னெனத்தோடவிழ்ந்து
விளங்குங்கடுக்கைவிரைநாண்மலர்க்கொத்தெறிந்து
வளங்கொண்டகங்கைப்புறத்தன்னமணந்ததொப்ப
இளந்திங்களேயுஞ்சடையண்ணலெழுந்திலனால். ௫

குருக்கும்பிறைக்கீற்றயல்சேரும்வெங்கோளராவின்
விரிக்குங்கடுக்கைமுகிண்மென்றொடைவேய்ந்தநம்பன்
இருக்குஞ்செயல்கண்டிமைதியவெரிந்தழன்று
கருக்குங்கனற்கண்மலரோன்மகன்காய்ந்துநின்றான். ௬

மறைகொண்டநாவின்மறையோரொடுவானநீங்குற்
றிறைகொண்டவும்பரொழக்கண்டுமெழுந்திலனால்
சிறைவண்டுவீழ்கூந்தலென்சின்மொழிமாதைவேட்ட
நறைகொண்டதாரான்செயனன்றுநன்றென்னநக்கான். ௭

இருகூறுசெய்தமதிவாணுதலேழைவாழ
ஒருகூறுநல்குமரவோனையுருத்துநோக்கி
முருகூறுபைந்தாரிமையோர்கண்முகக்கும்வேள்வி
தருகூறுனக்கொன்றிலதாகவெனச்சபித்தான். ௮

எரிமொய்த்தசெங்கண்மறையோனுரைகேட்டெழுந்து
மருமொய்த்தபைந்தார்விறனந்திமடங்கல்வெந்தீ
உருமொத்தழன்றுமறையந்தணரோமவேள்வி
புரிவித்திரந்துபுகன்ஞானமொழிகவென்றான். ௯

குழைக்குங்கடுக்கைத்துணர்ச்செஞ்சடைக்கூத்தனன்பு
பழுக்கின்றபாசுபதர்யாவரும்பண்டைவேள்வி
ஒழுக்கந்தவிர்ந்துமறைதீர்கெனவோங்குசீற்றம்
தழைக்கும்பிருகுமுனியாங்குச்சபித்தல்செய்தான். ௧௦

இத்தன்மையெய்தவழல்வேள்வியிழைக்குங்காலை
முத்தென்றமூரற்கொடிபங்குறைமுக்கணனும்
வித்தின்றியாவும்விளைத்தோனுமவ்வேந்துமேகத்
தத்தம்பதியினடைந்தார்தலைவந்தவானோர், ௧௧

### கலிவிருத்தம்.

உலகமுண்டவனுந்தியந்தாமரை
மலரின்மேயமறைமுதலாயவன்
தலைவனாகியதக்கனுக்காய்கதிர்
நிலவுகாலுநெடுமுடிசூட்டினான். ௧௨

பழுத்தநான்மறைப்பண்ணவர்தம்மொடு
தழைத்தசீற்றந்தலைக்கொண்டுதக்கன்விண்
கிழித்ததிங்களங்கீற்றணிநம்பனை
அழைத்தலின்றியருமகமாற்றுமால். ௧௩

ஒற்றையாழியஞ்செல்வருமொண்ணிலாக்
கற்றைகாலுங்கடவுளுங்கற்பகப்
பொற்றமாலைப்புரந்தரனாதியாச்
சொற்றவெண்மருந்தொக்கனரென்பவே. ௧௪

முறையில்வேள்விமுடிவுபெறுதென
அறிவினாடியவாய்மலரண்ணலும்
மறைமுடித்தலைநின்றமணிநிறத்
திறையுமல்லதையாவருங்குற்றிலார். ௧௫

ஆற்றும்வேள்விக்கரம்பையர்மின்னெனத்
தோற்றிவிண்ணிடைத்துன்னினர்சேறல்கண்
டேற்றினானடியேத்தினள்கிள்ளையின்
சாற்றுதீஞ்சொற்சதிநின்றிறைஞ்சினாள். ௧௬

மாறிலெந்தைமகம்புரிவானதற்
கீறில்வானிடையாவருமேகுவார்
சேறுநாமுமெனவிளைதெள்ளமு
தூறுவந்தண்கிளவியுரைசெய்தாள். ௧௭

கொந்துவார்குழல்கூறுதல்கேட்டலும்
அந்தணாளரமரரவையின்கண்
தந்தையாகியதக்கன்சினந்துரை
நிந்தையாரநிகழ்த்தினனன்றரோ. ௧௮

அருப்புவெம்முலைநங்கையழைக்கிலன்
செருக்கினாலவன்செல்லினுமெள்ளுமால்
விருப்பமின்னதுவிட்டிடல்வேண்டுமென்
றுரைத்தனன்புரமொள்ளழலூட்டினான். ௧௯

அழைத்திலன்னவனாயினுமன்னையும்
தழைத்தகாதற்றுணைவியர்தாமுமோர்
உழைச்செறிந்தனர்காண்பலங்குற்றென
மழைக்கருங்கண்மலர்சிவந்தாளரோ, ௨0

போகவென்னினும்பொன்றுமற்றவ்வழி
ஏகுமேனுமிறந்துபடுமெனா
நாகஞ்சூடியநம்பனிருத்தலும்
தோகைபல்கணஞ்சூழவெழுந்தனள். ௨௧

கிள்ளைகொண்டும்வெண்கேழ்கிளரன்னமென்
பிள்ளைகொண்டுஞ்சிலர்பின்பெயர்ந்தனர்
வள்ளைகொள்ளிளமான்மருணோக்கெலாம்
கொள்ளைகொண்டகுவளையங்கண்ணினார். ௨௨

ஒலிக்கவெண்சங்குருமெனப்பல்லியம்
கலிக்கவண்டகடாகமுடைபடச்
சிலைக்கவந்தாதுந்துபிசென்றனள்
மலைக்கும்வென்றிமழவிடையூர்ந்தரோ. ௨௩

எழுந்தொர்பானிலவோங்கவெறித்திருள்
விழுங்குகற்றைவெயிலொருபாலெழ
முழங்குதெண்கடலார்ப்பின்முதுமறை
தழங்குவேள்வியின்சாலைசென்றெய்தினாள். ௨௪

மாக்கண்வெம்முலைமாதினைக்காணநெஞ்
சேக்கற்றேக்கற்றிருந்ததுணைவியர்
நோக்கிநோக்கித்தந்நோக்கங்களிகொள
மீக்கொள்காதலின்மேவினர்புல்லினார். ௨௫

மன்னுமின்னகைமாதரம்பாவையர்
பொன்னந்தாமரைப்போதுறைசெய்யவாய்க்
கன்னியன்னக்கணமெனச்சூழ்தர
அன்னைபாற்சென்றகங்குளிர்ந்தாளரோ. ௨௬

கூற்றைவென்றகுரைகழற்றாளினான்
கூற்றைமாற்றிக்குலமறைக்கூற்றினால்
ஆற்றுகின்றவருமகங்காண்டலும்
ஆற்றகிற்றிலளங்கழன்றாளரோ. ௨௭

வீடொண்மிளிர்வெண்மதிமாலைமின்
ஓடமின்னியுலறியசெஞ்சடை
சூடிவெய்யசுடலைப்பரப்பினின்
றாடுதேவையறிகிலைபோலுமால். ௨௮

பொன்னிற்றோன்றிறைபூங்கழல்போற்றிலை
நின்னிற்றோன்றுடனேர்கலன்யானெனாத்
தன்னிற்றோன்றுந்தழல்கொடுமெய்சுடர்
மின்னிற்றோன்றினள்வெற்பகத்தென்பவே. ௨௯

கண்டுகண்ணழல்காலக்கணமெழுந்
தண்டகோடியழிகுறுநாளெனக்
கொண்டசூலந்திரித்தடுகூற்றென
மண்டுவெஞ்சமமாடவளைத்தவே. ௩௦

வேதவேள்வியின்வெம்புபிருகுவென்
றோதுமந்தணனேமமொன்றுற்றலும்
காதநான்குகனலுங்கனல்விழிப்
பூதமொன்றுபொடித்தமர்செய்ததால். ௩௧

புகையும்வெம்படைப்பூதத்தினற்கணம்
இகலழிந்திடல்காண்டலுமேகினன்
மகதியாழ்முனிகூறினன்வாண்மதி
முகிழணிந்தமுதல்வற்குமுற்றுமே. ௩௨

சந்தக்கலிநிலைத்துறை.

வடித்தயாழ்முனிவழங்குமுரைவந்துசெவிவாய்
நடத்தலோடுநகைநாணிலவுவந்துசுடரத்
தடித்துநேருமொருசெஞ்சடைபிடுங்கிநிலமேல்
அடித்தனன்கடலளித்தவிடமுண்டவமலன். ௩௩

மணிதயங்குமுடிவான்முகடுமுட்டவரைநேர்
திணிபுயந்திசைகளெட்டையுநெருக்கவெழுதீ
அணிநிறங்கிளரும்வீரனவணின்றுமுளையாப்
பணியென்னென்றுபவன்வார்கழல்பணிந்தனனரோ. ௩௪

மிக்கவேள்வியையழித்துநெடுவேள்விபுரியத்
தொக்கவானவர்தொலைந்திரியமோதிநெறிதீர்
தக்கன்வன்றலைதடிந்திடுதியென்றுரைசெய்தான்
செக்கர்வானொடுசிவந்துபொருசெஞ்சடையினன். ௩௫

ஒன்றொடொன்றுபலவண்டமுமுடைந்திடுவதற்
கன்றுவாளவுணர்வேர்தெறவுமன்றிறைவநீ
சென்றுதக்கனதுசென்னிதுணியென்றுரைசெய்தான்
நன்றுநன்றெனதுவீரமெனநக்கனனரோ. ௩௬

கலிவிருத்தம்.

வெடிக்குநகையார்ப்பினைவெரீஇயிறுதிநாணின்
றிடிக்குமிடியென்றெரிமணிக்குலமிமைக்கும்
முடித்தலைபரப்புபுமுழங்குகடல்வேலிப்
யடிப்பொறைசுமக்குமரவும்பதைபதைப்ப ௩௭

உரைக்குநெய்மணந் துகிணமுண்டொளிருமொள்வாள்
விரிக்குமழலுங்கடைவிழிக்கனலுமொன்றாய்க்
குரைக்குநெடுவாரிதிகுடித்துலகமேழும்
எரிக்கும்வடவைக்கனலெரிந்திடவெரிப்ப. ௩௮

மீயுயர்பொலங்குடுமிமேருவைவெருட்டும்
ஆயிரமணிப்புயமுமஞ்சுடரெறிப்ப
மாயுறலிறும்பைநறுமாலைகள்வயங்கக்
காயுமழனச்சரவகங்கணமிரைப்ப. ௩௯

நெய்ம்முகமணிந்தவெயினேமிகதைவெந்தீத்
தும்முமழுவாளிலகுதோமரமுலக்கை
கைம்மலர்தொறுங்கனலமண்முழவுகார்போல்
விம்மவதிர்தெண்கடலின்வெள்வளைமுழங்க. ௪௰

முக்கணடல்வீரன்வெம்முனைத்திறம்விரும்பித்
தக்கனுரைகின்றவொருசாலையிவணென்னக்
கக்கவழல்கட்கடைகனன்றிதழ்துடிப்ப
நக்கபிறைவாளெயிறதுக்கினநடந்தான். ௪௧

வாளிபொழிவெஞ்சிலைவணக்குமடனந்தி
ஆளிபுரைசண்டன்மணிமானழல்கருங்கட்
காளியொடெழுந்தனர்கணங்கள்பலசென்ற
தூளிபடலம்பரிதிசூழ்வெளிபுதைப்ப. ௪௨

மும்மையுலகந்தருமுதற்கடவுள்செங்கண்
செம்மவெழுதூளிகடிசாமுகமறைப்ப
அம்மவிஃதென்கொலெனவாருமவிவிட்டுக்
கொம்மெனவெழுந்தனர்குலைந்துநெடுவானோர். ௪௩

பொன்விளையுமேனிமயில்பொன்றலின்வெகுண்டு
கொன்விளையெயிற்றபலகூளிபுடைசூழ
மின்விளையும்வாளுருவிவீரன்வருமந்தோ
என்விளையுமோவெனவியம்பினரிருந்தார். ௪௪

அலைக்கடல்கலக்கவெழுமாலமெனவெம்பிச்
சிலைக்கடைகுழைத்துவிழிசெங்கனல்கொழிப்பக்
கொலைத்தொழில்குறித்தெழுகொடிப்படையின்முன்னம்
தலைப்படுசினத்தலகைசாலையினிறுத்த. ௪௫

இறுத்தனமகத்தறியெடுத்தவியைவாயின்
நிறைத்தனமடுத்தனநெருப்பிலகுசாலை
மறத்தினிலறத்துறைவழுக்குமறையோனைச்
கறுத்தவழல்கட்கடைசிவந்தனகணங்கள். ௪௬

வெடித்ததுயரண்டமெனவிண்ணவரைவாரி
அடித்தனவுதைத்தனவரைத்தனவெருட்டிப்
பிடித்தனசுழற்றினபியைந்தனபிழிந்த
கடைக்கனலிவிட்டனகனற்றினகனன்ற. சஎ

விண்ணிடையெறிந்தசிலவிண்ணவரைவாரி
மண்ணிடையெறிந்தசிலமால்வரைமுகட்டும்
தண்ணலையகட்டினுமெறிந்தசிலசாலக்
கண்ணிடைகடைக்கனல்கதழ்ந்தொழுகுபூதம். சஅ

அந்தரமறுத்தொளிருக்கனுமொளிப்பச்
சிந்துமதமற்றனதிசைக்கரிகளோட
மந்தரமுதற்குடுமிமால்வரைகுலுங்க
வெந்திறல்பழுத்தசிலவீரனுமடந்தான். சகூ

வென்றிகெழுவீரனெடுவேள்விமறைவல்லோர்
வன்றகர்படுத்ததிறமானவுயர்தக்கற்
கொன்றுதலையங்கமலர்கொண்டுதிருகாவத்
தென்றலையழற்றிரண்மடுத்துகனிதீர்ந்தான். ருO

கலிநிலைத்துறை.

உலகளந்தெழுந்துயர்ந்ததோளொருகுழையொருவன்
கலிங்கமன்னவன்கதிர்கெழுபல்லுகுத்தென்ன
இலங்குவேள்வியிலிளநகைமுகிழ்த்தசெங்கதிரின்
அலங்குபல்லினையுகுத்தனனலங்கல்வேற்சண்டன். ருக

பிருகுமாதவன்முகத்தெழுமயிரெலாம்பிறங்கு
வரையின்வீங்குதிண்டோண்மணிமான்பறித்தனனால்
அரியவேள்வியிற்சபித்தியென்றவன்முகம்பார்த்த
பரிதிகண்களைப்பிடுங்கினன்பரிதிவேனந்தி. ருஉ

ஆற்றுவெஞ்சமம்வேட்டுவாயழன்றுபோர்வீரன்
சீற்றவாளுமிழ்தீப்படாிறமெலாந்தீந்த
கூற்றந்தன்னெடுகொலைத்தொழில்காட்டிலதோடிக்
காற்றினுக்கிறைகாட்டினன்றன்னுடைக்கடுப்பு. ருங

சினக்கடுந்திரல்வீரன்றன்செய்யகட்கடைகால்
அனற்குவெம்பினனதிர்கடல்படர்ந்தனன்வருணன்
கனைக்கும்வண்டிமிர்கற்பகக்காட்டகங்கலந்தான்
பனைத்தடக்கைவெம்பகட்டயிராபதப்பாகன். ருச

இரிந்துவானவர்யாவருமெறழ்வலியழிந்து
விரிந்ததாமரைமீமிசையிருந்தவனுலகம்
பொரிந்தியுற்றதுபுகறலுமவர்முகநோக்கித்
தெரிந்தான்மறைத்திசைமுகன்செப்பலுற்றனனால். ருரு

## அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

வலிகெழுமொருவனோடுமறலுதல்மாட்சித்தன்றால்
கொலைகெழுசூலத்தண்ணல்கூறவன்கொடுத்திலானேல்
அலர்பசுந்தாரீர்நீவிரவியுணவிருந்ததென்னே
நிலவணிசடையோன்பொற்றாணிழலினியடைமின்சென்றே. ருசு

என்றுசெங்கமலத்தண்ணலிந்திரனாதியாய
மன்றலம்பாரிசாதமாமலர்த்தெரியல்விண்ணோர்
துன்றினர்மருங்குசூழச்சுடர்விடுபசும்பொற்கோட்டுக்
கொன்றையந்தெரியலீசன்குளிர்வரையெய்தினால். ருஎ

நாகமும்புவியும்போற்றநவையின்றிவிளங்கும்வெள்ளி
நாகமொண்கடுக்கைதிங்கணன்னதிதலையிற்பெற்று
நாகமும்புலியுஞ்சூழநலங்கொண்டேருழையும்பையார்
நாகமுமேந்திநின்றநம்பனைப்போன்றதன்றே. ருஅ

விமலமூற்றொளிருமோர்பால்விளங்குசெம்மணிவில்வீச
அமைவுறுஞ்சிகரமோர்பாலணிமரகதத்தேர்பெற்ற
திமையவர்தொழுதுவாழ்த்துமிளநகைப்பவளச்செவ்வாய்
உமையொருபாகத்துற்றவொருவனைநிகர்த்தமாதோ. ருகூ

அவ்வரைமீதுவேழமணிதிகழ்வான்செல்கோட்டு
மைவரைகால்கள்பெற்றுவருவபோல்வருமங்கோர்பால்
எவ்வமின்மகளிர்போலவிளங்குறுமயில்களோர்பால்
கொவ்வையங்கனிவாயார்போற்குயிலிருந்திசைக்குமோர்பால். சு0

ஒள்ளிணர்க்கற்பகங்களுழ்த்தபொற்போதுபோர்த்து
வெள்ளியங்கிரிசெம்பொன்னின்வெற்பெனவிளங்குமோர்பால்
புள்ளினமுரலுஞ்சோலையிருள்படப்பொதுளியோங்க
எள்ளலின்மணிகளந்தவிருளொழித்திலங்குமோர்பால். சுக

களியொடுமெங்குமேவிக்கலந்துறையரம்பைமாதர்
ஒளிவளர்முகமுங்கண்ணுமொண்டுவர்வாயுமென்ன
நளினமுங்குவளைக்காடுநலங்கிளர்குமுதத்தோடும்
அளியுளர்வாவிதோறுமரும்பவிழ்ந்திலங்குமோர்பால். சுஉ

அரும்பிளந்திங்கள்சூடுமண்ணல்செங்கமலக்கையில்
திருந்தெழின்மடமான்பிள்ளைசேர்ந்துவீற்றிருத்தல்காணப்
பொருந்துநாமுமென்னப்பொங்கிமேலெழுதல்போலக்
கருங்கலைதுள்ளுமந்தக்கைலையஞ்சாரலோர்பால். ருங.

விரிசினையாலநீழன்மெய்த்தவசனகனாதி
அருமறைக்கிழவர்சூழவமர்ந்தவானந்தரூபத்
தொருமுதலவனைக்காணுவந்தனரமரர்தாழ்ந்தார்
மரைமலர்ப்பொருட்டுவாழுமறையவன்வழுத்தினானால். சுச

வெண்டிரைகடையவந்துவிளைந்தவெஞ்சீற்றநஞ்சம்
உண்டுமுப்புரங்கள்வெந்தீயூட்டிமூவுலகுங்காத்தோய்
அண்டநீருக்கியாடுமமலநீயருள்செய்கென்னப்
புண்டரிகத்துவாழும்புராதனன்புகழ்ந்துசொல்வான். ௬௫

மொழிந்தவாரமரர்வந்துமுகந்தனயாவும்போக
ஒழிந்திடுமவைமற்றுன்கூறுவந்தருளுய்க்கத்தக்கன்
கழிந்திடுதலையுங்கண்ணுமிலங்குவாயெயிறுங்கையும்
வழங்குவாயென்னமுக்கண்வானவன்வழங்கலுற்றான். ௬௬

தகரின்வன்றலையேதக்கன்பெறுந்தலைதடங்கணற்ற
பகனொருபரிதிக்கண்ணாற்பார்க்கபல்லுக்கவெய்யோன்
நுகரவேள்வியின்கண்மாவேறுங்கவியங்கணுற்றோர்
திகழ்பரிப்பெயர்சேர்தேவர்செங்கையாற்கொள்கவென்றான். ௬௭

இறைவனவ்வாறுகூறவிமையவர்குழாத்தொடாதி
மறையவன்பாவியீசன்றன்னொடுமருவிவீந்த
செறிமயிர்த்தகரின்சென்னிசேர்த்திடலோடுந்தக்கன்
உறுதுயினீத்தவன்போலுய்ந்தனனெழுந்தான்மன்னோ. ௬௮

எழுந்துதன்மாதையுள்ளியிருகணீர்மார்பினூடு
விழுந்துறக்கொன்றைவேணிவிமலனையேத்திவாழ்த்தித்
தொழுந்தகைவேள்விசெய்வான்றுளவணிந்திலகுபைங்கார்க்
கொழுந்தினைமறையாற்கூறிக்குறித்தனன்மனத்தின்மாதோ. ௬௯

இழைக்குமவ்வேள்விவாயினிரும்பனைத்தடக்கையானை
அழைக்கவந்தன்றுகாத்தவருமறைமுதலாநின்ற
குழைத்தபைந்துளவஞானக்கொழுஞ்சுடர்வந்துதோன்ற
வழுத்தினரீசன்றக்கன்மலரவன்வணங்கினோரால். ௭0

இந்திரன்முதலவானோரிருந்தவர்யோகர்சித்தர்
மந்திரமறைகளாதிமருவினருறைவேர்யாரும்
சுந்தரமாயன்பாதந்துதித்தனர்வணங்கிச்சூழக்
கொந்தழல்வேள்விதக்கன்குறைவறவாற்றினானால். ௭௧

மேனையைமணந்துதெய்வவெற்பினுக்குதித்துமாழை
மானின்மென்னோக்கங்கொண்டுமடமயிற்சாயல்வெளவும்
தேனவாமழலையாளைத்திருமணம்புரிந்தான்சென்று
கானுலாங்கைதைவேலிக்கைலையம்பொருப்பன்மன்னோ. ௭௨

காந்தண்மென்முகிழினன்னகதிர்மணிக்கடகச்செங்கை
ஏந்திழையின்பம்விண்ணோர்யாண்டிருநூறுகாறும்
மாந்தினன்கலுழிநஞ்சமடைதிறந்தொழுகும்பேழ்வாய்ப்
பாந்தளுமதியுஞ்சூடும்பவளவார்சடையான்மாதோ. ௭௩

விரிபுனற்கங்கைகொண்கன்வீரியமாற்றலாற்று
உருகெழுதோற்றமேயவொள்ளழற்கடவுளோங்கு
சரவணத்துய்த்தானச்சரவணத்துதித்தல்செய்தான்
முருகவிழ்கமலச்செவ்வாய்முகிணகைமுருகன்மாதோ. ௭௪

ஆவயினான்மீனோறுவர்வந்தன்புமுற்றித்
தீவியமுலைப்பாலூட்டத்திருமுகமாறுகொண்டு
மேவியமடவார்கொம்மைவெம்முலையொருங்குமாந்தி
மூவிருமுகனென்றெல்லாவுலகமுமொழியநின்றான். ௭௫

கோடுயருவிக்குன்றங்கொன்றவக்குருதிவேலான்
ஆடகப்பசும்பொற்குன்றமாமெனப்பணைத்துவீங்கும்
பீடுசால்குவவுத்திண்டோட்பெருவிறலவுணர்த்தேய்த்துப்
பாடல்சாலமரர்சேனாபதியெனவிளங்கினானால். ௭௬

வேதியன்முதுகில்வந்துவிளங்கியபாவன்பொய்யாம்
பேதையைமகிழ்ந்துபுல்லிப்பெற்றனனிடம்பமாயை
மாதிரநிருதிதன்பான்மகவெனவடைந்திரண்டும்
ஓதுலோபத்தினோடுநிக்ருதையையுயிர்த்தவன்றே. ௭௭

மாறிலாலோபம்வந்துமருவுநிந்தனையைப்புல்லக்
கூறியகோபத்தோடுகொலைத்தொழிலுதித்ததம்மா
ஈறில்வெங்கோபமந்தவிருங்கொலைத்தொழிலைச்சேர
வீறிதீமொழியினோடுவெங்கலிபிறந்ததன்றே. ௭௮

உரைத்தவெங்கலிதான்பொல்லாவுரையெனுமாதைச்சேர
மிருத்துவும்பயமுந்தோன்றிவிளங்கினமிருத்துமாதைக்
கருத்துறநடுக்குகின்றகடும்பயமகிழ்ந்துபுல்ல
வருத்தும்யாதனைகளோடுவந்ததுநிரயமாதோ. ௭௯

வெய்யதோர்தோற்றங்கூறின்விரியுமால்விதுரவின்னும்
மையலங்களிநல்யானைமனுவினுக்குதித்தமைந்தன்
செய்யகோல்வேந்தனென்னச்செப்புமுத்தானபாதன்
பொய்யறுமரபுசொல்வலெனமுனிபுகறலுற்றான். ௮௰

இலங்குவாளரசரேறேயிக்கதைசொல்வோர்கேட்போர்
துலங்குவர்நலம்பெற்றென்னச்சுகமுனியுரைத்தானென்று
மலங்கெடத்தவஞ்செய்தோங்குமறைமுனிகுழாத்துக்கைந்தாம்
புலன்களுமொறுத்தசூதன்புகர்தபவுணர்த்தினானால். ௮௧

தக்கன்வேள்வியழித்தவத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧௧௯.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## ௯-வது, துருவன்பதம்பெற்றவத்தியாயம்.

கலிநிலைத்துறை.

முத்தாரமார்பன்முடிமன்னவர்வந்திறைஞ்சப்
பைத்தாடரவஞ்சுமைகூர்சடற்பார்பரித்தான்
கொத்தாரலங்கற்குளிர்வெண்குடைக்கோதைவெள்வேல்
உத்தானபாதனெனவோதுமுலங்கொடோளான். ௧

வெடிக்கும்புதுநாண்மலர்வேய்ந்தகில்விம்மிவேலை
குடிக்குங்கமஞ்சூழ்குலமாமுகில்வென்றகூந்தற்
றொடிக்கைச்சுநீதிசுடர்பொற்குழைமேலடர்க்கும்
வடிக்கட்சுருதியெனுமங்கையர்தோண்மணந்தான். ௨

வரையுற்றசாயன்மயிலன்னசுநீதியென்னும்
தெரிவைக்குதித்தான்றுருவன்செருவென்றசெவ்வேல்
அரசற்கமுதாயலர்தாமரையன்னமொத்த
சுருதிக்குமன்றற்றொடையுத்தமன்றோன்றினால். ௩

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மத்தமாக்களிற்றுமன்னன்மாமணித்தவிசின்மீது
கத்திகைக்கருமென்கூந்தற்கன்னியர்கவரிவீசத்
தித்தியாநின்றதெய்வத்தெள்ளமுதனையதீஞ்சொல்
உத்தமன்குறங்கின்வைகவுவந்துவீற்றிருந்தானன்றே. ௪

வண்டுளர்தெரியல்வேந்தன்மாமணிக்குறங்கினேறி
ஒண்டொடியுடுத்தசெங்கையுத்தமனுறைந்தசெவ்வி
கண்டனன்றுருவன்றானுமேறுவான்கருதிநண்ணத்
தொண்டையங்கனிவாய்வேற்கட்சுருதியாங்கியம்புவாளால். ௫

கோற்றொடிப்புதல்வநீயெங்கோவிளங்குமரனென்று
மாற்றவள்வயிற்றின்வந்தாய்வரத்தினென்வயிற்றின்வந்து
தோற்றுதல்புரிநோன்பில்லாய்சொரிமதக்களிறுசாய்க்கும்
ஏற்றிளஞ்சிங்கமன்னான்குறங்கினென்னேறுமாறே. ௬

காதலவுலகமெல்லாங்கவிக்கும்வெண்கவிகைச்செங்கோற்
கோதைவேற்றடக்கைவேந்தன்குறங்கினீயேறவேண்டின்
தாதலர்கமலச்செல்விதலைவனைநோக்கிநின்று
மாதவம்புரிந்துவந்தென்வயிற்றிடைப்பிறத்தியென்றாள். ௭

இழைபுனைமருங்குறேய்க்குமிளமுலைமடந்தைமாற்றம்
அழல்விடமுகுத்தாலென்னவஞ்செவிநுழைதலோடும்
விழிமலர்சிவப்பநெஞ்சின்வெகுளிவந்தரும்பமைந்தன்
மழைமதக்களிற்றுமன்னன்வாண்முகநோக்கலுற்றான். ௮

செஞ்சிலைத்தடக்கைவேந்தன் றிருமுகத்தருளுங்காணான்
அஞ்செவிவெதும்பநங்கையறைந்தசொற்காற்றனாகிக்
கஞ்சநாண்மலரைவெல்செங்கண்ணிணைமாரிகால
மஞ்சனுங்கன்னைபாற்போய்மணியிதழ்துடிப்பநின்றான். ௯

தன்னிளங்குழவிசெங்கட்டாமரைதழைத்தமுத்தம்
பொன்னணிந்திலங்குமார்பிற்பொழிதரநிற்றனோக்கி
என்னுயிரென்கணேந்தாவென்னைநீயழுங்கவென்னா
மின்னுயிர்த்தொளிரும்பைம்பூண்மெல்லியன்வினவினாளால். ௰

பட்டமைகண்டோர்கூறப்பசுஞ்சிறைக்கிள்ளையன்னாள்
விட்டெரிகின்றகாட்டுவெங்கனல்படர்ந்துமுற்றிச்
சுட்டவெப்புண்டபொன்னந்துணர்க்கொடிபோலவாடி
நெட்டுயிர்ப்பெறிந்துசெங்கணித்திலஞ்சிந்திநின்றாள். ௧௧

குதலைதெள்ளமுதிற்றேனிற்கொண்டமென்பவளச்செவ்வாய்
மதலைநல்வினையிலேன்புல்வயிற்றகம்பொருந்திவந்தாய்
விதலையுற்றிரங்கல்வேண்டாவிளைந்ததண்ணளியிற்காக்கும்
முதலைவாயும்பகல்காத்தமுழுமுதற்கடவுண்மாதோ. ௧௨

ஐதெழிலமுதின்சாயலாயிழையுரைத்தவாறே
மைதபமனத்தினோர்ந்துவழுத்தினர்விழைந்தநல்கும்
நெய்தவழ்நேமியானைநினைத்தனைதவநின்றாற்றி
எய்தரும்பதமேமைந்தவெய்துதிகலங்கலென்றாள். ௧௩

பனிமலரண்ணலோங்குபதத்தினையடைந்தவாறும்
மனுமிகச்சிறந்தவாறுமாயனைக்கருதியன்றே
தனையநீகங்கைபூத்ததாமரைத்தாளிணையை
நினையினென்னெய்தாதென்னாநெஞ்சகந்தெருட்டினாளால். ௧௪

கிளிக்குலங்கடந்துதேனிற்கிளைத்தநீங்குதலையன்னை
தெளிக்கவம்மைந்தனெஞ்சுதெள்ளிதிற்றெளிந்தானாகி
நளிச்சினைக்குரவங்கோங்குநாகமுமகருமோங்கிக்
களிச்சுரும்பிமிர்பூங்கானங்கலந்தனன்றவஞ்செய்கிற்பான். ௧௫

விடம்பொழிவென்றிவேற்கண்விளங்கிழைமடந்தைமாற்றம்
கிடந்துளங்கனற்றவம்பொற்கிங்கிணிகவைஇயதாளான்
நடந்தனன்சென்றகாலைநாரதன்வந்துநண்ணித்
தடங்கையங்கமலமைந்தன்றலைமிசைச்சார்த்திச்சாற்றும். ௧௬

பருவமைந்திறந்தில்லைபாலனீதவமெவ்வாறு
புரிதிமாதவத்தோரின்னம்புலப்படக்காணமாட்டாக்
கரியவன்றன்னையாங்குக்காணுதிகதழுஞ்சீற்றத்
திருகுமாவழங்குகானஞ்செல்வதுசெவ்வித்தன்றால். ௧௭

தாழ்பவர்தம்மைக்காணிற்றலைநிவந்திருத்தல்வேண்டும்
ஊழ்வினைவிளைவிற்செல்வமுயர்குநர்தம்மைக்காணின்
வாழ்கலம்யாமுமென்னாவலித்தலோர்மாட்சித்தன்றால்
எழுயர்களிநல்யானையின்னிளங்கன்றுபோல்வாய். ௧௮

எனப்பலமுனைவன்கூறவிளநிலாக்கற்றைதூற்றும்
பனிப்பிறைக்கொழுந்துபோலும்பச்சிளங்குழவிகேட்டு
வினைக்குறும்பெறிந்தோய்நின்சொல்விழுமிதேயெனினுமின்றென்
மனக்கினிதாயிற்றில்லைமற்றெவன்செய்யுமாறே. ௧௯

சேயுயர்பதத்தினேறவேட்டனனதற்கென்செய்கோ
தூயமாதவத்தோயென்றுதொழுதலுமகிழ்ந்துபுல்லித்
தாயெடுத்துரைத்தவாறேதவத்தினைநிரப்புகென்னா
வாய்மலர்மலர்ந்துநல்யாழ்வடித்தவன்வழங்கலுற்றான். ௨௦

மாறிலாமதுரையோர்சார்மதுவனமொன்றுண்டாங்குத்
தேறுநீர்யமுனையாடித்தெண்டிரைக்கங்கைவெள்ளம்
ஊறுதாட்பரமன்றன்னையுணர்ந்தனைதவஞ்செய்கென்னா
ஆறிரண்டெழுத்துமைந்தனஞ்செவிநிரப்பினானால். ௨௧

சிந்துரத்திலகந்தைஇயதிருநுதன்மலராள்கொண்கன்
மந்திரங்கேட்டமைந்தன்மனமிகத்தெருண்டானாகி
அந்தளிரனையவஞ்சீறடியிணைசிவப்பவேகிப்
பைந்தளிர்குழைத்தவெங்கான்பைப்பையப்படர்ந்துசார்ந்தான். ௨௨

தீத்திரள்வளைஇயகானஞ்சேட்டிளங்குழவிசெல்லப்
பார்த்தனனிருந்தேனென்னபாவமென்றுருகிஞாலம்
காத்தல்செய்கவிகைமன்னன்கவன்றனனிருந்தான்றன்பால்
ஆர்த்தவின்னரம்பினல்யாழருந்தவனணுகினானால். ௨௩

கவலனின்புதல்வற்கண்டேன்காவலகண்ணன்காக்கும்
தவமினிதிழைத்துமைந்தன்றலைப்படும்வரம்பெற்றென்னாச்
செவிகவர்மகதிநல்யாழ்ச்செல்வனாங்ககன்றான்செல்வத்
துவகையுற்றிலனாற்சேயையுணர்ந்துவேந்துள்ளமாழ்கும். ௨௪

ஏர்விளையாடுதோளினெழுதுதீங்கரும்புமம்பொன்
வார்விளையாடுகொம்மைவருமுலைச்சாந்தும்போக்கி
நீர்விளையாடுமாதர்நிலாச்செறிதூசுகொண்ட
கார்விளையாடுகாவிற்கலந்தனன்றுருவன்சென்றே. ௨௫

விண்ணுலாம்பரிதியீன்றவிரிதிரைநதிநீராடி
மண்ணெலாமளந்தபொற்றாமரைமலரன்னபொற்றாட்
கண்ணனைக்கண்ணுள்வைத்துக்களியளிசிலம்பவிள்ளும்
தண்ணனைகமழ்பூங்காவிற்றவஞ்செயத்தொடங்கினானால். ௨௬

ஒருமதியிரண்டுவைகலொழிந்துதீங்கனிநுகர்ந்தான்
ஒருமதியாறுவைகலொழிந்துவீழ்சருகுதின்றான்
ஒருமதிவைகலொன்பானொழிந்துதண்டுறைநீருண்டான்
ஒருமதிவைகலீராறொழிந்துகால்பருகினானால். உஎ

திங்கணான்கிவ்வாறேகத்திங்களிற்றிகழாநின்ற
அங்கலுழ்முகத்தானொன்றுமருந்தலனைந்தாந்திங்கள்
பொங்குமூச்சடக்கிமென்பூப்பொருவுதாள்விரலொன்றூன்றிக்
கங்கைசூழ்கழற்பெம்மானைக்கருதினன்றவம்புரிந்தான். உஅ

திருவயிற்றுலகெலாமாழ்செல்வனெஞ்சுறலான்மைந்தன்
ஒருவிரலூன்றிநின்றானாயினுமுரவுத்தெண்ணீர்
இருநிலம்பொறுக்கலாற்றாதெறிகதிர்முத்தஞ்சிந்து
பொருதிரைப்புனலிற்பட்டபுணையெனவலைந்தன்றம்மா. உகூ

ஊழிவெம்பரிதியுட்கவொளிசெய்செங்கதிராலொற்றை
ஆழியந்தடக்கையம்மானகமிசையமர்ந்தவாற்றால்
தாழிருந்தடக்கைநம்பிதவக்கனறவாதுபொங்கி
எழிரும்பாவைவேலியிருநிலங்கனன்றதாமால். நO

ஆவயிற்றுருவன்றன்மூச்சடக்கியதிறத்தினாலத்
தேவருமுயிர்க்கலாற்றார்தெருமந்தார்தெருண்டுமொய்த்துக்
காவலகாத்தியென்றுகண்ணனையடைந்துகூறப்
பூவுறைவிரிஞ்சன்றன்னைப்பூத்தவன்புகலலுற்றான். நக

விட்டிலன்றுருவன்மூச்சுவிழுத்தவம்புரிதலானே
முட்டியதுமக்குமாங்கேமூச்சுநாங்காத்துமென்னா
மட்டறுவேதமேனிவரிச்சிறைப்புள்ளின்மேற்றிக்
கெட்டுநல்லுருவக்காந்தியெறிதரவேகினானால். நஉ

நெடியவன்முன்னம்வந்துநிற்பதுநிகழ்த்தலாக
ஒடிவறுதவத்தின்மைந்தன்காண்கலனாகவுள்ளம்
சுடர்தனதுருவத்தண்ணந்துளவினான்கரத்தலோடும்
கடிகமழ்கமலமன்னகண்மலர்விழித்தான்மன்னோ. நந

மண்டலநிறைந்ததிங்கள்வதனமுங்கமலக்கண்ணும்
குண்டலஞ்சுடருங்காதுங்குறுநகைப்பவளவாயும்
தண்டுழாயலங்கன்மார்புந்தடக்கையோர்நான்குமாகக்
கண்டனன்மறையுங்காணாக்கரியவனுருவமம்மா. நச

பருகுவான்போலநோக்கும்பங்கயக்கண்ணெம்மானை
இருகையாற்புல்லுவான்போலெய்திடுமிறைஞ்சாநிற்கும்
உருகுநெஞ்சுவக்குங்கண்ணீருகுக்குமுளமுழங்குந்துள்ளும்
முருகனானுவகைவேலைமூழ்கினன்றுளைவான்மன்னோ. நரு

அவிர்மணிச்சுடிகைநெற்றியண்ணல்வாளரவமேந்தும்
குவலயம்போற்றும்வேந்துக்குழவிதன்மணிக்கபோலம்
பவளவாய்ப்பச்சைமேகம்பங்கயச்செங்கைதாங்கும்
தவளவெண்சங்கினாலேதகைபெறத்தடவாநிற்கும். ௩௬

பொழிசதிர்மதியைவென்றபுரிவளைகொண்டுபொங்கித்
தழையுநல்லெழிற்கபோலந்தைவருதிறத்தினாலே
மழலைவாய்ச்சிறுவன்வாக்குமலிந்தெழமகிழ்ச்சிகூர்ந்து
பழமறைபழிச்சமாட்டாப்பரமனைப்பாவலுற்றான். ௩௭

தாமரைப்பொகுட்டுவாழுந்தழைசிறையன்னமன்ன
தாமரைத்தலைவிகொண்கதரைமகள்கொழுநவுந்தித்
தாமரைபெற்றெடுத்ததனிமுதனினதுசெங்கட்
டாமரையருள்பெற்றன்றோதந்தனனுலகந்தானே. ௩௮

தண்டுழாய்மாலைமார்பதாமரைக்காடுபூத்த
கொண்டலேவிளங்குநீலக்குன்றமேநினதுபாத
புண்டரிகங்களல்லாற்போதுதாயிறைஞ்சப்பெற்றார்க்
குண்டுகொலுயர்வீட்டின்பமுறுதிதுமெய்ம்மைத்தாமால். ௩௯

பொற்றபூந்தருவைக்கண்டும்பொற்பிலதொன்றுவேட்டுப்
பெற்றதேபோலுமன்றேபெறலருமுத்திநல்கும்
ஒற்றையந்திகிரிச்செங்கையொருமுதானின்னைக்காணூஉ
மற்றொருபொருளைவேட்டுப்பெறுவதுமதிக்கினம்மா. ௪0

வேறு.

வானேவளியேவயங்கெரியேவனமேமண்ணேயிவ்வைந்தின்
ஊனேயுயிரேயுயிர்க்குயிரேயுன்னுமுறுவருளத்தூறும்
தேனேநங்கள்பெருவாழ்வேசிவனேயயனேயிருவருக்கும்
கோனேநின்னைக்குணமில்லேன்குறித்தென்சொல்லிப்பழிச்சுகோ. ௪௧

மூவாமுதலேமுத்தொழிலுமூவராகியினிதியற்றும்
தேவாதேவர்சிகாமணியேசிந்தாமணியேதெள்ளமுதே
நாவானின்சீரெங்ஙனம்யானவில்கோவென்னநகைமுகிழ்த்துப்
பூவாற்பொழில்பூத்தருளுந்திப்பூவைவண்ணன்புகலுகிற்பான். ௪௨

மின்னுஞ்சுடர்சான்றழல்குடுமிவெள்வேலரசகுமரவுணர்ந்
தின்னும்பொலந்தார்முடியமரரெய்தற்கேக்கற்றிருப்பதுயர்
பொன்னங்கிரியினுச்சிமிசைப்பொலிவதுலகின்மேலதென்றும்
மன்னப்படுவதொருபதம்யாந்தருதும்வாழிமற்றுனக்கே. ௪௩

கடாங்கவிழ்க்குங்கலுழிமதக்கடவுட்களிறுமொளிறுகதிர்
சொரியுமருமாமணிச்சூட்டுத்தத்தியரவுஞ்சுமந்தநிலம்
இருபத்தாறாயிரம்பருவமெழில்வெண்கவிகைதனிநிழற்றித்
துருவப்பதநீயடைதியெனத்தொன்மைமுதல்வனசன்றனனால். ௪௪

நஞ்சுகுழுமியெழுவேற்கணங்கையுரைத்தவுரைகிடந்து
நெஞ்சுசுடநீள்பதம்வேட்டுநின்றேனெகிழ்ந்ததாமரைக்கண்
மஞ்சைக்கண்டுங்கேட்டிலமான்முத்தியென்றுமகிழ்கூரான்
துஞ்சலில்லாச்சுடர்மணிப்பூட்டொடிக்கைத்துருவனகர்சார்ந்தான். ௪௫

வந்தான்றுருவனெனலோடும்வாராமகிழ்ச்சிவந்தெழத்தேன்
சிந்தாநின்றமென்மழலைச்சிறுவன்வரவுசாற்றினர்க்கு
மந்தாகினிபொன்வரைதவழுமாட்சிபோலமருவுயிர்க்கும்
அந்தாரகலத்துயல்வருபூணாரங்கொடுத்தானரசெழுந்தான். ௪௬

கதலிநிரைத்துமுத்தணிந்துகனகமணித்தோரணம்புனைந்து
மதியந்தொடவானெழுந்துயர்ந்தமாடம்புதுக்கிமருக்கமழ்ந்து
புதுமட்டொழுகுங்கற்பகப்பூம்புனையல்வளைந்துபுரந்தரன்றன்
பதியென்றுணரநகர்துலக்கிப்பாவைபெனயாவருந்தொடர. ௪௭

வேந்தர்வணங்குமுழவதிரவெண்சங்கலறவுத்தமனும்
சேந்தமலர்த்தாட்டேவியருஞ்செம்பொற்சிவிகைமேலெய்திக்
கூந்தற்பரித்தேர்கடிதோட்டிக்குழவிஞாயிறொளிமழுங்கக்
காந்திதழைத்துவருகின்றகாமர்ப்புதல்வன்றனைக்கண்டான். ௪௮

உருகுகாதலுளந்தளிர்ப்பவுவகைபெருகுற்றலையெறிய
இருகைகூப்பித்தொழுதிறைஞ்சுமிளவாண்முறுவற்காதலனைப்
பருகுவான்போனோக்கியொளியரப்புதொடித்தாமரைக்கரத்தால்
முருகுகமழமுகந்துச்சிமோந்தான்விழிநீராட்டினன். ௪௯

கள்ளக்கருங்கட்சுருதியைச்செங்கையாற்றுருவன்றொழுதிறைஞ்சப்
பள்ளத்தொழுகுதண்புனல்போற்பழுக்குமன்புதலைமணப்ப
உள்ளத்துவகைகூர்ந்தனளவ்வொழுகுகொடிநுண்ணிடைமாது
வள்ளற்கமலைகொண்கனருள்வாய்த்தாலாரேயுவவாதார். ௫௦

இலைப்பூங்கண்ணியெழிற்றுருவனீன்றவன்னைசெங்கமல
மலர்த்தாள்பின்னர்த்தொழுதிறைஞ்சவாரியணைத்துக்குறங்கிருத்திக்
கலைப்பான்மதிவாண்முகமலர்ந்தாள்கலுழ்ந்ததுவகைத்தடங்கண்ணீர்
முலைப்பாலூறிவழிந்ததிளமுல்லைமுகவாணகையாட்கே. ௫௧

காலக்கதிர்வேலுத்தமன்பொற்கடகக்கையாற்றழீஇக்கொள்ள
நீலக்களிற்றுநிலவேந்தர்நின்றுபணியவளைமுழங்கக்
கோலக்கடிமாநகருவப்பக்கூந்தற்பிடிமேலினிதேகி
மாலைக்குழவிமதிபோலமன்னன்குழகன்வந்தனனால். ௫௨

காளைப்பருவங்கனிந்திடலுங்கதிர்வேற்றடக்கைத்துருவனுக்கு
வாளக்கிரிசூழுலகேழுமதிவெண்கவிகைதனிநிழற்றி
ஆளக்கதிர்மாமுடிசூட்டியழற்கானடைந்துதவம்புரிந்தான்
பாளைக்கமுகம்படப்பைசெறிபழனத்திருநாடுடையோனே. ௫௩

### கலிவிருத்தம்.

எழிரும்பொழில்வாழுமிலங்குவேற்
பாழிமன்னர்பணிந்துதிறையிடச்
சூழியானைத்துருவன்விரிதிரை
ஆழிசூழ்நிலமாழியொன்றுய்யத்தனன். ௫௪

தேமலர்க்கணைசிந்துவரிச்சிலை
காமனன்னவக்காளைமுதலையின்
நாமமேயவிதிதருநல்லெழிற்
பூமியென்னுமொர்பூவையைவேட்டனன். ௫௫

அன்னமென்னடையந்நுண்மருங்குலாள்
பொன்னங்குன்றுறழ்பூண்முலைபுல்லிய
மன்னன்கற்பன்வயங்கியவற்சான்
என்னுமைந்தரிருவரையீன்றனன். ௫௬

எறிவளிக்கிறையீன்றவிடையெனும்
நறுமலர்க்குழனங்கைமணம்புணர்ந்
துறுவனப்புடையுற்கலனென்னுமோர்
சிறுவற்பெற்றனன்றேங்கமிழ்தாரினான். ௫௭

### வஞ்சிவிருத்தம்.

ஓடையானையுத்தமன், ஆடல்வாளரக்கால்
வீடினான்விரிந்தபூங், காடகங்கலந்தரோ. ௫௮

வேட்டமாடவேகிவெங், காட்டிறத்தல்காணவோர்
நாட்டமாய்நடந்துதாய், ஊட்டழற்குலந்தனள். ௫௯

நிருதராணிலச்செய்பூண், உருவமார்பினுத்தமன்
இருவிசும்பினேறவேற், றுருவனன்றுசூழ்ந்தனன். ௬0

தாரரக்கர்தன்மையான், வேரறுத்துமீள்வனென்
றூரமர்க்கெழுந்தனன், தூரியந்துவைப்பவே. ௬௧

எழுயர்ந்தவீங்கவுள், வேழம்வெற்பினீண்டன
பாழியுற்றபச்சைமா, ஆழியொத்தடைந்தவே. ௬௨

போர்வயப்புலிக்குழாம், பாரின்மேற்பரந்தன
வீரர்மொய்ப்பவெய்யபொற், றேரிவர்ந்துசென்றனன். ௬௩

எழிற்குபேரனின்னகர்க், குழைப்படர்ந்துருத்திட
முழக்கினான்முரண்கொள்போர், தழைக்கநின்றசங்கமே. ௬௪

வில்லெடுத்தவீங்குதோள், கல்லெனக்கவின்பெறச்
செல்லெனத்திரண்டனர், வல்லரக்கர்வந்தரோ. ௬௫

பாறலாவுபல்படை, வேறுவேறுவீசிவந்
தேறினரையெய்துபோர், நூறிநூழிலாட்டினன். ௬௬

வாரிவந்தலைத்திடச், சோரிவிண்சொரிந்திடப்
போரினிற்புணர்ந்தனர், நேரிலாநிசாசரர். ௬௭

மாயவல்லரக்கர்தம், மாயமல்கிடாதுபோய்
மாயமன்னர்மன்னவன், மாயன்வாளிசிந்தினன். ௬௮

எழுசீர்க்கழிநெடி லாசிரியச்சந்தவிருத்தம்.

கிரியோடெதிர்ந்தகரிமத்தகங்கள்கிழியப்பிளக்குமிகல்வாள்
அரியேறுபோலவிருகண்சிவப்பவடல்கொண்டசாபம்வளையா
விரிதாரரக்கர்நுதல்கீறவெய்யவிசிகந்தெரிந்துசொரியும்
மருமாலைநம்பிபொரலென்றுகொற்றமனுவந்துநின்றுபுகல்வான். ௬௯

சிலர்காலமென்பர்சிலர்கன்மமென்பர்சிலரீசனென்பர்சிலர்தாம்
நிலையாதகானலுறுநீரதென்னநிகழ்மாயையென்பர்மதுவார்
மலர்வாளிகொண்டமதனுக்குமென்பர்வாற்சாயனாதிசிலர்தாம்
நலனோடுதீயபலனுமவற்றைநணிகொண்டுவந்துவிடலே. ௭௦

விளையாதவொன்றும்விளையாதுவந்தவினையூழின்வந்தவிளைவே
உளமாநடத்துதிறலுத்தமன்றனுயிரோரரக்கனுணரீ
வளையாழிவேலிவலயத்தரக்கருயிர்யாவும்வௌவலறனே
அளிகோடியாடுதொடைமார்பவென்னவமர்விட்டுநின்றுதொழுதான். ௭௧

மன்னற்குமன்னனெதிர்சென்றிறைஞ்சமனுவிட்டகன்றபொழுதே
மின்னிற்றிகழ்ந்துசுடர்கால்விமானமிசையேகுபேரனணுகாக்
கொன்னுற்றகொற்றவடிவேலரக்கர்கொலைசெய்ததில்லையதுதான்
முன்னுற்றுநின்றவினையாகுமண்ணன்முனியற்கவென்றுமொழிவான். ௭௨

விழைவுற்றுநின்றவரம்யாவதேனும்விரிதாமமார்பதருகேன்
மொழிகிற்றியென்னமுருகுற்றலர்ந்தமுளரிக்கரங்கள்குவியா
அழலுற்றவாழிதிகழ்செங்கையண்ணலருளல்லதென்கொல்பெறுமா
றெழில்பெற்றசெல்வமெனவன்னதாகவெனவேகினனுண்மகிழ்வான். ( )

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

முருகவிழ்கோதைமாதர்முலையுழநெகிழ்ந்தபைந்தார்த்
துருவன்மீண்டாழியானைத்தொழுதுபல்வேள்விமுற்றிப்
பருவமோரிருபத்தாறுயிரமெழிற்பரிதியன்ன
ஒருதனித்திகிரியெல்லாவுலகமுமோச்சினனால். ௭௪

வாங்கியவரிவிற்செங்கைமைந்தனையவனிகாப்பத்
தேங்கமழ்தெரியல்யாலைச்செழுங்கதிர்மௌலிசூட்டி
வீங்குநீர்விசாலையெய்திவிழுத்தவம்புரிதல்செய்தான்
ஓங்குவான்மாரிகாத்தவொருவனையுளத்தினைத்தே. ௭௫

உருளுறப்பசும்பொற்றிண்டேரூர்ந்தெழுகதிர்களெல்லாம்
வெருளவிட்டொளிசெயொண்கேழ்விழுமணிகிடந்தமார்பன்
அருள்பெறுசுநந்தநந்தரவ்வழிக்குறுகினாரால்
இருளயிறிங்கள்போலவிமைக்குமோர்விமானங்கொண்டே. ௭௬

ஒருதனித்திகிரிமாயனொளிவிசும்படையல்வேண்டும்
வருகநீவருகவென்றுவழுத்தினர்கூறலோடும்
எரிகதிர்ப்பசும்பொன்போலவெவ்வெலாத்திசையுங்காந்தி
விரியுமோருருவுகொண்டுவிமானமீதிவர்ந்தான்மன்னோ. ௭௭

மன்னனுங்கீன்றதாயைமனத்தினினினைப்பமன்னன்
உன்னியதுணராவன்னோரொருமுதலன்பருய்க்கப்
பொன்னெடுவிமானமூர்ந்துபோகுழிவிசும்பின்மேலுன்
அன்னையுஞ்சேறல்காண்டியரசவென்றியம்பினாரால். ௭௮

புயல்கிழித்தெழுமந்தாரப்பூந்துணர்முருகுவீசும்
வியலிருவிசும்புவிட்டுவெய்யவன்பதத்தைநீங்கி
உயர்மதிமண்டிலத்தையுவப்புறக்கண்டுவிண்ணோர்
வயின்வயினலர்தூய்வாழ்த்தவான்பதங்குறுகினானால். ௭௯

உகாதொருஞான்றும்விண்ணத்தோங்கியபதங்கடம்மை
நகாவொளிகிளைத்துநின்றநனந்தலையுலகுக்கெல்லாம்
சிகாமணியென்னச்சேணிற்சேயுயர்பதத்திற்சென்று
புகாவிளங்கினனவ்வேந்தன்புகழெவர்புகலற்பாலார். ௮௦

துளிமதுக்கமழ்பூங்கண்ணித்துருவன்வானிலவுதூற்றும்
ஒளிமுடிகவித்தமைந்தனுற்கலனாழிபான்மேல்
விளைவுறுமனனாயெல்லாம்வெறுத்தனனாகவன்னோன்
இளவல்வற்சான்றான்காத்தானேழிருபொழிலுமாதோ. ௮௧

ஒழிவிலாவூழியூழியுலைவிலாப்பதஞ்சென்றுற்ற
அழிவில்சீர்த்துருவன்காதையஞ்செவிநிரப்பப்பெற்றோர்
விழுநிதிக்குப்பையெய்திவெண்ணகைக்கனிவாய்மைந்தர்
மழலையந்தேறன்மாந்திமகிழ்ந்துவீடெய்துவாரால். ௮௨

நீதறநோற்றுநின்றசெஞ்சிலைவிதுரவென்ன
மாதவன்மயித்திரேயன்வழங்கியவாறுதண்ணந்
தாதலர்கமலச்செங்கட்சதுமறைவியாதன்மைந்தன்
மேதகுவிண்டுராதன்வியப்புறவியம்பினானால். ௮௩

துருவன் பதம்பெற்றவத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௨௦௨.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## சஉவது, பிருதுமன்னன்கதையுரைத்தவத்தியாயம்.

கலிவிருத்தம்.

மதுமணக்குமலர்த்துளவோனெனும்
அதிர்கடற்புவியாண்ட பிருதுமன்
கதையுனக்கிவட்கட்டுரைப்பேனென
விதுரனுக்குமுனிவன்விளம்புமால். க

துகளிலாததுருவனளித்திடு
மகவுவற்சரன்மார்பகம்புல்லிய
திகழுநல்லெழிற்சேட்டையெனுந்திரு
இகலிலாவிருமூவரையீன்றனள். உ

மருவுவற்சரன்மைந்தராறவருள்
பொருவிலாதபுட்பாருணனென்பவன்
பிரபைதோடையெனப்பெயர்பெற்றிடும்
இருவர்காதலிளநலமாந்தினன். ௩

விரைசெய்தாரணிமென்குழன்மேனறை
பெருகுகாதற்பிரபையளித்தனள்
கருதுகாலைகவின்செயுமுச்சியோ
டுரைசெய்மாலையின்பேருறுவோரையே. ௪

நேசமார்பிரதோடனிசிமணம்
வீசுதாமவியுட்டியெனப்புவி
பேசுபேரொருமூவரைப்பெற்றனள்
தூசுலாமிடையாளெனுந்தோடையே. ௫

இகல்வியுட்டியென்பான்வடசொல்லினுட்
சகலகாந்திக்குறும்பெயர்சார்ந்திடும்
மகவையீன்றனன்மற்றவன்மைந்தனும்
புகலும்வேற்கைப்புகழ்மனுவேந்தனே. ௬

மனுவெனும்பெயர்பெற்றவன்மைந்தராம்
புனிதமார்புருகுச்சர்முதலினோர்
அனையபன்னிருவோரிலரசனும்
முனிவிலானருண்முற்றியவுன்முகன், ௭

வாழியுன்முகன்மாதவத்தாற்பெறும்
ஆழிமைந்தராறவரம்மைந்தரின்
ஆழிசூழுமகனிலமேழினும்
ஆழியொன்றுசெலுத்தினனங்கனே. ௮

வந்தவாதிமனுமுதலாகவீர்
ஐந்தென்றேறுதலைமுறையானங்கன்
விந்தைசேர்புயன்வேட்டனன்வாண்முகம்
இந்துநேருஞ்சுநீதையையென்பவே. ௯

கொங்குதேர்ந்தளிகூட்டுணாநாண்மலர்த்
தொங்கன்மாலைத்துருவன்வழிவரும்
திங்கள்வெண்குடையான்செய்யகோலினன்
அங்கனென்பவனாற்றினன்வேள்வியே. ௧௦

ஆற்றும்வேள்விச்சொரியவியங்கையால்
ஏற்றிலார்வந்திமையவரென்றலும்
மாற்றருந்திறன்மன்னவன்காரணஞ்
சாற்றுவீரெனவந்தணர்சாற்றுவார். ௧௧

பிள்ளையில்லவர்பெய்யவியானவர்
கொள்ளலார்பைங்குழவிபிறந்திட
உள்ளவாறினிதோமம்புரிகெனப்
புள்ளுயர்த்தவற்போற்றிப்புரிந்தனன். ௧௨

மின்னிலங்குதொடியன்வெண்டுசினன்
பொன்னந்தாரினன்பொற்கலமீதுபால்
அன்னமேந்தியொருவனழலிடைத்
துன்னுசோதிதுவன்றுறத்தோன்றினான். ௧௩

பரவைவெண்டிரைப்பட்டவமுதினைப்
புரையுமன்னதுபொற்றொடித்தேவிபால்
அரசுநல்கவருந்தினள்சூற்கொளா
விரைசெய்பூங்குழல்வேனனையீன்றனள். ௧௪

காதன்மைந்தன்வளர்ந்துகலைபல
ஓதவோதவுணர்வுகுறைந்தனன்
வேதநீதியொழுக்கம்விடுத்தனன்
ஆதியாறவறம்பிழைத்தானரோ. ௧௫

அன்னைகூற்றின்மடமகளாதலால்
இன்னதன்மையனாயினனேழ்புவி
துன்னுகீர்த்தித்துருவனெனப்படும்
மன்னர்மன்னன்மரபினிற்றோன்றினான். ௧௬

மழகளிற்றுமருவலர்போர்கடந்
தழலும்வேற்படையங்கனறநெறி
ஒழுகுசேயையுயிர்த்திலமென்றிரும்
பொழிலிரங்கப்புகுந்தனன்கானகம். ௧௭

வரிச்சுரும்புவழிமதுமாந்தவாய்
விரிக்கும்பூந்தொடைவேந்தர்திறையிடக்
குன்றக்கும்வேலைமண்கொண்டுகொழுநிதிச்
செருக்குமிக்கனன்செஞ்சிலைவேனனே. ௧௮

உறைந்துதேவாவியுணநான்மறை
அறந்தெரிந்தவாற்றுநல்வேள்வியைத்
துறந்துபோமெனச்சொன்முரசெற்றியே
மறந்தவாதவன்மாற்றுவித்தானரோ. ௧௯

வீங்குமாதவர்வேள்விசெய்தாணனி
ஓங்குவேந்தருயர்வர்திருவென
ஆங்குமேவியறிஞரறைதர
வாங்குவார்சிலைமன்னவன்கூறுவான். ௨௦

சீயமன்னசெழுநிலவேந்தலால்
போயொர்தெய்வமுளதெனப்போற்றுவார்
தூயகேள்வர்ப்பிழைத்துறுசோரர்பால்
நேயம்வைத்தமகளிரைநேர்குவார். ௨௧

துன்னுவெண்ணிலதூற்றுவலம்புரி
மன்னுசெங்கைமணிநிறவண்ணன்யான்
என்னையல்லதுதெய்வமின்றேயெனப்
பண்ணியென்னைப்பரவுமினென்றனன். ௨௨

ஆற்றன்மேயவமைச்சர்கழறிடும்
கூற்றைக்கொண்டுகொடுநெறிமேற்படர்
வேற்றிறற்படைவேனனைவேதியர்
சீற்றத்தீயிற்செகுத்தனரென்பவே. ௨௩

விண்ணடைந்திடும்வேனனுடம்பினை
எண்ணெய்பெய்ததோர்தோணியிலிட்டனர்
கண்ணகன்புவிகாக்குநர்யாரெனத்
தண்ணந்தாரவன்றாய்புரந்தாளரோ. ௨௪

இலையடுத்தவினமலர்ப்பூந்தொடை
மலையடுத்ததோண்மன்னனிறத்தலும்
அலையடுத்தவகன்புவியெங்கணும்
தலையெடுத்தகுறும்புதலைத்தலை. ௨௫

நிலங்கலந்ததுநீள்வளங்கள்ளர்தம்
குலம்பரந்ததுகூட்டுணவவ்வழிக்
கலந்தவேதியர்தம்மிற்கடைந்தனர்
உலந்தவேனனுடலமெடுத்தரோ. ௨௬

நீலமேனியனீளொளிவெஞ்சுடர்
போலிலங்குசெங்குஞ்சியன்பொங்கழல்
ஆலமென்னவொருவனதிர்கழற்
காலின்வந்துபிறந்தனன்காண்டக. ௨௭

வேறு.

அல்லினால்வருத்தெனவாங்குத்தோன்றிய
வில்லுடைத்தடக்கையான்விளைப்பதென்கோலோ
சொல்லுமினீரெனத்தொழுகுலத்தவர்
நில்லெனவுரைத்தலினிடாதனாயினான். ௨௮

வேட்டுவரெனப்பெயர்மேவிவிண்டொடு
கோட்டுமால்வரையினுங்கொங்குவிம்முபூங்
காட்டினும்வாழ்பவர்காய்சினத்தகூர்
வாட்டிறலன்னவன்வழியிற்றோன்றினார். ௨௯

வேறு.

தேன்றதும்புசெந்தாமரைசெற்றொளி
கான்றதிங்கள்வதனங்கவினமுன்
வான்றழைத்திடவந்தவமுதெனத்
தோன்றினாளிடக்கையினோர்தோகையே. ௩0

இருளைநுங்குமெரிமணிப்பொற்றொடி
சொரியுநீள்சுடர்தோன்றுவலக்கையின்
பிருதுவென்னும்பெருநிலமன்னவன்
உருவஞாயிறுபோலவுதித்தனன். ௩௧

அறுசீர்க்கழிநேடி லாசிரியவிருத்தம்.

அலர்ப்பொலம்பொகுட்டின்வாழுமந்தணனாங்குநண்ணி
விலக்கருங்களிநல்யானைவெந்திறல்விளங்குவேனன்
வலக்கரங்கடையவந்துதோன்றியமன்னர்மன்னன்
இலக்கணக்கிடக்கைநோக்கியீங்கிவன்மாலேயென்றான். ௩௨

எந்தெழில்வாய்ந்தவேனனிடக்கரங்கடையத்தோன்று
மாந்தளிரனையமேனிமழைமதர்நெடுங்கணங்கை
காந்தியுங்கவினுநோக்கிக்களியிளஞ்சுரும்பர்பாடத்
தேந்துளிபிலிற்றுந்தண்பூந்திருமகளிவளேயென்றான். ௩௩

பில்குதேன்கமழலங்கற்பிருதுவென்றுரைக்கப்பெற்ற
கொல்களிற்றுழவற்கந்தவருச்சியைக்குவளைதாழ
வில்லுமிழ்கணையைவென்றுவேலினுக்கோலைவிட்ட
சில்லரித்தடங்கணாளைத்திருமணம்புணர்த்தினானால். ௩௪

கலிவிருத்தம்.

அரியணைவழங்கினனளகைகாவலன்
திருமுடிநல்கினன்தேவர்கோமகன்
வருணன்வந்தளித்தனன்வட்டவெண்குடை
விரிநிலாக்கவரிகால்வேந்தன்வீசினான். ௩௫

கலைமகடிங்களங்கலையெனக்குலாய்
அலர்கதிர்விரிக்குமுத்தாரமீந்தனள்
பலர்புகழ்வியாவியாம்பரிதிபோற்றிகழ்
மலர்மகணிதித்திருவணப்பநல்கினாள். ௧௬

பார்மகள்வழங்கினள்பசும்பொற்பாதுகை
வார்கடல்குளிறுவெள்வளையளித்ததால்
கார்தவழ்குன்றொடுகல்லென்மாநிதி
கூர்நிதிக்குப்பைகள்கொடுவந்துற்றன. ௧௭

கள்ளவிழ்மலரினான்கவயநல்கினான்
அள்ளிலைத்துளவினானாழிநல்கினான்
வெள்ளியம்பொருப்புறைவிமலனீந்தனன்
தெள்ளொளிபொதுளியசெம்பொன்வாளரோ. ௧௮

கலைமதிசதமெனக்கதிர்செய்கேடகம்
மலைமகளுதவினண்மறலிநல்கினான்
உலைவறுவெங்கதையுஞற்றுமாதவர்
நிலைபெறவழங்கினர்நிகழ்த்துவாழ்த்தரோ. ௧௯

வலம்படுசிலையழற்கிறைவழங்கினன்
இலங்குசெங்கதிர்களையிரவியீந்தனன்
அலங்குளைவெண்பரியளித்ததம்புலி
பொலங்கொடித்தேர்மயன்புரிந்துநல்கினான். ௨௦

மருவிரிமலரினானன்னமாதவர்
விரைகமழ்பூம்புனலாட்டிவேந்தனை
அரியணையிருத்தினரலங்குசெங்கதிர்
சொரிதருமணிமுடிசூட்டினாரரோ. ௨௧

அந்தரதுந்துபியதிர்ந்ததாய்பிழி
சிந்துபொற்றருமலர்தேவர்சிந்தினர்
வந்தனராடினர்வானமங்கையர்
பைந்தொடையாழினோர்பாடன்மேயினார். ௨௨

சந்திரனுயிர்க்கெலாந்தாபநீக்கலான்
இந்திரனுலகினிதளிக்கலானெனச்
சுந்தரவாசனைமுனிவர்சொற்கொடு
வந்தியர்முதலினோர்வழுத்தன்மேயினார். ௨௩

மாற்றலர்க்கணுகுருமாட்சியானனல்
கூற்றுவனற்பிழைத்தோரைக்கோறலான்
ஏற்றநற்றூதரானெங்குநாடலான்
சாற்றினுக்கிறையெனக்கருதலாகுமே. ௨௪

அளவிடற்கரியநல்லாற்றன்மேவலான்
வளமலிவாரிதிவருணனீகையான்
ஒளிதருமிருநிதிக்குறையுளாகையான்
களிசெயுமளகையர்காவலாளனே. ௪௫

அணிசராசரஞ்சமனாகப்பார்த்தலான்
தணிவில்வெங்கதிர்க்குழாந்தழைக்கும்வேந்தனல்
உணர்வுறுநோன்மையினுயிரளித்தலான்
மணிதிகழ்வாரிசூழ்வையமங்கையே. ௪௬

பார்மகள்பசுவெனக்கறந்துபல்வளம்
ஆர்தரவேள்விகளாற்றியாண்டபின்
தேர்சனகாதியர்மேவவுட்டெளிந்
தோர்பதம்பெறுமிவனென்னவோதினர். ௪௭

என்றுசொற்றனர்கடாமினிதுவப்புற
மன்றலம்பூந்தொடைமாசிலாத்துகில்
குன்றெனவருநிதிக்குவைவழங்கினான்
வென்றியங்குமிவேல்வேந்தர்வேந்தனே. ௪௮

செறிந்தசெங்கதிரவன்றிசைப்பத்தெள்ளிதின்
மறிந்ததெண்டிரையிருநிலம்வளங்கொளா
எறிந்ததுகுறும்பிருளேழிசைச்சுரும்
புறைந்தபூந்தாரினானொற்றையாழியே. ௪௯

வருந்தினம்பசிக்கனல்வருத்தப்பல்வளம்
கரந்ததுநெடுநிலங்காத்திநீயெனப்
பொருந்துபுமன்பதைபுகலக்கேட்டலும்
விரிந்தபூந்தாரவன்வில்லெடுத்தனன். ௫௰

திண்டிறன்மன்னவன்சிலையெடுத்தது
கண்டனனெஞ்சகங்கலங்கியானுருக்
கொண்டனளோடினள்குரைக்கும்வெண்டிரை
மண்டிணிமாநிலமடந்தையென்பவே. ௫௧

கோடியசிலையினன்கொற்றவம்பினன்
ஆடெழுவனையதோளரசனுண்டெழுந்
தோடியதிசையெலாமோடியொல்குபு
வாடினணின்றனள்வழுத்தினளரோ. ௫௨

கல்லெனும்புயத்தெனைக்காப்பத்தோன்றிநீ
கொல்லின்யார்காக்குநர்கொற்றமன்னவர்
மெல்லியலார்பழிவிரும்பிலாரென
மல்லலம்புவிமகள்வழங்கினளரோ. ௫௩

ஆடவராயினுமலியராயினும்
வாடியநுண்ணிடைமகளிராயினும்
நீடுயிர்க்கருந்துயர்நினைக்கின்வீட்டுதல்
ஆடுடையரசர்நல்லறமதாயினும். ருச

என்னைநீகொல்கலாதினிதினோம்புதி
மின்னகுபரிதிவேல்வேந்தர்வேந்தநீ
சொன்னனமறாதியான்சுரப்பலென்றனள்
அன்னவனருள்கூர்ந்தறைதன்மேயினான். ருரு

கொல்கலஞ்சலைகொடுக்கல்வேண்டுமால்
பல்வளமென்றிரும்பனைக்கையானையான்
மெல்லெனக்கூறலும்வேலைசூழ்தரு
தொல்புகழ்நிலமகடொழுதுசொல்லுமால். ருசு

என்னைமுன்பாதலத்தேனமாகியே
துன்னிவந்தெடுத்தருந்துயரம்போக்கிய
கன்னியந்துளவணிகண்ணனாதிநீ
உன்னருட்கெல்லையாருரைக்கவல்லரே. ருஎ

அறந்தழைந்திடவருளரசிலாமையால்
உறைந்தநல்வளனெலாமொளிப்பநின்றனன்
கறந்துகொள்கன்றினாலென்றுகாதல்செய்
நிறைந்தபல்வளனிலமங்கைநல்கினாள். ருஅ

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மனுவிளங்கன்றாமானவேற்பிருதுமன்னவன்கறந்தனன்பைங்கூழ்
முனிவரர்வியாழமொருகுழக்கன்றாமுதுமறைகறந்தனரமரர்
பணியிருவிசும்புகாப்பவன்கன்றாப்பாற்படக்கறந்தனர்சோமம்
கனகண்மாமதலைவளரிளங்கன்றாக்களிநறாக்கறந்தனரவுணர். ருகூ

தென்புலத்தவரங்கௌவியங்கறந்தார்செஞ்சுடரரியமாக்கன்றா
மின்பிறழ்மணிசேர்தக்கன்கன்றாவிடங்கறந்தனகொடும்பாந்தள்
இன்புறவரக்கரியக்கர்பேய்முதலோரிலங்குகண்ணுதலான்கன்றாக்
கொன்பெறுகபாலந்தனிநனிகறந்தார்குருதியோடருந்தசைமாதோ. சு0

கஞ்சநாண்மலர்க்கட்கபிலனேகன்றாக்கறந்தனர்சித்தர்தங்கலையாழ்
விஞ்சைகந்திருவர்கறந்தனரெழில்சேர்விளங்குதங்காவலன்கன்றா
அஞ்சிறைப்பறவைகலுழனோர்கன்றாவடர்சினைப்பழுமரங்கறந்த
மஞ்சுசூழிமயமால்வரைகன்றாமணிக்குலங்கறந்தனவரைகள். சுக

### அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

இத்திறமுலகமெல்லாமேற்றனகறந்துகொள்ள
அத்தகுசிறப்புவாய்ந்தவானுருக்கொண்டுநின்று
மொய்த்தவல்லிருள்கால்சீக்குமுழுமணிச்சுடிகைநெற்றிப்
பைத்தலையரவமேந்துபார்வளஞ்சுரந்ததன்றே. ௬௨

நிவப்பொடுதாழ்வின்றாகநெடுநிலங்கவர்ந்துகொண்ட
குவட்டிருங்குன்றுவல்விற்கோடியாலெறிந்துசாய்த்துக்
கவித்தனன்கவிகையொன்றுகளியிளஞ்சுரும்பர்பாய்ந்து
தெவிட்டறாண்டேறன்மாந்திச்செறிநறுந்தெரியல்வேந்தே. ௬௩

நாடெழிற்புரங்களென்றுநகரென்றுமகரமென்றும்
கேடகம்பாடியென்றுங்கிளர்குடிசேரியென்றும்
நீடியவாண்களென்றுநிகழ்த்திடப்பட்டவின்னும்
ஆடலஞ்சிலையாணிப்பாரளித்தநாள்பெற்றபேரே. ௬௪

பிருதிவியெனும்பேர்பெற்றுப்பெண்ணெனவிளங்கவிப்பார்
ஒருகுடைநிழற்றுசெங்கோலுறுபுகழ்ப்பிருதுமன்னன்
வரைபுரைமார்பம்புல்லிவரிவிழிவருச்சியென்பாள்
பொருவருமெழில்சேர்ந்தந்தண்புதல்வரையுதவினால். ௬௫

விலங்கிவில்லுமிழுமொண்கேழ்விழுமணிவேலைவீச
நலங்கெழுநதிகளெல்லாநறுநெய்யும்பாலுநல்க
மலர்ந்தபூந்தருக்களெல்லாமதுமழைபொழியாநிற்ப
அலங்குளைப்புரவிவேள்வியாற்றினனரசர்கோமான். ௬௬

ஒன்றொழிநூறுவேள்வியாற்றிமற்றொன்றுமாற்றா
நின்றுழிபொறுக்கலாற்றாணிரையுளைப்புரவிவௌவி
மின்றிகழ்சடிலந்தாழ்த்துவெண்டலைக்கரத்தனாகிக்
குன்றெறிவயிரவொள்வாட்கொற்றவன்போயினால். ௬௭

அரசிளங்குமரன்றன்னையத்திரியாங்குநோக்கிப்
புரவிநீவல்லைமீட்பாய்போயதென்றுரைத்தானாக
வரிசிலைத்தடக்கைமைந்தன்வானவர்க்கிறைவன்றன்னை
விரிசடையுடையானென்றுவெங்கணைதொடுக்கிலானே. ௬௮

இந்திரனாகுமின்னோனீங்கிவன்றன்னையேந்தால்
கொந்தழல்வாளிதூற்றிக்கொல்லெனமுனிவன்கூற
மந்தரம்வெள்குதோளான்வரிசிலைகுழையவாங்க
அந்தரங்காந்துநின்றானமரர்கோன்புரவிவிட்டான். ௬௯

நொறில்வயப்புரவிமீட்டுநுதியழல்வடிவேன்மன்னன்
சிறுவன்வந்தெய்தலோடுஞ்செழுந்தவக்கிழவர்நோக்கி
அறைகழலரவத்தானையரசிளங்கோமாற்கோர்பேர்
விறல்விசிதாச்சுவன்றானிவனெனவிளம்பினரால். ௭௦

வல்லிருள்விளைத்துவல்லேவானவர்க்கிறைவன்மீட்டும்
வில்லுமிழ்கணையிற்செல்லும்வெம்பரிகவர்ந்துபோகக்
கொல்வலிங்கிவனையென்றுகுங்குமக்குவட்டின்வீங்கு
மல்லடுகுவவுத்திண்டோண்மன்னவன்சீறிநின்றான். எக

சீறினனெழுந்துவேந்தன்செஞ்சிலைதருகவென்ன
வீறுசால்வேள்விதன்னின்வெங்கொலைவிளைத்தலாகா
கோறுநாமிவனையின்னேகொந்தழல்நெய்பெய்தென்ன
ஆறறிமுனிவர்கூறவடைந்தனன்விரிஞ்சனங்கே. எஉ

மல்லலஞ்சிறப்புவாய்ந்தவானகம்புரக்கும்வேந்தன்
அல்லியங்கமலச்செங்கணழியானல்லனேசொல்
கொல்லுதலடுப்பதன்றாற்கொற்றவாளரசவென்னச்
சொல்லலுற்றனனலம்பொற்றோடவிழ்மலரினோனே. எங

மன்னநீபுரியும்வேள்விவருபயன்விழைந்திலையால்
துன்னருந்தனிவீட்டின்பந்துய்ப்பதேவிழைந்துநின்றாய்
இன்னதோர்வேள்வியொன்றுமியற்றுதலொழிதியென்று
பொன்னுலகளிப்பான்றன்மேற்பொருபகைபோக்கல்செய்தான். எச

விரைசெலவிவுளிவேள்விவேட்டவம்மன்னன்றன்பால்
மரகதவண்ணத்தண்ணல்வானவர்க்கிறையோடெய்திப்
பொருதிறற்குலிசபாணிபுரிந்ததுபொறுக்கல்வேண்டும்
அரசநீவெகுளியுற்றாலருளவர்கண்ணதென்றான். எரு

விழைவதுதருதும்வேந்தேவிளம்புதியென்னவீழ்ந்து
தொழுதனன்வழுத்திச்செய்யதோடவிழ்கமலம்பூத்த
மழைமுகில்வண்ணமுத்திவழங்குறுநின்னைக்கண்டும்
அழிவதோர்பொருள்கொள்வார்கொலறிவினரென்றுசொல்வான். எசு

அள்ளிலைத்துளவப்பைந்தாமலநின்சரிதமென்னும்
தெள்ளமுதினிதின்மாந்தச்செவிபலவேண்டுமென்னப்
புள்ளவாம்புலவுவேலான்போற்றலும்பரமன்றானும்
வெள்ளிவெண்குடையானன்புவியந்தனன்போயினானல். எஎ

திங்களங்கவிகைவேந்தன்செழுங்கதிர்ச்செல்வன்போல
அங்கதிராழியொன்றேயாழிசூழுலகமுய்த்துக்
கங்கைகாளிந்தியென்னக்கரைபொருநதியினப்பண்
மங்குறோய்குடுமிமாடமாநகர்வைகுநாளில். எஅ

மாதவர்முனிவர்சித்தர்வானவர்முதலோர்மொய்ப்பத்
தாதலர்தெரியன்மார்பன்சத்திரவேள்வியாற்றி
மீதுறுமுடிவிளைப்பண்வெண்மதியெனவேநின்று
சோதிசேரவையுள்ளோரைத்துதித்தனனோக்கிச்சொல்லும். எகூ

காவலர்க்கறஞ்செய்வோரைக்காத்தலுமறஞ்செய்வோரைப்
பூவினிற்கடிதருனும்பொருந்துதங்கருமமென்பர்
தாவிலாக்கருமஞ்செய்தேயிருமையுந்தயங்கினார்வெங்
கோவெனும்வேனனன்றிமனுமுதற்குலத்தினாரே. ௮௦

திருமகள்கொழுனன்செய்யசேவடிவணங்கிநீரும்
மருவுநுங்கருமஞ்செய்யின்வயங்குநாற்பயனும்பெற்றே
இருமையும்விளங்குவீராலிப்புவிகாவல்யானும்
ஒருவிடாதின்பமெய்தியுறுவன்மால்பதமுமன்றோ. ௮௧

நிறைசுடரிமையோர்தாமுநெஞ்சமுற்றிலங்காநின்ற
அறைதழற்கடவுடன்னையன்பொடும்விளக்கும்வேதத்
துறையறிமுனிவர்ப்போற்றிற்றுளவினோன்மகிழுமென்றால்
மறையவர்பெருமையென்னால்வழுத்துதற்கெளிதன்றென்றான். ௮௨

என்னலுமவையோர்சொல்வாரிரணியன்மகவினாலே
துன்னியசீரினோடுதுலங்கினான்போலநின்னால்
நன்னெறிநீங்குவேனனவையறவிளங்கினானால்
இன்னெழின்மகப்பெற்றோர்தாமிலங்குவரெனுஞ்சொன்மெய்த்தே. ௮௩

தேனிமிர்துளவோன்றாளிற்செறிந்திடுமன்பைநீயிம்
மாநிலத்தரசனாகிமருவியதிறத்தினாங்கள்
ஈனமொன்றின்றியின்பமிருமையுமெய்தாநின்றேம்
கோனிவணெடிதுவாழ்தியெனநனிகூறிப்போயார். ௮௪

பெண்ணெனத்தனதுதொல்லைப்பெயரினால்விளங்கும்வண்ணம்
கண்ணகன்ஞாலங்காக்குங்காவலன்றன்பால்வந்து
நண்ணினர்சனகனாதிநற்றவக்கிழவர்நால்வர்
அண்ணலான்மறையேபோலவரும்பெறற்காட்சிமிக்கார். ௮௫

கௌவைநீர்வேலிமன்னன்கதுமெனவெழுந்துதாழ்ந்து
தெய்வமாதவத்தோரம்பொற்சேயடிக்கமலம்போற்றி
எவ்வகைகடக்கலாகுமேழ்பெரும்பிறவிவேலை
அவ்வகைமொழிமினென்னவருந்தவருரைக்கலுற்றார். ௮௬

பொறிகளையடக்கித்தன்னைப்புலப்படவறிந்தானாயின்
உறுதுயிற்கனவுதன்னினுற்றிடுபடைகளெல்லாம்
செறிதுயினீங்கிற்பொய்யாந்திசழ்பவனொருவன்றான்போல்
நெறியுறுமுபாதிநீங்குநிறைந்ததோரறிவாய்நிற்பான். ௮௭

ஐயதாமறிவோடிவ்வாறமர்வதற்கெளிதாமேது
மையறுமாலைவந்துமயக்குமோரரவுபோலும்
பொய்யுமாய்மெய்யுமாகிப்பொலிதருமாயன்றாளாம்
செய்யதாமரைக்கணன்புசெய்வதென்றுரைசெய்வாரே. ௮௮

உரவுநீருலகமெல்லாமுண்டொளிகிளைக்குஞ்செஞ்சூட்
டரவணைதுயிலுமண்ணலடிப்புணைபற்றியன்றிக்
கரையழிபிறவிவேலைகடப்பரிதென்றுகூறி
மருவிரிதெரியன்மன்னன்மனந்தெளித்தேகினால். ௮௯

உடம்பறப்பழுத்தலோடுமொருதனித்திகிரிமன்னன்
விடம்பொழிகுடுமிவைவேல்வேந்தெலாம்வந்துதாழ
மடங்கலேறனையகொற்றமைந்தனைமௌலிசூட்டி
நடந்தனன்றேவியோடுநறுமலர்க்கானத்தன்றே. ௯௦

காருறழ்கவிகைமன்னன்கனியொடுகிழங்குதின்று
நீருணச்சருகருந்தாநிறைந்துலாங்காற்றுமாந்தா
மாரியிற்புனலிற்றாழ்ந்துமாறிலாதிருந்தும்வேனில்
ஆரழலிடையேநின்றுமருந்தவமயராதாற்றும். ௯௧

கலிநிலைத்துறை.

பூதமைந்தொடும்பொறிகளைப்புகலகங்காரத்
தாதிநாளினிற்றோற்றியமுறையதினடக்கி
ஏதமில்லகங்காரத்தைமகத்தினிலிருத்தி
ஓதுசீர்திகழ்மகத்தினைமாயையினொடுக்கி. ௯௨

இருளுயிர்க்கறவிருந்துலாமுயிர்ப்பினையடக்கி
உரைசெய்கின்றவாதாரமோராறுமுய்த்ததனால்
பிரமரந்திரம்பிளந்துயர்பிரமமாயொன்றாய்ப்
பரமமாகியபசுந்துழாய்முகில்பதமடைந்தான். ௯௩

தொடப்பெறாததூமலர்புரைமேனியள்பூமேல்
நடக்கலாற்றலாநளினமென்சீரடிநங்கை
தடத்தகங்கையாந்தண்டுறையாடினள்கொழுநன்
உடற்றழற்கொளீஇயொள்ளழன்மூழ்கிவீடுற்றாள். ௯௪

பிருதுமன்னவன்பெருங்கதைபெட்பொடுகேட்போர்
விரியுநான்மறையோரெனின்விழைந்தனபெறுவர்
அரசராயினேழ்புவியுமோராழியுய்த்தாள்வர்
மருவுசீர்திகழ்வணிகரேல்வளர்திருவுறுவர். ௯௫

தள்ளரும்புகழ்ப்பின்னவர்தயங்குமிக்கதையை
உள்ளுவப்பொடுகேட்கினல்லுத்தமராவர்
பிள்ளையில்லவர்வினவுறிற்பிள்ளைகள்பெறுவர்
எள்ளருந்திறல்விதுரவென்றிசைத்தனன்முனிவன். ௯௬

குருகுலத்தினிலுதித்தவேற்கொற்றவவென்று
பெருகுமாதவச்சுகமுனிபேசினனென்ன
உருகுகாதலோடந்தணருவப்புறவுரைத்தான்
சொரியுந்தேன்கமழ்ந்துளவினேன்பதந்தொழுசூதன். கஎ

பிருதுமன்னன் கதையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உகக.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## ரு-வது, பிராசீனபரிகி அவிர்த்தானன்கதையுரைத்த வத்தியாயம்.

கலிநிலைத்துறை.

பாய்ந்துவண்டிமிர்பசுந்தொடைப்பிருதுமுன்பயந்த
வாய்ந்தசீர்விசிதாச்சுவன்மதலைதன்மதலை
ஆய்ந்துமுத்தழல்வேள்விகளளப்பிலபுரியும்
ஏந்தல்காதைகேளெனமுனிவிதுரனுக்கிசைப்பான். க

பிளிறுமும்மதக்களிற்றினன்பிருதுமன்மதலை
வளையும்விற்கொடுவானவர்க்கிறைகவர்ந்தேகும்
உளைவயப்பரிமீட்டவனுலகெலாமளித்தான்
இளையநால்வர்க்குநாற்றிசையினிதினிற்கொடுத்தே. உ

வாசவன்றனைப்பரிகவர்ந்தேகுநாண்மறையப்
பூசல்வேட்டுறுவிற்கொடுபோய்வெருட்டுதலால்
பேசுபேரந்தர்த்தானனென்றடைந்திடுபெயரோன்
மாசிலாவெழிற்சிகண்டினிதனைமணம்புரிந்தான். ந

திசையெலாம்புகழ்நல்லெழிற்சிகண்டினியென்னும்
பசியகோதையைமணந்துபாவகன்பவமானன்
சுசியெனப்படுமைந்தரையீன்றுதொல்வேள்வி
இசைகொளப்பலபுரிந்தனனிசைக்குமவ்வேந்தன். ச

மைந்தர்மூவரும்வளர்தழற்கிறையவர்வசிட்டன்
வெந்திறற்கொடுஞ்சாபத்தால்வேந்தனுக்குதித்தார்
அந்தமூவருமீட்டுமெவ்வழற்கிறையானார்
சுந்தரத்தவன்பெயர்த்துமோர்தோகையைவேட்டான். ரு

அடல்செய்வேலந்தர்த்தானன்பினன்பொடுவேட்ட
தொடையல்வேய்நபச்சுவதியென்றுரைபெறுந்தோகை
உடைதிரைப்புவிபோற்றவிர்த்தானனையுயிர்த்தாள்
விடலருந்திறல்வேந்தனுமறுவரையளித்தான். சு

மேவிப்போர்செயுங்கண்ணியர்வேளவிர்த்தானன்
பூவிற்ருன்றரும்புதல்வரோரறுவாற்பொற்பூங்
காவிற்சேர்ந்தவர்கூட்டுணக்கணக்கில்பல்வேள்வி
ஆவிர்த்தானனுமாங்கவனுற்றினனன்றே. எ

மருத்தழைந்ததார்மன்னவர்புகழுமம்மன்னன்
விருப்பின்வெள்ளிடையின்றியேகீட்டிசைமுகமாய்த்
தருப்பைபாரெலாம்பரப்பியத்தருப்பையின்பெயர்பெற்
றுருத்திகழ்ந்திடும்வேள்விகளுலப்பிலபுரிந்தான். அ

மறைவடித்தவம்மன்னவன்வயங்கியசெந்தீ
இறையுங்கண்டனனேக்கறவின்னெழில்கனிந்த
நிறைபுனற்கிறையுயிர்த்தநேரிழைதனைவேட்டான்
பிறையெனத்திகழ்மைந்தரோர்பதின்மரைப்பெற்ருன். கூ

காதன்மைந்தரோர்பதின்மருங்கலைக்கடல்கடந்து
தாதலர்ந்தசெந்தாமரைக்கண்ணனைவழுத்தி
மாதர்மென்மொழிமடவரல்பங்கினன்றெளிய
ஓதுகீதைகேட்டுயர்வனமடைந்தனரன்றே. க0

மருப்பார்ந்தபூங்கானகமைந்தர்சென்றடைய
விருப்பின்மீளவும்வேள்விகள்பற்பலபுரியும்
தருப்பையின்பெயர்படைத்தவத்தரணிபன்றன்பால்
நரப்புநல்லிசைபயின்முனிநண்ணினனவில்வான். கக

அயமகத்தினிலாசநீபடுத்தவம்மறிகள்
செயிர்கதழ்ந்துகண்டீயுகவரவுபார்த்திருக்கும்
பயில்விசும்புசெல்காலையில்வெருவரப்பாய்ந்து
வயிறுபோழும்வல்லிருப்பினுண்மருப்பினின்மாதோ. கஉ

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

படுத்திடுமறிகள்வேள்விபுரிந்தவன்பனிவிசும்பின்
அடுத்திடுங்காலநோக்கியழல்விழியொழுகப்பாய்ந்து
வடித்தகாரிருப்பிற்செய்தமருப்பினால்வயிறுபோழ்ந்த
தெடுத்துநாமுரைக்குங்கேட்டியிறைவவென்றுரைக்கலுற்ருன். கங

விரித்தபூங்கதிர்கள்பொங்குவிழுமணியணிவிளங்கி
அரைத்தசெம்மலயச்சாந்துமகிலுமோர்காதநாறி
உரைத்திடப்பட்டவாயிலொன்பதுபொருந்தித்தோன்றும்
புரத்தினுனொருவனுண்டுபுரஞ்சனனென்னும்வேந்தே. கச

தோழனுங்கொருவனேடுசுடருமிழ்மணியிற்செய்த
ஆழியந்தடந்தேரேறியதிரிமிழருவிமாலை
தாழ்தருமிமயச்சாரல்சார்ந்தனன்சார்ந்துமற்ருேர்
மாழைமானன்னவுண்கண்மடந்தையைக்கண்ணுற்ருல். கரு

கொண்டலிற்றாழ்ந்தநீலக்குழலுநல்லெழில்சேர்திங்கள்
மண்டலமென்னத்தோன்றுவதனமுமதர்த்தகண்ணும்
ஒண்டொடிக்கரமுந்தண்முத்துரிஞ்சுவெம்முலையுங்காணாத்
தெண்டிரையமுதிற்றோன்றுந்திருவெனத்தெருமந்தானால். கசு

தாமரையின்றுசெங்கைத்தாமரைமலரிற்றெய்வத்
தேமலரன்னவஞ்செஞ்சீறடிநிலத்திற்றோயும்
பூமகளல்லளம்மபுவிமகளாகுமற்றிக்
காமருகோதையென்றுகருதினன்களிப்புமிக்கான். கஎ

ஐந்தலையரவொன்றாலேயணிபெறக்காவல்பூண்டு
மைந்துடைப்பதின்மரென்னவரும்படைத்தலைவரோடும்
வெந்திறல்வயவரோடுமிடைந்ததோர்புறத்தினின்ற
சுந்தரமாதையன்னோன்றுதித்தனன்சொல்லலுற்றான். கஅ

கலிவிருத்தம்.

ஏர்செயல்குலிடைமுலைகண்ணுதல்
தேர்செய்கின்றதுடியிருசிந்துரம்
கூர்செயம்புகொடுமரமாகநீர்
போர்செய்யாதென்புகல்புகுவேனொடே. ககூ

மண்ணுங்கொங்கைமதம்படுவேழமே
எண்ணுமுள்ளமினிதுண்ணுமன்றியேர்
நண்ணுந்தோளெனும்வேழமுநல்லுயிர்
உண்ணுமாறென்னுரைமினெனக்கரோ. உ0

பூட்டும்பூண்வெயிற்பூங்கதிர்க்காமத்தீ
மூட்டுமன்றிமொழிதருசிந்துரம்
நீட்டும்வாண்முகச்செவ்விமதியமும்
வாட்டுமாறென்னுயிரைவழங்குமே. உக

அருள்விளைக்குமமுதமன்னீர்குழல்
மருள்விளைக்குமதன்றிமதிநிலாத்
தெருள்விளைக்குஞ்சிறுநகைமையலாம்
இருள்விளைக்குமிதென்கொல்விளம்புமே. உஉ

முருக்கும்வண்ணமுகத்தில்விழியென
இருக்கும்வெவ்விடமன்றியெழினுதற்
குருக்குந்திங்கட்குழவியுமுள்ளுயிர்
உருக்குமாறென்னெனக்கிங்குரைமினே. உங

பாட்டுவண்டிமிர்பைங்குழற்பொன்வரைக்
கோட்டின்வீங்குகுவிமுலைக்கொல்லுலைத்
தீட்டும்வேல்விழிச்சேயிழையீரிதழ்
ஊட்டுநாளென்றெனக்குரைசெய்ம்மினே. உச

தரித்ததாமரைதன்னைமுகமெனத்
திருப்பெண்மானுந்தரித்தனள்சேர்ந்தெனும்
உருத்திகழ்ந்தவொளிர்வதனத்துநீர்
இருக்கவேர்பெற்றிருப்பதெவ்வூரரோ. ௨௫

துன்னுமேகஞ்சுமந்ததுமுன்னென
அன்னதேந்திமின்னாற்றுகைம்மாறுபோல்
மன்னுகூந்தறரித்துவணங்கிடைக்
கன்னியீர்கடைக்கண்ணருள்செய்ம்மினே. ௨௬

அமுதநேர்மனையாரையம்மூவரும்
விமலயாக்கையின்மீதுவைத்தாரென
இமகான்றனிடத்தின்வைத்தானெனும்
குமுதவாய்திறவாததென்கூறுமே. ௨௭

என்றுகூறியிடருறுமேந்தலை
நன்றுநீயெழினாயகனுமென
வென்றிமேவடல்வேல்விழிமெல்லியல்
மன்றலாகமணந்தனளென்பவே. ௨௮

திங்களொன்றுமுடிதிகழ்மாளிகை
தங்குகின்றதனிநகர்ச்சார்ந்துறும்
கங்குலென்றும்பகலென்றுங்காண்கிலான்
மங்கைநன்னலமாந்தினன்மன்னனே. ௨௯

ஆர்க்கும்வண்டுணவாய்ப்பிழிசிந்துபூங்
கார்க்கருங்குழற்காரிகைசெய்வதே
தார்ப்புயத்தவன்றானுமங்காற்றுமால்
பார்க்குமாடியம்பாவையைப்போலவே. ௩௰

இன்னவண்ணமியைந்தபுரஞ்சனன்
மன்னவாய்ந்தகருமவலியினால்
உன்னுவேட்டமுவந்தனனாகவே
பொன்னந்தேர்மிசைப்போந்ததையோதுவாம். ௩௧

சகடிரண்டிற்றருங்கதிபெற்றது
விகடமாரைந்துவெம்பரிபூண்டது
பகடுசேருமைந்தாணிபடைத்தது
முகடுசேர்கொடிமூன்றுசெறிந்ததால். ௩௨

சாற்றுகின்றவோரச்சிற்றழைத்ததோர்
ஆற்றல்சேருமேழாவரணத்ததால்
ஏற்றபாகனியைந்ததித்தேர்மிசைப்
போற்றும்வேற்கைப்புரஞ்சன்னேறினான். ௩௩

காட்டின்மேவிக்கணமணித்தேரொடு
வாட்டநீங்கிவயங்கிரண்டம்பினல்
ஈட்டமாகவியைந்தவெம்மாக்களை
வேட்டமாடிமெலிவுறும்வேந்தனே. ௩௪

மூத்தமூரன்மனைவிமுனிகுறின்
சித்தநொந்துதொழுதுதிருத்தியும்
வித்துருமத்திதழ்விளைதேனுண்டும்
இத்திறம்மகிழ்வெய்தியிருக்குநாள். ௩௫

ஆயிரத்தொருநூறென்றறைதரு
சேயனுரையுஞ்செப்பொருநூற்ருெடு
மேயபத்தெனுமெல்லியலாரையும்
நேயமாகவுயிர்த்தனனேரிலான். ௩௬

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

அள்ளலஞ்சேற்றிற்றேன்றுமாடகப்பசும்பொற்றேட்டு
வள்ளவாய்முளரித்தேறல்வரிச்சிறைவண்டுவீழ்ந்து
கொள்ளைகொண்டுண்ணுமாபோற்சோற்ருெடிகுமுதச்செவ்வாய்த்
தெள்ளமுதினிதுமாந்தித்தெவிட்டலனுயினுனல். ௩௭

கண்கவருருவுகண்டுங்கயன்மலைப்பன்னகண்ணுள்
பண்கவர்மழலைகேட்டும்படாமுலைத்தடத்திற்றேய்ந்தும்
விண்கவர்பவளச்செவ்வாய்விளையமுதூறலுண்டும்
மண்கவர்குவவுத்தோளான்வருபகல்கழிப்பான்மன்னே. ௩௮

வழிமதுக்கலுழிபோலமதுரம்வீற்றிருந்தமென்சொல்
எழில்வளர்மகளிரோடுமிலங்கியகுமரர்க்கெல்லாம்
விழவெலாமியற்றுவித்தான்விழுமியமறிகள்வீட்டிப்
பழமறைமுடிவால்வேள்விபற்பலவாற்றினுனல். ௩௯

மைந்தரொவ்வொருவர்நூறுமைந்தரையுயிர்த்தார்சொல்லும்
அந்தமிலழகுவாய்ந்தவரிமதர்நெடுங்கணரும்
செந்துவர்மழலைச்செவ்வாய்ச்சிறுவரையுயிர்த்தார்மன்னன்
இந்திரனிவன்கொலென்னவினிதுவீற்றிருந்தானன்றே. ௪0

மின்னனுளாகமெல்லாங்கவர்ந்துவிண்கிழியவோங்கு
பொன்னெடுங்குன்றமென்னப்புணர்முலைபொருதமார்பன்
இன்னெழிலிளமையெல்லாமிறந்துபாடுறலுங்கால
கன்னியென்ருெருத்திவந்துகாதலின்மரீஇயினுனால். ௪௧

அடையலர்பரவுமன்னனடைந்தவக்கன்னிமுன்னம்
தொடையணிகொழுநற்றேடிச்சொல்லுமூவுலகுஞ்செல்லக்
கடலெனுந்தானையாதிக்காதலன்பூருவன்றி
விடலருவெற்றியாளர்வெறுத்தனர்விரும்பிலாரால். ௪௨

ஒருவரும்விரும்பிலாரென்றுற்றனனென்னைநீதான்
மருவுதல்வேண்டுமென்றுண்மகளிரைத்தீண்டேன்யானென்
றுரைசெயவொருபால்வைகாதுழலுகவெங்குமென்று
விரைவொடுபயத்தின்மாட்டுமேவினளுரைக்கலுற்றாள். சரு

என்னைநீமணஞ்செய்கென்னவென்னுடன்பிறந்தாய்நீயென்
றன்னவனநுசராகுமருஞ்சுரன்முதலினோரை
மன்னுமுன்றனக்குநாளுமருவுபகாரமாகப்
பன்னுவன்படர்தியென்னப்பயமவட்குரைத்ததன்றே. சச

அன்றுவெம்பயஞ்சொல்வண்ணமருஞ்சுரன்றுபனுதி
துன்றிரும்பிணிகளென்னத்துலங்குறுவோர்தம்மோடும்
ஒன்றியவுலகுளோர்பாலுவந்தனளுற்றுளுற்று
நின்றனள்புரஞ்சனன்றனெடும்புரத்திருந்தாளன்றே. சரு

கலிவிருத்தம்.

தாவாதவென்றிகெழுசண்டவேகத்தனென்னும்
மூவாத்திறல்வேந்தன்மூந்நூற்றறுபதின்மர்
ஓவாவயவருடன்சென்றுடல்சிதைக்கப்
பூவார்வடிவேற்புரஞ்சனன்மேற்போர்விளைத்தார். சசு

கவ்வையகன்றுதங்கள்காவலன்கண்டிருப்ப
எவ்வமில்லாவண்ணமிருண்டமனையாரொடுவந்
தவ்வயவரொவ்வொருவராகியமர்விளைத்தார்
செவ்வியுறுவேலான்சிறிதுமறியாவகையே. சஎ

மூந்நூற்றறுபதின்மர்முற்றியமராடப்
பொன்னூர்புரமழிந்துபோகப்புரஞ்சனனும்
தன்னாற்றல்விட்டிறக்குங்காலைத்தன்காதலியை
உன்னுவிழிநீருகுப்பப்புலம்பினனால். சஅ

வேறு.

உண்ணினல்லனவுண்ணலள்சாந்தமும்
தண்ணந்தாருந்தணக்கிற்புனையலள்
கண்ணகன்றிடிற்காமருசாயலம்
பெண்ணணங்குயிர்பெற்றிடவல்லளோ. சக

பாடுகிள்ளைப்பணிமொழிகேட்கிலள்
ஆடுதோகையினடலுங்காண்கிலள்
வாடின்வாடுமகிழின்மகிழுநான்
வீடினெங்ஙனமெல்லியலுய்வளே. ருo

நெஞ்சுநொந்துகணமென்னைநீங்குறின்
அஞ்சுவெண்பிறைத்தீச்சுடலாற்றலள்
துஞ்சின்யான்மதிச்சூடுபொறுத்திவண்
வஞ்சியெங்ஙனுயிரொடுவாழ்வளே. ௫௧

என்றுவேட்டவிளங்கிளிமென்மொழிக்
குன்றின்வீங்கியகொம்மைவருமுலை
மன்றலார்குழலாளைமணக்கொளாப்
பொன்றினன்புவிபோற்றுபுரஞ்சனன். ௫௨

தரைத்தலத்துறுந்தாவரம்பற்றிநின்
றெரித்திடுந்தழல்காண்டனுமேற்றவம்
மரத்தைவிட்டெழும்வான்சிறைப்புள்ளெனப்
புரத்தைவிட்டனன்பொன்னுலகெய்தினன். ௫௩

மகமியற்றுழிமாய்த்தமறியெலாம்
திகழிருப்பினிற்செய்தமருப்பினால்
நகுபொன்னாட்டகநண்ணுபுரஞ்சனன்
அகடுகீண்டவழன்றெதிர்குத்தியே. ௫௪

மாய்வுழித்தன்மனைவியையுள்ளலால்
சேயுயர்ந்தவிண்டீர்ந்துபுரஞ்சனன்
மேயபொங்கர்விதேகத்தரசனுக்
காய்நலத்தபெண்ணாகவுதித்தனன். ௫௫

நன்னலங்கனிவுற்றநறுநுதல்
அன்னபேதையலர்முலைபுல்லினன்
பொன்னங்குன்றிற்பொருகயறீட்டிய
மன்னர்மன்னன்மலயத்துவசனே. ௫௬

நிழலுஞ்செய்யகோனித்திலவெண்குடைச்
செழியன்வேட்டசிறுநுதற்சேயிழை
எழுவர்மைந்தரோடேறெழில்வாய்ந்தவோர்
மழலைமென்மொழிமாதையுயிர்த்தனள். ௫௭

அலையரும்புமமுதுபொதிந்துமெல்
முலையரும்புமழுதினைமுத்தமிழ்க்
கலையரும்புதண்காந்தளஞ்சாரன்மா
மலையருந்தவன்வந்துமணந்தனன். ௫௮

கார்தழைந்தகடலைவயிற்றின்வைத்
தார்தழைந்தவகத்தியன்பொடும்
ஏர்தழைந்தநல்லித்துமவாகனென்
பேர்தழைந்தமுனிவனைப்பெற்றனன். ௫௯

உந்துநீர்நிலனோர்குடைநீழலின்
மைந்தனுளவழுதிவழங்கினன்
செந்தமிழ்ப்பசுந்தேறலுவட்டெழும்
சந்தவெற்பிற்றவம்புரிந்தானரோ. ௬0

பொன்னந்தாமரைப்போதுபுரியவிழ்
கன்னியந்துறையாடிக்கனிநுகர்ந்
தன்னமென்னடைத்தேவியுமாற்றினள்
மன்னுசந்தவரையினின்மாதவம். ௬௧

மத்தயானைமலயத்துவசனீள்
முத்தியெய்தமுழங்கழன்மூழ்குவான்
கொத்துலாமலர்க்கோதைகுறுகலும்
மெய்த்தவஞ்செயொருவன்விளம்புமால். ௬௨

மன்றன்மாமலர்மானதவாவியின்
அன்றிருந்தனமஞ்சிறையன்னமாய்
இன்றுமேவினமிவ்வுடலித்திறன்
ஒன்றலாதவுடலமெடுத்தனம். ௬௩

முல்லையன்னமுகிழ்நகைநீயுடம்
பல்லையென்னவறிந்தனடன்னையவ்
வில்லையென்றதிருநுதன்மெய்யொரீஇ
எல்லையற்றவீடெய்தினளென்றனன். ௬௪

என்றுகூறலுமேழுயர்யானையான்
ஒன்றநீயுரையாடறெளிந்திலன்
மன்றமற்றுவகுத்துரையாயென
நன்றுரைத்தனனாதனென்பவே. ௬௫

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

மின்பொழிந்திலகுகின்றவிழுமணியணியதாகித்
தென்புலமலயச்சாந்துந்தேங்கமழகிலுநாறி
ஒன்பதுவாயில்சேர்ந்தவொருபுரமென்னப்பட்ட
தின்புறவெடுத்துரின்றயாக்கையென்றறிதிவேந்தே. ௬௬

எய்துவதன்றியெய்தாதென்பதையறியான்யானே
செய்தனனென்றுட்கொண்டுசெறுவினைச்சிமிழ்ப்பிற்பட்டுப்
பொய்திகழ்புரமுண்டாக்கிப்புரஞ்சனனென்னப்பட்டான்
மைதிகழ்மாயைமாதைமணந்தவப்புருடனுமால். ௬௭

அடைதருதோழன்சொல்லுமணிமனம்புரமோராக்கை
மிடையுமைந்தலைசேர்நாகமேவியபிராணன்மிக்க
படையெனும்வயவரோடுபதின்மரொன்றுரைக்கப்பட்டோர்
விடயமொடுற்றுநின்றுவிளங்குமிந்தியங்கள்பத்தே. ௬௮

புகலிருசகடுசெய்யும்புண்ணியபாவமாகும்
இகல்பரியைந்துஞானவிந்தியமாகுமைந்து
தகைமைசேராணியாகுஞ்சாற்றியவாயுவைந்தே
திகழ்தருகொடிமூன்றாகுஞ்செப்புமுக்குணங்கடாமே. சுகூ

பரித்திடுமோரச்சென்றல்பகுதியாவரணமேழு
பொருத்தியதாதுபாகன்புந்திதோராக்கைகாடு
தரைத்தலமிரண்டாமம்புசார்விருப்பொடுவெறுப்பாங்
குருத்திகழ்வேட்டைமாக்களுரைமுதலாயவைந்தே. எ0

வண்ணமார்காலகன்னிவளர்சரைசண்டவேகம்
எண்ணுறுகாலமேனியிருடருமனையாரோடும்
அண்ணல்பாலமர்செய்மூந்நூற்றறுபதென்றுரைசெய்வீரர்
நண்ணிருபொழுதென்றேதுநாள்களென்றறிதிவேந்தே. எக

விடுத்திடல்வேண்டும்வேந்தேமேவருகின்றபோகத்
திடைப்படுதருமமெல்லாமிருள்படப்பொதுளுங்கானில்
படுப்பவனிசையிற்சென்றுபடுவதோர்விலங்குபோலும்
அடுப்பருந்துறக்கத்தின்பவவாவினைவிளைக்கின்றானல். எஉ

ஆற்றியவாக்கைவீயுமாயினுமதனுணின்று
தோற்றியவிலிங்கமென்றுசொல்லுமத்தனுவீயாதால்
மாற்றருங்கருமமெல்லாமனச்செயலாகலானே
ஏற்றிடுமின்பதுன்பமிலிங்கநற்றனுவுக்காமே. எங

அமைதனின்மறைந்துநின்றவணிமதிபோலவென்றும்
சுமையுறுதூலமென்னத்தோற்றியவுடலினின்றும்
இமையவரானும்வெல்லாதிலங்குறுமிலிங்கமென்னச்
சமைவுறுதனுவின்றன்மைசாற்றுதுங்கேட்டிவேந்தே. எச

ஐவகைவாயுவீரைந்தாகியபுலன்கள்புந்தி
மைவகையையஞ்சேருமனத்தொடுமருவிலிங்க
மெய்வகைப்பதினேழாகும்விளங்கியதனுவின்செய்கை
பொய்வகையாகுஞ்சீவன்பொருந்தினன்போலுமாதோ. எரு

மனத்தினுக்குற்றசெய்கைசீவனைமருவிநிற்றல்
கனத்துறுகதியவ்வானிற்கதிர்மதிக்கணுகல்போலும்
புனத்துறுசலூகையென்னப்பொருந்தியவிலிங்கம்வேறோர்
நினைத்துறுமாக்கைபற்றிநீங்கிடுநின்றயாக்கை. எசு

ஆதலாலுக்கைசேராதறிவொடுபொருந்தவெண்ணின்
கோதுறுமிலிங்கமென்றுகூறுடன்மாய்க்கல்வேண்டும்
ஓதுடல்பொய்யதேனுமுறுமுணர்வின்றிநீங்கும்
ஏதமின்ஞானம்வந்துற்றிலங்குமந்நாளின்மாதோ. எஎ

அயர்தருவேள்வியின்பமழிவுறுமதனைவெஃகல்
புயலுறழ்மேனிநம்பன்பொன்னடிக்கமலம்போற்றி
உயர்வறவுயர்வீட்டின்பம்பெறுதிநன்றுணர்ந்தோயென்னாப்
பயிலுறுதிவவினல்யாழ்ப்பண்ணவன்போயான்மன்னோ. எஅ

பண்ணவனகலவொன்றம்பற்றிலானாகிச்செங்கட்
கண்ணனையுளத்துநாடிக்கபிலனதிருக்கைசார்ந்து
விண்ணவர்வழுத்தும்வண்ணம்விழுத்தவம்பலவுமாற்றி
அண்ணலந்தனிவீட்டின்பமண்மினனரசரேறே. எகூ

பெறலருவீடுபெற்றபிராசீனபரிகியென்னா
அறவர்சொல்லவிர்த்தானனென்றைதினனாமமுற்றான்
நிறைபுகழ்ச்சரிதங்கேட்போர்நினைத்தவைபெறுவரென்னா
விறலுறுமயித்திரேயன்விதுரற்குவிளம்பினனால். அ௰

பிராசீனபரிகி அவிர்த்தானன் கதையுரைத்த
வத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் நஎகூ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## கூ-வது, பிரசேதசாக்கியர்பதின்மர்கதையுரைத்த வத்தியாயம்.

### தரவுக்கோச்சகக்கலிப்பா.

மழலையிளஞ்சுரும்பர்முரன்மலர்த்துளவோன்றனைவழுத்திக்
குழவிமதிபுனைசடையோன்கூறியகாதையைக்கேட்டு
விழைவினொடுமேற்றிசையின்விழுத்தவஞ்செய்பதின்மர்கதை
மொழிதியெனும்விதுரனுக்குமொழிந்தனன்மித்திரைமகனே. க

பாவரியதனிவீடுபடர்தருபார்வேந்தனருள்
ஒருபதின்மர்தவம்புரிந்தாரொருபதினாயிரம்பருவம்
அருமணிச்செஞ்சுடர்விரிக்குமநந்தபணாடவிக்கிடந்த
இருநிலமோரடிக்காந்தவிறையவனைமனத்துணர்ந்தே. உ

பாய்புனலிற்றவம்புரியும்பதின்மரெதிர்முதியமுகை
வாய்விரிபைந்துளவமலர்மாலைமதுத்துளிதூற்றக்
காய்கதிர்சூழ்குன்றிவர்ந்தகருமுகில்போற்கலுழன்மிசை
ஆயிரம்வாய்ப்பாம்பணைஞானாநந்தன்றோன்றுற்றான். ந

உந்திவிரிசெங்கமலத்தூடெழுந்தபொலந்தாது
சிந்தினபோற்பொற்காஞ்சிதிகழநகைநிலவுமுக
சந்திரமண்டலத்தரும்பத்தாமரைக்கணருள்பொழிய
வந்தெதிரேநின்றபழமறைமுதலைநணிவியந்தார். ச

எழுதாதமறைமுடிவினிருந்ததனிச்சுடர்நமக்கு
விழிகாணவந்ததெனவெள்ளநீர்நின்றெழுந்து
தொழுதார்கண்ணீர்மாரிசொரிதரநெஞ்சகமுருகி
அழுதார்மீண்டானந்தவெள்ளத்தினாழ்ந்தினரால். ரு

குளிர்ப்புறுதெண்ணீரினிடைக்குளித்தரியதவம்பலநாள்
விளைத்தவருட்டண்ணென்னவிழிக்கருணைமாரிசொரிந்
தளித்திடுதும்விழைந்தவாமறைமின்களெனலுநறுத்
துளித்ததுழாய்முகிலுரைப்பத்துதித்தனர்மாதவருரைப்பார். சு

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கள்ளுடைந்தொழுகுதண்பூங்கற்பகமெதிர்ந்தவண்டு
விள்ளுபூந்தருவேறொன்றுவிழையுமோகமலச்செங்கண்
வள்ளனிற்காண்டலொன்றேவரனெனவணங்கிவாழ்த்தப்
புள்ளரசுயர்த்தபெம்மான்புகன்றனன்மகிழ்வுகூர்ந்தே. எ

வானகமடவாள்பாரில்வந்தனளொருத்திமன்றற்
கானிடைத்தவஞ்செய்கின்றகண்டுமாமுனிவற்புல்லி
நீனிறவிசும்பைவென்றுநெறிந்துநெய்த்திருண்டுவார்ந்து
தேனொடுசுரும்புமூசுஞ்செறிகுழனங்கையீன்றாள். அ

உழையுழையொதுங்கிநீண்டவோடரித்தடங்கண்வண்டா
மழலைபைந்தேனாச்செவ்வாய்மன்னுதண்டளிராவாய்ந்த
குழைதிகழ்கொடியிற்றோன்றுங்கோதையைநெகிழ்ந்துபூந்தேன்
பொழிதருநிழல்வைத்தீன்றாள்போகுயர்விசும்புபுக்காள். கூ

வைத்திடுநெறியகோதைமாரிடையெனும்பேர்பெற்றுத்
தத்தொளிகிளைக்குந்தண்ணந்தடங்கதிர்மதியங்காப்பக்
கொத்துறுதருக்கட்கெல்லாங்கூறுமோர்பெண்ணென்றாகிப்
புத்தமுதோடுதோன்றும்பொன்னெனப்பொலிகின்றாளால். க0

ததைமலர்செறிந்துதாழ்ந்ததடஞ்சினைத்தருக்கடாமே
மதரரிபரந்தவுண்கண்வல்லியைவழங்குநீவிர்
பதின்மரும்பவளச்செவ்வாய்ப்பாசிழையாளைவேட்டோர்
புதல்வனையீன்றுவேலைப்புவியெலாம்புரக்கல்வேண்டும். கக

எண்ணுபத்திலக்கயாண்டவ்வேழையோடின்பந்துய்த்து
மண்ணகம்புரந்துவீடுமருவுதிர்நீவிரென்னா
அண்ணலம்பசும்புட்பாகனருளினிற்புகன்றுபோகப்
பண்ணவற்பரவிநீங்கிப்பதின்மருநகரஞ்சார்ந்தார். கஉ

கருங்கடல்வேலிஞாலங்காடுகொண்டிருத்தல்காணாப்
பரந்திடுகனலுங்காலும்படைத்தனர்விடுத்துவல்லே
சுரும்புசூழ்மரங்களெல்லாஞ்சுட்டனர்சுடலுநின்ற
மரஞ்சுடலொழிமினென்றுமலரவன்மறுத்தான்மன்னோ. கந

அளிக்குலம்பரந்துபாடவரும்பவிழ்வல்லிபுல்லும்
நளிச்சினைத்தருக்கடம்மைநான்முகன்சென்றுநண்ணி
விளைத்தெரியூட்டுகின்றவெந்திறல்வேந்தர்க்கன்பால்
வளர்த்தபொன்கொடியைநீவிர்வழங்குமினென்றுசொற்றான். கச

அரக்கிதழ்முளரிமேலானரசர்பானண்ணிஞாலப்
பரப்பெலாம்புரப்பீர்நீயிர்பதின்மருங்கோடலாகும்
தருக்குலம்வளர்த்ததெய்வத்தாமரைமுகத்தினாளை
விருப்புறமணத்திரென்னவேட்டனரெம்பமன்றே, கரு

கலிவிருத்தம்.

ஐயிருமன்னவராடுபொந்தளின்
பையிளைவென்றகல்பருமவல்குலாள்
வெய்யபூணிளமுலைவிருப்பிற்புல்லினர்
வையகநிழற்றினர்மாலைவெண்குடை. கசு

கொத்தலர்துளவணிகொண்டல்கூறிய
அத்திறமாதொடுமமராண்டினில்
பத்துநூறாயிரம்பருவம்வேலையின்
தத்துநீர்சூழுமித்தரணிதாங்கினர். கஎ

மன்னவன்சாக்குடமனுவின்காலத்துப்
பன்னுபல்லுயிரெலாம்படைத்ததக்கன்முன்
உன்னுமூழ்வினையினாலுடலநீத்தனன்
துன்னுசீர்ப்பதின்மர்தந்தோன்றலாயினான். கஅ

ஈன்றவத்தக்கனையினிதுநோக்கினர்
ஆன்றவிவ்வுலகநீயரசுசெய்கெனாக்
கான்றபொற்சுடர்முடிகவித்துக்கானகம்
தேன்றருதாரவர்சென்றுமேயினார். ககூ

இல்லறஞ்சில்பகலியற்றிவைகலால்
தொல்லைநல்லறிவெலாந்தொலையப்பெற்றனம்
வல்லையின்முத்திசேர்வழியுரைக்கென
நல்லிசைநாரதனண்ணிக்கூறுவான். உ0

கார்முகில்வண்ணனைக்கருதிலார்களை
ஓரிருகால்விலங்கென்னவோதுவார்
கூரும்வாலறிவினரென்றுகோதிலா
நாரதமாமுனிநவிலுமீட்டுமே. உக

விரிதருந்தண்புனல்வேரிற்பெய்திடின்
மரனெலாந்தழையுமாமாணமாய்விலா
முருகுலாந்தண்டுழாய்முதல்வற்போற்றிடின்
உரவுநீருலகெலாமுவக்குமென்பவே. உஉ

கந்தரம்வான்மிசைக்கவினவொல்லையின்
வந்ததின்மறைவதுபோலமாலுழைச்
சுந்தரவுலகெலாந்தோன்றிநின்றபின்
அந்தமுமவனுழையடையுமென்பவே. உரு

வெய்யவன்கதிரினல்வீழ்ந்தண்புனல்
செய்யவக்கதிரினுற்சேருநாசம்போல்
கையுறுமுலகெலாங்கருணைமாலுழை
ஒய்யெனத்தோன்றிப்பின்னொன்றுநாசமே. உச

பாடுமின்பசுந்துழாய்பரமன்பல்புகழ்
சூடுமின்மாயவன்றூயதாண்மலர்
நாடுமினுகணையானைநன்கெனப்
பீடுசானாதன்பெயர்ந்துபோயினன். உரு

பதின்மருமாதவம்பல்புரிந்துவான்
நதிதருமால்பதநண்ணினரென
விதுரனுக்கியம்பினன்வெளிறுநீங்கிய
மதியினிற்சிறந்தவம்மயித்திரேயனே. உசு

எனவுயர்சுகமுனியெடுத்தியம்புவான்
வினைமுதறடிந்தவவ்விதுரன்வல்லைபோய்
நனைகவுட்புழைக்கைம்மாநகரநண்ணினன்
தனிவனம்புகுத்தினன்றம்முனனையே. உஎ

பெரும்புகழ்சேர்பிரசேதசப்பெயர்
பொருந்தியபதின்மர்தம்பொருவின்மாக்கதை
தெரிந்துறமொழிபவர்செவியின்மாந்துவோர்
அரும்பெறனலநுகர்ந்தடைவர்முத்தியே. உஅ

ஒன்னலர்வணங்குமுத்தானபாதனும்
மன்னவன்மரபினைவழங்கினேனவன்
முன்னவன்மரபினிமொழிவல்கேளெனப்
பன்னினன்முனிவரன்பார்த்திபற்கரோ. உகூ

போதினன்முகன்றொழும்புனிதமால்கதை
காதலானிச்சலுங்கருத்துணுடுமா
மாதவம்புரிதருமறைவல்லீரெனச்
சூதமாமுனிவரன்சொல்லன்மேயினன். நO

பிரசேதசாக்கியர் பதின்மர் கதையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் சOகூ.

சு-வது, ஸ்கந்தம் முற்றிற்று.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## ரு-வது, ஸ்கந்தம்.

## க-வது, பிரியவிரதன்மரபுரைத்தவத்தியாயம்.

---

### எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கேட்டிவாளரசமகதியாழ்முனிபாற்கேட்டனன்றன்னிலையறிந்த
வாட்டிறற்பிரியவிரதன்வண்டறைதார்மன்னவர்மணிமுடிவணங்கச்
சேட்டிளம்பரிதியிளவெயில்கிளைக்குந்திருமணிநெடுமுடிபுனைந்து
சூட்டுவாளரவஞ்சுமந்தபார்புரந்துதுழாய்முகில்பதமடைந்தனனால். க

என்னலுமிறைவன்முழுதுணர்சுகன்றனெறிக்கும்வாண்மதிமுகநோக்கித்
தன்னிலையறிந்ததாமவேல்வேந்துதயங்கொளிபொழிமணிச்சுடிகைப்
பன்னகஞ்சுமந்தநெடுநிலம்பரித்தபான்மையென்பரவைமண்பரித்தும்
கன்னியந்துளவோனுயர்பதம்யாங்குக்கலந்தவாகழறெனக்கரைவான். உ

குளிறுவெண்டரங்கக் கருங்கடன்முகந்த கொண்டல்வாய்பொழிந்த வெண்முத்தும், ஒளிறுசெம்மணியு மருவிகொண்டிறங்கு மோதைபெற் றெழுகுழும்மதத்துக், களிறுகண்படுக்குங் காந்தளஞ்சாரற் கந்தமாதன நெடுங்குன்றம், வெளிறிலாக்கேள்வி மன்னவனடைந்து விழுத்தவமி ழைத்தனன் விழைந்தே. ங

வியலிருவிசும்பினிமையவரெரிபொன் விமானமெண்ணிறந்தனதொடர்ந்
வயின்வயின்மிடையவுயிரெலாம்பூத்தவானவன்கதிர்மணிவிமானம் [து
உயர்வெளியளக்கும்பரிதிபல்கோடியுதித்தெனவொள்ளொளிதழைந்து
புயன்முகக்கிழித்துமன்னவன்றவஞ்செய்பொலங்கிரிப்புறத்திறுத்தன்றே. ச

கோத்தவெண்டிரையில் வளர்தருபச்சைக் குழவிதன்னெழில் வரு மூந்தி, பூத்தசெம்முளரி மலரினோன்வருதல் புரவலன்கண்டெழுந் திறைஞ்சி, ஏத்தினனேத்த வாட்டிறற்குரிசி லென்னைநீ யருந்தவம்புரிதி, காத்தியாலொருவெண் குடைநிழல்பரப்பிக் கண்ணகன் புவியெனப்பகர் வான். ரு

எண்ணுறுகாமமுதற்பகையடக்காரிருள்படுகானகத்தேகி
நண்ணினுமாயைவலையினைக்கடவார்நவிற்றுவெம்பகைநலிந்தறிந்தோர்
மண்ணகம்புரந்துமகவொடுமகிழ்ந்துவைகினுமாயையையமருவார்
பண்ணுறுகருமங்களுவெனப்பார்த்துப்பார்புரந்தருளெனப்பணித்தான். சு

மோட்டுநீருலகமுழுவதும்பூத்தமுழுமுதல்பணிக்கவுண்மகிழ்கூர்ந்
தூட்டாகமெறிசெந்தாமரையனையவொண்மலர்க்கரத்தினுற்றந்தை
சூட்டிபபசுமபொற்சுடர்முடிபுனைந்துசூட்டராச்சுமந்தபாரேழும்
பாட்டுவண்டிமிருநறுமலர்த்தெரியற்பனிமதிக்குடைகவித்தளித்தான். எ

ஒருதனியாழிவெஞ்சுடர்மறைந்தவோர்புறத்திருட்குறும்பெறிவான்
விரைசெலமான்றேர்ப்பரிதியிற்கடாவி மேருவைவலங்கொளததடந்தேர்
எரிமணியாழியிருநிலங்கிழித்தவெல்லையேயேழெனக்கிடந்த
பொருதிரையாழியாயமற்றவன்றன்புகழினையெங்ஙனம்புகல்கேன். அ

எழுதினமாழியெழுமுறையுருளுமிடைவெளியேழுதீவென்ன [ம்
விழைவொடுதடந்தேர்நடத்துமவ்வேந்தன்விச்சுவக்கருமனென்றுரைக்கு
தழைபுகழ்விதிமுன்னுயிர்த்தநல்லணங்கைத் தழுவியோர்தயங்கெழிற்பெ
ண்ணோ,டழகுசெயாக்கினித்திரண்முதலாமையிருபுதல்வரையளித்தான்.

## அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

ஆரழுமஞ்சான்றவாங்கவர்தம்மின்மூவர்
கூரழல்காய்ந்துநின்றகுறிப்பருந்தவத்தராக
ஓரெழுதீவமோரேழ்புதல்வருமுவப்பவீந்தான்
காரெழுமின்னினன்னகாய்கதிர்ப்புலவுவேலான். க0

காவலனுயிர்த்தமாதைக்காவியற்களித்தானன்னோன்
கோவைவெண்முத்தமூரற்குவிமுலையணங்கைப்புல்லி
ஆவியந்துகிலாடெய்வயானையையீன்றானந்த
மாவகிர்நெடுங்கணுளையயாதிமாமணஞ்செய்தானால். கக

மத்தவெங்களிநல்யானைமனுமகன்பின்னும்வேறோர்
புத்தமுதனையமாதைப்புணர்ந்தனன்புணரவன்றாட்
குத்தமன்றாமதன்பாருரைக்கும்ரைவதனிம்மூவர்
வித்தகர்மனுக்களாவோர்விளங்கவந்துதித்தாரன்றே. கஉ

துதிதருதீவோரேழுந்தொடுகடலேழுமாக
முதுநிலவரம்புகண்டமுதல்வனென்றெவரும்போற்றப்
பதினொருபத்தினோடேபடர்ந்தறுகோடியாண்டு
விதிமுறையுலகங்காத்துமேவினன்மீட்டுங்கானம். கங

மேவருந்தவத்தோர்கூறுமெய்ம்மறைகேட்டுநாளும்
பூவையுங்கிளியும்பேசும்பொதும்பர்சூழிமயச்சாரற்
றீவியமழலைச்செவ்வாய்ச்சிறுவரைப்பெறுதல்வேண்டி
நாவலந்தீவுகாப்போனற்றவமியற்றினானால். கச

அற்றமில்புகழ்சேர்வைவேலாக்கினித்திரனென்றோதும்
வெற்றிநாவலந்தீவாளும்வேந்துசெய்தவமுட்கொண்டான்
பொற்றருநீழல்வாழும்பூருவசித்தியாதி
உற்றரமகளிர்பாடவுவந்துறைமலரின்மேலான். கரு

எடவிழ்கமலத்தண்ணலின்சுவையமுதமூறப்
பாடினணின்றசெவ்வாய்ப்பவளவாயணங்கைநோக்கி
நாடினன்றவஞ்செய்கின்றநாவலந்தீவினாற்குத்
தோடவிழலங்கன்மாலைசூட்டெனவருளினானால். கசு

அன்னமுமயிலும்போலவரசிளங்குமரர்க்கெல்லாம்
முன்னவனாகின்றமூரிவேற்காளைமுன்னர்ப்
பொன்னிணர்வல்லியென்னப்பூருவசித்தியென்பாள்
மின்னெனவமுதமென்னவிண்கிழித்தெய்தலுற்றாள். கஎ

அலையுறையரியேறன்னனழகுவீற்றிருந்தமார்பும்
வலைகடலவனிதாங்கிவரையெனப்பணைத்ததோளும்
தலையவிழ்ந்தலருஞ்செய்யதாமரைக்கண்ணுமுண்கண்
களிகொளநோக்கிநெஞ்சங்கலுழ்ந்தனள்வியந்துநின்றாள். ௧௮

மழைகிழித்தெழுந்தமின்போல்வந்தனணின்றமாதின்
குழைகிழித்தொழுகுங்கண்ணுங்குறுநகைப்பவளவாயும்
இழைகிழித்தெழுந்தகொம்மையிளமுலைத்தடமுநோக்கி
அழலுயிர்த்தொளிறும்வேலானாற்றலனாயினானால். ௧௯

எந்தெழிற்பிறைவெண்கோட்டவிளங்களியானையன்னான்
கூந்தலம்பிடியினின்றகுறுநகைக்குமுதச்செவ்வாய்
மாந்தளிரன்னமேனிமழைமதர்நெடுங்கட்பேதை
சாந்தணிந்தேந்துகொம்மைத்தடமுலைதழுவினானால். ௨௦

கொந்தழற்குருதிவேலான்கொய்ம்மலராகலந்தோய்ந்த
அந்தளிரனையசெவ்வாயணியிழைவயிறுவாய்த்த
நந்தலில்சிறப்புமேயநாபியேமுதல்வராய
மைந்தரொன்பதின்மர்மாலைமதியெனவளர்ந்தார்மன்னோ. ௨௧

உரைசெயுநாபிவைவேலுற்றகிம்புருடன்வண்மை
அரிதிகழ்கேதுமாலனணியிளாவிரதனன்மை
மருவுபத்திராச்சுவன்னேர்வாய்ந்திடுமிரம்மிகன்வெங்
குருதிவேலிரண்மயன்சீர்க்குருவெனுமவர்கள்பேரே. ௨௨

மேவலர்க்கடந்தவொள்வேல்வேந்தனுமத்தோன்றல்
ஓவலில்சிறப்புவாய்ந்தவொன்பதுவருடமாக்கி
நாவலந்தீவுதன்னைநாபியேமுதலினோர்க்குக்
கோவடுகுருதிவைவேற்குமரர்போரகவீந்தான். ௨௩

நவில்கருங்கடல்சூழ்கின்றநாவலந்தீவென்றோதும்
புவிமிசைமனையாளாயபூருவசித்தியோடும்
கவினொடுபத்தினோடுகலந்துறகோடியாண்டு
குவைபெறுமின்பந்துய்த்தோன்குறுகினன்வானத்தன்றே. ௨௪

அழிவில்சீர்நாபியாதியாகுமொன்பதின்மர்செம்பொன்
எழிறிகழ்மேருவீன்றவிளநகைப்பவளச்செவ்வாய்
விழைவுறுமேருத்தேவிமுதலமென்கொடியனோர்
தழையுமொன்பதின்மர்தம்மைத்தனிமணமியற்றினரால். ௨௫

ஆற்றல்வேனாபிவேள்வியாற்றலுங்கருணைகூர்ந்து
காற்றெறிசிறைப்புட்பாகன்கருமுகிலென்னத்தோன்ற
மாற்றருநின்போன்மைந்தன்வழங்கெனயாமேவந்து
தோற்றுதுமென்றுவேதத்தொன்முதலருளினானால். ௨௬

மடவான்மேருத்தேவிவனமுலைபொருதுவிண்ட
தொடையலங்கோதைதாழ்ந்துதுயல்வரப்பணைத்துவீங்கும்
அடல்கெழுதிணிதோளுபிக்காழியந்தடக்கையானே
இடபனென்றுலகமெல்லாமேத்துறத்தோற்றஞ்செய்தான். உஎ

பயந்தநன்மகவென்றேதும்பசுந்துழாயிடபனென்போன்
சயந்தியென்றுரைக்குமாதைச்சதமகனளிப்பவேட்டு
வயந்தருவளஞ்செறிந்தயாநிலமகிழ்ந்துகாப்ப
நயந்துநற்றவஞ்செய்வான்கானண்ணினனுபிமாதோ. உஅ

மழைவளஞ்சிறப்பமுந்நீர்மாநிலவளாகங்காத்து
விழைவெறிந்துலகமெல்லாமெய்ந்நெறிபடரும்வண்ணம்
பழமறைமுடிவுகூறும்பாடல்சாலிடபற்காங்கு
நுழைபுலன்வாய்ந்தமைந்தர்நூற்றுவர்தோற்றஞ்செய்தார். உகூ

மருவருந்துறவுபூண்டுமைந்தரொன்பதின்மர்செல்ல
உரைசெய்வேதியராயெண்பத்தொருதிறற்குமரர்செல்லப்
பரதனென்றுலகமேத்தும்பரிதிவேன்மைந்தனேனை
அரசிளங்குமரர்தம்மோடகனிலம்புரவுபூண்டான். ஙO

மன்னியதுறவறங்கள்வழங்கியும்வங்சமாதி
உன்னியதேயத்தூமருணர்விலாப்பெயரேபோலத்
துன்னியுமுலகுளோர்க்குத்தொலைவில்பேர்வீடுசேரும்
நன்னெறிதெரித்துமுத்திநண்ணினனிடபன்மாதோ. ஙக

புனைகுடைப்பரதனென்போன்போற்றுதன்பெயரேபெற்றுப்
பனிவரையெல்லையாமிப்பாரகம்பொலியக்காத்துத்
தனியெழில்சேரும்பஞ்சசனியிளமுலையிற்புல்லி
வினைகழற்சுமதியாதிமைந்தரைவரைப்பெற்றானல். ஙஉ

எவ்வரைக்குலமுமஞ்சவேந்தெழிற்றிணிதோன்மைந்தர்
ஐவருமவனிகாப்பவைவரையகத்துள்வென்றேன்
கைவரையழைப்பவந்தகாரணற்கன்புபூண்டு
மைவரையருவிச்சாரன்மருவினன்மன்னவென்றான். ஙங

பிரியவிரதன் மரபுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ஙங.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## உ-வது, பரதன்சரித்திரமுரைத்தவத்தியாயம்.

---

### கலிவிருத்தம்.

வரதன்மாயன்மலரடிக்கன்புசெய்
பரதன்செய்திறமபன்னுதிநீயென
விரதமேவியவேந்துவினுதலும்
சாதமாதவத்தோனதுசாற்றுமால். க

பந்தநீக்கும்பரதன்பருப்பதத்
தெந்தவண்ணமாலெய்தகினைக்கினும்
அந்தவண்ணமாலாங்குறவன்புசெய்
புந்தியான்புலகன்னுழைப்போயினான். உ

புக்குறைந்துபொருவருமாதவம்
மிக்கியற்றிவீடெய்துறவைகுநாள்
தக்கயோகத்தின்றன்மைதகர்வுற
அக்கணுற்றதறைவனென்றோதுவான். ங

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கொண்டலிற்பிளிறும்யானைக்கூர்நுதிமருப்பிற்றோன்றி
வண்டொடுசுரும்பர்மூசமன்றலம்பொதிவாய்விண்டு
கண்டனுண்மடற்றேன்சிந்துங்கண்டகியென்னும்யாற்றுத்
தண்டுறையொழுகுநன்னீராடுவான்றலைச்சென்றானால். ச

நிரையுளையரிமானென்றுநிழல்சுளிகளிறுநாடி
உருமெனவுறறியார்க்குமொலிசெவிபடுதற்கஞ்சிக்
கருநனிகலங்கியங்கட்கவையடியிளமானீன்ற
ஒருபசுங்கன்றுநீரோடொழுகியாங்குற்றதன்றே. ரு

கைம்முகந்தெடுத்துமென்மான்கன்றுயர்கரையினுய்த்து
மெய்ம்முகந்தெளிந்ததூயோன்விரிபுனனெறியினாடி
நெய்ம்முகங்கமழுஞ்சூலகிழற்படைநக்கன்போல
அம்மறியேந்தியேகியன்பொடுவளர்த்திட்டானால். சு

குன்றின்வானருவிவீழ்ந்துகுழித்திடுமறையிலாமான்
கன்றுள்ளிப்பொழிந்ததீம்பால்காதலிற்பருகவூட்டும்
இன்றிதுகறிக்குமென்னவெழுந்துதன்கையாற்கொய்து
துன்றியபசியபச்சைத்தோட்டுமெல்லறுகுநீட்டும். எ

தெறித்தெழுந்தொழுகுதெய்வத்தீம்புனலாற்றுத்தண்ணந்
துறைத்தலைக்கிடந்தபச்சைமரகதஞ்சுடர்வமேன்மேல்
எறித்தவஞ்சுடரைப்பைம்புல்லென்றுதன்னெருத்தங்கோட்டிக்
கறிப்பநாவளைத்தநோக்கிக்கதிரிளமுறுவல்காட்டும். அ

மன்னுபூந்துறையிற்றண்ணீர்மாந்துவான்படருங்காலும்
கொன்னழற்சீற்றப்பேழ்வாய்க்கோட்புலிகவருமென்னப்
பின்னெழுந்தேகுமாலைப்பிறைநுதன்மடந்தைவேட்ட
பொன்னுழைதொடர்ந்துசென்றபுயனிறக்கடவுள்போன்றே. கூ

துளிக்கருங்கமஞ்சூற்கொண்டறுயில்குளிர்சோலைதாழ்ந்த
நளிச்சினைமறையின்யாங்குநண்ணியதென்றுநேடும்
ஒளிக்கறைமதியிற்றுஞ்சுமோங்செழிலிளமானென்னப்
பளிக்கறைமுகட்டினேறித்துஞ்சுதல்பரிந்துபார்க்கும். க0

பாந்தளஞ்சேக்கையானைப்பரவுறுபொழுதுநாடும்
வாய்ந்தபூங்கமலக்கையால்வருகவென்றழைக்கும்வந்து
மோந்துதன்மேனிக்கமுகமலர்மலர்ச்சிகூரும்
எந்தினனெடுக்கும்புல்லுமெழின்மணித்தோளினேந்தும். ௧௧

மின்னுழைமருங்குலார்போல்விழித்திடுமிளமான்கன்று
தன்னுழைவளரமாலைத்தண்மதிபுரையுந்தக்கோன்
இன்னவாறொழுகியாங்கிறந்திடுபொழுதுமான்மேல்
மன்னியநினைவுதன்னான்மானுருவாயினானல். ௧௨

தெறிகடைமடமானாகப்பிறந்துமுற்பிறந்தைசேர்ந்த
அறிவுவிட்டகலாதாகவருவியஞ்சாரற்குன்றும்
எறிதிரைநதியுமாடிச்சில்பகலிறப்பத்துஞ்சி
மறைபயிலங்கிராவின்வழியினிற்றோன்றலுற்றான். ௧௩

முற்றுணர்வுடைமையாலேமுனிவரர்கிளந்தவாறு
கற்றிலன்செய்யாமுன்னூல்கலைத்திறங்கேட்டிலானல்
பற்றிலன்மனத்தில்யாதும்படுபகைநட்போடில்லான்
பெற்றிலன்வருந்தியொன்றும்பேசிலனொழுகினானல். ௧௪

நங்குலத்துதித்ததோன்றனவில்கிலன்மறைமற்றென்னாத்
திங்களிற்கலைகள்வாய்ந்ததெய்வதக்கிழவரெல்லாம்
தங்களிற்புலம்பிநைந்துதாற்றிளங்கமுகுசூழ்ந்த
பைங்கழைக்கரும்புவேலிப்பழனநீகாத்தியென்றார். ௧௫

வினைவிளைவின்றிநின்றோன்வேதியர்பணித்தவண்ணம்
நனைவிளைபொங்கர்வேலிநளிபுனற்பழனங்காத்தும்
பனைவளைத்தடக்கைவேழம்படர்வரையருவிச்சாரற்
றினைவிளைபுனங்கள்காத்துந்தெள்ளிதினொழுகுநாளின். ௧௬

அழற்கதிர்ப்பரிதிவெம்மையரசுவீற்றிருக்கும்பாலைக்
கிழத்திகொள்பலிக்குவந்துகிடைத்தனனிவனென்றெண்ணூஉத்
தழைத்தெழுமுவகையாலோர்வேட்டுவத்தலைவன்பற்றி
வழித்தனன்குருதிச்சாந்தமலர்த்தொடைசூட்டினானல். ௧௭

இன்னமுதொழுகுமாலையிளம்பிறைசடிலத்தேந்து
கன்னிமுன்னெய்தக்கன்னிகட்கடைகனலநோக்கி
அன்னவன்றன்னைக்கொல்வானமைந்தவர்சென்னிசிந்த
மின்னுமிழ்ந்திலங்குவாளால்வெய்தினிற்றுணித்துவீழ்த்தாள். ௧௮

நிறைந்தபேரொளியைநெஞ்சினிறீஇயுணர்துயோன்றன்னை
எறிந்திடவுற்றாரொள்வாளேறுபட்டிறந்துளாரால்
அறந்தலைமணந்துநின்றவறிவினர்க்கிறுதியெண்ணும்
மறந்தலைமணந்தார்வாழ்தலுண்டுகொன்மதிக்குங்காலே. ௧௯

ஊனுடையொருவனிவ்வாறெழுகுநாளொலிநீர்வேலி
இருநிலவலயங்காக்குமரகுகணனென்னுமேந்தல்
மருளறுஞானமெய்தமாமணிச்சிவிகையூர்ந்து
கருணைபாய்கமலச்செங்கட்கபிலனதிருக்கைசெல்வான். ௨௦

முனிவொடுவிழைவிலானைமுழுமக்கள்வலிதிற்பற்றிப்
புனைமணிச்சிவிகையாங்குப்பொறுக்கெனப்பொறுத்தலோடும்
இனிதினிற்பொறுத்தியென்னேயிளைத்திருந்தாய்கொலென்னக்
கனியிதழ்விண்டுகூறாக்கட்டுரைசழறலுற்றான். ௨௧

இளைத்தலும்பெருத்தறானும்யாக்கையின்குணமற்றன்றே
இளைத்திடினுயிர்க்குமுண்டேயென்னலுங்கேட்டவேந்தன்
உளத்தினடுக்கமெய்தியூர்திநின்றிழந்துவல்லே
அளித்திடல்வேண்டுமென்றவமலனைத்தொழுதுசொல்வான். ௨௨

இந்தனத்தழலின்வெம்மையியைந்தவெம்பதலைநீருள்
வெந்திடுமரிசிபோலமிடையும்வெவ்விடும்பையாலே
நொந்திடுமாக்கையுற்றநூவலருந்தாபமெல்லாம்
நந்தலிலுயிர்க்குண்டென்றேநாடுமென்னுள்ளமையா. ௨௩

ஆரைநீபொறுத்தல்வேண்டுமறிந்திலனளியேன்மையல்
வேரறிந்தகற்றிமெய்ம்மைவிரித்திடல்வேண்டுமென்ன
மூரல்கொண்முகத்தனாகிமுழுவதுமுயர்ந்ததூயோன்
தேருமறைகளெல்லாந்தெள்ளிதிற்றெரிக்கலுற்றான். ௨௪

தாளிணைபொறுத்துநின்றதழைத்ததோர்மார்புமார்பு
தோளிணைபொறுத்ததேந்துதோளிணைசுடர்ந்துமின்னும்
வாளுடையரசனென்னவருபொருள்பொறுத்தமற்றென்
கோளுறுமீங்கிவ்வெல்லாங்குறிக்கின்மண்ணாகுமன்றே. ௨௫

கலிவிருத்தம்.

வியப்புறுமனலினால்வெதுப்புநீருறும்
செயிர்ப்பறுவானையத்தீச்சுடாதுபோல்
நயப்புறுமனத்தினைநண்ணுதாபத்தீ
உயிர்க்கிலையறிந்தவருணருங்காலையே. ௨௬

திரியொடுநெய்செறிவுற்றசெஞ்சுடர்
எரிதருங்கிருதுவுற்றிலங்குமாறுபோல்
விரியுமுக்குணத்தொடுமேவின்மாமனம்
உரைதருபிறவியையொழிப்பதில்லையே. ௨௭

பன்னுமுற்பிறந்தையிற்பரதனென்னயான்
இந்நிலம்புரந்திடரகற்றியாவும்விட்
டுன்னியதவத்தொடுமொழுகுநாளினோர்
கன்னிமானுழையனங்கலந்திறத்தலான். ௨௮

அவ்வுழையுருவமுமடைந்துவிட்டபின்
இவ்வுருவெடுத்தனனின்னமொன்றினும்
கவ்வைசெய்மனங்கதுவாதுநின்றனன்
செவ்வியோய்பவக்கடற்செலவுமாற்றியே. ௨௯

சீலமுற்றுயர்ந்தவர்ச்சேரின்வீடுறும்
மாலையுற்றறிவிலார்மருங்கடைந்திடின்
வேலையுற்றலைதரும்பென்னவெம்பவக்
கோலமுற்றிறந்திறந்துழலல்கூடுமால். ௩0

இடையுறுமென்பினைநரம்பினூர்த்திடாப்
புடையுறுமிறைச்சியாற்பொதிந்துபோக்கற
மிடைதருதோலினுன்வேயப்பட்டதோர்
உடலினையானெனவுரைக்கலொண்ணுமோ. ௩௧

பண்ணுறுகருமத்தாற்பவக்கடற்கரை
நண்ணுவனெனநயந்திருத்தல்வாழ்
எண்ணறுபுலிமிடைந்தியல்வெங்கானகம்
கண்ணிலான்கடக்குதல்கருதல்போலுமே. ௩௨

காட்டினிற்கலந்துறைவிலங்குகானலை
ஆட்டுதெண்டிரையருநீரதாமென
வேட்டுறுமாறுபோல்விடயவின்பமே
நாட்டமுற்றறிவிலார்நலிவருள்ளமே. ௩௩

பொன்னினைவிழைந்துழைப்புகுந்துவாடுவார்
மன்னியகுளிர்நனிமாற்றுவோமெனத்
துன்னுவெங்கானழறுலங்குவாய்நரி
தன்னைவெங்கனலெனச்சார்தல்போலுமே. ௩௪

வருஞ்சுரந்தனின்வழிவழுவியேகுழிப்
பொருந்திவெங்கரிவரப்புலம்புவாரென
அரும்பிணிக்குழிவிழுந்தழுந்திக்கூற்றுவன்
விரைந்துகண்ணெதிருறவெருவுவாரரோ. ௩௫

பறவைவெம்பசியினிற்பழுத்தகாட்டகத்
துறையுமுள்ளிலவையுற்றுணங்குமாறுபோல்
நெறிதவிருலுத்தர்தநீள்கடைத்தலை
அறிவிலரடைந்தடைந்தழுங்குவார்களால். ௩௬

தீட்டரும்பழமறைச்சென்னிமேலுறச்
சூட்டியமால்பதத்துணைநினைக்கிலார்
வீட்டருமிடரிருள்விரிந்தவெம்பவக்
காட்டினையெங்ஙனங்கடக்கவல்லரே. ௩௭

கருதுசேயன்னைகாதலியிப்பாருளோர்
பொருவருந்தாதைநற்புதல்வனாயகன்
அரசனென்றறையநீயடைதல்போலொரு
பிரமமேமாயையிற்பேர்நள்பெற்றதே. ௩௮

ஈனுலகிடாறவினிதுகொண்டநீ
யானெனுஞ்செருக்கினோடிராகமாதியாம்
கானுறைகுறும்புகள்கடிந்துதீங்கற
ஊனமின்ஞானமாமுலகுங்கோடியால். ௩௯

என்றனனுரைத்தலுமிறைஞ்சிவேந்தனும்
சென்றனன்பாற்கடற்சேர்ப்பன்பூங்கழல்
மன்றலந்தாமரைமனத்துணர்டினன்
வென்றனன்வல்வினைவீடுற்றானரோ. ௪0

பாவைமாநிலம்புகழ்பரதன்காதலன்
உரைதருமிடபனைத்தொழுகுசீலவான்
சொரிமதுமலர்த்தொடைச்சுமதிபெற்றசேய்
தெரிபுகழ்புனைதருதேவதாசித்தே. ௪௧

அன்னவனளித்தசேயடையலார்தினம்
சென்னியின்வணங்குதாட்டேவத்தியும்மனன்
என்னுமம்மன்னவனீன்றமைந்தனும்
பன்னுசீர்சேர்பரமேட்டியென்பவே. ௪௨

ஆங்கவன்பிரதிகனாகுமைந்தனைத்
தீங்கறவுயிர்த்தனன்செப்புமின்னவன்
பூங்கழற்பிரதிகத்தாவைப்பூத்தனன்
ஈங்கிவன்மதலைபூமன்னெனன்றேத்துவார். ௪௩

உரைத்தவம்மன்னவனுத்துகீதனும்
வரைத்தடம்புயனருண்மாபின்வாரிசூழ்
தரைத்தலத்துயிர்கடன்னுயிரென்றெண்ணுபு
நிரைத்ததார்க்கயனெனநிகழ்த்தும்வேந்தனே. ௪௪

யானெனதெனுஞ்செருக்ககற்றியாவையும்
தானெனக்கருதியித்தரணிகாத்துயர்
வானவர்மகிழ்தரமகங்களாற்றினன்
ஊனமிலவன்புகழ்யாவரோதுவார். ௪௫

இத்திறம்புரிகயனினிதினீன்றசேய்
சைத்திரதனெனச்சாற்றுமானவேல்
வித்தகனளித்தனன்விளங்குபைங்கதிர்
த்தெழிற்பூணணிசாமுராட்டுவே. ௪௬

அடையலர்வணங்குமவ்வரசனல்கிய
மடலவிழ்பூந்தொடைமரீசிபெற்றனன்
விடலருமன்புடைவிந்துமானெனும்
கடலெனுந்தானையக்கலைவல்லானையே. ௪எ

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

சாற்றியவிந்துமான்றான்றந்தனன்மதுவென்போனை
மாற்றரும்புகழ்விரிக்குமதுவினிதளித்ததோன்றல்
வேற்றிறல்படைத்தவீரவிரதனும்வேந்தனன்னோன்
ஏற்றமன்னியுவென்றோதுமிறைவனையினிதினீன்றான். ௪அ

உரைகொண்மன்னியுவாம்வேந்தனுயிர்த்தமாண்சிறுவன்வெள்வேல்
மருவியபசுந்தார்வேயும்புவனெனுமன்னன்றோன்றல்
தரைபுகழ்துவட்டாவென்பான்சாற்றுறுதுவட்டாமைந்தன்
விரசனென்றெவரும்போற்றவிளங்கியவேந்தன்மாதோ. ௪கூ

வரமிகுபுதல்வர்ப்பெற்றுமனுமகன்மரபைநாளும்
விரசனென்றுரைக்கும்வேந்தன்விளக்கினான்விளம்புமிந்தப்
பரதனற்காதைகேட்போர்பகருவோர்படர்வார்முத்தி
அரசவென்றுரைத்தான்மிக்கவருந்தவமுனிவனம்மா. ரு0

பரதன்சரித்திரமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் அரு.

ஸ்ரீகிருஷ்ண சகாயம்.

---

## ௬-வது, நாவலந்தீவின்வளனுரைத்தவத்தியாயம்.

கலிவிருத்தம்.

ஆழியொன்றுருட்டிவாளரசர்போற்றுல
சேழிரும்பொழின்முதலேழிரண்டையும்
சூழிவெங்களிறனன்சொன்மியாவென
வாழுநற்றவமுனிவழங்குமாலரோ. க

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

குடகன்முதலாக்குணகடற்காறுங்குலவுமோரிலக்கம்யோசனையா
வடகடன்முதலாத்தென்கடல்வரையும்வகுக்குமவ்விலக்கம்யோசனையாக்
கடல்புடைசூழும்வட்டமாயென்பான்கண்டமாக்கமலமென்பொகுட்டின்
நடுவுறைமேருவெனும்வரையுடைத்தாய்நாவலந்தீவுவாய்த்திடுமே. உ

பொன்னெடுவரையின்றெற்கிடைவிட்டுப்பொலிதருநிடதவெற்பிலகும்
மின்னெழிலேமகூடவெற்பிமயமெனும்வரைமூன்றுமாலிகைபோல்
பன்னியமேல்கீழ்கடலுறநீண்டுபகர்வரையொன்றினுக்கொன்று
மன்னியநீளம்வரவரக்குறைந்துவருடநல்வரம்பெனப்படுமால். ௩

சாற்றியமேருவரையினில்வடக்கட்டயங்குறுநீலமொண்சுவேதம்
போற்றுறுசிருங்கமென்னுமோர்வெற்பும்புகலிருட்கடலுறநீண்டு
தோற்றியநீளமொன்றினுக்கொன்றுசொன்முறைகுறைந்துறுமிருமூன்
றுற்றல்சேர்வரையும்யோசனையிரண்டாமாயிரமுயர்ந்தகன்றிடுமே. ௪

மேருவின்கீழ்பான்மாலியவானுமேற்றிசைகந்தமாதனமும்
சேருமுப்பானாலாயிரமெனவேதிகழும்யோசனைகடென்வடக்கா
எரொடுநீண்டுநிடதநீலத்தையினிதுறமுட்டியேகிடக்கும்
ஓரிருவரையும்யோசனையிரண்டாமாயிரமுயர்ந்தகன்றிடுமால். ௫

நீலநிடதமாலியவான்முன்னிகழ்க்குநற்கந்தமாதனமாம்
நாலெனும்வரைக்குமுட்படநிரவிநவில்வடவரையினாற்றிசைக்கும்
கோலமாரொவ்வோர்திசையினுக்கொன்பானாயிரங்கூறும்யோசனையாய்
எலுமவ்வரைசூழ்ந்திலங்கிளாவிரதமெனும்பெயர்வருடமொன்றுறுமே. ௬

பொன்னிறமாயகந்தமாதனமாப்புகல்வரைதனக்குமேற்காகிப்
பன்னுமேல்கடற்குக்கீழ்த்திசையாகிப்பளகறுநீலமால்வரைக்கு
மன்னியதெனாதுநிடதமால்வரைக்குமருவியவடாதெனலாகித்
துன்னியகேதுமாலமென்றெவருஞ்சொலத்தகுவருடம்வாய்த்திடுமே. ௭

பகர்வுறுகேதுமாலமாம்வருடம்பளகறக்கிழக்குமேற்காக, அகலுமுப்பானோராயிரமென்னவறைதருயோசனையைதாத், திகழுமுப்பானாலாயிரமென்னச்செப்பும்யோசனைகடென்வடக்காத், தகைபெறவொன்றும்விளங்குமென்றுரைப்பர்சாற்றுநன்னூற்பொருடெரிப்பார். ௮

கூறுமாலியவான்வரைக்குநேர்கிழக்காக்குணகடறனக்குமேக்காகி
வீறுயர்நீலவரைக்குநற்றெற்காவிளங்கியநிடதத்தின்வடக்கா
ஈறிலாவளஞ்சேர்கேதுமாலம்போலிசைக்குறுமளவினதாகிப்
பாறுசேர்வேலாய்பரக்குமவ்வருடம்பத்திராச்சுவமெனப்படுமே. ௯

விண்ணுயர்நீலவரைக்குநல்வடக்குவிளங்கியசுவேதமால்வரைக்கு
நண்ணுதெற்கொன்பானாயிரமென்னநவின்றிடும்யோசனையகன்றே
எண்ணுறுமேல்கீழ்ப்பரவைநீர்நீண்டங்கியங்குமவ்வருடத்தையெவரும்
புண்ணியம்புரிந்தோர்பொருந்திரம்மியகமாப்புகலுவரினிதெடுத்தன்றே. ௧௦

நிகரிலாச்சுவேதவரைக்குநேர்வடக்காநிகழ்த்தியசிருங்கத்தின்றெற்காத்
தகைபெறுமொன்பானாயிரமென்னச்சாற்றியயோசனையகன்று
புகலுமேல்கீழ்பாற்புணரிநீண்டங்கட்பொருந்துறும்புகழ்வருடத்தை
இகலிலாவளஞ்சேரிரண்மயவருடமெனப்பெயரியம்புவரன்றே. ௧௧

வானுயர்சிருங்கவரைக்குநேர்வடக்காவாரிதிக்கிசைந்திடுதெற்காக்
கூனுடைப்பிறையின்வடிவமதொத்துக்கூறிருட்கடலுறநீண்டங்
கூனமினடுவொன்பான்சகத்திரமாமோசனையகன்றுறுவருடம்
தேனிமிர்தொடையாயுத்தரகுருவாந்தீங்கறுவருடமென்றுரைப்பார். கஉ

கெடலருமேருவரைக்கிடைவிட்டுக்கிளரொளிபரந்ததென்றிசைசேர்
நிடதவெற்பினுக்குத்தெனுதெனலாகிநிகழ்த்தியவேமகூடத்தின்
வடதிசைத்தாகியோசனையொன்பான்மருவியவாயிரமகன்று
கடலிருகரையும்வரம்பெனநீண்டுகருதரிவருடம்வாய்த்திடுமே. கங

ஏமகூடத்தின்றென்றிசைத்தாகியிமயத்தின்வடக்கணல்வருடம்
தாமமேபோலற்கடலுறநீண்டுசாற்றரிவருடத்தினகன்று
நாமமுமெழில்சேர்கிம்புருடப்பேர்நண்ணுறுமதனதுதெற்குத்
தேமலர்த்தொடையாய்பாரதவருடஞ்சிறக்குமாங்கதனியல்புரைப்பாம். ()

இமையநற்றெற்காயோசனையொன்பானென்னுமாயிரநடுவகன்று
சுமைதருமுவரிமுத்திசைசூழத்துலங்கியசிலைவடிவாகி
அமைவுறுமிமயவடதிசைநாண்போலமையவப்பாரதவருடம்
சமைவுறுகருமபூமியென்றெவருஞ்சாற்றநன்கிலங்குவதன்றே. கரு

கலிநிலைத்துறை.

சீரினுலுயர்கதிர்சுழல்வடதிசையெனவே
பாரினற்றிசையிடத்துறைபவர்களும்பகர
ஏருலாவிளாவிரதத்தினடுவியைந்திருக்கும்
மேருமால்வரைவியனளவிற்றெனவிரிக்கின். கசு

ஈரெண்ணாயிரம்யோசனைபுவியகத்தாழ்ந்தே
ஒருமவ்வடிமேற்பருத்தும்பர்களாலும்
சேருமெண்பதினாயிரம்யோசனைதிகழ்ந்தே
ஆருமுச்சியவ்வடியினுக்கிரட்டியாயகலும். கஎ

சுற்றுறும்மளவுரைக்குறினடியுறுஞ்சுற்றுக்
குற்றமின்றியாறெட்டெனுமாயிரங்குலவ
உற்றயோசனையுறுமிதனிரட்டியாயொளிரும்
வெற்றிவேலவவிளங்கியவிரிதலைச்சுற்றே. கஅ

வயங்குமேருவின்கீட்டிசைமந்தரமலையும்
தயங்குமம்மலைமேலுறைதனிக்கொடியெனவே
பயங்கொண்மாவெனப்பகர்தருபாரைமாமரனும்
நயங்கொணந்தனவனமுநன்பாலெனுமடுவும். ககூ

விளங்குமேருவின்றென்றிசைமேருமந்தரமும்
கிளர்ந்ததீவுதன்வண்பெயரேபெறக்கெழுமி
வளங்கொணாவலுஞ்சயித்திராதமெனும்வனமும்
துளங்குநீடலமதுவெனச்சொலப்படுஞ்சுனையும். உ0

சொன்னமேருவின்மேற்றிசைசுபாரிசமலையும்
அன்னவெற்பின்மேலமர்தருமலர்ச்சிலைக்கடம்பும்
மன்னுநல்வளஞ்சேர்வயிப்பிராசமாவனமும்
கன்னலின்சுவைச்சாறுநேர்கடிகமழ்சுனையும். உக

வனைபொலங்கிரிவடக்கினிற்குமுதமென்வரையும்
பனிவரும்பலபலந்தருபணைப்பழுமானும்
கனிபடுந்திருச்சருவதோபத்திரக்காவும்
புனிதநீர்நிறைவாவியும்பொருந்தியங்கிருக்கும். உஉ

உரைத்தநாற்றிசைமலைகளுமேருவென்றுரைக்கும்
வரைக்குவீறுசேரூன்றுகால்போன்றுவானவரும்
அருத்திகூரிளாவிரதத்தினமர்ந்திடுமுயரம்
பொருத்துமோர்பதினாயிரம்யோசனைபுகல. உங

நாற்றிசைக்கணுநவின்றவம்மலைகளினண்ணும்
ஆற்றல்சேருநான்மரங்களுமாயிரத்தொருநூ
றேற்றயோசனையுயர்ந்துநூறோசனையென்னத்
தோற்றுசீர்விடபங்களுஞ்சூழ்வுறத்தோன்றும். உச

காந்துபன்மணிமந்தரமலையின்மாங்கனிகள்
வேந்தவெற்புறைகுவடெனவீழ்பழச்சாறங்
கேந்துவார்திரைச்சோணிதயாறெனவொழுகும்
மாந்துவோருயிர்ப்பையிரண்டோசனைமணப்ப. உரு

பட்டமார்தருமாகரியளவெனப்பருத்துக்
கொட்டைநுண்ணியநாவலின்கொழுங்கனிச்சாறு
பெட்டசம்புமாநதியெனவலங்கொடுபெருகி
உட்டெளிந்துபொன்மேருவைச்சுலாயினிதோடும். உசு

அதிருமப்புனலருந்தினாருங்கரையசும்பு
ததையும்வெங்கதிர்காற்றுறவுலர்ந்துநற்சாம்பு
நதமெனும்பொனுமாங்கதினணிபுனைநலத்தோர்
இதமில்வெம்பிணிநரைதிரையற்றினிதிருப்பார். உஎ

திகழுமேருவின்மேற்கிளாவிரதத்திற்சேர்ந்த
தகைசெய்நீள்கடம்புறும்புழைசார்ந்ததண்டேறல்
அகலுமாறெனவழிந்திடுமாங்கருந்தினர்கள்
பகருயிர்ப்புநூறோசனையிடம்பரிமளிப்பர். உஅ

வழங்குமேருவின்வடதிசைவழுத்திடுவடத்தின்
பழங்கொணீள்பெரும்பணைதொறும்பாறயிர்மதுநெய்
மொழிந்தபூண்டுகில்சயனமேமுதலியகொளற்குத்
தழங்குவார்திறையாறெனச்சார்ந்திழிந்திடுமால். உகூ

புலங்கொள்சங்கம்வைகங்கதம்பொருந்தியநாகம்
நலங்கொணாரதமுதலியநல்வரைக்குலங்கள்
துலங்குமேருவின்சுற்றிலுங்கழுமுமாற்றுகடீர்ந்
திலங்குநற்பொகுட்டருகுசூழ்கேசரமெனவே. ௩௰

தேவகூடமேமுதலியவெண்வரைதிகழ்ந்து
தாவிலோர்திசைக்கிரண்டிரண்டாகவேசார்ந்து
பூவின்மேவியமேருவினாற்றிசைபொருந்தும்
பாவகன்றனைத்தருப்பைசூழ்ந்திடும்பரிசெனவே. ௩௧

தண்ணறுங்கமலத்துறைதலைவனுள்விரும்பும்
எண்ணரும்புகழ்மாயனுமீசனுமிருப்பக்
கண்ணகன்றிருக்கடிநகரிரண்டெழில்கலந்து
விண்ணுயர்ந்தவம்மேருவின்முகட்டின்மீவிளங்கும். ௩௨

உச்சியிற்பதினாயிரம்யோசனையுடைத்தாய்
வச்சிரப்படைவாசவன்முதற்றிசைப்பாலர்
இச்சைகூர்ந்துறையெண்பதிசூழவாங்கிருக்கும்
முச்சகந்தருமுளரிமேன்முதலுறைநகரம். ௩௩

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

பாயகடனிலமளந்தபசும்புயனீள்விசும்புருவவெடுத்தபொற்றாள்
சேயுயருமுதண்டமுகடுடையப்பாந்தலைக்குந்தெய்வநன்னீர்
ஆயிரமாயிரம்பருவஞ்சென்றொழியவதிர்ந்தொழுகியலரின்மேலான்
மேயபொலங்கிரிநகரின்மிசைவீழ்ந்துநாற்றிசையும்விரியுமாதோ. ௩௪

சுடர்செய்நவமணிமுடிகொடுருவன்முதலோர்புகழத்துனைவினெய்தி
வடவரையின்மிசைக்கழுமிவந்தொழுகுமாநதிசக்குசையென்றோதக்
கெடலருஞ்சீர்வாய்ந்துறையுங்கேதுமாலத்தினிதுகெழுமிமுத்தீன்
குடவளைகண்மிகமுரலுங்குடகடலினீரொடும்போய்க்கூடுமன்றே. ௩௫

விரிகதிர்சேர்பொலங்குடுமிமேருவில்வந்தப்புறம்போய்விளங்குநீலம்
சொரிகிரணநவமணிசேர்சுவேதமருஞ்சிருங்கமெனச்சொல்லுநல்ல
பருமுவரைகீண்டொழுகிப்பத்திரையென்பேர்படைத்தபழுதில்கங்கை
குருவருடந்தனைமேவிக்கோதில்வடகடல்கிழித்துக்குலவுமன்றே. ௩௬

மீதுயர்விண்ணவர்நாட்டின்விரைகமழுங்கற்பகத்தின்விளங்குசெம்பொன்
போதினெடுவடவரையிற்போந்திழிந்துமாலியவான்பொருப்பைக்கீண்டு
சோதிநவமணிவான்றித்துலங்குபத்திராச்சுவத்தைத்துன்னுங்கங்கை
சீதையெனும்பெயரினதாய்ச்சிறந்தகுணகடலொழுகித்திகழுநீர்த்தால். ()

கொன்னெழுகுநேமிமுகில் குரைகழற்பூந் துளவொடுபொற் குன்றின் வீழ்ந்து, பொன்னெழுகுநிட்டதவரை புகலேமகூடவரை யிமயமென்னும், மின்னெழுகு மணிவரைகீண் டளகநந்தையெனும்பெயரின் மேவுங்கங் கை, தென்னெழுசுபாதகண்டஞ் சேர்ந்துதிகழ்தென்கடல்போய்ச் சிறக் குமன்றே. ௧௮

கலிநிலைத்துறை.

சாற்றுகங்கையைமனத்திடைநினைக்கினுந்தணிப்பேர்
போற்றிநின்றுழிப்பாரயினுங்காணினும்பொருந்தி
ஏற்றமாயவந்நீரிடைமூழ்கினுமியையும்
பேற்றையார்குணிப்பாரவர்முத்தியேபெறுவார். ௧௯

கங்கையாற்றிடைத்தங்குலப்பிதிர்களைக்கருதி
அங்கையாற்றருப்பணமுவந்தொருமுறையாற்றின்
பங்கமாநரகத்துமுற்படினுமக்குலத்தோர்
செங்கண்மால்பதஞ்சேர்குவரென்னுதறிண்ணம். ௨௦

நீக்குகின்றநல்லறத்தினராய்ப்பழிசிறப்பும்
தீக்கொடுந்தொழில்செய்ஞ்ஞருமிறந்திடிற்சிறிதா
ஆக்கையென்பொருவகையினல்வருகங்கையடையின்
ஊக்கமுற்றவரும்பர்தமுலகுபுக்குறைவார். ௨௧

இறந்துளோர்களுங்கங்கையினெலும்புறினிமையோர்
உறைந்தநாட்டுறைவாரெனினுயிரொழிவதன்முன்
நிறைந்தவன்பொடுகங்கையிற்சென்றுநீராடச்
சிறந்துளோரெனினவர்பெறும்பேற்றையார்தெரிப்பார். ௨௨

உரைசெய்பாரதவருடம்விட்டொழிந்தநல்வருடம்
பொருவிலெட்டையும்போகமார்பூமியென்றுரைப்பர்
வருடமெட்டினும்வதிபவராயுளைவழங்கின்
பருவமோர்பதினாயிரம்பளகறப்பல்கும். ௨௩

தந்தியாயிரம்பத்துறுந்தருக்கினராகிக்
கந்தவார்குழலியரொடுகலவியிற்களித்து
மைந்தரேனொருவனிதையைமணந்திடப்பெறுவர்
எந்தநாளுமாங்கிரண்டெனுமூழிபோன்றிருக்கும். ௨௪

ஓங்குசீர்பெறுமொன்பதுவருடத்துமுருவோ
டாங்குவாழ்குநர்வழுத்தவானருள்புரிந்துறையும்
தேங்கமழ்ந்ததார்செப்பிளவனமுலைசுமந்து
வாங்குநுண்ணிடைமலர்மகண்மணந்துறைமார்பன். ௨௫

இலகுமேருவின்குணக்கிளாவிரதத்தினெழில்சேர்
அலர்செய்பூங்குழலரம்பையாளப்பிலர்சூழ
மலைமடந்தைசேர்மதியணிசடையினேன்வணங்க
உலகெலாந்தருமூர்த்தியானநந்தனென்றுறைவான். ௨௬

கமலைமேவுமால்கலையெனுமகந்தனைவணங்கி
அமலவீசன்வாழவ்வுழியாடவாணுகின்
தமரவண்டுரைகருங்குழற்றையலாக
உமைவழங்கியசாபமுண்டுரைக்குதுமினியால். சஎ

இயக்கர்வானவர்முதலியயாவரும்வணங்கி
மயக்கநீக்கியாள்வாயெனமகிழ்ந்தருணளும்
பயக்குமாயவன்பத்திராச்சுவத்தினிலுறைவோன்
அயக்கிரீவனென்றன்பொடுமேத்தவாங்கமர்வான். சஅ

ஏமமார்தருமேந்திளவனமுலையெழில்சேர்
தாமவார்குழன்மலர்மகளுவப்பொடுதழுவச்
சேமமார்தருகேதுமாலத்தினிற்றிருமால்
காமதேவனென்றேத்திடக்கருணைசெய்துறைவான். சகூ

தேனுலாந்தொடைரம்மிகன்முதலினோர்சேர்ந்து
வானளாவியகடையுகவாரிதிநீரின்
பாணிலாமருப்பேந்தினைபாரெனப்பரவ
மீனமாயிரம்மிகவருடத்தின்மால்விளங்கும். ருO

முரணுடைச்சராசரங்களினிறைந்துறைமுதலென்
றரணுடைத்திருவிரண்மயன்முதலினோருரைப்பத்
திரண்மணிப்பெருவரைநிகர்கமடமாய்த்திருமால்
இரண்மயப்பெயரெய்தியவருடம்வீற்றிருப்பான். ருக

பராகமொன்றெனப்பாதலத்தெனைமருப்பேந்தி
அராகமேல்கொளவைத்தனையெனப்புவியணங்காங்
கிராகமோடுறைபவரொடுமினிதுவந்தேத்த
வராகமூர்த்தியாயுத்தரகுருவின்மால்வதியும். ருஉ

ஒளிகொள்வச்சிரப்படைநிகருகிரவென்றொழியாக்
களிகொணெஞ்சொடுகனகன்மாமதலைநின்றேத்தத்
துளவுசூடுமால்சொல்லரிவருடத்திற்றுலங்கும்
நளினமாதுசேர்நரசிங்கமாகவீற்றிருக்கும். ருங

கேடில்கிம்புருடத்தினிற்கெழுமினரோடும்
ஆடன்மேவநுமானடிவணங்கிடவமர்வான்
வாடுநுண்ணிடைச்சீதையென்பாண்மருங்கியிருப்ப
நீடுவெஞ்சிலையிராமனென்பெயரொடுநெடியோன். ருச

வாரதட்கலைவனைதருமாதவர்க்கெழில்வீ
டாதரத்திறமுறைத்தனியீரெனவழுத்து
நாரதற்கருணான்சொனாராயணனெனுமால்
பாரதப்பெயர்பகர்வருடத்தின்வீற்றிருக்கும். ருரு

கங்கைகாவிரிகன்னிதென்பொருநைகாளிந்தி
துங்கபத்திரைமுதலியமாநதிதுவன்றி
மங்குல்கண்படுமலயமால்வரைமுதல்வரைகள்
பொங்குபாரதவருடத்தின்றகைமையார்புகல்வார். ருசு

வருணநான்குநான்காச்சிரமத்திறமருவி
அரியபாவத்தினிரயத்துமறத்தினற்பலவாம்
பொருவில்விண்ணினுஞானத்தால்வீட்டினும்புகுத்தும்
சருமபூமியிப்பாரதவருடமாங்கழறின். ருஎ

புரியஞ்சத்துவகருமத்தோர்பொன்னுலகடைவார்
மருவிராசதகருமத்தோர்மானிடராவார்
உரைசெய்தாமதகருமத்தோர்நரகங்களுறுவார்
விரவுமவ்வினைப்பயன்விழையார்கள்வீடடைவார். ருஅ

ஆற்றுநல்வினைப்பயன்பலவயின்றனராங்காங்
கூற்றிருந்துதேனுழுகுபொற்றருநிழலுறைவோர்
போற்றுமாயவன்செய்யதாணிழலுறநோய்தின்
தோற்றுவேங்கொலோபாரதகண்டத்தெனத்துணிவார். ருகூ

பொற்புவாய்ந்தபொன்னாட்டிடைப்புங்கவரிங்கே
கற்பவாயுள்சேர்ந்துறைதலிற்கருதுவீடடைய
நற்பதாம்புயநாடிமானுமமுச்சரிப்ப
அற்பவாயுள்சேர்ந்தாங்குதித்திடலழகென்பார். சூ0

வாமமுற்றவிர்பாரதவருடம்வந்துதித்து
நாமமுத்தியினுய்க்குநன்ஞானம்வந்தடையக்
காமமற்றுமுன்செய்கிலம்வினையெனக்கரைவார்
போமதித்திடிற்பொன்னுலகெனவறிபுலவோர். சூக

என்றுநாவலந்தீவினல்வளனெடுத்திசைத்தான்
துன்றுமாதவச்சுகமுனிவரனெனச்சூதன்
மன்றனுண்மலர்த்துளவணிமாயனைவழுத்தி
நின்றவேதியருவப்புறவஞ்செவிநிறைத்தான். சூ௨

நாவலந்தீவின்வளனுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ருருச.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## ௪-வது, ஏழுதீவொடுகடலினளவுரைத்தவத்தியாயம்.

### கலிவிருத்தம்.

வளைவுகாட்டியதீவொடேழ்வாரிசேர்
அளவுகாட்டவரசனுக்காய்யிழித்
துளவுசூட்டுந் துளிமுகிலைத்தொழும்
தெளிவுபூட்டுந் திருமுனிசெப்புவான். க

### கலிநிலைத்துறை.

வெம்புத்தீத்தலைசகரர்தொட்டுண்டலின்வேறாய்
பம்பிச்சேர்தருரமணகம்பாஞ்சசன்னியஞ்சீர்
மொய்ம்புற்றோங்கியவரக்கர்வாழிலங்கையேமுதலாச்
சம்புத்தீவினைச்சாற்றுபஃறீவுசார்ந்துறுமால். உ

இலக்கம்யோசனையினையுமித்தீவினையினைத்தாத்
துலக்குசீர்நிலாவளத்ததாவுவர்க்கடல்சூழும்
விலக்கிலாவிதற்கிரட்டியாய்விளம்புவர்க்கடலைப்
பிலக்கமாமெனுந்தீவுசூழ்கிடந்திடும்பேசின். ங

சொன்னதீவினையத்துணையளவையாய்ச்சூழும்
கன்னலீர்ஞ்சுவைச்சாறுசேர்கடலருங்கடலை
மன்னும்யோசனையக்கடற்கிரட்டியாய்வளையும்
பன்னுசீர்வளர்சான்மலித்தீவெனப்பகர்வார். ச

வீறுசேருமத்தீவையவ்வளவையின்மேவி
மாறிலாமதுக்கடல்வளைந்திடுமதுக்கடலைக்
கூறும்யோசனையிரட்டியாய்ச்சூழ்ந்திடுங்குசத்தீ
வூறுநெய்க்கடலாங்கனைத்தாயதையுறுமால். ரு

திகழுநெய்ப்பெருங்கடலினைச்செப்பதனிரட்டி
அகலுநற்பெருங்கிரவுஞ்சத்தீவுசூழ்ந்தமரும்
குகனெறிந்திடுங்கிரவுஞ்சக்குன்றுநின்றதனால்
பகர்செழும்பெயர்கிரவுஞ்சத்தீவெனப்படுமே. சா

சேகிலாதநற்கிரவுஞ்சமெனப்படுதீவை
ஓகையேசெயும்பாற்கடலுடுக்குமவ்வளவாய்ச்
சாகத்தீவிதையிரட்டியாய்வளைந்திடுந்தனிப்பேர்
மாகமீதுயர்சாகமென்மரத்தினான்மணந்தே. எ

சீதவாரியைவளைந்திடும்பிலக்கமாந்தீவே
ஆதியாகுமிவ்வைந்தெனுந்தீவினுளமர்ந்த
ஓதுநால்வகைவருணமாயவர்தனியுரைக்கும்
ஏதநீங்குபேர்வேறுவேறினையகுவரியல்பால். அ

உந்துதேரினேழ்தீவெனவுஞற்றினற்குதித்தில்
வைந்துதீவினுக்கரசராமைவருக்கெவ்வேழ்
மைந்தர்தோன்றினர்வகுத்திடுந்தீவுகளவ்வேழ்
சந்தமார்தருவருடமாய்த்தனித்தனித்தயங்க. கூ

சொல்லுமொவ்வொருதீவினுட்டோன்றிருசுடையும்
ஒல்லெனப்படுதிரைக்கடலுறக்குறுக்காகி
மல்லலுற்றவவ்வருடநல்வரம்பெனவழங்க
எல்லிலங்குமேழ்வரைகளேழ்நதியுடனிருக்கும். க0

பன்னுமைவகைத்தீவுறைபவர்களும்பார்வை
மன்னுகின்றகாரணங்களாய்வந்துதித்தொளியும்
உன்னுபுந்தியுமூரனுமங்கொத்தனராகி
இன்னலின்றியோராயிரம்பருவமுமிருப்பார். கக

உரைத்தபேர்பெறுபிலக்கமத்தீவினிலுறைவோர்
விரித்தசெங்கதிர்வேந்தனைவணங்குவர்விருப்பால்
தருக்கினோடெழிற்சான்மலித்தீவுறைதக்கோர்
நிரைத்ததண்கதிர்த்திங்களைவழுத்துவர்நினைந்தே. கஉ

வானினேங்குறவளர்குசத்தீவினில்வதிவோர்
ஈனநீங்கொளியங்கியின்பதமிறைஞ்சுவரால்
தேனவாம்பொழில்செறிதருகிரவுஞ்சத்தீவோர்
பேனநீர்க்கிறைதாட்டுணைவழுத்துவர்பெட்பால். கங

இயம்பெண்ணான்கெனுமிலக்கம்யோசனையிடனகன்ற
தயங்குபன்மணிச்சாகத்தீவுறைதருதவத்தோர்
வயஞ்செய்கின்றநற்பிராணனும்வாயுவிண்ணவனை
நயஞ்செயன்பொடுவணங்குவர்நாடிநாடோறும். கச

கலிவிருத்தம்.

சேகிலாதமுனிவருஞ்சித்தரும்
நாகரும்புகழ்நாலெட்டிலக்கமே
ஆகுமோசனையென்னவகன்றெழிற்
சாகத்தீவைத்தயிர்க்கடல்சூழுமே. கரு

சாற்றுகின்றதயிரெனும்வேலையை
ஏற்றவவ்வளவுக்குமிரட்டியாய்
நாற்றிசைக்கணுஞ்சூழ்ந்துநவையிலோர்
போற்றுபுட்கரத்தீவுபொருந்துமால். கசு

விழைந்துநான்முகன்மேவுபொற்றாமரை
தழைந்துசார்தலிற்சாற்றுமத்தீவுதான்
மொழிந்தபுட்கரப்பேர்முதலேற்றனை
வழங்குமானமலராயனுங்கரோ. கஎ

ஏதநீங்கியிலங்குமத்தீவினுக்
காதிமாமனுவானவன்மைந்தனுக்
கோதுசீர்மகவாகியுதித்திடும்
வீதிகோத்திரனென்பவன்வேந்தனே. கஅ

ஓதும்வேந்தனுயிர்த்தரமணகன்
தாதகன்னெனச்சாற்றுமிருவர்தம்
சோதிமங்குறிப்பவருடமோர்
தீதிலோரிரண்டாகுமத்தீவரோ. கக

ஈனநீங்குவருடமிரண்டென
ஆனதீவினடுவெயிலாமென
மானதோத்தரமாமலைசூழ்ந்திடும்
பானுமீதுவளைந்துபடரவே. உ0

அறைந்ததீவினையவ்வளவாகியே
நிறைந்துசேருந்தண்ணீர்க்கடல்சூழ்ந்திடும்
எறிந்தவார்திரையோதவவ்வாரியைச்
செறிந்துசூழுந்திகழ்பசும்பொன்னிலம். உக

பன்னுதேவர்பயிலுறப்பத்தென
மன்னுகோடிமருவியயோசனை
என்னவேயகன்றெங்கணுஞ்சூழ்ந்தவப்
பொன்னின்பூமிக்கப்பாலும்புகலுவாம். உஉ

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

வில்லினுதலார்புத்தேளிர்விளையாட்டயரும்பொலநிலத்தை
மல்லினுயர்ந்தடம்புயத்தாய்மருவிவளைந்திப்பார்முதன்மேல்
நல்லவுலகமூன்றினுக்குநவைதீர்புரிசையெனவுயர்ந்து
சொல்லுமுலோகாலோகமலைதுலங்குமெனவேவழங்குவரால். உங

அன்னவரையினுட்படும்பாரதனிலெனடுக்கோடுறுங்குறுக்குப்
பன்னுபஞ்சாசற்கோடிப்பழுதிலாயோசனைப்பரப்பென்
றுன்னியுரைப்பரவ்வரையினுளியில்புறமாமிடமனைத்தும்
மன்னும்பரிதிகதிருலவாவுலகமெனவேவழங்குவரால். உச

கழைசேர்நேமிவரையதனைக்கருப்போதகமாங்கடல்சூழும்
அழிநீரலையாழியைவளைக்குமந்தகாரக்குழாமதனைப்
பழிதீரண்டச்சுவர்பொதியும்பதினாலுலகும்பொதிபசும்பொன்
எழில்சேரண்டச்சுவரதனையிலங்குமதனிற்பதின்மடங்காய். உரு

குலவுதெளிநீர்சூழுமதைக்குளிர்தண்புனலிற்பதின்மடங்காய்
இலகுமழல்சூழ்ந்திருக்குமதையிலங்குமழலிற்பதின்மடங்காய்
நிலையில்வளிசூழ்ந்துளருமதைநிகரில்வளியிற்பதின்மடங்காய்
அலகில்புகழ்சேர்வான்சூழுமதனையதற்குப்பதின்மடங்காய். உசு

பொருந்துபுகழ்சேரகங்காரம்பொதியுமதனைப்பதின்மடங்காய்
விரிந்துமகான்சூழ்ந்திருக்குமதைவிளம்புமளவுகடந்ததாய்ப்
பரிந்துபரிதிசூழுமதிற்பலவாமண்டம்பதிந்திருக்கும்
திருந்துமலரின்மணம்போலத்திருமாலெங்கும்வதிந்திடுமே. உஎ

கலிநிலைத்துறை.

கூனத்தார்கடல்சூழுமித்தீவொடுங்குறித்த
ஏனைத்தீவுமற்றுள்வுமிசைத்தனமின்னும்
வானத்தேயுயர்பரிதிவானவன்வருவனனும்
தேனைச்சேர்தொடையரசகேளெனமுனிதெரிக்கும். உஅ

எழுதீவொடு கடலினளவுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ருஅஉ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ரு-வது, சூரியமண்டலமுரைத்தவத்தியாயம்.

---

கலிநிலைத்துறை.

பாரின்மேலுறுவானமும்பாரினதளவாய்ச்
சேருமோரிருபாதியையொன்றெனச்செறித்த
ஏரின்மேம்படுமண்டமிவ்வண்டத்தினடுவே
ஆருமாயிரங்கதிரவன்சூழ்வருமன்றே. க

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இடம்விரிந்திடுமிப்பார்மேலிலக்கம்யோசனையினப்பால்
வடபெருஞ்சிலையைநாளும்வலம்வருபரிதியென்னும்
சுடரின்மண்டிலமாமென்பர்சொல்லுமண்டிலத்தின்கீழே
அடன்மிகுந்துறுமிராகுமண்டிலமாமென்பாரால். உ

மதியொடுமிரவிதன்னைவழங்குமுற்பகைமைபற்றித்
துதியுறுமிராகுவென்பான்சொல்லுமீருவாக்கள்சேரின்
அதிர்திரைஞாலமேத்தவவ்வழிமறைத்துமால்செங்
கதிருமிழாழியேவக்காண்டலுமகலுமாதோ. ங

மொழிந்தமண்டிலத்தினுக்குமுறைமுறையயுதமென்னும்
தழைந்தயோசனைகீழாகச்சார்ந்திடுஞ்சித்தர்விஞ்சை
விழைந்தவரியக்கர்சொல்லும்வெவ்வியவரக்கர்பூதம்
வழங்கியபிரேதங்கூளிமனைபுட்சேரிடங்களாமால். ச

பொய்யறுசமத்தினோடுபொருந்துமாரோகநன்மை
செய்யவரோகமென்னுந்திருந்துமுக்கதிசெய்வெய்யோன்
மையறுகதிர்க்குழாத்தான்மருவியகிரகத்தோடும்
ஐயமின்னுள்களுக்குமணிசுடர்வழங்குமன்றே. ரு

அலகிலாப்புகழ்சால்வெய்யோனுயிரங்கதிர்ப்பிழம்பில்
சிலசிலமேலேநோக்கச்சிலசிலகீழேநோக்கி
நிலமிசைமழையினோடுநெடும்பனிமிகவுண்டாக்கி
வலியுறுமெவர்க்குந்தாபம்வழங்குமென்றியம்புவாரே. ௬

சித்திரைமதியினோடுசிறந்தவைப்பசியாந்திங்கள்
ஒத்திடும்பொழுதிரண்டுமுறைபெறுகடிகைபின்னர்
வைத்தவைகாசியாதிமருவியதிங்களைந்தும்
வித்தகபகலிற்கன்னல்விரிந்திடுநிசியிற்குன்றி. ௭

விருச்சிகமாதியாகவிளம்பியதிங்களைந்தும்
உரைத்திடுபகலிற்கன்னலுறுமுறைகுறைந்தேயல்லில்
தரைத்தலந்தோறுஞ்சோதிச்சக்கரத்தடிதான்மெல்லத்
திருத்தகச்சுழலவாங்குச்சேர்நுனிவிரைந்துசெல்லும். ௮

படிபுகழ்நாள்கடம்மிற்பகர்ந்தசக்கரத்திற்பாதி
இடனெனமருவப்பாதிவலனெனவிருக்குமாற்றால்
வடதிசையயனமென்னவருகுவன்மகரமாதி
நடைபெறுமதியோராறினுனிலம்புகழவெய்யோன். ௯

தென்றிசையயனமென்னச்சேர்குவன்கடகமாதி
ஒன்றியமதியோராறினுறுமுறையுரைக்கும்வெய்யோன்
வன்றிறற்பரிதிமேவமானதோத்தரமென்றோது
வென்றிகொண்மலையின்மீதுவிளங்குநாற்பதிநாற்றிக்கில். ௧௦

கீழ்த்திசையமரர்கோமான்கெழுமியதெய்வயானம்
வாழ்த்திடமருவுந்தெற்கின்மறலிவாழ்நகரொன்றுண்டால்
தாழ்த்தலின்மேற்குமேவுந்தமனியத்தகடுபொற்கா
ஊழ்த்தகத்தொளிருநிம்முலோசனையுரைக்கின்மாதோ. ௧௧

வடதிசைதனதன்மேவிவளர்விபாவரியென்றோதும்
நெடுநகர்பொருந்துமிங்ஙனிகழ்த்தியநகர்கடம்மின்
சுடரவனுதிப்பவொன்றிற்சொன்முறைநகரமூன்றும்
படுநிசிநடுநன்மாலைபழுதிலாவுச்சியாமால். ௧௨

கருதுமூவைந்தென்றோதுங்கன்னலிற்கதிர்செய்வெய்யோன்
ஒருநகரிருந்துமற்றோர்நகருறினிரண்டுகோடி
விரவுமுப்பானேழ்முக்கால்விளம்பியவிலக்கமான
புரையிலோசனையாந்தூரம்பொருந்துறக்கழியுமன்றே. ௧௩

பானுவானவனோர்நாளிற்பழுதிலாவொன்பான்கோடி
ஊனமிலாதவெண்ணோடுற்றிடுமைம்பத்தொன்றே
ஆனசீரிலக்கமென்னவறைந்தயோசனையுஞ்செல்வான்
மானதோத்தரமென்றோதுமலைமிசைவளைந்துமன்றே. ௧௪

வெய்யவனுதயங்காணும்வீறுயர்நகர்க்குநேரா
மையறுதிக்கின்மேவுமாநகர்க்கிருள்செய்மாலை
பையவந்துறுதலாகும்பரிதிதான்மறைவதில்லை
செய்யபொன்மேருவென்னுஞ்சிலைநிழல்பரப்பமாதோ. கரு

செப்பியகிரியவெய்யோன்சேர்ந்திடுமொளிசெந்தீயின்
தப்பறவிருக்குஞ்செந்தீச்சார்ந்திடுமொளியுமெல்லின்
ஒப்பறுமிரவிதன்னினுறும்பகலொளியுமெல்லில்
அப்புவினிருக்குமப்பினல்லிருள்பகலும்வைக. கசு

அணிசெயுநாபிமூன்றோரா றெனுநேமியீரா
றிணையறுமாரமாகியியன்றவாண்டுருவமான
தணிவிலோராழிவேதச்சந்தசோரேழுமேழும்
பணிசெயப்பூண்டபச்சைப்பரிதினகரன்றேர்க்கன்றே. கஎ

பேருறுசெக்கேபோலப்பிறங்குவானேங்குசெம்பொன்
மேருவினுச்சிமீதேவிளங்கவோர்தலையைக்கோத்துச்
சேருமோர்தலையோராழிசெறிந்ததோரச்சினீளம்
ஏருறுநூற்றைம்பத்தேழரையெனுமிலக்கமாமே. கஅ

மன்னுமவ்வொற்றையாழிமானதோத்தரத்தின்மேலாய்த்
துன்னியவானின்மீதேசுழன்றுறுஞ்சுடரோன்றேர்க்குப்
பன்னியபாகனென்னும்பழுதிலாவருணனாளும்
அன்னதேரேறிவெய்யோற்கபிமுகமாகச்செல்லும். ககூ

ஆதபன்றேரினேறியாயிரங்கதிராயென்றென்
றோதியங்குட்டமென்னுமளவிற்றூமுருவுவாய்ந்த
மேதகுபன்னீராயிரமொன்றுவிளம்பமேவும்
மாதவமுயன்றவாலகில்லியர்வழுத்துவாரால். உ0

தாமரைத்தவிசின்மேலான்றருபுலத்தியனேயாதி
தோமறுமுனிவர்திங்கடொறுமுறைமறையினேத்தி
வாமமார்பரிதித்தேரின்வருகுவார்வடந்தொட்டீர்ப்பார்
ஏமமாமுறையின்மேவியெழிற்கிராமணிபர்மாதோ. உக

வருகதிர்ப்பரிதித்தேரைவாசுகிமுதலினோர்கள்
ஒருமதிக்கொருவராகியுறுமுறைபரிப்பர்தேர்முன்
திரிகுவாரக்கரென்பார்செப்புகந்திருவாயோர்
புரையறுமமுதகீதம்புகழ்ந்தனர்பாடுவாரால். உஉ

கலிவிருத்தம்.

தேனிமிர்குழலிளந்திங்கள்வாணுதல்
மேநகைமுதலியவிளங்காம்பையர்
வானுயர்வடவரைவலஞ்சொடேகிய
பானுவின்றிருமுனம்பாடியாடுவோர். உங

20

ஆறறியாசவவ்வருக்கஞேடிவண்
கூறியவெழுவகைக்குழுவிஞேர்களும்
வீறுயருலகுசீர்மேவநன்முறை
மாறகன்மதிதொறும்வலங்கொள்வார்களால். உச

வையகம்படைத்தல்செய்மலரிலண்ணலும்
பொய்யறுமாயனும்புகன்முக்கண்ணனும்
ஐயசெங்கதிர்களோராயிரந்திகழ்
வெய்யவனுமெனவிளம்புநூல்களே. உரு

என்றலும்வேந்துமவ்வெழில்கொண்மேருவை
வன்றிறற்சூரியன்வலங்கொள்வானெனின்
ஒன்றியவிராசியினுறுவதெங்ஙனம்
நன்றுரையெனமுனிநவிற்றுமாலரோ. உசு

சூரியன்வலங்கொடுசுற்றுமென்றது
பேருறுசக்கரம்பெற்றநற்கதி
கூரியவேலவகொண்டதாமவன்
எருறவிடன்வரவிசைப்பக்கேட்டியால். உஎ

வலன்வரக்குயமகன்வளைந்தசக்கரத்
திலங்கியங்கிடன்வருமெறும்புபோன்மெனக்
குலவியநற்கதிக்கோள்களேழுமாங்
குலவிராசியிலெதிருற்றுமேவுமே. உஅ

கலிநிலைத்துறை.

வெய்யவன்கவியாலெனுமூவரும்விதித்த
மையறும்மதியொன்றொருராசியின்வதிவார்
பொய்யிறிங்களுளிரண்டுடன்காலொன்றிற்பொருந்தும்
செய்யவக்கிரனென்றரைமதியொன்றிற்சேரும். உகூ

மன்னுராசியொவ்வொன்றினின்மருவுமோராண்டு
துன்னுபேரெழிற்பொன்முனஞ்சொல்லியகாரி
உன்னிரண்டரையாண்டுறுமொன்றரையாண்டு
பன்னுகின்றசீரிராகுவுங்கேதுவும்படரும். ௩0

குற்றமற்றசேய்முதலியவைந்தெனுங்கோளும்
கற்றைவெங்கதிர்க்கடவுளையருகுறக்கலக்கின்
பெற்றுறைந்திடுமத்தமனப்பெயர்பேரும்
மற்றையப்பெயரக்கதிரகன்றுறின்மாதோ. ௩க

சொன்னவைந்தெனுங்கோள்களுந்துணைவுநற்சமஞ்சீர்
மன்னுமந்தமென்றுரைத்தமுக்கதியொடுமருவும்
பன்னுவக்கிரக்கதியினைப்பகர்ந்தவக்கிரத்தை
அன்னசெங்கதிர்க்கருகுமால்புகாவடைந்துறுமால். ௩உ

குருவுமந்தனுஞ்சேயுமென்றிசைத்தகோண்மூன்றும்
மருவிராசிமுன்னாகியைந்தெனவருமிடத்தின்
பரிதிசென்றுறின்வக்கிரன்சேர்ந்ததைப்பரிதி
உரைசெயொன்பதென்றுறுமிடத்துற்றிடினொழிக்கும். ௩௩

பன்னுதன்கலைதேய்ந்துறும்வளர்ந்துறும்பக்கம்
என்னிரண்டினிற்பிதிர்களுக்கிராப்பகலாக்கிச்
சொன்னதிங்கடோறும்பிதிர்கணத்தொடுஞ்சுரர்க்கும்
உன்னுநல்லமுதளிக்குபுமதியுயிரோம்பும். ௩௪

வெள்ளிமாமழைபொழிதரமிகவிளைவிக்கும்
உள்ளுவப்புறினெழிற்புதன்காற்றையுண்டாக்கும்
தள்ளரும்பழிதழைத்திடச்செய்தருஞ்சனிதான்
தெள்ளுநான்மறையோர்க்குநன்றல்லனசெய்யும். ௩௫

கலிவிருத்தம்.

விரியுநீள்கதிர்சேரும்வியாழமாம்
பொருவிலாப்புலவோர்தொழும்புங்கவன்
தெரியுநான்மறையோர்கடிருவுற
உரைசெய்வானினுலாவிவொளிக்குமே. ௩௬

எனவிசைத்தவிருந்தவனேர்செய
வனைபொலங்கழன்மன்னனைநோக்கியேழ்
கனைகடற்புவிமேற்ககனத்திடை
தனிகிடந்தவுலகினைச்சாற்றுமால். ௩௭

சூரியமண்டலமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௬௪௧.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௬-வது, மேலுலகுரைத்தவத்தியாயம்.

---

கலிநிலைத்துறை.

பரிதிவானவன்மண்டிலமேற்பகரிலக்கம்
உரைசெயோசனைகடந்தபினுடுபதியுறையும்
மருவுமண்டிலமாமிதன்மேல்வயங்குடுசேர்
பொருவின்மண்டிலமத்துணையியைந்திடப்பொருந்தும். ௧

உடுவின்மண்டிலமேலிரண்டிலக்கம்யோசனைவிட்
டிடனகன்றுறும்வெள்ளிதன்மண்டிலமிதன்மேல்
அடன்மிகுந்திறலரசவத்துணைகடந்தப்பால்
சுடர்விரிக்குறுமதிமகன்மண்டிலந்துலங்கும். ௨

சோமனல்கியபுந்திமண்டிலத்தின்மேற்சொற்ற
நாமயோசனையிரண்டிலக்கமுநடந்தொழிந்தால்
பூமகன்றிகழ்மண்டிலமிதன்மிசைப்பொன்சேர்
வாமமண்டிலமத்துணையிறந்தபின்வயங்கும். ௩

பொன்னின்மண்டிலத்தினுக்குமேற்புகலிரண்டிலக்கம்
மன்னுகின்றயோசனைகடந்திருஞ்சுடர்வயங்கத்
துன்னுமண்டிலஞ்சனியின்மண்டிலமெனச்சொல்வர்
இன்னமண்டிலமேல்வடக்காகவேழ்முனிவர். ௪

பொருந்துமண்டிலம்பத்தொடொன்றிலக்கமாப்புகல
விரிந்தயோசனைகடந்தபின்விண்ணிடைவிளங்கும்
இருந்தமண்டிலமேற்பதின்மூன்றெனுமிலக்கம்
வரைந்தயோசனைகடந்தபின்றுருவமண்டிலமே. ௫

உலவுகின்றவானுடுக்களையொளிசெயுங்கிரணன்
நிலவுநற்கிரணங்களைநிலைபெறநிறுவி
அலகிலன்புடைத்துருவனங்கமர்ந்துறைபதத்தை
இலகுவண்புகழ்சேர்விண்டுபதமெனவிசைப்பார். ௬

கிளர்ந்தநற்கிரகங்களேமுதற்கிளர்வான்மேல்
விளங்கியாவையும்வாயுபாசத்தினால்வீக்கி
வளங்கொளுஞ்சிஞ்சுமாரசக்கரத்தினில்வளைந்து
துளங்குசக்கரச்சிரமிசையுறைகுவன்றுருவன். ௭

மன்னுகின்றகுண்டலினிபோல்வளைந்துவால்கீழாய்த்
துன்னுசிஞ்சுமாரத்தவயவந்தொறுஞ்சூழ்ந்து
மின்னுகின்றநாள்விதிமுதல்விண்ணவர்தருமம்
யன்னுகின்றவேழ்முனிவாருறைகுவர்பரிவால். ௮

மாலையேநிகர்த்திடுமெனவயங்கெழிற்றுளவ
மாலையேயணிமார்புடைமாலுருவென்ன
மாலைநீக்கினர்புகழ்சிஞ்சுமாரத்தைவணங்கி
மாலையாம்பொழுதேத்துவர்மருவுவாறனே. ௯

அவனிமேற்றிகழாதவன்மண்டிலத்தளவும்
புவவுலோகமென்றியம்புவர்புகன்றமண்டிலமேல்
எவருமேத்துமத்துருவன்வாழெழிற்பதங்காறும்
கவிஞர்தாஞ்சுவலோகமென்றுரைசெய்வர்கருதின். ௧௦

துருவன்வாழ்தருபதத்தின்மேற்றுகளறத்துலங்கு
மருவுசீர்மகாலோகமிவ்வுலகின்மேல்வதியும்
பொருவிலாச்சனலோகமங்கதன்மிசைப்பொருந்தும்
தருமயோகியர்சார்ந்துறைதருதவலோகம். ௧௧

கண்ணகன்றவிவ்வுலகின்மேற்கவின்செயக்கிளரும்
பண்ணமைந்தசீருலகினின்முச்சகம்படைத்த
தண்ணறுங்கமலத்தவிசுகந்தவன்றயங்கும்
எண்ணிறந்தசீர்ச்சத்தியலோகமென்றிசைப்பார். ௪௨

என்றுகூறியிவ்வுலகெலாமிறையவர்வழுத்து
மன்றலார்பசுந்துளவினுருவெனவழங்கி
வென்றிவேலவகீழுலகேழையும்விளங்க
நன்றுகூறுதுங்கேளெனச்சுகமுனிநவிற்றும். ௪௩

மேலுலகுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௬௩௨.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௭-வது, கீழுலகுரைத்த வத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

அணிதிகழவனியின்கீழதலநல்விதலநாக
மணிதிகழ்சுதலம்வண்மைமருவியதலாதலந்தான்
இணையறுமகாதலஞ்சீரிலகியரசாதலஞ்சேர்
பணிதிகழ்பாதலம்பேர்பகருலகேழுண்டன்றே. ௧

சாற்றியவுலகமேழுந்தயங்குவானென்றுக்கொன்றாங்
கேற்றிடுமயுதமென்றேயியம்பியோசனைகீழ்கீழாத்
தோற்றிடுமகலங்கீழ்கீழ்ச்சொன்முறையஃகிமேவும்
மாற்றருவளமவ்வானநாட்டினுமல்குமன்றே. ௨

தழைவுறுபொழிலும்புள்ளுந்தயங்கியவுறையுமாங்கு
விழைவுறுபகலீதென்றுமேவியவிரவீதென்றும்
மொழிவதவ்வுலகுக்கில்லைமொய்பெருதிருவோச்சீக்கும்
புழையுறுமெயிற்றுப்பேழ்வாய்ப்புயங்கநன்மணிகளம்மா. ௩

தேனினமுரலுங்கூந்தற்சிதாரிமழைக்கட்செவ்வாய்ப்
பானலங்கடந்ததீஞ்சொற்பணைமுலைமகளிரோடும்
தானவராக்கர்நாகர்சாற்றுமூவகையுள்ளோரும்
ஊனமில்லாதவிவ்வேழுலகினுமுறைவர்மாதோ. ௪

விரிதலையரவமேவும்விதலத்தினாட்டுக்கீசன்
புரிகுழலுமையாள்கொங்கைபுல்லினன்பொலியுமன்றோன்
அரியவீரியந்தானுங்கோராடகநதியாயோடும்
கரையின்மீப்புலர்ந்தசேறுங்காஞ்சனமாகமாதோ. ௫

மனுமுதலாயினோருமாயினுமாய்வுறுநல்
வினையுறுபுகழினோடுவிளங்குமாவலியென்றோதும்
புனைகழன்மேலோனின்னும்புகன்றிடுஞ்சுதலந்தன்னின்
கனைகடற்றுயின்மால்வாயில்காப்பவாங்கிருக்கின்றானல். ௬

பேசுமாவிருநூற்றைந்தெண்பெறுபெருந்தலையராய
வாசுகியாதிநாகர்வதிந்தபாதலத்தின்கீழா
ஒசனைபலபோம்பின்னருற்றொளிபொதுளுமாங்குத்
தேசுறுசேடனென்போன்சேர்ந்துலகளிப்பான்மன்னோ. ௭

வேறு.

ஆயிரம்பகுவாய்முழைஞ்சுகொப்புளிக்குமாரழற்பிழம்பினுஞ்சேர்ந்து
காயும்வெஞ்சினக்கட்கனலினுங்காலக்கடையினிலுலகங்கள்யாவும்
தீயெழக்கனற்றியாவையுமொழியநிற்றலாற்சேடனென்றொருபேர்
மேயசெஞ்சுடிகைப்பஃறலையநந்தன்மெய்த்தவர்வழுத்தவீற்றிருக்கும். ௮

ஊழிவாயுலகமுழுவதுமுருக்குமுமையவள்கொழுநனுயொல்காப்
பாழிவாய்ச்சேடன்செழுமணிச்சூட்டுப்பணுடவிப்பரப்பிடைப்பாவை
ஆழிசூழுலகோரணுவெனத்தாங்குமென்னவுமுழுவதுமறைந்தாய்
தாழழனரகமெவ்விடத்தனகொல்சாற்றெனமறையவன்சாற்றும். ௯

கீழுலகுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ருசுக.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௮-வது, நரகவியலுரைத்த வத்தியாயம்.

கலிவிருத்தம்.

துன்பமுற்றறந்துன்னலர்தாழ்தரும்
கொன்பழுத்தநிரயங்குறிக்குறின்
மின்பழுத்தவைவேலவுலகின்கீழ்த்
தென்புலத்திற்செறியுமதென்பவே. ௧

பழிபடைத்தபலநாகங்களின்
அழிவிலாத்துயராருமமர்வுற
மொழியுந்தாமிச்சிரமுதலாகநால்
எழுவகைத்திறையாகுநாகமே. ௨

நெஞ்சம்வைத்துநிதிமுதலாகவே
வஞ்சமற்றபிறர்பொருள்வவ்வினோர்
நஞ்சமொத்தநமன்படர்தள்ளவோர்
தஞ்சமற்றதாமிச்சிரஞ்சார்குவார். ௩

மைந்தரோடுமெனவியராதியோர்
சிந்தைகூர்துயர்சேர்ந்திடச்செய்தவர்
வெந்துநாப்புனலின்றிமெலியுமா
றந்ததாமிச்சிரத்தையடைவரால். ௪

வாடிமாழ்கவுயிர்கள்வருத்துவோர்
கோடிகாலமுளங்கொதித்தேயழ
ஓடியோடிநமன்றமருற்றுடல்
நாடிமோதரவுரவநண்ணுவார். ௫

நம்பினேர்பிதாநான்மறையோர்பசு
வெம்பிவாடமிகுந்துயரீட்டுவோர்
தும்பிபோற்கருந்தூதுவர்சூழ்ந்துறக்
கும்பிபாகநரகங்குடிகொள்வார். ௬

மறுக்கலாத்தம்மறைநெறிவிட்டுளோர்
வெறுக்கவந்துவிழியெதிர்த்தூதுவர்
கறுக்கயாக்கையைக்கன்னலின்றுண்டுபோல்
அறுக்கவீழ்வரசிபத்திரவனம். ௭

சிந்தியாவபவாதந்தெரித்திரும்
புந்தியிற்றுயர்பூட்டுவெம்புன்மையோர்
அந்தராய்மசகாதிவருத்திட
அந்தகூபவருநரகாழ்வரால். ௮

பெருக்குமாமுலைப்பேதையராடவர்
செருக்கினுற்பிறர்க்காமுறச்சேர்வரேல்
கருக்கயாக்கையைக்காந்தெரிசிந்துறும்
உருக்குதூண்டழுவுந்நரகொன்றுவார். ௯

அரியநற்சவுசாதிகளற்றவர்
விரிமலத்தின்விளங்களறெய்துவார்
தருமசேதுவைத்தள்ளுமறிவிலோர்
மருவுவார்வைதரணியின்மன்னனே. ௧0

பத்தியின்றிப்படிற்றொழுக்கந்நெஞ்சின்
வைத்துநன்மறிமாய்க்குமகத்தினோர்
முத்தியின்றிவாய்மூக்கொடுமூச்சறப்
பொத்திமாய்க்கப்புகுவர்நரகமே. ௧௧

விள்ளரும்பொய்விளம்பிவிருப்பொடு
கள்ளருந்துங்கசடர்தம்வாய்வயின்
ஒள்ளழல்வைத்துருக்குசெம்பூற்றிடத்
தள்ளுவெந்நரகத்திடைச்சார்வரால். ௧௨

அருந்துமன்னமளித்தியென்றுற்றநல்
விருந்தினோரைவிழிகொடுசுட்டவர்
பருந்துகோடிபறித்துணப்பாவையை
வருந்திமன்னரகத்திடைவாழ்குவார். ௧௩

நேயமற்றநெடும்பகையாற்சுடு
தீயைவைத்துச்செழுமனைதீப்பவர்
காயமுற்றுங்கடித்துக்கணக்கிலா
நாயலைக்குநரகம்புகுவரால். ௧௪

நேயத்தானனிநெஞ்சமழிந்துசொல்
தாயத்தார்மடவாரைத்தழுவினோர்
வீயுற்றேமிகுவீரியச்சேற்றினை
மாயத்தூதர்மடுக்கவங்குண்பரால். ௧௫

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

மோகமுற்றொருவன்பூண்டமுழுமணிகளவிற்கொண்டோர்
ஆகநொந்துயங்கக்கற்போலாங்கனற்றிரளுண்பாரால்
சேகறுமறையோர்வாடத்தீமைமிக்கியற்றினோர்தாம்
சூகரமுகமென்றோதுஞ்சுடுநரகெய்துவாரால். ௧௬

நரபலிநயந்துசெய்தோர்நலிதரவுடலங்கீறிச்
சொரிதருமுதிரமுண்போர்சூழ்தருநரகஞ்சேர்வார்
உரைதருநடலையோர்தாமொளிவிசிமதியென்றோதும்
நிரையமேற்றலைகீழாகநெடுமலைநின்றுவீழ்வார். ௧௭

தன்னைத்தான்புகழ்வோர்சாராக்கருத்தமநரகஞ்சார்வார்
முன்னம்வெந்துயரந்தன்னான்முனிவொடுமடைந்தோர்தம்மைத்
துன்னிவந்தலைப்போர்மிக்கதுயரொடுபுலம்பிவீழ்வார்
மன்னுமாரவுரவப்பேர்மருவியநரகமாதோ. ௧௮

வந்ததோர்முறையிற்றம்பால்வழங்குவான்வேண்டுநர்க்குப்
புந்தியோடுதவார்கிடபோசனநரகிற்போவார்
நைந்திடவுயிரைப்பாந்தளாதியானலிவித்தோர்தாம்
தந்தசூகரப்பேருற்றதனிநரகெய்துகிற்பார். ௧௯

குற்றமொன்றிழைத்திலாரைக்கொணர்ந்துமுன்கோறல்செய்தோர்
வெற்றிசேர்கொடியசூலமிடைகுறுநரகம்வீழ்வர்
உற்றிடுநிதியின்குப்பையொழியுமென்றுதவாலுத்தர்
அற்றமிறுயர்செய்சூசிமுகநரகழுந்துவாரால். ௨௦

புண்ணியம்புரிந்தோர்விண்ணிற்பொருந்தியசேடமாந்த
மண்ணிடைப்பிறத்தல்போலமருவுமிப்பாவஞ்செய்தோர்
எண்ணுறநரகமெய்தியியைந்தவச்சேடமாந்த
கண்ணுவார்சிலக்கண்யாருநலனறிந்தியம்பமாதோ. ௨௧

எண்டிசைநரகமீரேழுலகமென்றிசைத்தவெல்லா
அண்டமவ்வண்டமேல்கீழப்புறத்துள்ளயாவும்
ஒண்டுளவமலன்றாலவுருவமாமுரைக்குங்காலை
வண்டிமிர்தொடையாயிவ்வாறறிகுறின்மருவும்வீடே. ௨௨
என்றுவாளரசுகேட்பவியம்பினன்முனிவனீரும்
வன்றிறலுலகமெல்லாமனத்திடையறிந்துபார்க்கின்
ஒன்றியமாயன்றூயவுருவினையுணர்ந்ததாகும்
நன்றிருந்தவத்தீரென்னநவிற்றினன்சூதன்மாதோ. ௨௩

நரகவியலுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௬௬௬.

ரு-வது, ஸ்கந்தம் முற்றிற்று.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## சு-வது, ஸ்கந்தம்.

## க-வது, அசாமிளன் கதையுரைத்தவத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

பன்னுமோர்பதினான்குலகத்தொடு
கொன்னுலாவுகுணத்தநரகமும்
சொன்னவாறுதுகளறக்கேட்டலும்
மன்னர்தாழ்கழன்மன்னவன்கூறுவான். ௧
செய்யும்வல்வினையாற்சிமிழ்ப்புண்டவர்
வெய்யவாநரகத்திடைவீழ்வுறா
துய்யுமாறுமுளதுகொலென்னலும்
ஐயமோவவறவனறைகுவான். ௨
தீயவாநரகத்திடைச்சேர்பவர்
தூயநாண்மலர்தூவியளவிலா
ஆயபேரினொன்றாயினுமோதியம்
மாயன்றாள்வணங்காமதிசேடரே. ௩
தீமையுற்றவச்செய்வினைநீக்குவான்
வாமமுற்றுவருநல்வினையினால்
ஓமமுற்றிவினைபுரிவோரரி
நாமமுற்றிலரேனன்மையுற்றிலார். ௪
தாமமார்பதழல்வினையால்வினை
போமிங்கென்றல்பொருந்துவதன்றரோ
சேமமார்ந்தவத்திவினைநீக்கிமால்
நாமகீர்த்தனமேநலஞ்செய்யுமே. ௫

வேறு.

காராய்விசும்பாய்க்கதழ்வளியாய்வெங்கனலாய்
நீராய்நிலனாகிநின்றதனிநேமியான்
ஓராயிரநாமத்தொன்றொருகாலோதினர்மற்
றாராயினுமவ்வளறுபடியார்களே. ௬

கன்னியாகுச்சமெனக்கட்டுரைக்குநீர்வளஞ்சேர்
நன்னகரானங்கொருநாராயணாவெனவே
சொன்னதனாற்பாவந்தொலைந்தேதுயக்கறுசீர்
பன்னுதுங்கேளென்றேபகரமுனிமேயினனால். ௭

வீழுமழலையளிவீழ்ந்துநறைபருகிச்
சூழுமுளரித்தொடைதாழ்தடமார்பன்
ஆழியுலகமசாமிளனென்றுரைப்ப
வாழுமொருவன்மறைநூல்வடித்துணர்வோன். ௮

ஈன்றோன்பணிப்பவிறைவழிபாடாற்றுதற்குத்
தேன்றோய்செழுங்கனியுந்தேனாடுபண்வண்டாற்றும்
கான்றோய்மலருங்கவர்ந்துதனிக்கருவி
வான்றோயநீடுவளர்காவினின்றெழுந்தான். ௯

வேளான்மரபின்மெல்லியலாண்மட்டருந்தி
நாளார்மலர்க்காநறுநிழலினிற்கின்றாள்
நீள்வேல்பொருதுநெறிக்குவளைவென்றவிழி
வாளாலெறியக்கலங்கிமதிமாழ்கினனால். ௧௦

கோதினெறியான்கோற்றொடிதன்பாலேகும்
பேதைமனத்தைப்பிடிக்கவுகில்லாதெழவே
தாதையொடுதன்மனையாடனைமறந்தே
காதலெனும்வாரிக்கரைகாணாதுற்றனனால். ௧௧

காந்திமதியிற்கதிர்செய்பருமுத்தணிந்
தேந்திவளருமிளமுலையாள்செவ்விநலம்
மாந்திமயங்கிமலைவுண்டுநல்லொழுக்கம்
நீந்தித்தனதுநிலையினிழிந்தொழிந்தான். ௧௨

காமுறுசேயிழைபாற்காதலரொன்பதின்மர்
ஏமுறவந்துதிப்பவெண்பத்தெட்டியாண்டுறைந்தான்
தேமழலைமென்சொற்சிறுவனொருவனுக்கு
நாமம்புனைந்தனனாராயணனெனவே. ௧௩

வேராவிதிர்விதிராமெய்தளராவுள்ளாவி
சோராவிறந்துதொலையுமமையத்தின்
ஓராமறையோனொருகாற்றன்காதலனை
நாராயணாவெனவேநாவாலழைத்தனனால். ௧௪

வேறு.

அழைத்தவனிறக்குமுன்னதிரும்வாளெனத்
தெழித்தனர்யமபடர்சென்றுதீப்பட
விழித்தனர்வைதனர்வெய்யவாளுறை
கழித்தனர்வீசினர்காலபாசமே. கரு

மறுத்தலேமணக்கலாமதியமாமென
எறிக்கும்வெண்சங்கினரேந்துநேமியர்
நறைத்துழாய்ப்பரஞ்சுடரன்பர்நண்ணினர்
அறுத்தனர்பாசநல்லறமுணர்த்தினர். கசு

பத்திசெய்தாயினும்பகைசெய்தாயினும்
வித்தகனொருவன்பேர்விளம்பற்காயினும்
ஒத்துநாராயணாவெனவுரைப்பரேல்
கொத்துவெம்பாதகங்குலேந்துசாம்புமால். கஎ

மெய்வினைநீக்குநாலெழுத்துவெங்கொலை
மைவினைப்பாதகமாற்றியங்கிநெய்
பெய்வினைமுதலியபிராயச்சித்தமாம்
செய்வினைக்குறையையுந்தீர்க்குமென்பவே. கஅ

முத்தியிற்பொருந்துநாலெழுத்தமுன்னுவோர்ப்
புத்தியினழுக்கினைப்போக்கிப்பொய்யறச்
சுத்தமாம்படிமிகத்துலக்குஞ்சொல்லிய
சித்தமாம்வினைக்குமோர்சிவனாகுமே. கசு

தும்மினுமிருமினுந்துயரமிக்குளம்
விம்மினும்வீழினும்வினைசெய்போதினும்
அம்மவிந்நாலெழுத்தறைவரேலவர்
செம்மலர்மால்கழல்சேர்தறிண்ணமே. உO

ஆதலானிந்நாலெழுத்தசாமிளன்
ஓதினனொருமகவுரைக்குமேதுவாத்
தீதெலாமொழிந்தனன்செப்பினீதுநும்
நாதனேயுரைசெயுநடமினோவென்றார். உக

ஆற்றலந்திகிரியானன்பர்வல்லேயின்
ஏற்றனர்பாசநீத்தியம்பல்கேட்டலும்
காற்றெனநமன்றமர்கலங்கியோடினர்
கூற்றொடுவிளைதிறங்கூறினாரோ. உஉ

மற்றதுகேட்டலுமறலிநோக்கிநீர்
பற்றுதற்குரியனோபகவனாமமொன்
னிற்றிமைதியினியம்பினனவன்
உற்றவெந்தீவினையொருங்குபோயதால். உரு

திருமறுமார்பனைச்சிந்தைசெய்யுபு
பரவுறுதொண்டரெம்பகவராகுவார்
அரவணையான்கழலடையப்பெற்றிலார்க்
குரியதெம்மாணையென்றுணர்ந்துகொள்ளிரால். உச

பணியணை துயில்வுறுபரமவிந்திரை
கணவசெந்தாமரைக்கண்ணவாகமா
மணிநிறவண்ணவென்பவர்மருங்குநீர்
அணுகன்மினென்றனனறத்தின்வேந்தனே. உரு

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆழியானன்பராங்குரைத்தேகவசாமிளனகங்குழைந்தன்றே
தாழிருங்கூந்தன்மனைவியைமறந்துதாதைசொல்கடந்தனனாகி
ஊழுறக்கொடியவினைபுரிந்தேற்குமுதவியதொருபெயரொன்னின்
வாழிமாணுமகீர்த்தனமல்லால்வருகதியில்லெனமதித்தான். உசு

பெருகுமுள்ளன்பான்மாயவன்பெயரேபேசினனவன்றிருவுருவே
கருதினன்கங்காத்துவாரமுற்றுறைந்துகருத்தினையொருப்படுத்தடக்கி
அருளொடுமுன்னமடைந்தமாலன்பராங்குறக்கண்டவரோடும்
விரிகதிர்விமானமேறினன்ஞானாநந்தமான்மருங்குவீற்றிருந்தான். உஎ

நெறியினிற்பிழைத்தவசாமிளன்றானுநேமியந்தடக்கையானாமம்
அறிவிலதொருகாற்கூறலானுயர்வீடடைந்தனனம்மமற்றறிந்து
நறைவிரிதுளவப்படலையந்தாரானாமமேயுரைசெயப்பெற்றார் [ன்.
உறுவினைத்துவக்குநீத்துவீடடைதலுரைப்பதென்னரசவென்றுரைத்தா

இயம்புமிக்காதைபொதியிலின்மேயவிருந்தவக்குறுமுனியெமக்கு
நயம்பெறவுரைத்தவாறுநிற்குரைத்தேனவிலுவோரீதுகேட்பவர்தாம்
பயந்தருபாவத்தொடர்புவிட்டொழிந்துபரமவீட்டுலகினைப்படர்வார்
வயங்குவாளரசவெனவழங்கினனன்மாசறுசுகமுனிமாதோ. உ

அசாமிளன்கதையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உக.

ஸ்ரீக்ருஷ்ணசகாயம்.

## உ-வது, தக்கன்படைப்புரைத்தவத்தியாயம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அண்டரோடவுணர்முதலினர்படைப்பையாதியாமனுவுறைகாலத்
தெண்டகுமுறையீதெனத்தொகைபெறவேயியம்பினையின்னுநீவிரித்துப்
பண்டைநான்மறையினியல்புளிப்பசரிதிபளகிலாநற்றவவெனவே
விண்டுராதப்பேர்வேந்துரைக்குதலுமேதகுசுகமுனிவிளம்பும். க

கண்ணுதலரியபழமறையொருங்குகசடறத்தேர்ந்துமுன்வினையின்
மண்ணிடைப்பதின்மர்மகவெனவழங்கமாரிடையிடத்துவந்துதித்த
தண்ணறுந்தொடைதாழ்தக்கனும்வேந்தன்றநயனாமிகப்பெறுபாக்கு
விண்ணவர்புகழும்விந்தியமலையின்வீறுயர்சாரன்மேயினனால். உ

கோட்டுமால்விந்தக்குலவரைச்சாரற்குலவகமருடணையெனுமோர்
மோட்டுநீர்வாவிமுழுகியதக்கன்முருகவிழ்துளவினான்கமலத்
தாட்டுணைநினைந்துதவஞ்செயச்செய்யதாமரைத்தடங்கணெம்பெருமான்
வேட்டுநாரதனேமுதலினர்பரவவிண்ணிடைக்கலுழன்மீதெழுந்தான். ௩

தண்டையுங்கடகமகுடமுங்கலையுந்தனியெழிற்கவுத்துவமணியும்
எண்டரும்புயமுமிலகமுன்னெழுந்தவியன்மறைமுதலியைவிழியால்
கண்டுளங்குளிரக்களிகொளுந்தக்கன்கமலநாண்மலர்ப்பதம்வணங்கிக்
கொண்டலேயடியேற்கருளெனவழுத்தக்குவலயமளந்தவன்கூறும். ௪

புரிந்தநின்றவத்தாலுளநனிமகிழ்ந்தேம்புகலசிக்கினியெனும்பெயர்சேர்
விரும்பெழிற்பஞ்சசனன்றருமணங்கைவேட்டுநீபடைத்தியென்றுரைத்
கருந்துழாய்ப்பரமனகன்றபின்றக்கன்கழறசிக்கினிதனைமணந்து [துக்
திருந்தெழிற்பதினாயிரமகவளித்தச்சிறுவரைப்படைத்திரென்றுரைத்தான். ௫

மைந்தரவ்வுரைகேட்டொருப்படுமுளத்தர்மருவினர்விரைந்துபோய்க்குட
க்கின், சிந்துசாகரத்திற்கலந்திடுமாங்குச்செறியுநாராயணசரசின்
விந்தைசேர்மாலையுளமிசைப்பொறுத்துவிழுத்தவம்புரிதருகாலை
நந்தலிலறிவுநாரதன்கொளுத்தநடந்தனர்தாதைசொல்வெறுத்தே. ௬

நன்னர்யாழ்முனிசொனாடியமைந்தர்நடந்ததுகேட்டயர்தக்கன்
பின்னரும்பதினாயிரமகவீன்றுபெருகநீர்படைமினென்றுரைப்ப
அன்னவர்தாமுமவ்விடனணுகியருந்தவம்புரிவுழியடைந்து
முன்னரேபோலமுனியுரைத்தமையான்முன்னவர்போலவேகினரால். ௭

நாரதன்மீட்டுமுரைத்ததுகேட்டுநண்ணியம்முனிமுகனோக்கிச்
சீருறுகாமநுகர்ந்தபினல்லாற்சேருங்கொன்மனத்தொழிவறந்தான்
ஆரெழிற்சிறுவர்க்கொழிவறமுரைத்தாயம்மநன்றுனதறிவென்றும்
ஓரிடனன்றியுழல்கெனச்சபித்தானுருத்தெழுதக்கனெஞ்சுடன்றே. ௮

அரிநெடுங்கண்ணியிளமுலைத்துவர்வாயசிக்கினியணிநலந்துய்த்து
விரிபுகழ்த்தக்கன்மீட்டுமோராறுபான்மெல்லியலாரையீன்றவருள்
ஒருபதுமடவாரறக்கடவுளுக்குமொருபதின்மூவர்க்காசிபற்கும்
இருபதோடெழுவரிமகான்றனக்குமினிதுவப்புறவுதவினனால். ௯

பூதனென்போனுக்கிருவரைக்கொடுத்தான்புகழ்பெறுமங்கிராவினுக்குச்
சூதுறுமுலையாரிருவரையளித்தான்சொல்கிருசாச்சுவன்றனக்குத்
தாதவிழ்குழலாரிருவரைத்தந்தான்சாற்றியதாக்கியாயனுக்கு
மாதரோர்நால்வர்தமைவழங்கினான்மறையுணர்தக்கனுண்மகிழ்ந்தே. ௰

குழைகிழித்துலவுமதரரிநெடுங்கட்குமுதவாய்க்குறுநகைமடவார்
அழகுறுமகிணர்தடவரைமார்பமன்பொடுபுணர்ந்தினிதுயித்த
குழவிகடம்மாலுலகமோர்மூன்றுங்கோதறநிறைந்தவிம்மடவார்
விழைவுறுபெயருமுயிர்த்தவம்மைந்தர்வீறுசால்பெயருமீங்கறைவாம். ௧௧

மதிநுதற்பானுவசுமருத்துவதிவளரெழிற்சாமிவிச்சுவைசேர்
கதிர்முலைமுகூர்த்தைசாத்தியையிலம்பைகருபுசங்கற்பையாம்பதின்மர்
துதியுறுதருமன்விழைவுறுமனையார்சொன்மனையார்களிற்பானு
இதமுறுவேதவிடபனையிவனல்லிந்திரசேனனையீன்றாள். சஉ

வசுவெனுமடந்தைவசுக்களையீன்றாண்மற்றவர்பெயரினைவகுக்கின்
இசையுறுதரோணனிலங்கியபிராணனேத்துசீர்த்துருவனல்லருக்கன்
வசையுறுதோடனக்கினிவத்துமன்னியவிபாவசுவென்பார்
நசையுறுமிந்தவெண்மருஞ்சாலநல்கினர்புதல்வரைமாதோ. கங

விளம்பெழின்மல்குவிச்சுவையென்பாள்விச்சுவதேவரையீன்றாள்
வளர்ந்தருமணிப்பூட்சாத்தியைமகிழ்ந்து மன்னுசாத்தியர்தமையுயிர்த்தாள்
தளர்ந்தநுண்ணிடையாளெனுமருத்துவதிசாற்றியமருத்துவரோடும்
அளந்தறிவரியவரிந்தமன்கலையேயாகுநற்சயந்தனையளித்தாள். சச

முருந்துறழ்மூரன் முகூர்த்தையென் றுரைப்பாண் முகூர்த்தர்கடமையுவந்தீன்றாள், சுரும்பிமிர்குழலாள்சாமியாமணங்கு துருக்கநற்றெய்வநல்கினளால், மருந்தெனமொழியு மெழில்கொள்சங்கற்பைவயங்குசங்கற்பனையளித்தாள், கருங்குழலிலம்பை மின்னடியுயிர்த்தாள் கருபுசங்குடுவனைத்தந்தாள். சரு

ஆரலேமுதன்மூவொன்பதுநாளாமவிரெழிற்பிணுக்களைமணந்த
சீர்பெறுசோமன்மனைவியரிடத்திற்சிறுவரைப்பெற்றிலன்கய்நோய்
பேர்பெறவழங்குசாபத்தாற்பெற்றுப்பெற்றனன்பின்னருந்தவத்தால்
ஏர்பெறுகலைகண்முறைமுறைவளருமியற்கையுமெய்தினனன்றே. சசு

பூதனென்றுரைப்போன்பூந்தொடைபுனைந்துபுல்கியமகளிரைப்புகலின்
தாதடர்குழலாள்பஞ்சதாமோதைதன்னொடுசுரபியாமிவரின்
ஏதமிலெழில்சேர்பஞ்சதாமோதையியம்புபூதங்களையீன்றாள்
ஓதியசுரபிபற்பலகோடியுருத்திரர்ப்பொறையுயிர்த்தனளால். சஎ

ஆரணமறைதேரங்கிராவென்போனணைந்தவம்மகளிரையறையின்
தாரணிகுழலாற்சுதைசதியென்னச்சாற்றுபேரிருவரங்கவரின் [ன்
பேரணிவிளங்குஞ்சுதையெனும்பெயராள்பெற்றனள்பிதிர்களைச்சதிதா
காரணவேதமெனப்புவிபுகழ்ந் தகருததருவணரையீன்றாள். சஅ

பெரும்புகழ்க்கிருசாச்சுவனகலந்தோய்பேதையரிவர்பெயர்பேசின் [ணை
திருந்தெழிலருச்சித்தென் றுசொலணங்குந்திடணையென்பாளுமாந்திட
விரும்புநல்வேதசிரசனைமுதலாவிளம்பொருமூவரையளித்தாள்
சுரும்பிமிர்கூந்தலெனுமருச்சித்துத் தூம்பிரகேசனையீன்றாள். சகூ

நான்கெனுமறைதேர்காசிபனென்போனன்மணம்புணர்ந்தநால்வர்கடாம்
தேன்கமழலங்கல்விநதைகத்துருபூச்செறிகுழற்பதங்கியாமினியாம்
வான்கொளும்புகழ்சாலிவர்களின்விநதைவண்புகழருணனோடருார்
ஊன்கொளுந்திகிரிப்பர்மனைப்பரிக்குமொண்டிறற்சருளனையுயிர்த்தாள்.()

ஒண்ணகைத்துவர்வாய்க்கத்துருவென்பானூரகரையுயிர்த்தனளுவப்பின்
பண்ணெனுமொழியாள்பதங்கியாமணங்குபதங்கமேமுதலியபயந்தாள்
தண்ணறுங்குழலாள்யாமினிவிரும்பிச்சலபதமுதலியதந்தாள்
எண்ணருங்குணஞ்சால்காசிபன்மனையாரீன்றவரியல்பெடுத்துரைப்பாம்.

விதிமுதுமறைதேர்காசிபன்வேட்டமெல்லியலார்பெயர்விளம்பின்
அதிதிநற்பிரியைதிதிதனுக்காட்டையணிசெழுமரிட்டைவான்சுரசை
மதிபுரைவதனவினைமுனிகுரோதவசைமகிழ்தாம்பிரைசுரபி
புதுமலர்க்குழலாள்சரமையெவ்வுலகும்புகலுஞ்சீர்த்திமியெனப்படுமால்.

உரைதருமடவார்தங்களிற்சரமையுயிர்த்தனள்சுவாபதக்குழுவைச்
சுரபியீன்றெடுத்தாள்பசுமுதலாகச்சொல்லிருகுளம்பவாம்விலங்கைத்
தரைபுகழெழில்சேர்தாம்பிரையென்பாடந்தனள்பறவையின்றொழுதி(ல்.
அரிமதர்நெடுங்கண்முனியெனவிசைப்பா ளரம்பையர்தமையளித்தனளா

இனமலர்க்குழலா டிமியெனுமேழை யீன்றனணீரின்வா ழுயிரை, நினை
வுறும்வலிசேர்யா துதானவரைநிகழ்த்தியசுரசைபெற்றனளால், தனுவுவந்
தீன்றூடானவர்தமையத்தானவர்சம்பரனொடுதார், புனைவிடபருவாமுதலி
யவறுபான்பொருந்துமொன்றென்னுமெண்ணினரால். உச

விரும்பெழிலதிதியுயிர்த்தநற்சிறுவர்விவாச்சுவானரியமாப்பூடா
வருகதிர்த்துவட்டாவயங்குசொற்சவிதாமன்னியபகன்வளர்தாதா
அருந்திறல்விதாதாமித்திரன்வருணனூர்ந்தசீர்ச்சக்கரனிருஞ்சீர்
பொருந்துருக்கிரமனென்றுபன்னிருவர்போற்றுமாதித்தியராவார். உரு

சாற்றுயர்குரோதவசையெனுமாதுதந்தசூகங்களைத்தந்தாள்
வேற்றடங்கண்ணாளரிட்டையாமணங்கு விஞ்சையர்தமைவழங்கினளால்
எற்றசீரினைதான்றருக்குழுவோடுமிணர்க்கொடிதொடக்கத்தவீன்றாள்
கோற்றொடிக்காட்டையிருகுளம்பல்லாக்கோதறுவிலங்குயிர்த்தனலால்.()

வெங்கதிர்விச்சு வானெனவுரைப்போன் விளங்குவை வச்சுதமனு
வை, அங்கண்மாஞாலம் புகழ்தருங்கூற்றை யருந்திறல் யமுனையையளி
த்துப், பொங்குநன்மனையாள் சாயையோருருவாம் பூவையைப்புணர்ந்த
பின்சனியைத், தங்குமோர்பெயர்ச்சா வன்னியாமனுவைத் தபதியென்
பாவொடுமுயிர்த்தான். உஎ

வழங்கியகதிர்சே ரரியமாவென்போன் மானிடர்தமைமகிழ்ந் தளித்
தான், விழைந்திடும்புதல்வர்ப் பெறுதவன்பூடா விளம்பியதக்கன்முன்
னியற்று, முழங்கழல்வேள்வி யடைந்துபல்லிழந்த முறைமையால்வேள்வி
கடொறுஞ்சீர், தழைந்துநுண்மாவே யயிலுமென்றுரைத்துத் தவமுனி
பின்னருஞ்சாற்றும். உஅ

தக்கன் படைப்புரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ருஎ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

# ௯-வது, இந்திரன்விச்சுவரூபனைக்குருவாக்கொண்ட வத்தியாயம்.

---

## கலிவிருத்தம்.

வலிசெழுமசுரர்தங்குலத்துமங்கையைப்
பொலிதருமலர்த்தொடைபுனைந்துவேட்டிடும்
தொலைவறுபுகழ்த்துவட்டாவெனும்பெயர்
மிலைகதிர்க்குதித்தனன்விசுவரூபனே. ௧

வெற்றிவேலவுணர்தங்குலத்துமெல்லியல்
முற்றிழையணிமுலைமுயங்கிச்செங்கதிர்
பெற்றவம்மதலையைப்பெட்பிற்கொண்டனன்
கொற்றவாளிந்திரன்குரவனாகவே. ௨

என்றலுமதிக்குடையிறைவனென்னைகொல்
துன்றுசெங்கதிரினுக்குதித்ததோன்றலைக்
குன்றெறிகொற்றவன்குரவனுக்குதல்
மன்றநீயுரைக்கெனவழங்குமாதவன். ௩

அண்ணல்வாளிந்திரனரும்பவிழ்ந்தபூந்
தண்ணறுப்பிலிற்றுபொற்றருவினீழலின்
எண்ணிலாவிஞ்சையரியக்கர்கின்னரர்
விண்ணவரடிதொழவீற்றிருந்தனன். ௪

முழுமறையந்தணன்முன்னமெய்தலும்
செழுநிதிச்செருக்கினாற்றெரியகிற்றிலன்
எழுகலனிருந்தனனெரிபொற்றூதுண
மழலைவண்டாற்றுதார்வானவேந்தனே. ௫

அண்ணலங்குரவன்வந்தணுகலாயிரங்
கண்ணுடையிந்திரன்கண்டிலானெனின்
மண்ணிடைக்காண்பர்கொல்வந்துற்றார்தமை
எண்ணருநிதிச்செருக்கெய்தினாரோ. ௬

பனியிருவிசும்பகம்பொலியப்பைந்தொடை
வனைமுகிலிந்திரன்வைகநோக்கினன்
இனிதிவணரசிருப்பென்றுபோயினன்
தனிமறையோனெனச்சாற்றுமேன்மையான். ௭

எயதன்னரசிருப்பெழுந்துவல்லையே
போயினன்குரவனென்றறிந்துபோயுழி
ஆயிரங்கண்ணினனுடையக்கண்டிலன்
மாயையின்மறைந்தனன்மறைவல்லாளனே. ௮

எள்ளினன்குரவனையிகலழிந்திடும்
அள்ளிலைத்தருநிழலமர்விண்வேந்தனை
வெள்ளிதன்னருள்பெறுவெய்யதானவர்
ஒள்ளழல்வாளமருடற்றினாரோ. ௯

இந்திரனுடைந்துபோயேழிரும்பொழில்
தந்தவனடிமலர்தாழ்ந்துசிற்றலும்
அந்தணனருள்பெறுதடைந்ததித்திறம்
வந்ததென்செருக்கெனவழங்கன்மேயினன். ௧௦

அலர்கதிருருள்சுதன்விசுவரூபனாய்
நிலவுமிழ்கவிகையாய்நினக்குநேரிலாக்
குலமறைதெரிக்குமோர்குரவனாமெனின்
இலகுவாளமர்விறலெய்துமென்றனன். ௧௧

விழுப்புகழிந்திரன்விரிஞ்சனொடொரீஇ
அழற்கதிர்மைந்தனையடைந்துபன்முறை
வழுத்தினனதியான்வந்துற்றேனருள்
கொழித்திடுகுரவனாகென்றுகூறுவான். ௧௨

இளையவராயினுமினியகல்விமிக்
குளரெனின்மூப்பினர்க்குரித்திறைஞ்சுதல்
தளையவிழ்தாரிமையோர்கடம்மொடும்
வளர்புகழ்மறைவலோய்வணங்குவேனென்றான். ௧௩

மகபதிசொற்றலுஞ்செல்வம்வந்துறின்
அகமிகமகிழுபவசடராகலின்
தகவிலையெனக்கிஃதெனினுஞ்சாற்றிய
நிகாறுமுனதுரைநீக்கவல்லனே. ௧௪

எனவுரைபற்பலவியம்பியின்னன
துனியறுகதிரவற்குதித்ததொல்புகழ்த்
தனிமறைதேர்ந்தவன்சார்ந்துவைகினன்
குனிசிலைவானவர்குரவனாகவே. ௧௫

போக்கறுபொன்னுலகளிக்கும்புங்கவன்
ஆக்கியகுரவனுஞ்சுறத்திறழியான்
காக்கவென்றுரைத்தசொற்கவயந்தாங்கினன்
தாக்கினனவுணரைச்சமரின்வென்றனன். ௧௬

மழையுறழ்வண்கையாயெனாலுமன்னனும்
விழைமகபதிக்குவண்விசுவரூபன்முன்
கழறுநாராயணகவயஞ்சொன்முறை
மொழிதியென்றுரைப்பமெய்ம்முனிவன்கூறுவான். ௧௭

இந்திரன் விச்சுவரூபனைக்குருவாக்கொண்டவத்தியாயம்
முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௭௨.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௪௰-வது, நாராயணகவசமுரைத்தவத்தியாயம்.

---

### எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அரும்புனல்படிந்துபுனிதமுற்றங்கநியாயசமாங்கடைவுடனியற்றித்
திருந்தியமறைசொல்கரநியாசமுந்தான்செய்ம்முறைதிருத்தகப்புரிந்து
வரந்தருமாயன்மலர்ப்பதத்துணையைமனத்திடைமருவுறக்கருதிப்
புரந்தரன்றனக்குவிச்சுவரூபன்புகலுமால்கவயத்தைப்புகல்வாம். ௧

மலர்ந்தசெங்கமலமலர்மகண்மறுவார்மார்வமும்வாளிகேடகம்வாள்
இலங்கெழிலாழிவளைகதைபாசமிருஞ்சிலைதரித்தவொண்கரமும்
நலந்தருகலுழன்புயத்தினிதுறைந்தநளினமென்பாதமுமாக
வலந்தரமுன்வந்தெங்குமெப்பொழுதுமாயவன்கருணையிற்காக்க. ௨

### கலிவிருத்தம்.

புகழ்பெருமீனுறுவெடுத்தபுங்கவன்
அகமகிழ்ந்துநீரடைந்துகாக்கவிச்
சகமிசைவாமனன்சார்ந்துகாக்கவேர்
மிகுநிலமளந்தமால்விசும்பிற்காக்கவே. ௩

பண்ணியவரைமுதற்பலவரண்களின்
துன்னுவெஞ்சமத்திடைத்தோன்றலுற்றுமுன்
மன்னுவெங்கனகனைமாய்த்தமைந்துடை
நன்னலஞ்சேர்நரமடங்கல்காக்கவே. ௪

வெற்றியாண்கேழலாய்விளங்குமேலவன்
பெற்றிடுவழிதொறும்பெரிதுகாக்கவே
நற்றவநரன்சொனாராயணன்னணி
உற்றவர்பற்றெலாமொழித்துக்காக்கவே. ௫

தசரதன்மதலையாமிராமன்றன்றுணை
இசைதருமிளவலோடினிதியைந்திருந்
திசைதொறுந்திசைதொறுஞ்செப்புங்காலெல்லாம்
விசயம்வந்துறநனிவிரைந்துகாக்கவே. ௬

கழைதிகழ்கார்வரைக்கவினுஞ்சாரலின்
மழைதவழ்குவட்டின்மீமருவுபோழ்தெலாம்
பழமறைமொழிதருபரசுராமனுள்
விழைவொடுகுறைவறவிரைந்துகாக்கவே. ௭

சிந்தையுண்மகிழ்தத்தாத்திரையர்தீங்கற
மந்திரநவில்வழிவந்துகாக்கவே
பந்தமிலிடபனும்பைந்துழாய்முகில்
சந்ததங்குளிரிற்றுருபத்திற்காக்கவே. ௮

கருதருஞ்சீர்திகழ்கபிலனன்பொடும்
இருவினைக்கட்டறுத்தினிதுகாக்கவே
தரைபுகழ்மறைதெரிசனற்குமாரன்றான்
பொருமதன்றருதுயர்போக்கிக்காக்கவே. கூ

வெறுப்பொடுபகைக்குழுமிடையும்வெங்கொலை
மறத்தினிற்பொலிதருவழிகடோறும்வந்
தறத்தினைநிறுவியவயக்கிரீவனென்
மறைப்பொருளாயவன்வந்துகாக்கவே. க0

காரதிர்கடலெனக்கவின்செய்வண்ணனைப்
பாரதசமர்த்தலைப்பாவவென்றிசெய்
சாரதினைத்தொழுஞ்சமயத்தின்னருள்
நாரதமுனிவரனயந்துகாக்கவே. கக

கொழுந்துளவணிந்தபைங்கூர்மமாயமால்
அழுந்தவெந்நாகுறுதருளிற்காக்கவே
வழங்குதன்வந்திரியாயமாயவன்
விழைந்தனஞதியில்விரைந்துகாக்கவே. க௨

போற்றுசீர்வேள்வியம்புருடன்போந்தெனைக்
கூற்றடாதன்புளங்கொண்டுகாக்கவே
ஏற்றநற்பலமுனமேயும்ராமன்வெஞ்
சீற்றம்வந்துழிநனிசிறந்துகாக்கவே. க௩

விடலருநான்மறைவியாதனென்பவன்
ஒடிவறுவிஞ்சைமிக்குதவிக்காக்கவே
படிமிசையறந்தரப்பௌத்தனுருமால்
கொடியவர்மதங்குறுகாதுகாக்கவே. க௪

பரியுருவெடுத்தறம்பரிக்கும்பச்சைமால்
உரைகலித்தீமைவந்துறுதுகாக்கவே
வருபகலறுவகையாக்கிமுந்துகூ
றருளொடுகேசவனடைந்துகாக்கவே. க௫

வலஞ்செயவிரண்டெனவகுத்தகூற்றிலான்
குலம்புரந்தளித்தகோவிந்தன்காக்கவே
பலந்தரமூன்றெனப்பகுத்தகூற்றினில்
நலஞ்செய்நாராயணனயந்துகாக்கவே. க௬

பொருவிலாநான்கெனப்புகன்றகூற்றினில்
பரிதிநேர்சக்கரபாணிக்காக்கவே
அரியசீரைந்தெனவறைந்தகூற்றினில்
வருமதுசூதனன்மகிழ்ந்துகாக்கவே. க௭

புரைதபவாறெனப்புகன்றகூற்றினில்
உரைதருமாதவனுவந்துகாக்கவே
இரசனிமுகத்தினிலிந்தியங்களுக்
கரசனென்றுரைக்குமாலடைந்துகாக்கவே. கஅ

பன்னுமுச்சகந்தருபற்பநாபியான்
துன்னியநிசிநடுச்சூழ்ந்துகாக்கவே
உன்னுறுபரமமாநிசியிலொண்புகழ்
மன்னியதிருமறுமார்பன்காக்கவே. கக

களிகொள்சீர்வைகறைகதிவண்புகழ்
வளர்சநார்த்தனனுளமகிழ்ந்துகாக்கவே
விளையுநாற்சந்திகடோறுமிக்குவந்
தளிசெய்தாமோதரனடைந்துகாக்கவே. உ0

கற்றையங்கதிரழற்கடவுள்காட்டகம்
முற்றுவெவ்வரில்களைமுருக்குமாறுபோல்
அற்றமிலயிர்படையாசெனுழிதான்
உற்றபல்பகைதுமித்துவந்துகாக்கவே. உக

ஆடகமணித்தொடியமலனங்கைசேர்
கேடகஞ்சமர்க்கெதிர்செழுமினோர்விழி
மாடகமறைப்பமாற்றலரைமாய்த்திருங்
கூடகத்துறைந்தகூர்வாளுங்காக்கவே. உஉ

கொடியனபூதம்வெங்கூளியேமுதல்
இடிநிகர்தெவ்விளையிரியநூறிநுண்
பொடியெனப்பிதிர்த்துநம்புனிதன்பூங்கைசேர்
தடியொருகுறைவறச்சார்ந்துகாக்கவே. உங

சூதுசெய்பகைக்குழுதுணுக்கமெய்தியிப்
பூதலத்திரிதரவெருட்டிப்பூவுறை
மாதுளம்விரும்புகார்வண்ணன்வாயில்வைத்
தூதுவெண்சங்கமுள்ளுவந்துகாக்கவே. உச

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

பங்கயச்செங்கணுனைப்பரிக்கும்வெம்பறவைவேந்து
பொங்குமின்னருளின்வந்தெப்பொழுதினுமுவந்துகாக்க
தங்ககம்புறம்புதிக்குச்சாற்றியவிதிக்குமேல்கீழ்
எங்குமெப்பொழுதும்வந்தூற்றெறுழ்நரமடங்கல்காக்க. உரு

மாயவனுமருபம்வாகனம்வாளியாதி
ஆயவைம்படைகள்சேனைக்கணிதிகழ்தலைவனென்னும்
தூயவன்பிராணன்புந்திசொன்மனமாக்கையோடு
மேயவிந்தியங்கடம்மைவிருப்பொடுமிடைந்துகாக்க. உசு

என்றரியுருவமாகியிலகுமிக்கவயந்தன்னை
வென்றிசெயமரர்வேந்தேவிருப்பொடுதாங்குவாயேல்
வன்றிறற்பகைஞர்தம்மைவல்லையின்வேறியென்று
ஒன்றுவிச்சுவரூபன்றானுரைத்தனனுவந்துமாதோ. உஎ

தழைந்தசீர்விண்டொாதசாற்றுமிக்கவயந்தாங்கி
மொழிந்திடுகவுசிகப்பேர்முதுமறையோன்முன்கான்போய்
விழைந்தயோகத்தினுக்கைவிடுத்தனன்வீடுசேர்ந்தான்
கழிந்தவவ்யாக்கையென்பைக்கடந்தனனூகிவான்மேல். உஅ

செஞ்சிலைநுதலாரோடுசித்திரரதனென்றோதும்
விஞ்சையன்போகலாலேவீழ்ந்தனன்றரையில்வீழ்ந்து
வஞ்சமிறவஞ்செய்வாலகில்லியர்மாற்றந்தன்னால்
எஞ்சுமவ்யாக்கையென்பையிருநதிமடுத்துப்போனான். உசு

இணையிலிக்கவயந்தாங்குமிருந்தவன்யாக்கையென்பை
அணிதிகழ்வானின்மேலுஞ்சடப்பரிதாயதென்னின்
மணிநிறவண்ணத்தம்மான்வடிவமாங்கவயம்பெற்றோர்
தணிவறுபெருமையெம்மாற்சாற்றுதற்கெளிதொன்றன்றால். ௩௦

இனையநற்கவயங்கேட்போரியம்புவோர்யாவரேனும்
வினைசெய்வெம்பிணியினின்றோர்வேண்டியபெறுபவென்றும்
குனிதிரைக்கடல்சூழ்பார்மேல்கொடும்பகையிலராய்க்கங்கைப்
புனைவழிபொலங்கழற்றாட்புனிதனைப்பொருந்துவாரால். ௩௧

குரவனைவணங்கிவிண்ணோர்குழுவொடுகுலிசத்தண்ணல்
உரைசெயுங்கவயந்தாங்கியுறுபகைகடந்துவானத்
தரசுசெய்திருந்தானென்னவருந்தவச்சுகனென்றோதும்
பொருவரும்புகழின்மிக்கான்புகன்றனன்மீட்டுஞ்சொல்லும். ௩௨

நாராயணகவசமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௧௦௬.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ரு-வது, விச்சுவரூப விருத்திரர்களைக்கொன்ற வத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

திசைபுகழ்மன்னபுத்தேளிரிங்ஙனம்
நசையுறுகுரவனூமவேதியன்
அசுரர்தமருமகனுகலானவர்
இசையுறக்கரந்தவியீந்துவைகினன். ௧

விறலுடைவலாரிநல்வேள்வியாற்றுழி
மறைநவில்வேள்விநல்லவிமறைத்துமற்
றறைகழலவுணர்தேத்தளிப்பநோக்கினன்
பொறையிலன்குரவன்மேற்புழுங்கிவெட்டினான். ௨

நஞ்சுவாய்வழிபடநாகம்போன்மென
வெஞ்சினந்தலைக்கொளீஇவேந்தன்வெட்டலும்
செஞ்சுடர்வழங்கியசெம்மன்முத்தலை
அஞ்சிறைப்பறைவையாயற்றுவீழ்ந்தவே. ௩

வைத்துறுசோமமுமதுவுமன்னமும்
முத்தகைவாயினின்முறையின்மாந்துவான்
அத்தலைகபிஞ்சலங்கலவிங்கம்மணித்
தித்திரியாகவுஞ்சேணிற்போயவால். ௪

மலைத்தவாளிந்திரன்மறைவல்லாளனைக்
கொலைத்தொழில்புரிந்தவக்கொடியபாவம்வந்
தலைத்திடவஞ்சலியானகையொடு
நிலத்தலையளந்ததாணினைத்துநீத்தனன். ௫

மற்றதுமண்ணிடையுவரும்வார்திரை
எற்றுநீர்யாற்றிடைநுரையுமின்றளிர்
உற்றமாமரத்தினிற்பிசினுமொள்ளொளிப்
பொற்றொடிமாதர்பாற்பூப்புமாயதே. ௬

கருவுறுமகளிர்தங்கணவற்சேரவும்
வருகுழிபூமியின்மல்கித்தூரவும்
தருமிசைகுறைத்தலுந்தளிர்க்கவும்புனல்
பெருகவுமவன்வரம்பெட்பினீந்தனன். ௭

சுந்தரமுடிச்சுரபதிதன்றோன்றலைக்
கந்தரந்தடிந்திடல்காதற்றாதைகேட்
டிந்திரசத்துருவெழுந்துகொல்கென
மந்திரநவின்றுநெய்வழங்கினானழல். ௮

துய்யதாரணிதுவட்டாவெனும்பெயர்ச்
செய்யவெங்கதிரினற்சீற்றமீக்கொளா
நெய்பொழிநீடழனின்றுதோன்றினன்
வெய்யதோர்விடமெனவிருத்திராசுரன். ௯

எற்கடையெழுசெவ்வானென்னுங்குஞ்சியான்
சொற்கடைபுக்கநற்சுடர்செய்கண்ணினான்
பற்கடைவாயிதழ்தின்னும்பண்பினான்
விற்கடைநாடொறும்வீங்குமெய்யினான். ௧௦

பல்கதிர்க்குழவிவெம்பரிதிகாண்டலும்
வல்லிருளுடைதல்போல்வானுளோரெலாம்
ஒல்லையினுடைதாவுருத்தெழுந்தனன்
மல்லலம்பொருப்பெனமருளுந்தோற்றத்தான். கக

வெஞ்சினவுருமெனவேலைவாயெழு
நஞ்செனநடந்தவந்நாமவேலினாற்
கஞ்சினனிந்திரனலங்கலாழியான்
கஞ்சநாண்மலரடிகண்ணுற்றேத்தினன். கஉ

தளிர்க்குநல்லருளுடைத்ததீசியென்பொளி
கிளைக்கும்வச்சிரப்படையாக்கிக்கேடற
விளைத்தனைவெஞ்சமர்வெல்கவென்றனன்
அளித்தழித்துலகெலாமாக்குமண்ணலே. கங

சூட்டுவாளரவணைதுயிலுந்தொன்முதல்
தாட்டுணைதொழுதுயர்ததீசிபாலுற
வேட்டதுநிகழ்த்தினன்விரைசெய்கற்பகக்
காட்டகங்காக்குமக்காவன்மன்னனே. கச

ஆழறப்பட்டுமண்ணுருமென்புமற்
றோர்பொருட்டாகவிண்ணுலகுகாவல்செய்
வேரியந்தாரினன்விழையப்பெற்றது
சீரிதென்றுளமகிழ்சிறந்திட்டானரோ. கரு

நேயவென்பிந்திரநீகொள்வாயெனத்
தாயினுமன்புறுததீசியென்பவன்
ஏயவெங்கானலினீடுநீரெனும்
காயம்விட்டரிகழல்கலந்துமேயினான். கசு

மன்பெருஞ்சிறப்பினன்மாலைவெண்குடை
மின்பொழிமணிமுடியேந்தனல்செறு
என்புமாங்களித்தனனிருந்தவத்தினோன்
அன்பினர்யாதுமற்றருள்கலாததே. கஎ

வெற்புகப்பணைத்ததோள்வேந்தன்மேதகு
கற்பகக்கத்திகைக்கடவுட்டச்சனால்
எற்பழுத்தொழுகுவெள்ளென்புமுன்புறக்
கொற்பழுத்தொழுகுவெங்குலிசமாக்கினான். கஅ

எழுசீர்க்கழிநெடிலாசிரியச்சந்தவிருத்தம்.

உவவுவெண்மதியினுருவுகொண்டுதிகழொருதனிக்குடைகிழற்றவெண்
கவரிகாலசையவெள்ளியங்கிரிகடுக்குமால்களிறுகைத்தெழா
தவழ்மதத்தெரியன்மார்பன்வெந்திறறழைத்தவச்சிரமெடுத்துவாள்
அவுணர்போர்வலமடங்கநின்றமராடவெய்யசமராடினான். ககூ

கருத்தழிந்தமரினோடுகின்றசுடர்காலும்வேலவுணர்தம்முகம்
உருத்துநோக்கியுடல்கொண்டுநீவிர்நனியோடினாலுமுடல்யோதன்மெய்
திருத்துபோரிடைமெய்விடுபுவிண்ணடைதறிண்ணமென்றுபலசெப்பனு
விருத்திராசுரனிறுத்தியிந்திரன்வெருக்கொள்வெவ்வுரைவிளம்புமால். [ம்

குரவனாகுமறையோனையன்றுடல்குறைத்துவெய்யபழிகொண்டஉன்
வரவுகாணினனிதீமைமன்னுமுயிர்மாய்வையிங்ஙனுயிர்மாயுமுன்
அரிதுபெற்றவொருகுலிசம்விட்டதுவுமடலழிந்திடுதலறியெனா
உரைசெய்தம்புவியளந்தமால்பதமுளத்தினுன்னினனுணர்த்துவான். ௨௧

அருந்தவன்செவியுறைந்திடுங்கதையகந்தைசிந்தையினொழிந்திட
வரந்தருந்திருமுகுந்தவுந்தியின்மலர்ந்தபங்கயமணந்துபொன்
இருந்தபைந்துளவணிந்தமார்பகவெனுஞ்சொனாமமுளியைந்துநாப்
பொருந்தவென்றுரைநவின்றெழுந்துடல்புரந்தரன்னெதிர்நடந்தனன். ௨௨

கடலெனக்கடல்கலக்கவெம்பியெழுகாளகூடமெனமன்றனாண்
மடலவிழ்த்தளிமிழற்றுதாரமரர்மறுகவெண்பிறைமருட்டுகோட்
டடல்விளைத்தவயிராவதப்பகடதிர்ந்திடக்கதைகொடெற்றிடா
உடல்சினத்தவுணனாடல்வெங்களமுழக்கினான்வளைமுழக்கினான். ௨௩

அச்சமுற்றமரர்பாறவெண்டிரையடங்கவுண்டெழுமடங்கல்போல்
நச்செயிற்றரவுபோல்வெகுண்டெதிர்நடந்துவேழநுதலெற்றலும்
பச்சிரத்தமுமிழ்கின்றவெய்யகதைபாரில்வீழவழல்காலுமோர்
வச்சிரப்படையின்மண்டுபோரவன்வலக்கரந்துணியவெட்டினான். ௨௪

பொருகைநன்றெனவியந்துசெங்கணழல்பொழியவெங்கதையெடுத்துமே
வருகைகண்டமரரோடவச்சிரமணிக்கைநின்றுவிழவெற்றிடா [ல்
முருகையுண்டளியலம்புமென்முகைமுறுக்கவிழ்ந்ததொடைமார்பினான்
ஒருகைகொண்டுகளிமதமெடுத்தொழுகுமோடைமாவெனவுடற்றினான்.

வச்சிரப்படைநிலத்தின்வீழ்வுறலும்வாசவன்படையெடுத்திலான்
கச்சையங்களிநல்யானைநின்றெதிர்கடாவுகின்றிலனிருத்தலால்
இச்செருக்கறவுவந்ததென்படையெடுத்தியென்றுதிறலவுணர்கோன்
பச்சைமான்மறையினுச்சிவைத்தவடிபரவிநின்றிஃதுபகருவான். ௨௬

வெற்றியுற்றிடினும்வீரமற்றொழியவெய்யதோல்விநனிமேவினும்
கற்றமேலவர்மகிழ்ச்சியோடுறுகலக்கமோர்சிறிதுகாண்கலார்
கொற்றமாயவனளித்தமாயைசெய்குணங்களென்பருலகோர்கடாம்
பற்றிநின்றசெயலொன்றனான்மரப்பாவைபெற்றசெயல்போலுமே. ௨௭

நாகமீதுநடனவிலுமாயனருள்நண்ணுவோர்கள்சமமாகவே
சோகமோடுநலநாடுவார்களெனிற்சொல்லுமாயனருளன்பனே
மாகநாடுடையமானவேலவமானமென்றுமனநாணலென்
போகவென்றுரைசெயாறுணர்ந்துடல்புழுங்கினானவிழுங்கினான். ௨௮

வாள்விரிந்தொழுகுவச்சிரப்படையெடுத்துமன்னுதிறலவுணர்கோன்
தோளினோடுதொடிசேரிடக்கையுமொர்துண்டுபட்டுவிழவெட்டியே
காளமேகமொருவெள்ளியங்கிரிகலந்துதாமரைமலர்ந்தபோல்
தாளுலாவுகரவெள்ளைமாவின்மிசைதங்குவானமர்தொடங்கினன். உசு

தருக்கும்வெஞ்சமருழந்தவாளவுணர்தலையழிந்திடவிளைத்தபோர்ச்
செருக்கும்விண்ணவர்செருக்களத்திலெதிர்செயலுநோக்கியிமைதீதாக்
கருக்கும்வெங்கனல்கடைக்கணின்றெழுகுசாலவேலவுணனுலகெலாம்
வெருக்கொளும்படியெடுத்துவேழமொடுவென்றிவேந்தனைவிழுங்கினன்.

கிளர்ந்தசெம்பொன்முடியண்டகோளகைகிழித்திடத்திசைபுயங்களால்
அளந்தவெந்திறல்விருத்திராசுரனகட்டினேர்புடைபடைக்கையால்
பிளந்தெழுந்தனனிரட்டைவெண்பிறைபிறங்குகோட்டுமதமாவொடும்
விளைந்ததேறல்பொழிகற்பகத்தொடைமிலைந்தகொற்றவயவேந்தனே. ௩௧

கலிநிலைத்துறை.

விருத்திராசுரன்வெந்தலைதுணியெனவிளம்பி
மருத்தழைந்ததார்வாசவன்வச்சிரம்விடுத்தரன்
உருத்தவன்றலையொருபருவத்தினிலறுப்பத்
திருத்துழாய்முகில்பதத்தினிற்காந்தியாய்ச்சேர்ந்தான். ௩௨

உலகுளோரெலாங்காண்குறவவுணர்கோனொளியாய்
இலகுமால்பதமியைதலுமிமையவர்முதலோர்
அலகிலாவிடர்போயதென்றலர்மழைபொழிந்தார்
மலர்செய்பூந்தொடைவாசவன்மகிழ்ந்திலன்மாதோ. ௩௩

விச்சுவரூபவிருத்திரர்களைக்கொன்றவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கஙசு.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## சு-வது, விருத்திரகத்தியை இந்திரன்போக்கிய வத்தியாயம்.

---

கலிநிலைத்துறை.

என்றுகூறலும்யாவருமகிழ்ந்தினிதிருப்ப
வென்றிசேர்தவவிறற்படையிந்திரன்மகிழா
தன்றுவைகியதென்கொலொன்றரசர்சோன்வினவ
நன்றுநன்றுநின்வினவெனநற்றவனவில்வான். க

விறன்மிகுந்தெழுவிருத்திராசுரன்றனைவீட்டி
அறம்வளர்ந்திடவருளுந்தியரசவென்றுரைக்கும்
நிறைபெருந்தவமுனிவர்சொல்கேட்டலுநிணமார்
கிறையுறும்படையாயிரங்கண்ணவன்கழறும். உ

முன்னமோர்மறையோன்றனை முனிந்துமாய்த்தமையால்
துன்னும்வெம்பழிதொடர்தாநடந்துளைவுற்றேன்
இன்னம்வெம்பழியீட்டுதற்கிசைகிலேனென்னப்
பன்னுநான்மறையந்தணர்பழுதறப்பகர்வார். ௩

மிக்கபாதகமியற்றினும்விறற்பரிவேள்வி
கைக்கடாசலத்தினுக்கருள்கண்ணன்மேலன்பால்
தக்கநான்மறைமரபுளியாற்றிடிற்றவிரும்
இக்கொடுந்தொழிலான்பழிதீர்ப்பதிங்கரிதோ. ௪

எனவுரைத்திடுமுனிவர்சொற்கியைந்தனனுகி
வனைபொலங்கழல்வாசவனவுணனையாய்த்தான்
துனியுறும்பழிபூரியர்தோகையினுருவாய்த்
தனிதொடர்ந்ததுகில்லுகில்லெனுமுரைசாற்றி. ௫

சாந்துவெம்பழிதொடர்வுறத்தனித்தனியோடி
ஆர்ந்தநீருறுமானதவாவியம்புயத்தின்
பூந்தணாளமுள்ளொளித்தனன்பொன்னுலகளிப்பான்
வேந்தவாயிரம்பருவமும்வெளியுறாதன்றே. ௬

அந்தவாயிரம்பருவமுமமரர்நாடளித்து
வெந்திறற்படைநகுடனென்றுரைக்குறும்வேந்தன்
இந்திராணிபாற்காமமுற்றெழுந்தெழுமுனிவர்
தந்தசாபத்தான்மாசுணமாய்த்தரைவீழ்ந்தான். ௭

அன்னகாலையினரும்பழியடாதுமாலடியை
உன்னிமானதவாவியிலொளித்தனனுறையும்
பொன்னின்வார்கழலிந்திரன்றனைப்புகுந்தழைத்து
மன்னுசீர்பரிமகம்புரிவித்தனர்மறையோர். ௮

எழுசீர்க்கழிநெடிலாசிரியச்சந்தவிருத்தம்.

கையும்வையகமளந்ததாளுமிருகண்ணுமென்முறுவல்வதனமும்
செய்யபங்கயநிகர்ப்புறுங்கரியசெம்மலைப்பரவியமரர்கோன்
கொய்யுளைப்புரவிவேள்வியாற்றிமறைகூறும்வேள்வியினுதித்தவம்
மையலங்களிறுபொருவுவானையமர்மாய்த்தவெம்பழியகற்றினன். ௯

என்றலோடுமிகன்மன்னர்மன்னவனிறைஞ்சிமாமுனிவவெங்ஙனோர்
குன்றில்வீழசனியேறுபோலவளிகோடிமூசியிசைபாடநாள்
மன்றஞறுதொடைமார்பினுனெறியும்வச்சிரப்படையின்மாயுமவ்
வென்றிவாள்வுணன்மெய்யுணர்ந்ததுவிளம்புகென்னமுனிவிள்ளுவான்.

விருத்திரகத்தியை இந்திரன்போக்கிய வத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கசகூ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## ௭-வது, சித்திரகேதுவின்கதையுரைத்தவத்தியாயம்.

---

### கலிவிருத்தம்.

பொங்குசெங்கதிர்போற்றன்தாழியம்
மங்குறோய்வடமேருவலங்கொள
அங்கண்ஞாலமளித்தனனாய்கதிர்த்
திங்கள்வெண்குடைச்சித்திரகேதுவே. ௧

உள்ளமின்புற்றொருபதினாயிரம்
கள்செய்கோதையர்காமரிளநலம்
விள்ளலின்றிநுகர்ந்துமிழலைவாய்ப்
பிள்ளையின்றிப்பெரிதனார்மேயினான். ௨

அன்னவூர்தியுயிர்த்தருளங்கிரா
என்னைதுன்புறலென்றடைந்தோதலும்
மின்னுநக்குவிளங்குவைவேற்படை
மன்னர்மன்னன்மனத்தனார்கூறுவான். ௩

தாகமுற்றுநீர்பெற்றிலர்தம்மணி
போகமுற்றிலர்போன்மொழிதேனொடு
பாகுபெற்றவோர்பாலனைப்பெற்றிலேன்
ஒகையுற்றிலெனொண்ணிதியாலென்றான். ௪

தோற்றுமைந்தன்றுயருறலீங்கென
ஆற்றிவேள்வியவியவனல்கலும்
மாற்றருஞ்சிறப்பெய்தியமன்னவன்
கோற்றொடிக்குக்குழவிபிறந்ததால். ௫

கூறுமேர்செய்குழவிபிறத்தலும்
வீறுசேர்நிதிமின்பொழிபூண்டுகில்
ஆறுகோடியரந்தணர்க்கீந்தனன்
மாறிலாதமணிமுடிமன்னனே. ௬

குழவியீன்றகுறுநகைச்செய்யவாய்
மழலைமென்மொழிமாதொடுமானவேல்
உழவனின்புற்றுறைந்தனனேனையோர்
அழலுயிர்த்துளத்தாற்றலராயினார். ௭

அஞ்சொலன்னையகலமலர்விழி
துஞ்சுகின்றசுடர்த்தொடித்தோன்றலை
நஞ்சமூட்டினர்வீட்டினர்நஞ்சுதோய்
வெஞ்சினக்கொலைவேலன்னகண்ணினார். ௮

பெற்றதாயெழிற்பிள்ளைமுலையுண
உற்றுநீகொணர்வாயெனவோடினள்
இற்றவாவிமகவுகண்டேங்கினள்
சொற்றனள்வந்தழுதோர்தொழுத்தையே. ௯

ஆவிமைந்தற்ககன்றதந்தோவெனத்
தாவிமஞ்ஞையிற்றருக்கனர்மாதரார்
காவியுண்கண்கலுழ்தரக்காலவேற்
கோவுநெஞ்சங்குலைந்தழிந்தானரோ. ௧௰

கரிப்பதாகினிக்காவலர்தாடொழப்
பரிப்பதாரினிப்பாரகம்பாலகன்
மரிப்பவிள்ளுமலரின்மழலைவாய்ச்
சிரிப்புமெங்ஙனஞ்சேர்ந்திங்கொளித்ததே. ௧௧

இங்கிராதெவணேகினன்சேயென
மங்கைமாரொடுமன்னவன்மாழ்கலும்
பொங்கிராகயாழ்ப்புங்கவனோடுபோந்
தங்கிராவெனுமந்தணனோதுவான். ௧௨

தந்தையென்றுந்தநயர்களென்றுநற்
சிந்தையன்பொடுசேர்தலுந்தீர்தலும்
நந்துறுந்திருநன்னதிமேலுற
வந்தநீருமணலுநிகர்க்குமால். ௧௩

ஒன்றினாற்படைத்தொன்றினளித்ததைத்
துன்றுமொன்றிற்றொலைத்திடுமாழியான்
வென்றிசேர்விளையாட்டெனுமாயைதான்
இன்றுநீயிதற்கென்கொலிரங்கலே. ௧௪

மைந்தரின்மையின்மாழ்கினைமைந்தனால்
சிந்தைமீதுறுந்தீங்குநன்காதலால்
புந்தியிற்பொருந்தாதிவ்வுரையென
முந்தைநாண்மொழிந்தேனிலமன்னனே. ௧௫

கனவைப்போலவுங்கானலினீருடன்
தனிசெயிந்திரசாலத்தைப்போலவும்
மனனின்கற்பனையான்வரும்யாக்கையை
வினையின்கட்டறமெய்யெனற்பாலதோ. ௧௬

சேயரும்பொருள்செல்வமிவையென
நேயம்வைக்கினிகரில்வெருத்தரும்
ஆயுங்காலிவ்வருப்பறுத்தாழிசேர்
மாயன்றாளின்மனம்வைத்திமன்னனே. ௧௭

மூலமாமுதற்றேவர்கடக்கிலாக்
காலம்யாவர்கடக்கவல்லாரெனச்
சீலநன்மொழிபற்பலசெப்பவும்
மாலையென்குடைமன்னன்மயங்கினான். ௧௮

ஆயகாலையருளுடைநாரதன்
போயவாவியழைத்துப்புவியர
சேயுமாறுடலெய்துதிதந்தையும்
தாயுமாழ்கித்தளர்ந்தனரென்றனன். ககூ

### தரவுக்கோச்சகக்கலிப்பா.

மைப்புயலைக்கிழித்தெழுநுண்மின்னுப்போன்மாய்பிறவி
உப்புறுவெண்டிரைப்பரவையுறுமணலிற்பலவாமால்
எப்பிறப்பிற்றந்தைதாயின்றிரங்கியழுகின்றார்
செப்புதியான்மறைவல்லோய்தெள்ளிதின்யானறிந்திலனே. உ0

தந்தையிவன்றயனிவனெனச்சாற்றுமுறைதிறம்பி
வந்துதிப்பார்பிறவிதொறும்வழங்குபணிப்பொருள்போன்றே
அந்தமிலாவாநந்தவறிவுருவாமச்சுதன்றாள்
நந்தவிலதாமெனவேநாடியறியாதவரால். உக

விட்டவுடலினிதுவந்துமேவகிலேன்யானென்று
கட்டுரைசெய்துள்ளாவிகண்ணிறந்துநடக்குதலும்
பட்டதுதற்களியானைப்படிமன்னன்படுந்துயர்தீந்
துட்டெளிவுவந்தெய்தியுரைத்தியறனெனத்தொழுதான். உஉ

தொழுதுரைத்தவேந்தனுக்குத்துகடீர்நாரதமுனிவன்
மழைநிகருந்திருமேனிவாசுதேவனைத்தொழுவல்
அழிவிலறிவாய்நிறைந்தவநந்தனையான்றொழுவலெனும்
விழுமியமந்திரமொன்றுவிருப்புடனங்குரைசெய்தான். உந

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மந்திரமீதுகூறின்மன்னவவைகலேழின்
வெந்திறலரவின்வேந்தின்விழியருள்பெறுதியென்று
அந்தணனங்கிராவோடருந்தொடையாழின்வல்லோன்
பைந்துழாய்ப்பரமன்சீர்த்திபாடினன்படர்ந்தான்மன்னோ. உச

செஞ்சுடர்ப்பரிதியன்னசித்திரகேதுவென்போன்
நெஞ்சுவந்தெழுநாள்காறுநிகரிலம்மறையையோதி
எஞ்சலின்மகதிநல்யாழிருந்தவனுரைத்தவாறு
நஞ்சுமிழ்பாந்தள்வேந்தைநலம்பெறக்கண்ணுற்றானல். உரு

எண்ணுறும்யோகர்சித்தரிருந்தவரிமையோர்சூழ
நண்ணியவநந்தனீலநற்றுகின்மருங்குங்கோல
வெண்ணிறவுருவுந்தாளுமேதருகருணைவெள்ளக்
கண்ணுமங்காசன்கண்டுகளித்தனன்பரவலுற்றான். உகூ

அளவிலாவண்டமெல்லாமணுவெனத்தாங்கியென்றும்
விளைதருமளவையென்றும்விளம்புபோநந்தனுகிக்
களைகணுயொளியாய்ச்சித்தாய்க்கருதுமுத்தொழிலுஞ்செய்தே
தளர்விலாநந்தமானதற்பராபோற்றிபோற்றி. உஎ

பல்பலவண்டம்யாவும்பவளவாய்வைத்துநுங்கும்
தொல்பழமறைகடம்மிற்றுணியுமெய்ப்பொருளாகின்ற
அல்கவிலாயிரந்தோளரும்பெறலடிகண்மேவிப்
புல்கிநீள்விழியுறங்கப்பொலியணையாவாய்போற்றி. உஅ

அத்தன்மாலயனேயாயவாயிரந்தலையோய்போற்றி
தத்துவம்பலவாயொன்ருய்த்தயங்குவோய்போற்றியென்ன
வித்தியாதரர்கட்கெல்லாம்வேந்தெனவுறைதியென்று
முத்தியிற்புகுத்துமுண்மைமொழியுநன்குணர்த்திஞனல். உகூ

செப்புமவ்வநந்தன்ருளைச்சித்திரகேதுவாழ்த்தி
ஒப்பில்விஞ்சையர்தம்வேந்தாயொளிகளுன்மானமூர்ந்து
துப்புறழ்கனிவாய்மாதர்தோணலமினிதுமாந்தி
மைப்புயறவழும்வெள்ளிமலையகங்காவல்பூண்டான். ௩0

அவிழ்பொலங்கடுக்கைவேணியரனந்தண்சனகனுதி
தவமுதுமுனிவர்கேட்பத்தத்துவமுரைத்தஞேக்கிக்
கவிரிதழ்மயிலையாருங்காணவோர்மருங்குவைத்து
நவில்வதெஞ்ஞானமென்னநகைத்துரையாடிஞனல். ௩க

நகைத்துரையாடஞேக்கிநாமவேலவுணனுகென்
றகத்துறுவெகுளிபொங்கியம்பிகைசபிக்கவன்னேன்
பகைத்தலால்வந்தவென்றும்பற்றிஞல்வந்தவென்றும்
சுகத்தொடுதுக்கமெண்ணுர்துகளிலாரென்றுசொல்வான். ௩உ

அன்னைநீசபித்தலென்றனருவினைத்தொடர்ச்சியன்ருே
மன்னியவின்பதுன்பமாயையின்புணர்ச்சியாமே
தன்னைநன்குணர்ந்துபார்க்கிற்சார்வதோர்வினையுமுண்டோ
பன்னுதியெனத்தாள்வீழ்ந்துபரவினன்போயிஞனல். ௩௩

வித்தியாதரர்கட்கெல்லாம்வேந்தனுய்விளங்கும்வைவேற்
சித்திரகேதுவென்பான்செப்பினன்சேறல்காணுப்
பைத்தபாம்பணியுமுக்கட்பரமனேமுதலிஞேர்கள்
முத்தஞேரகந்தையில்லானெனமொழிந்திறும்பூதுற்ருர். ௩ச

அறந்தருமிமயவல்லியவ்வழிச்சபித்தல்பற்றிப்
பிறந்தனன்வுணனுகப்பிறந்துமுற்பிறப்பின்ஞானம்
மறங்கனிந்தொழுகும்வெவ்வாய்வச்சிரப்படையின்வேந்தன்
எறிந்துழிபழிவில்வீட்டினெய்தினனினிதின்மாதோ. ௩ரு

இக்கதையியம்பினோருமினிதெனவியந்துளோரும்
மிக்கபேரன்புசான்றுமேதகவரைந்துளோரும்
துக்கமொன்றின்றிப்பார்மேற்சுகம்பலதுய்த்தபின்னர்
புக்கலாமீள்கலாதபொருவில்வீடெய்துவாரால். ரு௬

சித்திரகேதுவின் கதையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩அரு.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## அ-வது, மருத்துக்கள்முதலியோர்பிறப்புரைத்த வத்தியாயம்.

---

### கலிவிருத்தம்.

மன்னவவதிதிதன்மைந்தர்தங்களில்
உன்னியசிலர்மரபுரைசெய்தாமுறை
இன்னமற்றேனையோர்மரபுமிங்ஙனம்
பன்னுதுமெனமுனிபகர்தன்மேயினான். க

### அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

அதிதிசேயென்னமுன்னமறைந்தநற்சவிதாவென்போன்
விதியுறுமும்மையாயவியாகிருதியையுநல்ல
கதிதருகின்றசாவித்திரியையுங்கருதிநான்கு
முதுமறையொழியுமோமமுதன்மகங்களையுமீன்றான். உ

பகனெனும்பெயரோனன்பாற்பகரொருபினாவினோடு
மகிமனுதியரையீன்றான்மலிபுகழ்த்தாதாவென்போன்
குகுமுதலாயநாற்பூங்கோதையர்தமைமணந்தான்
அகமகிழ்விதாதாவென்போனக்கினிமுதலோர்ப்பெற்றான். ௩

மித்திரன்வருணனென்போன்விளங்கிருவோருமுன்னர்
ஒத்தெழுந்தோங்குகொங்கையுருப்பசிபொருட்டினாலே
வைத்ததோர்கும்பந்தன்னில்வசிட்டனைமயைத்தூற்ற
முத்தமிழ்முனியென்பானைமூவுலகேத்தவீன்றார். ௪

வருணனென்றுரைப்போன்மீட்டும்வரிமுலைச்சரிடியின்பால்
பிருகுவான்மீகியீன்றான்பேசுமித்திரனுள்ளன்பால்
கருதுசிராிட்டனோடுகழறுபிப்பலனையீன்றான்
யொருவருவிண்ணின்வேந்தன்புலோமசைநலந்துய்த்தானால். ரு

வயங்கெழுகுலிசத்தண்ணன்மருவயிராணிபெற்றாள்
சயந்தனேமுதலாமூன்றுதநயரைக்கீர்த்திமாது
புயங்களிற்றழுவும்வண்ணம்பொருந்துருக்கிரமனென்னும்
நயஞ்செய்வாமனன்றன்வெற்றிநவிற்றுதும்பின்னர்மாதோ. சு

திருந்திழைசுமந்துசெம்மாந்தெழுந்துறப்பணைத்தகொங்கைக்
கருங்குழற்றிதியாமங்கைகாசிபனுஈலம்புல்லி
இருந்திறலிரணியன்சீரியைந்தபொற்கண்ணனென்னும்
பொருந்திறலிருவராயபொறையுயிர்த்தனண்மகிழ்ந்தே. எ

தரைபுகழ்பிரகலாதன்றயங்கெழிலநுகலாதன்
அரிதுணர்சங்கலாதனணிதிகழ்கலாதனென்ன
உரைதருபுதல்வரோடுமொருமகடன்னையீன்றான்
இரணியனென்னயாருமேத்துவாளவுணன்மாதோ. அ

சமர்பழுத்தொழுகுவேலான்றநயள்சிங்கிகையென்றோதும்
கமழ்மதுச்சொரிகார்க்கூந்தற்சாரிகையுயிர்த்தமைந்தன்
அமுதுணவளிக்குமந்நாளமலனுங்குணர்ந்தெருக்க
இமையவர்குழாத்துவைகுமிராகுவென்பெயரோன்மாதோ. கூ

செருக்குறுசங்கலாதன்சேயிழைக்கதியைச்சேர்ந்து
தருக்குறுபடையான்பஞ்சசனனைத்தந்தான்கலாதன்
மருக்கமழ்சந்தவெற்பின்மாதவனதிதியாகி
முருக்குவாதாபியோடுமொழியுமில்வலனைப்பெற்றான். க0

பூதரம்பொருவுதோளான்புலவரையமரின்வென்ற
கோதைவேலவுணனென்னக்குலவுசீரநுகலாதன்
மேதியினுருக்கொள்வான்சீர்விளங்குபாட்களனென்றோதும்
தீதுலாங்குணத்தின்மிக்கோர்ச்சிறுவராமெனப்பெற்றானல். கக

பெற்றசீர்ப்பிரகலாதன்பெட்டுளமினிதினீன்றான்
வெற்றிசேர்குடுமிவைவேல்விரோசனன்றன்னையன்னோன்
உற்றமாவலியென்பானையுலகுளோரேத்தவீன்றான்
மற்றவன்வயங்கொள்வாணசுரன்றனைவழங்கினானல். க௨

பின்னருந்திதியென்றோதும்பிறைநுதற்குமுதச்செவ்வாய்க்
கன்னலிற்கனிந்தசொல்லாள்காசிபனகலம்புல்லி
மன்னுமேழேழென்றோதுமருத்துவர்தம்மையீன்றாள்
அன்னவரமரர்கோனோடமராயமர்வார்மன்னோ. கந

என்றலுந்திதிமுன்பெற்றவியனலமருத்தென்போர்கள்
குன்றெறிகுலிசனோடுகுலவிவீற்றிருந்ததென்கொல்
மன்றநீயுரைத்தியென்றுமானவேலரசுகேட்பத்
துன்றுடற்பகைசெற்றோங்குசுகமுனியரைக்கலுற்றான். கச

வரம்பெறுமைந்தர்தம்மைவாசவற்காகப்பெம்மான்
உரஞ்சிதைத்துயிரைநீப்பவொண்ணுதற்றிதியுண்மாழ்கிப்
புரந்தரன்றன்னைக்கொல்லும்புதல்வனைப்பெறுதல்வேண்டி
இருந்தவன்மகிழும்வண்ணமேவல்செய்தினிதினின்றாள். கரு

காசிபனுளமுவப்பக்கருதினளேவல்செய்தும்
பூசலங்குடுமிவைவேல்புரைவிழிக்கடைநோக்குற்றும்
நேசநன்னிலவுகாலநின்றனணகைத்துமந்த
ஆசிலாதவனையன்னுடன்வயமாக்கினாளால். கசு

மாதவன்மகிழ்ச்சிகூர்ந்துமனையவள்வதனநோக்கிப்
பேதைநீவிழைந்ததென்கொல்பெறுதியென்றுரைத்தலோடும்
ஓதுவாசவனைக்காதுமொருமகவளித்தியென்று
தாதுறுகுழலாண்மங்கைசாற்றினள்கொடுஞ்சொலன்றே. கஎ

அவ்வுரைகேட்டலோடுமரும்பெறற்புதல்வற்கொல்லும்
வெவ்வரமளிப்பர்கொல்லோவிருப்பினெடுயிர்த்துளோரும்
நவ்வியின்விழிக்குநங்காய்நயந்ததுநன்றுநன்றென்
றெவ்வமில்புகழ்சாலொப்பிலிருந்தவனுளத்தியம்பும். கஅ

மடந்தையர்வதனநல்லமதியெனமாற்றம்வானோர்
கடைந்தவானமுதமென்னக்கவினுமென்றாலுமுள்ளம்
விடக்கொடுபுரிந்தவாள்போல்வெங்கொலைவிரும்புமந்த
அடங்கலாமனஞ்செல்வண்ணமாரறிந்தறையகிற்பார். கக

புல்லுறுகொழுநனேநன்புதல்வரேயேனுமன்பால்
சொல்லுமோரகட்டிற்றோன்றுந்துணைவரேயேனுமாதர்
கொல்லுவர்சினந்தாராயிற்கூசிலர்சிறிதுமென்னு
அல்லலுற்றழுங்கியன்னுட்கொருவரமளிக்கலுற்றான். உ0

அரிவைநீமுனிவுநீங்குற்றகால்நித்திரையும்விட்டுப்
புரைதபப்புனிதையாகிப்புகழ்புஞ்சவனமென்றோதும்
விரதநன்கியற்றினுள்ளம்விழைமகவுயிர்த்தியென்னு
ஒருவரமளித்தானன்னுளுவந்தனள்கருக்கொண்டாளால். உக

கொண்டநல்விரதத்தோடுகுலவுதன்மனத்துட்கொள்ளா
அண்டர்கோனடைந்தன்னுக்கரும்பெறலேவல்செய்தே
எண்டருங்கருப்பங்கொல்வானியைந்தனன்விலங்குமாய்ப்ப
விண்டொடுகானநண்ணிவேட்டுவனிருத்தல்போன்றே. உஉ

கலிவிருத்தம்.

புனிதநீங்கியப்பூவைபொருந்துதல்
மனனினுடிமருவினன்காண்கிலன்
நனிகலங்கியிருந்துழிநங்கைதான்
தனிதுயின்றனள்சார்ந்தெழுமாலைவாய். உங

பாதபங்கயமேற்பனிநீர்பெய்யா
தோதுமாலையுறங்குமன்னுள்வயிற்
றேதநீங்கியவிந்திரன்மாயையால்
சோதிவச்சிரத்தோடுந்துவன்றினன். உச

வயிற்றினூற்றுவளரும்வயாவினைச்
செயிர்ப்பினேழுகூறாகச்சிதைத்தவை
உயிர்ப்புவிட்டழவொவ்வொருகூற்றையும்
வியப்பினேழுகூறாகவும்வெட்டினன். உரு

ஆங்குமாயனருளினில்வீந்திடா
தேங்கியேங்கியழுதிவணெங்களை
நீங்கிமுன்னவநீதெறலென்னென
வாங்குவார்சிலையான்புறன்வந்தனன். உசு

அரசினின்னையறவாழியந்தணன்
கருவிற்காத்ததுபோலவக்காரிகை
விரதமுற்றவன்மெல்லடிபோற்றலால்
மருவுமைந்தர்மாயாவகைகாத்தனன். உஎ

உருத்துவாசவனுற்றவணெற்றுழிக்
கருத்தழிந்தழலாலக்கருவினர்
மருத்தெனும்பெயர்மன்னினர்தாய்வயி
றிருத்தல்விட்டெழுந்தார்புறனெய்தினர். உஅ

தளர்ந்தநுண்ணிடைத்தையறிதுயில்
தெளிந்துநோக்கியீதென்னெனச்செப்பலும்
விளைந்தவண்ணம்விளம்பிவிண்ணேகினன்
வளைந்தவார்சிலைவாசவனென்பவே. உகூ

விண்ணின்வேந்தன்விரும்பிளையோரென
மண்ணினின்றுவானேகிமருத்துவர்
உண்ணுசோமமுடையநல்லும்பராய்
நண்ணினரெனநற்றவன்கூறினன். ௩0

மருத்துக்கள்முதலியோர்பிறப்புரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் உகரு.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## ௬-வது, புஞ்சவனவிரதமுரைத்தவத்தியாயம்.

கலிவிருத்தம்.

கஞ்சன்வழிவந்துதிகழ்காசிபன்மனைக்குப்
புஞ்சவனமென்றுபுகல்கின்றவிரதந்தான்
எஞ்சலறவின்றுரைசெயென்றரசியம்ப
மஞ்சனையமாயனருண்மன்னுமுனிபன்னும். ௧

வந்துமகிழ்செய்யுமொருமார்கழிமதிக்கண்
சந்திரன்வளர்ந்தெழிறயங்கவருபக்கம்
முந்தியுறுநற்றிதிமுதற்புனிதமாகி
அந்தமிலனுகுபாமாத்துமனையேத்தி. ௨

ஓர்பருவமுற்றுமொழியாதுவகையோடு
கார்நிறமுகுந்தனுருவைக்கருதியன்பால்
ஏர்செயுபசாரமெணிரண்டையுமியற்றிச்
சீர்தருமீராறுமதிதீரவருநாளின். ௩

கலிநிலைத்துறை.

பாலினோடுமடிசிலைப்பன்னிரண்டென்னும்
சீலவாவுதியரிதிருமந்திரஞ்செப்பிக்
கோலவாரழற்பெய்தபின்குலமறையவர்க்கு
வேலைசூழ்புவிவியப்புறவிருப்புணவருத்தி. ௪

அருந்துமந்தணராசிசன்கறைந்ததற்பின்னர்ப்
பொருந்துமாவுதிச்சேடநற்புதல்வரைப்பெறநீர்
இருந்தருந்துதிரென்றுதம்பதிதாநுகர்ந்தோர்
மருந்தெனும்மொழிமைந்தரைப்பெறுகுவர்மாதோ. ௫

இன்னநல்விரதத்தினைக்கன்னியரிழைக்கின்
பன்னுமின்னெழிற்கொழுநனைமணப்பாரப்பார்மேல்
மன்னிவைகிடாதிறந்திடுமகப்பெறுமடவார்
உன்னிநின்றியற்றிடினிறவாமகவுயிர்ப்பார். ௬

கழறுமிவ்விரதத்தினைக்கலன்கழிமகளிர்
தழையுமன்பொடிங்கியற்றிடின்மறுமையிற்சாற்றும்
எழில்விளங்கியகொழுநனையெய்தியின்புறுவார்
விழைவொடீங்கிதுகேட்டனர்வேண்டியபெறுப. ௭

என்றுவேந்தனுக்கியம்பினன்சுகமுனியென்ன
ஒன்றுமாமறைச்செல்வருக்குரைத்தனன்மீட்டும்
மன்றலார்தொடைமன்னனுக்கன்னவன்வழங்கல்
துன்றுமாதவச்சூதமாமுனிவான்சொல்லும். ௮

புஞ்சவனவிரதமுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨௨௩.

௬-வது, ஸ்கந்தம் முற்றிற்று.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## எ-வது, ஸ்கந்தம்.

## க-வது, சிசுபாலன்வீடுபேறுரைத்தவத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

விருப்பொடுவெறுப்பொன்றில்லாமெய்ப்பொருளமரர்வாழ்த்தச்
செருக்களத்தவுணர்த்தேய்த்ததிறமெவன்றேவராலென்
உரைத்திடுமசுரராலென்னுறுமிவையுரைத்தியென்ன
மருக்கமழலங்கலாற்குமறைமுனிவகுக்கலுற்றான். க

உலகெலாம்படைக்குங்காலையுரையிராசதத்தான்போன்றும்
நிலைபெறவளிக்குங்காலைநிகழ்த்துசத்துவத்தைமேவி
வலிகெழுதாமதத்தைமாய்த்தவன்போன்றுமெல்லாம்
தொலைவுறவொழிக்குங்காலைச்சொல்லுதாமதத்தான்போன்றும். உ

தோற்றுவன்சத்தாய்ச்சித்தாய்ச்சுத்தமாய்ச்சுகமாய்த்தோன்றிப்
போற்றியநாமரூபம்புகல்குணமொன்றுமின்றி
ஆற்றுமோர்வினையுமின்றியமர்ந்தவன்விகாரமெல்லாம்
சாற்றியகுணங்களாலேசார்ந்திடுமுரைக்கின்மாதோ. ங

தங்கியபுகழ்சேர்கின்றசத்துவகுணம்வெல்காலைப்
பொங்கியவவுணர்தேய்வார்புனைமுடியமரர்வெல்வார்
கொங்கவிழ்தாமமார்பகூறுதாமதம்வெல்காலை
மங்குவரமரர்வெல்வார்வனைகழலவுணர்மாதோ. ச

மாயையால்வகுத்தபோராய்வருத்திடப்படுவோராயின்
தாயுமாய்ச்சேயுமாகுந்தனிமுதற்குறுவதுண்டோ
நேயமாரிராசசூயநிகழ்த்துழித்தருமனிவ்வா
றாயுநாரதனைக்கேட்டதறைகுதுமாழிவேந்தே. ரு

மறத்தொடுதோற்றுஞான்றேமாயனைப்பழித்தல்செய்த
திறற்சிசுபாலனெம்மான்சேவடிபடர்ந்ததென்னென்
றறத்தின்மாமதலைகேட்பவஞ்சுவையமுதமூறி
உறக்கிளர்தொடையநல்யாழ்முனிவரனுரைக்கலுற்றான். சு

புகழலும்பழித்தலுனும்புகலுமிவ்வுடலுக்கல்லால்
நிகழ்தருகுணங்கண்மூன்றுநீங்கியொன்றாகிச்சித்தாய்த்
தகைபெறுசத்தாய்நின்றுதயங்குமோர்பொருட்குமுண்டோ
இகல்செயானெனதென்பார்தம்மிழுதையினுண்டென்பாரால். எ

பனிமலர்முருகுவிம்முபசுந்துழாய்ப்பரந்தாமன்சீர்
புனைமணிவாயில்காத்தபுகழ்ச்சயவிசயர்முன்னம்
சனகனையாதியாயதவத்தினர்சாபந்தாங்கிக்
கனகனுஞ்சுடர்செய்செம்பொற்கண்ணனுமாகிவந்தார். அ

மையணிமிடற்றோன்வெள்ளிமால்வரைபிடுங்கியார்த்த
ஐயிருதலையினனுமாத்தமுண்டொளிறும்வைவேல்
வெய்யபோராற்றுகும்பகருணனுமாகிமீட்டும்
பையராச்சுமந்தனாலம்பருவரத்தோற்றஞ்செய்தார். ௯

தோன்றியவிருவர்தம்மைச்சுடர்விரிமணிச்செஞ்சூட்டுக்
கான்றநஞ்செயிற்றுப்பேழ்வாய்க்கட்செவியணையிற்றுஞ்சும்
தேன்றருந்துளவத்தெம்மான்செகுத்தன்மார்க்கண்டனாலே
நான்றவாய்க்களிற்றுவேந்தநன்கினிதுணர்வைமாதோ. ௧௦

கலிநிலைத்துறை.

அழலும்வெஞ்சினவடவைபோயதிர்கடல்குளிப்பத்
தழலுந்தீப்பொறிததைசெங்கட்டந்தவக்கிரனும்
கழுகுங்காகமுங்கூட்டுணக்கலுழிவெங்குருதி
ஒழுகுவேற்சிசுபாலனுமாகவீங்குதித்தார். ௧௧

ஊதுவண்டுணர்பேதைவான்புழுவெனவுடன்று
தாதலர்ந்தசெந்தாமரைப்பொகுட்டுவீற்றிருக்கும்
மாதுசேர்முழுமுதலையேமனநினைத்தவன்றன்
பாததாமரைபடர்ந்தனன்றிறற்சிசுபாலன். ௧௨

மருவுகாமத்தாற்பயத்தினல்வஞ்சநெஞ்சகத்தால்
பொருவெறுப்பினல்விருப்பினற்புனிதனைநினையின்
உரைசெய்முத்தியினுயர்குவர்காமமுற்றுணர்ந்தே
அரியமுத்திசென்றடைந்தனர்கோவியரன்றே. ௧௩

கஞ்சன்வெம்பயத்தாற்றிகழ்கண்ணனைநினைவுற்
றெஞ்சலற்றவீடெய்தினனினிதுவந்தடைந்தார்
நெஞ்சுவப்புறுகேண்மையானினைந்துநின்போல்வார்
செஞ்சிலைச்சிசுபாலனேமுதலவெந்தீயோர். ௧௪

வெறுப்பினனினைந்தடைந்தனர்வீட்டினைவிரும்பும்
திறத்தினனினைந்தடைந்தனர்திருமறைதெளிந்தோர்
குறிப்புமுத்தொழில்குணங்களானடாத்துமோர்கொண்டற்
கறத்தின்காதலவெறுப்பெவன்விருப்பெவனம்மா. ௧௫

என்றுகூறலுமிளங்களிச்சுரும்பர்பாட்டிசைப்ப
மன்றல்விம்முதண்மலர்மகண்முலைமுகமணந்தோன்
வென்றிவாட்டிறற்கனகனைவெஞ்சமர்க்களத்தின்
கொன்றவாறுநீகூறெனநாரதன்கூறும். ௧௬

சிசுபாலன் வீடுபேறுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௨௩௯.

ஸ்ரீகிருஷ்ண சகாயம்.

---

# உ-வது, இரணியனைக்கொன்ற வத்தியாயம்.

---

கலிநிலைத்துறை.

கேழலாகிமால்கேழ்கிளர்பொற்கணனைகலம்
போழ்படுத்ததுகேட்டலுமிரணியன்புழுங்கிச்
சூழுந்தானவர்முதலியோர்சுடுமுகநோக்கி
ஊழிவெங்கனல்கட்கடையுமிழநின்றுரைப்பான். க

ஊனநீங்குமாலுயிரெலாஞ்சமனெனநினையான்
வானநாடர்தங்குழுவொடுமரீஇனனதனுல்
ஈனமாமதியெய்தினனினியவனுயிர்வேல்
தானருந்துவான்வருத்துவனீர்தனித்தனியே. உ

தரையின்மீதுபோய்மாயவனுருவெனச்சாற்றும்
அரியவேள்வியேமுதலியவறங்களையழித்துப்
புரியுமந்தணர்ப்பொன்றுறப்புரிமினேபுரியின்
கரியவன்வலிகெடுமுலப்பார்கடவுளரே. ௩

என்னவோதலுஞ்சம்பான்முதலினேரேகித்
துன்னும்வேள்வியேமுதலியவறங்களைத்தொலைத்து
மன்னுயிர்க்குழுமாயனன்மனையெரியூட்டிப்
பொன்னினாட்டினும்புலவரைப்புடைத்தனர்புகுந்தே. ௪

மாபுரங்களையழித்தனர்சிலர்பலமணிசேர்
கோபுரங்களைத்தகர்த்தனர்சிலர்சிலர்குழுமி
நூபுரங்கள்சூழ்பதத்தினர்நொவ்வுறவலைத்தார்
ஆபுரங்களைச்செகுத்தனர்சிலர்வெகுண்டடர்த்தே. ௫

மண்டலந்தனின்முதுமறைவாழ்நரைவதைத்துத்
தண்டலைப்பெருந்தருக்களைத்துளவொடுசாய்த்துத்
தெண்டிரைப்பெருநீர்ச்சிறைசிதைத்தனர்சிலர்வாய்
விண்டலக்கணுற்றழச்சிலர்தமைச்சிலர்வெகுண்டார். ௬

இருட்டினேர்குழற்றம்பிதன்மனைவியையிப்பார்
சுருட்டினேன்வயிற்றேன்றிவானவர்தொலைந்தோட
வெருட்டினேர்களையிரணியன்வெந்துயர்களைவான்
வருட்டிமாழ்கியதாயையும்வருட்டிநின்றுரைப்பான். ௭

நெறியிற்காண்குறுநித்தியமாகியொன்றுகும்
அறிவைவேறுவேறாய்விழியறியுமாபோல
உறையுமாயைசேர்குணத்தினுண்டாமுடலுடலம்
முறையிற்கூடலுநீங்கலுமூதுலகியல்பே. ௮

கனவுபோல்வருமொருகுணம்வருத்திடக்கலங்கி
நனிவருந்திடுமொருகுணநன்கறிந்தியம்பின்
வினைகடந்தமெய்ப்பொருட்கொருவினைசெயலிலைநீ
இனையலோர்கதையியம்புவல்கேட்டியென்றிசைப்பான். ௯

ஓதுகீர்த்தியானுசிரதேயத்துறைவேந்தன்
தாதுசேர்தொடைத்தரியலாற்களத்திறப்ப
மாதரார்மனையாரொடுமைந்தர்கள்குழுமிப்
போதுநேர்விழிபுனறரப்புலம்பியங்கழுதார். க0

வந்துவெய்யசெங்குருதிநீர்மல்குவெங்களத்தின்
சிந்தைநொந்துகண்ணீரொழுசிந்தெனச்சிந்திப்
பந்தமோடழுவார்துயர்பறைதரத்தெருட்டி
அந்தகன்சிறுகுழவியாயாங்கடைந்தறையும். கக

வெறுத்துவாரியினொருபொருள்வீழ்த்தினும்விரும்ப
மறுத்துவந்துதன்மருங்குறுமவற்குரித்தாயின்
நிறுத்தொர்செப்பினுள்வைத்துறைநின்றுதான்றனே
பொறுத்துக்காப்பினுமாய்ந்துபோம்போம்பொருண்மாதோ. கஉ

பொய்ம்மையாமுடற்பொருளினிற்புகன்றவுண்மையையும்
மெய்ம்மையாம்விழுப்பொருளினில்விளம்புபொய்ம்மையையும்
பெய்ம்மைபோற்றுளிபிரசமார்குழலினர்ப்பேணி
ஐம்மையாம்பொறிக்கலமருமறிவிலோரறைவார். கங

தழுவுதாவரத்தெங்கணுந்தனித்துறைதழல்போல்
பழுதிலாமையெவ்வயினும்வான்பரம்பொருளுறையும்
எழுவெங்கானலினீரெனவிவ்வுடலிறக்கும்
அழுவதென்கொலோபொய்யைமெய்யாமெனவறிந்தீர். கச

கண்ணிவீழ்ந்ததன்பெடையினைக்கலந்தழுகுலிங்கம்
மண்ணின்வீழ்தரமாய்த்தனன்வாங்குவில்வேடன்
எண்ணிமாய்ந்தவற்கிரங்கலேனிறக்குமிவ்வுடலென்
றண்ணனல்லறக்கடவுள்சொற்றனனவர்தெளிந்தார். கரு

அன்னைநீதுயர்நீங்கெனவறைதலுந்திதிதான்
இன்னறீர்ந்தனளிருந்தனளிரணியனேகி
மின்னின்மாயுடல்விளிவுறாவரம்பெறல்வேண்டி
மன்னுமாதவம்வளர்ப்பநன்மந்தரத்தடைந்தான். கசு

முடங்குதெண்டிரைமுழங்குநீர்த்தடங்கடல்வயிறு
கிடங்கெழக்கடைந்தின்னமுதளித்தநீள்கிரியின்
மடங்கல்போலவேமருவியக்கனகனைம்பொறியும்
அடங்குமாறவித்தருந்தவம்புரிந்தனனன்றே. கஎ

அளப்பரும்பகலருந்தவம்புரிந்தவனுச்சி
பிளப்பமண்டியபெரும்புகைப்படலம்விண்பரந்து
வளைப்பவாற்றலர்வானவர்மலரவர்குறுகி
உளத்துவேட்டனதவஞ்செய்வார்க்குதவுகென்றுரைத்தார். கஅ

பொன்னந்தாமரைப்பொகுட்டுறைபுங்கவன்றேன்றி
மன்னுபுற்றெழுமற்றவனுக்கையிற்றனது
கன்னனீரினிற்றெளித்தலுமெழுந்துசைகூப்ப
என்னைவேட்டனவென்றவன்விழைந்தனவீந்தான். ௧௯

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

பங்கயப்பொகுட்டின்மேலான்படைத்தனதம்மின்மாளான்
அங்கண்வானுலகின்மண்ணினகத்தினிற்புறத்திற்றுஞ்சான்
கங்குலும்பகலுமாயான்கனலுமிழ்படையிற்பொன்றான்
வெங்கண்வாளவுணன்பெற்றவரனையென்விளம்புகேமால். ௨௦

வரமளித்தெகினப்பாகன்மருவுதன்னுலகிற்புக்கான்
இரணியனெழுந்துசெம்பொனிலங்குபொன்மணியிற்செய்த
நிரைதருமாடமெய்திநிகாறுதன்னைவாழ்த்திப்
புரிதரமறையோர்வேள்விபுகழொடுபொலிவான்மன்னே. ௨௧

முதுமறையோதுகாலைமுன்பின்மூதறிஞர்யாரும்
விதிமுறையரியோமென்னுவிளம்புதொல்வழக்குமாற்றிப்
புதிதுதன்பெயரேகூறப்புனிதமாதவருநோன்பு
துதிதனைக்கருதிச்செய்யப்பணித்தனன்றொலைவில்வல்லோன். ௨௨

வானவரேனுஞ்செய்யாமறைதெரியுறுவரேனும்
மானவரேனும்யாரேமற்றவற்றொழாதுதூய
தானநற்றவமியற்றுந்தருக்கினரிறைவர்மூவர்
கோனிவனென்றுகொண்டுகுறிப்பறிந்தொழுகுநீரார். ௨௩

விரிகதிர்முத்தநல்லவிளைந்தனவிளைந்தவெல்லாம்
வருணன்வந்தளிப்பவிண்ணோர்வயின்வயின்மிடைந்துபோற்ற
இருநிதிவிழைந்தவெல்லாமெதிரெதிர்நின்றுநல்க
ஒருகுடைநிழற்றவீரேழுலகமும்புரந்தானம்மா. ௨௪

கலிநிலைத்துறை.

மீனக்கசெம்பொற்குழையோடிழைவில்லெறிப்பப்
பானக்கதீஞ்சொலரமங்கையராடல்பார்த்தும்
வானக்கிறையாயகல்வானவர்வந்துதாழத்
தேனக்கசெம்பொற்றருநீழல்சிறப்பவைகும். ௨௫

ஒற்றைத்திகிரித்தடந்தேருயர்செம்பொனேங்கல்
முற்றக்கனைவெங்கதிர்மண்டிலமுற்றுமாளும்
மற்றொப்பிலாதவொளிர்செம்மணிமானமூர்ந்து
கற்றைக்கதிர்வெண்மதிமண்டிலங்காத்தளிக்கும். ௨௬

இவ்வாறுலகம்பதினுன்குநின்றேவல்கேட்ப
வெவ்வேலவுணனரசாட்சியின்மேவுநாளின்
பைவாளரவிற்றுயில்பங்கயச்செங்கணனை
வைவாளமரர்திசைநோக்கிவழுத்திநின்றார். உஎ

பொன்னாட்டவருக்கெழுந்தரவாணிபோந்து
சின்னாட்கழியிற்சிறுவன்றனைவைதுசீறும்
அந்நாட்டிருமாலவுணன்றனைமாய்க்குநீவிர்
இன்னாத்தவிர்மின்னெனவானவரேகினாரால். உஅ

கலிவிருத்தம்.

ஏர்தழைந்ததாரிரணியன்றரும்
போர்தழைந்தவேற்புதல்வர்நால்வருள்
பேர்தழைந்தமெய்ப்பிரகலாதனும்
சீர்தழைந்தவன்றிறங்கள்செப்புவாம். உகூ

பாடுமோருழிப்பச்சைமால்புகழ்
நாடுமோருழிநல்லகாருருச்
சூடுமோருழிச்சொற்றுழாயழு
தாடுமோருழியன்புமுற்றியே. ௩0

மண்ணில்வானின்மற்றுலகின்மன்னிவாழ்
எண்ணிலாவுயிருடம்பியாவையும்
தண்ணந்தாமரைத்தலைவிமேவிய
கண்ணனாகவேகாணுங்காட்சியான். ௩க

பித்தனென்னவும்பிரசமாந்திய
மத்தனென்னவுமானமொன்றிலா
முத்தனென்னவுமுன்னுமாயவன்
பத்தனென்னவும்படருமாங்கவன். ௩உ

உண்ணினேகினுற்றுரையினோர்செயல்
பண்ணினேசைநீர்படியினன்பொடும்
பெண்ணுமாணுமப்பேடுமல்லனாய்
கண்ணுமாயவனாமமோதுவான். ௩௩

தேறுமெய்ப்பொருள்சீதரன்னெனக்
கூறுமெட்டெழுத்தைக்குறித்துநா
வீறும்வான்சுவைவிகலமின்றியே
ஈறின்மாதவரிவனின்யாவரே. ௩௪

ஓதலின்றியேயுணர்வுகூறுமிக்
காதலன்றனைக்கற்கவைத்தனன்
தாதலர்ந்தபொற்றருவின்மெல்லிணர்ப்
போதலர்ந்ததார்புரனுமார்பனே. ௩௫

பொற்றமாலையம்புதல்வன்றன்னைநெஞ்
சுற்றகாதலிற்கூவியோர்பகல்
வெற்றிவேலினன்வெள்ளிமைந்தர்பால்
கற்றதென்னெனக்கழறினனரோ. ௩௬

தண்ணம்போதுசேர்தலைவிகொண்சகுட்
டண்ணல்வாளராவணையிற்றுஞ்சுகார்
வண்ணபைந்துழாய்மார்பதாமரைக்
கண்ணவென்னல்யான்கற்றதென்றனன். ௩௭

என்றலோடுமென்னிளவலாவியைக்
கொன்றவன்பெயர்கூறுவித்தனர்
மன்றவெள்ளிதன்மைந்தரித்திறம்
நன்றுநன்றெனாநகைவிளைத்தனன். ௩௮

வெள்ளிமைந்தர்தாம்வெருவிமுன்னுறு
உள்ளல்யாங்களிவ்வுரைபயிற்றிலேம்
வள்ளிதழ்ப்பொலந்தாமமார்பநின்
பிள்ளையிங்ஙனம்பிதற்றுமென்றனர். ௩௯

அறமிவற்குநீரறிவுறுத்துமென்
றிறைபணித்தலானிருபிறப்பினோர்
முறைதெரித்தமுப்பாலுமோதிலான்
மறைவடித்தமென்மழலைமைந்தனே. ௪0

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தென்றமிழ்மலயந்தந்ததேங்கமழ்சாந்தம்பூசி
மன்றன்மந்தாரப்போதுமதத்துளிமாலைசூட்டிக்
குன்றிரண்டனையதோளாற்குறங்கின்மேற்றழீஇயிருத்தி
நன்றறிந்தனைகொலென்றான்மீட்டுமங்காமவேலான். ௪௧

தாதையங்ஙனம்வினவத்தநயனங்குரைப்பான்மாயன்
காதையஞ்செவியின்மாந்திக்காரணனுமங்கூறிப்
போதினன்முகனும்போற்றும்பொன்னடிதலையிற்சூடிச்
சீதரன்கோயில்சூழ்ந்துசெழுமலர்பதத்திற்றூவி. ௪௨

விழுந்திளஞ்சுரும்புமூசுமென்முகைவிண்டுதேறல்
பொழிந்தபூந்துளவமாலைப்பொருவுயர்விலானைநெஞ்சம்
குழைந்திடவறிதலன்றேகுறிக்கினன்கறிதலென்னச்
செழுந்தழல்கடைக்கண்சிந்திச்சிவப்புறச்சினந்தான்மன்னே. ௪௩

அறங்கரைமழலைச்செவ்வாயரும்பெறற்புதல்வற்றிண்ணென்
குறங்கினின்றகற்றிமண்டுங்குருதிவேலங்கைதாங்கி
இறைஞ்சிநிற்குநரைவல்லேயெறிந்திவளலங்கன்மாலை
நிறந்திறந்திடுமினென்றானெருப்புருத்தனையநீரான். ௪௪

மூவுருத்தாங்கிநின்றுமுத்தொழினடாத்துமெம்மான்
சேவடிக்கமலப்போதுசென்னியிற்சூட்டப்பெற்ற
கோவிளங்குமரன்மார்பிற்கொலைவலாரெறிந்தகொற்றப்
பூவுடைக்குடுமிவெள்வேல்பூவெனப்பொலிந்தமன்றே. ௪௫

திருகுவெஞ்சீற்றத்துப்பிற்செய்யவேலுழவர்வீசும்
எரிகுலாம்படைகள்யாவுமிற்றமைகனகனோக்கி
வருகமாநாகமெட்டுமாதிரக்களிநல்யானை
பொருகவென்றூழித்தீயிற்புழுங்கினனுரறினால். ௪௬

படவராவரசின்செய்யபணாமணிபிதுங்கப்பற்றிக்
கடல்விளையமிழ்தமூறக்கடைந்தகார்வண்ணத்தண்ணல்
தொடுகழற்கன்பற்கொல்வான்சுடுசினங்கதுவிக்கவ்வும்
அடுகொலைப்பாந்தளெட்டுமமுதுவாயுகுத்தமாதோ. ௪௭

கொண்டலிற்பிளிறுவேழக்கோடடிபிடுங்கிவென்ற
தெண்டிரைப்பெரும்பாலாழிச்சேர்ப்பன்மெய்த்தொண்டன்றன்னை
மண்டுவெஞ்சினத்திற்பாய்ந்தமழைமதப்புழைக்கைநால்வாய்
எண்டிசைக்களிறுங்கூர்ங்கோடிற்றனசிதர்ந்தமாதோ. ௪௮

கடலொடுமலையும்பாருங்கருதுமற்றுலகுமுண்டு
புடையொருவயிற்றுள்வைத்துப்பொறுத்தவனன்பன்றன்மேல்
தடவரையெறிந்தவெல்லாஞ்சாற்றணுவொத்தவாங்குக்
கொடியவர்வெற்பின்வீக்கிக்குரைதிரைப்புணரியுய்த்தார். ௪௯

நெடுவரைமுகந்துபொங்கிநீனிறவிசும்புகோத்த
உடைதிரைக்கடன்முகட்டோரொழுசொளிமணியிற்றோன்றிப்
படுசினைவிரித்தவாலம்பாசிலைகிடந்தோனன்பன்
கடலிடையாத்துவீழ்த்தகல்லொடுமிதந்தான்மன்றே. ௫௦

இறுதியோர்திறத்தினுமிழைத்தன்மற்றரிதென்றெண்ணி
அறமுதலாயமுப்பாலறிதியென்றவுணன்மீட்டும்
சிறுவனைவிடுப்பவாங்குச்சிறுவனூல்பயிற்றுகின்ற
மறைவல்லாரற்றநோக்கிமைந்தரோடுரைக்கலுற்றான். ௫௧

அல்லவைகுரவனேனுமறைந்தனகேட்கலாகா
நல்லவையாவரேனுநவிலுறிற்கேட்கற்பால
சொல்லுவனுமக்குமெய்ந்நூறொடையல்யாழ்முனிவன்சொற்ற
வல்லிதிற்கேண்மினென்னமருவுமம்மைந்தர்சொல்வார். ௫௨

ஒத்தனநீயும்யாமுமுனக்குமற்றுரைத்ததெங்ஙன்
தத்துவம்விரிந்தசெம்பொற்றாமரையுறைவோன்மைந்தன்
இத்திறநவில்வாயென்னவெரிமணிச்சுடிகைநெற்றிப்
பைத்தபாம்பணையானன்பன்பாற்படப்பகரலுற்றான். ௫௩

இருந்தவமிழைத்தற்கெந்தையேகியகாலைநோக்கிச்
சுரும்புணவிரிந்தபைந்தார்ச்சுடர்முடியமரரீண்டிக்
கருங்கழலவுணரெல்லாங்களப்படப்பொருதுநூறி
அருஞ்சிறைப்படுத்தினானென்னையையமரர்கோமான். ௫௪

இடருறுசிறையென்வைப்பாயேந்திழைவிடுதியென்னத்
தொடையல்யாழ்முனிவன்வந்துசொற்றனன்சொற்றலோடும்
மடவரல்வயிற்றுமைந்தனுயிர்த்தபின்மகவைக்கொன்று
விடுவலென்றுரைத்தல்செய்தான்விண்ணவர்வேந்தனம்மா. ௫௫

கோற்றொடிவயிற்றுமைந்தன்கொல்லுதற்குரியனல்லன்
ஆற்றலந்திகிரியம்மானன்பனென்றருளிற்கூறி
மாற்றினன்சிறையான்கேட்பமாழ்குமென்னன்னைநெஞ்சம்
தேற்றுவான்போலமெய்ந்நூறெள்ளிதிற்செப்பினானால். ௫௬

ஆங்கவன்காட்சிமெய்ந்நூலறைதரவயிற்றினுற்றேன்
தீங்கறவுணர்ந்தவாறுசெப்புவல்கேண்மினென்னப்
பூங்கழலவுணர்பெற்றபுதல்வர்க்குப்புகறலுற்றான்
வாங்குவிற்கனகனீன்றவயங்கெழிற்சிறுவன்மன்னோ. ௫௭

கலிநிலைத்துறை.

போக்கிடாமலைம்புலன்களுமிசையுநற்போகம்
சாக்கையேமுதலுயிரெலாங்கலக்கமில்பெரியோர்
ஆக்கையாவியோடெவ்வளவுறையுமவ்வளவு
நீக்கமின்றிமால்பதமுணிநிலமிசையுறுவார். ௫௮

அரிதுமானிடப்பிறவிவந்தடைவதிங்கடைந்தால்
உரைசெயாயுண்மிக்குறையினூற்றின்மேலுறையார்
விரகிலாவிளைஞோர்களாய்மெலியுமூப்பினராய்க்
கருதுநாளவங்கழிப்பர்கண்படையினாலன்னோ. ௫௯

உறையுமாயுளிற்பாதியுமொழிப்பர்மற்றொழிந்து
குறையுநாட்களுமனைவியர்குமரரென்றவர்மேல்
நிறையுங்காதலினீப்பரானெடியனைமனத்துள்
இறையுமோர்கிலார்பிறப்பிறப்புக்கிடனாக. ௬0

தோற்றுமேழ்வகைப்பிறவியுமிரிதரத்தொலைத்து
மாற்றுமானிடராயிவண்மருவியுமாயன்
ஆற்றல்சேர்பதமன்பொடுநினைந்துவீடடையார்
கூற்றினாற்றுயர்வாரவர்மடமையார்குணிப்பார். ௬க

பாவத்தால்வரும்பொய்யுடல்யானெனப்பகரும்
சீவத்தால்வருமிருவினைக்கட்டொடுநிகழ்த்தின்
கூவத்தேவிழுமறிவிலாக்குருடர்மூன்றாகு
தாவத்தீச்சுடவருந்துவார்மடமையார்தணிப்பார். ௬௨

பன்னுநூல்பலதேர்ந்துநற்பரம்பொருளறியார்
இன்னல்பார்த்திடாரழியுமோர்பிறன்பொருள்கோடற்
குன்னுவாரெனின்மைந்தர்காளுலகினிலொளிசேர்
பொன்னின்மேற்செலும்விழைவையார்போக்குவாரம்மா. சுஙு

ஓதுநூல்பலவுலகியன்முழுவதுமுணர்ந்தும்
பேதநீங்குறத்தம்மைநன்கறிந்திடார்பெரிதாம்
காதலாகியவிலங்குபூண்விலங்கெனக்கருத
மாதர்பான்மயர்ந்தாடுவரெனினெவர்மறுப்பார். சுச

கூறுமங்கியுந்தூமமும்போற்குணகுணியாய்
வேறுவேறுசேர்பொருளெலாமேவியொன்றாகி
ஈறிலாமுதலாயுடற்கிசைவிகாரங்கள்
ஆறுமெய்ப்பொருட்கில்லையென்றறிவதேயறிவால். சுறு

பாதவங்களின்றளிரொடுபூமுதற்பலவும்
ஓதின்வேறுவேறுருவெனவொளிருமாபோலக்
கோதுசேரறுவிகாரமாங்குணமுடற்கன்றிப்
பேதநீங்கியேபிறங்குமெய்ப்பொருட்கிலைபேசின். சுசு

காட்டின்மேவியகானலிற்புனலெனக்காதல்
பூட்டுமாயையின்முறைமுறைபோந்ததத்துவத்தின்
கூட்டமேயுடலவ்வுடற்குலவுநன்மதியால்
நாட்டுபோதமேநவையிலாப்பொருளென்றுநவில்வார். சுஎ

பன்னுமாக்கைகொளவயவமுதலியபலவும்
உன்னியீங்கிதன்றீங்கிதன்றெனமுறையொழித்துச்
சொன்னபுந்தியிற்கரியெனத்தோற்றியவறிவை
இன்னதேபரம்பொருளெனவறிவதிங்கியல்பால். சுஅ

புந்திமுக்குணம்பொருந்திமூன்றவத்தையும்பொருந்தும்
அந்தமின்றியவவத்தையிலறிவெனவமரும்
நந்தலின்றியபரம்பொருட்குடைமையாநாடிப்
பந்தமுற்றவெவ்வினையறப்பரத்தொடொன்றுவரால். சுகூ

நிலவுமோர்வினையின்றியேநித்தியமாகி
உலகெலாநிறைந்துயிரெனவொருமுதலென்ன
இலகுசித்தெனவெண்ணறுசுத்தமாயிருக்கும்
அலகின்மாயனையறிவதற்கென்னரிதம்மா. எ0

கனவுதுஞ்சுதல்காரணமாய்வருமாபோல்
வினைசெய்வெவ்வுடலேற்றும்வெம்பேதைமைவிளைவால்
மனனினுற்றிருமாயவன்மலர்ப்பதத்துணையை
நினையின்வீடுறுநீங்குமவ்வினைப்பயன்விளைவே. எக

வரும்பெரும்புகழ்க்குருவொடுமெருவறப்பெற்றால்
திரும்புமாயவனடிதொழத்தீங்குவிட்டுள்ளம்
நிரம்புமாலடிக்கன்புநன்னேசமார்புளகம்
அரும்புமாக்கைநெஞ்சானந்தவெள்ளமூற்றெழுமே. எஉ

காமமாயதைத்தெவிட்டிடாப்பெருதவேகருது
நாமரூபத்தோடுறைபவர்நலனழிந்திறந்து
போமென்றாலும்பொய்ப்பொருளையேகாதலித்துழல்வார்
ஈமஞ்சேர்ந்துடலெரிவதுங்கண்டிலரேகொல். எ௩

அயனரன்புரந்தராதியராக்கையும்பிறவி
நயந்தரும்வினையிழைத்திடுநெறிந்திடார்நவிலின்
வயம்வளர்ந்தசீர்நேமிமாலுக்கிருவினையின்
பயன்விழைந்திடாதளிக்கினப்பரனெடொன்றுவரால். எச

தேவராயினுமவுணர்களாயினுந்தெரிவில்
பாவைமார்களேயாயினும்பறவைமாநரரோ
டேவராயினுமாலுழையிருத்துமன்பினரேல்
தாவிலாதவீடடைந்துறைவாரிதுசரதம். எரு

அன்புசெய்வதிங்கரிதிலையன்புசெய்வதுதான்
பொன்பிறங்கியவணியெலாம்பொலிந்திருப்பதுபோல்
மன்புகழ்ச்சராசரங்களின்மாயனென்றுரைக்கும்
நன்பெரும்பொருளுறையுமென்றுளத்துநாடுவதே. எசு

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

பத்திசெய்தமலன்செய்யபதத்துணைசேர்மினென்றுத்
தத்துவஞ்சிறுவர்க்கெல்லாஞ்சாற்றினன்சாற்றவன்னோர்
அத்தலையறிவுமன்புமடைந்தனர்மறையோரஞ்சி
இத்திறமுரைத்துமென்றுவியம்பினர்கனகற்கம்மா. எஎ

ஆட்டியதராங்கமூந்நீர்முகத்தெழுமமுதமள்ளி
ஊட்டியதென்னத்தீஞ்சொலுரைக்குநன்மதலைசெய்தி
கேட்டலும்பொறாதுமேன்மேற்கிளரழற்சீற்றம்பொங்கி
நாட்டநஞ்சுமிழவெய்யநச்சராவென்னலானான். எஅ

சிறினன்மதலைதன்னைச்சென்றுநீர்கொணர்மினென்று
வீறுசேரவுணரோடிமீண்டுவந்தவையினுய்க்க
ஆறறிபுதல்வன்செய்யவணிதிகழ்வதனநோக்கி
ஈறுநீயடைவைதீயோயெனவவனியம்பினானல். எகூ

ஈறெனையிழைப்பவென்றாயிழுதையினியல்பதீதாம்
நாறுபைங்கமலகேள்வனன்மனுநவிலுநீரார்க்
கூறுசெய்குறல்கூற்றுக்குமொல்லுமோவொல்லாதெந்தாய்
தேறுதிமறைகள்சான்றுதேற்றமீதையமின்றால். அ0

தண்டுளிநறவுகாலுந்தாமரைப்பொகுட்டின்மேய
வண்டுவீழோதிமின்னின்வயங்கவோர்மழைக்காரொன்று
கண்டவர்மருளும்வண்ணங்கடலிடைக்கிடந்தமாயன்
உண்டுகொளுலகத்தென்னவுருமெனவுலம்பினானால். அக

கடலினுமுளனேவண்டுகளுலவாய்வீழுமந்தண்
மடலினுமுளனேயோங்குமலையினுமுளனேமன்னா
உடலினுள்ளுயிர்போலெல்லாவுலகினுமுளனேவெய்ய
அடலுடையாழிதாங்குமமலனென்றறைந்தானம்மா. அஉ

அரும்பெறற்குழவிமாற்றமஞ்செவிவெதுப்பவாற்றான்
முரிந்திடப்புருவமுந்நீர்முளைத்தெழுபரிதிபோல
எரிந்தபொற்கடகஞ்சிந்தவிலங்குவாணிலவுக்கற்றை
சொரிந்திடுபருஉத்தாட்செம்பொற்றூணிடையடித்தானன்றே. அங

இடித்ததோரசனியென்னவெறுழ்வலிக்கனகன்சீறி
அடித்ததூணத்துநின்றுமாடகப்பசும்பொனண்டம்
வெடிப்பமால்வரைபனிப்பவெடிபடநகைத்துவெய்தின்
வடித்தபூந்துளவமாலைவாளரிமுளைத்ததம்மா. அச

மருப்பிளந்திங்களன்னவாளுகிர்நுதியின்மாயன்
சிரிப்பின்மாமலர்க்கண்சேந்துதீப்படநோக்குநோக்கின்
நெருப்புவாயுமிழ்ந்தமின்னினிழன்றுநெய்ம்முகமணிந்த
அரத்தவேலவுணரெல்லாமாருயிர்தொலைந்துசாய்ந்தார். அரு

ஒளிறும்வாளொருகைபற்றியொண்சுடர்வயிரம்வேய்ந்த
கிளரொளிப்பசும்பொற்செய்யகேடகமொருகைதாங்கி
அளிபடுதொடையன்மார்பனண்ணலாளரியின்முன்னம்
களிமதஞ்செருக்கும்வென்றிக்களிறெனச்சினந்துசேர்ந்தான். அசு

கள்ளவிழ்துளவமார்பன்கதிர்விரிகமலச்செங்கை
வள்ளுகிர்நுதியான்மெல்லவௌவலும்வலியினீங்கிப்
புள்ளின்வாய்ப்பட்டுச்சோரும்புற்றரவென்னமாழ்கி
ஒள்ளழலுயிர்ப்புவீங்கியுழன்றனனவுணர்வேந்தன். அஎ

கழைசுளிகளிறன்னானைக்கவானிடைக்கிடத்திமாலைக்
குழவிவெண்டிங்களன்னகூருகிர்நுதியிற்பைந்தேன்
பொழிமலரலங்கன்மார்பம்போழ்ந்துசெங்குருதியூறி
வழிபசுங்குடர்மென்கண்ணியாளரிவனைந்ததன்றே. அஅ

ஆர்த்தனரமரரோடியரும்பவிழ்பசும்பொற்போது
தூர்த்தனருலகமுண்டசுடர்க்கைப்பவளவாயும்
கூர்த்தவாளுயிருங்கையுங்கொழுங்குடரணிந்தமார்பும்
பார்த்தனர்வெருவலுற்றார்பனியிருவிசும்புமொய்த்தார். அகூ

வெஞ்சினத்திகிரிமாயன்வெருவருதோற்றநோக்கிக்
கஞ்சநாண்மலரினானுங்கண்ணுதல்பிறருமஞ்சிச்
செஞ்சுடர்விரிக்கும்போதிற்றெரிவைநீசேறியென்ன
அஞ்சினளணங்குநண்ணவவ்வுருக்கண்டுமன்னோ. ௯௦

மலரயன்கிரீசன்றேவர்வாசவன்முனிவர்சித்தர்
இலகுதென்புலத்தோர்நாகரியக்கர்கந்திருவாதி
அலகிலோரணுகாராகியாளரியுருவத்தோனைப்
பலமுறைதொழுதுபாதபங்கயம்பரவினாரால். ௯௧

தாளிணைவழுத்தியன்னோர்தரைமிசைவிழுந்துபோற்றி
வாளுடைக்கனகன்றன்னைமாய்த்தெமைப்புரந்தோய்சீற்றம்
கோளராவணையிற்றுஞ்சுங்கொண்டலேதணிதியென்ன
ஆளரிகொண்டசீற்றமகன்றிலதலக்கணுற்றார். ௯௨

உவரிவாய்வந்துதோன்றுமுறுசுவையமிழ்தமென்னக்
கவிமதங்கடந்தவென்றிக்கனகனுக்குதித்ததோன்றல்
செவிமுதல்குளிர்ப்பத்தண்ணென்றெள்ளமுதுகுத்தாலென்னப்
புவிமகள்கொழுநன்பொற்றாள்புல்லினன்பரவினானால். ௯௩

அஞ்சனவண்ணத்தண்ணலகங்குழைந்துருகியாங்குக்
கஞ்சநாண்மலரினன்னகதிர்வளைச்செங்கைதன்னால்
செஞ்சுடர்க்குழவியன்னான்சிறுபுறந்தடவந்தென்கொல்
மஞ்சநீவிழைந்தாய்வேட்டவரநினக்களிப்பலென்றான். ௯௪

விழைவறவெறிந்தார்நாடும்விழுப்பெருஞ்சுடரேதூய
பழமறைக்கொழுந்தேபச்சைப்பசும்புயல்வண்ணாநின்னை
வழிபடுமன்பேயன்றிவரமெவன்பெறுவதென்னாத்
தொழுதனன்வழுத்தலுற்றான்றூயபேரறிஞனம்மா. ௯௫

பூவுறைமணம்போலெல்லாப்பொருளினுமுறைவாய்நின்பொன்
சேவடிதொழுதுபோற்றார்தேவரேயேனுநீசர்
ஆவர்பொல்லாதநீசராயினும்வணங்கிநின்சீர்
நாவினால்வழுத்திற்றேவநாயகர்நாதராவார். ௯௬

எங்குநீயுறைவையேனுமிலங்குகண்ணாடிநோக்கின்
அங்கவர்முகங்கடாமேயறிவர்போலன்பினோர்முன்
தங்கெழிலுருவத்தோடுசார்குவையறியுமாறுன்
பொங்குசீர்பிரமனாலும்புகழ்வதற்கடங்காதம்மா. ௯௭

உருடருஞ்சகடுபோலவொழிவிலாப்பிறவியுற்றேன்
மருடரும்பிறவியின்னம்வருங்கொலென்றஞ்சலல்லால்
தெருடருநின்னைக்கண்டதேவர்போலஞ்சகில்லேன்
அருடரல்வேண்டுமென்பாலாளரியுருவத்தையா. ௯௮

அஞ்செவியாயவண்டுன்னருங்கதைத்தேறன்மாந்த
நெஞ்செனுமன்னமூன்றாணிரையிதழ்க்கமலம்வைக
தஞ்சமாநினதுநாமஞ்சாற்றுகவென்னாவென்றும்
எஞ்சிலிவ்வரந்தந்திங்கனிடர்க்கடலேற்றுவாயால். கூகூ

ஆதியிலொருவையாகியந்தமென்றுரைக்கும்போழ்தும்
ஏதமிலொருவையாகியியம்புமிந்நடுவிற்பேதம்
ஓதுயிர்பலவுமாகியுறைதல்போலுறைவாய்ஞான
சோதியுன்விளையாட்டெல்லாஞ்சொல்லவல்லுநர்யாரம்மா. க00

ஆதிமாமாயையாகியகத்தகங்காரமாகிப்
பூதமாய்ப்பொறியாய்ந்தப்பொறிக்குறுங்குணங்களாகிப்
பேதமாமுயிராயொன்றாய்ப்பிறங்குசித்தாகிவைகும்
கோதிலாநின்னையன்றிக்குறிக்குமோர்பொருளுமுண்டோ. க0க

வெட்டிடுமனையார்போகம்விரும்பிடூஉவேறுவேறு
தாட்டுணைசிலர்கைப்பற்றத்தானையைச்சிலர்கைப்பற்ற
வாட்டமுற்றலைவார்போலவருத்துமைம்புலனும்போகம்
நாட்டமுற்றலைக்கப்பட்டோர்நலிவர்நுன்னருணண்ணாரால். க0உ

தோற்றிடின்வீயுங்காலைத்துயருறுவதற்குமஞ்சி
ஏற்றதாய்வயிற்றின்றேத்துற்றிடருறுவதற்குமஞ்சி
மாற்றருஞ்சுழல்காலுற்றுமறுகுமோர்சருகுபோல்வார்
போற்றிடார்நின்னையன்னோர்புலமையையென்சொல்கேனே. க0ங

வெற்றிவேலவுணற்கொன்றுவிழுச்சிறப்பளித்தோயிங்ஙன்
உற்றவெஞ்சீற்றநீங்கியுவந்தருளென்றுபல்கால்
பற்றெறிந்துயர்ந்தவைந்தாம்பருவத்தோன்பரவலோடும்
அற்றமில்வெகுளிபோகவாளரிமகிழ்ந்ததன்றே. க0ச

அரும்புகழ்ப்புதல்வவுன்றனன்பினுமகிழ்ந்தேமுள்ளம்
விரும்புடற்போகநெஞ்சின்விழைந்திலைநீயென்றாலும்
பொருந்துமோர்மனுவின்காலம்போற்றுசீர்வேந்தனாகி
இருந்தபின்னெனதுபாதமெய்துகவெனச்சொன்னானால். க0ரு

மானிடமடங்கலானோன்வழங்குதல்கேட்டமைந்தன்
நீனிறமுகிலேநின்னைநிந்தையேபுரிந்ததாதை
ஊனமாம்பாவமெல்லாமொழியநீயருள்செயென்னாத்
தேனலர்துளவத்தம்மான்சிறுவனைநோக்கிச்செப்பும். க0சு

உன்னையிங்குயிர்த்தவாற்றாலுரைக்குநின்குலத்துமூவேழ்
என்னுநன்மரபுளோருமியைந்தனர்புனிதமென்றால்
அன்னவன்புனிதனாதற்கையமென்னவனுக்கிம
மன்னுநல்வினைசெய்கென்னமைந்தனவ்வினைசெய்தானால். க0எ

பெருகுசீர்ப்பிரகலாதன்பெட்பொடுவழுத்தலாலந்
நரகரியுருவத்தண்ணனன்குளமகிழ்ந்தானென்று
விரிமலர்ப்பொகுட்டின்மேயவிண்ணவன்முதலினோர்தாய்
அருகுவந்தணுகியன்னோனடிதொழுதேத்தினின்றார். க0அ

விரிந்தசெங்கமலமன்னவிழிமலர்க்கருணைமாரி
சுரந்ததன்கமலப்பொற்றாடொழுதெழுந்திமையோர்தத்தம்
பெருந்திருவெய்தநல்கிப்பிறைநுதற்பிராட்டிபுல்ல
அரும்பவிழ்துளவத்தண்ணலாயிடைமறைந்தானன்றே. க0கூ

கற்றவரறியலாகாக்காட்சிநின்றறிந்ததோன்றல்
பொற்றசெங்கமலமேவும்புங்கவன்பணியினாலே
கொற்றநீண்மகுடஞ்சூடிக்குளிர்ந்தவெண்டிங்களென்ன
ஒற்றைவெண்கவிகைநீழலுலகெலாம்புரந்தானன்றே. கக0

கலிவிருத்தம்.

பூட்சியோடரிபோந்திடப்போற்றுநற்
காட்சிமேயகனகன்மதலைதன்
மாட்சிநோக்கிமகிழ்ந்தயனாதியோர்
ஆட்சியாயபதத்தடைந்தாரரோ. ககக

முன்புபேசுகதைமொழிநாவினோர்
அன்பினோடுடன்கேட்குமறிவினோர்
துன்பவாரிகடந்துதுகளிலா
இன்பவாரியினெய்துவரென்பவே. ககஉ

இரணியனைக்கொன்றவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கஉஅ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## கூ-வது, வருணாச்சிரமமுரைத்தவத்தியாயம்.

---

கலிநிலைத்துறை.

வருணநான்குநான்காச்சிரமத்திறம்வகுத்துத்
தெரியுமாறுநீசெப்புதியென்றுதீங்கெறிந்த
தருமன்கேட்டலுந்தவஞ்செய்நாராயணனெனுமால்
உரைசெய்தானென்னக்கென்றுநாரதமுனியுரைக்கும். க

சமதமந்தவந்தண்ணளிபொறுமைமெய்தருமம்
விமலஞானமோடுயிர்க்கெலாம்விரும்புமன்பினராய்க்
கமலைகேள்வனைக்கண்ணனைக்கருதினராகி
அமர்தலெக்குலத்தவர்க்குநல்லறனெனவறைவார்; உ

ஓதலோதுவித்துறைதனன்மகமுவந்தாற்றல்
தீதிலாமகம்விரும்புவோர்செயப்புரிவித்தல்
ஈதலேற்றலென்றறுதொழிலியற்றுதற்குரியார்
வேதநான்கையும்விளம்புமந்தணரெனவிதிப்பார். ௩

அரசருக்கறனருமறையோதலம்மகங்கள்
புரிதன்மாநிலம்புரத்தல்வெம்போர்ப்படைபயிற்றல்
வெருவலாதுவெஞ்சமத்தெதிர்வெற்றிமிக்கடைதல்
மருவியன்பொடுவழங்கலென்றறுவகைத்தென்ப. ௪

வணிகருக்கறன்மறைபயின்றிடன்மகம்புரிதல்
தணிவில்வாணிபமுழவுசெய்திடல்பொருடருதல்
அணிசெயானிரைகாத்தலிங்கறைந்தமூவருக்கும்
பணிசெய்துற்றலேபின்னவர்க்கறனெனப்பகர்வார். ௫

மடந்தைமார்க்கறன்மனைத்தொழில்பளகிலாதியற்றி
அடைந்ததெய்வநற்பதியெனவன்பொடுவணங்கிக்
கடந்திடாதவன்பணித்தவாபுரிந்தவன்காதல்
தொடர்ந்ததாதைதாயேவலுந்தொழுதுசெய்குவதே. ௬

சொன்னவேதியர்முதற்சொலுந்துகளிலாவருணம்
மன்னுநால்வகைத்தவரல்லாமற்றையகுலத்தோர்க்
குன்னுநல்லறந்தத்தமகுலத்தொழிலுவந்து
பன்னுபாவநீத்தியற்றுதலெனப்பகருவரால். ௭

உழுதுவித்தியவிளைபயிர்க்குரியவரேகிப்
பழுதிலாதுகாத்திலரெனிற்பயன்பெறார்போல
வழுவிலாவுரிமைத்தெனவழங்கறமறப்போர்
அழிவிலாநலனடைகுறாருந்துயரடைவார். ௮

கலிவிருத்தம்.

பிரமசாரியர்க்கறம்பேசினோந்தெனும்
பருவமேமுதற்பகாண்டுநாளினுள்
உரைசெய்சீரிருபிறப்புற்றதென்னமுப்
புரியினூன்முறைபூணல்வேண்டுமால். ௯

குருகுலவாசமாய்க்குலவியையமேற்
றுரைதருகுரவனிவ்வுண்டிமாந்தென
இருபொழுதும்மயின்றெஃணெய்தேன்முதல்
மருவலாகாவெனமாற்றல்வேண்டுமால். ௧0

சீலமோடுழையதண்மவுஞ்சிசேர்ந்தலர்
காலையுமாலையுங்கதிர்வெய்யோனையும்
கோலநற்கனலையுங்குருவையுந்தினம்
மாலறவணங்குவர்மறைகளோதுவார். ௧௧

வாசமார்கருங்குழன்மடந்தைமாரெழில்
நேசமோடுளத்திடைநினைந்தன்னார்திறம்
பேசிடாதுறைவதுபிரமசாரியர்க்
காசிலாவறனெனவறையுநூல்களே. கஉ

இல்லறம்பூண்டவர்க்கெண்ணெயேமுதல்
நல்லனமருவுதன்வையின்றாமரோ
சொல்லியநாட்களிற்றுணைவிமார்முலை
புல்லலுமுரித்தெனப்புகலுநூல்களே. கங

வானகத்தமரர்மாமுனிவர்தம்மொடும்
தேனகத்திருந்தார்த்தென்புலத்தவர்க்
கானமுக்கடன்கழித்தறத்தினின்றவர்
கானகத்தேகுதல்கருதுவார்களால். கச

மனைவியைமைந்தர்பால்வைத்தும்வைத்திடா
தனையவளொடுவனத்தடையலாமதில்
தனிவனமனைவியோடுறையிற்சாலைசெய்
தனல்வளர்த்தோமநன்காற்றல்வேண்டுமால். கரு

மைந்தர்பான்மனைவியைவைத்துமன்னழல்
சிந்தையினடக்கினர்செல்லிற்சாலைநீத்
தந்தமில்பனிவெயிலமர்ந்துமாமலைக்
கந்தரமுறைந்துமேகழிப்பர்வைகலே. கசு

வாட்டமற்றறிவுவந்தடையின்வன்னியாய்க்
காட்டகத்தேகலுங்கடனங்கேகுறின்
மீட்டகத்துறைவதைவிரும்பிவீறுசேர்
நாட்டகத்துறுவதுநவையென்பாரரோ. கஎ

உழுகுநர்விதைத்தநெல்லுண்டிமாந்திடார்
விழுசருகுவைநென்மெல்லடகுவேண்டுவார்
தழையுறுமயிருகிர்தவிர்ந்திடாரவர்
மொழிநறையெண்ணெய்தார்முதலநீக்குவார். கஅ

துறந்தநல்லெதிசெயல்சொல்வினங்கியைச்
சிறந்ததனுளத்திடைச்சேர்த்திச்செய்குணம்
நிறைந்திடுபுலன்களுநிகழ்த்தைம்பூதமும்
பிறந்ததின்முறைமுறைபெரிதுநோக்கியே. க௯

நிகழ்த்தியமனம்பொறிபூதநீங்கிடா
தகத்திடையடக்ககங்காரந்தன்னையும்
மகத்தினிலிருத்தியம்மகத்தைமாயையின்
புகுத்தியம்மாயையையறிவிற்போக்கியே. உ0

தத்துவமித்திறமடக்கிச்சத்தெனச்
சித்தெனக்குலவுவன்செப்புகின்றசீர்ப்
புத்தியினுசையும்பொருந்துமானமும்
வைத்திலனுகியேவயங்குவானரோ. உக

ஒருபதிக்கொருபகலாகவேயுறைந்
திருநிலத்தேயவனியன்முத்தண்டமும்
கரகமுந்தாங்குவன்கருதுசின்னமாய்
வருகனவெனச்சகமனனிற்காண்பனுல். உஉ

உன்னியமறைமுடிவோதுவானன்றிப்
பன்னியவேறுநூல்பகர்ந்திடானவன்
துன்னியவுலகவர்சொன்னநல்லறம்
மன்னியநூற்குரைவரைந்திடானரோ. உ௩

முனிவுசெய்யானுடன்முதிர்ந்துபோமென்றும்
இனிதுசெய்யானுடலென்றுபோமென்றும்
நினைதல்செய்யானிலைநிற்கவோர்மடம்
வனைதல்செய்யானுயிர்வருந்திடானரோ. உ௪

திசைபுகழ்துறவறஞ்சேர்ந்துளார்களில்
இசைதருசின்னம்விட்டெவன்கொலோவென
வசைதருமூங்கையர்மத்தர்போலவும்
அசகரம்போலவுமாகுவானரோ. உ௫

உலகெலாந்தன்னிடத்துறைவதாயுந்தான்
அலகிலாவுலகெலாமாவதாகவும்
இலகுசீருளத்தொடுமியைந்துநோக்குவான்
நிலவுமோர்பேதமாய்நினைந்திடானரோ. உ௬

அறிவினின்முதிர்ந்தசகரங்கொலாமென
மறையவன்றுறவறம்பூண்டுமன்னுசீர்
நிறைதருசையமாநெடுங்கிரித்தலை
உறையுமோர்கதைநினக்குரைக்குங்கேட்டியால். உ௭

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

மிக்கசீர்ப்பிரகலாதன்மேதினிமுழுதுநாடிப்
புக்குழியசகரம்போற்பொருந்துமோர்முனிவன்றன்னை
எக்குலத்துதித்தானென்றுமெந்தவாச்சிரமனென்றும்
தக்கநெஞ்சையங்கொள்வான்சையமால்வரைகண்டானே. உ௮

அருவரைச்சாரலெய்துமசகரன்றன்னைக்கண்டு
பெரிதுநீதவஞ்செய்கின்றுய்பெருத்தனையென்கொலென்ன
எரிகதிர்ப்பரிதிமார்பவிளைத்தலும்பெருத்தருனும்
ஒருவுறுமுடலுக்கன்றியுயிர்க்குமற்றில்லைமாதோ. உ௯

என்றருந்தவத்தின்மிக்காணிசைத்ததுகேட்டலோடும்
நன்றுரைத்தனைநீயாரைநவையறவுரைக்கலாமேல்
ஒன்றியவிசைத்தியென்னவொளிறுவேற்கனகனீன்ற
வென்றிகொண்மதலைக்கந்தமெய்ம்முனிவிளம்பலுற்றான். ௩௦

உரையொழிந்திறந்துளோருமுற்றனர்பெரியோரென்றால்
புரையறுசிலசொல்சொல்லிப்புனிதமேபொருத்துவார்நீ
அரிதிவணடைந்துகேட்டாலறைவதினழகிதுண்டோ
கருதுடற்காமமுற்றேகணக்கில்பல்பிறவியுற்றேன். ௩௧

மறையவர்குலத்துட்டோன்றிமயக்குடற்காமம்விட்டே
அறிவறிந்திங்ஙன்வந்தேனம்மமானுடராய்வந்து
நிறைவறுகாமம்விட்டுநினைந்திடார்தம்மையன்னோர்க்
குறுவதோர்சுகமுமுண்டேயொழிவிலாத்துயரமல்லால். ௩௨

சைவலமறைக்குந்தண்ணீர்தம்மருங்கிருப்பதோரார்
பொய்வலம்பொருந்துகானற்புனலையேவிரும்புவார்போல்
மெய்வலந்திகழுந்தம்மைவிரும்பல்விட்டறியாருண்மை
கைவலமறப்பார்காமப்பொருளையேகருத்தின்வேட்பார். ௩௩

ஆசையாலருந்தாராகியருநிதிவருந்திப்பெற்றார்
நேசமாரரசர்கள்ளர்நெடும்பகைமுதலினோரால்
காசுலாம்வெருவுட்கொள்வார்கண்படைசிறிதுங்கொள்ளார்
நாசமேயடைவார்காமம்விட்டவர்நலன்றுய்ப்பாரால். ௩௪

உழப்பினாலீட்டிவைத்தவறுசுவைத்தேறலுண்ணா
திழப்புறுகாமர்தேனுமெழுகலவெதிர்ந்தமாந்தும்
விழுப்பெருமலையாரவுமேதகுகுரவர்கண்டாய்
மழைப்புயலனையாயென்றுமறைமுடிவியம்பினானால். ௩௫

உளநனியுவந்துகேட்டவொண்புகழ்ப்பிரகலாதன்
விளைவுறுவிருப்பினோடுவெறுப்புவிட்டுயர்ந்தோன்றன்னை
முளரியந்தடக்கைகூப்பிமுறைமுறைவணங்கிநாளும்
வளமுறைநகரஞ்சேர்ந்தான்மானவேலரசமாதோ. ௩௬

வருணாச்சிரமமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧௬௪.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## ச-வது, இல்லறத்தோர்கதியுரைத்தவத்தியாயம்.

### தரவுக்கொச்சகக்கலிப்பா.

வாழிமுழுத்தவனுரைத்தமறையுணர்ந்தநகரடைந்தோன்
ஆழிவலனுயர்கடவுளடிக்கமலமலர்சூடி
ஊழிதொறுமுயர்புகழ்சேர்ந்தோராழிதனையுருட்டி
எழுலகுமினிதளித்தானெனக்கிளந்தானிருந்தவத்தோன். ௧

சொல்லுபெருந்தவனுரைத்ததுகளிலுறவறங்கேளா
இல்லறத்தினிருந்துதுயரென்போல்வாரிடரொருவிப்
புல்லுமொருகதியுளதோபுகலுதிநீயெனத்தருமன்
நல்லதுகேட்கின்றியெனநாரதமாமுனிநவில்வான். ௨

நித்தியநைமித்திகஞ்சேர்நிந்தையில்காமியவினைகள்
பத்தியொடுபுரிந்தவரும்பயன்விழையார்பசுந்துளவோன்
சித்தமகிழ்தரவுதவித்திருமால்சீர்சொலக்கேட்கின்
முத்திநெறிபொருந்துதற்குமுந்துநெறிவேறின்றால். ௩

பாவகனைவழுத்திமறைபகர்ந்தினியவுண்டியினைத்
தேவர்நரர்பூதமொடுதென்புலத்தோர்தமக்குதவித்
தாவில்கிளைஞோர்களொடுசார்ந்துநுகர்ந்தாரளிசேர்
காவிமலர்புரைமேனிக்கடவுளுலகடைகுவரால். ௪

அங்கிமுகத்தளித்தலினுமருமறையோர்முகத்தளிக்கின்
செங்கண்மலர்மான்மகிழுந்தென்புலத்தோர்தமைக்குறித்துத்
தங்குமமைமுதலாகச்சாற்றுதொண்ணூற்றாறினொடும்
பொங்குநைமித்திகதினத்தும்போனகமீந்திடலியல்பே. ௫

காமர்நைமித்திகமெனுநாள்கமையுறுநற்பாத்திரர்கள்
எமுறவந்தெய்தியநாளிருகதிரைப்பணிதீண்டு
நாமநெடுநாள்பிறப்புநாமகரணம்முதலா
வாமமணவினைபுரியவயங்கியநாண்முதலாமால். ௬

கங்கைமுதலாநதியிற்கயையிலருஞ்சேதுவினில்
பொங்கெழின்மாமலயமுதற்புனிதமுறுதலத்தினுற்றுத்
தங்கியவன்போடுவந்துதண்புனலின்கடனாற்றின்
வெங்கொடும்பாதகந்தொலைப்பர்வீடடைவர்தென்புலத்தோர். ௭

தனக்குரியவறத்தைதவனிதணக்கலொண்ணாவில்லறத்தோர்
அனற்கருமமுதலாயவறமொழித்துவிடலாகா
வனத்துறைவோர்மீண்டுமொருவன்பதிமேவுதலாகா
நினைத்தொழித்தமுப்பாலினேயம்வரலெதிக்காகா. ௮

இருவினையாஞ்சகடுபுலனெனும்புரவிபூண்டுதிகழ்
உரைமுதலைந்தெனும்வழிபோமுடற்றேரிலுறையுயிராம்
அரசன்மதிப்பாகனொடுமறிவெனும்வாளாலெறிந்து
கருதியகாமாதிபகைகடந்திடின்வீட்டுலகுறுமே. ௯

காதலெனுங்கொடுவயவைகலந்துலவிற்காமாதி
ஓதுபலகுணப்புளிஞருஞற்றுவினைவிலங்கிஞெடும்
பேதமுறுவெம்பிறவிப்பெருங்கடல்வீழ்குறலுணரின்
ரூதுலவுபயன்விழைந்துதொல்வினையார்புரிபவரே. க0

விரவுறுநட்புப்பகையைவிட்டுமனையறத்திருந்து
மருவுசெயப்படுபொருளுமன்னுதொழில்செய்பவரும்
கருமமுமோர்பிரமமெனக்கண்டுவினைபுரிவோரும்
தெருளுறுசீரொதிசேருந்தெளிவிசும்பேசேர்குவரால். கக

அரியதொழிலாடையுருவறியிஞெருநூருன்போல்
மருவியதாம்பிரமமென்றேமதிப்பதுபாவாத்துவிதம்
கருமமெலாம்பிரமமெனக்காணல்கருமாத்துவிதம்
விரவியுலகவருளத்தின்மேவுபெருஞானமெலாம். கஉ

ஒன்றெனநன்குற்றறிதலொழிவறுஞானத்துவிதம்
மன்றல்கமழ்மலர்த்தொடையோய்வகுத்தவிம்மூவத்துவிதம்
நன்றுளத்தினிடைதெளிந்துநவையறுதம்வினைபுரிவோர்
துன்றுவினையொழித்தமுனிதுன்னுகதிமன்னுவரால். கங

கந்திருவன்யான்பண்டுகறங்குதிரைக்கடன்ஞாலம்
தந்தவன்றன்வேள்வியினிற்றளவினிளமுகைமுறுவற்
சிந்தரிக்கண்மடநல்லார்திரளிஞெடுசெறிந்தெழில்யாழ்ப்
பைந்தொடையிற்றடவந்துபண்கனியப்பாடினஞல். கச

கன்னியர்தங்குழாத்திஞெடுகலந்தனன்போய்ப்பாடுதலான்
பின்னவஞகச்சபித்தான்பிறந்தனன்மற்றவ்வண்ணம்
கொன்ஞெழுகுபடவாவிற்கூத்துநவில்பாணிசைகேட்
டன்னமுயர்த்தவன்மதலையாயினனீங்கடல்வேலோய். கரு

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

அருமறைமுடிவுகாண்டற்கரியபேரொளிசின்மாமன்
ஒருதனிமதலையாகவுவந்துடன்பயிலப்பெற்ருய்
பொருவிலோயென்றுபோற்றிப்போயினன்முனிவனென்னச்
சொரிமதுத்தொடையலர்க்குச்சுகனினிதுரைசெய்தாஞல். கசு

இல்லறத்தோர்கதியுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க௲0.

எ-வது, ஸ்கந்தம் முற்றிற்று.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## ௮-வது, ஸ்கந்தம்.

## ௧-வது, மனுக்களையுரைத்தவத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

முறைவிளையாடநீதிமுடிபுனைமனுக்கடன்மை
இறைவிளையாடலெல்லாமியம்புதியென்னப்போற்றி
நறைவிளையாடுந்தார்வேனரபதியுரைப்பநான்கு
மறைவிளையாடுநன்னுமாதவன்வழங்குமாதோ. ௧

ஆதிமாமனுவின்காலத்தமலனல்விளையாட்டெல்லாம்
ஓதினேமாசமற்றுமொழிந்தமாமனுவின்காலத்
தேதமின்முனிவர்விண்ணோரிந்திரனிவர்களென்று
சோதிமாறேற்றுமாறுசொல்லுதுங்கேட்டிமாதோ. ௨

### எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

இயம்பிரண்டாஞ்சீர்மனுவினையுரைக்கினிலங்குமக்கினிமுனமீன்ற
நயன்றருசுவாரோசிடனவனுலகநவையறக்காக்குநாளமரர்
வயந்தருவேதசிரசினைமணந்தமதிநுதற்றுடிதையீன்றெடுத்த
பயன்றருதுடிதராதியரமரர்பரமனல்விபுவெனவுதித்தான். ௩

உரைத்தநாளமரர்வேந்துரோசனனூர்ச்சதம்பனாதியேழ்முனிவோர்
தெரித்திடுமூன்றுமனுவெனும்பெயரோன்செழுநறைபருகல்செயறுகால்
இரைத்ததார்ப்பிரியவிரதனீன்றெடுத்தவிலங்குவேலுத்தமனந்நாள்
வரைத்தடம்புயசத்தியசித்துமுதலாம்வானவர்க்கிறைவனாயினனால். ௪

சத்தியர்முதலோரமரராயுறைந்தார்சாற்றிவர்துணையெனத்தருமன்
புத்திரனாகிச்சத்தியசேனப்புகழ்ப்பெயரோடுமால்பொருந்திக்
குத்திரம்புரியுமரக்கருள்ளிட்டகொடியவர்க்கொன்றுலகளித்தான்
எத்தலத்தோருமேத்துசீர்வசிட்டனென்றுளோரெழுமுனிவராராம். ௫

நாற்றிசைபுகழ்நான்காமனுவென்போனவின்றவுத்தமமனுக்கிளையோன்
சாற்றுதாமதனும்வேந்தனக்காலத்தயங்குறுதிரிசிமுன்னுயிர்த்த
போற்றுதிரிசிகனிந்திரனாகும்புலவர்சத்தியகனாதியராம்
ஏற்றநற்சோதிவியோமரேமுதலோரெழுமுனிவரரெனவிருந்தார். ௬

அறைந்தநாணிருமேதசன்றனைமணந்தவரிவைவைதிருதியாள்வயிற்றின்
நிறைந்துலகுறைவோரரியெனவுதித்தரிகழ்த்துநான்மறைகொணர்ந்தளி
சிறந்தவக்காலமுயர்திரிகூடஞ்சேர்கரிக்கிடரகற்றினன்மால் [த்தார்
மறந்திகழ்வேலோயென்னலும்வேந்தன்வழங்கதுவெனமுனிவழங்கும். ௭

மனுக்களையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௭.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## உ-வது, கசேந்திரவத்தியாயம்.

### கலிநிலைத்துறை.

உரைக்குமோசனையொன்பதினாயிரமுயர்ந்து
தரைக்குமேன்மையாய்வெள்ளிபொன்னிரும்பெனச்சாற்றும்
நிரைக்கும்பூங்கதிர்க்கொடுமுடிநிகரின்மூன்றாகி
வரைக்கெலாம்வரமாந்திரிகூடமால்வரையே. க

கந்தமாமலர்ச்சண்பகங்கற்பகஞ்செயலை
சந்தமேமுதலாமரத்தடம்பொழிறவழ்ந்து
மந்தமாருதம்வந்துவந்திழுகுறவயங்கும்
அந்தமால்வரைவளன்வழுத்துதற்கெளிதன்றால். உ

தானயாற்றினைத்தருங்கரியொருவழித்தார்வாய்த்
தேனையாறுகானுகர்ந்திடுமொருவழிச்சிறந்த
மானைமாறடுமாவிழிவாளநாண்குயமா
ஆனமாதரோடமரராங்கொருவழியமர்வார். ௩

தடங்கண்மங்கையர்முகமெனத்தாமரைமலரும்
கடங்களன்னவர்செங்கையிற்காந்தளங்கலரும்
நடங்கொடோகையன்னோர்நலநாடினவிகலும்
முடங்குமுல்லைகள்வாணகைமூரலின்முகைக்கும். ௪

ஏகும்வானவர்மகளிரினடந்திடுமெகினம்
சேகினேமியம்புள்ளவர்முலையெழில்சிறக்கும்
பூகம்வார்பொழிலவர்மிடற்றெழில்பொலிந்திலகும்
கோகிலம்மவர்மொழியெனக்காவெலாங்கூவும். ௫

சுரும்புபாண்செயச்சுருள்விரிபூந்தடஞ்சுனைசேர்
சுரும்புமீதிளங்கதிர்புரைதருசுடர்க்கற்றை
அரும்புகூட்டராவணையினானெனவருங்காந்தள்
அரும்புகீழுறவணைந்துவந்துறங்குமம்மழைக்கார். ௬

தாரணிக்கெழிறருந்துணையொடுவிஞ்சைத்தலைவர்
தாரணிக்குநல்வளந்தருந்தடம்பொருப்பொருபால்
வாரணத்திருங்கோடடிபிடுங்கியமதிநேர்
வாரணத்திருக்கரத்தனைப்பாடினர்வதிவார். ௭

பன்னகத்துறுபடியவர்பயன்பெறுபாக்குப்
பன்னகத்துறும்வளனெலாந்திகழ்பருப்பதத்தின்
பன்னசத்துறுமருவியின்முல்லைபான்மதிசேர்
பன்னசத்துறையாம்பையர்நிச்சலும்படிவார். ௮

கோட்டுவான்மதிக்குழவியுஞ்சுனையருகுயர்ந்த
கோட்டுமீதெழுந்தன்னமென்பிள்ளையுங்குலவக்
கோட்டுவார்சிலைக்குறவர்தங்குழவியுங்குனிகூர்ங்
கோட்டுவாரணக்குழவியுமொருவழிக்குலவும். கூ

பூவைவேல்விழியரம்பையர்புகன்மொழிபுரையைப்
பூவைசாற்றியபுகுமொருவழிப்பொலம்பூமேல்
பூவைமார்முலைபுணர்திருமாலெனப்பூத்த
பூவையோர்வழிப்பொலிமுகைக்கோங்கொடுபொருந்தும். க0

கண்ணயர்தளிமுரலுங்காச்சூழகல்வரைவாய்க்
கண்ணலர்ந்தசெங்கமலமாமாய்ச்சியர்கதழ்ந்த
கண்ணகன்றிடுமனையுறிவெண்ணெய்கையேந்தும்
கண்ணனென்னவெண்மதிதொடுநீள்சினைக்காயா. கக

அருச்சுனன்றடந்தேர்நடத்தண்ணல்வந்தயன்சேய்
அருச்சுனக்கினிதருளியகண்ணன்முன்னவனும்
அருச்சுனத்திருநிறத்தினனொடுமமர்ந்தனன்போல்
அருச்சுனத்தருகலாவுறுமவட்சிலகாயா. கஉ

ஆடல்வாழிடைமைந்தரோடாணிரைபுரந்தங்
காடல்வாளராவுச்சியினடித்தவம்மான்போல்
கோடல்வாயயாவருஞ்செயும்வளந்திகழ்குவட்டில்
கோடல்வான்முகைமீதலர்ந்துறுங்கொழும்பூவை. கங

கலிவிருத்தம்.

நாகமேற்பணநாறுநவமணி
நாகமேற்பலநாயிறுபோலுமால்
நாகமீன்றநவையறுநாண்மலர்
நாகமீன்றயங்குந்நலனொக்குமே. கச

கன்னிமாவரிநாகங்கணங்கொளக்
கன்னிமாவரிநாகங்கவினுமால்
கன்னிகாரங்கலந்தவக்காவெலாம்
கன்னிகாரங்கதிர்மதிசேருமால். கரு

வாவிமான்விளையாடும்வரையின்மேல்
வாவிமானவலம்புரிவைகுமால்
ஆவியாருங்குவளையமாருக்
காவியாருவர்கண்ணெனலாகுமால். கசு

அந்தரத்துயர்வாயமணிவரை
அந்தரத்தமேருவுக்காகுமால்
சந்தனத்தருவேதடங்காடெலாம்
சந்தனத்துருவேதடங்கோடெலாம். கஎ

தண்டலைக்குழுவெங்கணுஞ்சார்ந்துகோ
தண்டலைக்குறகும்மிருள்சாய்க்குமால்
வண்டிரைக்குமதுமலர்மாநதி
வண்டிரைக்குள்வருங்கதிர்முத்தமே. கஅ

நத்தகத்துறுமுத்தமுநற்கரி
மத்தகத்துறுமுத்தமுமன்னுமாங்
கொத்தகத்துறுகொற்றமொழித்திடும்
சித்தகத்துறுவார்சென்றுசேர்குவார். கக

இதழிநாண்மலர்சேர்வரையேழையர்
இதழிஞகவிலவலர்தூற்றுமால்
கதலிமாகநகக்குவடோங்கியே
கதலிமாகநகர்க்கினங்காட்டுமே. உ0

மாவிலம்பயின்மஞ்சரிவாழ்வரை
மாவிலம்பயின்மஞ்சரிவாள்விழித்
தேவரம்பையெல்லூருவிற்சேர்ந்துபூந்
தேவரம்பையெல்லூருவிற்சேணுறும். உக

கோலமாவிளங்கோளரிசோட்டெழுங்
காலினேடுங்கனம்பிடியாமெனக்
காலினேடுங்கனம்பிடிக்குங்கரி
காலினேடுங்கலந்துவழங்குமே. உஉ

பூங்கலாமதிகாணப்புனறரும்
பூங்கலாமதித்தோதிற்பொறிதிகழ்
வேங்கைவேழமிடைந்திடக்காடெலாம்
வேங்கைவேழமிடைந்திடும்வெற்பிடம். உந

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

இன்னனவளத்தினேங்கியிலகுறுதிரிகூடத்தின்
பின்னுமங்கிரும்பின்வண்ணப்பெருங்குவடுலவல்போலத்
துன்னியகரிகட்கெல்லாஞ்சொல்லுமோர்பொருவேந்தென்ன
மன்னியபிடிகள்சூழவயங்குமோர்களிறுமாதோ. உச

மழலையஞ்சுரும்புபாய்ந்துமழைமதவருவியாட
விழையும்வெம்பிடிகளோடும்விண்ணிவர்திரிகூடத்தின்
கழைவளர்சாரலந்தண்கடிமலர்த்தடத்திற்சென்று
கிழல்சுழிகளிற்றுவேந்துநீர்விளையாடிற்றன்றே. உரு

மருவிளையாடுமந்தண்மரைமலர்பறித்துவீசி
விரிபுனலாடுமெல்லைவெஞ்சினவிடங்கர்கவ்விப்
பெரியபோர்க்களிற்றையீர்ப்பப்பிடிக்குலந்தடக்கைநீட்டிக்
கரையின்மீதீர்ப்பவும்போர்க்கரியிவர்ந்திலதுமாதோ. உசா

பிடிக்குலங்கலங்கியிர்க்கும்பெருவலிதொலைந்துமாழ்கத்
தடத்திடையிடங்கரீர்ப்பச்சார்கரைவேழமீர்த்து
விடற்கருவலத்தினோடும்வெந்திறற்சினத்தினோடும்
அடற்கருங்கொடியபோராண்டாயிரமடர்த்ததன்றே. ௨௭

வாரணமாற்றலோய்ந்துவானுறத்தடக்கைநீட்டிப்
பூரணவுலகமெல்லாம்பூத்தளித்தழித்துநின்ற
காரணபரமானந்தக்கடலிடைக்குளிப்போர்நெஞ்சும்
ஆரணமுடிவுமேயவமலவோவென்றாற்றும். ௨௮

வேதநூலொருங்குணர்ந்துவிரியுமெய்யறிஞருள்ளப்
போதுசேர்சோதிபொன்னிற்பொலியொளிபோலவெங்கும்
தீதுறாதருளின்யார்க்குந்தெரிவுறாதுறைந்துநின்ற
ஆதிகாரணன்வந்தின்னேயளிக்கவென்றழைத்ததன்றே. ௨௯

அழைத்ததுசெவியிற்கேட்டுமயனரனாதியாயோர்
புழைக்கைவெங்கரிமுன்காப்பப்புகுந்திலராதியாகித்
தழைத்தகாரணனேயென்றதனிப்பெயர்ப்பொருள்யாமல்லேம்
இழைத்தகாரியம்யாமாவேமென்செய்துமாலின்றென்றார். ௩௦

கூப்பிடுகுரல்கேட்டோடிக்கொழுமணிச்சுடிகைநெற்றிப்
பாப்பணையகற்றிவெய்யபடர்சிறைக்கலுழனூர்ந்து
தீப்பொழிந்திலங்குகூர்வாய்த்திகிரிகைத்தாங்கியாவும்
காப்பவன்பிறைவெண்கோட்டுக்களிற்றுமுன்னெய்துற்றானால். ௩௧

எறிசுடர்விரிக்குநேமியெறிந்தனனெறிதலோடும்
பிறைபுரையெயிற்றுப்பேழ்வாய்பிளந்துவெவ்விடங்கர்துஞ்சி
அறைதருசாபந்தன்னாலடைந்தவவ்வுருவுநீத்து
விறலுடையூகூவென்னும்விஞ்சையனாயிற்றன்றே. ௩௨

விழுமியவிசைநூறேர்ந்தவிஞ்சையனாயவன்றான்
பழமறைமுதலிபாதம்பழிச்சினன்பதியிற்போயான்
அழிவறுதவத்தின்மிக்கவகத்தியன்சாபந்தீர்ந்து
மழைமதக்களிறுமாயன்வரம்பில்வீடுற்றதம்மா. ௩௩

கரும்புயல்வண்ணத்தெம்மான்கமலைபார்மடந்தையென்னும்
மருந்துறழ்மொழியார்கொண்கன்மாய்வில்வைகுந்தமேயான்
அருந்தவமுனிவன்சாபமடைந்துவேலாசனாங்கோர்
பெருங்களிறாயகாதைபேசுதுங்கேட்டிமாதோ. ௩௪

பைந்தமிழ்நாடுகாக்கும்பாண்டியன்பரிதிவைவேல்
இந்திரத்துய்மனென்போனிணர்ப்பொலஞ்சுண்ணந்தோய்ந்த
மந்தமாருதநின்றாடுமாலைவெள்ளருவிச்சாரற்
சந்தனப்பொருப்பின்மாயன்றாளிணைவழிபட்டானால். ௩௫

குடங்கையினிவக்தவண்டகோளமூடுருவுவிந்த
நெடுங்கிரியடக்கிநெஞ்சுநெருப்புறழவுணர்மாளத்
தடந்திரைச்சலதியுண்டசதுமறைமுனிவந்தெய்த
அடங்கலர்ச்செகுத்தகூர்வாளரசனுங்கெழுந்திலானல். ௩௬

இமிழிருள்சுவற்றும்வேலானெழுந்திலனிருந்தானென்றுத்
தமிழ்விளைதண்ணஞ்சாரற்றடவரைமுனிசபிப்பக்
கமழ்கடாக்கலுழிதாங்குங்கருங்கவுள்வேழமாகி
உமிழ்கனற்றிகிரிமாயனுலைவில்வீடுற்றானன்றே. ௩௭

இயம்புமிக்காதைகேட்போரெழுதுவோரினியதென்போர்
நயம்பெறப்புலரிக்காலைநவிலுநன்னலத்தோர்யாரும்
உயர்ந்தபொன்னாட்டினேருமுவந்தடிபரவமாயன்
வயந்தருவீட்டினின்றுமருவுற்றுநீடுவாழ்வார். ௩௮

மலையொடுபொருவெண்கோட்டுவாரணங்காத்ததன்றிக்
கொலைபயில்புழைக்கைவேழக்கூர்மருப்பொசித்தகொண்டல்
அலைகெழுபாவைவேலைகடைந்தமுதெடுத்தகாதை
இலைவிரிபசுந்தார்மார்பவிசைக்குமென்றிசைக்கலுற்றான். ௩௯

கசேந்திரவத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் சசு.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௩-வது, கடல்கடைந்தவத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஐந்தாமனுரைவதனுகுமவன்றாமதனுக்கருந்துணைவன்
நந்தாதுலகமளித்தருணலஞ்சேர்விபுவானவர்க்கிறைவன்
பைந்தார்புனைபூதரதன்முதற்பகர்வோரமரரெழுமுனிவர்
முந்தாம்வேதசிருடனெனமொழியுமறையோன்முதலினரால். க

துலங்குதவச்சுப்பிரன்மேவுந்துணைவிவிகுண்டையிடத்துதித்து
நலங்கொள்பெயர்வைகுண்டனெனநண்ணிநளினைவேண்டுதலால்
இலங்குமெழில்வைகுண்டமெனவேத்துநகரமொன்றிழைத்தான்
வலங்கொடிகிரிப்படைவலக்கைமனஞ்சொற்கெட்டாமாயவனே. உ

ஆறுமனுசக்குசனளித்தவடற்சாக்குசனுமக்காலம்
மாறுதுலவுபெரும்புகழ்மந்திரத்துய்மன்னும்வானவர்கோன்
பாறூர்வடிவேலமரரென்போர்பகருமார்ப்பியாதியராம்
வீறூர்தவத்தாரரகவனல்விரிடாதியரேழ்முனிவரரால். ௩

மருவார்கூந்தற்சம்பூதிவயிற்றில்வயிராசுறசெழில்சேர்
உருவாய்மகவாயசிதனெனவுதித்தான்மாயனக்காலம்
துருவாசப்பேரொருதவத்தோன்றுனைவினடந்துசுரர்பதிக்குத்
திருவார்தொடையலொன்றளித்தான்சிரனிற்றரித்தானிலைமன்னே. ச

கண்டமுனிவனிருவிழியுங்கனலும்புலிங்கக்கணங்கால
மண்டுமுயிர்ப்புக்கடைக்காலின்வளரவானோர்குழாமிரிய
கொண்டலசனியுட்கநெடுங்குவடுகுலுங்கக்கதிர்மதியம்
விண்டுசெலவெண்ணகைபுரிந்துவெகுண்டுநோக்கியிதுவிளம்பும். ரு

என்னையென்னைநறுந்துளவமிலையாதிகழ்ந்தாயேழாய்நீ
முன்னைமுளரிப்பூம்பொகுட்டின்மூளத்தோன்மூளைவெண்பிறையிதழி
துன்னுசடையோனும்மூவிர்துய்க்குஞ்செல்வச்செருக்கியாவும்
அன்னைதிருமாமகட்பணிந்தவரும்பேறென்னவறிதியால். சு

முந்தயான்செய்பெருந்தவத்தான்முளரியாளுக்கிசைபயில்வாள்
தந்ததெய்வத்தண்டெரியறனைநீயிகழ்ந்தகாரணத்தால்
இந்தவரம்பில்பெருஞ்செல்வம்யாவுமிழத்தியெனவுரைத்தான்
கந்தமலர்க்கற்பகமுதலகடலிற்றுணைந்துகரந்தனவால். எ

செழுந்தார்ப்பொருட்டுமறைமுனிவன்சீறிச்சவித்தசெயலினுல்
கொழுந்தார்ப்பச்சைப்பசுங்கிள்ளைக்குதலைச்சசிகாதலன்முதலோர்
இழந்தார்செல்வம்வாளமரிலேற்றவவுணர்க்கிகலழிந்தார்
உழந்தாரிடர்போய்மலரவன்பாலுற்றுருற்றதுரைசெய்தார். அ

கேட்டமலரோன்ஞானமொடுகிளராநந்தச்சுடரைமணிச்
சூட்டுப்படவாளரவணையிற்றுயின்றுன்முதலையுண்ணினையின்
காட்டுங்கருணைக்கடலையிவட்கருதிற்றுயர்போம்வழிகாட்டி
வேட்டதளிக்குமெனவணங்கிவிருப்பால்வழுத்தத்தொடங்கினரால். கூ

குணமாய்க்குணியாய்க்குவலயமாய்க்கொழுந்தீம்புனலாய்க்கனலாகித்
தணவாய்வளியாய்வெளியாகித்தன்மாத்திரையாய்ச்சார்பொழியாய்
கணமாய்முக்காலமுமாகிக்கருணைக்கடல்போற்பாற்கடலின்
பணவாளரவினறிதுயில்செய்பரமாவெங்கடகருளுதியால். க0

ஒரேழ்பிறவியுடலுயிராயுலகமனைத்துமோருருவாச்
சீராயுறைவாய்நின்னையல்லாற்செப்புந்தேவேறுன்றுளதோ
தேரார்க்கிருளாய்த்தெளிபவர்க்குச்சித்தாயுறையுஞ்செழுஞ்சுடரே
ஆராவமுதேநங்களுக்கிங்கருளாயென்றன்றேத்தினரால். கக

வேட்டதறிந்துவிரைத்துளவோன்வெளிவந்தமரர்முகநோக்கி
ஆட்டுந்தரங்கப்பாற்கடலிலமுதமெழமந்தரவரையை
நாட்டிக்கடைதற்கவுணரொடுநட்புப்புரிதிரெனப்பணிப்ப
மோட்டுத்திறல்வாளவுணரொடுமுயங்கியமரர்நனிநட்டார். கஉ

நூறாயிரயோசனையுயர்ந்துநூறாயிரயோசனையகன்று
வீறாய்விளங்குமந்தரத்தைமிடலால்வேரினொடுபறித்துப்
பாறாயிரம்வீழ்ந்துணக்குருதிபாயுங்கதிர்வேற்றானவரோ
டூறுப்பிழிவண்டுண்டுறைதாரும்பர்குழுக்கொண்டெழுந்தனரால். கங

எடுக்குங்குடுமிமால்வரைவீழ்ந்திமையோர்குழுவுந்தானவரும்
தொடுக்கும்பசும்பொற்றொடைமார்புந்தோளுநெரிந்துதுஞ்சமுகில்
கடுக்குந்துளவோனவருய்யக்கடைக்கட்கருணைபொழிந்தெய்திக்
கிடக்குங்கிரியோர்விரலேந்திக்கிளர்புள்ளரசூர்ந்தெழுந்தனனால். கச

கிளர்வெண்டிரைப்பாற்கடல்வயிறுகீளப்பசும்பொன்வரைநிறுவி
விளையுமமுதுதருதுமெனவிறல்வாசுகியையிடைப்பிணித்துத்
தெளியும்விசும்பினமரரொடுஞ்செந்தாமரைக்கட்கருங்கொண்டல்
ஒளிருமணிச்சூட்டவ்வரவின்ஞெங்குந்தலைபற்றினனின்றான். கரு

வாழியவுணர்யாமோகொல்வால்பற்றுவதிங்கெனவெகுள
ஆழிமுதல்வனமரர்முகமருளினோக்கிவால்பற்றிப்
பாழியரவின்பணமகுடம்படுவெங்கொலைத்தானவர்பற்ற
ஆழியகடுகிழிந்தலறியார்த்துமறுகக்கடைந்தனரால். கசு

வழிந்தநறைத்தாரணிதிணிதோள்வருந்தவாங்கியானுது
தழைந்தமிடலாற்கடைந்திடலுந்தழலும்பாம்பின்பெரும்பகுவாய்
முழைந்துபொழிவெங்கொடியவிடமூழ்கியுடலமுழுதெரிந்து
விழுந்தாரசுரர்பலரமரர்மெல்லென்முறுவன்முகிழ்விளைப்ப. கஎ

அழியும்பணிவெண்டிரைபுரட்டுமாழிவயிறுகிடங்கெழுந்து
கிழியநெடுமால்வரைதுளங்கிக்கீழ்வீழ்ந்திடலுந்தனிநின்று
சுழலும்பசும்பொற்கிரிமுதுகுசொறிந்தாங்கணிதினிளநறவம்
முழுகுந்துளவோன்மோட்டாமையுருவமெடுத்துத்தாங்கினனால். கஅ

தாங்கும்வரைப்பொற்குடுமிமிசைத்தடக்கையமைத்துநிலைநிறுவத்
தேங்கொள்கமலமலர்க்கைசிலதீவாயரவம்பணிகொள்ள
ஓங்குசுடர்ப்பூந்தொடியுடுத்தவோராயிரந்தோளுடையபிரான்
எங்கும்பரவைக்கடல்கடைந்தவிறும்பூதென்னென்றியம்புதுமால். ககூ

வேறு.

ஆழிவாயலறிப்பொங்கவாழியந்தடக்கையம்மான்
பாழிவாயரவுவாங்கிப்படுவலிகாட்டலோடும்
ஊழிவாய்நெருப்பொடொப்பவுயிரெலாமுடிக்குமென்ன
எழொடேழுலகுமஞ்சவெழுந்ததுகாளகூடம். உ0

எழுதலுமமராஞ்சியிரியல்போயினராற்செந்தீ
விழுதுவிட்டனையகற்றைவேணியன்விமலமாகி
அழிவறுபரமானந்தமாழ்பவன்மலர்த்தாள்வீழ்ந்து
தொழுதனரளித்தியென்னத்துதித்தனர்பலவுமாதோ. உக

மூவுருமுறையிற்றாங்கிமுத்தொழினடாத்துமுக்கட்
டேவனேயுலகமெல்லாந்திருவுருவாகிநின்றாய்
காவெனவணங்கலோடுங்கலங்கன்மினீவிரென்னத்
தாவருங்கொடியநஞ்சந்தானுணக்கருத்துக்கொண்டான். ௨௨

மருக்குழன்மலைமடந்தைவாண்முகநோக்கிநங்காய்
ஒருத்தருக்கொருவர்நன்றியுதவுறினுயிர்க்குளெங்கும்
இருக்குமத்திருமாலுள்ளமினிதுவந்தருளும்விண்ணோர்
வெருக்கொணஞ்சுண்பலென்றுமிசைந்தனன்விரைந்துமன்னோ. ௨௩

விடமும்வந்தீசன்கோலமிடற்றினினீலவண்ண
வடிவுபெற்றணியதாகிவயங்கிற்றுப்பெரிதுமென்றால்
கொடியரும்பெருமையோரைக்கூடின்வெங்கோதுநீங்கி
ஒடிவறுநலம்பெற்றுய்தலுரைப்பதென்னுலகினம்மா. ௨௪

உந்துவெண்டரங்கவேலைக்குற்கடவிடமென்றோதும்
வெந்திறற்கொடியநஞ்சம்விமலனங்கருந்துங்காலைச்
சிந்துசில்விடத்தைவெய்யதேளரவாதியெல்லாம்
தந்திரப்பாவைவேந்தேசார்ந்தனநுகர்ந்தமாதோ. ௨௫

வேற்கடற்றானைவேந்தேமீளவுங்கடையுங்காலை
நூற்கடல்கடந்தமும்மைநூலினர்மகிழும்வண்ணம்
பாற்கடல்பிறந்ததோமப்பயன்றருசுரபிமீட்டும்
சேற்கடற்றிரைநீர்வெள்ளைச்செழும்பரியெழுந்ததன்றே. ௨௬

சும்மைவெண்டிரையின்வந்துதுணைபரியெழுதலோடும்
பெய்ம்மதக்களிறுவெள்ளிப்பிறங்கல்போற்பிறந்தபின்னர்க்
கொய்ம்மலரலங்கன்மாலைக்குருதிவேற்குரிசின்மற்றுன்
கைம்மலர்புரையுஞ்செம்பொற்கற்பகமெழுந்தவாங்கே. ௨௭

துய்யபொற்றருமுன்வந்துதோன்றியபின்னர்ச்சங்கும்
செய்யபங்கயமும்வானிற்செழுங்கலைமுழுதும்பெற்று
மையறுமதியுமென்னவயங்கியமுகத்துவாணோர்
ஐயரிபரந்தமைக்கணரம்பையருதித்தார்பின்னர். ௨௮

செய்யசீறடியுங்கையுந்தெண்ணிலாமுறுவல்வாயும்
ஐயசெந்தளிராவெண்முத்தணிமுலைபசும்பொற்கொத்தா
மையரிநெடுங்கண்டேனுமரைமலருறையுமன்னை
கொய்யிணர்த்தருவின்பொன்னங்கொடியெனத்தோன்றுற்றாளால். ௨௯

இந்திரன்றவிசாங்கீயவிரும்புனனதிகணல்கக்
கந்தமாம்பொருள்களெல்லாங்காசினிமடந்தையுய்க்க
ஐந்தெனும்புனிதவான்பாலாதியவளிப்பவான்சீர்
மந்திரமுனிவோர்பொன்னைவழுத்திநீராட்டினரால். ௩௦

அம்பரமீதுபைங்காரார்த்தலர்மாரிதூற்ற
அம்பரமெழுந்துபொன்னினம்பரமுதவயாழோர்
அம்பரமானவன்றாயருள்செனவமுதிற்பாட
அம்பரம்பொருவேலுண்கணரம்பையர்நடனவின்றார். ௩௧

வருணன்வைசயந்திமாலைவழங்கினனயனும்வந்து
விரிகதிர்படசும்பொனாற்செய்விளங்கிழைபலவுமீந்தான்
அருவிலைமுத்தின்கோவையளித்தனள்வாக்கின்செல்வி
குருமணிச்சுடிகைநாகர்குண்டலங்கொணர்ந்தீந்தாரால். ௩௨

ஈனமிலெவருமிவ்வாறியைந்தனவியந்துநல்க
ஆனபேரணிகட்கெல்லாமணியெனவணிந்துநம்மோய்
தேனமர்நீலமாலைசெழுந்தளிர்க்கரத்தினேந்தி
வானவர்தொழுதுவாழ்த்தவரன்றனைநோக்கினாளால். ௩௩

செப்பியதுருவாசப்பேர்சேர்தவன்முதலாஞ்சில்லோர்
தப்பறுதவத்தின்மிக்காராயினும்வெகுளிசார்வார்
ஒப்பறுசனகனாதியொண்டவாறிவுமுற்றி
மூப்பகையெறிந்தாரேனுமுன்னுவர்பேதஞானம். ௩௪

சாற்றுமார்க்கண்டராதிதவத்தினர்மாயாரேனும்
ஆற்றல்சேர்புலன்களைந்துமடக்கிலாடக்கிமாயா
ஊற்றமோடீசனென்பானுரையினுமுரைக்குமீனம்
மாற்றிடானீமத்தென்றுமருவுவனெனலும்புஞ்சூடி. ௩௫

இன்னணமுலகுளோர்தாமியைந்தனர்குணமென்றாலும்
பின்னுமோர்குணம்பெறாதுகுற்றமேபெறுவதொன்று
மன்னுநற்குணங்கட்கெல்லாம்வைப்பெனமருவிநின்ற
முன்னவன்மாயனல்லான்மொழியின்வேறில்லையென்னா. ௩௬

உளத்திடையிவ்வாறுன்னியுவந்திலனெனையென்றாலும்
களிப்புறும்யானேசென்றுகலப்பனென்றமலையாவும்
அளிப்பவளலங்கல்சூட்டியருமறைமுதலிமார்பின்
துளிப்புயன்மணக்குமின்னிற்றோய்ந்தனடுயக்கற்றாளால். ௩௭

பூரணைபுவனம்பூத்தபூமகள்பொருவிலெம்மான்
தாரணிநிறஞ்செய்மார்வஞ்சார்ந்தபின்கடையவாங்கு
வாருணியென்னுமாதுவந்தனளவளைவானோர்
சீரணிமுகுந்தன்சொல்லாற்சேர்ந்தனர்சேர்ந்தபின்னர். ௩௮

வேட்டிடுமமுதுதன்வந்திரியெனும்விமலனேந்த
மோட்டுவெண்டிங்களென்னமுளைத்ததுமுளைத்தலோடும்
சேட்டிளம்பரிநிமார்பிற்றேறவரோடிகலியேற்று
வாட்டிறலவுணரோடிவளைத்தனர்வவ்வினாரால். ௩௯

## கலிவிருத்தம்.

வவ்வினரெமக்கெனமதித்தனருரைத்தார்
அவ்வுரைசெவிப்படவழன்றுசிலருற்றார்
கவ்வைநெடுவாரிதிகலக்கினரெவர்க்கும்
இவ்வமுதமுண்டுபொதுவென்றனவிசைத்தார். ௪௦

எஞ்சுதலிலாவவுணரின்னணமிசைப்பத்
தஞ்சமெனவந்தருகுசார்ந்தபுலவோரை
அஞ்சுசெயலோவுமினளிக்குமமிழ்தென்ன
மஞ்சனையமாயவன்வருட்டினன்மறைந்தான். ௪௧

செய்யமணிமேகலைசிலம்பொடுசிலம்ப
மையொழுகுவார்குழலின்வண்டிசைமிழற்ற
வெய்யமுலையாரமொடுவெள்வளையெறிப்பப்
பெய்யுமுகில்வண்ணனொருபெண்ணுருவெடுத்தான். ௪௨

வேளைவிறல்கொள்ளுமுலைமெல்லியனகைத்துக்
காளமொடுவேலனையகட்கடையெறிந்து
தாளிணைசிவப்பவணிதானைகுழல்சோர
வாளவுணர்சீற்றமொடுவைகுழிநடந்தாள். ௪௩

முருக்கலர்முருக்கிதழ்முகிழ்க்குநகையாலோ
அரகநெறிமலர்க்குவளையன்னவிழியாலோ
திருப்புருவமென்றொளிர்செழுஞ்சிலையினாலோ
உருத்ததிறல்வாளவுணருள்ளமயர்வுற்றார். ௪௪

பொன்னொழுகுகுன்றனையபூண்முலைசுமந்து
மின்னொழுகுநுண்ணிடைமெலிந்துதடுமாற
அன்னமெனநின்றவளடித்தளிரிறைஞ்சி
இன்னமுதநல்குதியெமக்கெனவளித்தார். ௪௫

உண்ணுமுறைநீயமுதவந்துதவுகென்னத்
தண்ணமுதநல்குதலுஞ்சாற்றுமதியில்லாப்
பெண்ணிவளுரைத்தகுதலென்றுபெரியீர்நீர்
எண்ணும்வகையெங்ஙனமியைந்திடுவதென்றாள். ௪௬

மன்னவுணரன்னவள்வழங்குமொழிகேளா
இன்னமுதுபோலநீயியம்புமொழியெம்மைப்
பன்னுகுருவானவர்பணித்தமொழியன்றே
சொன்னசெயல்செய்குதுமெனத்தொழுதுசொன்னார். ௪௭

என்றலுமிரும்புனல்படிந்தினிதின்யாரும்
நன்றுணவொழிந்துவருநாளையமுதுண்மின்
வென்றிதருவீரெனவிளம்புதலுமன்னோர்
அன்றுணவொழிந்தனரரும்புனல்படிந்தார். ௪௮

வழுத்திமணிவண்ணனை மனங்குழையுமன்பு
பழுத்ததிறல்வானவர்பரிக்தொர்புறமேவி
விழுப்புனல்படிந்தனர்விரித்தனர்தருப்பை
ஒழுக்கினெடும்வாளவுணரோர்தலையிருந்தார். சகூ

ஆரமுதுவானவருந்தியவளித்தாள்
தாரவுணர்கண்டமுதுதாவெனவுரைப்பின்
நீருரைகடத்தனெறியோவெனவெறுக்கும்
நாரியிவள்செய்ந்நயநமக்கமிழ்தமென்றார். ருo

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

இருந்தவாளவுணரெல்லாமேக்கறவெய்தச்சாவா
மருந்தினையமரர்தாமேமகிழ்ந்துணப்பொழிந்துபோக்கிக்
கரந்தமுதுண்டாற்செங்கேழ்க்கதிரொடுதிங்களுேக்க
அரிந்திடவையனந்நாளவுணனுங்கிறந்திலானல். ருக

அங்கரிந்திடவிராகுவாகியவவுணன்சென்னி
துங்கவெவ்விராகுவென்றுஞ்சொல்லுடல்கேதுவென்றும்
தங்கிருபெயர்சேர்கோளாய்ச்சார்ந்திடுகோள்களோடு
திங்களைக்கதிர்வெய்யோனைத்தீண்டுமீருவாவிற்சேரின். ருஉ

விண்ணவரமுதமுண்ணவெகுண்டிழந்தவுணர்நொந்தார்
கண்ணனைநினைந்துளோர்தாங்கருதியபயன்கொண்மாறும்
அண்ணலைநினையாதாசையடைந்தவரரியபோகம்
நண்ணினுமடைந்திடாதுநலிதலுமியற்கையன்றே. ருங

முன்னவனெடுத்துநின்றமோகினியுருவமாற்றி
மன்னுதன்னுருவம்பெற்றுவான்மிசைப்புள்ளிற்போனன்
பின்னரங்கவுணர்சீறப்பேரமர்விளைத்தார்விண்ணோர்
அன்னதுமொழிதுங்கேட்டியரசவென்றறைவானுற்றான். ருச

கடல்கடைந்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் சOO.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௬-வது, தேவாசுரர்போர்செய்தவத்தியாயம்.

---

கலிநிலைத்துறை.

காதற்பெண்ணுருநீங்கிமாலேகுதல்காணுச்
சூதிற்றீங்கிவர்செய்தனரெனச்சுடுசினத்தால்
பேதுற்றங்குறைமாவலிப்பெயரினன்முதலோர்
கோதற்றேதிகழ்விண்ணவர்க்கோறுமென்றெழுந்தார். க

ஆனைமேற்சிலராளியின்மேற்சிலரடலார்
சேனமேற்சிலர்செழுங்கலைமேற்சிலர்தகரோ
டேனமேற்சிலர்திமிங்கிலமெனுமெறுழ்வலிசேர்
மீனமேற்சிலர்வேசரிமேற்சிலர்மேவி. உ

தேரின்மேற்சிலர்செம்பரிமேற்சிலர்கழுகோ
டோரிமேற்சிலரோதிமமேற்சிலருடற்றும்
மூரிமேற்சிலரெண்கின்மாமேற்சிலர்முனிவால்
போரின்மேற்செலும்பொருபுலிமேற்சிலர்பொலிந்து. ஙு

நெரிந்ததண்டமென்றுரைசெயநெடும்பணைதுவைப்ப
விரிந்தபொன்னின்மானத்தின்மேன்மாவலிமேவிப்
பரந்துசுற்றியபண்ணவரொடும்பகட்டெழுந்த
புரந்தரன்முனஞ்செருக்கினன்வெகுண்டமர்பொருதான். ச

தாருகாசுரன்சண்முகனெடும்பொரச்சமைந்தான்
கோரமார்கவிகுபேரனோடமர்செயக்குறித்தான்
காரின்மேலிடிபோல்வருகாலகேயரும்போர்
வீரமேதருவசுக்களும்வெஞ்சமர்விளைத்தார். ரு

வாணனேமுதனூற்றுவர்மாவலிமைந்தர்
சேணுலாவியசெஞ்சுடரொடுசமர்செய்தார்
ஏணுலாந்துவட்டாவொடுசம்பரனெதிர்த்தான்
காணமாமதிமுன்னிராகுவுநனிகடுத்தான். சு

காலநேமிவந்துபேந்திரனோடுபோர்கலந்தான்
ஆலமாமெனவடன்மகிடாசுரனார்த்துச்
சீலமேதருமழற்கிறையொடுசெருச்செய்தான்
வேல்விடாவிரோசனன்விதாதாவொடுவெகுண்டான். எ

மாலிமாலியவான்முதன்மற்றுளபேரும்
காலவேல்கொடுகடவுளரொடுபொரக்கலந்தார்
வேலைவேலையோடேற்றதுபோலவிண்ணவரும்
சூலவேற்படையவுணரும்பொருதனர்தொடர்ந்தே. அ

தலையற்றார்சிலர்தாள்களற்றார்சிலர்தருக்கும்
சிலையற்றார்சிலர்செங்கையற்றார்சிலர்செழும்பொன்
கலையற்றாரரையற்றனர்சிலர்சிலர்கலங்கி
நிலையற்றாரிரிந்தங்ஙனநிகழ்ந்ததார்நினைப்பார். கூ

சீர்திக்கோடிடாதிருத்தியவவுணரிற்சிலரெண்
பேர்திக்கோடிடச்சிலர்பெருஞ்சமரினிற்குருதி
நீர்திக்கோடிடத்தம்முடனிணங்கமுகாதி
ஊர்திக்கீந்தனரவர்கொடையெவர்புகழ்ந்துரைப்பார். கO

எரினால்விளங்கவருடலினிதுமுற்பொறுத்துப்
போரினால்விழவவ்வுடல்வாய்வழிப்புகுத்தி
வீரமோடுமுள்வைத்தனபொறுத்துமிக்கோடும்
ஓரியேமுதலூர்தியினுணர்வையாருரைப்பார். ௧௧

வரைவிறேர்கரிவாசிபுண்ணீர்ச்சுழல்வருதல்
வரைகள்பற்பலவயின்றொறும்வயின்றொறும்வகுத்துக்
கரையிலாதெழுங்குருதிவெங்கடலையுங்கடையக்
கரையுமாங்குப்பற்பலகரிபரிவரல்காட்டும். ௧௨

அழுதுகண்ணினீராக்கைமுன்னொழுகிடத்திசையின்
அழுவமெங்கணுமவுணர்களோடுதலடைந்து
கழுகுங்காகமுங்கூட்டுணங்களத்திடைவீரம்
கழுவிநீக்கியங்கேகுறுங்காட்சியேகாட்டும். ௧௩

கரையிறானவர்மடிதலிற்கரையழிந்தெழுந்த
குருதிமாக்கடலாயதுபாற்கடல்குறிக்கின்
உருவப்பேர்வரையாற்கடைபொழுதகடுடையப்
பெருகிச்செய்யபுண்ணீரெழுபெற்றிபோன்றதுவே. ௧௪

அரியபோரிடையசுரர்தமாருயிர்விடுத்தால்
மருவில்வானவரெனும்பகைப்பெயர்வரும்வலிசேர்ந்
தொருவிடாததம்பெயரொழிந்திடுமெனவுணர்ந்தோ
விரியுநாற்றிசைக்கால்விசைத்தோடினர்விரைந்தே. ௧௫

ஆற்றல்சேரிமையோரொடுவெகுண்டனரடைந்தாங்
கேற்றபோரிடையவுணர்களிகலழிந்திரிதல்
காற்றொடொண்கதிரோடியுங்கண்டிலவதனால்
தோற்றன்மேயினரமரிற்சிலரெனச்சொலலாம். ௧௬

கூற்றுவன்முனங்குறுகியுங்கொலையுணார்சிலபேர்
காற்றினுக்கிறைதொடரவுங்கைப்படார்சிலபேர்
நாற்றிசைக்கணுமோடினரன்றவரடைந்த
ஊற்றமும்முறுவிசையுமுங்கெவரெடுத்துரைப்பார். ௧௭

அன்னகாலையிலவுணர்போரழிந்தமையறியாத்
துன்னுமாவலிபற்பலகணைதுரந்தார்த்தான்
மின்னுலாங்கணைவேறுவேறிந்திரன்விடுத்துக்
கொன்னுலாங்கணையறுத்தலுமவுணனுங்கொதித்தான். ௧௮

அலைகளோடெழுவாரிகாலாலலைத்திடவுந்
தலைகணீளெரிபரந்தெனவிரித்திரைத்தவற்றின்
கலைகளொன்றறவாங்கியர்வளைப்பவுங்கரிசேர்
மலைகள்வீழவுமறைந்திருந்தியற்றினன்மாயை. ௧௯

தேவரன்னவன்செய்தவம்மாயையிற்றேம்பி
பூவில்வைகியபூவைசேர்புனிதனைநினைப்பத்
தாவிலாதபுட்பாகனுமவ்வழிச்சார்ந்தான்
காவிவண்ணனைக்கண்டவர்மாயைகாணகிலரால். ௨0

மாயன்சேவடிமனக்கொளிற்பிறப்பிறப்பென்னும்
மாயைபோய்விடுமாயனைக்கண்டவர்க்கவன்றன்
மாயையால்வருமாவலிமுதலியோர்வளர்த்த
மாயையோவுதற்கையமுண்டோவகுத்துரைப்பின். ௨௧

கொடியவேலினைக்காலநேமிப்பெயர்கொண்டோன்
நெடியனூர்திமேல்விட்டனனெடியனும்பிடித்துக்
கடியவேலினையன்னவன்களத்திடைவிழுந்து
மடியவேவினன்மற்றவன்றென்புலமணந்தான். ௨௨

காலநேமியங்கிறத்தலுங்கண்ணன்முன்கனன்று
மாலிமாலியவானொடுசுமாலிவந்துடன்று
கோலவாழியெம்மான்விடக்கொடியமாலியவான்
சூலமோடிருந்தானுயிரிருவருந்தொலைந்தார். ௨௩

வெய்யமாயைசெய்கூற்றினனீயெனவெகுளாக்
கையின்வச்சிரங்கொண்டவன்வெய்துரைகழற
எய்யும்வெங்கணைமாவலியிவ்வுரையிரும்போர்
செய்யவல்லுநர்தெரிப்பரோசீசியென்றுரைத்தான். ௨௪

கதிர்கொள்வேலினன்கழறுசொல்கேட்டலுங்கடுகித்
துதியின்மேம்படுவசிரந்துனைவினிற்றூண்டி
எதிரின்மேவுமம்மாவலிக்கியைந்தமாவலிநேர்ந்
துதவியாய்வருசம்பனையும்பர்கோனொறுத்தான். ௨௫

சம்பன்மாய்தலுமாவலிமடங்கலிற்சார்ந்து
வெம்புநெஞ்சமோடொருகதையெடுத்தனன்வெகுளா
உம்பர்நாயகனூரும்வெங்களிற்றுடலடித்தான்
கம்பமுற்றதுநிலனிடைவீழ்ந்ததுசலங்கி. ௨௬

களிறுவீழ்தலுமாயிரம்பரியொடுங்கவின
ஒளிசெய்தேவாண்மாதலியுதவுறவூர்ந்த
நளிகொளிந்திரற்காண்டலுநமுசியேமுதலோர்
பிளிறுமையெனவார்த்தனர்பெருங்கதைசொரிந்தார். ௨௭

பாகன்மாதலிதுண்ணெனப்பதைப்புறவடித்தான்
மேகவாம்பரிமெலிவுறவெங்கணைவிடுத்தான்
சோகவார்கணைப்பஞ்சரம்படைகொடுதுணித்துப்
போகிகாரிருள்போகியகதிரினைப்போன்றான். ௨௮

வலனும்பாகனுமடிதரவச்சிரத்தறுத்தாங்
கிலகுமப்படைநமுசிமேலேவினனேவக்
குலவுகந்தரந்தடியுமோர்வலிகொளாதாகப்
புலவர்நாதனும்புதுமையீதெனப்புலம்புற்முன். உ௯

கானத்தோங்கியவரைச்சிறைகடியுமிப்படைதான்
ஈனத்தாயதென்காரணமென்னுமிந்திரன்முன்
வானத்தோருரைநமுசியைமாய்ப்பதுவனத்தார்
பேனத்தாமெனப்பேனம்விட்டவனுடல்பிளந்தான். ௩0

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கடுந்திறற்காலநேமிகாலவேனமுசியாதி
மடங்கல்வெஞ்சீற்றத்துப்பின்மன்னவர்மடிதலோடும்
தடங்கடலுலகம்பூத்ததாமரைத்தவிசின்மேலான்
விடுத்தயாழ்முனிவனெய்திவெஞ்சமம்விலக்கினனுல். ௩௧

வெள்ளிதன்விஞ்சையாலவ்வெஞ்சமர்க்களத்தின்வீந்த
அள்ளிலையலங்கலொள்வேலவுணருமாவிபெற்ருர்
புள்ளரசுயர்த்தபெம்மான்பூங்கழலெருழுதவிண்ணேர்
கள்ளவிழ்தருவினீழல்கதுவினர்களிமிக்காரால். ௩௨

தேவர்களமுதுபெற்றுத்தெறுசினநிருதர்தம்மை
ஆவலினமரிற்செற்றதறைந்தனமனைத்தும்வல்லோன்
பாவையாம்படிவநக்கன்பரிவொடுபார்த்தகாதை
காவலவுரைக்குமென்னக்கழறுவான்முனிவன்மாதோ. ௩௩

தேவாசுரர்போர்செய்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க௩௩.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## க-வது, மோகினியுருக்காட்டியவத்தியாயம்

---

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

மொய்கடந்தொளிரும்வாட்கைமுரண்வலியவுணர்மாழ்கப்
பெய்கடல்கடைந்தநம்பிபெண்ணுருவெடுத்தல்காண்பான்
மைகனிந்தொழுகுகண்டன்மருங்குறைமங்கையோடு
செய்கனிந்தொழுகும்வெவ்வாய்நேமியானிருக்கைசேர்ந்தான். ,

மாய்வில்வைகுந்தமேவிமதியணிசடையோனெந்தாய்
தாயவொரொன்றேயென்னத்தொழுமவரிரண்டேயென்ன
ஆயினையுலகமாதியமர்ந்தனையணுகிப்போகம்
நீயலாதிதுவென்றென்னநினைக்கினேன்றில்லையென்முன். உ

விண்ணவர்பரவைவேலைவிளைந்ததெள்ளமுதமெல்லாம்
உண்ணவாளவுணர்காமமுழந்தனருயங்கத்தாங்கும்
பெண்ணுருக்காணவேண்டிப்பெரிதுளம்பெட்டதின்னே
கண்ணவென்றுரைத்தான்வெய்யகனலுமிழ்கணிச்சியானே. ௩

குன்றவிற்குழைத்தநக்கன்கூறியமாற்றங்கேளா
நன்றெனப்பவளச்செவ்வாய்நகைநிலாத்தவழநக்குத்
துன்றினர்விழைந்துநல்குந்தொல்புருடோத்தமன்றான்
மன்றலங்கடுக்கையான்கண்மறைந்தனனாங்கண்மன்னோ. ௪

விழுந்தொருகோடிவண்டுமிதிப்பவாய்நெகிழ்ந்துபைந்தேன்
வழிந்தபூங்கடுக்கைமார்பன்வாள்விழிபரப்பினோக்க
எழுஞ்சுடர்ப்பரிதியென்னவிலங்குகூராழிமாலோன்
பிழிந்துகொள்வனையசெவ்விப்பெண்ணுருவெடுத்துநின்றான். ௫

கலிநிலைத்துறை.

அன்னபெண்கொடியள்ளிலைப்பூண்சுமந்தொசியும்
பொன்னங்கொம்பெனப்பொழிமழைக்கரும்புயல்கிழித்து
மின்னுமின்னெனவிரிசிறைச்சுரும்பினமிழற்றி
மன்னுகாவிலோர்மாதவிப்பந்தரிற்றோன்றி. ௬

அயிலும்வாளுமிட்டளாயினவனையகட்பேதை
குயிலும்பூவையுங்குழைவுறக்குதலையந்தீஞ்சொல்
பயிலுமஞ்சிறைப்பச்சிளங்கிள்ளைபின்படர
இயலுமென்மெலவிளமயிலியற்குடைந்திரிய. ௭

மழையைநோக்கியமடமயிற்சாயலாண்மதர்த்த
விழியைநோக்குமவ்விடத்தினைநோக்கும்வெங்காமம்
தழையுநோக்கினைநோக்குமுட்டளருந்தன்செங்கை
உழையைநோக்கும்பிஞ்ஞகன்மயல்யாதெனவுரைக்கேன். ௮

பெய்யுந்தண்கதிர்வளையெனப்பெருங்கடல்கடைந்து
மையில்வானவர்க்கேந்துதெள்ளமுதெனமலரும்
செய்யதாமரைமலருறையனமெனத்திகழ
பையநித்திலப்பந்துகைப்பரித்துநின்றாடும். ௯

முகிழ்ந்தவெம்முலைமுத்தணிதிருத்தியும்வீழ்ந்து
மகிழ்ந்துவண்டொடுமாலைதாழ்கருங்குழல்வனைந்தும்
நெகிழ்ந்தபூந்துகிறிருத்தியுநிலவுபொற்கொடியின்
திகழ்ந்துபந்தெறிந்தாடுமச்செவ்வியார்தெரிப்பார். ௧0

எறிந்தபந்துசேய்த்தகறலுமெறிந்தவேலென்ன
மறிந்தசேலெனமானெனமதர்விழிபிறழ
நெறிந்தபூங்குழனிலவுதூந்தூர்ச்சிறையனம்போல்
செறிந்தசில்லரிமணிச்சிலம்பொலியெழச்செல்லும். ௧௧

அழல்கட்பாய்புலியதளுடைநெகிழ்தரவலர்தீ
விழுதுவிட்டெனமிளிர்சடைவெரிநிடைவிரிய
ஒழுகுதீங்கதிர்வெண்மதியினமுதுறைப்பச்
சுழலும்வண்டிமிர்கொன்றையந்தொங்கலான்றொடரும். ௧௨

நுணுகுநுண்ணிடையலம்வரநூபுரஞ்சிலம்பத்
துணிநிலாக்கதிர்தூற்றுபொன்மேகலையிரங்கப்
பணியணிந்தவன்கையகப்படும்படுமென்ன
அணுகும்பைப்பயவைகுமெல்லடிசிவப்பூர. ௧௩

அன்னகாலையிலசைநடைக்காறவழ்ந்திசைப்ப
மின்னுதண்கதிர்நித்திலமணிவிளிம்படுத்த
பொன்னஞ்சேலமும்புனைமணிக்காஞ்சியநெகிழ
மன்னுநாணொடுமன்றலஞ்சினைதொறுமறையும். ௧௪

பிறையும்வில்லுமொத்திலகியதிருநுதற்பேதை
அறையும்வண்டிமிரணிமலர்த்தடஞ்சினைதோறும்
மறையுமாற்றருமாதர்மீதூரமுக்கண்ணன்
இறையுநாணிலன்பின்செலுயிருங்களிறேய்ப்ப. ௧௫

நெறித்துநெய்கனிகுழலுமைநகுவதுகிணையான்
பொறுத்தகங்கையாள்புன்னகைகோட்டலுங்கருதான்
அறற்கருங்குழல்பற்றினனங்கையாற்றழுவ
எறிக்குஞ்சேயிழைமின்னெனக்கைப்படாதிலகும். ௧௬

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

ஞானநல்விளக்கமென்னநவையறுநல்லோர்நெஞ்சின்
பானகுமுளரியூறுபசுநறுந்தேறலென்ன
ஆனதொன்முதருய்தந்தையாமவனுருவீதென்றன்
கானலைப்புனலென்றேடுங்கலையெனமயர்ந்துசெல்வான். ௧௭

பார்த்தனன்வேனில்வேந்தன்பழம்பகைதீரமற்றுங்
கார்த்தனன்சிலைகால்கோட்டியயின்முகப்பகழிமாரி
தூர்த்தனனிளவெண்டிங்கள்சூடுசெஞ்சடையினானும்
போர்த்தனியேறுபோலப்புலனழிந்தொழுகுகின்றான். ௧௮

மின்புரிந்தனையகற்றைவிரிசடைமகுடத்தண்ணல்
என்புரிந்தனமென்றுட்கியெருத்திறைஞ்சினனின்றானல்
பொன்புரியாரமார்பன்புரிவளையோடுவெய்ய
கொன்புரியாழியேந்திக்கொண்டலிற்றிகழநின்றான். ௧௯

படுகழைவெடித்தமுத்தம்பளிக்கறைதழுவித்திங்கட்
புடைபரந்திமைக்குமீனிற்பொலிவுறுகயிலைசேர்ந்து
மடலவிழ்துளவப்பெம்மான்மாயையார்கடப்பரென்னுக்
கடல்விடனுகர்ந்தோன்வெற்புக்காரிகைக்குரைசெய்தானல். ௨௦

குடுமிவான்றோயநின்றகொழுஞ்சுடர்வெள்ளிக்குன்ற
நடைநவின்றென்னத்தோன்றுநரைவிடைப்பாகனென்றும்
மடவரல்பாகனென்றுமாமறைபுகழநின்றோன்
விடுபுலன்மண்ணில்வீழ்ந்துவெறுக்கையாய்விளைந்ததன்றே. உக

கலிவிருத்தம்.

கொன்றைசூடுங்குழகனுமிவ்வகை
ஒன்றுகாமமுழந்தனனென்னின்யார்
வென்றிவேல்விழியார்மயல்வெல்பவர்
என்றுவேந்துக்கிருந்தவனோதினன். உஉ

மோகினியுருக்காட்டியவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கஙரு.

ஸ்ரீகிருஷ்ண சகாயம்.

---

## சுஉ-வது, வைவச்சுதனுதியரையுரைத்தவத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

அற்றமில்புகழாதிமனுமுதல்
உற்றவாறுமனுவையுரைத்தனம்
மற்றையெண்மனுப்பேரும்வழங்குவாம்
வெற்றிமன்னவவென்னவிளம்புவான். க

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

எழுநில்ம்புகழேழாமனுவென்பானிலங்கியவிவச்சுவானீன்ற
தழைவுறுபெயர்வைவச்சுதனுகுஞ்சாற்றுமிக்காலத்துமனுவாய்
மொழிதருமன்னோனிக்குவாகுவையேமுதலியபதின்மரையுயிர்த்தான் [ன்
பொழிகதிர்வெள்வேற்புரந்தானென்பான்பொன்னிலம் புரந்திருக்கின்று

கலைபயில்சமதக்கினிகவுதமன்சீர்க்காசிபன்கோசிகன்வசிட்டன்
பலர்புகழ்பாரத்துவாசனென்றுரைக்கும்பண்ணவனத்திரிபகர்வோர்
இலகுமேழ்முனிவராயிருக்கின்றாரிறையவன்வாமனனாகி
அலகறுபுகழ்சேர்மாவலிபாற்போயவனிமூவடியிரந்தனனால். உ

திரைப்புவியேழுமொருதனித்திகிரிசெலப்புரிமணிமுடியரச
அருத்திசெய்வைவச்சுதமனுவென்பானரசுசெய்கின்றவிக்காலம்
உருத்திரர்வசுக்களதிதியென்றுரைப்பாளுயிர்த்தவாதித்தியரொளிசெய்
மருத்துவர்பரிப்பேர்த்தேவரென்றுரைப்போர்வானவராகிமன்னுவரால்.

இசைத்திடும்விவச்சுவாவெனும்பெயரோனெழிறிசழ்சாயையைமணந்து
வசைக்குழுவகற்றவளித்தசாவன்னிவழங்குமெட்டாமனுவாவான்
திசைத்தலம்புகழுமாவலியென்பான்செப்புமிந்திரனெனச்சேர்வான்
மிசைப்புகழ்ச்சுதபாதியரெனவுறைவோர்விண்ணவராகிவீற்றிருப்பார். ரு

அரசவென்ருதையாகியவியாதனச்சுவத்தாமனற்கிருபன்
உரைமழுவிராமன்முதலினருறைவாரோரெழுமுனிவராயந்நாள்
மருவியதிருமால்வானுலகாளமாவலிக்கரசியல்வழங்கித்
தரைமுதலுலகமுவந்தினிதளிப்பான்சாருவபூமனென்றுதித்தே. சு

சாற்றுமொன்பானுமனுவெனச்சார்வான்றக்கசாவன்னியஞ்ஞான்று
போற்றுமிந்திரனற்புதனெனப்புகல்வார்புலவர்சர்க்கராதியராவார்
சீற்றமிறுதிமான்முதலினர்முனிவர்திகழம்புதரைவயிற்றுதித்தங்
காற்றல்சேரிடபனெனும்பெயரினனுயாழியான்பகைகடிந்தளிப்பான். எ

பெருகுசீர்ப்பத்தா மனுவெனும்பெயரோன் பிரமசாவன்னியென்றுரைப்பான், தரியலர்புகழுஞ் சம்புவென்பவன்ருன் சாற்றுமிந்திரனெனச்சார்வான், மருவிபுத்திரனே முதலினரமரர் வருசயன்மூர்த்தியே முதலோர், அருமறைமுனிவர் விடவச்சேனன்ன யமலனிவ்வுலகினுக் கருள்வான். அ

வயங்கியபதினென்ருமனுவாவான்வளர்புகழ்த்தருமசாவன்னி
தயங்கியவிகங்காமுதலினரமரர்சாரருணுதியர்முனிவர்
பயன்றருமமரர்க்கிந்திரனுவான்பகருமவைதிருதன்யாவருக்கும்
ஙயந்தருதருமசேதுவாயுதித்துநளினநாயகனுலகளிப்பான். கூ

பகருருத்திரசாவன்னியென்றுரைப்பான்பன்னிரண்டாமனுவாவான்
திகழ்தருமிருதுதாமனும்பெயரான்றேவர்கோனரிதனேமுதலோர்
அகமகிழமரராவரேழ்முனிவாருந்தவமூர்த்தியேமுதலோர்
துகளறுதிருமால்சுதாமனென்றுதித்துத்தொல்லுலகருள்சுரந்தளிக்கும்.

செப்பியபதின்மூன்ருமனுவாவான்றேவசாவன்னியாமரசன்
எப்புவியோரும்புகழ்திவப்பதிதானிந்திரனுகும்விண்ணவராய்த்
துப்புறுசுகன்மன்முதலினருறைவார்சுதபனுதியர்முனிவராம்
ஒப்பறுயோகவிபுவெனமாயனுதித்துலகளிக்குவன்மாதோ. கக

எண்ணுறுபதினன்காமனுவாவானிந்திரசாவன்னியென்பான்
விண்ணவராவார்பவித்திராதியர்தாம்விளங்கியசுசிபுரந்தரனும் [ர்
தண்ணறுந்தொடைசேரக்கினிமுதலோர்சாற்றுமேழ்முனிவராய்ச்சார்வா
பண்ணவர்பராவுந்துழாயணிபரமன்பானுவாயுதித்துலகளிப்பான். கஉ

ஆயிரஞ்சதுருயுகத்தினின்மனுக்களடைகுவர்முறைமுறையடைந்து
மேயவீரேழுமனுக்களுமடங்கின்விரிஞ்சனுக்கொருபகலிறத்தல்
ஙேயமார்பகலினளவையாயவற்குநிசியும்வந்துற்றுநீங்கியபின்
மாயனுருளான்மற்றையநாளுமறையவனின்னணம்வகுக்கும். கங

தன்னுழையுதித்த மாயையுமருவிச் சாற்றியபெயரொடு முருவம், பன்னுபற்பலவாய் முக்குணத்தோடும் பயின்றனன் போன்றிருந்தாலும், துன்னியவிருள்சே ரலங்கல்வெவ்வரவாய்த் தோன்றியோர் சுடருறத்தானே, மன்னுதல்போன்மா யவன்மனங்கடந்து வயங்குவன்மதிக்கினென்றுரைத்தான். கசு

வைவச்சுதனுதியரையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கசுக.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## எ-வது, வாமனுவதாரமுரைத்தவத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

என்னலுங்கேட்டவெள்வேலிறையவனுழிமாயன்
மன்னுமூவடிமண்கொள்வான்வாமனவுருவங்கொண்டு
துன்னினனவுணன்றன்பாலென்றனைசுருக்கிமுன்னர்
அன்னதுதெரித்தியென்னவருந்தவன்வழங்கலுற்றான். க

மல்லலைத்தோங்குதிண்டோன்மாவலியுலகமெல்லாம்
வெல்லுதற்காகவேள்விவெள்ளியாலினிதினாற்றி
நல்லெழிற்றேரும்வில்லுநலஞ்செயுங்கணையும்பெற்றுப்
பல்லியமொலிப்பவேதபாரகராசிகூற. உ

பொருவரும்பிரகலாதன்பொன்னடிதலையிற்சூடி
விரிகதிர்மகுடம்வேய்ந்துவிளங்கணிபலவும்பூண்டு
நிரைமணித்தேரினேறிநிகரில்வெந்தானைசூழ
மருவலர்தருவார்தேவர்வான்பதிவளைந்தானன்றே. ங

எண்ணருமவுணரெய்தியிரும்பதிவளைத்தல்சாணு
விண்ணவர்வெருவிவானவேந்தொடுங்குருவின்முன்னை
நண்ணினர்தோற்றவெய்யோர்நற்பதிவளைத்ததென்கொல்
அண்ணலங்குரவவென்றாரவனுமாங்கறைதலுற்றான். ச

தோற்றபினமரினேடுந்துயரறக்குரவன்வேள்வி
போற்றினன்கேடில்பொன்னங்கவயமும்பொலங்கொடேரும்
மாற்றருஞ்சமத்தின்மிக்கவாளியும்வளைவெவ்வில்லும்
ஆற்றலுமடைந்துபோர்க்கூங்கடைந்தனனவுணர்கோமான். ரு

குருவருளடைந்தோர்வெற்றிகொள்ளுதலுண்மையன்றோ
மருளுறுநும்மையன்றிமருவியகுரவற்போற்றா
திருளுறுதுயரவாரியெய்துவோரொருவருண்டோ
பொருவலியுமக்கிங்கில்லைபோய்க்கரந்துறைதல்வேண்டும். சு

சில்பகல்கரந்துவைகிற்செருச்செய்மாவலியைவென்று
பல்வளந்திகழுநந்தம்பதியளித்தாழியம்மான்
நல்குரவொழிப்பனென்னநவிற்றலுமவுணர்காணின்
கொல்வரென்றுருவம்வேறுகொண்டனரொளிந்தார்விண்ணோர். எ

தேவர்கள்வீற்றுவீற்றுய்ச்சென்றொளித்துறைதலோடும்
மாவலியுலகமூன்றுமதிக்குடைநிழற்றியாளும்
காவலனுகிமிக்ககடவுள்வாம்புரவிவேள்வி
தாவிலாவொருநூறாற்றித்தயங்கினன்புகழின்மாதோ. அ

நந்தலில்லாதமைந்தர்நலமிழந்தனராலென்னச்
சிந்தைநொந்ததியென்பாடிசைத்தனள்சேர்ந்தலில்லில்
நிந்தையிலறிவின்மிக்ககாசிபன்றவத்தைநீங்கி
வந்தனன்பணிசெய்கின்றமனைவியைநோக்கிச்சொல்லும். கூ

மனைவிநீவாட்டமுற்றுவைகினைபோலுமென்கொல்
முனிவர்நின்னில்லின்வந்துமுனிந்தனர்போயதுண்டோ
நனிபிணியுடலின்வந்துநண்ணியதுண்டோநீங்குன்
தநயருக்குற்றதுண்டோசாற்றெனவவளுஞ்சாற்றும். கO

மாதவநினதுகாதன்மனையவளாயினேற்குத்
தீதுவந்துறுவதில்லையாயினுஞ்சிறுவரெல்லாம்
சூதுறுபகைவராலேதொல்பதியிழந்தாரன்னோர்
கோதுறுமிடரினீங்கிக்குலவவீங்கருள்செய்கென்றாள். கக

என்றதுகேட்டலோடுமிருந்தவனிலங்குமட்டார்
மன்றலங்கமலமேவுமார்பினன்வழிபாடாற்றின்
உன்றுயர்தீருமென்னவுரைத்தனன்வழிபாடாற்றல்
நன்றுரையிவ்வாறென்னவென்னவுநவிலலுற்றான். கஉ

கலிவிருத்தம்.

வழுவிலாதமகப்பெறமுன்னெனக்
கழுவிலாதலந்தணனேதிய
பழுதிலாதபயோவிரதத்தினை
மொழியுமாறுமுயல்வுறக்கேட்டியால். க௩

மீனமானமதியினில்வெண்மதி
வானமீதுவளர்தருபக்கமுன்
ஆனசீர்செய்திதியிலரும்பொன்னல்
ஏனமாயனுருவமியற்றியே. க௪

பன்னிரண்டுதிதியும்பழுதற
உன்னுமெண்ணிரண்டாமுபசாரமோ
டன்னநல்லருண்மாயனடிதொழின்
மன்னுகின்றமனத்திடர்மாய்தியால். க௫

பாலருந்திப்பகர்ந்ததிதொறும்
மாலிரும்பதம்வாழ்த்திமகிழ்ந்தபின்
சீலநன்குருவெய்தத்திருநிதி
ஞாலமெங்கும்வியப்புறநல்கியே. கசு

அஞ்சுவையிருமூன்றொடுமோமமு
தெஞ்சலின்மறையோர்களியைந்துண
வஞ்சியங்குதவென்னமதிநுதல்
நெஞ்சுவந்துநிகழ்த்துமுறைசெய்தாள். கஎ

விதியினற்றவனோதும்விரதமவ்
விதிமுற்றுமங்காற்றலுமச்சுதன்
மதியினிற்சுடரும்வதனத்தொடும்
துதியினுற்றவளுக்குமுன்றோன்றினான். கஅ

கொண்டலன்னகொழுந்திருக்கோலமுன்
கண்டுகண்டுகளிக்குமனத்தினள்
பண்டகும்மொழியாற் பலவாழ்த்தினள்
மண்டுகின்றமனத்திடர்கூறியே. ககூ

ஓதுவாசகங்கேட்டலுமுன்னுழைக்
காதலாலுதிப்பேனோர்கலையினால்
கோதுநீங்குவைநீயெனக்கூறியம்
மாதுவாழ்த்தமறைந்தனன்மாயனே. உ0

அலையின்மேற்றுயிலண்ணலவ்வண்ணமே
மலையின்மேம்படுகாசிபன்புல்லிய
சிலையினேர்நுதற்சேயிழைசெவ்வியால்
இலையினேர்வயிற்றெய்தினனென்பவே. உக

கன்னியென்னுமதியிற்கலைமதி
மன்னிநின்றுவளர்தருபக்கமென்
றன்னுகின்றவோணத்தொடுஞ்சேர்திதி
பன்னிரண்டினடுப்பகறோற்றியே. உஉ

துதிசெய்செம்பொற்றொடியுமகுடமும்
அதிர்சிலம்பொடுமோடகத்தாடையும்
கதிரிளங்குழையுங்கரநான்குமாய்
விதிவணங்கவிமலன்விளங்கினான். உரு

வேறு.

தேமலர்தூவினர்தேவர்வணங்கித்
தாமரையாளுறையுந்தடமார்பன்
காமுறுமாணுருவங்கரந்தாங்கு
வாமனமாகிவயங்கினன்மாதோ. உச

வந்துபெரும்புகழ்மாமறைநான்முன்
தந்துவிளங்கியதற்பரனுக்குச்
சுந்தரமுப்புரிநூல்சுரர்போற்றும்
அந்தணனெய்தியளித்தனனன்றே. ௨௫

விருப்பைவெறுப்பொடுவிட்டவருக்குக்
கருப்பையகற்றுறுகாரணனுக்குத்
தருப்பைகொடுத்தனர்சாற்றுதவப்பேர்ப்
பொருப்பைவளர்த்திடுபுங்கவர்மாதோ. ௨௬

தன்னையளித்ததனிப்பொருளுக்குக்
கன்னல்களித்துறைகஞ்சனளித்தான்
பொன்னினிழைத்தொளிர்போர்வையிஞேனுக்
கன்னையளித்தனள்கோவணமாதோ. ௨௭

போனகமாகியபூமகளீந்தாள்
கானுறையுங்கலையின்னதள்கையால்
ஈனமிலாவவையேந்துபவற்கு
வானம்வழங்கினவண்குடைமாதோ. ௨௮

அந்தமிலாதவருங்கதையோற்குச்
சந்திரனுற்றொருதண்டமளித்தான்
சுந்தரமேய்கலைசூழரைமீது
வந்துறைதாதைமவுஞ்சிவனைந்தான். ௨௯

மையின்மறைப்பொருண்மந்திரம்வந்து
வெய்யவனவ்வழிமெல்லவுரைத்தான்
கையினிதிக்கிறைபொற்கலநல்க
ஐயமளித்தனளம்பிகையன்றே. ௩௦

இன்னணம்யாருமியைந்தனநல்கி
உன்னுபிறப்பையொழிப்பவனுக்குத்
துன்னுபிறப்பதுசொல்லிரண்டென்ன
மன்னியகன்மமகிழ்ந்துபுரிந்தார். ௩௧

மைதபுஞானமனத்திடையொன்றும்
கைதவமாய்மெய்கலந்தவனுக்குச்
செய்தவமாவலிசெய்பரிவேள்விக்
கெய்தவுளத்தினிலெண்ணியெழுந்தான். ௩௨

நாற்றிசையும்மகிழ்கூரநடந்தோன்
எற்றவளந்திகழெவ்வுலகோரும்
போற்றியநருமதைப்பூங்கரையின்கண்
சாற்றுமகம்புரிசாலையடைந்தான். ௩௩

சிற்றடிமாவலிசென்னிபுனைந்தே
அற்றமிலாதவருந்தவமெய்தப்
பெற்றனனென்றுபெருந்தவன்முன்யான்
உற்றதையாவருரைக்குநரம்மா. ௩௪

உன்னியவூர்பொருளுற்றிடவேயோ
மன்னியகன்னிமணஞ்செய்பொருட்டோ
அன்னமருந்திடவோவடைவுற்ற
தென்னதுநீசொலினீகுவலென்றான். ௩௫

பூங்கதிர்மேனிபொலிந்திடல்காணா
ஆங்குறைவோரெழுந்தற்புதமெய்தி
ஈங்குறையீங்குறையென்னவிருந்தான்
தீங்கறமாவலிசெய்ம்முறைசெய்தான். ௩௬

மாவலிதாழ்ந்தனன்மாமறைபாடு
நாவலவேட்டதெனல்குவனென்ன
மூவடிமண்பெறமுன்னினனாகிக்
காவிசிறக்கவுமாரனிசைப்பான். ௩௭

வேறு.

முறைப்படுத்துமுதுமறைவேள்விசெய்
விறற்பெருந்தவவெள்ளியருளினால்
குறிப்பறிந்துகொடுக்குங்கொடையொடும்
பிறப்பதுங்குலத்தோர்குணப்பெற்றியே. ௩௮

காரின்மேனிக்கடவுள்பயன்கொளத்
தீரனாகுமிரணியன்சேய்க்கொரு
பேரனாகிப்பிறந்தனையுன்வலி
பாரின்யாவர்பகரவல்லாரம்மா. ௩௯

நரகரிப்படிநண்ணிநலம்புரி
சுருதிநாயகன்றூண்வரப்போற்றிய
பிரகலாதன்குலனிற்பிறந்தநின்
விரகையாவர்விளம்பவல்லாரரோ. ௪0

நடலைவானவர்நான்மறையாளர்தம்
உடல்கொடுத்துயிரேற்பவுதவுசீர்
மிடல்பொருந்துவிரோசனன்மைந்தநின்
கொடையையாவர்குறித்துரைப்பார்களே. ௪௧

திருவுஞ்சீருந்திறலுமியைந்தநுன்
பெருமையாரிவட்பேசவல்லாரென
உரைசெய்மாதவனோதுமெங்காலினால்
மருவுமூன்றடிமண்டருவாயென்றான். ௪௨

தண்டலைப்பெருந்தண்ணடையும்மன்றால்
தெண்டிரைச்செழுந்தீவுமன்றானறு
முண்டகத்தொடைமார்பவோர்மூவடி
மண்டருகெனன்மற்றிவணென்னென்றான். ௪௩

பேசக்கேட்டவப்பிள்ளையுஞ்சொல்லுமால்
தேசம்பெற்றிடிற்றீவினையுள்ளுமால்
நேசத்தீவையுற்றாலுகிலேகிலா
தாசைநோய்க்குமோரற்றமுண்டாகுமோ. ௪௪

பெற்றதாலுவப்பெய்திப்பெருமையோர்
குற்றநீங்கிக்குலவுவர்முத்தியில்
உற்றதன்றியுறாதவையுள்ளுவோர்
சுற்றமோடுங்கெடுதலுஞ்சூழ்கலை. ௪௫

உடற்குள்வந்தெழுமொள்ளழல்போன்றுபின்
கிடைத்திலாப்பொருண்மேற்கிளர்ந்தோடியே
நடக்குமாசையைநண்ணுமுவப்பினால்
அடக்குமந்தணரேயறிவாளரால். ௪௬

என்றுகூறலுமிங்ஙன்வினாயது
நன்றுநல்குவனானெனமாவலி
ஒன்றுமெல்லையிலோர்குருவாகியே
வென்றியாற்குநல்வெள்ளிவிளம்புவான். ௪௭

தேசுபெற்றதிருப்புணர்மார்பினான்
காசிபற்குறுங்காதலனாகியிங்
காசையுற்றமூன்றாமுலகங்கொளா
வாசவற்களிப்பானிவண்வந்தனன். ௪௮

ஆமொர்மூவடிமண்ணளிப்பேனென்றாய்
பூமியோரடிபூமியின்மேலெலாம்
வாமவோரடியாகவளர்குவன்
நாமவோரடியெங்ஙனநல்குவை. ௪௯

கொடுக்கினீதுகொடையன்றுகுற்றமோ
டடுத்துளோரையுஞ்சுற்றமென்பாரையும்
கெடுத்துநீயுங்கெடுநரகெய்துவை
விடுக்கவேண்டுமிக்குற்றவிழைவையே. ௫௦

மாறில்சுற்றமனையுறைதானுளம்
தேறுதேவரத்தென்புலத்தோரொடும்
ஆறுசேரதிதிக்கும்பொருளைந்து
கூறுசெய்துகொடுத்திடவேண்டுமால். ௫௧

வஞ்சமுற்றுமருவினர்தம்மொடு
நெஞ்சமுற்றுநிகழ்த்துமெய்ந்நீக்கலும்
தஞ்சமற்றுத்தனதுயிரீறுறின்
அஞ்சிமாற்றுபொய்யும்மழகாகுமே. ருஉ

ஊடுமாதர்க்குரைதருபொய்ம்மையும்
பாடுமாமறையோர்பசுப்பல்பொருட்
காடலோடுறுமற்றமகற்றுழி
நாடுபொய்ம்மையுநன்மையின்பாலவால். ருங

ஐயமேற்றுணுமாச்சிரமத்தினோர்
செயிரில்செய்கைதிறம்பிச்செழும்பொருள்
கையினேற்பவுள்காதலித்தார்களேல்
பொய்யின்மாற்றிடினும்புரையில்லையே. ருச

அள்ளிலைத்தருவஞ்சவளிக்குங்கை
வள்ளலேயொருமாமறையோனென
உள்ளலோங்குலகுண்டவனென்றுமுன்
வெள்ளிகூறவவ்வேந்தனுங்கூறுவான். ருரு

தருவமென்றுமுன்சாற்றிமறுத்தவர்
நரகஞ்சேர்ந்துநலிகுவரென்றுமூ
துரைசெய்தாயடியேனுளந்தேறவிவ்
வரியநல்லறமன்றறைந்தாயிலை. ருசா

துகளிற்சேர்ந்தநரகொடுதுன்னலர்
பகழிக்கும்பயமில்லைபழித்திடும்
புகழிற்கும்மறையோர்கள்புகன்றிடும்
வெகுளிக்கும்வெருண்டோடுமென்னுள்ளமே. ருஎ

நல்லைநின்னிகர்நான்மறையாளர்தாம்
செல்லவென்றசெழுங்கொடையோய்பொருள்
வல்லைநல்குதியென்னின்மறுகநெஞ்
சில்லையென்பதையெங்ஙனமுள்ளுமால். ருஅ

வருந்தியுற்றவறுமையினுன்மனம்
பொருந்துநான்மறைப்புங்கவரின்புறத்
திருந்துமோர்பொருளீதலிற்றீநர
கிருந்தையெய்துமென்றுலுநன்றீதலே. ருகூ

மன்றலந்துளவோன்மறையோனென
இன்றுமண்கவர்வானியைந்தானெனின்
நன்றுவேறுமுண்டோவெனநான்மறை
வென்றிசேர்தருவெள்ளிசபித்தனன். சா0

குரவன்கூற்றைமறுத்துக்கொடுப்பதெம்
மாபென்றேதியமன்னவுறுமையால்
பெருகுதுன்பம்பெருகுதியென்னவும்
உரைசெய்கின்றது தவவுவந்தனன். ௬௧

விந்தியாவலியென்றுவிளம்புபேர்
வந்தவோர்மனையாள்புனல்வார்த்திடச்
சந்தநாண்மலர்தாளினிற்பெய்துபின்
கந்தமாமலர்க்கையினும்பெய்தனன். ௬௨

வந்தவாமனன்கையின்மகிழ்ந்துநீர்
அந்தமாவலியன்பினளித்தலும்
இந்திராதியரேத்தினர்தேன்மலர்
சிந்தினாடித்தார்செழும்பேரியே. ௬௩

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நீர்விரிகமலச்செங்கைநீர்செலநிவந்தமாயோன்
பேரொளியுருவமெம்மாற்பேசலாந்தகைமைத்தொன்றே
பாரெலாம்பொதிந்ததோர்தாள்பனிமலர்த்தாளொன்றோங்கிக்
கார்கிழித்தொல்லையண்டகடாகமூடுருவிற்றம்மா. ௬௪

உரைத்தகீழுலகமேழுமுள்ளடியாகவிப்பார்
திருத்தகுசிறப்புவாய்ந்துதிகழரைப்புறமதாக
மருத்தழைவதனமங்கிமனமதிமயிர்காராக
விரித்தசெங்கதிர்கண்ணாகவிராட்டெனவிளங்கினானால். ௬௫

பண்டருமொழியாள்பங்கன்பழமறைவிரிஞ்சியாதி
எண்டகுமைம்புலப்பேருருவமற்றினையவெல்லாம்
கண்டனனசுரர்வேந்தன்கடையிலானானந்தம்
கொண்டவானுருவப்பெம்மான்கொளுமுருவுறுப்பினம்மா. ௬௬

அலர்கதிர்ப்பசும்பொன்னாட்டிலமாருய்ந்தனரென்றெங்கும்
இலகொளிமுழவமோங்கவெழுமெழிற்சாம்பவான்றன்
மலர்மழைவானோர்சிந்தமாதவர்முதலோர்வாழ்த்த
உலகுருவாயமாயனுள்ளுறச்சூழ்ந்தான்மன்னோ. ௬௭

நகுகதிர்த்திங்களென்னநறுந்துழாய்க்கொண்டல்பொற்றாள்
உகிர்பொழிநிலவுக்கற்றையுலகெலாம்பரக்கநோக்கி
முகிழ்விரிபோதுதூவிமுளரியம்பொகுட்டுமேலான்
திகழ்தருபசும்பொற்கன்னற்செழும்புனலாட்டினானால். ௬௮

ஒட்டறுபசும்பொனண்டத்துயர்முகடுடையமாலோன்
நீட்டியகமலப்பொற்றாணிரையிதழ்மலரின்மேலான்
ஆட்டியதெய்வநன்னீரதிர்திரைக்கங்கையென்று
நாட்டமூவுலகினூடுளிபெறத்தவழுமன்றே. ௬௯

ஆற்றல்வாளவுணரெல்லாமன்றுவஞ்சனையேசெய்தான்
மாற்றருஞ்சிறப்புவாய்ந்தமணிவண்ணனெனச்சினப்ப
நாற்றிசைவழுத்துஞ்சீர்த்திநலஞ்செய்மாவலியன்னோரைத்
தேற்றினன்றேவர்காலமீதெனத்தெரித்துமாதோ. ௭௦

உரவுநீருலகமெல்லாமோரடியாயதோங்கும்
இருவிசும்படியொன்றாயதேனையோரடிமற்றெங்ஙன்
தருதிநீதாராயென்னிற்சார்குவைநரகமென்னா
வருணபாசத்தால்வீக்கமாவலிகட்டுண்டானால். ௭௧

குருவெகுண்டதனாற்புன்கண்குறுகினன்போலுமென்னாப்
பிரகலாதப்பேரன்பன்பெருமனைக்கண்டுநெஞ்சம்
உருகுறப்புளகமெய்தியுவப்பினோடேத்தாகிற்ப
மருவிரிதுளவமாலைமலரவன்வழுத்திச்சொல்வான். ௭௨

உன்பதநீரினாட்டியுற்றநீர்தலையிற்றாங்கி
மன்பெருஞ்செல்வமெல்லாம்வழங்குமாவலிதானென்றும்
இன்பமேபெறுவதல்லாலிடருறற்கியாவன்சொல்லோ
அன்பனென்றுரைத்துப்பாசமவ்வழிநீக்கினானால். ௭௩

வீக்கியவருணபாசம்விட்டொழிந்தவுணர்வேந்தன்
மாக்கண்வெம்முலையாள்செய்யமலர்மகள்கொழுநபச்சைத்
தேக்கமழ்துளவத்தாரோய்செப்புமோரடியென்சென்னி
மீக்கண்வைத்தளத்தியென்னவிமலனங்குவந்துவிள்ளும். ௭௪

இருசுடரெறிக்கும்விண்ணுமேக்கறத்திருவிற்றாகி
உரைபெறுசுதலலோகமொருகுடைநிழற்றியாள்வாய்
மருவுநின்வாயில்காப்பேம்வயிரவாட்டடக்கைவேந்தன்
அரசுமேலளிப்பமெட்டென்றறைமனுக்காலத்தென்றான். ௭௫

ஆழியானருளப்பாட்டினவுணர்கோன்சுதலலோகம்
சூழிருஞ்சுற்றமோடுதுன்னினன்பிரகலாதன்
ஏழிருபுவனந்தாயவிணையடிக்கமலம்வாழ்த்த
வாழிமாலவற்குமிக்கவரங்கொடுத்தருளினானால். ௭௬

நாடொறுமெம்மையாங்குநலம்பெறக்காண்பையென்னாப்
பீடுசால்பிரகலாதன்பெயர்ந்தனன்சுதலலோகத்
தேடலர்துளவோன்பின்னரிந்திரற்கரசுநல்கித்
தாடொழுமமரர்யார்க்குந்தம்பதியருள்செய்தானால். ௭௭

பிருகுவைநோக்கிப்பெம்மான்பிறங்குமம்மகத்திற்செய்யற்
குரியனகுறைசெயென்னவுற்றிடுங்குறைகள்பாற்றும்
அரியநின்னாமத்தொன்றேயறைந்திடினண்ணநீயே
மருவினைகுறையுமுண்டோமதிக்கினிம்மகத்துக்கம்மா. ௭௮

குறையிலையெனினுமின்றகூறுநற்பணிசெய்கேனென்
றிறைவனைவணங்கிவெள்ளியியற்றினனிறைவன்றானும்
நறுநுதலதிதியென்பாணலந்திகழ்மகிழ்ச்சிநாளும்
உறவுபேந்திரனேயாகியும்பர்காடுறையுமன்றே. எசு

மருங்குறையிலையோனென்னமருவுபேந்திரனுலாற்றல்
பொருந்திவச்சிரத்தோன்மூன்றுபுவனமுமினிதிணேம்பி
திருந்தியசெல்வந்துய்த்துத்திகழ்ந்திருக்கின்றானிந்த
இருங்கதைகற்போர்கேட்போரின்பமுற்றிருப்பர்மாதோ. அ0

தேனுகுதுளவத்தாரான்றிருவிளையாட்டின்றன்மை
ஊனுகுபரிதிவேலாயுரைக்குமாவெளிதோவென்ன
நான்மறைக்கிழவன்மைந்தனவிற்றினன்மலராள்கேள்வன்
மீனுருவெடுத்தவாறென்விளம்பெனவிளம்பலுற்றான். அக

வாமனவதாரமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௨௫0.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## அ-வது, மச்சாவதாரமுரைத்தவத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

உரைதருநான்முகற்குரைத்தநாட்களின்
பரிவினிப்பகற்குமுற்பகலினீற்றினில்
பிரளயம்வருமெனப்பெரிதெணண்ணியே
மருவினன்மீனுருமாயனென்பவே. க

முந்துநாண்முழுமறைகொணரமுன்னவன்
சிந்தியாமீனுருவெடுத்தல்செப்பிடின்
அந்தணாளருந்தமிழரும்புநாட்டிடை
வந்துபார்புரக்குமோர்வழுதிமன்னனே. உ

பைத்தபாம்பேந்துபார்பரிக்கும்பாண்டியன்
சத்தியவிரதன்வெண்மதிதயங்கிய
முத்தவெண்குடையினன்முழவுத்தோளினன்
பத்திமையான்பரந்தாமன்பாலரோ. ௩

மருக்கமழ்தாரினன்வையையாற்றிடை
அருக்கியங்கொடுப்பதற்கங்கைதாங்கிய
திருக்கிளர்புனலிடைச்சேட்டிளங்கயல்
உருக்கொடுதெனிமுதலுவந்துதித்தனன். ௪

மன்னவன்காண்டலும்வையையாற்றிடைத்
துன்னுறவிடுதலுமீனஞ்சொல்லுமால்
உன்னுழிச்சரணெனவுற்றவென்னைநீ
பன்னுபல்பகைகொளப்பழுதின்விட்டனை. ௫

கன்னலினீரினுங்கழுமுந்தண்சுனை
மன்னியநீரினுமருவவிட்டெனை
இன்னலொன்றறநனியினிதுகாக்கென
அன்னவனெஞ்சகமடைந்ததற்புதம். ௬

கடமுமிழ்களிற்றினன்கன்னனீரிடை
விடுதலுங்கன்னலின்விம்மிவீங்கலால்
மடலவிழ்நறுமலர்வாவியுய்த்தனன்
நெடுமலர்ப்பூந்தடனிறைந்ததென்பவே. ௭

தடனிறைந்திடுதலுந்தயங்குசெங்கதிர்
விடுமணிப்பூணினன்வியந்துநோக்கினன்
கடலிடையுய்த்தனன்கல்லென்கௌவைநீர்
படுதிரைப்பரவையிற்பாய்ந்துசொல்லுமால். ௮

இறைவனீகடலிடையெனைவிட்டேகுறின்
நிறைதிரைவேலையினெடியமீனினம்
சிறியனைச்சீறினசிதைக்குமென்னலும்
மறமிகுவேலினன்மதித்துச்சொல்லுவான். ௯

மீனுருக்கொடுவிவண்விளங்குகின்றநீ
தேனிமிர்துளவணிதெய்வநாயகன்
ஈனமாமிவ்வுருவெடுத்ததென்னென
மானவேன்மன்னவன்வழுத்தமீன்சொலும். ௧௦

மன்னவவேழுநாள்வைகின்மாக்கடல்
உன்னுமூன்றுலகுமொளிப்பவோங்குமால்
அன்னநாட்டோணியொன்றடையுமாங்கதின்
நின்னையுமுலகினினிறைந்தவித்தையும். ௧௧

முனிவரர்கணத்தையும்பொறுத்துமொய்ம்பினல்
தனிமறைகவர்ந்தவன்றனைக்கொன்றம்மறை
நினைதரவயன்றுயினீங்கினட்டுவன்
எனநிறைகடலின்மீனேகிற்றென்பவே. ௧௨

ஆயிடையரசனுமருளினூழியாம்
மாயனைநினைந்தனன்வைகுமெல்லையில்
தூயமீனுருவினன்சொன்னவண்ணமே
மேயதுகடன்மழைவிசும்பிற்பெய்யவே. ௧௩

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

பிறங்கியபகற்போதொன்றுபெயர்வுறக்கங்குற்காலை
மறிந்துமால்வரைகள்சாயமால்வரையென்னப்பொங்கிக்
கறங்குவெண்டிரையலைப்பக்கௌவையங்கடன்முகட்டில்
உறங்கியமலரின்மேலானுயிர்ப்பொடுமறைநடந்த. க௪

உளைப்பரிமிடற்றனென்னுமுடல்சினத்தவுணனங்கு
முளைத்தனன்மறையைவௌவமுறுகியசினத்தால்வெம்போர்
விளைத்தவனுயிரையுண்டுவிழுமிதின்மறைகளெல்லாம்
அளித்தனன்மீனமாயவருமறைமுதலிமாதோ. க௫

சத்தியவிரதனோடுதடங்கடலுலகுக்கெல்லாம்
வித்தொருதெப்பத்தேற்றிமீனுருவெடுத்தமாயன்
கொத்தொளிபயிலும்போதிற்குலவயன்விழிக்குங்காறும்
மொய்த்தவெண்டரங்கவேலைமுகட்டிடையுறைந்தானன்றே. க௬

முடங்குதெண்டிரையபௌவமுற்றுமோர்செலுவுட்சென்று
மடங்கியதுணரகில்லார்மயர்ந்தனர்நேடியன்னோர்
ஒடுங்கினரேத்திநின்றருயர்வொப்பிலாதமேலோன்
தடங்கொள்சேலுருவின்மாண்பியாவரேசாற்றுநீரார். க௭

மன்னியசேலினொற்றைமருப்பினிலரவான்யாப்பத்
துன்னியபஃறிமீதுதுலங்கியமுனிவரோடும்
இன்னருளரசனேறியேத்தலுமேந்துமாயன்
பன்னுதத்துவங்களெல்லாம்பளகறவியம்பினனல். க௮

பொதியவிழ்கமலவீட்டுப்புராதனன்விழித்தகாலைச்
சிதாரிமழைக்கட்செவ்வாய்த்திருத்துயிலாரமார்பன்
அதிர்திரைக்கடலிற்சேலாயளித்துவேலாசன்றன்னை
மதுவுலாந்தொடையல்வைவச்சுதமனுவாக்கினனல். க௯

பன்னுமிக்காதைகேட்போர்படிப்பவரொழுதில்வீடு
துன்னுவராசவென்றுசுகமுனியுரைத்தானென்ன
இன்னருள்பழுத்தசூதனிசைத்திருந்தவர்தாங்கேட்பப்
பின்னுமம்முனிவன்சொற்றபெருங்கதைவழங்கலுற்றான். உ0

மச்சாவதாரமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௪௭0.

அ-வது, ஸ்கந்தம் முற்றிற்று.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

௯-வது, ஸ்கந்தம்.

## ௧-வது, இளன்கதையுரைத்தவத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தரைபுகழ்விண்டுராதன்சத்தியவிரதனென்ன
மருவுவேலரசன்வைவச்சுதமனுவாகிவந்திங்
கிருநிலம்புரக்கின்றானென்றிசைத்தனைமுனிவவன்னோன்
விரிதருமரபின்வண்மைவிளம்பெனவிளம்பலுற்றான். ௧

ஈசனாந்திருமாலுந்தியெழுந்தசெங்கமலப்புத்தேள்
தேசுலாமனத்தின்வந்துசேர்தருமரீசிசெய்தான்
காசிபனாகுமன்னோன்காதலன்விவச்சுவான்றன்
மாசிலாமைந்தன்வைவச்சுதனெனவழங்குவாரால். ௨

அன்னவன்சிரத்தையென்னுமணங்கினைமணந்துகாதல்
மன்னுமோர்மைந்தன்வேண்டிவசிட்டனான்மகஞ்செய்போது
பன்னிபெண்மகவுவேண்டிப்பகர்ந்தனளாகவோதா
உன்னுபெண்ணுதிக்கவென்றோர்மறைகரந்துரைத்தான்மன்னோ. ௩

இத்திறமியம்பலானேயிளையெனவுதித்தாளோர்பெண்
அத்திறமரசனோக்கியருமறைவசிட்டன்றன்னை
வித்தகவிதென்கொலென்னவிளைந்தவாறியம்பியன்னோன்
வைத்தபாம்பணையோற்போற்றிப்பளகிலாணாக்கினானால். ௪

இளனெனும்பெயர்பெற்றன்னோனிலங்குநாள்வேட்டமாட
உளமுவந்தொருமாவேறியொளிர்வடவரையின்கீழ்பால்
வளமுறைசுகுமாரப்பேர்வனத்துழிச்சேறலோடும்
தளிர்நிறப்பெண்ணின்வண்ணஞ்சார்ந்தனன்மீட்டுமாதோ. ௫

அங்குடனேகினோருமரிவையராயார்மாவும்
பொங்கெழில்வடவையாகிப்பொலிந்ததென்றுரைப்பவேந்தன்
மங்கையாகியன்னோர்வருந்துதற்குற்றசாபம்
இங்குரைசெய்வாயென்னவிருந்தவனுரைக்கலுற்றான். ௬

சொல்லுமிவ்வனத்தின்முன்னர்ச்சுடர்மதிச்சடையோன்வேட்ட
நல்லெழிலுமையாள்கொங்கைநலனுறப்புணருங்காலை
எல்லிடுமதிமிலைந்தானிருங்கழன்முனிவரேத்தச்
செல்லலுமனையாணாணத்திருமினர்முனிவர்மாதோ. ௭

நாணியநங்கைபின்னர்நக்கனையணையாளாக
வேணியஞ்செல்வன்வெம்பிமேதகுவனத்திலுற்ற
ஆணுருப்பெண்பாலாகவறைந்தனனற்றைநாட்டொட்
டேணமைபுருடர்வந்தங்கெய்திடாரிறையுமன்றே. ௮

அவ்வழிநடந்துபெண்மையடைந்திளையாயமாதை
எவ்வமின்மதிமுன்பெற்றவிளங்கெழிற்புந்திபுல்லி
அவ்வியமவித்தசிந்தையாடல்வேற்புரூரவாவைக்
கவ்வைசெய்வாரியேழ்சூழ்காசினிபுரக்கவீன்றான். கூ

எண்ணறுபுகழின்மிக்கவிளனெனவிளங்குவேலான்
பெண்ணுருமீட்டுமாங்குப்பெற்றமைவசிட்டன்றோரா
அண்ணலவ்வரனைப்போற்றியாணொருமதியும்பெண்மை
நண்ணுமோர்மதியுமாகநன்கமைத்தருளினானல். க0

கலிவிருத்தம்.

இருடருங்குழலாளனுமேழையைப்
புருடனாகிப்பொருந்தியநாட்புணர்ந்
தருடருஞ்சிறுவோரையளித்தனன்
தெருடரும்மதிசேரிளனென்பவே. கக

வன்திறற்படைமன்னவனல்கிய
ஒன்றுநற்றவத்துற்சலனுதியாய்
வென்றிவேற்கரவேந்தர்கண்மூவரைத்
தென்றிசைக்கிறையாகச்செலுத்தினன். கஉ

உளம்விரும்பியுயிர்த்தபுரூரவா
வளமிருந்தவிம்மாணிலமோம்புற
விளைபசும்பொன்வெயின்முடிசூட்டியவ்
விளனடந்திருங்கானகத்தேகினான். கங

வாட்டமில்வகைசெய்தவைவச்சுதன்
மீட்டும்பெற்றபுதல்வர்விழுப்புகழ்
பாட்டும்வண்டிமிர்பைந்தொடைமன்னவ
கேட்டியென்றுமுனிவன்கிளக்குமால். கச

இளன்கதையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கச.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## உ-வது, சையாதிகதையுரைத்தவத்தியாயம்.

வேறு.

முழங்குநீர்யமுனையின்முயன்றமாதவம்
வழங்குவைவச்சுதமனுவளித்தனன்
தழங்குநீர்க்கடற்புவிதயங்குவானுறும்
பழங்கணீக்கியவொருபதின்மர்தம்மையே. க

ஏதமில்புகழினானிக்குவாகுவோ
டோதுசையாதிதாருறும்விடத்துரு
நீதிசெய்நபகனோர்நிகரினற்கவி
ஆதியென்றறையுமப்பதின்மர்தங்களின். ௨

கவியெனும்பெயர்புனைகருதுசீரினான்
புவிமுதலியபுகழ்பூதத்தாலுறும்
எவைகளும்பிரமமாமென்றென்றெண்ணிய
நவையறுபிரமமாய்நண்ணினானரோ. ௩

எழிறிகழ்விடத்துருவென்னுமொய்ம்பினான்
அழிவறுகுரவனும்வசிட்டனாணையால்
விழைவுறுபசுநிரைமேய்த்துமேவுநாள்
தொழுவுறுநிரைநடுத்தோன்றிற்றோர்புலி. ௪

வெந்திறற்புலிதமமேயகங்குலின்
வந்தடநிரையினம்வாய்விட்டார்த்தன
அந்தமில்குணத்தினானார்த்தல்கேட்டலும்
முந்தடுபடையொடுமுடுகித்துன்னினான். ௫

புலியெனவொருவிடைபுழுங்கிவீட்டினான்
வலிகெழுமுனிவரன்வைகற்காலைபோய்க்
கொலையுறுவிடையினைக்கண்டுகொன்றநீ
நிலையிழிபின்னவனென்றுநீக்கினான். ௬

முனிவரன்சபித்தலான்மொழியும்பின்னவன்
எனவிருங்கானடைந்தியற்றிமாதவம்
துனியுறுவனத்தழல்சுலாவிமெய்சுட
மனுமகனொருபதமருவினானரோ. ௭

தரவுக்கொச்சகக்கலிப்பா.

சையாதியென்றுரைக்குந்தவங்கழுமுமனுப்புதல்வன்
மையார்ந்தவணர்கூந்தன்மானையுமானத்தன்முனாப்
பொய்யாதபுகழ்பெறுமுப்புதல்வரையும்பெற்றாவம்
பையாரப்பரிக்கின்றபாரகமோரேழ்புரந்தான். ௮

ஈன்றமகடன்னோடவ்விறையோனற்சவனனுறை
கான்றருகானேகுதலுங்கனிமொழியாளச்சவனன்
வான்றவஞ்செய்தாக்கையொருவன்மீகமாகவதின்
தோன்றுவிழிமின்மினிபோற்றோன்றுதலைக்கண்ணுற்றாள். ௯

கண்டுநனிகுறுகியொருகண்டகத்திற்குத்தவவள்
மிண்டுமிகுசெங்குருதிவன்மீகமீதெழலும்
தெண்டிரைசூழ்பார்புரக்குந்தேர்வேந்தனோடுவனம்
கொண்டுறுவோர்யாவருமேகுருடரென்பாராயினரால். ௧௰

யாரோவிங்குற்றவரிங்கற்றவருக்கின்றுபிழை
ஓராதியற்றினரென்றுன்னியவனுடுதலும்
காராரும்பூங்கூந்தற்கதிர்முலைச்சுகன்னிகைதான்
தோராதிழைத்தபிழைசெப்பினளவ்வேந்தனுக்கே. ௧௧

### அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

சாற்றுதல்கேட்டவேந்தன்சவனனைவணங்கிப்போற்றிக்
கோற்றொடியறியாள்செய்தகொடும்பிழைபொறுத்தியென்று
மாற்றருந்தவத்தோனின்சீர்மகளையான்மணக்கும்வண்ணம்
நாற்றிசைபுகழுமேந்தானல்கெனநவிற்றினனால். ௧௨

முனிவரன்மொழிந்தவண்ணமுகிழ்நகைத்துவர்வாய்மைக்கட்
கனிமொழியணங்கைவேந்தன்காதலோடளித்தானற்றோர்
பணிமலர்க்கண்களெல்லாம்பளகறத்தெரிந்தவாங்குப்
புனைகழல்வயவரோடுபுரவலனகரம்போந்தான். ௧௩

தவம்புரிசவனனென்போன்றையலோடணையவிந்த
அவம்புரியுருவாகாதாலழகுறுகாமன்வேட்கும்
நவம்புரியிளமையிங்ஙனண்ணுதல்வேண்டுமென்னச்
சிவம்புரிபரியின்பேர்ப்புத்தேளிரைக்கருதவன்னோர். ௧௪

வந்தனரவரைநோக்கிமகத்தினிலுமக்குங்கூறு
தந்திடுவேனென்மூப்புத்தவிரநீரிளமைநல்கின்
சுந்தரப்புலவீரென்றுதுதித்தனன்வணங்கவன்னோர்
அந்தணப்பெரியோற்றம்போலழகுறவாக்கினரால். ௧௫

மூவருமுருவமொத்துமுன்னுறமயங்கிநோக்கிப்
பாவைதன்கற்பினலேபதியையேபதியென்றுற்றாள்
தாவிலாத்தவத்தோன்வேள்விசார்பரிப்பெயர்சேர்தேவர்
தேவரோடிருந்துமாந்தச்செய்தவிவழங்கினனால். ௧௬

மகத்தினிற்கூறிலாதவயித்தியராயதேவர்
சகத்தினிற்சவனன்வேள்விசார்ந்தவிநுகர்தல்காணா
அகத்திடைவெகுளிபொங்கவருந்தலைதுணிப்பெனென்னாப்
பகைத்திறலிருக்கும்வெய்யபடைபுரந்தரன்கைக்கொண்டான். ௧௭

முத்தழல்வளர்க்குமந்தண்முனிவரன்குலிசங்கொண்ட
தத்தொளிப்பூணினன்றன்றடக்கரம்வழங்காவண்ணம்
அத்தலைநிறுத்தலோடுமமரரோடன்னோனேர்ந்து
மெய்த்தவன்வேள்விவாழ்த்திவிண்ணகத்தேகினனால். ௧௮

அன்றுதொட்டவனிமீதேயாற்றுநன்மகங்கடோறும்
குன்றெறிகுலிசனாதிக்கொற்றவாளமரரோடும்
சென்றவிக்கூறுபெற்றார்திகழ்பரிப்பெயர்கொடேவர்
ஒன்றியதவத்தோனில்லாளொடுமுவந்துறையுநாளின். ௧௯

கானுறைமுனிவற்கீந்தகனிமொழியணங்கைக்காண்பான்
மாநிலம்புகழ்சையாதிமன்னவனுங்குமேவித்
தேனிமிரலங்கன்மாலைதிகழ்தருமதன்கொலென்ன
வானநல்லெழின்மிக்காளைமணந்துறைமகளைக்கண்டான். உ0

உன்னைமுன்மணந்துநின்றவுடன்முதிர்முனியைநீத்துப்
பின்னுமிவ்விளைஞற்சேர்ந்துமடந்தைநீபிழைசெய்வண்ணம்
என்னைகொலென்னவன்ஞளியையந்தவாறியம்பக்கேட்டு
பன்னருமுவகைபூத்துப்பார்த்திபனகாஞ்சேர்ந்தான். உக

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கொண்டல்கண்படைகொ டண்டலைநகரங் குலவுசையாதிமுன் னுயிர்த்த, எண்டிசைப்புகழா நத்தனென்றிசைப்போ னிரேவதன்றன்னையீன்றெடுத்தான், வண்டிமிர்தொடையல் வளையுமவ்வேந்தன் வயங்குரேவதிதனையளித்திவ், வொண்டொடிமலர்க்கையணங்கினையெவருக்குதவுதுமெனநினைந்துறைந்தான். உஉ

எரிதவழ்வடிவேலிரேவதனீன்றவிரேவதிதன்னொடுசெய்ய
மரைமலரண்ணலுலகினையடைந்துமாடகயாழிஞோர்பாடும்
ஒருகணங்கழியவணங்கையார்க்களிப்பனென்றலுங்கழிந்தபல்லூழி
இருநிலவரைப்பினின்குலவேந்தரில்லெனமலரவனிசைப்பான். உந

அலைப்பெருங்கடல்சூழ்தறைப்பொறைதவிர்க்குமலப்படையவற்குநீயீன்ற
குலக்கொடிதன்னையருளெனவுரைத்தகொழுமலரண்ணலைப்பரவிச்
சிலைத்தழும்பிருந்ததிணிபுயன்மீண்டுதெண்ணிலாமுகிழ்நகைத்துவர்வாய்
மலர்க்கருங்குழலைமடற்பனையுயர்த்தமதிநிறப்பெருமனுக்களித்தான். உச

திதலைவெம்முலையாடிருவுருச்சாலத்திகழ்தரநீண்டிருந்தமையால்
கதிர்மணிக்கலன்சேர்கமுகுறழ்கழுத்திற்கைப்படைநீட்டினன்வணக்கி
மதியெனமருளுமணிநிறவள்ளன்மணத்தினன்மலர்த்தொடைசூட்டத்
ததைமலர்க்குழலாள்சமவுருவாகித்தயங்கினளுவகைகொண்டிருந்தாள். ()

கலிவிருத்தம்.

வம்புலாந்தொடைமன்னவற்கம்முனி
உம்பர்நாடிவணங்கவுவந்தருள்
எம்பிரானடியெய்தியவண்புகழ்
அம்பரீடனருங்கதைசொல்லுமால். உசு

சையாதிகதையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் சO.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## ௩-வது, அம்பரீடன்கதையுரைத்தவத்தியாயம்.

---

### கலிநிலைத்துறை.

நவின்றவம்மனுவுயிர்த்தசீர்நபகனென்றுரைப்போன்
கவின்செய்வேளெனக்கருதுநாபாகனையளித்தான்
தவஞ்செய்தன்னவனம்பரீடன்றனைத்தந்தான்
பவங்கடீர்தரவவன்றிருமால்பதம்பணிந்தான். ௧

தலையினாற்பரந்தாமனற்றாளிணைபணிந்து
கலையினாற்சொலுமவன்புகழ்காதுகொண்டருந்தி
நிலையினாழியானுறைதரநெஞ்சினுணினைந்து
சிலையினாற்றருவாற்செயுஞ்சினகரஞ்சூழ்ந்து. ௨

கையினாலரிபூசனைகாதலித்தியற்றி
மெய்யினாற்றிகழ்நாவினன்னாமமேவிளம்பி
வையமேமுதலாய்வரும்பொருளெலாமாலோன்
பொய்யிலாவுருவெனுமவன்புலமையார்புகல்வார். ௩

அரியமாதவவசிட்டனேயாதியந்தணரால்
புரவிவேள்விகள்பயன்விழையான்பலபுரிந்து
மருவுமேழ்பெருந்தீவுமோர்மதிக்குடைநிழற்றி
உரைசெயிந்திரபோகமுற்றுவந்தனனுரவோன். ௪

வினையினோர்முனிவெகுண்டவற்கியற்றியசாபம்
அநகனாழிவந்தகற்றியவிவ்வுலகளித்தான்
எனலுமன்னதிங்கிசைத்தியென்றேந்தலுமியம்ப
முனைவனும்மதுவிரித்தனன்மொழியலுற்றனனால். ௫

திங்கடோறும்வந்துறுமரிதினத்துணவொழித்தே
எங்கணாயகற்போற்றியீராறெனுந்திதியில்
துங்கநான்மறையோர்க்கெழிற்றொறுநிரையுதவி
அங்கருந்தவர்க்குணவளித்தருந்துவனரசன். ௬

இன்னவாறுசெய்தொழுகுவோனீரறுதிதியோர்
கன்னலென்னவங்குற்றநாட்கலைவல்லோர்தொடரப்
பன்னுசீர்த்துருவாசனும்பண்ணவனாக
அன்னநீயிவணருந்தெனவருந்தவனேர்ந்தான். ௭

கடிகையொன்றினுளருந்திடவேண்டுநீகடிது
படிசொலும்புகழ்யமுனையிற்படர்ந்துநீர்படிந்திங்
கடியன்புன்குடிலடைதியென்றரசனுங்கறைந்தான்
நடைசெய்மாதவனன்றெனநடந்தனனன்றே. ௮

ஈரமார்புனன்மூழ்குவானேகியமுனிவன்
சேர்கலாதொருகன்னலுந்தீர்ந்ததென்றரசன்
ஓரினுண்டுபொத்தோடுண்ணாதுறுபலனளிக்கும்
நீரின்பாரணைநன்றெனநீர்நுகர்ந்தனனால். கூ

விதியினாற்புனலருந்தியபின்முனிமேவி
அதிதிபூசனையாற்றுவன்முனமெனவறைந்து
பதிதனாகிமுன்பாரணைபுரிந்தனையென்றென்
றுதிரம்போன்றிருகண்சிவப்புறமுனிவுற்றான். க0

சீற்றமோடவன்செஞ்சடைநிலத்திடையடித்தங்
காற்றலோடுகைவாளொடுமோர்த்தொருபூதம்
தோற்றநீயிவனுயிர்த்தொலைத்தேகெனச்சொற்றான்
மாற்றருஞ்சினத்ததுவரவுடைந்திலன்மன்னன். கக

அடைந்தவாறெலாமணிமணிப்பஃறலையரவில்
கிடந்ததொன்முதலறிந்துதன்னாழியைக்கெழுமி
உடைந்திடாதுநம்மன்பனைக்காத்தியென்றுரைப்ப
நடந்தங்காழிவெங்குறளுயிர்நலிந்தெருக்கியதே. கஉ

பூதமாய்ந்ததுகண்டருந்தவன்பொருக்கென்ன
ஓதுநாற்றிசையெங்கணுமோடினனோடச்
சோதியாழியும்வீட்டியபின்றொடர்ந்தேகப்
போதமாதவன்வடவரைமுழைஞ்சுபுக்கொளித்தான். கங

அங்குவந்தடைந்துருத்திடவருந்தவனோடிப்
பொங்குசீரயனுலகுபுக்கவற்கதுபுகல
இங்குமாயவனாணையார்மாற்றுவரென்னாச்
சங்கரன்பதஞ்சார்ந்துரைத்தனன்றுயர்தாழ்ந்தே. கச

மாயனாழியைமாற்றவல்லுநரெவர்மதிக்கின்
தாயினன்புடைத்தற்பரனேதடுத்தாலும்
நேயமோடவனேகுதியெனவரனிகழ்த்தப்
போயினான்றிருவைகுந்தம்பொருந்தினன்புகழ்ந்தான். கரு

மருவுமாயனைவணங்கினன்வாழ்த்திமாதவத்தோன்
அரியநின்னுடையன்பனுக்கறிவழிந்தடியேன்
புரியுந்தீங்கினைப்பொருத்துநீயருள்கெனப்போற்றத்
திருவினாயகனருந்தவற்கருண்மொழிதெரிப்பான். கசு

மன்னுமன்பர்தமுள்ளமென்னிடத்திடைவதியும்
என்னதுள்ளமுமன்பர்தம்பாலியைந்திருக்கும்
அன்னதன்பாதீனமில்லாதிலையலர்மேல்
பொன்னினுமெனக்கினியவரவர்களேபுகலின். கஎ

சுற்றமாதியெப்பொருள்களும்பொய்யெனத்துணிந்து
மற்றென்பாதமேமனக்கொளுமவர்க்கிடர்மருவின்
உற்றுநீக்கிடாதுறைதுமோவன்பர்பாலுவந்து
பெற்றகன்றுகாண்கறவையிற்பெட்புறுமுள்ளம். கஅ

அன்பருக்கருந்துயர்செயவடைந்தவெங்கொடியோர்
மன்பெருந்துயருறுவதுமதித்திடல்வழக்கே
உன்பெருந்துயராசனேயொழிக்குமற்றவன்றாள்
நன்குன்சிரம்பொறுத்திநற்றவவெனநவின்றான். ககூ

சொன்னவாசகங்கேட்டலுமாயனைத்தொழுது
மன்னன்றண்முடிமருவினன்வணங்கினன்வழுத்த
என்னபாவம்வந்தியைந்ததிங்கெனக்கெனவாசன்
றன்னியாழியைத்துதித்தனன்பன்முறைதொழுதே. உ0

அரசன்வாழ்த்தலுமாழியம்முனிவனையடாது
விரைவிற்போயறவாழியந்தணன்காமேவப்
பருவமொன்றுணவின்றியேவரவுபார்த்துறைவோன்
உரைசெய்மாதவற்றொழுதுணவருத்தினனுவந்தான். உக

கலிவிருத்தம்.

அரியமாதவனாழியடர்த்தலால்
பருவமொன்றுபடாவிவ்வாறவண்
வரவுநோக்கியேவைகியமன்னவன்
உரையருந்தவனுண்டபினுண்டனன். உஉ

நனிவருந்தியோராண்டுநன்பாரணைப்
புனலருந்திப்பொருந்துமவ்வேந்தைவெம்
முனிபுகழ்ந்துநன்காசிமொழிந்தபின்
தனிவிசும்புறச்சார்ந்தெழுந்தானரோ. உங

மூன்றுமைந்தர்சுகேதுமுதலினர்
தோன்றினாரவர்தொல்லுலகாளுவான்
கான்றசெம்பொற்கதிர்முடிசூட்டியே
வான்றொடும்வனத்தேகினன்மன்னனே. உச

அந்தமன்னனடைந்தனன்முத்தியின்
மைந்தர்தம்மரபுந்தழைத்தோங்கின
இந்தமாக்கதைகேட்கவியைந்திடும்
சிந்தையோர்திருமால்பதஞ்சேர்வரே. உரு

என்றுகூறியிகலிக்குவாகுவின்
றுன்றுசீர்மரபும்மினிச்சொல்லுவாம்
நன்றுகேட்கெனநான்மறையந்தணன்
வென்றிவேலரசுக்குவிளம்புவான். ௨௯

அம்பரீடன்கதையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

௮ திருவிருத்தம் ௬௬.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

# ௪-வது, இக்குவாகுவின்கதையுரைத்தவத்தியாயம்.

---

## எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

சொல்லுமம்மனுமூன்றும்மிடுங்காலைச்சுடர்விரிமூக்கினின்றுதித்த
நல்லெழிலிக்குவாகுவென்றுரைப்போனவையறவுரைத்தமைந்தர்கடாம்
செல்லுறழ்தடக்கைவிகுக்கியோடருஞ்சீர்சேர்நிமிதண்டகன்முதலாம்
எல்லையிறிறலார்நூற்றுவரென்பாரியம்புமன்னோர்களின்விகுக்கி. ௧

தாதைதன்சொல்லாற்றென்புலத்தோர்க்குச்சாற்றியகடன்கழிப்பதற்கா
மேதகுகான்போய்வியன்சசமுதலாவேண்டியவுணவெலாம்வெளவிக்
காதல்வெம்பசியிற்சிலமுயலருந்திக்கழிந்தனகொணர்ந்திடநோக்கி
ஓதியவசிட்டனேர்ந்திதுசேடம்பிதிர்மகக்குறுதெனவொழித்தான். ௨

ஒழித்திடுங்குருவைமுனிந்துதன்றாதையொருவனத்தேகெனவேகி[ருவம்
இழைத்ததோர்தொழிலாற்சசாதனென்றெவரு மியம்பவாங்கிருந்துபல்ப
கழித்தபின்றாதைவிண்ணகஞ்சலப்பக்கதிர்முடிபுனைந்துலகளித்துத்
தழைத்தெழுமன்பாற்புரஞ்சயனெனுமோர்தநயனையுயிர்த்தனனன்றே. ௩

இயம்புமம்மன்னன்ககுத்தனென்பெயருமிந்திரவாகனனெனுமோர்
வயன்றருபெயருமடைந்தனனடைந்தவாறெவன்காரணமென்னின்
தயங்கொளிவிண்ணோர்தானவர்வெருட்டித்தமனியப்பதியிழந்தோடி
அயன்றொழுந்திருமாலடியிணைவணங்கவன்னவனமருக்கறைவான். ௪

புரஞ்சயனிடத்தெம்மொருகலைபொருந்தும்புரஞ்சயனூற்புலவீர்காள்
பரிந்துதானவர்போரிகலழிந்திரியப்பசும்பொனுடடைதிறென்றுரைப்ப
விரைந்துவிண்ணவரவ்வேந்தனையடைந்துவிளம்பினர்தந்துயர்விளம்ப
வருந்துதலொழிப்பன்வாசவனெனக்குவாகனமாய்வரினென்றான். ௫

இந்திரனவ்வாறியைந்தொருவிடையாயேந்தலைவெரிநிடைத்தரிப்பப்
புந்திநொந்தவுணரிரிதரப்பொருதுபுரஞ்சயன்பொன்னுலகளித்தான்
நந்தலின்றமரர்புரந்தரனேடுகண்ணினருவந்துவீற்றிருந்தார்
அந்தநல்விடையின்முரிப்புறைந்ததனலன்னவன்ககுத்தனென்பெயரும்.

நாற்றிசைபுகழுமிந்திரனென்பானண்ணலர்ப்போர்தெறவேண்டி
ஏற்றுருவெடுத்தங்கேந்தலாலொருபேரிந்திரவாகனனென்றும்
சாற்றிடவடைந்துதரைமுழுதளித்துத்தரியலாடிதொழுதேத்த
ஆற்றல்சேயென்னவேனசாம்வேந்தையளித்தனனன்பொடுமன்றே. ஏ

அன்னவன்புதல்வன் பிருதுவென்றுரைப்பா னறைந்தவிப்பிருதுவின் மைந்தன், மின்னகுசுடர்வேல் விரும்பலர்புகழும் விச்சுவகந்தன்மற்றவன்சேய், பன்னுசபத்த னெனவுலகேத்தும் பார்த்திபனவன்றரும் பாலன், துன்னலர்பாராவும் பிரகதச்சுவனுஞ் சொல்லுமன்ன வன்பெறுந் தோன்றல். அ

குறுகலர்பாரவுங் குவலயாச்சுவனுங் கூறுமக்குவலயாச் சுவன்றான், சிறுவர்மூவேழா யிரர்தமையளித்தச் சிறுவர்சூழ் வாமுனமெழுந்து, கறுவொடுமெதிர்ந்த துந்துவென்றுரைக்குங் காலவேலசுரான்முன் கலப்ப, முறுகுவெஞ்சினத்தோ னுயிர்ப்பின்வெங்காற்றான் முருக்கினன்மைந்தரைமாதோ. கூ

மைந்தரோர்மூவரன்றியெல்லோருமாய்ந்தனரெனமனம்வெகுண்டு
துந்துவையரசன்செகுத்தனனதனுற்றுந்துமாரப்பெயர்பெற்றான் [ன்
உய்ந்தவம்மைந்தர்மூவரினெழில்சேர்ந்தொளிபெறுதிடச்சுவனுயிர்த்தா
அந்தமில்புகழ்சேரரிச்சுவன்றன்னையவனிகும்பனையளித்தனனால். கO

நிகும்பனென்றுரைப்போன்பரிகிணச்சுவனைநேரலர்வணங்குறவுயிர்த்தா
மகம்புரிந்தோங்குமன்னவனளித்தமகன்கிருதாச்சுவனவன்சேய் [ன்
சகம்புகழ்சேனசித்தெனவுரைப்பர்சாற்றவன்றநயன்விண்ணுயர்ந்த
நகம்புரைபுயத்திண்வலியைநண்ணலருநவில்யுவனச்சுவனன்றே. கக

வீறுசேர்யுவனச்சுவனெனும்பெயரான்மேதினிபுறந்தருநாளின்
கூறுமோர்மகவும்பெற்றிலனுகிக்குலவுநல்லெழிறிகழ்மனையார்
நூறுபேரோடுகானகங்குறுகநுவலருந்தவத்தினர்நோக்கி
மாறிலாவரசுக்கொருமகவுதிப்பமகத்தையவ்வழிவளர்த்தனரால். கஉ

வெந்திறல்வேந்தனுண்ணுநீர்வேட்டுவிழுத்தவர்துயிலுநள்ளிரவின்
சுந்தரமதலைதோன்றுதற்பொருட்டாததுகளிலாச்சாலையிலமைத்த
மந்திரப்புனலார்குடத்தினீரெடுத்துமாந்தினன்மாந்தியபின்னர்
அந்தணரறிந்தாஙகரசவுன்வயிற்றிலருமகவுதிக்குமென்றறைந்தார். கங

அரசனும்பிறவாவண்ணமாலருளாலன்னவனகடுகீண்டெழுந்தான்
இருமுலைப்பாலுக்கேக்கறுவண்ணமிந்திரன்மகிழ்வொடுமாங்கு
மருவிமாந்தாதாவெனும்பெயர்வழங்கிமணிவிரலாலமுதளிப்ப
ஒருதினத்துலகமுவப்புறவளர்ந்ததொள்ளொளிதழைந்தபைங்குழவி. கச

வநதெழுமாந்தாதாவெனும்பெயரோன்வையகம்பொதுவறப்புரந்து
விந்தைசேர்புயத்தானெனுஞ்சசிவிந்தின்வீறுசான்மகள்விந்துமதியைக்
கொந்தவிழலங்கல்சூட்டினன்வேட்டுக்குலவெழின்மைந்தர்மூவரையும்
செந்தளிருருவத்தைம்பதெண்ணினாருஞ்சேயிழையாளையுமளித்தான்

ஐம்பதுமகளிர்தம்மையுந்தவஞ்செயந்தணன்சவுபரிவேட்டான், என்பதைவிரிக்கின்யமுனைமாநதியினிரும்புனன்மூழ்கினனெடுநாள், மற்பெருந்தவஞ்செய்காலையம்முனிவன்வயங்குமீனினங்களோர்கடும்பாய், முன்பொருந்துதல்கண்டன்னவாறுறையமுன்னினனரசன்மாட்டடைந்தான்

கலிவிருத்தம்.

அரசன்முன்னமருந்தவனெய்திநீ
உரைசெயுந்தவப்பேற்றினுயிர்த்தநல்
திருவன்னாரிலோர்சேயிழைமங்கையைத்
தருதியென்னவவ்வேந்தனுஞ்சாற்றுவான். கஎ

பெற்றகன்னியர்பெட்புறுவாரெனின்
மற்றவர்க்குமணத்தின்வழங்குதல்
கொற்றமன்னர்குலத்தொழிலென்றனன்
உற்றவனுருவின்மையுணர்ந்தரோ. கஅ

சொல்லக்கேட்டசவுபரிதோன்றலே
நல்லைநீதிநவின்றனைகன்னியர்
வல்லையேவரனென்னவரித்திடின்
ஒல்லுமோநினக்கிவதுரையென்றான். க௯

என்றலுந்தவத்தோனையவ்வேழையர்
ஒன்றுகின்றவுறையுளினுய்த்தவர்
நன்றுரைத்ததிறணவிலென்றுமுன்
நின்றகஞ்சுகியோடுநிகழ்த்தினான். உ0

அரசுரைத்தவவ்வாறவன்சென்றனன்
மருவுமிவ்வருமாண்பிலதென்றுவிட்
டிரதிகாந்தனுமேக்சறவின்னெழில்
உருவுகொண்டவனுற்றனனொண்டவன். உக

மங்கைமாரொடுமன்னன்விடுத்தது
செங்கைவேத்திரன்செப்பலுமன்னவர்
இங்குவேளெழுந்தேயினனோவெனாத்
துங்கமாதவத்தோன்றலைச்சூழ்ந்தனர். உஉ

வந்துமொய்த்தமடந்தையர்மாலையிச்
சுந்தரற்குநான்சூட்டுவன்சூட்டுவன்
முந்தவென்னமொழிந்தனர்மொய்த்தனர்
அந்தவாறரசற்குரைத்தானவன். உ௩

கேட்டலோடுங்கிளர்ந்தமுனிவனே
வேட்டவைம்பதுமெல்லியலாரையும்
வாட்டநீங்கியமாதவன்காலினீர்
ஆட்டிநல்கினனன்புடைவேந்தனே. உச

மணஞ்செய்மங்கையர்தம்மொடம்மாதவன்
கணஞ்செய்மாமணியாற்கனகத்திறல்
நிணஞ்செய்வேன்மயனெஞ்சினியற்றிய
குணஞ்செய்மாடங்குடிபுகுந்தானரோ. உரு

இல்லின்வாழ்க்கைக்கியைந்திடும்பல்பொருள்
ஒல்லைவந்துறவைம்பதுருக்கொடு
சொல்லுமாதவன்றோகையர்தம்மொடும்
புல்லியன்புபொருந்தினன்வைகுநாள். உசா

மடந்தைமாரைவனத்திலம்மாதவற்
றொடர்ந்துபோமெனச்சொல்லினனன்னவர்
நடந்தவாறெவனுடுவனென்றெழுந்
தடைந்தனன்மகவாசையின்மன்னவன். உஎ

உற்றமாதவருவப்பினிறைஞ்சியந்
நற்றவன்செயல்யாவுநவின்றனர்
அற்றமின்றியகமகிழ்ந்தோங்கவக்
கொற்றமன்னவன்கொண்டனனற்புதம். உஅ

மைந்தரோடுமகளிர்கடம்மொடும்
அந்தமைந்தாளித்தவர்தம்மொடும்
பந்தமோடுஞ்சவுபரிபல்பகல்
நந்தலின்மகிழ்கூர்ந்தவனண்ணினன். உகூ

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

இன்னணங்காமநுகர்ந்தவனிவைமுன் யமுனையின்மீற்றிரளென்ன, மன்னுதற்சங்கத்துற்றவென்றொழித்து வனத்திடைத்துனைந்துபோய்மாயோன், தன்னைநன்குணர்ந்துதவம்பலவாற்றித் தணப்பிலாமுத்திசென்றடைந்தான், பன்னியர்தாமும்வனத்திடைப்படர்ந்து பரமவீடெய்தினர்மாதோ. ௩0

இக்குவாகுவின்கதையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கூசா.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## ௫-வது, அரிச்சந்திரன்கதையுரைத்தவத்தியாயம்.

---

### எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

*அறைதருமாந்தாதாமுனமுயிர்த்தோனம்பரீடன்புருகுச்சன்*
*நெறியுறுபுகழ்சார்தருமுசுகுந்தனிகழ்த்துமிம்மூவரின்முன்னோர்*
*குறைவறுகுணஞ்சாலொருமகவென்னக்குலவியபிதாமகனுகும்*
*முறைமையின்யுவனச்சுவனெனுநாமன்மூதுலகிற்பெறீஇச்சிறந்தான்.* ௧

*அழகுறும் * யுவனச்சுவனெனும்பெயரானரிதனையளித்தனனரிதன்*
*விழைவொடுமாரிதன்றனையுயிர்த்தான்விளம்பியபுருகுச்சனென்போன்*
*பொழிகதிர்மணிசூழ்பாதலங்குறுகிப்புயங்கவேந்தரைநனிசினக்கும்*
*ஒழிவறுபகைஞர்யாரையுமொறுத்தானுரகருமுளமுவந்தனரால்.* ௨

*உரகருந்தம்மினுடன்பிறந்தவளாமொருநருமதைதனையளிப்ப* [ம்
*விரிமலர்த்தொடையலரசனுமணந்து விளங்குதன்பெயர்மொழிந்தவர்க்கு*
*அரவினின்வெருவளடைந்திடாவரமுமடைந்துலகொருகுடைநிழற்றித்*
*தரியலர்புகழுந்திரசதசியனுந்தயனையுயிர்த்தனனன்றே.* ௩

*பற்றலர்பரவுங்கொற்றவேலன்னோன்பரவுகுச்சன்றனையுயிர்த்தான்*
*முற்றிழைமகளிர்முகமெனமுளரிமுகைமுறுக்கவிழ்ந்திதழ்விரிக்கும்*
*அற்றமில்வளஞ்சான்மருதவைப்புடுத்தவயோத்திநாடாளுமவ்வண்ணல்*
*வெற்றிசேரநரண்ணியனெனவிளம்பும்வேந்தனையளித்தனனன்றே.* ௪

*தசமுகன்றன்னேற்சமர்க்களத்திறந்ததருக்கநரண்ணியன்றநயன்*
*வசையறுமரியச்சுவனவன்மதலைவாழ்தருமருணன்மற்றவன்சேய்*
*திசைபுகழ்திரிபந்தனனவன்சிறுவன்றிகழ்திரிசங்குவின்தாதை*
*விசயம்வந்தேத்திவிரும்பலர்வணங்கவிளங்குவேற்சத்தியவிரதன்.* ௫

*சத்தியவிரதன்சேய்திரிசங்குசதுமறைவசிட்டனூற்கான்போய்ச்*
*சித்தநொந்திகழும்பூரியனுகிச்செய்தவக்கோசிகனருளால்*
*கொத்தலர்பசும்பொற்றருநிழல்குறுகக்குறுகலென்றமரராங்கொழிப்ப*
*விற்றகவீழுங்காலையம்முனிவன்விண்மிசைநிறுவினன்வெகுண்டான்.* ௬

*கோசிகனருளாலின்னமும்விண்மேற்குலவுதல்யாவருங்காணத்*
*தேசொடுமுலவுகின்றனனன்னோன்சேயரிச்சந்திரனுமால்*
*ஆசறுமன்னோனிமித்தமாய்முன்னமருந்தவமுனிவசிட்டனுக்கும்*
*மாசில்கோசிகற்கும்வந்ததுசீற்றம்வானவருளமதிசயிப்ப.* ௭

### கலிநிலைத்துறை.

*ஆடல்வேலரிச்சந்திரனென்றுசொலரசன்*
*வாடியேமகவில்லனுய்வைகுமந்நாள்வாய்*
*நாடியாழிசைநவிற்றுறுநாரதனண்ணிப்*
*பாடுவார்புனற்கிறையைநீபணிகெனப்பணித்தான்.* ௮

*வருணன்வந்தொருமைந்தனைவழங்குவன்வழங்கும்*
*பொருவின்மைந்தனற்பசுவெனமகம்புரிவாய்கொல்*
*அரசவென்றவனியைந்தபின்னருள்புரிந்தகன்றான்*
*உரைசெய்வண்ணமவ்வேந்தனுமொருமகவுயிர்த்தான்.* ௯

---

* இவ் யுவனச்சுவன்பேரன்.

சகமுவப்புறத்தங்கியங்குதித்தசேய்தனக்குப்
புகழ்சிறப்புறரோகிதனெனப்பெயர்புரிந்தான்
மகம்விரைந்துசெய்மகவொருபசுவெனவருணன்
அகமகிழ்ந்துவந்துரைசெயவரசனுமறைவான். ௧௦

சிறுவனின்னமுந்தெரிதாமழலையஞ்செவ்வாய்
முறுவலூற்றிலன்மொழிந்திடிற்பன்முளைத்தில்தால்
குறுகிலப்பசுப்புனிதமாங்குணமுறாதென்றான்
எறிதடந்திரைப்புனற்கிறையேகினனிசைந்தே. ௧௧

முத்தமாமெனமூரல்செவ்வாய்முளைத்ததற்பின்
தத்துநீர்க்கிறைமகம்புரிவாயெனச்சாற்ற
மத்தயானையம்மன்னனம்மைந்தனுக்கின்னம்
பத்தியாகான்குருத்திலபல்விழுந்தென்றான். ௧௨

உந்துநீர்க்கிறைமகஞ்செய்முன்னுரைத்தவாறென்று
வந்தபோழ்தெலாமிவ்வகைமன்னவன்சேய்பால்
சிந்தைகூரும்வேணவாவினாற்செப்பினன்சிறுவன்
அந்தவாறறிந்தேகினனடவியினடைந்தான். ௧௩

வனத்துமைந்தனுநடந்தனன்றவஞ்செய்வான்மனத்து
நினைத்துமன்னவனுரைத்தனனன்றுநீர்க்கிறையோன்
சினத்துமற்றவனகட்டிடைச்செழும்புனனிறைப்பக்
கனத்திருந்ததுமகோதரப்பெயர்கதுவினனால். ௧௪

காட்டினுற்றபின்கான்முளைசில்பகல்கழித்து
வாட்டமுற்றரிச்சந்திரன்வருந்துதல்கேளா
வீட்டியுற்றவெம்பிணிதணிக்கினுமிகநன்று
நாட்டினுற்றவற்காண்குவல்யானெனநடந்தான். ௧௫

தாதைபாற்செலுந்தநயனையிந்திரன்றகையாப்
பூதலத்திடைப்புனிதநீர்படிகுதிபடிந்தால்
ஏதநீங்கினீவிழைந்தனவெய்துதியென்றான்
காதன்மைந்தனுமன்னவாபுரிந்துசெல்காலை. ௧௬

உரைசெய்நான்மறையிரிசிகனுயிர்த்தமைந்தர்களில்
அரியசீர்நடுமைந்தனையரும்பொருள்கொடுத்து
விரைவினிற்கொடுதாதைமுன்விடுத்தனன்றாதை
புருடமேதமங்கியற்றினன்போக்கினன்பிணியே. ௧௭

மகமியற்றுழிமாதவக்கோசிகனோதா
பகையடக்கியசாமகன்பகர்தருவசிட்டன்
[illegible]ம்வழுத்துமத்துவரியுபிருகுவாந்தவத்தோன்
புகழ்படைக்குமெய்ச்சமதக்கிபிரமனாப்புகல்வார். ௧௮

வருணன்வெம்பிணிதீர்த்தனன்வழங்கினனரசுக்
கெரிபசும்பொலந்தேர்மகிழ்ந்திரனீந்தான்
புரிமகத்தினிற்பசுவெனப்புகுஞ்சுனச்சேனன்
சரிதநல்லதுபின்னதுசாற்றுவன்றவத்தோன். ௧௯

ஆழிசூழ்புவிபுகழரிச்சந்திரனணியார்
எழிரும்பொழில்காக்கெனமைந்தனையிருத்தித்
தாழிநஞ்சடைக்கோசிகன்சாற்றுபோதத்தால்
ஊழிஞான்முடிதத்துவமொழித்துவீடுற்றான். உ0

அரிச்சந்திரன்கதையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் சகசு.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## சா-வது, சகரன்கதையுரைத்தவத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

அண்ணலரிச்சந்திரனளித்தமதியென்ன
ஒண்ணிழல்பரப்புகுடைரோகிதனுயிர்த்தான்
வண்ணவரைமார்பனரிதன்றனையவன்றார்
தண்ணறைதுளிப்பவருசம்பனையளித்தான். ௧

சம்பனெனுமன்னவனளித்ததநயன்சீர்
அம்புவிபரித்திடுசுதேவனவன்மைந்தன்
கம்பமதமாவிசயனென்பர்கலைவல்லோர்
உம்பர்புகழ்மன்னவனுயிர்த்தபுதல்வன்றான். உ

* ருருகனெனப்புகல்வர்ருருகனுயிர்த்தோன்
வீரநெடுவேல்விருகன்வேள்விருகனென்பான்
வாரிதிநிலம்புகழும்வாகுகனவென்றான்
சேரலர்வெருட்டநனிசென்றனன்வனத்தே. ௩

ஆங்குறையவூருவன்றனாச்சிரமமேவித்
தீங்கறநற்றேவியொடுசில்பகல்கழித்து
வாங்குசிலைவேளனையவாகுகனிறந்தான்
எங்கிமனையாளுமழவெய்தநினைவுற்றாள். ௪

தீயின்விழவேகுமவள்செவ்விமுகநோக்கி
மாயும்வகையெண்ணியொருமாற்றவளருத்த
மேயவிடமோடுதிகழ்மெல்லியலகட்டின்
எயதொருபைங்குழவியிவ்வுலகளிப்பான். ௫

---

* ருருகனென்பது ருருகனென நீட்டல்பெற்றது.

நேரிழையிதென்கொணிவைற்றனைநீயென்றவ்
வாரியனெனும்புகழவுருவன்விலக்க
வீரியவிடத்திஞேடுமேதினிவியப்பச்
சீரியமடந்தையொருசெல்வனையுயிர்த்தாள். ௭

ஓர்கொடுவிடத்திஞெடுதித்தவகைதன்ஞல்
பேர்சகரனென்றுபுவிபேசவெழிலுற்றிப்
பார்முழுதுமோர்குடைபரப்புமிழன்மன்னன்
போர்புரியுமொன்னலர்கள்பொன்றிடவுடன்ருன்.

ஒன்னலரைவீட்டுதலொழிந்தருள்செய்கென்று
பன்னுகுருநன்மொழிபகர்ந்திடவம்மன்னன்
மன்னுபகைவீர்குறிமணந்திரியுமென்ருன்
சென்னிமயிர்மாத்திரமேநீங்குறவொழித்தும். ௮

சுற்றமொடுநக்கினரெனத்துகிலொழித்தும்
கொற்றமின்மிலேச்சரெனவேகொடியர்போயார்
வெற்றிபுரிமன்னவனுமேதினிபுரந்து
நற்றவரொடும்புரவிநன்மகமிழைத்தான். ௯

அப்புரவியிந்திரனடைந்துகொடுபோகிச்
செப்புகபிலப்பெயர்சிறந்தமுனிபால்விட்
டொப்பறுதுறக்கநகருற்றவனுவந்தான்
எப்பதிநடந்ததயமென்றரசர்நாட. ௧0

வேறு.

அறுபதிஞயிராரசன்காதலர்
எறிதிரைசூழ்புவியெங்குநேடினர்
மறுவறுவேள்வியின்வாசிகண்டிலர்
நிறைகடலிதுவெனநிலந்தொட்டுண்டனர். ௧௧

தோண்டினர்நிலத்தினைத்துருவிப்பாதலத்
தீண்டினர்வடகிழக்கிருந்தமுத்தனை
மாண்டமாதவத்தினர்மாயனென்னவே
காண்டகுமுனிவனைக்கண்ணுற்ருரரோ. ௧௨

கண்டனர்கலினமாக்கபிலன்மாட்டுநீ
கொண்டனையோவெனக்கொடியவெவ்வுரை
விண்டனர்முனிவரன்வெகுளித்தீயையும்
உண்டனர்நீருனுமுடலமுற்றனர். ௧௩

உற்றதுதூதரினுணர்ந்துமன்னவன்
அற்றமில்புகழ்தருமஞ்சுமானெனப்
பெற்றிடும்பெயரொருபேரன்றன்னைநீ
கொற்றவெம்பரியிவட்கொணர்கென்றேதினன். ௧௪

என்னலுமன்னவனெழுந்தவ்வேந்தலை
முன்னுயிர்த்தவன்றிறமொழிதியென்றலும்
மன்னவனுளங்கொளவழங்கினான்றவம்
துன்னியமுனிவரன்சுகனென்பானரோ. கரு

சகரனென்னுரைதருதாமவேலினான்
துகளறுமெழிற்சுகேசினியைத்தோய்ந்துபார்
இகழசமஞ்சதனென்னுமேந்தலை
மகவெனவுயிர்த்தனன்மகிழ்ந்துமுன்னமே. கசு

அன்னவனஞ்சுமானாயவண்ணலை
உன்னியமகவெனவுயிர்த்துவைகுநாள்
முன்னுறுபிறவியின்முயன்றயோகத்தால்
துன்னியகான்செலத்துணிந்தமன்னவன். கஎ

தாதைதன்னருளினால்வனத்திற்சார்வதிங்
கோதியவறனெனவுடன்சென்மைந்தரைத்
தீதகல்சரயுவிற்செலுத்திமாய்த்தனன்
பேதமையோனெனயாரும்பேசவே. கஅ

எய்தினர்சகரன்மாட்டெவருநின்மகன்
செய்திறங்கேட்கெனப்பொருமிச்செப்பலும்
வைதனன்மைந்தனைவனத்துப்போக்கினன்
பொய்தபுகாட்சியன்போகுமெல்லையின். ககூ

தாவிலாச்சரயுவின்றன்னின்வீடினர்
ஆவிபெற்றெழுந்திடவருளிப்போயினான்
காவலனாய்ந்தவர்க்கண்டுகான்புக
ஏவினனெனத்துயரெய்திவைகினான். உ0

அத்தகைமன்னவனளித்தவஞ்சுமான்
தத்தொளிப்பூணினான்சகரனேவலால்
மத்தவெங்கரியெனநடந்துவாம்பரி
உத்தமகபிலன்மாட்டுறைதனோக்கினான். உக

தீங்கறுமுனிவரன்வெகுளித்தீயினால்
ஆங்கெரியுறுமுடலடலைநோக்கினான்
ஏங்கினன்கபிலனையிறைஞ்சியேத்தினன்
நீங்கருநெடுந்தவனிகழ்த்தினானரோ. உஉ

வாநதியிவணுறின்மாய்ந்தமன்னவர்
திருவுறுபொன்னகர்சென்றுசேர்குவர்
சூரகதம்வேள்வியிற்கொண்டுபோகெனப்
பரியொடவ்வேந்தனும்பதிபுக்கானரோ. உங

அண்ணலஞ்சகரனப்புரவியுற்றபின்
விண்ணவர்மகிழ்தரவேள்விமுற்றினன்
நண்ணினன்வனத்திடைநலஞ்செயஞ்சுமான்
கண்ணகன்புவியெலாங்காப்பநல்கியே. உ௪

சகரன்கதையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.
ஆ திருவிருத்தம் ௧௪0.
ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## எ-வது, பகீதரன்கதையுரைத்த வத்தியாயம்.

வேறு.

மஞ்சுமான்மகத்துய்த்திடுமன்னவன்
மஞ்சுமானுமலரைந்தருவுகின்
றஞ்சுமாநல்குமங்கையினுன்புகழ்
அஞ்சுமானரசாட்சியின்வைகுநாள். ௧

சுழிந்ததாதையர்சுற்பகநாடுற
இழிந்துகங்கைவந்தெய்துதற்காந்தவம்
அழிந்தசிந்தையனுற்றவங்குற்றிலள்
தழைந்தவெண்டிரைத்தண்புனற்கங்கையாள். உ

அஞ்சுமானெனுமண்ணலளித்தசேய்
செஞ்சொனுவலரேத்துதிலீபனும்
கஞ்சநாண்மலர்க்கண்ணினன்றூடரும்
சஞ்சமாநதிநோக்கித்தவஞ்செய்தான். ௩

விழையுமாநதிமெய்த்தவஞ்செய்தவன்
தொழுதுபோற்றலுந்துன்னியதில்லையால்
மொழியும்வேந்தனுயிர்த்தனன்முன்னுவோர்
பழுதுநீக்குபகீரதன்றன்னையே. ௪

பாரளிக்கும்பகீரதன்பல்பகல்
ஏரளிக்குந்தவநன்கியற்றலும்
தாரளிக்கும்பவன்செஞ்சடைவழி
சீரளிக்குந்திருநதிசேர்ந்ததால். ௫

சேர்ந்துமன்னவன்றேர்முனஞ்செல்வழி
ஊர்ந்துபாதலத்துற்றுப்படிதலும்
போந்துமாமுனிபுங்கவன்சீறலால்
வீந்தவேந்தர்கள்விண்ணடைந்தார்களே. ௬

எண்ணின்வீடருளெம்பெருமான்றுழாய்க்
கண்ணியான்பதங்கான்றெழுகங்கையாள்
நண்ணினோர்பவந்தீர்த்துநலஞ்செயல்
மண்ணின்மேன்மதித்தோதல்வழக்கரோ. ௭

உலகந்தாயவுயரடிநின்றிழிந்
தலரின்மேலவனங்கைதவழ்ந்துபொன்
திலகவாணுதல்பங்கன்றிரள்சடை
சுல்விவீழ்ந்தது தூநதியிங்ஙனே. அ

சகம்விளங்கியதண்புனற்கங்கையாள்
அகமகிழ்ந்தவன்பேர்புனைந்தாளெனின்
பகரும்பூமிபரித்தபகீரதன்
புகழையாவர்புகலவல்லார்களே. கூ

கலிநிலைத்துறை.

வாதமாநதிவையகத்தினிதுறவருந்தி
விரதமாதவம்புரிந்தவம்மன்னவன்விருப்பால்
சுருதனுகியதோன்றலேன்றினனவன்றேன்றல்
இரதமாதினுற்றனோபாவரனென்ப. கO

எந்தத்தீபவதீபருமேத்தருமன்னன்
இந்தத்தீவினிதோம்பநாபாவரற்றந்தான்
சந்தத்தீபமொத்திடரிருளகற்றிடுந்தருக்கார்
சிந்துத்தீபனைத்தந்தனன்செப்புமவ்வேந்தன். கக

அரசர்போற்றயுதாயுவையளித்தனனன்னேன்
இருதுபன்னனையேழுலகினர்தொழவீன்றான்
உரைசெயன்னவனும்புகழுடுபதியோன்றன்
மரபுளானளன்றன்னெடுநட்புவைகினனால். கஉ

இருக்குநாளினிற்கலிசடிந்திடுவதோர்விஞ்சை
மருக்கமழ்ந்ததார்நளனெனுமன்னனுக்குணர்த்திப்
பொருக்கெனச்செலும்புரவியினுளமறிவிஞ்சை
உரைக்குமன்னவனிசைப்பநன்குணர்ந்தனன்மாதோ. கங

இருதுபன்னனுமன்னவனினிதுவந்தீன்றான்
சருவகாமனைச்சாற்றுமவ்வேந்தனுந்தரைமேல்
பொருதுதன்னலரெவரையும்வெருட்டுவண்புகழே
கருதுமானவேற்சுதாசனைக்காதலித்தளித்தான். கச

சுதாசனென்பவனன்பினினீன்றவத்தோன்றல்
பதாரவிந்தம்வந்திறைஞ்சவெம்பகையெனுமிருளுக்
குதாசனன்றனைநீர்தருமானவேலுழவன்
மதாசலத்தினன்மித்திரசகனெனுமன்னன். கரு

உரைத்தமன்னவனுவரிகுழலகொருபுயத்தின்
பரித்துவண்டினங்காமரம்பாடிமட்டருந்த
விரித்தகிங்கிணிவாய்மலர்வேரியந்தொடையல்
தரித்தநல்லெழின்மதயந்திதனை மணந்துவந்தான். கசு

வேறு.

என்மாடமோங்கவெழிலோங்குமயோத்திநாடன்
நன்மாடுபெற்றுநவைதீர்தரநண்ணுநாளின்
சொன்மாடிருந்தகுருசாபந்தொடர்தலானே
கன்மாடபாதனெனும்பேரொடுகானினுற்ருன். கஎ

என்ருதரத்தின்முனிவேந்தனிசைத்தலோடும்
ஒன்ருதசாபமுரைசெய்ததெனுற்றவாறென்
நன்ருகநீயிங்குரையாயெனநாமவேலான்
குன்ருதஞானக்கொழுந்தாஞ்சுகன்கூறலுற்ருன். கஅ

பகீரதன்கதையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கடுஅ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## அ-வது, கன்மாடபாதன்சரித்திரமுரைத்த வத்தியாயம்.

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

வாட்டிறல்வயவரிருபுடைநெருங்கவரிசிலைமித்திரசகன்வெங்
காட்டகத்தெழுந்துவேட்டமாடுங்காற்கடியனுமரக்கனையொறுத்தான்
வீட்டுதலறிந்தங்கிளையவல்லரக்கன்வெவ்வினைசெயநாணுகித்
தாட்டுணைபரவியரசினுக்குணவுதருந்தொழிலினரொடுஞ்சார்ந்தான். க

தென்புலத்தவருக்கூட்டுநாளணுகச்செழுந்தவவசிட்டனையரசன், அன்பொடுமழைத்தங்கருத்திடுங்காலை யரக்கனென்றுரைக்குமக்கொடியோன், வன்பொடுநரூனளித்தனனளித்தோன்வஞ்சமென்றறிந்திலாமுனிவன், என்புரிந்தனையென்றரசையிவ்வூன்றினிராக்கதனுகெனவிசைத்தான்.

மருவியமுனிவனரக்கனுங்கிழைத்த மாயமீதென்றுணர்ந்ததற்பின், அரசயாந்தெருளாதறைந்ததோர்சாப மாண்டுபன்னிரண்டடைந்தொழிகென், றுரைசெயக்கேட்டமன்னவன்ருனுமுனக்குமிங்கரியதோர்சாபம், விரைவின்வந்துறுமாவிளம்புவனென்ற வெகுண்டனன்புனல்காத்தெடுத்தான்.. ந

மன்னரின்குலத்தினரசர்தங்குருவைவைதவருண்டுகொன்மதிக்கின் [த்
என்னினைந்தனையென்றெழுந்தவன்மனையாளனுமதயந்திமுன்றகைப்ப
துன்னியெவ்விடனுமுயிரினந்துன்றுஞ்சுடுபுனல்விடுத்தலெங்கென்று
தன்னிருபதத்திற்கைப்புனல்விடுத்தான்றகைபெறுமித்திரசகனே. ௪

கைப்புனல்விடுத்தகாலையிற்கால்கள்கருகியதிறத்தினலெவரும்
செப்புகன்மாடபாதனென்றொருபேர்சேர்ந்தனன்சாபமுஞ்சேர்ந்து
மைப்புயல்படியுங்கானகத்தேகிவதைபுரிந்துறையுமந்நாளின்
துப்புறழ்தாமமனைவியோடின்புதுய்க்குமோர்பூசுரற்கண்டான். ௫

## தரவுக்கோச்சகக்கலிப்பா.

கண்டானுள்வியப்புற்றான்கடிகுவலென்பசியையென்றான்
கொண்டானாலுவகைநனிகுறுகுமவன்முன்னணுகி
விண்டானாலுணவாகிமேவினையோநீயெனவே
தண்டாதநான்மறையோன்றன்னையிருகைப்பிடித்தான். ௬

விள்ளற்கரியபெருவிருப்புடையதன்பதியைத்
தள்ளற்கரியதனிவெந்தருக்குடையோன்வவ்வுதலும்
உள்ளத்துளுயிர்போக்குமுயிர்ப்பலிநீநல்கெனவே
வள்ளைப்பொலங்குழைசேர்வரிவிழியாள்வந்துரைப்பாள். ௭

சீரார்குலத்துதித்தசெஞ்சிலைவேந்தேகுணத்தை
ஓராதுவெஞ்சாபமொருமுனிவனோதுதலான்
போரார்வல்லரக்கனெனப்பொல்லாவிவ்வுருப்புணர்ந்தாய்
ஏராருமவ்வுருவுமெய்துவைசின்னாள்கழித்தே. ௮

நல்லாய்சேளுன்னுடையநவைதீர்நற்குலத்துதித்தோர்
வில்லாற்போர்ப்பகைகடிந்துவேதியரைக்காப்பதலால்
பொல்லாதவிநயமதுபுரிகுநர்தாமொருவருண்டோ
சொல்லாயென்றிருவிழிநீர்சோரவவள்சொல்லினளால். ௯

மாதுமனம்வருந்தியங்குவழங்கியசொற்கேளாமல்
ஓதவருமாமறையோனுடற்றசையுண்டென்புமிழ்ந்தான்
காதன்மனையாணெஞ்சுகலங்கியுமிழென்பையெலாம்
சோதியழலிற்சொரிந்தோருரைமொழிவாள்சோர்வுற்றே. ௧௦

உன்னரியகொடுஞ்சாபமொழித்தனதுபதியேநின்
மன்னுமெழின்வாய்ந்தகுணமதயந்தியேமுதலாத்
துன்னவருமனையாரைத்தோய்தியெனினுயிரொழிதி
என்னமடமங்கையுமங்கிசைத்தெரியின்மூழ்கினளே. ௧௧

அவ்வனத்திலிங்ஙனமாங்கமர்ந்துசிலநாள்கழிய
எவ்வமுறுகொடுஞ்சாபமிரிந்துதனிவேளெனவே
செவ்வியொடுதன்னகரஞ்சேர்ந்துமதயந்தியெழிற்
கொவ்வையிதழுண்டிடுவான்குறுகவவள்கூறினளால். கஉ

வண்ணமுலைநன்மடவாண்மதயந்திவிளம்புதல்கேட்
டண்ணல்வேலரசனுநன்கரிவையர்தம்போகமறந்
தெண்ணலருங்கொடியவினையேனுக்கிங்கொருமதலை
நண்ணவருள்புரிதியெனநவின்றுகுருவைத்தொழுதாள். கங

காமநலநுகரவுளங்காதலித்தபூசுரனைப்
பூமருவுகானகத்துப்புகுந்துகொலைசெய்ததனால்
வாமமுறுமுதுமறையோன்மனையவளுமனங்கனன்று
தீமைதருவெஞ்சாபந்தெரிந்ததிறஞ்செப்பினளால். கச

இப்பார்பரிக்கவருமெழிலாருமகப்பெறற்காய்த்
துப்பாரிதழ்க்கனிவாய்த்தோமில்குணமதயந்தி
தப்பாதகற்புடையாள்சாற்றுதவவசிட்டனைச்சேர்ந்
தொப்பாருமில்லாதவொருமதலைவயிற்றடைந்தாள். கரு

வாராடுவனமுலையாள்வயிற்றில்வளர்பாலனையிங்
கோரேழ்செலும்பருவமொழிந்துமுயிர்த்தேனிலையேழ்
பாராளவென்றுள்ளம்பரிந்தொருகல்லால்வெகுண்டே
எராருந்தன்னகட்டிலெற்றினளாங்கீன்றனளே. கசு

கல்லாலால்வயிறதுக்கிக்காரிகையயங்கீன்றதனால்
எல்லாருமச்சுமகனென்றழைப்பப்பெயர்புனைந்து
வில்லாலேபகைகடிந்துமேதினியோரேழ்புரந்து
மல்லாரும்புயத்தானோர்மைந்தனையுமீன்றனனே. கஎ

சீலமதுவழுவிலாச்செழுந்தவரவ்வேந்தனொடும்
கோலமுறுவெண்முத்தங்குலவுதிரைவாரிதிசூழ்
ஞாலமிசைமூலமெனுநன்னாளிலுதித்ததனால்
மூலகனென்றோர்நாமமொழிந்தாரம்மைந்தனுக்கே. கஅ

ஏராருமூலகனென்றேத்தவருமொருபெயரான்
பாரோர்கள்புகழவருபரசுராமனுய்க்காய்ப்பொன்
வாரார்பூண்முலைமடவார்மறைத்தவனைவைகியதால்
நாரீகவசனென்றுநன்னாமமுற்றனனே. ககூ

கலிநிலைத்துறை.

பன்னுமூலகன்றயரதற்பயந்தனன்பகர்வோன்
மன்னுசீளபிடியெனுமைந்தனையுயிர்த்தான்
அன்னவேந்தனுமருளுடைவிச்சுவசகனும்
என்னும்வேந்தனையீன்றனன்யாவருங்களிப்ப. உ0

கட்டுவாங்கனைவிச்சுவசகன்களித்தளித்தான்
மட்டுவார்குழன்மடந்தையர்மதனெனவழங்கும்
எட்டுமர்திரம்புகழ்கட்டுவாங்கனென்றிசைப்போன்
கிட்டிவானவரருளெனக்கெழுமியங்களித்தான். உக

விண்ணின்மேவியவிண்ணவர்க்கிடரறவேண்டி
எண்ணின்மாற்றலரின்றுயிர்தெறச்சமரியற்றும்
அண்ணலேநினக்காயுளோர்முகூர்த்தமென்றமரர்
நண்ணியோதலுமன்னவன்றரையினண்ணினனால். உஉ

தரையின்மேவினன்சாற்றுபோறத்தினையறிந்தான்
உரைசெய்மால்பதமுன்னினன்முத்திசென்றுற்றான்
பொருவிலாத்திறற்கட்டுவாங்கன்றன்மெய்ப்புகழ்க்குப்
பருவமாயிரம்பகரினும்வரம்பெவர்பகர்வார். உங

கார்க்குசேர்கொடையானெனும்புகழ்க்கட்டுவாங்கன்
தீர்க்கவாகுவென்றுரைதருசிறுவனையுயிர்த்தான்
போர்க்கவாவுதோளன்னவன்புகழ்நிலவெறித்துப்
பார்க்குவாமதிநிகர்க்குமோரிரகுவைப்பயந்தான். உச

திசைவிளங்கநல்லறத்தினைநிறுவியசெங்கோல்
இசைதரும்படிசெலுத்தியரகுவெனுமிறைவன்
அசனெனும்பெயரரசனையளித்தனனசனும்
தசரதன்றனைத்தந்தனன்முச்சகந்தளிர்ப்ப. உரு

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

அன்னவனீன்றமைந்தனென்றுரைப்பவமரருக்கருடாவேண்டிக்
கன்னியந்துளவோன்றன்கலையாலுங்கலைகளின்கலைகளினாலும்
மன்னியவிராமனிலக்குவன்பரதன்வையகம்பராவுசத்துருக்கன்
என்னுமிந்நால்வராகிவந்தேழோடேழுலகாண்டனனென்றான். உசு

கன்மாடபாதன்கதையுரைத்தவத்தியாயம் முற்றிற்று,
ஆ திருவிருத்தம் கஅச.
ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## கூ-வது, சக்கரவர்த்திதிருமன்சரிதமுரைத்தவத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

என்றலும்பரமனுஞ்செழுந்துவானவர்க்
கன்றருள்செய்தவாறரசுசொல்கென
ஒன்றியமொழிசிலவுரைக்குமென்றுமெய்ந்
நன்றறிசுகமுனிநவிற்றன்மேயினன். க

மருக்கமழ்துளவணிமாயன்றாடொழா
அரக்கரையமரர்களடர்த்துநீயெமைப்
புரக்கெனமாதவன்புகன்றவாறவர்
குரக்கெனுமுருக்கொடுகுலவினாரோ. ௨

தாவறுபுகழுடைத்தயரதப்பெயர்க்
கோவெழிற்கோசலைகுலவுகேகயன்
பாவைநற்சுமித்திரையென்னும்பைந்தொடி
மூவரைமணந்தனன்முறையினென்பவே. ௩

பூசலைவெரீஇயபுலவர்வேண்டலால்
வீசலையுறங்குவோன்விளம்பிராமனென்
றாசலைநிகர்குழையுலவும்வாள்விழிக்
கோசலையளித்திடக்குலவினனரோ. ௪

சாதனையறிவனைத்தருமரூபனை
வாதனையிராகவன்மலர்நற்றாடொழும்
விரதனைவிண்ணவர்விருப்பினைத்துறு
பரதனைக்கேகயன்பாவைபெற்றனள். ௫

நிலக்குவன்றுயர்க்கடனீக்கியெண்டிசை
துலக்குவனெனச்சொல்சத்துருக்கன்றன்னொடும்
இலக்குவன்றனையிங்கெழிற்சுமித்திரை
விலக்குவன்பகையெனவிருப்பினீன்றனள். ௬

பால்வருமுலையினர்பானின்றிப்புவி
மேல்வருநாட்செயும்வினைகளாதிமுன்
நூல்வருகருமமுநோன்மைமைந்தர்கள்
நால்வருமடைந்தனர்நன்குவைகினார். ௭

அன்னவர்நால்வரிலடைந்தகோசிகன்
பின்னெழுந்திலக்குவன்மருவப்போருள்
துன்னியவிராகவன்றனைவிற்போய்ப்பழி
மன்னியதாடகைவதைசெய்தானன்றே. ௮

வருமுனியருளொடுமகஞ்செய்சாலைவாய்ப்
பொருமிருதாடகைப்புதல்வரைச்சினந்
தொருவனையொருத்துமற்றொருவனைக்கடல்
விரிதிரைகடத்தினான்வீரன்வாளியால். ௯

இகலறுகோசிகனினிதினாற்றிய
மகமொருகுறைவறமகிழ்ந்துகாத்தபின்
அகலிகைசாபமுமகற்றியற்புதன்
மிகுவளம்விளங்கியமிதிலையெய்தினான். ௰

சாற்றியமுனியொடுந்தம்பிதன்னொடும்
பாற்றிரையுறங்கியபரன்விதேகையாம்
மாற்றருவளநகர்மன்னனென்றுசொல்
ஆற்றலனெதிர்கொளவடைந்துவைகுநாள். ௪௧

நல்வளைச்சீதைதன்மணத்தினாட்டிய
எல்வளைத்திடவெழுமெழில்கொண்மேருவாம்
கல்வளைத்தவன்சிலையென்னுங்கட்டெழில்
வில்வளைத்ததிருறவெற்பின்வீழ்த்தினான். ௪௨

ஓதையையண்டமின்றுடைந்ததோவெனக்
கோதைவில்லிறுத்தநங்குரிசிலுக்கெழிற்
சீதையைக்கொடுத்தனன்றேவர்வாழ்த்தநற்
றாதையென்றுரைபெறுசனகனென்பவே. ௪௩

உடனுறைதருமிளையோனுமோகையால்
கடிமணங்கேட்டவட்கலந்ததாதையோ
டடைதருபரதனுமணிசெய்தம்பியும்
வடிவிழிமகளிரைமணமங்காற்றினார். ௪௪

வதுவைசெய்தணங்கொடுமகிழ்ந்துநாயகன்
மிதிலையிற்சில்பகலிருந்துமின்னொடும்
இதமுறுதுணைவருமெவருஞ்சூழ்வரக்
கதுமெனவயோத்தியைக்கருதிப்போயினான். ௪௫

கல்லையுங்காரிகையாக்குங்காலினான்
எல்லையிருணையோடேகுமவ்வழி
ஒல்லையில்வெகுண்டுறுபரசுராமனோர்
வில்லையும்வளைத்தனனயோத்திமேயினான். ௪௬

வேறு.

வாமமார்ந்தமலர்க்குழற்சீதையைக்
காமமோடுகலந்துறைகாவலன்
பூமியாளப்புனைவன்முடியெனத்
தாமவேற்கைத்தயரதனெண்ணினான். ௪௭

தேனினாய்குழற்சீதைமணாளன்வெங்
கானினேக்ககதிர்முடிமாற்றுவான்
கூனியாய்ப்பெயர்கொண்டவனெஞ்சினை
வானநாடர்மயக்கினர்வல்லையே. ௪௮

மன்னனெண்ணியசெய்கைமனத்திடை
உன்னியுன்னியுருகியகூனவள்
கன்னிமாடங்கலந்துகைகேசிதாள்
சென்னிதாழ்த்துவணங்கினள்செப்புவாள். ௪௯

வாட்டமின்றியுன்மன்னையிராகவன்
காட்டினேகவுங்காதலனுக்கிவண்
சூட்டவும்முடிசொல்லியமுன்வரம்
கேட்டியென்றுகிளந்தனளாங்கரோ. உ0

சேகயனுருச்செய்தவக்கூனிசொல்
கேகயன்மகள்கேட்டனள்வல்லையே
எசயனெழிலெய்தப்பொற்றேரொடு
மாகயனெனுமன்னனையெய்தினாள். உக

உரத்தினாலொளிசேரரசுள்ளப்போழ்
அரத்தினேருமவளென்புதல்வனை
இருத்திநாயகனாகவிராமனை
வரத்தினால்வனத்தேகவழங்கென்றாள். உஉ

முந்தைநல்கும்வரத்தின்முறைமையால்
சிந்தைநொந்துமெய்தீர்வதற்கஞ்சியே
அந்தமன்னனதற்கியைந்தானவன்
மைந்தனும்வனத்தேகவழிக்கொண்டான். உந

அள்ளியள்ளியூட்டையசெம்பஞ்சையும்
முள்ளதென்றுமுனிதருந்தாளினால்
தெள்ளமுதிற்சிறந்தசொற்சீதையும்
வள்ளல்பின்றொடர்ந்தேகினண்மன்னனே. உச

உன்னியவ்விறையும்முயிர்நீத்தனன்
மன்னிவைகிவயங்குவதெங்ஙனம்
என்னுமுள்ளத்திலக்குவனும்மவன்
பின்னெழுந்துபெயர்ந்தனனென்பவே. உரு

கானவண்ணமரவுரிகைக்கொடங்
கானவண்ணமெடுத்தவிராமனும்
ஞானவண்ணனுநங்கையுந்தம்பியும்
போனவண்ணம்புகல்பவர்யாவரே. உசு

எட்டெனுந்திசைமாந்தரவ்வேலையும்
கட்டமைந்தசிலையுங்கணையுறை
புட்டிலுங்கொடிருவரும்போகுழிப்
பட்டதுன்பம்பகரவல்லாரெவர். உஎ

அகமகிழ்ந்தெதிர்வந்தடிபோற்றிய
குகனொடும்முவந்துற்றவட்கோதிலாக்
ககனநின்றிழிகங்கைகடந்திட
முகமலர்ந்தொருமூவருமேகினார். உஅ

வரத்தின்மிக்குண்மகிழ்ந்தெதிர்கொண்டநற்
பரத்துவாசன்பதந்தொழுதன்னவன்
இருத்தியென்னவிராமனங்கோர்பகல்
அருத்திகூர்ந்தடகுண்டமர்ந்தானரோ. ௨௯

ஆங்குநின்றெழுந்தையனணிதிகழ்
வாங்குநுண்ணிடைமங்கையுந்தம்பியும்
பாங்கர்மேவப்படர்ந்துகுறுகினன்
தீங்குநீங்கியசித்திரகூடமே. ௩௰

அவ்வழிச்சிலநாளமர்ந்தன்னையர்
பவ்வமொத்தபதாகினியோடுசேர்
கவ்வையுற்றபரதனைக்கண்டுமன்
எவ்வமற்றவிண்ணெய்தலுங்கேட்டனன். ௩௧

கேட்டுநெஞ்சுகலுழ்ந்துகிளர்ந்தவக்
காட்டிற்றாதைகடன்கழித்தோதினான்
வாட்டமுற்றபரதற்குவல்லையந்
நாட்டிலேகெனராகவனல்வரம். ௩௨

அழுதுசோரும்பரதனையங்கையால்
தழுவிநல்லனசாற்றியிராகவன்
பழுதிலாத்தனபாதுகைநல்கினன்
தொழுதுமீண்டவன்சுற்றமொடேகினான். ௩௩

எண்ணுமுள்ளமியைந்தனன்மீள்கலா
அண்ணல்பாலுற்றவன்னையர்தம்மொடும்
பண்ணமைந்தபடையொடுமீண்டனன்
நண்ணிவைகினனந்திக்கிராமமே. ௩௪

வேறு.

சித்திரகூடமுற்றுறைந்தசேவகன்
தத்தரிநெடுங்கணாள்சனகிதன்னொடும்
எத்திசையும்புகழிளையகோவொடும்
அத்திரியுறையுளையணுகினானரோ. ௩௫

எண்டிசைபுகழவங்கெழுந்துராகவன்
தண்டலைவனந்தனைச்சார்ந்துசென்னெறி
விண்டலத்துறவருவிராதற்கொன்றனன்
அண்டருமலர்மழைசொரிந்தங்கார்த்தனர். ௩௬

எற்றவவ்வனத்தினின்றெழுந்துமாதவன்
சாற்றுவண்புகழ்ச்சரபங்கன்மெய்யொரீஇ
மாற்றருமுத்தியின்மருவவின்னருள்
நாற்றிசைபுகழ்பவனல்கிப்போயினான். ௩௭

கருதுபல்காவதங்கடந்துபோயெதிர்
வருமறைவாணர்தாள்வணங்கிமூவரும்
பருவமாங்குறைதருபத்துமைவிஞர்
அருளுடைமுனிவரர்க்கபயநல்கியே. ௩௮

பகைத்திறமுனிவரர்பசர்ந்ததன்மையால்
நிகழ்த்தியவவ்விடனீங்கியெய்தினர்
சகத்தினையொருவிலைநிறுத்துந்தண்டமிழ்
அகத்தியமுனியுறையகத்தையுன்னியே. ௩௯

நதிகளும்வனங்களுநடந்துநீங்கினர்
அதிசயமிகவுளவகத்தியற்றொழாத்
துதியுறுமவன்வழிசொல்லிவில்லொடு
குதையுறுகணைதரக்கொண்டுபோயினர். ௪௰

விழைவுறீஇமுனிவரன்விளம்புமவ்வழித்
தழைசிறையுடையநற்சடாயுவென்றுசொல்
கழுசெழில்வேந்தனைக்கலந்துகல்லைநீர்
ஒழுகுகோதாவிரியுவந்துநோக்கினர். ௪௧

வேறு.

அன்னஃதிதுன்னினாகன்கரையடைந்த
பன்னுமொருபஞ்சவடிகண்டுபசர்சாலை
இன்னெழிலிலங்கவிளையோனினிதிழைத்த
மன்னுமனைமூவருமகிழ்ந்துறையுநாளில். ௪௨

சென்னியொருபத்துடையதீயன்மகிழ்தங்கை
துன்னிவருகின்றவொருசூர்ப்பநகையென்பாள்
கன்னன்மொழியாள்சனகிகாதலனைநோக்கா
நன்னலவுருக்கொடவணண்ணினணயந்தாள். ௪௩

அடைந்தவளிராகவனகத்துழியமர்ந்த
மடந்தையரசைத்தனியள்வவ்வுவனெனச்சேர்
இடந்தனிலிருந்தவிளையோனினிதறிந்து
கடந்தநெறிவஞ்சமகளென்றுகதிர்வாளால். ௪௪

மூக்கினொடுகாதினைமுலைக்கணையரிந்தான்
தேக்கணுறைதேவர்நனிதிட்கலுறவன்னாள்
கூக்குரலினோடுகுறுகிக்கொடுமைவிள்ள
மாக்கரியராக்கதர்வளைத்தமர்விளைத்தார். ௪௫

விளைத்தகாரதியர்விளிந்திடவெகுண்டு
வளைத்தசிலைராகவனும்வாளிபலதொட்டான்
திளைத்தகொடுவெம்பகைகடர்ந்ததெனவானோர்
இளைத்ததருநாண்மலர்கள்கிட்டினர்சொரிந்தார். ௪௬

## கலிநிலைத்துறை.

மூக்கறக்குறைமுடிப்பரீரிலங்கைமுன்னவனை
நோக்கியுற்றவாறனைத்தையுநுவன்றனளாக
ஆக்கமோடுறையிராவணனடல்செய்மாரீசற்
போக்கவன்னவன்பொன்னுழையுருக்கொடுபுக்கான். ௪௭

பொய்செய்கின்றமான்போந்ததைச்சானகிபுகழா
ஐசெய்கின்றதென்றாசையுற்றறைந்தனளாக
மெய்செய்கின்றவவ்விராகவன்வில்லொடுதொடர்ந்து
வைசெய்கின்றவம்பேயினன்வஞ்சமென்றறிந்தே. ௪௮

வழங்குமம்பினான்மாய்ந்துவீழ்காலமாரீசன்
விழைந்தசீதையையிலக்குவன்றனைவிளித்திறந்தான்
மொழிந்தவாறுகேட்டிராகவன்மொழியெனநம்மோய்
அழிந்தநெஞ்சினளிலக்குவபோயறிகென்றாள். ௪௯

சீதைசொல்லியவாறுகேட்டிளையவன்றீச்சொல்
சூதுசெய்தபொய்யரக்கன்சொலெனநனிசொலலும்
போதியென்னலுமறுத்தியோவென்றவள்புலம்பிக்
கோதுசெய்தவெவ்வுரைபலகூறினள்குழைந்தாள். ௫௰

பரிந்துபற்பலவெகுண்டவள்பகர்தலினிளையோன்
விரைந்துநாடுவான்போயபின்மெலிவொடுதனித்தங்
கிருந்தவன்னையையிராவணன்வவ்விவிண்ணெழுந்தான்
கரந்துகொல்வதற்குற்றதுகாலமென்றுணரான். ௫௧

சனகன்மங்கையையெடுத்தகறசமுகற்றகைந்து
முனிவுகொண்டெதிர்த்தமர்முறைமுறைசெயுஞ்சடாயு
நனிவருந்திடவிருசிறைதுணித்தனனடந்து
புனையிலங்கைபோய்ச்சீதையைச்சிறைபுகுத்தனனால். ௫௨

மாயமானுருவரக்கனைமாய்த்தவன்மீண்டு
சேயமாமெனவரும்வழிதம்பிசென்றெய்த
மேயவாறெவன்சீதையைவிட்டெனவிளம்பித்
தாயசாலைசென்றெய்தினனவனொடுந்துனைவின். ௫௩

சாலையெய்தினன்சானகியெய்துதல்காணான்
மாலையெய்தியவனைகுழலெங்கணமதித்துச்
சோலையெய்தியசுற்றிலுங்கண்டிலன்றுயராம்
வேலையெய்தினன்பாலெனும்வேலையேய்மேலோன். ௫௪

மனைவிமேற்செலுங்காதலைமாற்றவல்லுநர்கள்
வினைவினீக்கிலையென்பதைவிளம்புவான்போலச்
சனகியெவ்விடத்தாளெனச்சார்ந்தகூவநோக்கி
அநகனங்கறைகின்றனவறிகுநர்யாரே. ௫௫

வாமவெஞ்சிலையிருவருமவணின்றுவருங்கால்
காமரஞ்சிறையிழந்தவச்சடாயுவைக்கண்டார்
தீமையிவ்வழிநடந்தனதெரிந்தவனிறப்ப
ஈமநல்வினையியற்றினனிராகவனிரங்கி. ருசு

ஆங்குநின்றெழுந்தகல்வுழிப்புனற்ககன்றல்வில்
தீங்குசெய்தவவ்வயோமுகிமூக்கினைச்சிதைத்து
வாங்குவெஞ்சிலையிளையவன்றுணித்தபின்மருவார்ந்
தோங்கிவான்றொடுங்கவந்தன்வாழ்வனத்தையுற்றனரால். ருஎ

நிவந்தவவ்வனவிலங்கெலாம்வயிற்றிடுநெடுங்கைக்
கவந்தன்மெய்யில்வெங்கணைவிடச்சாபத்திற்கலந்த
பவந்தனையொழிந்தியக்கனுமாங்கவன்பரவி
உவந்துமற்றுநீர்சவரிபாற்போமினென்றுரைத்தான். ருஅ

உரைத்தவாறிருவோருமச்சவரிபாலுற்றார்
அருத்திகூர்ந்தவளடருநன்மூலமங்களித்து
மருத்தழைந்திடுமதங்கவெற்பெய்திநீர்மருவும்
விரித்தசெங்கதிர்மதலையையென்றுவீடுற்றாள். ருகூ

சொன்னவாறிருவோர்களுந்துணைவினிலேகிப்
பன்னுபம்பையாறடைந்தநுமானொடும்பயிலா
அன்னவெற்புறைகதிரவன்மதலையையணுகி
இன்னநீர்தரவவனொடுந்தோழமையியைந்தார். சுO

அந்தவெங்கதிர்மதலைவெவ்வாலிபோரழிக்கும்
மைந்துகாட்டுதற்கியைந்தனனாகமற்றவன்றான்
துந்துமிப்புரவென்பெறிந்திடச்சுடர்மலர்க்கை
உந்துமம்பெழுந்தெழுமராமரமுருவியதால். சுக

ஆற்றல்கண்டருங்கதிரவன்சேயகமகிழ்ந்து
தோற்றகாலையில்வாலியைக்கொல்லெனச்சொல்லி
ஏற்றுவாலியோடிருஞ்சமம்விழைந்துநின்றிழைத்தான்
மாற்றருங்கணைமறைந்திருந்தெய்தனன்வரதன். சுஉ

விடுத்தவெங்கணைவாலியைவிண்ணகத்தேற்ற
அடுத்தசெங்கதிர்மைந்தனுக்கரசியலளித்து
மடுத்ததீம்புனன்மழைபொழிபருவமவ்வளவும்
உடுத்தகானகத்தோங்குவெற்பிருவருமுறைந்தார். சுங

மழைபொழிந்திடும்பருவமாங்ககன்றம்வந்தெய்தத்
தழைசெழுங்கதிர்மதலையைக்கொணர்கெனச்சாற்ற
எழில்செய்முன்னவன்றம்பிகிட்கிந்தையுற்றிசைப்ப
மொழியுமன்னவன்முடுகிராகவன்முனமடைந்தான். சுச

அடைந்தசூரியன்காதலனரிவையைநாட
மிடைந்தவானரத்தலைவரைத்திசைதொறும்விடுத்துத்
திடங்கொள்சாம்பவனீலனங்கதனொடுசிறந்த
இடங்கொடென்றிசைக்கேகெனவநுமனுக்கிசைத்து. ௬௫

அன்னலாழியொன்றணங்குகைக்கொடுக்கெனவளித்தான்
நண்ணுநால்வருநதென்றிசைமுழுவதுநாடிப்
பெண்ணினல்லவளுறைதரும்பிலம்புகுந்தவளால்
விண்ணெழுந்தசீர்மகேந்திரவெற்படைந்தனரால். ௬௬

அடைந்தவானரத்தலைவர்களணங்கையெவ்விடத்தும்
நடந்துதேடியுங்கண்டிலமன்றியுநவைதீர்
தடங்கொளுஞ்சிறைசடாயுவைப்போற்சமர்க்களத்தே
மடிந்திலோமெனவழங்கியங்கிருந்தனர்மாதோ. ௬௭

வழங்குமவ்வுரைகேட்டொருமருங்குசம்பாதி
கழிந்தவாறெவன்றம்பிநீர்கழறுதிரென்ன
அழிந்தசிந்தையர்நடந்தவாறனைத்தையுமடைவே
மொழிந்துசீதையைநாடுவான்வந்ததுமொழிந்தார். ௬௮

இலங்கைமன்னவனணங்கொடுமேகுதலெளியேன்
நலங்கொள்காதலன்கண்டுமுனண்ணினன்றடப்பக்
கலங்கியன்னவனருளெனக்கான்முளைவிடுப்பச்
சலங்கொள்வாரியிற்றயங்குதனசர்வயிற்சார்ந்தான். ௬௯

விரைந்துசீரிலங்காபுரிமேவினுண்மெலிந்தாங்
கிருந்தசீதையைக்காண்குவீரென்றுசம்பாதி
சரிந்ததன்சிறையிராகவன்றூதரைக்காணின்
பொருந்துமென்பதோர்வரத்தினிற்பொருந்திடப்போனான். ௭௰

பெரியவண்சிறைபெற்றவனிராமனைத்துதித்த
எருவைவேந்துரைகேட்டகமகிழ்ச்சியோடிருந்தார்
கரியவாரிதிகடப்பவர்யாரெனக்கருத
அரியவாரிதிகடப்பனென்றெழுந்தனனநுமான். ௭௧

காற்றின்மாமகன்கடலினையிடரறக்கடந்து
நாற்றிசைக்கணுமிலங்கையிற்புகுந்தனனாடி
ஆற்றல்சேர்பகையற்றிடவசோகமாவனத்தில்
கோற்றொடிக்கையாளுறைவதுகண்டுளங்குளிர்ந்தான். ௭௨

சூழிராக்கதர்மடந்தையர்துயில்புரியிரவின்
வீழிவாயெழிற்சீதைமுன்மேவியவநுமான்
ஆழிபார்சொலக்கற்பினுக்கரசிகைக்கொடுத்து
வாழிராகவன்செய்திறமுரைத்தனன்மாதோ. ௭௩

மருக்கமழ்ந்தபொற்றருக்களைவளைத்தனனெடுத்து
வெருக்கொள்கிங்கரர்விளிந்திடவடித்தனன்விரைந்து
முருக்குமென்றமைத்திராவணன்முறைமுறைவிடுத்த
அரக்கர்யாரையுஞ்செகுத்தனனார்த்தனனநுமான். ௭௪

அன்னகாலையிலிந்திரசித்தெழுந்தநுமான்
தன்னையுற்றயன்வாளியின்வீக்கிநற்றாதை
முன்னருய்த்தலுமரக்கனீயாரெனமொழிவோன்
உன்னைக்கொல்லுமவ்விராகவன்றூதனென்றுரைத்தான். ௭௫

தரங்கவேலையைக்கடந்தவன்சாற்றுதல்கேளாக்
குரங்கைநீரிவண்விரைந்துகொல்லுதிரெனக்கொடியோன்
மருங்குசேர்தருவீடணன்றூதரைவருத்தி
இரங்கமாய்ப்பதிங்கறங்கொலோவெனவிலக்கினனால். ௭௬

கொடியராவணன்றுகிலனிசுற்றியிக்குரங்கின்
நெடியவாலினினிறுவுமின்றழலைநீரென்ன
அடிவணங்கினரத்திறம்புரிந்தனல்கொளுவ
முடியவந்நகர்சுட்டனன்மாருதிமுழுதும். ௭௭

சனகிவைகிடனன்றிமற்றெங்கணுந்தழல்வைத்
தநுமன்வந்தடிவணங்கியச்சீதைபாலணியாய்
வனையுநல்லசூடாமணிவாங்கியவ்வேலை
துனைவிற்றாவினன்றோன்றினன்மகேந்திரச்சுரும்பின். ௭௮

அங்கதன்முதலாங்கடைந்தோருக்கவ்வணங்கை
நங்கணாயகன்றேவியைக்கண்டவாநவின்று
துங்கவேறெனவவரொடுந்துணைவின்வந்திறைஞ்சிச்
செங்கணானுக்குஞ்சீதையைக்கண்டமைதெரித்தான். ௭௯

மண்டுநீர்க்கடல்கடந்தனனடந்தமைவழங்கிப்
பண்டைநான்மறைக்கரியவன்பதுமமென்கரத்தின்
தொண்டைவாய்மயிலளித்தசூடாமணிவளிப்ப
அண்டர்நாயகனம்மணிகண்மணிக்களித்தான். ௮௦

தேனிரைத்ததார்ச்செழுங்கதிர்மகன்முனஞ்செல்ல
நீனிறக்கடல்கடந்தவனீலனேமுதலாம்
வானரப்படைவளைதரவிளையவன்மருவக்
கானகத்தினைக்கடந்தனன்கடல்வணனெழுந்தே. ௮௧

விரியுமூவுலகத்துமன்னுயிர்க்கணேவிளங்கிப்
பெருகுமாறுவந்தருட்புனனிச்சலும்பெய்யும்
கரியமாமுகிற்கொழுந்தெழுகடற்படையோடு
திரைசெய்வாரிதிப்புறத்தினிற்சென்றிறுத்ததுவே. ௮௨

### கலிவிருத்தம்.

மாற்கடனிகர்த்தவானரநற்சேனையின்
நூற்கடல்கடந்தபேரறிவின்வைகுறும்
காற்கடனிலம்புகழ்நம்பிவைகினான்
பாற்கடல்வைகியபான்மையென்னவே. ௮௩

### வேறு.

வலங்கொடிண்சிலைவள்ளல்கடற்கரை
நலங்கொள்சேனையினண்ணினனென்றலும்
புலங்கொள்புந்தியிற்புன்மையர்தம்மொடும்
இலங்கைமன்னவனெண்ணலுற்றானரோ. ௮௪

எண்ணுங்காலையஞ்செய்தியவீடணன்
அண்ணறேவியருஞ்சிறைநீக்கென
நண்ணுபற்பலநல்லறங்கூறலும்
கண்ணிற்றீயெழநீசடிதேகென்றான். ௮௫

முனிவுகொண்டுதன்முன்னவனீக்கலும்
வினைகடந்தநல்வீடணன்வல்லைபோய்த்
தனிமுதற்றிருத்தாண்மிசைவீழ்ந்தனன்
அநகனும்மநுமான்முகநோக்கினான். ௮௬

நல்லனென்றனுமான்சொலநாயகன்
அல்லலீங்கொழியென்றபயங்கொடுத்
தெல்லிலங்கைக்கிறையவனாகெனச்
சொல்லிலங்குசுடர்முடிசூட்டினான். ௮௭

கருணைகொண்டவக்கண்ணன்கருதலும்
வருணன்வந்திலனென்றுமலர்விழி
அருணம்வந்தவனம்பரத்தேவினான்
தருணவெய்யவன்போன்றதழற்கணை. ௮௮

அன்னகாலையறிந்துவருணன்வந்
தின்னநீர்க்குமிராமனையெய்தியுன்
மன்னுசீர்சொலிவாழ்வுறயாருமென்
சென்னிமேலணைசெய்யெனச்செப்பினான். ௮௯

அளவிசந்தவரிக்குலத்தோரெழில்
வளரநின்றவரைக்குழுவுய்த்திட
உளமுவந்துநூறேசனையாமணை
நளன்விரைந்தவணங்கமைத்தானரோ. ௯௰

அணைகடந்தருஞ்சேனையொடாங்குயர்
துணைகடந்தசுவேலவெற்பெய்தினன்
இணைகடந்தவிலங்கெழிற்சீதையாம்
கணைகடந்தகண்ணாட்புணர்காதலன். கூக

கோதுமேவுயிலங்கையர்சொற்றவன்
தூதராஞ்சுகசாரணராங்குற
ஏதநீங்கவின்றெங்கணுநாடிப்போய்
ஓதுநீரென்றிராமனுணர்த்தினன். கூஉ

வேறு.

நாடியதூதர்போய்நவின்றவாறுகேட்
டேடலாலங்கலாணிலங்கைகாவலன்
நீடியகோபுரநின்றுநோக்கினன்
ஆடவர்திலகனுமாங்குநோக்கவே. கூங

ஆரியனெடுமலையடைந்துநோக்கிய
சூரியன்காதலன்றனைவிற்றாவிப்போய்ப்
பாரினிலிலங்கையான்பசும்பொன்மாமுடி
சீரறவீழ்த்தினன்றிருமியெய்தினன். கூச

பங்கயச்செங்கணன்பணித்தவேவலால்
அங்கதன்றூதுபோயறைந்திராவணன்
வெங்கதங்கொளவவன்மீண்டகாலையின்
பொங்கரிச்சேனைபோய்ப்புரிசைசூழ்ந்ததே. கூரு

வேறு.

எயிலைமுற்றியெதிர்ந்தவரக்கரை
அயிலெயிற்றவரிக்குலத்தோர்தெறப்
புயலையொத்தவன்பொன்முடிபத்தும்வெவ்
வெயிலையொத்தொளிர்வேந்தொடுமேற்றனன். கூசு

காரையொத்தகரியவன்றம்பையந்
தாரையொத்ததசமுகனேடுஞ்செய்
போரைமற்றெவர்சொல்வரப்புன்மையோன்
பாரையுற்றனன்றேர்படையற்றரோ. கூஎ

தஞ்சமற்றதயமுகன்றன்னைநீ
செஞ்சரத்தொடெந்தீர்ந்தனையாவையும்
துஞ்சமற்றினித்துன்னுதிநாளையென்
றஞ்சனப்புயலன்னவன்கூறினன். கூஅ

எண்சுமந்தவிராமனிதுசொல
நாண்சுமந்துநடந்தவிராவணன்
கோண்சுமந்தகும்பகருணன்றனைப்
பூண்சுமந்தபுயவலிகாட்டென்றான். ௯௯

கும்பகன்னன்குறுகிக்கொடுஞ்சமர்
உம்பரும்வெருக்கொள்ளவுஞற்றினான்
நம்பிவெங்கணைநாடியங்கேவலால்
அம்பரத்திலவன்றலையாழ்ந்ததே. ௧௦௦

மடிதல்கேட்டுளமாழ்கித்தயமுகன்
புடையின்மேயபுதல்வனெனப்புகல்
அடல்செய்வேலதிகாயனையேவினான்
படையினேடும்படர்ந்தமர்செய்யவே. ௧௦௧

தமாமாக்கடற்றனையோடெய்திவந்
தமர்செய்வானதிகாயனையாயிதழ்க்
கமலமேயவெண்கண்ணன்படைவிடுத்
திமைசெய்போழ்தினிலக்குவன்வீட்டினான். ௧௦௨

கலிநிலைத்துறை.

ஈட்டுதானையோடெழுந்ததிகாயனங்கிறத்தல்
நாட்டநீருகக்கேட்டவனண்ணலர்வெருவக்
கோட்டுவார்சிலையிந்திரசித்துவைக்குறுகி
வீட்டிவாபகைவேந்தரையென்றனன்விடுத்தான். ௧௦௩

அன்னவிந்திரசித்தெழுந்தாரத்தொளித்தே
இன்னல்செய்வரக்கனையேவினனிளையோன்
தன்னெடுந்தனித்தாரகப்பொருளவற்பிணிப்பப்
பன்னுபுள்ளரசங்குறவிரிந்ததப்படையே. ௧௦௪

கோளைநீங்குவெண்குளிர்மதியெனச்சிலையொடுகூர்
வாளைநீங்கிடாத்தம்பியோடெழுந்தமாயனைத்தன்
தோளைநீங்கியதோன்றலைத்துதித்தனன்றொழுதான்
தாளைநீங்குறாதன்புசெய்தடஞ்சிறைக்கருளன். ௧௦௫

புள்ளின்வேந்துபோயகன்றபின்புகல்கவிக்குலத்தோர்
தெள்ளுதெண்டிரைப்பரவையிற்சிலைத்தனர்சீற
எள்ளருந்திறலிராவணன்கேட்டவனேவும்
தள்ளருந்தருக்கரக்கர்கள்சாய்ந்தனர்சமரில். ௧௦௬

கோட்டுமால்கரிவாம்பரிக்கொடிஞ்சியந்தடந்தேர்
ஈட்டமோடெழுந்தெண்ணிலரிருபுடைநெருங்க
மீட்டுமிந்திரசித்தரிக்குலத்தினர்வெருவப்
பூட்டுவார்சிலையோடுவெம்பொருகளம்புகுந்தான். ௧௦௭

ஆர்த்திராவணியயன்படைவிடுப்பவப்படையால்
தார்த்தடம்புயவீடணன்சாம்பவன்றழுங்கக்
கார்த்தடங்கடல்கடந்தவனன்றியக்களமாம்
பார்த்தலத்தினிலடைந்தவர்வீழ்ந்தனர்பதைத்தார். ௧௦௮

உருத்திராவணியொல்லையில்விடுத்தவப்படையால்
தரைத்தலத்திடைவீழ்ந்தவர்யாவருந்தனிப்போய்
மருத்துமாமலைமாருதிவல்லையிற்கொணர
அருத்திகூர்துயிலுணர்ந்தவராமெனவெழுந்தார். ௧௦௯

அன்னகாலைவெம்மாயைசெய்தகன்றிராவணிபோய்
இன்னல்செய்யுமோர்வேள்வியைநிகும்பலையிடத்துத்
துன்னியாற்றுதலறிந்தழித்தரிக்குலத்தோடு
மன்னுநீள்சிலையிலக்குவன்வளைத்தமர்விளைத்தான். ௧௧௦

தேரினேறியங்கெதிர்தருமிந்திரசித்தும்
ஏறினேறியமாருதிதிறற்புயத்தேறிப்
போரினேறியவிலக்குவனும்பொருதிறத்தைப்
பாரின்யார்சொல்வார்பங்கயத்தயனுக்குமரிதால். ௧௧௧

இந்துவின்கணையிலக்குவன்வில்வளைத்தேவ
வந்தெதிர்ந்தவவ்விந்திரசித்தவன்மாய்ந்தான்
சுந்தரந்திகழரசுபெற்றனமெனச்சுரர்கள்
அந்தரத்தினின்றலர்மழைதூர்த்தனரார்த்தார். ௧௧௨

மைந்தனிந்திரசித்தவன்மாய்ந்ததுகேட்டுச்
சிந்தைநொந்திராவணனிருபான்விழிவழிநீர்
உந்துதன்படைவெவ்வலையெறிநீர்க்கடலுற்றான்
சிந்தைவந்தவன்பின்னருமமர்செயநினைந்தான். ௧௧௩

மிடல்கொண்மூலமாபலமெனும்வீரரைவிடுத்தான்
கடிகையேழினிலிராகவனவருயிர்கவர்ந்தான்
கொடியராவணன்றேரிவர்ந்தயிற்படைகொண்டு
படைகள்சூழ்வரப்படுகளத்தெதிர்ந்தனன்படர்ந்தே. ௧௧௪

மருவியிந்திரனேவலின்மாதலிகொணர்ந்த
பெரியபொற்றடந்தேரிவர்ந்தம்பினைப்பெய்யும்
கருமுகிற்கொழுந்தன்னவன்கார்முகங்கோட்டி
ஒருமடந்தையையொளித்தகள்வனென்றுடன்றான். ௧௧௫

இராமராவணயுத்தமாமெனவிமையவரும்
தராதலத்துறுஞ்சமர்க்கெலாமுவமையாச்சாற்ற
முராரியாமுதறசமுகனெனுமவண்முயன்ற
புராதனச்சமர்க்குவமைவேறெடுத்தவர்புகல்வார். ௧௧௬

திசைமுகன்படையெடுத்திராகவன் சினந்தேவித்
தசமுகன்றனை மாய்த்தனன் மாய்த்தலுந்தயங்கும்
குசமுகங்களிற்குங்குமங்கோட்டரம்பையரோ
டிசைமுகம்மலர்ந்திணர்மழைபொழிந்தனரிமையோர். ௧௧௭

## எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தள்ளருந்துயர்கூரரக்கியர்யாருந்தலைவிரித்தனரழுதேங்க
வெள்ளியம்பொருப்பங்கெடுத்தவன்முதலாவெஞ்சமரழுவத்தின்மாய்ந்த
அள்ளிலைநெடுவேலரக்கருக்கெல்லாமருந்திறல்வீடணனென்பான்
எள்ளரும்புகழ்சேரிராமனின்னருளாலியற்றுநீர்க்கடன்கழித்தனனால்.

இலங்கைகாத்தளிப்பவீடணற்காயுளியம்புமோர்கற்பமதளித்து
நலங்கிளர்கற்பினரசியென்றெவருநவிற்றுநங்கையர்க்கரசியையயல்
விலங்கிவில்லுமிழும்புட்பகவிமானமீதுவைத்திளையவனோடும்
உலம்பொருபுயவானரருடனிருப்பவுறைந்திராகவனெழுந்தனனால். ௧௧௯

அங்குநின்றகன்றுகிட்கிந்தையென்னுமணிகிளர்நகரிடையடைந்து
செங்கதிரவன்சேய்முதலியகவிகள்சேர்தருமனைவியர்யாரும்
பொங்கெழிற்சீதைமருங்குசூழ்ந்திருப்பப்புனிதனைப்புறத்தெழுந்தேகித்
தங்கியதவத்தோர்சாலைகளனைத்துந்தையலுக்கறைந்துபோயினனால்.

அருந்தவம்புரியும்பரத்துவாசப்பேரந்தணன்விருந்தினிதளிப்ப
மருந்தினுமினியவுண்டியையருந்தியாவருங்குகனொடும்வருங்கால்
பொருந்தியவரவுமாருதிமுன்போய்ப்புகன்றிடநந்தியம்பதியின் [ன்
இருந்தவேற்பரதனெழிற்படைசூழவெதிர்கொள்வான்றுயரோடெழுந்தா

எழுந்தவேற்பரதனிளையவனோடுஞ்சென்றடித்தாமரையிணைமேல்
விழுந்தனனிறைஞ்சவிமானநின்றிழிந்துவிருப்பொடுமிளைஞரைத்தழுவித்
தழும்புறவிறல்விறரித்ததோட்டம்பிதன்னொடுதாயரைவணங்கி
மொழிந்தநான்மறைதேர் வசிட்டனைத்தொழுதான் முந்தைநான்மறையி
னோர்வரியான். ௧௨௨

தாரையேமுதலாமங்கையர்சூழச்சானகிதானுமங்கிழிந்து
காரைநேர்குழலார்மாமியர்மலர்த்தாள்காதலின்வணங்கினள்வள்ளல்
வீரமேவியதன்றம்பியர்முதலாம்விருப்பொடங்கடைந்தவரோடும்
ஏரினால்விளங்கும்புட்பகத்தேறியெய்தினனந்தியம்பதியே. ௧௨௩

நந்தியம்பதியினிளைஞர்தம்மோடுகலஞ்செய்வானரர்கடம்மோடும்
அந்தமில்புகழ்சால்வீடணன்குகன்மற்றடைந்தவர்தம்மொடுமமர்ந்து
சந்தமுந்துகிலுமாலையும்பூணுந்தரித்தனன்புட்பகந்தனைநீ
மந்திரிபாற்போகெனவவன்விடுத்தான்மறைக்கெலாம்வரம்பெனலாவான்

கனைகடற்றுணைபுடைவளைந்தேகக்கார்முழக்கெனவியந்துவைப்பத்
தினகரன்சிறுவன்வீடணனொடுதெண்ணிலாக்கவரிகாலசைப்பப்
பனிமதிக்கவிகைமாருதிமிழற்றப்பரதன்முன்றேர்விடவியந்து
புனைதருமயோத்தியெனுநகர்க்கெழுந்தான்புலவருக்காயிவட்புகுந்தான்.

கலிவிருத்தம்.

புரந்தரன்புரம்போற்புனைந்தார்நகர்
வரந்தருநெடியோன்வரயாவரும்
விரைந்தெழுந்தெதிர்கண்டனர்விண்மழை
பரிந்துகண்டபயிர்க்குழுப்பண்பினே. கஉசு

அஞ்சநத்தணியம்பணைசூழ்தரும்
அஞ்சனத்தணிசேருமயோத்தியாள்
அஞ்சனத்தருங்கண்மணியாமென
அஞ்சனத்தெழிலண்ணலங்கெய்தினான். கஉஎ

எற்றுதெண்டிரையேழ்கடற்றுணைசூழ்
ஒற்றைவெண்குடையோனும்வந்தெய்தலும்
அற்றமற்றசராசரம்யாவுமாங்
குற்றவின்பமுறைக்கடங்காதரோ. கஉஅ

நீடுந்தோயங்கொள்வானினைநீள்வரை
நாடுந்தோகைகளென்னவந்நாதனை
ஆடுந்தோரணவீதிகளார்ந்துயர்
மாடந்தோறுமடந்தையர்நோக்கினார். கஉகூ

வேறு.

நோக்கியநோக்கொடுநுவன்றமங்கையர்
நீக்கருங்காதல்செய்மனமுநீண்டதார்
தூக்கியவீதியிற்றொடர்ந்துபின்செல
யாக்கருமுகிலனான்வாயிலெய்தினான். கஙO

பூமகன்மகனொடும்புகழ்செயன்னவன்
ஏமுறுமிளைஞர்மற்றேனையோரொடும்
தேமலரணிகுழற்சீதையென்றுசொல்
கோமகடன்னொடுங்கோயில்புக்கனன். கஙக

மடவாறன்னொடும்வயங்கிராமற்குக்
கடனதிமுதலியகவின்செய்நீரினால்
நடைபெறுவசிட்டமாமுனிநன்காட்டினன்
சுடர்விரிமணிமுடிசூட்டினனரோ. கஙஉ

தாயருமிளைஞருஞ்சனகன்பாவையும்
மேயபூவுலகருவிண்ணுளோர்களும்
ஏயபேர்மகிழ்ச்சியோடிருப்பவெங்கணும்
நேயனேர்மதிக்குடைநிழற்றினனரோ. ௬௫

உரைதருதீயனவொழிந்துபாறின
மருவுநல்லறமெலாம்வளர்ந்தமாமழை
இருவளஞ்சுரந்தனவேகதாரனும்
கரியவன்கடற்புவிகாவல்செய்யவே. ௬௪

காங்களிற்கணைபொழிகரியமாமுகில்
தாங்குநற்கடற்புவிசார்ந்துகாக்குநாள்
புரங்களுநதிகளும்புள்ளுமாக்களும்
மரங்களுமலைகளுமகிழ்ச்சிகூர்ந்தவே. ௬௫

மிகும்பொருட்குவையெலாம்விருப்பின்வேதியர்
புகுந்தனர்முகந்துதாம்போகநல்கிமுச்
சகம்புகழ்வசிட்டனுற்றயங்கிராசவன்
மகம்பலபுரிந்தனன்மகிழ்ந்துவைகினன். ௬௬

சினத்தொடுமரக்கரைச்செகுத்தசெஞ்சிலைக்
கனத்தினிற்றிகழ்பவன்கதைகள்கேட்குநர்
நினைக்குநர்வைகுவோர்நிகழ்த்தும்வண்மையோர்
மனத்தினில்விழைந்தனமருவிவாழ்பவே. ௬௭

சக்கரவர்த்திதிருமகன்சரிதமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௯உக.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## ௧௦-வது, தன்னுடைச்சோதிக்கெழுந்தருளிய சரிதமுரைத்தவத்தியாயம்.

வேறு.

திருப்பிறைநுதலினாள்சீதையென்பவள்
விருப்பொடுநாயகன்விளங்குபூணணி
பொருப்பெனுமிணைப்புயம்புல்லியன்புசெய்
கருப்பநன்குற்றனள்களித்துவைகுநாள். ௧

அரக்கர்கோன்வெளவியவணங்கைநீக்கிலான்
மருக்கமழலங்கலான்மணந்ததென்கொலென்
றிரக்கமில்சிதடனுங்கிசைத்தனல்லறம்
புரக்கவந்தருள்புரிபுனிதன்கேட்டனன். ௨

நற்புகழ்த்தம்பியானுதன்சீதையாம்
கற்பினுக்கரசியைக்காட்டினீக்கினுன்
பொற்பினிற்பொலிபவள்புலம்புற்றேங்கலால்
வெற்பொடுமரங்களுமெலிவுகொண்டவே. ௩

மாதவம்புரியும்வான்மீகிதானழல்
மீதுறுபிணையெனமெலிவுற்றேங்குமச்
சீதையைக்கண்டிளந்தேற்றித்தானுறை
கோதறுசாலையுட்கொண்டுபோயினுன். ௪

தன்னருட்சாலையுட்டவஞ்செய்மாதர்பால்
அன்னையையடைக்கலமாகவைத்தனன்
இன்னெழின்மிக்குளவிரட்டைப்பிள்ளையாய்
மன்னுமச்சீதையும்வயிறுவாய்த்தனள். ௫

## எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முனிவரன்குசையின்கடையிற்றைவராலான்முன்னவனைக்குசனென்பார்
இனியநல்லடியிற்றடவராலாலவ்விளையவன்றனைலவனென்பார் [போன்
அனையவர்பிறைபோல் வளருநாளவருக் கறைந்தவான்மீகியென் றுரைப்
தனிமறைவிளம்புசௌளமேமுதலாச்சாற்றுநல்வினைபுரிந்தனனுல். ௬

பொருவருந்திறலான்பரதனென் றுரைப்போன்புட்கரனெனும்புரவலனே
டிருநிலம்புகழுந்தக்கனையீன்றனிலக்குவனங்கதனுடனே
தரியலர்வணங்குஞ்சந்திரகேதுதனையுயிர்த்தனன்சொல்சத்துருக்கன்
சொரிமதுத்தொடையான்சுவாகுவினேடுஞ்சுருதசேனனையளித்தனனுல்

பொன்னிறச்சீதையுருவமொன்றமைத்துப்புரவியின்வேள்விபத்தாற்றும்
கன்னியநதுளவமுருந்தனென் றுரைக்குங்கரியவன்சாலையிலடைந்து
தன்னெழிற்சரிதமுனிவரனருளாற்றநயர்கள்பாடுதல்கேளாப் [ன்
பன்னருமுவகைப்பரவையின்மூழ்கிப்பல்பொருள்பெறுதிரென்றிசைத்தா

மைந்தரவ்விராமன்பணித்தசொல்கேளாமாதவம்வனத்திடைபுரிவோ
ர்,நந்தலில்பொருள்வேட்டடைதறீதென்னநவிற்றினர்போயபின்றுதன்,
இந்தநல்லவையோர் யாவருங்காண வியம்பருஞ்சூளுரையதனுல், கொந்த
லர்குழலாள் சீதையையடைவேன் கொணருதிர் விரைவினென் றுரைத்
தான். ௯

அவ்வுரைகேட்டதூதர்போயிசைப்பவருந்தவம்புரியும்வான்மீகி [வி
கொவ்வையங்கனிவாய்சசீதையைக்கொணர்ந்து சோதிலாவவைக்களநிறு
எவ்வமில்கற்பாற்பழிப்பிலளிவளென் றிசைத்தனன்சீதையுமிசைப்பாள்
செவ்வியகற்பிற்றிறம்பிலேனென்னிற்சேர்கெறிபுவிதருகென்றாள். ௰

என்றலுந்தரைவிண் டிடவதினெழுந்த வெரிமணித் தவிசிடையே ந்தி, மன்றலங்குழலாள் சீதையைப்புவியான் வௌவினன் யாவருமறுகக், குன்றெனுந்திணிதோட் கொற்றவன்சீறிக் குவலயமடந்தையைக் கோறும், வென்றியாங்கணையா லெனவயனுற்று வெகுளிநீ யொழிதியென்றுரைப்பான். கக

## அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

திருந்திழைச்சீதையெம்மோய்சேர்ந்தனடிகழ்வைகுந்தம்
பொருந்துதியெந்தாயென்னுப்போற்றினன்போயபின்னர்
அருந்திறலையனன்னுளகன்றதற்கயர்ந்தான்போலின்
மருந்துறழ்மனையார்தம்மைப்பிரிந்தெவர்வைகவல்லார். கஉ

மருவியமைந்தர்தம்மைமலர்புரைசையிற்புல்லி
உருகியவுள்ளத்தோடுமுவப்பொடுமுச்சிமோந்தான்
அருளொடுபதின்மூன்றாயவாயிரம்பருவமாநீர்
இருநிலம்புரந்தான்செங்கோலிராமனென்றுரைக்குமெம்மான். கங

மருவுதன்புதல்வருக்கும்வயங்குநலிளைஞர்பெற்ற
பொருவரும்புதல்வருக்கும்புகல்புகத்திசைகடோறும்
கருணைசெய்திருந்துவையங்காக்குமாமௌலிசூட்டித்
தரைபுகழ்சரயுவுற்றான்சதுமறைமுடிவிலுற்றான். கச

கோசலநாட்டுமேயசராசரமனைத்துங்கூறும்
தேசுறுவானஞ்சாரத்திருவருள்புரிந்திராமன்
பேசியவிளைஞரோடும்பிறங்குவைகுந்தமெய்தி
ஆசறுமாவப்பாயலாதியாயமர்கின்றானல். கரு

என்னையாளுடையவையனிராகவன்சரிதமீதை
மன்னுமாதவருமேலாம்வானவர்முதலினோரும்
பன்னுமின்னமுதமூறப்பாடுநர்வீடுசேர்வர்
சொன்னவிக்காதைகேட்போர்துயாறுநலந்துய்ப்பாரால். கசு

மருவிளைகாட்டின்மேயவானரர்துணைபோன்மேவ
அருவினைமூட்டும்பொல்லாவரக்கரையமரின்வீட்டும்
ஒருவிளையாட்டுநெஞ்சத்துவந்தருளிராமனீன்ற
குருவிரிசூட்டுவைவேற்குசனதிதியைப்பெற்றானல். கஎ

அருள்புரிந்துலகங்காத்தவதிதிதன்மரபில்வந்து
மருவினன்மருத்தென்றேதுமன்னவனன்றேனின்னும்
சருதருந்தவநன்றாற்றிக்களபநற்கிராமமென்னும்
ஒருநகருறைகின்றானுவரைதருங்கலிகாலத்தின். கஅ

சூரியன்மரபொன்றின்றித்தொலைவுறமீட்டுமெந்த
ஆரியமரபைமேவுமாதியாமுகத்துண்டாக்கிப்
பாரகம்புரப்பானன்னேன்பகர்பெருமரபின்மன்னர்
தாரணிபுரந்துபோயார்சாற்றுமம்மரபுதன்னின். சகூ

சொல்லுமிக்கலியினின்னுஞ்சுமித்திரனந்தமாக
நல்லெழிலரசர்தோன்றிநானிலங்காப்பர்சில்லோர்
மல்லமர்மணிப்பூணிக்குவாகுவின்மரபுபின்னர்
செல்லுறழ்தடக்கைவேந்தேதீருமென்றுரைசெய்தானல். உ0

தன்னுடைச்சோதிக்கெழுந்தருளியகதையுரைத்தவத்தியாயம்
முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௩சக.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## கக-வது, நிமிமரபுரைத்தவத்தியாயம்.

---

கலிநிலைத்துறை.

இக்குவாகுவென்றிசைதருநிருபர்கோனீன்ற
மக்கணூற்றுவர்தங்களினிமியெனுமன்னன்
மிக்கசீர்புனைமரபினைவிண்டுராதனுக்குத்
தொக்கநான்மறையொருங்குணர்சுகமுனிசொல்லும். க

இமிழ்தடந்திரையிருநிலமினிதினேப்புதல்செய்
நிமியெனும்பெயர்மன்னவனெடுமகம்புரிவான்
அமிழ்தருந்தினர்புகழ்தருவசிட்டனையழைப்ப
உமிழ்செழுங்கதிர்வேலவவெனமுனியுரைப்பான். உ

அரியமாமகமிந்திரனாற்றுவான்றொடங்கி
உரைசெயைந்துநூறென்னுமாண்டொழிந்தனவின்னும்
விரவுமைந்துநூறுண்டினவ்வேள்விமுற்றுறம்பின்
பொருவினீமகம்புரிதரப்புகுவலென்றுரைத்தான். ௩

என்றுகூறலுநிமியெனுமன்னவனெய்தி
ஒன்றுமாக்கையிங்குறைவதுதிண்ணமதன்றால்
துன்றுசீரறஞ்செய்வதேதுணிபெனவெகுளி
வென்றகோதமனைமகம்விருப்பொடாங்கிழைத்தான். ௪

ஈரைஞ்ஞூறெனுமாண்டிழைப்பேனெனும்வேள்வி
ஓரைஞ்ஞூறெனுமாண்டவனிழைத்துறைநாளின்
சீரைஞ்ஞூறொடைஞ்ஞூறுறுசெங்கணான்வேள்வி
பாரினான்முறைமுற்றுவித்திருந்தவன்படர்ந்தான். ௫

அரியமாதவவசிட்டன்வந்தடைந்தமையறியா
துரைசெய்வேலவனுறங்கினனுறங்கலுமுரவோன்
வருதிநீயெனவழைத்துமுன்வரவுமீங்கெண்ணான்
பொருவிலாவுடலொழிகெனவுரைத்தனன்புழுங்கி. ௬

உறங்கினேன்விழித்துரைத்ததுகேட்டவனுறுதல்
அறிந்திலேன்றனைச்சபித்தமெய்யருந்தவன்றானும்
இறந்துநீங்கவென்றுரைத்தனனிருவருமிறந்தார்
சிறந்தவெங்குலச்செழுந்தவன்பிறந்ததைத்தெரிக்கின். ௭

மருத்தழைந்ததார்மித்திராவருணருக்கன்பு
பொருத்துருப்பசிநிமித்தமாய்ப்பொலிந்தபொற்குடத்தில்
அருத்தியுற்றமெய்யருந்தவத்திட்பமோடடைந்தான்
உரைத்தமைத்திராவருணியென்பெயருமாங்குற்றான். ௮

உயிரொழிந்திடுநிமியுடற்குயிர்வரவுதவிச்
செயிரொழிந்திடுமுனிவரோடமரர்சேர்ந்தெழுப்ப
வெயிறழைந்தவேன்மன்னவன்விடுத்தவவ்வுடலம்
துயர்தழைந்திடவெடுக்கிலெனெனச்சொலித்துறந்தான். ௯

நிமிபெரும்புகழ்விதேகனென்றெவர்களுநிகழ்த்த
இமைதொறுங்கலந்திருந்தனனிமையவர்வரத்தின்
அமரருந்தவராசுடல்பேணினராங்குக்
கமழுநெய்பொழிந்தம்மகமுடித்தனர்கவின. ௧௦

உடலையந்தணருலகினுக்கரசுறவேண்டிக்
கடையவந்தனரோரிறைகடைதலிற்சனித்தாங்
கடைதலாலவனறிவுடைச்சனகனென்பெயரும்
மிடலொடும்மதனத்தினின்மேவிவந்துறலால். ௧௧

மிதிலனாமெனும்பெயருமுன்விளம்பியவிதேகன்
மதலையாகிவைதேகனென்பெயரும்வந்தியையப்
புதியமாநகரொன்றமைத்தனன்புகனகரும்
துதிசெய்மாமதிண்மிதிலையென்றுயர்ந்ததுதிப்பான். ௧௨

சனகனீன்றசேயுதாவசுவாமவன்றானும்
அநகனாந்திவர்க்கனன்றனைமகிழ்ந்தளித்தான்
வினையிலானவன்சுகேதுவைநல்கினன்விருப்பின்
சினவுவேலவன்பெற்றனன்றேவராதனையே. ௧௩

அறங்கொணெஞ்சினன்றேவராதன்றருமாசன்
பிறங்குவேற்பிரகத்திரதன்றனைப்பெற்றான்
மறஞ்செய்தானையாவீரியனும்வயமைந்தன்
கறங்குமாப்படைச்சுகிர்த்தவனல்கியகாளை. க௪

திட்டகேதுவாமன்னவனுதவியசெம்மல்
எட்டுமாதிரம்புகழுரியச்சுவனென்பார்
மட்டுவார்தொடையன்னவன்மருவினையளித்தான்
பெட்டசிந்தையாலவன்பிரணிந்தகற்பெற்றான். க௫

அன்னவேந்துமோர்கிருதிதன்றனைப்பெறவவனும்
பன்னுதேவமீடன்றனைப்பயந்தனன்பகர்வோன்
மின்னும்வேல்விதூர்த்தன்றனையுதவவவ்வீரன்
மன்னுசீர்மகாகிருதியைமகிழ்ந்தளித்தனனால். க௬

## எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

இளரொளிமணிப்பூண் கெழுமுதோளேந்தல் கிருதிராதன்றனைப் பெற்றான், அளியுளர்நறுந்தார் புனைதருவெள்வே லவன்மகாரோமனை யளித்தான், களிசெயுமெகினப் பழனநாடுடையோன் சுனகரோமாவினை யளித்தான், இளநிலவொழுகு முத்தவெண்குடையா னிரச்சுவரோமனை யீன்றான். க௭

அடையலர்நெய்த்தோர் நுகர்ந்துதேக்கெறியு மாடல்வேன்மன்னவ ன்மைந்தன், துடியிடைமடவார் மதனெனுஞ்சீரத் துவசனுஞ்சனகனெ ன்றுரைப்போன், படைகொடுவேள்வி புரிதரவுழுசாற் பாப்பெழுஞ்சீதை யைமகிழ்ந்து, கடிமணமயா வோமொழிப்பொருளாங் காகுத்தற்களித்த னன்களிப்ப. க௮

விண்ணவர்புகழ மிதிலைநாடளிக்கும் விரிகதிர்மணிமுடி வேந்தன், பெண்ணணங்காய சீதையாங்குதிப்பப் பெட்பொடு முழுதசீரத்தால், நண்ணுபேர்சீரத் துவசனென் றுரைக்கு நலந்திகழ்சனகன்றன் மைந்தன், தண்ணளிகூருங் குசத்துவசன்றான் றருமநற்றுவசனைத் தந்தான். க௯

தருமநற்றுவச னகித்துவசனையுஞ் சாற்றியமிதத்துவ சனையும், இருநிலத்தரச ராகவீன்றெடுத்தா னிருவருண்முன்னவ னென்போன், விரிபுகழ்க்கேசித் துவசனையுயிர்த்தான் விளம்புமப்பெயருடை வேந்தன், புரையறுஞானக் கடலிடைக்குளித்துப் புவிப்பொறைதவர்த்தினிதளித்தான்.

விரும்பெழில்கெழுமு மிதத்துவசப்பேர் வேந்துகாண் டிக்கனையளித்தான், பொருந்துநற்கருமத் ததிசயித்தன்னோன் புரந்தினிதருளுநாட் புகன்ற, பெரும்புகழ்க்கேசித் துவசனுக்கஞ்சிப் பெயர்ந்துகாட் டகத்தம ர்ந்தனனேற், கரும்பெறற்கருமத் தையுறவொழித்தங் கவன்சொலுஞா னமுழுணர்ந்தான். உக

ஞானவாரிதிகே சித்துவசப்பேர் நரபதிமகிழ்தர வுதித்தான், பானு மானன்னேன் வழிவருமரசர் பலருளர் நிமிமரபுதித்தோர், தேனவாந் தொடையாய் சிறந்தநல்வினையாற் சிமிழ்ப்புண்டார்போன்றிருப்பினுநல், மோனமாதவரும் வியப்பமெய்ஞ்ஞான முதிர்ந்துளாரெனமுனி யுரைத் தான். உஉ

நிமிமரபுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩௬௩.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## ௧௨-வது, சந்திரன்மரபுரைத்தவத்தியாயம்.

### கலிவிருத்தம்.

சுந்தரவடவரைசூழுஞ்செங்கதிர்
வெந்திறன்மரபுகேட்டுவந்தவேலவன்
சந்திரமரபினிச்சாற்றுவாயென
மந்திரமறைமுனிமகிழ்ந்துகூறுமால். ௧

அந்தமிலாழிதாங்கங்கைமாயவன்
உந்தியம்போதிடையுதித்தநான்முகன்
தந்தனனத்திரிதன்னையன்னவன்
இந்துவையளித்தனன்விழியினென்பவே. உ

மாதவன்கண்ணின்முன்வந்தமாமதி
வேதியரொடுங்கருவிண்ணின்மீன்புலன்
ஏதமில்வண்பதிக்கெழில்செய்வேந்தெனப்
போதுறுமயன்முடிபுனைவித்தானரோ. ௩

மணிமுடிவனைதரமகிழ்ந்துசந்திரன்
இணையறுவலியினுலிராசசூயமாம்
அணிபெறுமொருமகமாற்றிமுச்சகம்
பணிசெயவுவகையம்பரவைமூழ்கினுன். ௪

இருநிதிச்செருக்கினலிமகரன்குரு
மருவியதாரையைமணந்துவைகினன்
அரியவெஞ்சமர்செயவழன்றுவானுறை
சுரரொடுமாமதிதுனைவினெய்தினன். ௫

தாரையைவிடுத்திநீயென்றுசார்ந்திரும்
போரினைநனிசெயும்புலவர்தம்மொடும்
சூருடையசுரரைச்சுடரும்வெள்ளியை
ஏருடையிமகரனியைந்தங்கேற்றனன். ௬

எதிர்பொருமவ்வழியெய்திநான்முகன்
துதிதருகுருவெனுஞ்சுடர்செய்பொன்புணர்
கதிர்முலைவனிதையைக்கலந்தென்கொனின்
மதியெனவழங்கலுமதிவிடுத்தனன். ௭

சந்திரன்விடுத்தலுஞ்சார்ந்ததாரையை
அந்தணனேக்கிவம்பலனணைந்துறும்
இந்தவெங்கருவொழிகெனவுயிர்த்தனள்
சுந்தரம்விளங்கொருதோன்றலாகவே. ௮

புனைதருகருங்குழற்பூவைநல்கிய
தனியெழிற்குழவியைச்சார்ந்துநோக்கலும்
பனிமதிக்கடவுளும்பகர்ந்தசீவனும்
எனதெனதெனவவணெக்கற்றுரோ. ௯

முனிவருமமருமோகமைந்தனைக்
கனிமொழியாரைநீகலந்துபெற்றனை
எனவவண்வினவலுமிடர்செய்நாணொடு
துனியொடுதாரைசொல்லாதுவைகினள். ௧௦

தாரையைப்பார்த்தயன்றநயனைப்பெற
ஆரைநீமணந்தனையென்னவன்னவள்
பாரினைநாணொடுநோக்கிப்பைப்பயப்
பேருறுமதிக்குநான்பெற்றதென்றனள். ௧௧

ததைமலர்க்கருங்குழற்றாரைசாற்றலும்
கதிரொளிகளுலியகாதலோன்விதி
மதிமகனென்னவும்வயங்குபுந்தியால்
புதனெனவழங்கவும்பெயர்பொருந்தினன். ௧௨

பெருந்திறற்புதனெனும்பெயரினன்முனம்
திருந்திழையிளையெனச்செப்புமங்கையாம்
மருந்துறழ்சாயலைமணந்துபெற்றனன்
பொருந்தலர்வணங்குவேற்புரூரவாவையே. ௧௩

அன்னவனற்குணமறிந்துநாரதன்
பொன்னகரடைந்தனன்புகழ்ந்துபாடினன்
மன்னெழிலுருப்பசிமகிழ்ந்துகேட்டனள்
துன்னழன்மெழுகினிற்சோர்ந்துநின்றனள். ௧௪

மருவியமித்திராவருணரென்பவர்
உருகுதலறிந்தவணுரைத்தசாபத்தால்
தரைமிசையுருப்பசிசார்ந்துநோக்கினள்
அரசனையரசனுமவளைநோக்கினன். ௧௫

தரவுக்கொச்சகக்கலிப்பா.

கண்டானல்வியப்புற்றான்கவினமமுதுகண்ணால்
உண்டான்போலுள்ளுவந்தானொளியிலழையிங்கென்னுயிராய்த்
தண்டாமலுறைதியெனத்தாங்கரியகாதலுரை
விண்டானவ்வுரைகேட்டமெல்லியலும்விள்ளுவளால். கசு

அங்கணிலவேந்தேநின்னழகினலங்கண்டிணையத்
துங்கவெழின்மதனுமொருதோகையுருக்காதலிப்பான்
இங்கணெனிற்றேயநனியிருந்தவத்தினாற்கிடைத்தாய்
மங்கையர்யார்நின்னகலமருவாமலொழிபவரே. கஎ

உன்னவரும்பல்சுவையாமுணவொழிந்துநெய்யருந்தி
நின்னகலம்புல்லிப்பனெடும்பகல்யானிவணிருப்பல்
என்னொடுநன்னேயநல்கவியைந்தவிந்தயாடிரண்டும்
மன்னவர்கண்மன்னவெனைமகிழ்ந்துறையக்காத்தருளே. கஅ

கோடாதசெங்கோல்கொள்குரிசிலெனநிலவரைப்பின்
வாடாமலுணவுதவவந்தவிந்தயாடகலின்
தேடாதிருப்பினுநீசேர்ந்ததுகிலின்றிவர
நாடாதநின்னுருவநாடினுநான்றீர்குவனால். ககூ

என்றுநயமொழிகூறியியைந்தெழில்செய்கின்றவிரு
குன்றினொடுமிகல்குன்றங்கொடுஞ்சமருற்றுடற்றுதல்போல்
வென்றிதருவேலோன்றன்விளங்குமணிசேர்புயத்தின்
நன்றிதருகொங்கையிணைநெருங்கநலனுண்டனளே. உ0

இன்னணமவ்வேந்துமணியிலங்கிழையுமின்பநலம்
மன்னமுதமுண்டுநெஞ்சுமகிழ்ந்துநெடுநாள்கழித்தார்
உன்னிவிசும்பாரரசனுருப்பசியைநீத்தலிற்றன்
பொன்னகரும்வான்செவ்விபொலிந்திலதென்றேவுதலால். உக

கந்திருவரன்னோர்கள்கலந்துறையுநள்ளிரவில்
அந்தமுறுபேர்யாட்டையடைந்தாற்றவவ்வுதலும்
சிந்தைமகிழ்செய்வோனைச்சிறந்தவென்றனாட்டினையார்
வந்துபிடித்தார்கொலெனமடந்தையதுநேர்ந்தனளால். உஉ

தோய்ந்துறையுமவ்வேந்தன்றுகிலொழியவல்லையெழுந்
தாய்ந்தவர்கள்விட்டேகுமாடுகொடுமேவுதலும்
வாய்ந்ததொருமின்னன்னாள்வனைதுகிலில்லாவேந்தை
ஏய்ந்தெழிலாள்கண்டனளங்கிருவிசும்பினேகினளே. உங

முன்பொருந்துமுருந்துறழ்வெண்முகிணகையங்கேகுதலும்
என்பொருந்திவைகாமலெழுந்தனளென்றென்றிரங்கிப்
பொன்பொருந்திப்போக்கிமிகப்புலம்புமவறியோர்களென
மன்பொருந்துமையறனைவழங்கவெவர்வல்லுநரே. உச

ஏங்குமெழுமோடலுறுமிருக்குமிறைபதைபதைக்கும்
ஓங்குமொளிநுண்ணுசுப்பாளுருவெளியைக்கண்டுவக்கும்
வாங்குமிடைமின்னொளித்துவந்தனையோவென்றுவக்கும்
நீங்குமுயிர்மீண்டுவந்துநிலைத்ததெனக்கென்றிசைக்கும். ௨௫

சூட்டுமலர்புனைதாழ்மென்சுரிகுழலின்மூரலமிழ்
தூட்டவனுசாதொழியினுய்யேனென்றிருகரமும்
நீட்டியணையத்துனைந்துநினைத்துருவுகாண்கிலனாய்
மீட்டுமெனைக்காந்தனையோவெனவுள்ளமெலிந்திடுமே. ௨௬

கொன்னஞ்சுசொடுபொன்னங்குழைபொருதவயில்விழியும்
மின்னஞ்சுகின்றவொருமெல்லிடையுங்கொங்கையுங்கொண்
டென்னெஞ்சுதான்கொடுசென்றிரங்காமேபோய்க்கரந்த
கன்னெஞ்சுகொண்டனையாற்காட்டுவாரெனக்கலுழ்மே. ௨௭

மையோடுமொளிகூர்வேல்வரிவிழிமுன்புல்லியது
மெய்யோவஃதன்றுயின்விளங்குகனவாகியதோர்
பொய்யோவிஃதென்றெனக்குப்புலப்படுதலில்லையெனும்
ஐயோமதன்கணையையார்விலக்குவாரெனுமே. ௨௮

தண்காட்டின்மேவந்துதயங்குகிளிகாளுமைப்போல்
பண்காட்டுந்தீஞ்சொலெழிற்பாவையெங்ஙன்பகருமெனும்
வெண்காட்டுந்திங்கண்முகமெல்லியலையன்னவடன்
கண்காட்டுமான்காணீர்காட்டாததென்னெனுமே. ௨௯

பாட்டுவரிவண்டுநணிபடியுமதகரியுனது
கோட்டினண்ணுந்தெழுந்தமுலைக்கொம்பினைநீகண்டதுண்டோ
காட்டுதிநீயிங்கென்னுங்கலந்தபிடிகாளுமைப்போல்
பூட்டுமிழையாணடந்துபோயநெறியேதெனுமே. ௩௰

காந்தளைநேர்கரதலத்தாள்சாந்தவழிமாமலைவாய்க்
காந்தளையின்வாழரிகாள்கண்டீரோகழறுமெனும்
மாந்தளிர்போற்பொலமேனிமயிலையெங்குந்தேர்ந்துநறை
மாந்தளிகாளென்னைகொலோவழங்காதவாறெனுமே. ௩௧

கலிநிலைத்துறை.

இன்னவாறுளம்வருந்தியபுரூரவாவென்னும்
மன்னர்தாழும்வேன்மன்னவன்மகிழ்ந்துருப்பசியைச்
சொன்னவாண்டினுக்கொருமுறைகண்டனன்றோய்ந்து
பன்னுமாயுவேமுதலிருமூவரைப்பயந்தான். ௩௨

உரைசெய்கின்றவவ்வுருப்பசியொள்ளிழையொருநாள்
அரசவென்றனையடைவதற்கொருவகையறைவல்
மருவியாழினர்க்கேட்டியென்றுரைத்தவண்மறைந்தாள்
விரைவினன்னவாறடைந்தவர்க்கேட்டனன்வேந்தன். ௩௩

கலிநிலைத்துறை.

விஞ்சைமன்னவர்வேந்துவந்துரைத்தலும்விருப்பால்
மஞ்செனுங்குழலுருப்பசிமுலைமுகமணப்பான்
எஞ்சலின்றிநீயெழின்மகமியற்றெனவியம்பி
அஞ்சுடர்க்கனற்றாழியொன்றளித்தனரன்றே. ௩௪

கொடுத்தவங்கியந்தாழியைக்கொணர்ந்திடையதர்க்கண்
விடுத்திதென்கொலென்றரசனுநகரிடைமேவ
எடுத்தியம்பியவிரண்டெனுமொழியான்றாளின்
அடுத்ததாதலாற்கருமம்வந்தவனுளத்தடைந்த. ௩௫

கமழ்மலர்த்தொடைக்காவலனுருப்பசிகலப்பான்
இமையவர்க்கிதஞ்செய்மகமியற்றுவலெனப்போய்
உமிழ்கதிர்க்கனற்றாழியையுய்த்துழிக்காணன்
சமிகருப்பமாந்தடஞ்சினையரசவட்கண்டான். ௩௬

கண்டிரும்பினிற்கருதியநூல்வழிகுறைத்துக்
கொண்டுவந்துமேலரணிதானுகமுன்கூறும்
கெண்டையந்தடங்கண்ணினுருப்பசிகீழா
அண்டரும்புகழரணியாமதிக்குமத்தண்டம். ௩௭

இலிங்கமாகவங்கெண்ணினன்கடையவங்கெழுந்த
புலிங்கமார்தழன்மூன்றெனப்பிறிந்தனபொருந்தத்
துலங்குவேதமுமூன்றெனப்பிறிந்தனசொல்லும்
நலங்கொள்வேள்வியும்பற்பலபுரிந்தனனவில்வோன். ௩௮

ஆதியாம்யுகத்தருமறைகுடிலையாயடங்கும்
சோதிமாயவனொருத்தனுங்கடவுளாய்த்துலங்கும்
சாதியோர்வகைத்தாக்கியேசத்துவகுணத்தாம்
பேதமாகியவினையின்றிஞானமேபிறங்கும். ௩௯

அரியவாதியாம்யுகமொழித்தாங்கிரண்டாய
உரைசெயூழிவந்தடைதலாற்கருமமுண்டாக்கிப்
பொருவில்வேள்விகள்புரிந்தவப்புரூரவாவென்போன்
மருவினனுருப்பசிமுலைவானுலகடைந்தே. ௪௰

சந்திரன்மரபுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௪௰௩.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்

---

# ௧௩-வது, பரசுராமவிசுவாமித்திரர்கதையுரைத்த வத்தியாயம்.

---

## கலிநிலைத்துறை.

இசைநிலாவெடுத்தியம்பியபிதாமகனெய்ப்ப
வசையிலாவுருப்பசிமுலைமணப்பவங்குதித்தோர்
அசைவிலாயுநற்சுதாயுவுசத்தியவாயு
விசையன்வேற்சயன்ரயனெனவறுவராம்விளம்பின். ௧

தாமவார்குழலார்க்குவேள்சுதாயுவென்றுரைப்போன்
வாமமேவியசீர்வசுமான்றனையுயிர்த்தான்
தாமவேலினான்சத்தியவாயுவென்றுரைப்போன்
நாமமாப்படைச்சுதஞ்சயன்றன்னைநல்கினனால். ௨

ரயனெனேந்தனற்சுருதனோடேகனையீன்றான்
சயனெனுந்திறலோனமிதன்றனைத்தந்தான்
வியனிலம்புகழ்வீமனையுயிர்த்தனன்விசயன்
பயன்படுந்திறல்வீமனுங்காஞ்சநற்பயந்தான். ௩

தரைக்குவேந்தனுங்காஞ்சனனோத்திரற்றந்தான்
திருத்தகுந்திறலான்றருசன்னுவாந்திறலோன்
இரைத்துவேள்வியினெய்தியகங்கையுண்டினன்போல்
விரித்தபைங்கதிர்க்குழையணிசெவிவழிவிடுத்தான். ௪

மன்னுகங்கையாள்சாநவியெனும்பெயர்மருவ
முன்னுகர்ந்துதன்செவிவழிவிடுத்தவம்முனைவன்
சன்னுவென்பவன்றந்தனன்பூருவைத்தந்தான்
அன்னவன்வலாகனையவனசகனையளித்தான். ௫

குசனெனுந்திறன்மன்னனையவன்றரக்குசனும்
இசைவளர்ந்தவேற்குசாம்பனோடெழில்கொளதூர்த்தன்
திசைபுரந்திடுந்திங்களங்குடைக்குசநாபன்
வசுவெனும்பெயர்நால்வரைப்பெற்றனன்மகிழ்ந்தே. ௬

ஓதுநால்வருட்குசாம்பனென்றொளிபெறுமுரவோன்
காதியென்னுமோர்மைந்தனைத்தந்தனன்காதி
தாதுசேர்குழற்சத்தியவதிதனைத்தந்தான்
மாதைமாமறையிருசிகன்மணஞ்செயமதித்தான். ௭

மதித்தமாமுனிமன்னனையெய்திரின்மகளை
விதித்தமன்றலினுதவெனவேந்தனுந்தருவன்
உதித்தமாமதிபோல்விளர்த்தொருசெவிபசுத்துத்
துதித்தவாயிரந்துரகதந்தரியெனச்சொன்னான். ௮

பெற்றகோதையைத்தரமணம்பொருந்திடான்பேசும்
கொற்றவாம்பரிவருணனைக்கேட்டனன்கொணர்ந்து
முற்றமாதவமுனிவரன்கொடுத்துமுன்மொழிந்த
கற்றைவார்குழற்கன்னியைமணந்தனன்களித்தான். கூ

ஏதநீங்கியமகப்பெறவிரும்புமில்லவட்கும்
ஓதுமாமியென்றுரைதருமொள்ளிழைதனக்கும்
தீதுநீங்குதங்குலத்தினுக்குரியநற்சிறுவர்
காதலால்வரவிருசிகமுனிவரன்கருதி. க0

பிரமமந்திரத்தாலுநற்பெரும்புகழரசற்
குரியமந்திரத்தாலுமுண்டாக்கிருவகைத்தாம்
சருவைமாறியவ்விருவருநுகர்ந்தனர்தாங்கும்
கருவைநோக்கின்னகாதலிக்கம்முனிகழறும். கக

உனக்குவைத்திடுஞ்சருவைநீதாய்க்களித்துத்தாய்
தனக்குவைத்தவச்சருவினைநுகர்ந்ததன்மையினால்
சினக்குநெஞ்சுடைச்சிறுவனைப்பெறுகுவைதிருத்தாய்
மனக்கிதஞ்செயுமைந்தனையுயிர்ப்பளென்றிசைத்தான். கஉ

என்றுகூறலுமனையவளிரங்கினளெனக்கு
நன்றிசெய்யுநன்மைந்தனைநல்கெனநவிலாத்
துன்றுமாதவற்றொழத்தெறுதுன்னலர்ச்செகுத்து
வென்றியேபுனைமகப்பெறுகெனமுனிவிதித்தான். கந

சாற்றுமாறடருஞ்சமதங்கியாமுனியைப்
போற்றுமாறுபெற்றுவந்தனள்கவுசிகைபுகலும்
சீற்றநீங்குதன்னாயகன்வீடுறச்செல்ல
ஆற்றுமாதவத்திருநதியாயினளன்றே. கச

அயர்வொழிந்திடுசத்தியவதியெனவறையும்
பெயர்பொருந்தியகவுசிகைதாயெனும்பேதை
துயரகன்றிடவானவர்முதலினர்துதிக்கும்
உயர்பெருந்தவக்கோசிகன்றன்னையாங்குயிர்த்தாள். கரு

தரைசொன்மாதவஞ்சாருமெய்ச்சமதங்கிதழங்கு
முரசமார்ப்புறரேணுகைதனைமணமுயன்று
கருதுசீர்புனைசிலமகவுயிர்த்துமால்கலையாம்
பரசுராமனைப்பார்பொறைநீங்குறப்பயந்தான். கசு

பரசுராமனென்றுரைதருபசுந்துளவணிவோன்
அரசர்யாவருமடிதொழுமாயிரந்தடக்கைக்
குரிசிலாகியகாத்தவீரியன்றனைக்கோறல்
உரைசெய்வேனெனச்சுகமுனியரசனுக்குரைப்பான். கஎ

கலிவிருத்தம்.

தத்துதெண்டிரைச்செழுந்தரணிகாத்தபூங்
கொத்தலர்தொடையலாய்குமாரனாகவே
அத்திரிபுதல்வனையடைந்தோராயிரம்
கைத்தலம்படைத்தனன்காத்தவீரியன். ௧௮

எத்துசீர்விதுகுலத்துதித்தவேந்தலாம்
காத்தவீரியன்வலிகழறயார்வலார்
சீர்த்தியானொருகுடைநிழற்றித்தெண்டிரை
ஆர்த்தவேழ்வாரிசூழவனியோம்புநாள். ௧௯

பாடினவளியினம்பரந்தபைந்தொடை
சூடினநறுங்குழற்றோகைமாரொடு
நாடினனருமதைநண்ணிநீர்விளை
யாடினனாயிரங்கையினனரோ. ௨௦

எண்ணுறுதிசைகளுமேகிவென்றவத்
தெண்ணுறுபடையொடுமிலங்கைமன்னவன்
கண்ணறுஞ்செழுமலர்களுலுமந்நதிக்
கண்ணகன்கொழுங்கரைகலந்துவைகினான். ௨௧

காயிருங்கதிர்செய்வேற்காத்தவீரியன்
ஆயிரங்கரத்தினாலடைத்தங்காடலும்
மேயநன்னதிப்புனன்மீண்டிலங்கையார்
நாயகன்றோய்தானனைத்ததென்பவே. ௨௨

எண்டிசைவென்றவனிறுத்தராவணன்
தெண்டிரைநதிப்புனறேங்கலென்னென
மண்டமர்வெம்படைமருவிமன்னனைக்
கண்டமர்விளைத்தனன்கனன்றுநெஞ்சமே. ௨௩

தாங்கநன்னதிக்குடைதடக்கைமன்னவன்
குரங்கினைப்பிடித்துடன்கொணருமாறுபோல்
இரங்குறக்கைப்பிணித்திலங்கைமன்னனைப்
புரங்கொடுபுகுந்தனன்புகுந்தமாலைவாய். ௨௪

மாதவப்புலத்தியன்மருவிமன்னநின்
எதமில்வலியையாரியம்பவல்லாரென்
றோதினன்விடுத்தியென்றுரைப்பவெய்யனை
மேதகுகுணத்தினான்விடுத்திட்டானரோ. ௨௫

மூவகையுலகமுமொய்ம்பின்வென்றநேர்
தாவரும்புகழ்த்தயமுகனையும்பிணித்
தாவயின்விடுத்தவவ்வரசர்கோமகன்
மேவினன்வனத்திடைவேட்டமாடுவான். ௨௬

வேறு.

குமுதக்கனிவாயினர்கொங்கைசொல்கும்
பமதக்கரிபற்பலகொண்டெதிர்வோன்
சமதக்கினிசாலையடைந்தடிசில்
அமுதக்கனிநெய்யொடருந்தினனல். உஎ

படையோடுணவுண்டுறைபைந்தொடையான்
நடையோடுமெருந்தவனோடுபணி
விடையோடுறைதேனுவைவீர்கொடு
புடையோடுறவேநகர்போயினனல். உஅ

வளமேவியதேனுவைமன்னவர்கோன்
ஒளிமேவியவூர்கொடுபோயதறிந்
தளிமேவியவம்முனிமைந்தனெனும்
நளிமேவியராமகைத்தெழலா. உகூ

சொல்லும்பரசோடுசுடுஞ்சரமும்
வில்லுங்கொடுபோந்துவிரைந்தெதிராச்
செல்லும்பரிதேர்கரியாள்களின்மேல்
கொல்லுங்கணைகோடிவிடுத்தனனே. ௩0

வேறு.

பொருதுவென்றுநீர்புகுதுவென்றுமுன்
அரசனேவியவக்குரோணிகள்
பரிதிவேற்படைப்பதினைன்றேழையும்
ஒருவனாகநின்றொறுத்திட்டானரோ. ௩க

பண்டைநான்மறைப்பரசுராமனல்
அண்டகோளகையதிரவார்த்தெதிர்
மண்டுபோரிடைமைந்தர்மாய்வது
கண்டுபோர்செய்தான்கார்த்தவீரியன். ௩உ

ஐந்துநூறுகையாடல்விற்கொள
ஐந்துநூறுகையம்புதொட்டிட
வந்துவேகமார்வாசிபூண்டதேர்
வந்துபோர்செய்தான்மன்னர்மன்னனே. ௩௩

வெந்திறற்பரசேவவேதியன்
கந்தமுற்றதார்க்கார்த்தவீரியன்
சிந்தினனுயிர்சென்னியற்றவன்
மைந்தர்யாவரும்வல்லையோடினர். ௩ச

ஓமவார்தழற்குரியநல்குமக்
காமதேனுவைக்கண்டுகொண்டுடன்
சேமமாதவன்சேர்ந்தசாலைவாய்
நாமராமனுநண்ணினனரோ. ௩௫

தாதைதாளிணைசார்ந்துகைதொழா
ஓதினனவனுற்றவாறெலாம்
நீதிமாதவனெஞ்சுநொந்துகேட்
டேதநீசெய்தாயென்றுசொல்லுவான். ௩௬

சொல்லுமந்தணர் துன்புசெய்துளார்க்
கல்லல்செய்திடாரருளின்வைகுவார்
வில்லொடம்பையுமேவிவேந்தையும்
கொல்லும்வெஞ்சினங்கொண்டதென்கொலோ. ௩௭

காவல்வேந்தனைக்கடிதுகாதுவெம்
பாவநீப்பவிப்பாரின்வைகிய
தாவிநீர்த்தநீசார்ந்துதோய்தியென்
றேவமைந்தனுமேகினனரோ. ௩௮

நீண்டவானதிநீரமாதியாய்
மாண்டநீரெலாம்வல்லையேகியோர்
ஆண்டுமூழ்கினனடர்கணிச்சியான்
மீண்டுசாலைவாய்மேவிவைகுநாள். ௩௯

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

முத்தழற்கருமந்தாதைமுயலுவானறல்வேட்டன்னை
தத்துவெண்டிரைநீர்க்கங்கைசார்ந்தனள்வானில்வாழும்
மைத்தடங்கண்ணாரோடுமருவிநீர்விளையாடுற்ற
சித்திரதனைக்கண்டாடெருமாலுளத்திற்கொண்டாள். ௪0

அன்னகந்திருவற்கண்டாங்காசையுற்றயர்ந்திருப்பாள்
உன்னினளோமகாலமொழிந்ததென்றோடிவந்தாள்
முன்னுறமுனிவனோக்கிமுனிந்துவெம்பிழைசெய்தும்மோய்
என்னுமிங்கிவளைக்கொன்மினென்றலுங்கேட்டமைந்தர். ௪௧

தாயையாங்கொல்லாமென்றுதாழ்த்தனராகத்தாயென்
றேயரேணுகையையிப்போழ்தெம்முறையிகழ்ந்தநின்றன்
நேயமார்துணைவர்தம்மைநீசெகுத்திடுதியென்னத்
தூயமாதவத்தோன்சொல்லத்துணித்தனன்பரசுராமன். ௪௨

தன்னுரைவழாதமைந்தன்றனைநனியுவந்துதாதை
உன்னுளம்விழைந்ததென்கொலுதவுதும்பெறுதியென்ன
இன்னெழிற்பரசுராமனிறந்தவர்பிழைப்பவென்னின்
மன்னியதிறப்பென்றெண்ணுதிருப்பநீவரமீயென்றான். ௪௩

மைந்தனங்குரைத்தவண்ணமாதவனருளமாய்ந்தோர்
உய்ந்தனரெழுந்தாருற்றவுறக்கநீத்தெழுந்தாரேபோல்
தந்தையுந்தாயுஞ்சாற்றுந்தம்முனென்றுரைத்துளோரும்
அந்தமிலுவகைபூப்பவமர்ந்தனன்கணிச்சியாளன். ௪௪

ஒளிபெறுபரசுராமனொழிந்திடும்வேலைநாடிக்
களிறெனப்பொருதுபட்டகார்த்தவீரியன்றன்மைந்தர்
இளநறவொழுகுதாராரிரேணுகைவிலக்கக்கேளார்
நளிபெறுமோமசாலைநண்ணினர்தவனைக்கொன்றார். ௪௫

மனையவண்மார்பினெற்றிமறுகினளழுதுசோரத்
தனியுறைதவத்தினான்றன்றலைகொடுவெய்யோர்போக
முனிவருமுனிவனோரேழ்முனிவரினொருவனாகிப்
புனைமுடியமரர்போற்றப்பொருந்தினன்விளங்கினானால். ௪௬

உற்றதுதண்ணக்கையனொல்லைவந்தணுகிக்கேளாக்
கொற்றவிற்குழைத்துவீரர்க்கொன்றுதன்றாதைசென்னி
பெற்றனன்கொணர்ந்துசாலைப்பெய்திடுமுடலிற்சேர்த்தி
இற்றிடுங்கருமமுற்றவிலங்கழன்மடுத்திட்டானால். ௪௭

அருந்தவன்றலையயன்னோர்தடிந்தவக்காலத்தன்னை
வருந்தினண்மார்பின்மூவேழ்வருமுறைபுடைத்தவாற்றால்
பொருந்தியவறத்திற்றீர்ந்தபுரவலர்தம்மைமூவேழ்
தருந்தலைமுறையுமாய்த்தான்றனிமறைப்பரசுராமன். ௪௮

சமந்தருபரிதிவேலார்தலைதுமித்துயர்ந்தகுன்றம்
சமந்தரக்குவைகள்செய்துதரையிழிகுருதியாற்றால்
சமந்தபஞ்சகமென்றோதுஞ்சலதிநேர்தடங்களாக்கிச்
சமந்தமம்புரிந்ததாதைதருப்பணமுனாற்றினானால். ௪௯

பேசுமந்நவியத்தண்ணல்பெட்பொடுமகநன்காற்றிக்
காசிபன்முதலினோர்க்குக்காசினிபிரித்துநல்கித்
தேசுறுஞ்சித்தராதிதேவர்கள்வணங்கவின்னும்
மாசறுமகேந்திரப்பேர்மலையகத்துறைவான்மன்னோ. ௫௦

காதிசேயென்னமுன்னங்கழறியகௌசிகப்பேர்
மாதவனூற்றினோடுமருவுமோர்மகவைப்பெற்றான்
ஓதியமைந்தர்தம்முளொளிபெறுநடுவனுள்ளான்
கோதறுமதுச்சந்தப்பேர்குலவியகுமாரனாமால். ௫௧

கோசிகன்றவஞ்செய்போழ்துகுலவியமருகனென்பான்
பேசுமம்பரீடன்வேள்விப்பெரும்பசுவாகச்சார
ஆசறுமறையங்கோதென்றருமறையறைந்தானன்னோன்
தேசுறுவேள்விச்சாலைசென்றனன்யூபஞ்சேர்ந்தான். ௫௨

சேர்ந்தவன்முனிவன்சொற்றசெழுமறையுளத்திற்றேற
வார்ந்தசெஞ்சடையோனாதிவானவர்மகத்திற்றோன்றி
ஆர்ந்ததுவேள்வியென்னவரசனுக்கருளிப்போயார்
ஓர்ந்தவம்மறைவல்லோனுமுயர்ந்தொருபெயருமுற்றான். ௫௩

உற்றபேருரைப்பிற்றேவாதனவ்வொருவன்றன்னைக்
குற்றமின்மறையோனுயகோசிகன்மகவாய்க்கொண்டு
பெற்றதன்புதல்வர்தம்முட்பெட்புறு திகழ்ந்துளோரைச்
சொற்றிடுமிலேச்சராகச்சொற்றனன்வெகுண்டுமாதோ. ருச

மருவியமதுச்சந்தப்பேர்மைந்தனேமுதலாமைந்தர்
அருள்புரிதாதைசொல்லையஞ்சிமுன்னவனைக்கொண்டார்
கருதியகௌசிகப்பேர்கலந்தகோத்திரத்தனாகி
உரைதருதேவராதனுவந்தனன்சாலமாதோ. ருரு

புனைதருமலங்கல்வெள்வேற்புரவலபுகன்றகாதை
நினைதருமுணர்வின்மிக்கோர்நிகழ்த்துவோர்நிகழ்த்தல்கேட்போர்
வினைதருபிறவிவேலைவீழ்ந்திடார்வேண்டல்பெற்று
வனைதருதுளவமாயன்மாணடிபெறுவர்மாதோ. ருசு

பரசுராம விசுவாமித்திரர்கதையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் சருகூ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## கச-வது, யயாதிகதையுரைத்தவத்தியாயம்.

---

### எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

பொருதிரையுததிசூழ்புவிபுரந்தபுரூரவாவளித்தருள்புதல்வன்
மருவலர்வணங்குமாயுவென்றுரைப்போன்மைந்தரையிசைக்குறினகுடன்
அருள்புரியரசவிருத்தனோடரசியரம்பனொண்சிலைமதனென்ன
இருவிசும்பாள்வோன்றுதையென்றிறைஞ்சுமேனசுவெனவிளம்புவரால்.

அவர்களிலரசவிருத்தனன்மரபிலாழியான்கலையெனுமரிய
தவர்புகழ்தன்வந்திரியுநல்லிருக்காந்தணிமறைச்சவுனகராதி
நவிலுமந்தணருமறுபதோடாறிணண்ணுமாயிரமெனும்பருவம்
புவிபுரந்தருளுமளர்க்கணேமுதலாய்ப்புகழ்பெறுவேந்தருமுதித்தார். உ

நானிலம்புரந்தநகுடன்முன்னுயிர்த்தோர்நயம்பெறும்யதிபுகழ்யயாதி
வேனிலஞ்செல்வனிவன்கொலென்றெண்ணவிளங்குசையாதியோயாதி
தேனினமுராலுஞ்செழுமலர்த்தொடைவேய்திண்புயவியதிநற்கிருதி [ன்.
ஈனமொன்றில்லாவறுவரென்றுரைப்பாரிவர்களின்யதியெனவிசைப்போ

துறவறம்பூண்டுதுலங்கினனகுடன்சுரர்பதியாய்விசும்படைந்து
நிறைதவத்தெழுமாமுனிவர்சாபத்தாநெடுமலையராவெனவீழ்ந்தான்
மறமிகுங்குடுமிவேலிளையவர்தாமருவுநாற்றிசைபுரந்தளிப்ப
அறைதரும்புகழ்சேர்யயாதியேழ்புவியுமவிர்மதிக்குடைநிழற்றினனால்.

அள்ளிலைநெடுவேல்யயாதியென் றுரைப்பானசுரர்தங்குருவெனவமர்ந்த
வெள்ளிதன்மகளைமணந்தனனென்னவிண்டுராதப்பெயர்வேந்து
தள்ளரும்பெருமையந்தணர்குலத்திற்றையலைமணந்ததென்னரசன்
எள்ளருமுனைவவியம்புதியென்னவிருந்தவமுனிவனிசைப்பான். ௫

காவியனீன்றகதிர்முலைத்துவர்வாய்க்கருங்குழற்கன்னிசெங்கமலப்
பாவையாந்தெய்வயானையென் றுரைக்கும்பணைமருடோளியுமவுணர்
கோவெனுமாடல்விடவருவாவாங்கொற்றவன்பெற்றபூங்குழலாள் [ல்
தூவிலாவெழிலாள்சன்மிட்டையென்னுந்தையலுந்தடங்குடைந்தனரா

ஆயிரமடவார்சூழ்தரவறுவையகன்கரைவைத்தனருவந்து
தூயநீராடும்வேலையினீசன்சுடர்விடுமானமேற்றோன்ற
ஏயபேர்மடவார்யாவரும்விரைந்தங்கிலங்கியதுகில்புனையெல்லை
நேயமார்தெய்வயானைதன்றுனைநிகழ்த்துசன்மிட்டையுற்றுடுத்தாள். ௭

கலிநிலைத்துறை.

காவியன்றருங்கருங்குழற்காரிகைகரைசேர்
ஆவியந்துகிலாங்கவள்புனைதலுமழலா
ஓவியம்புரையொள்ளிழையும்பர்தம்முனைவை
நாவியந்துணுநாய்நிகர்ப்பாயெனநவின்றாள். ௮

மங்கைசொல்லுதல்கேட்டுளம்வருந்துசன்மிட்டை
வெங்கருங்கொடிமிச்சிலைவேட்டுணுமாபோல்
எங்களில்லிடையிரந்துணுமேழையென்றவளைத்
தங்கரும்புனலற்றவாழ்கூவத்திற்றள்ளா. ௯

உள்ளுவந்துமங்கையரொடுமனையகத்துற்றாள்
வெள்ளிநல்கியமெல்லியல்கூவத்தின்மெலிதல்
எள்ளருந்திறற்படையொடும்வேட்டம்வேட்டெழுந்த
தள்ளரும்புகழ்யயாதிகண்டனனவட்சார்ந்தே. ௧௦

தோளின்மேலொருதுகிலளித்தவடனைத்தூக்கி
ஆளிநேர்தருமவன்கரையேற்றவவ்வரிவை
தாளதாமரைத்தடக்கைதொட்டெடுத்தலிற்றனக்கு
வாளுலாமணிமார்பநீவரனெனவரித்தாள். ௧௧

அணங்குகூறுதல்கேட்டலுமந்தணர்குலத்து
வணங்குநுண்ணிடைவந்தனையென்றனைவரித்தல்
இணங்குமாறெவனென்றலுமேர்குடியிருந்த
மணங்கொள்வார்குழன்மன்னவனுளங்கொளவழங்கும். ௧௨

மன்னுவானவர்குரவனுக்குதித்தநன்மகவாம்
பன்னுநான்மறைதெரிகசன்சபித்தசொற்பண்பால்
என்னைவேதியர்மணஞ்செயாரென்றுதன்மனைவாய்
அன்னமாமெனவன்னவளடைந்தனளன்றே. ௧௩

அடைந்தவார்குழலணங்குதன்னையனுக்காங்கு
நடந்தவாறெலாநவிற்றினனற்றவன்வெகுளி
கிடந்தமாமனத்தொடுமதுகேட்டபினவ்வூர்
கடந்துபோயினான்றானவர்துயர்க்கடல்கலப்ப. கச

குரவனேகலும்விடவருவாமுனங்குறுகி
வருதிநீயெனவணங்கலுமன்னவெம்மகடன்
உரையினால்வருவேமெனவவுணனாற்றுங்கை
புரியுமோர்பிழைபொறுத்தருளெனவவள்புகல்வாள். கரு

காவியன்னகட்காரிகையாயிரர்தம்மோ
டேவல்செய்திடவெனக்குநின்மகளையீங்குதவின்
மேவிநின்னகர்வைகுதுமென்னவவ்வீரன்
பூவைசொற்படிக்களித்தனன்புரங்கொடுபுகுந்தான். கசு

மன்னிமாநகர்வைகியவெள்ளிதன்மகளைச்
சொன்னயாதிமுன்மணஞ்செயவளித்தனன்சொல்வோன்
அன்னநேர்நடையாடெய்வயானையென்றறையும்
பொன்னனாளொடுந்தாதியரொடும்புரம்புகுந்தான். கஎ

ஓதுமாயிரமடந்தையரோடவணுற்ற
தாதியாகியசன்மிட்டைதன்றொழும்பியற்ற
ஆதிதோளிணைபுல்லினளன்னவளளித்தாள்
சோதிசேரணிபுனையெதுவொடுந்துருவசுவை. கஅ

இகல்செய்வேல்விழியிலங்குசன்மிட்டையையாதி
திகழும்வெள்ளிதன்மகளறியாவகைசேர்ந்தாங்
ககமகிழ்ந்தனனளித்தனன்றுருகுவையநுவைப்
புகழும்வெற்றியும்படைத்தநற்பூருவைப்புவிமேல். ககூ

தொழும்புசெய்தசன்மிட்டைதன்றுணைமுலைதோய்ந்தாங்
கெழும்பிறைக்கொழுந்தெனவளர்குழவிபெற்றிறைவன்
விழைந்ததன்மையைவெள்ளிதன்மகள்விரைந்தறிந்து
குழைந்தநெஞ்சொடுதாதைபாலடைந்தனள்கூற. உ௦

மனைவிவெஞ்சினத்தேகலுமன்னவன்றகையா
புனைமலர்க்குழல்பொறுத்தருளெனப்புகன்றடிமேல்
தனிவணங்கலுமறுத்தவடாதையைச்சார்ந்தாள்
நனிநடுங்கியந்நாதனுந்தொடர்ந்துநண்ணினனால். உக

தலைவனவ்வழிவிலக்கினன்றொடரலுஞ்சார்ந்தாள்
மலையெனும்புயன்யாதுசன்மிட்டையைமணந்து
கலையரும்பியமதிபுரைகாதலர்ப்பெற்றாங்
கலகிலன்புசெய்கின்றனனையவென்றறைந்தாள். உஉ

மகள்வருந்தியங்கியம்புதல்கேட்டவம்மறையோன்
றுகள்புரிந்தனைமன்னவவெனச்சுடுசினத்தால்
உகள்கருங்கயலோடரிக்கண்ணியருன்னை
இகழவெவ்வியமூப்புருவெய்துகவென்றான். உ௩

அழன்றுவெள்ளியங்கறைந்தவாறவ்வுருவடைந்தோன்
சுழன்றுவண்டுறைசுரிகுழனின்வயிற்றோன்று
நிழன்றதண்மதிமுகத்தினணேயமென்னெஞ்சின்
கழன்றதில்லையென்றிறைஞ்சிடக்காவியன்கழறும். உ௪

கொடுக்கவும்மிதுவாங்கவுமூரித்தெனக்கோமான்
நடுக்கமவ்வழிநீங்கியிந்நவையுறுநண்ணி
அடுக்குநல்லுருவளித்தவற்கரசியலளிப்பன்
விடுக்கருந்தவவெனப்பணிந்தணங்கொடுமீண்டான். உ௫

மீண்டவவ்விறைமைந்தரைத்தனித்தனிமேவிப்
பூண்டவிக்கிழவுருவினைப்பொறுத்துநும்மிளமை
ஈண்டுநல்கிடினரசியலளிக்குதுமென்ன
மாண்டதன்றெனவெதுமுதனல்வருமறுத்தார். உ௬

பூருவாகியமைந்தனம்மூப்புருப்பொருந்தி
ஏருலாவுகட்டிளமையையிறைவனுக்கீந்தான்
சீருலாவியமதனெனச்சிறந்தவல்வேந்தன்
வாருலாமுலையார்நல்மாந்தினன்மாதோ. உ௭

பருவமாயிரம்பாவையரினலம்பருகி
அருவமாமறிவாலசத்தாசையென்றறிந்து
தருவனூன்முனந்தருமுருநல்கினன்றன்மூப்
புருவம்வாங்கினன்யயாதியென்றுரைக்குமவ்வுரவோன். உ௮

இளமைநல்கியபூருவுக்கிசைத்தவாறிப்பார்
உளமுவந்தவனோம்பநல்லொளிமுடிபுனையா
வளமிருந்தநாற்றிசையையுமன்னவர்மன்னன்
அளவிகந்தசீரொதுமுதனல்வர்க்குமளித்தான். உ௯

வண்ணச்சேயிழையுசனன்றன்மகண்முகனோக்கிக்
கண்ணிற்காண்பவுங்காதினிற்கேட்பவுங்கருதோ
டெண்ணிற்பார்த்திடிற்பொய்யெனவவன்சிலவியம்பி
நண்ணிக்காட்டகத்தாற்றுதுந்தவமெனநடந்தான். ௩0

காமமானதுகுறையையேதருமெனக்கடிந்து
தீமைதீர்தவனத்தினிற்சிலபகல்சேர்ந்து
பூமியோரடிப்பொதிந்திடுபுனிதனைநினையூஉ
நாமவேலின்றொளிவிசும்பணவிநண்ணினனால். ௩௧

ஆவிநேர்தருநாயகனிசைத்தவாறலர்ந்த
பூவினுன்றருமுலகுபொய்யெனத்தெளிபுலத்தாள்
மேவுமூன்றெனுமெய்யுமங்கொழிக்குபுவிளங்கும்
தேவயானையுமயர்வறவுயர்கதிசேர்ந்தாள். ௬௨

யயாதிகதையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.
ஆ திருவிருத்தம் சகூக.
ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## கரு-வது, பூருமரபுப்பரதன்கதையுரைத்த வத்தியாயம்.

வேறு.

போர்வேல்விசயம்புனைகின்றயயாதிமைந்தன்
யார்மேவுவேந்தன்பழிதீர்புகழ்ப்பூருவென்னும்
சீர்மேவரசன்றிகழ்கின்குலச்செல்வனன்னேன்
வர்பாமரபிற்றிறம்யாவரியம்புமீட்டார். ௧

அன்னோன்மரபினருட்கண்ணுவனுதியாய
நன்னுன்மறைதேரறவோர்களுஞாட்புடற்றும்
கொன்னுர்வடிவேலிறையோர்களுங்கோதமன்சேர்
மின்னுரிடையும்பிறந்தூற்றுவிளங்கினுரால். ௨

உன்மாமரபிற்சிலவேந்தரையோதுதுங்கேள்
பொன்மாமணியாற்புனைபூணணிபூருவென்போன்
தன்மாமதலைசனமேசயன்சாற்றுமன்னேன்
தொன்மாமரபின்வழிவந்தவன்றுட்டியந்தன். ௩

உரைப்பாளெளிர்மாமதிவெண்குடையொன்றினிலித்
திரைப்பார்புரந்தாங்கொருகோனனிசெல்லநின்றுன்
விரைப்பாதவங்கண்மிடைகாட்டினில்வேட்டமாடித்
தரைப்பாலடங்காப்படைசூழ்தரச்சார்ந்தகாலை. ௪

கலிவிருத்தம்.

விண்ணவர்க்கருள்புரிவிமலனுகிய
அண்ணலந்துளவினற்கன்புசான்றமெய்க்
கண்ணுவன்சாலைசூழ்சோலைகண்டவண்
நண்ணினனலவளநாட்டினனரோ. ௫

புகுந்தனையுறைந்தெழும்புயங்கத்தாடியோர்
மிகுந்தனையருந்திமெய்ப்பொருளுக்கன்பினன்
நகுந்தனையவிழ்மலர்ச்சோலைநாடுவோன்
சகுந்தலையென்பவடன்னைக்கண்டனன். ௬

கண்டனன்கண்ணிணைகளிப்பக்காமநோய்
கொண்டனனெனமனங்கொண்டதன்மையான்
மண்டமர்தடங்கணுண்மன்னர்தங்குலத்
தொண்டொடியாகுமென்றுள்ளத்துள்ளினான். ௭

அண்ணலங்களிறனானைநீயெனத்
தண்ணறுங்குழலினாடவஞ்செய்கோசிகன்
பெண்ணெனமேனகைபெற்றிங்கேகினாள்
கண்ணுவன்வளர்த்தனன்காதலுற்றரோ. ௮

என்றுதன்னியற்கையங்கிசைத்திலங்குசீர்
வன்றிறன்மன்னவவருத்தநீங்கநீ
நன்றிவணுறைந்தபின்னடக்கவேண்டுமேல்
ஒன்றுதியென்னவுமுரைசெய்கின்றனள். ௯

அன்னவன்முகமணங்கறைதல்சேட்டலும்
இன்னருட்சோசிகனீன்றதன்மையால்
நன்னயக்குணநனிநண்ணினாளென
மன்னவர்மன்னவன்மகிழ்ந்துசொல்லுவான். ௧0

நல்லெழில்வான்றனைக்காணினங்கைமார்
புல்லுவரவரெனப்புகன்றுநீயுமென்
அல்லலிங்ககற்றெனவணங்குநேர்ந்தனள்
சொல்லுநன்மணத்தினிற்றோய்ந்துவைகினான். ௧௧

ஓர்பகன்மணங்கொளீஇயுறைந்துமற்றைநாள்
சீர்வளர்வளநகர்சென்றுவைகினான்
பார்புகழ்பாரதனும்பாலகன்றனை
வார்குழற்சகுந்தலைவயிறுவாய்த்தனள். ௧௨

பிறையெனவளர்ந்தவப்பிள்ளையாளியின்
விறலணங்கொடும்விளையாடல்வந்துகண்
டறைதருகண்ணுவனாழிமாயனும்
இறைகலையிவனெனவெண்ணினானரோ. ௧௩

எண்ணியகண்ணுவனீன்றசேயொடும்
ஒண்ணகைவனிதையுன்பதியையேவென
மண்ணகம்புரந்தவம்மன்னைமன்னினாள்
அண்ணலும்யார்கொலென்றையுற்றானரோ. ௧௪

முன்னவணடைந்ததுமுயங்குசெய்தியும்
பின்னெழிற்புதல்வனைப்பெற்றவண்ணமும்
இன்னெழிற்சகுந்தலையிறைஞ்சிமென்மெலப்
பன்னலும்பார்த்திவன்பழிச்சொலீதென்றான். ௧௫

ஆங்கெழுந்தந்தரவாணியையுநேல்
வாங்குநுண்ணிடையுனமனேவிமன்னவோர்
தீங்கிலள்சர்பிஞற்சிறுவனீபெறும்
ஓங்கெழிற்புதல்வனீங்கோதின்மால்கலே. க௬

சங்கநல்விரேகையைத்தடக்கைகாட்டுமால்
பங்கயவிரேகையைப்பாதங்காட்டுமால்
இங்கிவனேழுலகோம்புமென்றலும்
சிங்கமொத்தவனுளங்தேறிஞனரோ. க௭

பெருவிறற்பரதனும்பிள்ளேதன்ஞெடும்
உரைதருமனேவியென்றுற்றமின்ஞெடும்
மருவியங்குறைந்தனன்மன்னனேம்பது
புரவியின்வேள்வியும்புரிந்துவீடுற்ருன். க௮

நீரகம்பொருந்தியகித்திலத்தொடு
தேரகம்பொருந்துசெங்கதிரின்மாமணி
ஆரகமுடிபுனேந்தாழியேழுஞ்சூழ்
பாரகம்புரந்தனன்பரதனென்பவே. க௯

வாழிவானவர்பகைமாய்த்துவார்திரை
ஆழிசூழ்புவிமுழுதாண்டுநல்லறம்
சூழுநூன்முறைவழிதூங்கவேள்வியீர்
எழுநூருயிரமியல்பிஞற்றிஞன். ௨0

நிரைத்தமாமணிக்கடனிலத்தையன்பொடு
பரித்ததார்ப்புயத்தினன்பரதனுக்கிணே
தெரித்தநூல்வழிவினேத்திறத்தர்மூன்றென
உரைத்தகாலத்திஞெமொருவரில்லேயால். ௨க

வேறு.

பரதன்வேட்டநற்பாவையர்மூவர்கள்
விரைசெய்கோதைவிதர்ப்பனளித்தவர்
பொருவிறம்பதிபோன்றிலபிள்ளேவேற்
றுருவுகாண்டலுமொல்லேயொறுத்தனர். ௨௨

பெற்றபெற்றபுதல்வரைப்பேதையர்
வெற்றியுற்றநம்வேந்தனேப்போன்றினர்
உற்றுநோக்கினெவற்குயிர்த்தாரெனும்
குற்றமேதருவாரெனக்கோறலால். ௨௩

இறந்திலாதபுதல்வனங்செய்திடச்
சிறந்தவோர்மகஞ்செய்தனனன்னவற்
கறிந்ததேவர்களந்தணற்கன்பொடும்
பிறந்தசீர்வளர்பிள்ளேயைநல்கிஞர். ௨௪

என்னமாமுனிவேந்தனியம்புவான்
பன்னுசீர்செய்பரதனுக்கும்பர்கள்
மன்னிநல்கும்மைந்தனுதித்தவா
றுன்னிநீயுணர்த்தென்றலுமோதுவான். உரு

வேறு.

திசைத்தலம்புகழ்தருதேவர்தேசிகன்
நிசித்தலையெழுந்தவேணெடுங்கணைக்குடைந்
திசைத்தனன்றுணையவளென்னுமாதவ
னுசத்தியன்மனைவியையுவந்துபுல்லினான். உசு

அன்னவள்கருக்கொடங்கமர்ந்தவாற்றினால்
இன்னமோர்கருவினுக்கிடமிங்கில்லையென்
றுன்னியகருநனியுதைந்துதள்ளலால்
பொன்னெழில்வீரியம்புவியின்வீழ்ந்ததே. உஎ

அந்தணன்வீரியமாங்குத்தள்ளிய
மைந்தனையந்தகனாகவைததால்
உந்தியவீரியமுருவுபெற்றொளிர்
சுந்தரமகவெனத்துலங்கிற்றங்கரோ. உஅ

புதல்வனைவிரும்பிலன்பொன்னும்போயினான்
இதமறுபழிதருமென்னவெண்ணினள்
மதிநுதன்மடந்தையுமகிழ்ந்துகொண்டிலள்
கதிர்முடியமரர்க்காதன்மைந்தனை. உகூ

பரதனுக்களித்தனர்பரத்துவாசனென்
றொருபெயர்முன்னமேயுற்றமைந்தனுங்
கரசனுக்கன்புடைத்தத்தனாதலால்
மருவினன்விதத்தனென்பெயருமன்னனே. ௩0

அன்னவன்மரபினிலந்தணாளரும்
மன்னருமுதித்தனர்மன்னர்தம்வழிப்
பன்னுதன்பேரினோர்பதியுண்டாக்கிய
பொன்முடியத்தியென்றொருவன்போந்தனன். ௩க

ஆங்கவன்மரபினிலடற்சராசந்தன்
ஓங்கியமரபுபாஞ்சாலருற்றிடும்
தீங்கறுமரபிவைமுதலசேர்ந்தன
ஈங்குரைத்திடினனிபரக்குமென்பவே. ௩உ

மருவியவத்திதன்மாபின்வந்தனன்
குருவெனும்பெயர்புனைகொற்றமன்னவன்
உரைதருமவன்மாபுதித்தனன்புகழ்
பெருகியவெழிற்பிரதீபனென்பவே. ௩௩.

பூருமரப்புப்பரதன்கதையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௫௨௪.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௧௯-வது, சந்தனுவின்கதையுரைத்த வத்தியாயம்.

---

### கலிநிலைத்துறை.

பிள்ளைவண்டறைதார்ப்பிரதீபனென்பெயரோன்
எள்ளருந்திறன்மூவரையீன்றனனிவரின்
உள்ளுவந்துதேவாபியென்றுரைசெயுமாவோன்
கள்ளவிழ்ந்தபூங்கானிடைத்தவஞ்செயக்கலந்தான். ௧

அன்னமன்னவனணிகதிர்ச்சந்திரன்மாபிங்
குன்னுகின்றவெங்கலியினிலொழியுமற்றொழியின்
பின்னரம்மாபுதிப்பமாண்பெருந்தவம்புரிந்தீங்
கின்னம்வைகினன்களபாற்கிராயமென்பதினே. ௨

பொய்யறத்தவம்மியற்றுமப்புரவலற்கிளையோன்
கையினிற்றனிதொடப்படுமாக்கையைக்கவின்சேர்
மெய்யெனப்பெறவிளக்குவனாகலின்விழுப்பேர்
ஐயமற்றசீர்ச்சந்தனுவெனவிவணடைந்தான். ௩

சந்தனுப்பெயர்மன்னவன்சாபமாங்கடைந்து
வந்தகங்கையாடனைமணம்புரிந்துயிர்த்தருள
மைந்தனிந்தமாநிலம்வியக்குறுந்திறல்படைத்தான்
அந்தண்கோதையர்மணந்திடாவிரதமுமடைந்தே. ௪

தரைசொல்சந்தனுப்பின்னரும்பராசரன்றழுவக்
கருதுமெம்மெழிற்றாதையைப்பெற்றகன்னிகையாய்
அரியதண்புனலம்பியான்மனையகம்வளர்ந்து
மருவுசத்தியவதிதனைமன்றல்செய்தனனால். ௫

சந்தனுப்பெயரான்புணர்சத்தியவதிதான்
கந்தனுக்குநேர்சித்திராங்கதனொடுசெருதார்
மைந்தனுக்கியல்விசித்திரவீரியமன்னும்
வெந்தனுக்கொருவீரனைவிரும்பிநல்கினளால். ௬

நெய்த்துவார்ந்தபூங்குழலினார்மதனெனநிகழ்த்தும்
சித்திராங்கதனெனும்பெயர்த்திண்டிறற்செம்மல்
கொத்துலாந்தொடைச்சித்திராங்கதனெனக்கூறு
மத்தவாரணநிகர்த்தகந்திருவனான்மாய்ந்தான். ௭

அங்கண்மாநிலம்புகழ்தருகாசிவேந்தளித்த
தங்குமேர்செயம்பாலிகையம்பிகைதம்மைக்
கங்கையாண்மகன்சுயம்வரங்கண்டெடுத்தளிப்பப்
பொங்குசீரினான்விசித்திரவீரியன்புணர்ந்தான். ௮

புணர்ந்துவைகியகாலிலப்புரவலன்கயநோய்
மணந்துமாய்ந்தனன்மற்றவன்றாயெனமதிப்பாள்
இணங்குநம்மரபிறந்ததென்றெண்ணிமுன்னீன்ற
குணஞ்செய்மாதவவியாதனைவரமனங்குறித்தாள். ௯

நினைந்தகாலையிலம்முனிமுன்னநேர்பொருந்திக்
குனிந்தவார்சிலைநுதலினாடாயுரைகொண்டு
புனைந்தவார்கழல்விசித்திரவீரியன்புணர்ந்த
கனிந்தசொல்லியரிருவரைச்சிலதினையக்கலந்தான். ௧௦

கழறுமாதரவ்விருவருங்கண்ணிலான்றனையும்
விழையுஞ்சீர்புனைபாண்டுவாம்வேந்தையுமளித்தார்
அழிவில்வேதவவ்வியாதனையுவந்தனைதொழுத்தை
ஒழிவிலாவறமுரைக்குநல்விதுரனையுயிர்த்தாள். ௧௧

கண்ணிலானெழில்கனிந்தகாந்தாரியைக்கலந்தாங்
கண்ணல்வாளரவுயரியவரசனைமுதலாம்
கண்ணுநூற்றுவரோடொருநங்கையையளித்தான்
எண்ணிலாதசீர்ப்பாண்டுவென்றிசைக்குறுமிறையோன். ௧௨

குந்தியென்னுமோர்கொடியிடைதன்னையுங்குளிர்யாற்
றுந்தியென்னுமோருந்திமாத்திரையெனவுரைக்கும்
கந்தமன்னுபூங்குழலையுங்கடிமணம்புணர்ந்து
சந்தமன்னியதடமுலைதழுவுமந்நாளில். ௧௩

மாதர்மென்முலைமணக்குறின்யன்னுயிரொழிகென்
றோதுசாபமங்குற்றனனுற்றபின்மனையார்
நீதிதேவரைவரத்தினாற்சேர்ந்தனருண்மூ
தாதைமார்களைப்பெற்றனர்நல்லறந்தளிர்ப்ப. ௧௪

தருமராசனைக்காற்றிறையைச்சதமகனை
உரைசெய்குந்தியாங்குறுமுறைதழுவினளுயிர்த்தாள்
மருவிநல்லறம்புரிதருதருமனைவலியால்
அரியசீர்புனைவீமசேனனையருச்சுனனை. ௧௫

அசனிலத்தவர்புகழ்பரித்தேவனரயணையா
முகிலெனப்பொலிசருங்குழன்முகிணகைச்செவ்வாய்
இகல்படைத்தவெவ்வேல்விழிமாத்திரையென்பாள்
நகுலனைச்சகதேவனைநல்கினளன்றே. ௧௬

கூறுகின்றவவ்வைவருங்குழையொடுகுழன்மேல்
சீறுகின்றவவ்வேல்புரைசெழுந்தடங்கண்கள்
ஏறுகின்றபாஞ்சாலியைமணந்திளந்தேறல்
ஊறுகின்றமென்குதலையஞ்சிறுவரையுயிர்த்தார். ௧௭

ஓதுமைவருளொப்பறுமருச்சுனனேவில்
காதன்மைத்துனனாகியகண்ணனோடுதித்த
சூதுநேர்முலைச்சுபத்திரைதோளிணைதோய்ந்துன்
தாதையாமபிமன்னியுமன்னனைத்தந்தான். ௧௮

ஆடல்வாளபிமன்னியுமென்றுசொல்லரசன்
ஏடலாமலர்மாலையான்விராடனீன்றெடுத்த
தோடுசேர்குழலுத்தரைதோணலந்துய்த்தான்
வீடுசேருநீபிறந்தனைவியனிலம்பிறங்க. ௧௯

விரிந்தபோரிடையரவுயர்கொடியினன்வீழப்
பரிந்தநெஞ்சமோடயர்க்களத்தடைபரித்தாமா
துரந்தவெங்கணையாலுயிர்தொலைந்திடாவண்ணம்
புரந்தனன்னுனைக்கருவினிற்றேவகிபுதல்வன். ௨0

மாற்றருந்திறன்மன்னனின்மைந்தர்நால்வர்களில்
சாற்றுசீர்ச்சனமேசயனெனும்பெயர்த்தநயன்
ஆற்றன்மன்னநின்சரித்திரங்கேட்டபினழன்று
சீற்றவெம்பணிவேள்விசெய்குவனெனத்தெரித்தான். ௨௧

சந்தனுவின்கதையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௫௪௫.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

# ௧௭-வது, அநுமரபுரைத்தவத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

அணிதிகழ்யாதிமைந்தனைவருளநுவென்றேத்தும்
மணிதிகழ்பூணினான்மாபினிலங்கன்வங்கன்
இணையறுகலிங்கனுதியிறைவர்வந்துற்றானன்னோர்
தணிவரப்புரந்தநாட்டைத்தம்பெயர்புனைவித்தாரால். ௧

அங்கனென்றுரைக்குமன்னனணிபெறுமரபுவந்த
பங்கமிலெழிலுரோமபதனெனப்பகருமன்னன்
பொங்கெழிற்சாந்தையென்னும்புதல்வியைத்தயாதப்பேர்
மங்குலினுதவுகையான்வழங்கிடவளர்த்தன்னுளே. ௨

மழைவளம்வறந்தகாலைமருவுதன்றேயமெல்லாம்
பொழிதருமாரிபெய்யல்பொலிதரமடவாருய்த்த
தழைகலைக்கோடுபெற்றதவத்தினற்களித்தமன்னன்
விழைவொடுசதுரங்கப்பேர்வேந்தினையுயிர்த்தான்மன்னே. ௩

அன்னவன்மாபின்மன்னரங்கநாடளித்தபின்னர்ச்
சொன்னவனுடொத்தான்றலங்கெழிற்குந்தியென்பாள்
பன்னுகன்னிகையென்றேதும்பருவத்திற்கதிரோற்கீன்ற
கன்னனென்றுரைக்கும்பேர்சொல்கருதருங்கொடையானுமால். ௪

அதுமரபுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௫௪௧.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## க௮-வது, எதுமரபுரைத்தவத்தியாயம்.

### எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

மண்ணகமுழுது மொருகுடைகவித்த மானவேல் யயாதியென் றுரைப்போன், வெண்ணகைத்துவர்வாய் வெள்ளிதன்மகளை விருப்பொடு புணர்ந்துமுன் னளித்த, தண்ணறுந்தொடைசே ரெதுமரபுரைப்போர் தவப்பயன்சாற்றுதற் கெளிதோ, கண்ணனென்றிறைவ னுதித்தவென்ற வன்சீர் காவலற்கருந்தவன்சழறும். க

மருவலர்புகழுமெதுவெனுமன்னன்மகிழ்ந்தினிதளித்தருண்மைந்தர்
தரைபுரந்தருளுஞ்சகத்திரசித்தேர்தயங்கியகுரோட்டன்வண்டாற்றும்
விரைகமழ்மலர்த்தார்நளனெனுடுரிபுவாம்வேந்தனென்றுரைதருநால்வோர்
புரையறுமவரிற்சகத்திரசித்தாம்புங்கவன்செய்சதசித்தே. ௨

கள்ளவிழ்நறுந்தாரணிசதசித்தாங்காவலனளித்தருள்புதல்வன்
கிள்ளையங்கிளவிவனிதையர்வேட்குங்கேகயன்கேகயன்சிறுவன்
தள்ளரும்புகழ்சேர்தருமனென்றிசைப்பார்சாற்றியதருமனற்றநயன்
அள்ளிலைநெடுவேற்றருமநேத்திரனுமைரசனென்றியம்புவரன்றே. ௩

அலைக்கருங்கடல்சூழ் புவிப்பொறைநீத்த வாடல்வேலாங்கவன் புதல்வன், கலைக்கடல்கலந்த குந்தனென்றிசைப்பார் கவின்பெறு குந்தனுக் குதித்தோன், வெலற்கருந்திறற்சா வஞ்சியனவன்றன் விருப்பொடுமுயிர்த்தருடநயன், சிலைக்கரும்பொழித்த மதனெனமடவார் செப்பெழின் மயிட்மோ னுமால். ௪

### கலிநிலைத்துறை.

மத்தமால்கரிமயிட்டுமானளித்தருள்மைந்தன்
பத்துமாதிசைபுகழ்தருபத்திரசேனன்
முத்தநீள்குடையன்னவனுயிர்த்திடுமுதலோன்
தொத்துலாந்தொடைத்துன்மிதன்றநகனென்றோன்றல். ௫

உரைத்ததுன்மிதன்றநகனென்றுரைக்குமாங்கவரில்
வரைத்தடம்புயத்தநகனுமன்னவன்மதலை
அரைத்தசந்தனமப்பியவணிமுலைத்துவர்வாய்
விரைத்தண்கோதையர்விரும்பெழிற்கிருதவீரியனால். ௬

கேளொடுஞ்சுரும்பாற்றுதார்க்கிருதவீரியன்சேய்
வாளொடும்பொலியாயிரந்தடக்கையான்வையம்
கோளொடும்பகைநீங்கியமதிக்குடைநிழற்றி
வேளொடும்பகைக்குறுமெழிற்கார்த்தவீரியனே. ௭

பகருமன்னவனெண்பதினாயிரம்பருவம்
புகாறும்படிபாரகம்பொதுவறப்புரந்து
மகிதலம்புகழ்மழுப்படையாளனுன்மடிந்தான்
தகைசெயன்னவன்றநயர்களாயிரர்தம்மில். ௮

பார்புரந்தனரைந்துபேரனையோர்பகர்ந்த
ஏர்தழைந்தகூர்மழுப்படையாளனுலிறந்தார்
போர்தழைந்தவேலவர்தம்மரபுதிண்புவிமேல்
சீர்தழைந்திடவளர்ந்தனநாடொறுந்திகழ்ந்தே. ௯

கூறுகின்றவேலெதுமகனென்றுசொல்குரோட்டன்
ஆறறிந்திடுமிரசினவான்றனையளித்தான்
ஊறுமின்னறைத்தாரவனவிபுவையுயிர்த்தான்
வீறுசேய்குருசேருவைவிருப்பினல்கினனால். ௧௦

அன்னமன்னவன்சித்திரரதன்றனையளித்தான்
பன்னுசித்திரரதன்சசிவிந்துவைப்பயந்தான்
மன்னுநற்சசிவிந்துவிம்மாநிலமேழும்
தன்னதாணையேசெலுத்தினனல்லறந்தயங்க. ௧௧

வையமேழுமோர்மதிக்குடைநிழற்றுமம்மன்னன்
தையலார்பதினாயிரரிளமுலைதழுவிப்
பொய்யிலாதவோர்பத்துநூறாயிரம்புகலும்
ஐயபேறெழின்மைந்தரையளித்தனனன்றே. ௧௨

அந்தமைந்தரிலாறுபேரவனியின்முதலோர்
சந்தநுங்கியதடம்புயத்தறுவரிற்றவத்தால்
வந்தவன்பிருதுச்சிரவசுவவன்மதலை
உந்துதெண்டிரைப்பார்புகழ்தருமனென்றுரைப்பார். ௧௩

தருமனாகியமன்னவனுசநசுத்தந்தான்
பெருமையேதரும்ருசகனையுசநசுப்பெற்றான்
முருகுலாந்தொடைருசகனுமளித்தனன்முதனூல்
மருவுசாமகன்முதலியவைவரைமாதோ. கச

தேமலர்த்தொடைத்தெரியலர்செருக்களத்திரியப்
பூமுகக்கணைபற்பலபொருதருந்திறலான்
காமனுக்கிணையாகநற்கவின்பெறுங்காளை
சாமகப்பெயர்மன்னவன்விதர்ப்பனைத்தந்தான். கரு

சேரும்வண்டினமிளநறுமாந்தியசிலம்பும்
வேரியந்தொடைவிதர்ப்பனென்றுரைபெறுவேந்தன்
போரியன்றதன்புகழையார்புகல்பவர்புவிமேல்
சீரியன்றவன்மமதலைதன்றிறத்தையுந்தெரிக்கின். கசு

அலைதழைத்ததண்பரவையினழிபுணீர்பெருகச்
சிலையழுத்தியதிண்புயத்தொன்னலர்சிரத்தைத்
தலைபழுத்துயர்பண்ணையின்கனியெனத்தள்ளும்
கொலைபழுத்தவேற்கிதன்மகிழ்ந்தளித்தசேய்குந்தி. கஎ

குந்திசேய்நிருவிருத்தியாங்கொற்றவனவன்சேய்
தந்திமாப்படைதசாருகன்றசாருகன்றநயன்
விந்தைசேர்விறற்றடம்புயவியோமன்மற்றவன்சேய்
சிந்துசூழ்தருகுவலயம்புகழுஞ்சீமூதன். கஅ

திகழுநெட்டிலைவேலினானெனச்சொல்சீமூதன்
விகுதியென்னுமோர்வேந்தனையுயிர்த்தனன்விகுதி
தகுதிபெற்றிடுந்தீவிரரதன்றனைத்தந்தான்
அகனிலம்புகழ்வனவரதன்றனையளித்தான். க௯

நானிலம்புகழ்நவரதனெனப்புகலுதன்
கானலர்ந்ததார்த்தயரதன்றனைக்களித்தளித்தான்
தானவெங்கரித்தயரதன்சகுனியைத்தந்தான்
மானவெஞ்சிலைக்கரம்பனையவன்மகிழ்ந்துயிர்த்தான். ௨0

கரம்பனென்பவன்றேவராதனைக்களித்துயிர்த்தான்
விரும்புநல்லெழிற்றேவராதப்பெயர்வேந்தன்
பெரும்புகழ்ப்பெயர்த்தேவகத்திரன்றனைப்பெற்றான்
சுரும்புசூழ்தொடையவன்மகன்மதுவெனச்சொல்வார். ௨க

மதுவெனும்பெயர்மன்னவனளித்தருண்மைந்தன்
குதசதப்பெயர்க்கொற்றவன்குதசதனுயிர்த்தான்
அதிர்திரைக்கடற்புவிபுகழநுவினையநுவும்
இசமுறும்புருகோத்திரன்றன்னையீன்றெடுத்தான். ௨௨

இயம்புமப்புருசோத்திரனீன்றவங்கிசுமுன்
தயங்குவெர்திறந்சாத்துவதற்றரவவன்பால்
நயஞ்செயந்தசவிருட்டுணிநாளிலம்புகழ
வயஞ்செய்போசனுதிபரெழுவோர்சளும்வந்தார். ௨௩

போசனன்மரபுதித்திடும்புகழ்ப்புரவலரை
ஓசையுற்றமாபோசனென்றுலகெலாமுரைக்கும்
தேசுபெற்றுயர்விருட்டுணியுயிர்த்தருள்சிறுவர்
ஆசகற்றநமித்திரனுதிமூவர்களாம். ௨௪

அரசர்தாழநமித்திரனுவந்தினிதளித்தோர்
உரைசெய்மாகிலம்புரக்குறுநிமமனனொடுசேர்ப்
பிரசநாண்மலர்ப்பிணையல்வேய்பிரச்சினிமுதலாப்
புரசைமால்களிற்றரசரோர்மூவராம்புகலின். ௨௫

குனிதடஞ்சிலைநிமமனனளித்தருள்குமரர்
நினைவருஞ்சுடர்ச்சமந்தகமணியைநீடொளிய
தினகரன்றரப்பெறுதிறற்சித்திராசித்தும்
புனைகழற்பிரசேனனும்புரவலர்க்கரசும். ௨௬

பேட்டொடுஞ்சுரும்பாற்றுதார்ப்பிரிசினியென்போன்
கோட்டுவெஞ்சிலைச்சுவர்க்கனுங்கொற்றவனொடும்போர்
வேட்டமாக்களத்தெதிர்தருவெருவலருயிரை
ஊட்டுவெம்படைச்சித்திராங்கதனையுமுயிர்த்தான். ௨௭

நிறைபெறும்புகழன்னவனிருவரினிகழ்த்தும்
அறனிழுக்குறுவக்குரூரப்பெயரரசன்
முறைதிறம்பிடாதொழுகியதேவவான்முதலாத்
திறல்விளங்கொருநால்வரையுயிர்த்தனன்சிறப்பால். ௨௮

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

அடையலர்பாரவுநெடுமுடியரசனந்தகனெனமுனமறைந்த
மடலவிழ்நறும்பூந்தொடைபுனைமார்பன்மகிழ்ந்தினிதளித்தருண்மைந்தர்
முடிவறுபுகழ்சேர்குகுரனும்புவியோர்மொழிபயமானனுமுதலாப்
படையுடைநால்வரவர்களிற்குகுரன்பயந்தசேய்விருட்டுணியென்ப. ௨௯

இருட்டியலளக விணைமுலைத்துவர்வா யிளையவர்மனநனி குழைய,
மருட்டியநெடுங்கண் மடந்தையர்விரும்ப மதனெனவயங்கெழில் படைத்
த, விருட்டுணியுயிர்த்தான் விலோமனைவிலோமன் விளங்குமோ ராழி
யேழ் புவியும், உருட்டியகபோத ரோமனென்றுரைக்கு மொருவனை யுயி
ர்த்தனனன்றே. ௩0

பாவையர்முகம்போற்பங்கயமலரும்பழனநாடுடையவவ்வேந்தன்
ஆவொடுபசும்பொற்காவெனவளிக்குமந்தகன்றனையளித்தனனால்
கோவடுகுருதிவேலவனீன்றகுமரனைத்துந்துபியென்பார்
தாவரும்புகழ்சேர்துந்துபியென்போனருமியோதாவினைத்தந்தான். ௩௧

வேகமார்பரித்தேரன்னவன்மதலைவிளங்கியபுநாவசுவாமால்
பாகுநேர்தீஞ்சொற்பாவையர்விரும்பும்பசுங்கழைவேணிகன்றோன்
ஆகுகனுயவாசனோடெழில்சோகுகைதன்னையுமளித்தான்
ஓகையாகுகனுந்தேவகனொடுஞ்சீருக்கிரசேனனையுயிர்த்தான். ௩௨

கஞ்சனைமுதலாமைந்தர்நால்வரையுங்கதிர்முலையெழிற்கஞ்சவதியாம்
அஞ்சனவிழியாளாதிநால்வர்களாமரிவையர்தம்மையுமளித்து
மஞ்செனுங்குழலம்மகளிர்நால்வரையும்வாள்வசுதேவனுக்கிளவல்
எஞ்சலின்மணஞ்செய்துவப்புறக்கொடுத்தானிலங்குவேலுக்கிரசேனன்.

காவெனுங்கொடைக்கைத்தேவவான்முதலாங்காதலர்நால்வர்தம்மோடு
தேவகிதிருததேவைநற்சாந்திதேவைசீர்திகழுபதேவை
தாவறுயாணர்தருசகதேவைசாற்றுநல்லணித்ததிதேவை
மாவகிர்விழித்தேவாக்கிதையென்னுமாதரைத்தேவகனளித்தான். ௩௪

கொண்டலிற்கருகி நெய்த்துமெத்தென்று சொழுமலர்த் தொடைபுனைகூந்தற், றொண்டையங்கனிவாய்த் துடிபுரைமருங்குற் சுடரவிர்மதிமுகத்தணியாள், தெண்டிரைப்பிறந்த தெள்ளமுதெனுஞ்சொற் றேவகிமுதலெழுவரையும், வண்டிமிரலங்கல் வனவசுதேவன் மன்றல்செய் துவந்தனன்மாதோ. ௩௫

அந்தகன்மதலையென்றுமுன்னுரைத்தவாடலஞ்சிலைப்பயமானன்
மைந்தனென்றிசைப்பர்விடூரதனென்னுமானவேலரசனையன்றோன்
சுந்தரவதனச்சூரனென்றுரைக்குந்தோன்றலையீன்றனன்சூரன்
சந்தணிபுயத்தானெனும்பயமானன்றன்னையின்புறவளித்தனனால். ௩௬

பற்றலர்மகுட மணித்தழும்பிருந்த பதயுகமலர்ப்பய மானன், பெற்றிடுமதலை சினியெனவுரைப்பார் பேசியசினியெனும் பெயரான், கற்றவர் புகழ நல்லறநிறுவிக் கருதலர்களத்திரிந் தோட, வெற்றிசெய் நெடுவேற் போசனென்றுரைக்கும் வேந்தனையுயிர்த்தனன் விருப்பால். ௩௭

திருந்தலர்புகழும் போசனன்மதலை திருதிகன்றிருதிகன் சிறுவன், மருந்தினுமினிய மழலையந்துவர்வாய் வரிவிழிமலர்க்கருங் கூந்தல், முருந்துறழ்மூரன் மடந்தையர்விரும்பு மொய்கணைமதன்கொலென் றிசைப்பப், பொருந்துநல் லெழில்சேர் கிருதவன்மாவாம் புரவலனெனப்புகலுவரால்.

அன்னவன்றேவமீடனையுயிர்த்தானவனடற்சூரனையளித்தான்
மன்னியசூரன்மாரிடையெனும்பேர்மாதினைமணந்துநல்கினனால்
முன்னுநற்குணஞ்சால்வாள்வசுதேவன்முதலியபுகழ்ப்பதின்மரையும்
இன்னெழிற்குந்தியாதியோரைந்தாமேழையர்தம்மையுமன்றே. ௩௯

நானிலத்தவரும்புகழ்வசுதேவனலஞ்செயப்பிறந்தவஞ்ஞான்று
வானகத்தமரர்மாயனையளிப்பான்மகிழ்தரவிவனெனமதித்தாங்
கானகத்தோடுதுந்துபிதுவைப்பவானகத்துந்துபியெனும்பேர்
ஊனமற்றொளிசெய்வேலவவன்றேனுற்றனனுவப்பொடுமென்றே. ௪0

சூரனென்றிசைப்போன்பெற்றவோர்மகளைத்தோழமைக்குந்தனுக்களித்தான், ஏருடைமகளாயவளைவளர்த்தனனெழிற்பெயர் குந்தியாமன்னாள், சீருறுதுருவா சன்றருவரத்தாற் செங்கதிர்ப் பண்ணவற்சேர்ந்து, போருறுநெடுவேற்கன்னனையுயிர்த்துப்புனலுறுகுடிஞையின்விட்டாள்.

செங்கதிர்க்கடவுளளித்தநல்வரத்தாற்றீங்கறநின்றவத்திருவை
மங்குலினுதவுன்றாதைமூதாதைமன்றல்செய்துவந்தனன்வழங்கு
கங்கைதன்னிளையார்நால்வரிலொருத்திநல்கினளந்துகேகயரைப்
பங்கமிலொருத்திதந்தவக்கிரனும்பாலனைப்பயந்தனளன்றே. ௪௨

அணிகிளரொருத்திதிறற்சிசுபாலனாகியமன்னனையளித்தாள்
இணையின்மற்றொருத்திவிந்தனோடெழிலாலிலங்கநுவிந்தனையீன்றாள்
தனிவருவயஞ்சால்வாள்வசுதேவன்றன்னுடன்பிறந்தமன்னவரும்
அணிதிகழ்தரும்பூண்மைந்தரையளித்துவயங்கினருவப்பொடுமாதோ. ()

வானவர்புகழும்வாள்வசுதேவன்வாணகைத்தேவகிமுதலாம்
தேனிமிர்கூந்தலெழுவரோடுரோணிதிருமணம்புரிந்தனனுரோணி
பானிறமானவலாயுதன்முதலாம்பாலரைப்பயந்தனள்பகரும்
ஏனையர்தாமுஞ்சிறுவரையீன்றாரிலங்கெழிற்றேவகியென்பாள். ௪௪

கீர்த்திமான்முதலா வறுவரையளித்துக் கிளர்ந்தவேழாமக வென்னப், பார்த்தலம்பரித்த பஃறலையரவப்பாணிறன் றனைவயிற்றடைந்து, போற்றலையவுணர்த்தொலைத்துமெய்ந்நிறுத்தப் புனைதுழாய்ப்புராணனிப் புவிமேல், கார்த்திருமேனிக்கண்ணனென்றுதிப்பக்கருதருந்தவத்தினல்கினளால். ௪௫

மன்னவர்மன்ன தன்னிடத்துதித்து மருவுதன்னேவன்மாயையினால், பிபின்னல்வெண்டிரைப்பார்ப்பொறைதவிர்ப்பதற்காப் பேரொளிபிறந்ததற்பின்னர், உன்னுடைத்தங்கைக்குவப்புறுந்தாயாமுருவநற் சுபத்திரைதனையும், அன்னமென்னடையதேவகியென்பாளளித்தனளெனமுனியறைந்தான். ௪௬

மறைமுழுதுணருமாதவத்தீர்காள்வகுத்தவிக்காதைகூறுநரும்
நிறைதருமன்பாற்கேட்டகயகிழுநிகரிலாதவருநீணிலக்கண்
குறைவறுமாயுள்சேர்மகவுயிர்த்துக்குலவிவீற்றிருந்தபின்மாலோன் [ன்.
உறைதருபதம்பெற்றுவப்பரென்றுரைத்தானுணர்வுடைச்சூதமாமுனிவ

கலிவிருத்தம்.

என்னுமிருந்தவரிளநறும்பொழி
சென்னியர்துளவணிகண்ணன்செய்திறம்
மன்னவன்கேட்டதென்வகுத்துமாமுனி
சொன்னதென்சொல்கெனச்சூதன்சொல்குவான். ௬௮

ஏதுமரபுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ருகஎ.

௯-வது, ஸ்கந்தம் முற்றிற்று.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௧0-வது, ஸ்கந்தம்.

## ௧-வது, திருவவதாரவத்தியாயம்.

---

கலிநிலைத்துறை.

பரிதிவானவன்மரபொடுபானிலாத்திங்கள்
மரபுகேட்டவேன்மன்னவன்மதிமரபுதித்த
ஒருதனிச்சுடர்திருவிளையாட்டெலாமுள்ளம்
தெருளக்கேட்பதுவிரும்பினன்செப்பலுற்றனனால். ௧

புனலுமுண்ணலன்இருப்பவும்பொறுப்பதற்கரிதா
கனிகனற்றுவெம்பசிப்பிணிநலிதன்மற்றின்றால்
முனிவன்மூரலொண்முகமலர்முளரியின்முளைத்த
அநகன்மாக்கதையெனுநறாவருந்தலினன்றே. ௨

அரவுயர்த்தவனுடலம்படைக்கடலவர்
ஒருகுளப்படியாம்படிகடப்பவோர்புணையாக்
கருவின்மற்றெனைக்காத்தசெந்தாமரைக்கண்ணன்
பொருவின்மாக்கதைவிரித்தனைபுகலெனப்புகன்றான். ௩

துனிவெண்சங்குறைதடக்கையான்சேவடிப்பிறந்த
பனிகொள்கங்கைநீர்படிந்தவர்போலநன்னெஞ்சம்
கனியமாயவன்கதையெடுத்துரைப்பவர்கேட்போர்
புனிதராவரென்றருந்தவன்புகலலுற்றனனால். ௪

அரசுருப்புணரவுணராலாற்றலளாகிப்
பாவைமாநிலப்பசுங்கொடிமல்லலஞ்சேதா
உருவெடுத்தனளுற்றனளுற்றதுகிளந்தாள்
மரைமலர்ப்பொகுட்டுறைதருமறையவற்கன்றே. ௫

கேட்டநான்முகன்கிளரொளிவிரிந்தசெம்பவளக்
காட்டினல்லெழில்கவற்றியகற்றையஞ்சடைமேல்
கோட்டிளம்பிறைசூடியகுழகனோடமரர்
ஈட்டஞ்சூழ்வரவெழுந்துபாற்கடற்புலத்திறுத்தான். ௬

பரவைவெண்டிரைப்பாற்கடல்கருங்கடல்கடுப்ப
உருவமேனியினொளிபரந்திமைப்பவெஞ்செஞ்சூட்
டரவணைத்துயிலமலனையிறைஞ்சுபுபரவ
இருவிசும்பிடையெழுந்ததோர்வாணிமற்றன்றே. ௭

பட்டவந்தரவாணியின்படுபொருடெருண்டு
வட்டவானகத்துறைபவர்வாண்முகனோக்கி
விட்டுரைத்தனன்வெள்ளிவெண்ணிலாக்கதிர்விரியக்
கட்டவிழ்ந்ததாமரையுறைகலைமகள்காந்தன். ௮

தண்ணந்தாமரைத்தலைவிவீற்றிருந்ததார்மார்பத்
தண்ணலானகதுந்துபிக்கருள்சுரந்தளிக்கும்
விண்ணிற்றீர்ந்துநீர்வெண்ணகையரம்பையரோடு
மண்ணின்மேம்படுமெதுகுலத்துதிக்கெனவகுத்தான். ௯

அலர்பசுந்துழாயணிமுதற்றேவுவந்தளிக்கும்
மெலியனீயெனவெண்டிரைக்கருங்கடலுடுத்த
நிலமடந்தையைவிடுத்தனனிரையிதழ்க்கமல
மலரின்வந்தவன்மாண்டதன்பேருலகடைந்தான். ௧௰

பாரெலாமொருபனிமதிக்குடைநிழல்பரப்பும்
சூரசேனனின்னருள்பெறுதோன்றல்பைந்துணர்த்தாழ்
வேரியந்தொடைவிறல்வசுதேவன்வெண்டரங்க
வாரியன்னகுண்டகழ்மதிண்மதுரைகாத்தளித்தான். ௧௧

பருந்துசூழ்தருபரிதிவேற்படைவசுதேவன்
புரிந்தவெள்வளைபொலமுசடுடைபடமுழங்க
சுரும்புசூழ்பசுந்தோட்டநாண்மலர்த்தொடைசூட்டித்
திருந்துவெண்ணகைத்தேவகிதிருமணம்புணர்ந்தான். ௧௨

செஞ்சிலைத்தழும்பிருந்ததோட்டேவகனீன்ற
அஞ்சொல்வஞ்சியோடந்தாதுந்துபிமுழங்கப்
பிஞ்சுநாண்மதிபிறங்குவெண்கோட்டுமால்யானைக்
கஞ்சன்பொற்றடந்தேர்விடக்கடிநகர்க்கெழுந்தான். ௧௩

மருப்பிளம்பிறைவாணுதற்றேவகியெட்டாம்
கருப்பம்வென்றிவேற்கஞ்சனாருயிர்தெறுமென்று
உருத்துவானிடையொலித்ததோருரைசெவியோர்ந்து
நெருப்புவாயுகுவாளுறைவாங்கினனின்றான். ௧௪

குவளைநாண்மலர்பிணைந்தனகொழுங்கடைமழைக்கண்
அவளைமாய்ப்பலென்றடைதலுமடல்வசுதேவன்
தவளவாணகைத்தங்கையாருயிர்தெறறகைத்தோ
கவளமால்களிற்றரசவென்றின்னுரைகழறும். ௧௫

அழியும்யாக்கைமேல்விழைவினாலழிவிலவாய
பழியும்பாவமும்படைத்திகொலென்றுதெள்ளமுதம்
பொழியுமாறெனப்புகன்றனன்புதுமுகையவிழ்ந்து
வழியுந்தேறலுண்வண்டுவீழ்ந்தரற்றுதார்மார்பன். ௧௬

சொற்றநன்மொழிகேட்கலன்கொலைத்தொழிறுணிய
மற்றினிச்செயல்யாதெனமன்னவன்குறித்துப்
பொற்றதாமரைமுகிழ்முலைப்பூவையைக்கொல்லல்
பெற்றபச்சிளங்குழவிநீசொல்கெனப்பெயர்ந்தான். ௧௭

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

சேட்டிளம்பரிதிமார்பிற்றேவகனன்பினல்கும்
மோட்டிளந்திங்கட்கோட்டுமும்மதக்களிநல்யானை
கோட்டினிலியற்றுதிண்டேர்கொய்யுளைப்புரவிசூழ
வேட்டபூந்தெரியல்வேந்தன்விழுமணிக்கோயில்புக்கான். ௧௮

மற்றடமார்பனின்பமாந்தினனுறையுநாளின்
சிற்றிடைப்பவளச்செவ்வாய்த்தேவகிகருப்பந்தாங்கிப்
பெற்றமென்குதலைத்தீஞ்சொற்பிள்ளையையங்கைதாங்கிக்
கற்றிரண்டன்னதிண்டோட்கஞ்சன்முன்னெய்தினாள். ௧௯

வளரிளந்திங்களன்னமதலைவாண்முகத்தைநோக்கி
விளைவதொன்றில்லையாமால்விழுத்தகுகுழவிதன்னால்
குளிர்மலர்த்தெரியன்மார்பகொண்டனைசென்மோவென்னத்
தெளிகலனுரைத்தயாற்றஞ்செம்மல்கொண்டேகினாள். ௨௦

தாழிருந்தடக்கையானைத்தாமவேற்கஞ்சன்முன்னர்
யாழுடைமுனியாங்கெய்தியாதவரமரராவார்
சூழ்கடலவுணர்நின்பாற்றெருக்கவரவரையெல்லாம்
ஆழியான்பிறந்துவீட்டுமரசவென்றறைந்துசென்றான். ௨௧

கோதைவேற்கஞ்சன்றானுங்கொடுந்திறற்காலநேமி
ஆதலின்முனிவன்கூற்றாலறிந்தனன்முனிந்துபாண்வண்
டூதவாய்விரிந்தபூந்தாருக்கிரசேனனென்னும்
தாதைபேரரசுமாற்றித்தனியரசெய்தினான். ௨௨

இன்றளிர்ப்படலைமாலையாதவரிரியநூறி
வென்றியாங்களிநல்யானைவிறல்வசுதேவனோடு
சென்றுயர்குழைதோயுங்கட்டேவகிதன்னையாங்கு
வன்றளைப்படுத்திப்பெற்றமகவெலாமாய்க்கலுற்றான். ௨௩

கூற்றனான்குழவியாறுகொன்றபினுலகந்தாங்கும்
ஆற்றலஞ்சேடன்மாதராலகட்டகத்தனாக
மாற்றருஞ்சிறப்புவாய்ந்தமாயையைநோக்கிமல்லற்
பாற்றிரைத்துயிலுநங்கள்பரஞ்சுடர்பணிக்குமன்றே. ௨௪

கந்துகொல்களிநல்யானைக்கஞ்சனைக்காந்துமல்லல்
நந்தகோன்மனையின்வைகுநாறுநசலுரோணியாலின்
அந்தளிர்வயிற்றின்வைத்தியாக்கெறிகுவளையுண்கட்
செந்தளிருருவமேனித்தேவகியிளஞ்சூன்மாதோ. ௨௫

சிறப்புடையமுதின்சாயற்றேவகிவயிற்றின்வந்து
பிறத்துநாமுலகமெல்லாம்பிறைநுதற்கன்னியென்று
நறைத்துணர்தூவிவாழ்த்தலந்தரப்பிறத்திநீசென்
றறற்கருங்கூந்தற்செவ்வாயசோதையவ்வயிற்றிலென்றான். ௨௬

புள்ளுயர்கொடியினானைப்போற்றியமாயையாங்கே
தெள்ளமுதனையதீஞ்சொற்றேவகிவயாவைவாங்கி
ஒள்ளொளிபரந்தவுண்கணுரோணியென்றுலகமேத்தும்
வள்ளிதழ்க்கோதைமாதர்வயிற்றிடைவைத்ததன்றே. ௨௭

ஆயிரந்தலையநாகத்தறிதுயிலமர்ந்தவம்மான்
மாயையங்ஙனமுஞற்றமாவிதழ்க்குவளைவென்று
சேயரிசிந்துவாட்கட்டேவகிகருப்பம்வீந்து
போயதென்றங்கண்மூதூர்புலம்பொடுமயர்ந்தன்றம்மா. ௨௮

கலிநிலைத்துறை.

எண்ணுமெண்ணெயுமிலையமற்றெப்பொருளகத்தும்
நண்ணுநாரணனலத்தகுமாதவம்புரிந்த
வண்ணவானகதுந்துபிமனத்துவந்தடைந்தான்
தண்ணென்வெண்டிரைத்தடங்கடனிலப்பொறைதவிர்ப்பான். ௨௯

தண்மதுக்கமழ்தாமரைத்தலைவிவீற்றிருந்த
ஒண்மணித்திருமார்பினானுளத்துவந்துறலால்
விண்வழுக்கிவீழ்வெங்கதிர்ப்பரிதிகொலென்னக்
கண்வழுக்குறுகதிரொளிகஞலினன்மன்னன். ௩௦

பின்னல்வெண்டிரைப்பிறந்ததெள்ளமுதினிற்றேனின்
இன்னலிற்சுவைகனிந்தசொற்றேவகிதேத்துத்
தன்னகத்தினிற்றோன்றியதனிப்பெருஞ்சுடரை
மன்னர்மன்னவன்மனத்தினால்வைத்தனன்யாதோ. ௩௧

கலைநிரம்பியகறைவெண்ணிலாக்கதிர்மதியைக்
குலவுநல்லெழிற்குணதிசைபொறுத்தவாபோல
உலகெலாந்தனதுந்தியந்தாமரைகாட்டி
இலகுசோதியையேந்திழைபொறுத்தனளன்றே. ௩௨

மாலையந்துழாய்மாகதப்பசும்புயல்வளர்வான்
சோலவாவிளந்தளிரின்மேல்விழைதலென் குறிக்கேன்
சேலுலாவுகட்டேவகிதிருவயிறந்த
ஆலிளந்தளிர்போலுமென் றடைகுறல்போன்மால். ௩௩

மூடக்குந்தெண்டிரைமுழங்குபாற்கடலகநீங்கி
வடிக்குமென்மலரோதியவ்வயிற்றகத்தமர்ந்தான்
ஒடிக்குமஞ்சுடர்மாகதவுருவினதொளிமேல்
நடத்தல்போன்மெனத்தோன்றினமெய்ப்பசுநரம்பு. ௩௪

அஞ்சலஞ்சலென் றருளினற்றுமினிதளித்த
வெஞ்சினக்கடக்களிற்றுவெண்கோடடிப்பிடுங்க
மஞ்சனன்வயிற்றுற்றதுநினைந்துகொன்மாதர்
கஞ்சநாண்முகைகடந்தெழுமுலைமுகங்கறுத்த ௩௫

பட்டகாரிருட்படலமெண்டிசையினும்பாற
விட்டதண்கதிரொளியினலல்லதுவிளர்த்து
வட்டவாண்மதிநிகர்த்ததுவண்டினந்துவைப்பக்
கட்டவிழ்ந்தபூங்கோதைதீங்கதிர்நகைவதனம். ௩௬

மாற்றிலாதபொற்கொழுந்தின்மாமணிவிளக்கன்ன
தோற்றங்காண்டலுஞ்சுடரிழைபண்டையளல்லள்
ஆற்றன்மாயனேயவ்வயிற்றகத்துவந்தடைந்தான்
கூற்றம்போலுயிர்குடிப்பவென் றுணர்ந்தனன்கொடியோன். ௩௭

அளையுறைந்தவாளரவெனமுனிந்துமற்றின்னே
குளிர்மலர்ப்பசுங்கோதையைக்கோறுமென் றுள்ளும்
இளையகுன்முதிரேந்திழையிங்கிவட்கொல்லின்
விளையுஞ்சாலவும்வெம்பழியெனமனமீளும். ௩௮

இருக்கினிற்கின்மற்றேகின்மெல்லணைமிசைக்கிடக்கின்
உரைக்கினுண்ணினெங்குற்றனனெனக்குமோவென்னும்
கருத்தனுதலாற்கண்டுழிகண்டுழியெல்லாம்
அரத்தமுண்டிலங்காழியானுருவமேகாணும். ௩௯

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

சுடர்ந்துவில்லுமிழுஞ்செம்பொற்றோடவிழ்மலரினனும்
விடம்பொதிமிடற்றினனும்விண்ணவர்குழுவுமீண்டித்
திடங்கடலுலகமெல்லாந்தன்வயிற்றிருப்பமற்றோர்
மடந்தையால்வயிற்றுவாழுமாயனைவழுத்தலுற்றார். ௪௰

தெளிக்குநான்மறையுமின்னந்தெளிவதற்கரியதெய்வ
விளக்கமேஞானாநந்தவெள்ளமேநினதுமாயை
வளைத்திடப்பட்டோர்நின்னைமதிப்பரோமூவராக
உளத்தெளிவுற்றோர்பார்ப்பருன்னைமற்றொருவனென்றே. ௪௧

ஆக்கமுமழிவுமின்றியகண்டமாயமலமாகி
வாக்கொடுமனத்துக்கெட்டாவள்ளலேயறத்தின்வாழ்வே
தீக்கவுந்தீயோர்தம்மைச்செய்வினைநலத்தினோரைக்
காக்கவுமன்றேகோடிகடவுளிவ்வுருவமம்மா. ௪௨

பாழிவாய்ச்சுடிகைநெற்றிப்பஃறலைப்பாந்தண்மீதே
ஊழிவாயண்டகோளமுடைபடக்சோத்ததெண்ணீர்
ஆழிவாய்வளர்வாய்மற்றுன்னடிப்புணைபற்றப்பெற்றோர்
எழிரும்பிறவிவேலையெளிதினிற்கடப்பரன்றே. ௪௩

இருட்குறும்பெறியத்தோன்றுமிளஞ்சதிர்ப்பரிதிபோல
மருட்பெருந்திமிரமோடிமாண்டகவிளங்கஞானப்
பொருட்கதிரில்லாதாமேபூந்துழாயலங்கன்மாலை
அருட்கடல்பிறந்திலாயேலாழிசூழுலகமம்மா. ௪௪

ஆதிநின்ளுமெல்லாமஞ்செவியடுத்துய்வாயால்
ஓதியுமழகுவாய்ந்தவுருவுகண்களிப்பக்கண்டும்
கோதில்வீட்டின்பமெல்லாங்கொள்ளைகொண்டுண்பரன்றே
மோதுவெண்டரங்கமுந்நீர்முதுநிலமாக்கடாமே. ௪௫

கற்றையங்கதிர்கால்பைம்பொற்கிங்கிணிகவைஇயதெய்வச்
சிற்றடிக்கமலப்போதுதீண்டவென்ளேற்றதேயோ
ஒற்றையந்திகிரிச்செல்வவொருபெருங்கமலத்தாளால்
அற்றைநாட்பொதியப்பெற்றவங்கண்மாஞாலந்தானே. ௪௬

ஆக்குமாறென்னையீதியணிசடையானையீதி
போக்குமாறனைத்துங்காப்பப்புகுதிநின்னுண்மையெம்முள்
பூக்குமாறுணர்த்திலாதாய்புவனமோடெமையுமாய்ப்பான்
ஊக்குவாய்தொழில்கண்மூன்றுமுன்னவேயயன்மற்றுண்டோ. ௪௭

மாயையால்விளைந்தவண்ணமல்லதுவாய்மையாக
மாய்தலும்பிறத்தருறுனுமன்னுயிர்தனக்குமில்லை
மாயையிற்றீர்ந்துநின்றமற்றுனக்குண்டுகொல்லோ
மாயைநின்ளேற்றவெல்லாமதிக்கினோர்விளையாட்டன்றே. ௪அ

இனமலரண்ணலாதியீசனவ்விமையோரேத்தி
வனைமலர்விலோதமாதுன்வயிற்றுறைகுழவிவெய்ய
கனலுமிழ்திகிரியெம்மான்கஞ்சனைக்கொல்லுமொன்றும்
நினையலென்றணங்கைவாழ்த்தினிலைக்களங்குறுகினோர். ௪௯

நளியிருட்பிழம்புசீத்துஞாலம்விளக்குகின்ற
குளிர்கதிருமிழ்வெண்டிங்கள்குணதிசையுதிக்குமாபோல்
தெளியமுதன்னசாயற்றேவகியிடத்துநின்றும்
ஒளிமணிவண்ணத்தண்ணலுதித்தனனுமோணிதன்னில். ௫0

கலிநிலைத்துறை.

தாமரைக்கரநான்கின்வெண்சங்கொடுசுழல்வாய்
நேமிவெங்கதைநிரையிதழ்த்தாமரைநிலவத்
தேமலர்த்தொடைமார்பினிற்றிருமலர்சிறப்பக்
காமர்கட்டெழிற்கவுத்துவங்களத்தினிற்கவின. ௫௧

இருட்குறும்பெறிக்தெரிமணிமுடிவெயிற்கற்றை
விரிக்கவாய்தொடிவில்லிடவெண்ணிலாமதியைச்
சிரிக்கும்வாண்முகத்திலகுபொற்குழையொளிசிதற
நிரைத்தபன்மணிக்காஞ்சிபொன்னுடைமேனிலவ. ௫௨

கருவிமாமுகிற்கொழுந்தெனக்கண்கவர்மேனி
திருவில்கான்றொளிசிந்திடச்செய்யதாமரைக்கண்
அருள்பொழிந்திடவற்புதக்குழவியாய்த்தோன்றும்
விரைசெய்பூந்துழாய்விமலனைக்காண்டலும்வியந்தான். ௫௩

கலிவிருத்தம்.

வானகுமதியெனவந்துதோன்றிய
சானகநாடனைக்கண்டுகைத்தொழாத்
தேனகுதாமரைச்செங்கணீருக
ஆனகதுந்துபியன்பினேத்தினான். ௫௪

ஈனநல்லிளங்கதிர்ப்பரிதியேயென
வானுறவழங்குசெவ்வண்ணங்கோடியால்
பானிறங்கோடியாற்பாதுகாத்திட
நீனிறங்கோடியானீறுசெய்யவே. ௫௫

செய்யதாமரைமலர்ச்செல்விகாதல
பையராத்தாங்கியபாவைமண்மிசை
வெய்யகோலரசரைவீட்டற்கன்றுகொல்
ஐயசாருருவைவந்தடைந்தவண்ணமே. ௫௬

மன்னவன்படைச்செயன்மன்னன்செய்கையாப்
பன்னுதல்போற்றனிப்பரமமாயநீ
முன்னமேயியற்றியமூவகைச்செயல்
நின்னுடைச்செயலெனநிகழ்த்தல்செய்வரால். ௫௭

என்றனனேத்துழியீன்றசெல்வியும்
துன்றருந்தொன்முதற்றோற்றங்கண்டனள்
நன்றுவந்துவகைநீர்நாட்டம்வார்தரக்
கன்றுகாண்கறவையிற்கசிந்துபோற்றினாள். ௫௮

கானுயிர்த்ததுபுனல்கனல்கறங்குகால்
வானுயிர்த்தவன்றனைவகுத்துநின்றபூந்
தேனுயிர்த்தலர்ந்ததார்ச்செம்மன்மற்றுனை
நானுயிர்த்தனனெனநகையுடைத்தரோ. ௫௯

கழிந்தொருநான்முகன்காலந்தீர்தலும்
அழிந்துமண்முதலியவனைத்துநின்னுற
ஒழிந்துநீசேடனென்றுரைப்பநின்றனை
செழுஞ்சுடர்நின்னிலைசெப்பற்பாலதோ. ௬௰

வெஞ்சினநிருதர்கீள்வேரறுப்பவான்
செஞ்சிலைநிமிர்குதைகுழைத்தசேவக
கஞ்சனென்றுரைபெறுகடுங்கட்கூற்றினுக்
கஞ்சினனஞ்சினனழிப்பவேண்டுமால். ௬௧

காமர்வெண்ணிலாவுமிழ்கடவுட்சங்கொடு
தீமுகத்துமிழும்வெந்திகிரிநீள்கதை
தாமரைநறுமலர்தாங்குமிவ்வுரு
மாமுகில்வண்ணநீமாற்றல்வேண்டுமால். ௬௨

இவ்வுருக்கொண்டுநீயென்கொறேன்றினை
பவ்வவெண்டிரைத்துயில்பரமமற்றென
மவ்வலங்கருங்குழல்வழுத்தமாயவன்
செவ்விதழ்விண்டனன்செப்பினனரோ. ௬௩

முன்னநீர்நற்றவமுயலத்தோன்றினேம்
உன்னிகர்புதல்வனையுதவுகென்றலால்
எந்நிகர்யாமலதில்லையாலுமக்
கந்நிலைபிறந்தனமார்வமுற்றவே. ௬௪

என்றனனவ்வுருவிகந்துமாமணிக்
குன்றனவொருபசுங்குழவியாயினன்
ஒன்றுரையாடினனுயிர்த்தகாவலன்
மன்றலந்தாமரைவதனநோக்கியே. ௬௫

மன்னவந்தகோன்மாலைமார்புதோய்
அன்னமென்னடையினளசோதைமற்றொரு
கன்னியைப்பயக்குமக்கன்னிகைக்கொடாங்
கென்னைநீவளர்த்துகென்றிதழ்விண்டானரோ. ௬௬

இமிழ்திரைக்கடலுலகேத்தவவ்வழி
அமிழ்துறழ்சாயலவ்யசோதையீன்றனள்
குமுதையென்றுரைபெறுங்குமுதச்செய்யவாய்க்
கமழலங்கருங்குழற்கன்னிதன்னையே. ௬௭

ஏமுறத்துயின்றனர்யாருமெங்கணும்
சாமரங்கதிர்மணிச்சடைதிறந்தன
மாமலர்ப்பசுந்தொடைமன்னன்செய்யதாட்
டாமரையாயிடைத்தளையவிழ்ந்தவே. ௬௮

உயரிருவிசும்பெலாமொளிசெய்மின்றவழ்
புயல்வளைநுண்டுளிபொழியவெம்புழை
அயிலெயிற்றாவரசண்ணன்மாமணி
வெயில்விரிபணாடவிமிசைகவிப்பவே. ௬௯

எழுதருபனிமதியிமிழுங்கார்முகில்
நுழைதருமாறிருநூறுநுண்ணிலாப்
பொழிமதிமுகத்தெழிற்புதல்வற்கொண்டுதேன்
வழிதொடைமார்பினான்வல்லையேகினான். ௭௦

கறையணற்பாப்பணைகவிட்டெய்திய
மறைமுதன்மலரடிவழுத்துமாறுபோல்
வெறிகமழாம்பல்வாய்விண்டுதேன்பொழி
துறைதிகழ்யமுனையிற்றுன்னினானரோ. ௭௧

விரியனல்வழிவிடவிழிசிவந்தவாள்
அரவணைப்பள்ளியானடைதல்காண்டலும்
கரையழியமுனைசெங்கமலக்கைம்முகிழ்த்
தருவுகாதலினெறியுதவிற்றென்பவே. ௭௨

அந்தரதுந்துபியதிர்வதன்றியும்
உந்துதெண்டிரைநதியுதவமாணறம்
நந்தினமாதிரநடந்துநந்தன்வாழ்
கொந்தவிழ்மலர்வனங்குறுகினானரோ. ௭௩

நள்ளென்யாமத்திடைநரந்தநாறுதெண்
கள்ளுலாஞ்சுருங்குழற்கன்னிதன்னையீன்
றள்ளிலைப்பூணினாள்சோதைகண்டுயில்
பள்ளிவாய்மென்மெலப்படர்குற்றனரோ. ௭௪

இன்னதோர்குழவிநாமீன்றதாமென
உன்னலண்மய்யர்கூர்ந்துறங்குமேழைபாற்
மன்னுபைங்குழவியைவளர்த்திமன்னனக்
கன்னியைக்கைக்கொடுகடிதின்மீண்டனன். ௭௫

மணிக்கொடியனையாதன்மனைவிசெங்கையில்
தணிப்பருங்குழவியைத்தலைவனல்கினன்
பிணித்ததுவல்லிகாண்மலர்பிறங்கிட
அணித்தகுகதவமுமடைக்கப்பட்டவே. ௭௬

அழுததுகுழவியாங்கழுதவின்னொலி
செழுமணிவாயிலோர்செவிப்பட்டோதலும்
குழலொடுநறுமலர்க்கோதைசோர்தரக்
கழைசுளிகளிற்றுவெங்கஞ்சனெய்தினான். ௭௭

மல்லடுதோளினான்வரவுநோக்கிய
சில்லரியொழுகுகட்டீஞ்சொற்றேவகி
சொல்லனின்றிருமகன்கோடற்காகுமிந்
நல்லெழின்மாதெனநயப்பிற்கூறினாள். ௭௮

துளிமுகிற்கருங்குழறுவர்த்தசெய்யவாய்க்
கிளியெனமிழற்றுதீங்கிளவிகேட்கலன்
தளிர்புரைசெங்கையிற்றழீஇக்கொள்கன்னியை
வளைதொடுதடக்கையால்வலிதின்வாங்கினான். ௭௯

அற்றமில்கன்னிதனஞ்செஞ்சீறடி
பற்றினன்குருச்சுடர்ப்பளிக்குப்பாறைமேல்
எற்றுழிக்கையிகந்தெழுந்துதைத்தனள்
சுற்றமைசிலையினான்றோளினென்பவே. ௮0

வானுலாய்த்திரிதருவான்முகட்டிடை
நீளொளிமின்னெனநிலவத்தோன்றியெண்
டோளினண்முருகவிழ்துளவத்தாரினள்
காளகவுடையினள்காளிகூறுவாள். ௮௧

அரசமற்றென்னைநீயறைவதென்கொலோ
பொருதுநிற்சொல்பவன்புதுவெண்டிங்கள்போல்
ஒருவழிப்பிறந்தனனுறைகின்றானென
வெருவருகட்டுரைவிளம்பியேகினாள். ௮௨

முத்தவெண்ணகையினாண்மொழிதல்கேட்டலும்
எத்திறம்புரிந்தனம்யாமற்றீங்கெனாத்
தத்தரியொழுகுகட்டங்கைதன்னொடு
மைத்துனன்வன்றளைமாற்றினானரோ. ௮௩

தெய்வமும்பொய்யுரைசெப்பிற்றேயெழு
பவ்வவெண்டிரைநிலம்பரவுநல்லெழிற்
கொவ்வைவாய்க்குழவிகள்கொல்லப்பட்டவே
வெவ்வினைவிளைவையார்விலக்கவல்லரே. ௮௪

அழியன்மினுதலுமழிவுமோர்ந்திடின்
ஒழிவிலெப்பொருட்கெலாமுண்மையல்லவோ
பொழிமதுக்கோதையீர்பொறுமின்யான்புரி
பிழையெனப்பணிந்தனன்பெயர்ந்திட்டானரோ. ௮௫

மழைமதக்களிறனன்மற்றைஞான்றுநல்
எழில்வளர்கன்னிநன்றிசைத்தகூறலும்
குழவிகளனைத்தையுங்கோறல்வேண்டுமென்
றழலுமிழ்வேற்படையமைச்சர்கூறினர். அசு

புணர்ப்புறுபூதனையாதியாகிய
தணிப்பருங்கொடியவர்தம்மைமாநிலத்
திணைப்பருங்குழவிகள்யாவுங்கொல்லெனப்
பணித்தனன்வெங்கொலைபழுத்தவேலினன். அஎ

முருகவிழ்முள்ளரைமுளரிவாண்முகத்
தொருபசுங்குழவிவந்துதித்ததாமென
நாலைமாநிலம்புகழ்நந்தகோபனோர்
கரையிலாவுவகையங்கடலின்மூழ்கினன். அஅ

ஊழிமாக்கடன்முகட்டொருவரின்றியே
தாழ்சினையாலிளந்தளிரின்மீமிசை
வாழ்பசுங்குழவிக்குமறைவல்வேதியர்
சூழ்வாவியற்றினன்றேற்றச்செய்வினை. அகூ

சொரிதருபாலினதுள்ளுநகன்றின
புரையறுபசும்பொனாற்புனையப்பட்டன
இருபதினாயிரமிளநல்லானுவந்
தருமறையவர்க்கவாவடங்கநல்கினன். கூ0

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கொத்தளிசுலாவுமுல்லைக்கொழுமலர்கொடுத்தபந்து
கைத்தளிர்சிவப்பவீசிக்கடிகமழ்சிவிறிநீர்தூய்
முத்தவெண்ணகையார்நெய்தோய்முறிபுரைமேனிமாதர்
நெய்த்தபோன்புபோர்ப்பநெய்விளையாடல்செய்தார். கூக

நந்தன்வாழ்பெருந்தண்கானலத்தகுபசும்பொற்சுண்ணம்
சிந்தூரப்பொடிகளோடுதிசைதிசைகமழவீசி
அந்தளிர்ப்பாரிசாதத்தாய்மலர்த்தாதுபோர்த்த
இந்திரனகரமேய்ப்பவின்னெழில்சிறந்ததன்றே. கூஉ

பிடவமென்படலைமாலைப்பெருந்தகைநந்தகோபன்
கடன்மடைதிறந்ததென்னக்கடாய்பொழிகளிற்றுக்கஞ்சற்
கிடுதிறைகொணர்ந்துநல்வேயிசைதெரியாயர்சூழ
வடவரைமருளுமாடமதுரைசென்றெய்தினனல். கூஙு

கதக்களியானையன்னகஞ்சனைக்கண்டுவண்டு
மிதிக்கவாய்நெகிழ்ந்ததாரான்வீட்டகமீடலோடும்
பொதுக்கடிந்துலகங்காத்தபுகழ்வசுதேவனெய்தி
உதித்ததேகுழவியென்னவுரைத்தனன்றழீஇனனே. கூச

கொடிப்பசுந்துளவகாறுகோகுலந்தன்னினண்ப
அடுக்குமுற்பாதங்கூர்வேலாயினைக்கண்டாயன்றே
நெடித்தல்செல்லாதிபோதியென்றலுநினைவுகூர்ந்து
வடித்தபூந்தாமமார்பன்வல்விரைந்தணுகலுற்றான். ௧௫

திருவவதாரவத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧௫.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## உ-வது, பூதனைவீடுபெற்றவத்தியாயம்.

---

### கலிவிருத்தம்.

செஞ்சுடர்மணிக்கலைசிலம்பொடுசிலம்ப
வஞ்சியெனநின்றசைமருங்குதடுமாற
நஞ்சுபொதிவெம்முலையருத்துறநடந்தாள்
அஞ்சுவருபூதனையணங்குருவெடுத்தே. ௧

கண்டவர்மனம்பருகுகாவிபுரைகண்ணாள்
வண்டுபடுதாமரைமலர்க்கையின்விளங்கப்
புண்டரிகமாதுவரல்போலவருண்மாரிக்
கொண்டல்விளையாடல்புரிகோயிலினடைந்தாள். ௨

காலவிடமூறுமொருகட்செவியையந்தண்
மாலையெனவங்கையிலெடுப்பதனைமான
ஆலுமறையந்தமுமலைக்கடலுநீத்துக்
கோலமுறுகோவலர்கொழுந்தினையெடுத்தாள். ௩

குண்டலமிலங்கவொர்குறங்கினிதிருத்தி
வெண்டளவரும்பனையமென்னகைவிளைத்து
மண்டுபுனல்வேலிதிகழ்மண்ணுமுயர்விண்ணும்
உண்டவனைவெய்யமுலையூட்டினளணைத்தே. ௪

அறிந்துநகையாடிமுலையங்கைகொடுபற்றி
மறங்குலவுவஞ்சமகண்மாமுலைமணிக்கண்
திறந்தொழுகுபாலினொடுசெய்யதளிரொன்னப்
பிறங்குகனிவாய்முகில்பிழிந்துயிர்குடித்தான். ௫

ஊறுமுலைதந்திளையருள்ளுயிரையெல்லாம்
ஈறுபுரிபூதனையிறந்துருவவேறு
நீறுபடயோசனையினின்றமரனெல்லாம்
வீறுயர்நிலம்புகவிழுந்தனளொர்வெற்பின். ௬

கொண்டறவழ்கின்றதொருகுன்றமனையாண்மேல்
தண்டனிதமாமுகிறவழ்ந்துவிளையாட
அண்டர்குலமங்கையரொடாய்கொடியசோரை
கண்டனள்கலங்கினள்கலுழ்ந்தனளெடுத்தாள். ௭

மூப்பிளமையின்றியுயிர்மூவுலகுமுண்டோர்
பாப்பணையின்மீதுதுயில்பண்ணவனையெல்லாம்
பூப்பவனையுந்திதருபூவினில்வகுத்துக்
காப்பவனைநின்றுசிலகாப்பனகள்செய்தாள். ௮

மூரலின்முகிழ்த்தமலர்மொய்த்ததொடைநந்தன்
சார்தருநெறிக்கணுயர்தண்சினைமரங்கள்
வேரறவிழுந்தவள்வெருக்கொளுடனோக்கி
ஓரும்வசுதேவன்மொழியுள்ளினன்வியந்தான். ௯

நீட்டியநற்செவ்விகொடுசேர்ந்ததுமுலைப்பால்
ஊட்டியதும்வல்லுருவமுற்றுவிழுமாறும்
கேட்டனன்வியந்தளிகிளைத்ததுளவோனை
ஆட்டினன்விழிப்புனலணைத்தனனுவந்தான். ௧௦

மட்டொழுகுமுல்லைமலர்மார்பர்முகனோக்கிச்
சுட்டிடுகவிங்கிதுதுணித்தெனவிசைப்பக்
கட்டழலுமிழ்ந்துகதிர்காலுமழுவாளால்
வெட்டியவராக்கியுடல்வெங்கனன்மடுத்தார். ௧௧

மேதகுகடற்பவளம்வென்றுமிளிர்செவ்வாய்
ஆதிகதிர்மாமுலையருந்தியதிறத்தால்
பூதனையுடற்சுடுபுகைப்படலமண்டக்
காதமொருநான்குவிளைகாரகில்கமழ்ந்த. ௧௨

வீட்டநினைவாகியழல்வெய்யவிடனூறு
மோட்டுமுலைதந்தவளுமுத்திபடர்குற்றுள்
வாட்டுளவினற்கமுதுதத்திவழிகொங்கை
ஊட்டுமவர்சேர்நெறியுரைப்பதெவனம்மா. ௧௩

பூதனைவீடுபெற்றவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௦௮.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ரு-வது, சகடமுதைத்தவத்தியாயம்.

### அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மஞ்சாயொளிருந்திருமேனிமழலைப்பசுஞ்செசான்மறைக்கொழுந்தை
அஞ்சாய்மருங்குற்செங்கனிவாயசோதைகனிவாய்முலையருத்தி
நஞ்சாயிரவாய்முழைஞ்சுபொழிநாகங்கிடந்துபெரிதுயிர்ப்பத்
துஞ்சாமணிப்பொற்றொட்டின்மிசைத் துயிலத்துணைக்கண்டுயிற்றினளா [ல். க

சிறந்தமூன்றுந்திங்களின்வாய்ச்செந்தாமரைக்கட்பசுங்குழவி
பிறந்ததிருநாள்விழாவயர்ந்துபிள்ளைப்பிறைவாணுதலன்னை
உறைந்தகாலைப்பசித்தழுதங்கொண்பொன்னடித்தாமரைநீட்ட
மறிந்துசகடம்வீற்றுகிமண்மேலதிர்ந்துவீழ்ந்ததால். உ

வேறுபடவீழ்நெடுஞ்சகடம்வீழவியந்தேயெடுத்தணையா
ஊறுமுலைப்பாலின்னமுதமூட்டிக்குறங்கின்வைத்துவப்ப
மாறில்குழவிமணிவரையிற்கனப்பமண்மேல்வைத்திடலும்
சூறைவளியாவோரவுணன்சுழன்றுவிண்கொண்டெழுந்தனனால். ந

சுழிக்குங்கடுங்காலெறிகின்றதூளிப்படலத்திடைமறையக்
குழைக்கும்பசும்பொற்கொம்பனையாள்குழவிகாணுள்குழைவெய்த
வழுத்தற்கரியமறைமுதலைவவ்விக்கொடுபோம்வாளவுணன்
கழுத்துநெரியக்கண்பிதுங்கிக்கன்மேற்கவிழ்புனுயிர்மாய்ந்தான். ச

விண்டோய்குடுமிநெடுவரைபோல்வீழ்ந்தவவவுணனுக்கைமிசைத்
தண்டாதுறைக்குந்துளவமுகிறவழ்ந்துவிளையாடுதலன்னை
கண்டாள்வெருவிக்கைவிதிர்த்தாள்கலுழ்ந்தாள்கைத்தாமரைமலரில்
கொண்டாள்சுரந்துவழிமுலைப்பால்கொடுத்தாளுள்ளங்குளிர்ப்புற்றாள்.

### கலிநிலைத்துறை.

பூவைப்புதுமாமலர்போலெழில்பூத்ததோன்றல்
ஆவித்தகாலைத்துவர்வாயிடையாழிஞாலம்
பேவித்திகழுந்திறனோக்கிவியக்குமன்னை
சாவித்திருமாமலரன்னதன்கண்புதைத்தாள். சு

நிறைவுற்றதிங்கணிலத்தூடெழனோமும்மை
மறுவற்றகாட்சிமறையோன்வரக்கண்டுநன்னர்
நறையுற்றபூமென்கரங்கூப்பியநந்தகோபன் எ
சிறுவர்க்குநாமம்புனைவாயெனச்செப்பினனால். எ

மடல்சேர்கழுநீர்மலர்வாட்கணுரோணிசெம்மல்
சுடர்கான்மதியிற்சுடர்கின்றதொர்தோற்றமேய
அடலேறனையாற்ககன்ஞாலமனைத்துமேத்த
மிடல்கூரிராமனெனநாமம்விளம்பினனே. அ

மண்ணைக்கிளைக்குஞ்சுடர்நீலமும்வண்டுதேறல்
உண்ணக்கிளைக்குநறுநீலமுமொத்தகோல
வண்ணற்குத்தண்ணங்கமலத்தலர்போன்மலர்ந்த
கண்ணற்குக்கண்ணனெனவோர்பெயர்கட்டுரைத்தான். ௯

## கலிவிருத்தம்.

பொருவில்வெண்மையுஞ்செம்மையும்பொன்மையும்
மரபினுற்றனன்மற்றையுகந்தொறும்
விரவலுற்றகலியில்விழிகவர்
கருமையெய்துபுகண்ணனென்றாயினன். ௧0

அருமறைத்துறையாடுதடந்திரைப்
பரவைஞாலப்பரப்பிற்றவழ்தர
முருகுவிம்முமுளரியஞ்செய்யகட்
கரியவன்றவழ்க்கற்றனனென்பவே. ௧௧

களித்துவண்டுகளுலுங்களிகூருத்
துளித்ததண்ணந்துழாய்முகிற்கேழல
களிப்பத்தோன்றுமமலற்குவந்தறம்
முளைத்ததென்னமுளைத்ததுமூரலே. ௧௨

கடகளிற்றிளங்கன்றனையான்மழ
விடையின்மென்னடைகற்பவிளைந்தெனப்
படருங்கன்றின்வாற்பற்றினன்மென்மெல
நடைபுரிந்தனன்ஞாலங்களிப்பவே. ௧௩

## வேறு.

தழைத்தநீருலகுதந்துமளித்தும்
அழித்துநின்றுவிளையாடுமெவ்வண்ணல்
குழைத்தபைந்தழைசெய்கோவலர்குற்றில்
உழைப்படர்ந்துவிளையாடலுவந்தான். ௧௪

உந்துநீருலகமுண்டருள்செவ்வாய்ப்
பைந்துழாய்க்குழவிபண்பினியற்றல்
சொந்துலாநறியகோதையசோதைக்
கந்தண்முல்லைநகையாய்ச்சியர்சொல்வார். ௧௫

சட்டமைந்தசிறுகன்றுவிடுக்கும்
தொட்டுவெண்ணெயொடுதோய்தயிருண்ணும்
நெட்டுறிக்குரவினின்றுகைநீட்டும்
எட்டுகின்றிலதுடைக்குமெறிந்தே. ௧௬

வேறு.

எழொழுகுதாமரைமெனத்திகழ்கரத்தால்
காரிருள்குடித்துவெயில்காலுமணிபொத்திப்
பாரில்விளையாடுமொருபைம்புயலெனச்சென்
றூரிருளகத்தளையெடுத்தனனருந்தும். ௧௭

என்றுபலசின்மழலையேழையரிசைப்பக்
குன்றிணைசுமந்துகுழைவுற்றகொடிபோல
நின்றெசிமருங்கினெழினேரிழையசோதை
ஒன்றுமுறையாடலனுவந்தனளிருந்தாள். ௧௮

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

நங்காய்மண்ணருந்தினனின்குழவியெனவில்லையெனநவின்றானாகக்
கொங்கார்ந்தசெழுங்கமக்கோற்றொடிகைபற்றினள்வாய்காட்டுகென்ன
அங்காந்தமணிவண்ணனம்பவளத்துவர்வாயினழகுகாணும்
செங்காந்தண்முகிழ்விரலந்தீங்கிளவியுலகனைத்துந்தெரியக்கண்டாள். ௧௯

விண்கண்டாள்விண்விளக்கும் வெங்கதிருந்தண்சுடரும் விளங்கக்கண்டாள், மண்கண்டாண்மண்வளைத்த மாகடலும்பெருயர்மால்வரையுங்கண்டாள், தண்கொண்டவெண்கோட்டுத் தளவெருவெனங்கண்டாடனையுங்கண்டாள், பண்கொண்டவண்டமற்றும் பசுந்துளவோனிவனெனவேயறிவினாளால். ௨0

முருகொழுகுருகிழ்விரியு மொய்த்துளவோன்மாயையினுன் மறைத்தலோடும், பருகுவனபோனோக்கிப்பழுத்தொழுகுமன்பினளாய்ப்பாரவியன்னை, பொறுசளிறுவருகவளர்போரேறுவருகவெழிற்பூவைவண்ண, வருகவெனத்துகிரில்விளையணிமுத்தங்கொண்டனளுண்மகிழ்வுபூத்தாள். ()

வேறு.

என்னலுமன்னர்மன்னனீன்றவர்க்கெய்தலாகாக்
கன்னன்மென்றளையதீஞ்சொற்கண்ணனதிளமைத்தன்மை
மன்னியவிருப்பிற்காணமாதருநந்தகோனும்
முன்னமெய்த்தவஞ்செய்தார்சொலெனமறைமுனிவன்சொல்வான். ௨௨

சகடமுதைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௩0.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௬-வது, மருதிடைத்தவழ்ந்தவத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

தண்ணிலாமுறுவற்செவ்வாய்த்தரையெனுந்தலைவியோடு
மண்ணினிற்பிறப்பவென்றோர்வசுவினைமலரோன்கூற
அண்ணலந்திகிரியான்மேலன்பெமக்களிப்பாயென்னக்
கண்ணுறுநம்மில்வந்துகண்ணனென்றருளிறேனல். ௧

அன்னவரிவர்மற்றம்பொனரும்பவிழ்கமலவீட்டு
முன்னவன்மொழிந்தவாறேமுறிதிடைபடலைப்பைந்தார்க்
கன்னியந்துளவத்தோன்றல்கண்ணுறக்கனியுமன்பால்
இன்னிளஞ்செவ்விநோக்கியெய்தினரின்பமன்னோ. ௨

வளையினமுரலத்திங்கள்வாணுதன்முத்தம்பூப்ப
அளியுணவிரிந்தகோதையவிர்தரவசோதையோர்நாள்
முளிதயிர்கடைந்தகாலைமுழங்குநீருலகமுண்ட
ஒளிமணிவண்ணனெய்தியுண்டனன்முலைமற்றன்றே. ௩

பைங்கதிர்க்குழவியன்னான்படாமுலையருந்துமெல்லைப்
பொங்கியதடுபாலென்றுபுணர்முலைசொரிந்தபாலும்
கொங்குலாமலங்கன்மாலைக்கொழுநருத்தளியுஞ்சிந்தச்
செங்கடைமழைக்கட்பேதைசென்றனளோடிமன்னோ. ௪

எறித்தவெண்டிங்களூறுமின்றளியமுதமென்னத்
தெறித்தவெண்டயிர்நுண்புள்ளிதிருமுகஞ்சிறப்பநின்ற
உறைப்பசுங்கொண்டலன்னானுடைத்தனன்றடவுத்தாழி
மறைத்தனள்வைத்தவெண்ணெய்வாரினனோடினானால். ௫

மழைக்கருங்கண்ணிநோக்கிமழையிருங்கூந்தருழக்
குழைத்ததோர்வல்லியென்னக்குழைந்தநுண்மருங்குநோவப்
பழுத்தநான்மறையினோடுபடுபொருளொருங்குதேர்ந்த
விழுத்தவர்தொடரவொட்டாவிமலனைத்தொடர்ந்துசென்றாள். ௬

தளிர்க்கவினழித்தபொற்றாட்டாமரைசிவப்பவோடி
இளைத்தனளன்னையென்னாவிளங்கதிர்ப்பரிதிநாணக்
கிளைத்தொளிதவழும்பைம்பொற்கிங்கிணிசிலம்பவோடும்
களிற்றிளங்குழவியன்னான்கையகப்பட்டுநின்றான். ௭

தளையவிழ்முளரியன்னதாட்டுணைநினைவோர்க்கெல்லாம்
விளைதருவினையின்கட்டுவீட்டுபைந்துளவினானைக்
களியிருஞ்சுரும்பர்மூசுகாந்தண்மென்முகுளமன்ன
ஒளிவளைக்கரத்தாலன்னையுரலொடுபிணிக்கலுற்றாள். ௮

## கலிநிலைத்துறை.

அணைந்துவெண்மதிதொடுநெடுங்கிரியெனவண்ணாந்
திணைந்துவிம்மியவேந்திளவனமுலைசுமந்து
வணங்குநுண்ணிடைமயிலியல்வயின்வயினோடிக்
கொணர்ந்துகட்டியகயிறெலாமிருவிரல்குறைந்த. ௯

வீக்கிவீக்கித்தன்விரைகமழ்தாமரைச்செங்கை
சேக்கவங்கதிர்த்திங்களஞ்சிறுநுதல்வியர்ப்ப
மாக்கண்வெம்முலைமடவரல்வருந்துதனோக்கி
யாக்கப்பட்டனனெங்கணுநிறைந்தவவ்விறைவன். ௧௦

இருநிதிக்கிறைகாதலரெரிபொன்வார்ந்தன்ன
புரிநரம்புளர்நாரதன்புகன்றசாபத்தால்
மருதுருக்கொடுநின்றமைநோக்கினன்மலர்ந்து
கருணைமாமழையசும்பெழுதாமரைக்கண்ணன். ௧௧

எனலுமன்னவனென்னைகொலிளநருவொழுகி
அனையதீந்தொடையாழ்முனியறைதருசாபம்
தனதன்காதலருற்றதுசாற்றுவாயென்ன
வினைமுருக்கியமெய்த்தவன்விளம்பலுற்றனனால். ௧௨

வேறு.

நந்தாதவென்றிநளகூபரனான்றுதேன்சோர்
மந்தாரமாலைபுனைமார்பன்மணிக்கிரீவன்
செந்தாமரைமேற்றிருவிற்றிகழ்மாதரோடும்
அந்தாதுயிர்க்குமலர்ப்பூம்புனலாடுவாரால். ௧௩

விரைநாறுதேறன்மதுமாந்திமென்றூசுநீங்கி
அரமாதரோடுகளியாற்புனலாடனோக்கி
மானாகவென்றுசபித்தான்மலர்வாயவிழ்ந்து
சொரிதேறலென்னச்சொரியாழிசைச்சூழ்ச்சிமிக்கோன். ௧௪

உயர்தெய்வயாண்டினொருநூறுநின்றொற்றையாழிப்
புயல்வண்ணன்றன்னையடைவுற்றுழிப்போவதாகச்
செயிர்மன்னுசாபமெனச்செப்பினன்செப்புமாறு
வெயின்மன்னுசெக்கர்மணிமார்பன்விலக்கலுற்றான். ௧௫

வேறு.

தழைதவழ்ந்தபூந்தாதவிழ்தாழிருங்கூந்தற்
குழைதவழ்ந்தகட்டேவகிபச்சிளங்குழவி
இழைதவழ்ந்தபேரொளிக்கதிர்மின்னெனவிமைப்ப
மழைதவழ்ந்தெனமருதிடைத்தவழ்ந்தனன்மன்னோ. ௧௬

உரலொடுந்தனித்தவழ்தருபுயர்வெளியளந்த
விரிதடஞ்சினைபுணர்மருதொசிந்துவேர்பறியா
வரைவிழுந்தெனவீழ்ந்தவம்மருதுருவெடுத்தோர்
பாவியேகினர்பசுந்துழாய்ப்பானடிபணிந்தே. ௧௭

அசனிவீழ்ந்ததென்றாய்ச்சியரால்வயிறதுக்கி
நொசிமருங்கிறநொய்தின்வந்தீண்டினர்நோக்கிப்
பசியமாமுகில்வண்ணத்தனுரலொடும்படா
ஒசிதலுற்றுவீழ்ந்தனவெனத்தெளிந்தனருள்ளம். ௧௮

அண்ணனந்தகோனறிந்தனன்கைம்முகிழ்த்தறியா
வெண்ணெயுண்டபைம்புயல்பிணிப்பவிழ்த்தனன்விருப்பால்
தண்ணந்தாமரைத்தடக்கையாற்றழீஇயினன்செய்ய
கண்ணிறைந்தனன்படுபுனல்களித்தனனெஞ்சம். ௧௯

மழைத்தகார்முகிற்கொழுந்தனுண்மணிசிறவிசும்பு
கிழித்தமின்னெனக்கீற்றிளம்பிறைநுதலுரோணி
தழைத்தகாதலிற்றளிரடிசிவப்புறநடந்தாங்
கழைப்பவந்திலனுடினனுற்றடைகரையின். ௨௦

கண்ணதாமரைக்கண்ணநின்பிறந்தநாளின்றால்
அண்ணலானினமந்தணர்க்குதவுவானடைக
உண்ணிலாவிளையாடலேயுவத்திகொலென்று
வண்ணவார்குழலசோதைசென்றழைத்தனள்வந்தான். ௨௧

தோடுவாயவிழ்தூய்மலர்க்கற்பகங்கொணரக்
கோடுவாய்வைக்குங்கொற்றவன்கூத்தெனைப்புகல்வேன்
பாடல்வாயிளம்பூவையிற்பாவையர்பாடி
ஆடுவாயெனச்சீறடிசேப்பநின்றாடும். ௨௨

ஊறுபற்பலவுற்றவிவ்வுழையகன்றொருபால்
சேறுநாமெனத்தேங்கொள்பூந்தொடையுபநந்தன்
கூறநந்தகோன்கோற்றொடிமாதர்முன்செல்ல
எறுபோல்வளர்குழவிகடம்மொடுமெழுந்தான். ௨௩

மருதிடைத்தவழ்ந்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௧௫௩.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௫-வது, விருந்தாவனமடைந்தவத்தியாயம்.

---

### கலிச்சந்த விருத்தம்.

நரந்தங்கமழ்குழன்மங்கையர்நகுதண்கதிர்நகைபோல்
அரும்புந்தளவிளவெண்முகையலர்தாதுழுதகலாச்
சுரும்பஞ்சிறைவரிவண்டொடுதுளவம்பொழிதண்டேன்
விருந்துண்டுபைந்தொடையாழ்செயும்விருந்தாவனமடைந்தான். ௧

கொண்டற்குலம்விளையாடியகோவத்தனகிரியும்
கண்டற்கடிமணநாறியகாளிந்தியுமெறிநீர்
வண்டற்புதுமணலுங்கதிர்மணிவாலுகக்குன்றும்
அண்டர்க்கிறைகண்டுற்றனனமையாமகிழ்வன்றே. ௨

உழைக்கன் றுறழ்விழியாய்ச்சிபருறிவெண்ணெய்தொட்டுண்டோர்
மழைக்கன்றெனத்திகழ்வோனுயர்வானோர்மணிமுடியால்
தொழக்கன்றியபதத்தான்பசுந்தோட்டின்னறுகருந்தும்
குழக்கன்றினமேய்த்தானிளங்குறுமாக்களொடம்மா. ௩

வளர்கன்றினதுருவாயொருவைவேற்கொலையவுணன்
தளவம்படர்தண்கானகந்தலைப்பெய்தமையறிந்தான்
துளவம்புனைவிரிதாரவன்றுணைவற்கறிவுறுத்தான்
விளவின்கனியுதிரும்படிவிரைவிற்கொடெறிந்தான். ௪

வையம்பொதிபொற்றுண்முகில்வால்வெள்வளையொளிரும்
கையம்புயமலராலிருகால்பற்றினனெறியப்
பெய்யும்புயலெனவார்த்துமண்பிள்ளும்படிவீழாப்
பொய்யும்படுகொலையுந்தனிபுலம்புற்றிடமடிந்தான். ௫

அழன்மன்னியதிகிரிப்படையவிர்தாமரைக்கரத்தோர்
எழின்மன்னியசிறுகோலெடுத்திளங்கன்றினந்துரந்தான்
பொழின்மன்னியநறுமுல்லையம்புலத்தொள்ளிணர்க்குரவின்
நிழன்மன்னியதண்ணந்துறைநீரூட்டினனிருந்தான். ௬

புழுங்குஞ்சினமுதிர்வுற்றபுள்ளாகியொரவுணன்
விழுங்கும்பொழுதழலாமெனமிடற்றிற்சுடவுமிழாக்
கொழுந்தண்டுளவணிமாயனைக்குத்தற்கெழநெடுமால்
செழும்பங்கயமலரங்கையிற்றீவாய்கிழித்தனனால். ௭

பொருகொக்கினதுருவாகியபுலவுப்படையவுணன்
செருகுற்றனன்விழிமற்றெழுசிறுகன்றினந்தொடரா
முருகுற்றதண்முகைவாய்நெகிழ்முல்லைப்புறவெல்லாம்
விரைகக்கியதுளவப்புயல்விளையாடினனுவந்தான். ௮

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

எறிகதிர்வாளாலிருட்குறும்பெறியுமேரிளம்பரிதிவான்பொடிப்பச்
செறியிதழ்விரிசெந்தாமரைக்கண்ணன்சேட்டிளங்கன்றெலாந்துரந்து
முறியிளமுல்லைமெல்லரும்பென்னமூரல்வெண்டயிரளைபொதிந்து
குறுகுறுநடந்துசிறுவர்வந்தீண்டக்கோடுவாய்வைத்தனனெழுந்தான். ௯

முள்ளரைமுளரிமுகத்தினளாகி முலைகொடுத்திறந்தபூ தனைக்கும்,
புள்ளுருவெடுத்து விழுங்கிமாய்ந்தவற்கும் பொருவிலாத் தம்பியென்று
ரைக்கும், அள்ளிலைநெடுவேலகாசுரனென்போ னவ்வழிமலைநெடும்பாம்
பாய், வெள்ளிமுள்ளெயிற்றுப்பாழிவாய்விசுப்பு வெளியறவிரித்தனன்கி
டந்தான். ௰

சட்டிளந்திங்கடவழ்வரைமுழைஞ்சோர்தீவிடப்பாந்தள்வாய்போலக்
ாட்டியவண்ணங்காண்மினோவென்றுகாதலாற்சிறுவராக்கணங்கள்
ட்டமோடேசப்பவளவாய்மலர்விண்டியம்பலனென்றுமாங்கேகி [ன்.
ட்டுவாளரவின்பிடறுகீண்டெழுந்தான் றுத்திவாளரவினிற்றுயில்வோ

பிளந்தகார்மிடற்றினின்றிளங்கன்றும்பிள்ளையஞ்சுரும்பொடுவரிவண்
டுளர்ந்ததார்முல்லைப்பசுந்தொடையாயருயிர்புரைசிறாருமுய்ந்தெழுந்தார்
வளர்ந்தபாம்புருவாக்கிடந்தவன்பாம்பின்வளர்ந்தவன்சேவடிபடர்ந்தாண்
களங்கனிவண்ணத்திறைவிளையாடல்கண்டனன்மலரவன்களித்தான்.

வெருவருபாந்தளுருக்கொடுகிடந்தவேற்றிறலவுணனையந்தாம்
பருவமாமாயன்சோறல்கண்டாடும்பருவமேபுகழ்ந்தனனுயர்
புரையறுசிறுவராதலவ்வாறுபுகழ்ந்ததென்வழங்குவாயென்னக்
குருதிகொப்புளிக்கும்பரிதிவேல்வேந்தன்கூறநான்மறையவன்கூறும்.

விருந்தாவனமடைந்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௪௬௬.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௬-வது, மலரவன்சிறார்க்கன்றுகவர்ந்தவத்தியாயம்.

---

### எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பாற்குடமருட்டுசெருத்தலான்கன்றுபச்சிளம்புல்லுணுத்தெவிட்டித்
தாற்றிளங்கமுகநறுநிழல்படரத்தளவணியாயர்தந்நயர்
வீற்றுவீற்றாகப்பாசடைவிரித்துவிரவியேதனித்தனிமேவி
ஆற்றுணவயின்றாரெறிதிரையமுனையாற்றடைகரையகத்திறுத்தே. ௧

வட்டுடைச்செருகுமுல்லையங்குழலவ்வயிற்றிடைத்திகழவார்கோடும்
கட்டெழிற்கோலுங்கைம்முதலணைத்துக்களியமுதிடக்கரத்தேந்தி
விட்டொளிர்பசும்பொன்னாழிமெல்விரலின்மிசைவதற்குரியனதாங்கி
இட்டபூந்தவிசினணிதினின்றயின்றாணிமையவர்குழாத்தவிநுகர்வோன்.

நிழல்வளரிளங்கன்றுழைதொறும்படர்கின்மினென்றிளைஞரைநிறுவி
எழில்வளர்செங்கைமலரில்வெண்கவளமேந்தினனெழுந்தனன்றொடரப்
பழமறைமுதலிதிருவிளையாட்டுப்பார்க்குநாமின்னமென்றிளவண்
டுழுநறுமலரோன்மழவரோடான்கன்றொளித்தனன்மாயையினொருங்கே.

முற்றநான்மறையுங்கற்றறிந்தவருமுறைமைசான்முதுமறைக்குலமும்
தெற்றெனக்காணுவொருபெருந்தீர்த்தன்சிற்றடித்தாமரைசிவப்பக்
சுற்றினந்தேடிக்காண்கிலான்மீளுங்காலமென்முல்லையங்கண்ணிப்
பொற்றொடிப்புதல்வர்தம்மையுமந்தண்புளினமேற்காண்கிலனினைந்தாண்

களிச்சுரும்பாற்றுவெள்ளிவெண்டோட்டுக்கள்ளவிழ்முளரிவீற்றிருக்கும்
பளிக்கொளியுருவிற்பவளவாய்ப்பச்சைப்பசுங்கிளிமழலையாள்கொழுநன்
ஒளித்தனனென்பதுணர்ந்துபாரேழுமுந்திநாண்மலரிடைக்காட்டி
அளித்தழிப்பவன்றானுயர்தஞ்சிறாருமானிளங்கன்றுமாயினனால். ௫

மாற்றருஞ்சிறப்பின்மழலைவாய்க்குடவமைந்தர்தம்வண்ணமும்வனப்பும்
தோற்றமும்வடிவுந்தொழில்களுங்குணனுஞ்சுடர்மணிப்பூணுமங்குதிலும்
ஊற்றிருந்திளந்தேனொழுகுபூந்தாருமூதிநீங்குழலும்வார்கோடும்
வேற்றுமையின்றியங்ஙனம்விளைந்தவிளைவுநாமெங்ஙனமுரைக்கேம். ௬

நறவுவாய்மடுத்துவரியளிமிழற்றுநகுமலர்வடிக்கணைதெரிந்து
சுறவமீதுயர்த்தவேனிலான்றேன்றச்சுடர்மறைமாலையம்போதில்
பறவையூர்பறவாப்பூவைவண்ணத்தன்படர்தலுங்குவிமுலைசுரந்து
கறவைகன்றூட்டிக்களித்தவாய்ச்சியருங்களித்தனர்சிறுவர்க்கண்ணுறவே

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

ஈன்றதங்குழவிதம்மேலெழுதருங்காதறன்னின்
தேன்றவழ்துளவத்தெய்வச்சிறுவர்மேற்காதல்கூர்ந்தார்
வான்றவழ்குழவித்திங்கள்வாணுதற்பவளச்செவ்வாய்க்
கான்றவழ்முல்லைவேய்ந்தகாரிருங்கூந்தலாரே. ௮

பருவமொன்றிவ்வாறேகப்பாற்கடல்வண்ணனோடும்
கருமுகில்வண்ணத்தண்ணல்கன்றெலாந்துரந்துமன்றற்
குரவமுங்குருந்துங்கோங்குங்கொன்றையுமகிலுஞ்சாந்தும்
மாவமுங்கமழுஞ்சாரன்மலையகத்தேகினுல். ௯

பொற்புறுவரைமேனின்றபுனிற்றிளஞ்சேதாவோடிக்
கற்பகமலர்ந்ததெய்வக்கடிகமழ்சாரன்மேவும்
முற்படுகன்றுக்கெல்லாமுலைசுரந்தொழுகுதீம்பால்
அற்பின்வந்தூட்டல்செய்தவாயர்வகையிகந்துமன்னே. ௧0

ஊதுவண்டுழலுமுல்லையொள்ளிணர்க்கண்ணிசிந்த
ஆதுரந்தொல்லைவந்தவாயருமலைதலின்றி
மாதர்மீதூறநின்றுமதுப்பொழிமழலைச்செவ்வாய்க்
காதலர்செவ்விநோக்கிக்களித்தனர்நெஞ்சமாதோ. ௧௧

விளைவதெனிதுமற்றென்னவியப்புடைமனத்தனாகி
வளைமருண்மேனிவள்ளன்மாயவன்வதனநோக்க
உளநனிகசிந்துகற்றூவூறுபாலூட்டுகன்றும்
இளைஞருந்தானேயாகியிருத்தலாங்கியம்பினுல். ௧௨

அவ்வழிநமதுமாயையகத்தனாகிக்கன்றும்
மைவழிகுழல்சூழ்கண்ணிமைந்தருமிருப்பமற்றும்
இவ்வழியிவ்வாறாகியிருந்ததென்னென்றுபார்த்தான்
செவ்வழிவண்டுபாடுஞ்செய்யதாமரையானம்மா. ௧௩

கொடிவளர்முல்லைப்பைந்தார்க்குமரரும்வளரான்கன்றும்
கடல்வயிறுளைந்துபெற்றகதிர்மணிதிருவில்வீசச்
சுடர்விரிபசும்பொன்னுடைசூழ்கதிர்க்கற்றைதூற்ற
மடலவிழ்துளவோனாகிவயங்கினன்பெரிதுமாதோ. ௧௪

புனிற்றிளங்கன்றுமாயர்பொற்றொடிப்புதல்வர்தாமும்
கனற்பொலிதிகிரியேந்துங்கார்முகில்வண்ணனாகித்
தனித்தனியமரரோடுதானுநின்றேத்தனோக்கி
அனைத்தையும்படைக்குமண்ணலலம்வரவெய்தினானால். ௧

மலரவன்மறுக்கநோக்கிமாயவன்மாயைவாங்க
உலகெலாமளிக்குமாயனொருவனேயாகிச்செங்கை
மலரில்வெண்கவளமேந்திவளரிளங்கன்றுதேடிக்
குலவுதல்கண்டுசெங்கண்குளிர்ந்தனனுவந்திட்டானே. ௧

கலிவிருத்தம்.

மற்றொருத்திமடுக்கிளர்பூவினில்
பெற்றெடுத்தபிரான்புவியுட்பொதி
சிற்றடித்துணைசேர்ந்தனன்றேங்கமழ்
பொற்றதார்முடிநான்கும்பொலியவே. ௧

செழும்பொனண்டந்திறப்பமுழக்கொடு
விழும்புனற்கங்கைவெள்ளந்ததும்பிய
கொழும்பொற்றாமரைப்போதுகுறைந்துநாத்
தழும்பவேத்தினன்றாமரைச்செல்வனே. ௧௨

அற்றமில்லெனவண்டமணுவென
முற்றுகின்றவாணின்றன்முழுமெய்யும்
ஒற்றையண்டத்தொருவழிவைகுவேன்
தெற்றெனத்துணிவேன்கொணின்சீர்த்தியே. ௧௪

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வெங்கதிர்ப்பரிதிமுன்னமேயமின்மினியும்விள்ளாப்
பொங்கிருட்கங்குல்சேர்ந்தபுன்பனியிருளுமன்றே
அங்கண்மாஞாலமுண்டோராலிலைப்பள்ளிதுஞ்சும்
செங்கண்மாமாயநின்பாற்செய்தவென்மாயைதானே. ௨

அடைத்துழாய்ப்படலைமாலையமலநின்னிலைமைதேரா
துடைப்பெருமாயைதன்னாலுருப்பலகாட்டுவாயால்
[illegible]டைக்கையானாகிமற்றைப்படைப்பெலாங்காப்பநீயாய்த்
துடைப்பமுக்கண்ணனாகித்தோன்றுமாபோலயாதோ. ௨

அல்லியங்கமலச்செங்கணமலநீயாகத்தன்னை
நல்லுணர்வதனானொடுநற்றவமுடையார்க்கன்றோ
மெல்லிணர்க்கண்ணிமேயவெஞ்சினவாவுபோல
இல்லதாமெல்லையில்லாவிருள்படுதோற்றத்தானே.

ண்ணெலா முண்ட செல்வவயிற்றகத் துறையாநின்ற
ண்ணிறக்குழவி தாளாலுதைத்தலாய்பிழையென்றோரார்
புண்ணனின்னகல்வயிற்றுளகப்படாப்பொருளுமுண்டோ
ண்ணினின்வயிற்றுவாழ்வேனிழைத்தெப்பிழையதாமால். ௨௩

வப்பொடுமறையோர்வேள்வியூட்டுமின்னவியினாலே
தவிட்டலாய்தெவிட்டுமாறுதீஞ்சுவையமுதமூட்டும்
தவட்டிளங்குவவுக்கொங்கைக்கொடியிடையாயர்மாதர்
வத்தையென்புகல்வலானின்றவத்தையென்சாற்றுகிற்பேன். ௨௪

வெஞ்சினந்திருகுநஞ்சம்பிலைந்தவெம்முலைப்பாலூட்டு
வஞ்சனையரக்கிதானும்வந்துநின்னடியிற்சேர்ந்தாள்
நெஞ்சுவந்தமுதமூட்டுநேரிழையவரோடாவிற்
கஞ்சனவண்ணவென்னேவளித்திமற்றறிகிலேனால். ௨௫

திருவினர்பெறுதமந்தோ திருவினர்பெறுதமந்தோ
விரியல்வெண்டோட்டுமுல்லைவியன்புலத்துறையப்பெற்றோர்
அருவமாயொன்றாய்ச்சித்தாயகண்டமாய்ப்பரமானந்த
உருவமாய்நின்றாய்நின்னோடுறவுகொண்டிருக்கின்றாரே. ௨௬

என்றவன்வலங்கொண்டேகவிளநிலாக்குவித்தாலன்ன
குன்றவெண்மணலின்மேயகோற்றொடிப்புதல்வர்தம்பால்
மன்றலங்கமலவீட்டுமறைமுதல்விடுக்கப்பட்ட
கன்றினந்தூரந்துசென்றான்கங்கைசூழ்கழற்பெம்மானே. ௨௭

குவளைபோல்வண்ணன்வந்துகுறுகலுங்குமரர்யாங்கள்
கவளமொன்றருந்தாமுன்னங்கன்றினங்கொண்டுமீண்டாய்
திவளுமஞ்சுரும்புபாய்ந்துதேன்மதுத்திவலைமாந்தும்
தவளமெல்லிணர்ப்பூமுல்லைத்தாரவமிசையென்றரால். ௨௮

முத்தெனமுகிழ்த்தமூரன்முறுவல்வாண்முகத்தனாகிப்
பைத்தவாளரவின்பைந்தோல்பார்மினோகிடந்ததென்னா
கொத்தவிழ்முல்லைமெல்லன்கொடிதலைமணந்துமன்றற்
தித்திகைவளர்த்தண்கானம்பெயர்ந்தனன்மெல்லமாதோ. ௨௯

வண்டுசூழ்கண்ணிமைந்தர்மலைநெடும்பாம்பின்பைந்தோல்
கண்டனரிதுமற்றம்மகண்ணிறந்தோங்கிற்றென்னக்
கொண்டனர்வியப்புமுல்லைக்குழலினான்விளைத்தகொற்றம்
விண்டனர்புகழ்ந்தார்முல்லைவியன்புலமாக்கட்கன்றே. ௩௦

த்திறனுகுமோர்யாண்டிறந்தபின்னிளைஞரெல்லாம்
பத்தபாம்புருவமாயபடுகொலையவுணன்றன்னை
மத்தகார்வண்ணத்தண்ணன்மாய்த்ததைமபுகழ்ந்ததென்னா
த்தரின்முதல்வனுகுழூழுத்தவனியம்பினானல். ௩௧

பெற்றதங்குழவிதம்மேற்பிறந்திடுங்காதறன்னின்
மற்றிளங்குழவியாயமாயன்மேலாயர்மாதர்க்
குற்றதென்காதலென்னுவொளிறுவாளுழவன்கேட்ப
முற்றுணர்முனிவன்மூரன்முறுவலன்மொழியலுற்றான். ௫

தன்னுயிர்மேற்செல்காதலானுயிர்ப்பதற்குண்டேகொல்
மன்னுயிரனைத்துஞ்செங்கண்மாதவனுறைதலானே
இன்னுயிர்க்குழவிதன்மேலியைந்ததுபெரிதுங்காதல்
மின்னுயிர்த்திலங்குவேலோயென்றனன்மீட்டுஞ்சொல்வான். ௫

மலரவன்சிறார்க்கன்றுகவர்ந்தவத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧௯௯.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௭-வது, அரவின்மேலாடியவத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

ஞாமலர்முருகுவிம்மிக்குழவியமல்லன்முல்லை
விராய்மலர்த்துளவம்பூத்தமேதகுதண்ணங்கானின்
மாரமெனமருளுமேனிவள்ளலோடெழுந்துசெஞ்சுட்
டாரவனை துயின்றவண்ணலானிரைமேய்க்கலுற்றான். ௧

அறம்புரைதுணைவன்றன்னையஞ்சனவண்ணனேக்கிச்
செறிந்தகார்மயில்களாடல்செய்தபாண்மூரன்றவண்டு
நறுஞ்சினைமெலியப்பூத்தநாண்மலர்மான்களெல்லாம்
இறைஞ்சினநிற்கண்டென்றுவின்னுரையாடினானல். ௨

வளரொளிவிரிக்கும்பச்சைமரகதப்பசுங்கட்டோகை
இளமயிலாடவாடியிளைத்தகார்மேகவண்ணன்
முளரிநாண்மலராள்காந்தண்முகிழ்விரலங்கைதீண்டும்
தளிரடிதொறுவர்மைந்தர்தைவரவைகுமன்றே. ௩

### கலிவிருத்தம்.

காமனையொப்பவன்கமழுமுல்லையந்
தாமமார்பினன்றிருத்தாமனென்பவன்
தேமுறுபனங்கனிசெல்வவீங்குள
எமமார்ந்தனவெனவியம்பினனரோ.

செழுநிலாவான்மதித்திகழுமொற்றையங்
குழவியினெழுந்தனன்குறுகித்தேம்படு
பழமுதிர்மடற்பனையலைப்பப்பார்த்தனன்
கழுதையினுருவினன்கனன்றுதோன்றினான்.

அணற்செவிக்கழுதையாயாண்டுத்தோன்றிய
தணிப்பருந்தேனுகாசுரனைத்தாமரை
மணிக்கையாற்சுழற்றினனெற்றவான்பனை
துணித்தனன்வீழ்ந்தனன்றுஞ்சினனரோ.

## அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

ஆனெழுதூளிமொய்த்தவணிகருங்கேசன்மாயன்
ானெழுமலரினோடுகார்மயிற்பீலிசூடித்
தேனுறவமுதமூறுந்தீங்குழலிசைத்துமாழை
மானனமதர்த்தகண்ணார்மகிழ்வுறவெய்தினானால். ௭

ஊனிறைதெவிட்டிப்பல்பேயுவந்தனகுனிப்பவோங்கு
வானிறைநிருதர்மேவவரிசிலைகுனித்தபோரே
றானிறைதுரந்துசென்றானதிர்திரையமுனையாற்றுத்
தேனிறையிதழுண்டாடுஞ்செழுமலர்த்தடத்தினோர்சார். ௮

வடித்தகார்முல்லையாயர்மைந்தரோடஞ்செஞ்சேதா
விடப்புனன்யாந்திவீழ்ந்துவிளிந்தனவிளிதலோடும்
உடைத்தெழுகருணைவெள்ளமொழுகியின்னமுதமூறும்
கடைக்கணோக்குதவியாவிகாத்தனனுலகங்காப்பான். ௯

வெவ்விடப்புனலும்வெய்யவிடப்புனல்விளைத்தபாம்பும்
அவ்வழிக்கடிதல்செய்தானஞ்சனவண்ணனென்ன
எவ்வகைக்கடிதல்செய்தானினிதெடுத்திசைத்தியென்று
தெவ்வடுகுருதிவேலான்செப்பலுமுனிவன்செப்பும். ௧௦

கடுவிளைந்தொழுகுபேழ்வாய்க்காளியனுயர்காளிந்தி
மடுவினில்வாழுமற்றம்மடுவினிற்றவழ்ந்தகாற்றுப்
படினும்வல்விலங்குமாயும்பறவைவீழ்ந்துயங்கும்வேம்பின்
நெடுமரங்கரியுமாங்குநீள்சினைக்கடம்பொன்றுண்டால். ௧௧

## எழுசீர்க்கழிநெடி லாசிரியச்சந்தவிருத்தம்.

ஈறிழைத்தவிடநீரகற்றுதுமெனக்கடம்பின்மிசையேறியோர்
ஆறெனக்களிநறாவெடுத்தொழுகுமாய்மலர்ப்படலையந்துழாய்
மாறடர்த்ததனிநேமிமாயவன்மணித்தடத்தினிடைபாய்தலும்
நூறுவிற்கடையகன்றொழிந்ததுநுரைத்தலைப்புனலகழ்ந்தபோ. ௧௨

அளக்குமண்ணுலகருந்திவெண்ணெயுணவாயர்பாடிவளர்செங்கணான்
தொளைக்கைமால்களிறுபோலநின்றுதனிதுளையவெம்பியெழுவாளரா
வளைத்துவால்கொடுநெடும்பணாடவியின்வள்ளன்மேனியைமறைக்குபு
முளைத்தநாண்மதிமருட்டும்வாலெயிறுமூழ்குறும்படிகடித்ததால். ௧௩

ட்டுவாளரவின்மன்றலந்துளவுசூடுகார்முகிலகப்படா
ாட்டமுற்றனனெனத்தளர்ந்திளையர்மறுகவானுமறுகுற்றதால்
ட்டமென்கொலிடனாடுகின்றதெனநந்தகோபன்முதலாயினோர்
ட்டுதெண்டிரையலம்புநீர்யமுனையாற்றகன்கரைமரீஇயினார். ௧௪

பாழிவாயரவுமெய்வளைப்பவொருபாலனின்றநிலைகண்டுடன்
வீழ்துநாமுமெனநந்தகோபனெழவீழல்வீழலெனவந்துபால்
ஆழிபோல்பவன்விலக்கநின்றலையுமலைவுகண்டருளியாகமேல்
சூழும்வாளரவகற்றினான்றுயில்கொள்சூட்டராவணையகற்றினான். ௧௫

காடுகொண்டெழுபணாமணித்திரள்கள்கக்குசெக்கரொளிசுற்றியோ
பாடுசெக்கரொளிவீசுகற்கள்பலபட்டழுந்தியெழில்கன்றியோ
சூடுதார்மகுடகோடிமேல்மார்சூடுசேவடிசிவப்பநின்
றாடல்வாளரவினுச்சிநின்றுநடனாடினான்மறைகள்பாடினான். ௧௬

பண்பழிந்தரவினீள்பணாடவிபதைப்பவாய்க்குருதிகாலவெங்
கண்பிதுங்கநடனாடநோக்கியுயிர்காத்தியென்றுதளர்காளியன்
நண்புகொண்டுபுணர்தொய்யில்வெய்யமுலைநாககன்னியர்செறிந்துமால்
மண்பொழிந்தகமலத்திலந்தண்மலர்மாரிதூவினர்வணங்கினார். ௧௭

பொருதிரைக்கடலுடுத்தநீள்புவிபுரக்கவந்தமணிவண்ணபொற்
றிருமணக்குமணிமார்பகொற்றமுறுசெம்முகத்திகிரியங்கையாய்
அருமறைத்தலையின்வைத்தசேவடியழுங்குபைத்தலையின்வைப்பதற்
கெரிசினத்தவிடவரவமெத்தவமிழைத்ததோவெனவழுத்தினார். ௧௮

அறிந்திலாணிவணிழைத்தவெம்பிழையருட்பெருங்கடல்பொறுத்தியென்
றிறைஞ்சவாளரவினுடல்விட்டனனெழுந்துபோகியுறைதீவின்வாய்ப்
பிறங்குநின்முடியினெம்மடித்துணைபிறந்தபொற்பொறிபடைத்தலால்
மறங்கொள்வெங்கலுழனொன்றுநின்னையடவல்லனல்லனெனவோதினான்

மறைக்கொழுந்தினைவணங்கியொண்மணிகண்மாசிலாடையகின்மான்மத
வெறுப்பநல்கியதிர்வெண்டிரைக்கடல்விளிம்படுத்தவொருதீவின்வாய் [ம்
எறித்தசெஞ்சுடிகையரவினுக்கிறையெழுந்துகன்னியரோடேகினான்
நறைச்செழுங்கமலமலர்நதித்தடனுநஞ்சொழிந்துபொலிவுற்றதால். ௨௦

என்னலோடுமடன்மன்னனென்னைகொலிருந்ததீவினையகன்றிடாப்
பன்னகாதிபதிபின்னுதெண்டிரைபாந்துபாயமுனைமடுவின்வாய்
மன்னலுற்றதுவழங்குவாயெனமலர்ந்துதண்ணறவுவட்டெழும்
கன்னியந்துளவணிந்தகண்ணனருள்கனியுமாதவனியம்புவான். ௨௧

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

வாளராவழிபாடாற்றிவழங்குதல்வழங்கானாகிக்
காளியனிருப்பவூழிக்காற்றெனக்கலுழன்சீறி
நீளிருஞ்சிறையிற்றாக்கநெஞ்சகங்கலங்கியோடித்
தாளதாமரைவாய்விள்ளுந்தடத்திடையெய்தினானேல். ௨௨

இருஞ்சிறைக்கருளன்மீனாங்கெறிதலுமெறியலென்றோர்
அருந்தவன்சபித்தலாலேயாங்கண்வந்தணுகானாகப்
பொருந்தினன்யமுனையாற்றுப்பூந்தடமென்றுசாவா
மருந்தினுமமிழ்சமுறுமாதவன்வகுத்தான்மன்னோ. ௨௩

அழலெனவுயிர்க்குநாகத்தஞ்சுறுவிடம்பாயாகம்
முழுவதுந்தாயர்கொம்மைமுலைசுரந்தொழுகுபாலோ
குழையொடுபொருதுநீண்டகொழுங்கயற்கண்ணீர்கொல்லோ
கழுமுறக்கமலச்செங்கட்கண்ணனைக்கழீஇயினாரே. உ௪

வேயிலுமிழ்பரிதியத்தவெற்பகம்படரவீங்கு
புயலெதிர்நறியமுல்லைப்பூம்புனல்படரயாரும்
குயில்குடைந்துகுத்தபோதின்கொங்குலாமணற்குன்றேறித்
துயிலமர்ந்தனராலற்றைத்தூங்கிருட்கங்குன்மாதோ. உ௫

## கலிவிருத்தம்.

உய்ந்தபோநெறியுமுண்டுகொலென்று
நந்தகோபன்மனநைந்துநடுங்கச்
சிந்தவல்லிருடிசாமுகமெங்கும்
வந்துகானழல்வளைந்ததையன்றே. உ௬

நண்ணுமாரழலைநச்சரவேந்து
மண்ணெலாமகல்வயிற்றிடைவைத்த
அண்ணல்செய்யதளிரங்கையின்வாரி
வெண்ணெயுண்டெனவிழுங்கினனன்றே. உ௭

முரிதிரைக்கடன்முகத்துவிளங்கும்
உருவவொண்டிலகமொப்புறமாறு
இருள்குடித்தெழுமிளங்கதிரோனல்
விருதென்வேனிலதுமேயதுசென்றே. உ௮

வெயில்சினந்திருகும்வேனிலிறுப்பக்
குயிலினத்தொடெதிர்கூவியும்வேயின்
இயல்கொளின்னிசைவடித்துமிருங்கான்
மயில்களிப்பமழைவண்ணனெழுந்தான். உ௯

## அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கவளமார்களிநல்யானைக்கதிர்மருப்பொசிக்குந்தோன்றல்
தவழ்மதுக்கமழுங்கானந்தண்ணெனவுழதழுறு
குவிமுலையஞ்செஞ்சேதாக்குவிதரத்தாளமூரற்
பவளவாய்திகழவைத்துப்பசுங்கழையிசைத்திட்டானல். ௩௦

விசும்புசூழ்வெயிலான்வற்றிவெம்பியமரன்கள்யாவும்
ஒசிந்துயர்மருதஞ்சாயவுரலொடுதவழ்ந்தவொண்கேழ்
அசும்புபொன்னுடையான்றனவிரொளிதவழுந்தோறும்
பசுங்குழைகுழைத்தபோலும்பான்மையிற்சிறந்தமாதோ. ௩௧

வாட்டிறனிருதர்வெள்ளம்வானெலாம்பரக்கவல்வில்
கோட்டியகொண்டன்மேனிக்கொழுஞ்சுடர்தவழுந்தோறும்
ஊட்டழல்சுட்டசெம்பொனுயர்வரைச்சாரல்பச்சைத்
தோட்டறுகீன்றபோலத்துலங்கெழில்படைத்தமன்றே. ௩௨

நாகமீமிசைத்துயின்றுநளிகடலுடுத்தஞாலத்
தோகையுமகிழவந்துதோன்றியுந்துளிக்குநீல
மேகமேபோல்வான்மேனிவிரிகதிர்பாயுந்தோறும்
போகுயர்பூவையாவும்பூத்தனபோலுமன்றே. ௩௩

மதுக்குடம்விரிந்தாலன்னமாமலர்க்கோதைமார்பன்
கதிர்த்தகாருருவின்காந்திகரைமிசைத்தவழுந்தோறும்
புதுப்புனல்பாந்ததேய்க்கும்பொறிவரிவண்டுபாய்ந்து
மிதிப்பவாயிதழ்மென்போதுவிரிதுறையமுனைமன்றே. ௩௪

வளமலர்முருகுவிம்முமாதவிப்பந்தரூடு
துளவணிபடலைமாயன்சுடரொளிபாயுந்தோறும்
களிதலைமணந்துதோன்றாக்கரந்துறைகருஞ்சட்டோகை
இளமயிலெருத்தநீட்டுமியற்கையிற்பொலிந்தவன்றே. ௩௫

இருநிலவளாகம்போற்றுமிலங்கிதழ்க்கமலப்பொற்றாள்
ஒருமுதல்பவளச்செவ்வாயொள்ளொளிதவழுந்தோறும்
அருவியஞ்சாரலெல்லாமஞ்சிறைச்சுரும்பர்பாட
விரைகமழ்குருதிக்காந்தள்விரிந்தனபோலுமன்றே. ௩௬

ஆரமுமகிலுமுந்தியதிரொலியருவிபாயும்
சாரலுங்காடுங்காவுந்தடந்திரையாறுந்தண்ணங்
கார்வளங்காட்டவேனிற்காலைநின்றாடல்செய்தான்
ஏர்விளையாடுசெம்பொனேந்தெழின்மார்வத்தெம்மான். ௩௭

வளைகடன்ஞாலமஞ்சவருபிரலம்பன்மற்றாங்
களவிலைப்பொலம்பூணகத்தாயர்தம்புதல்வனாகி
ஒளியிலங்கருவிச்சாரலோங்கியநடையினாலோர்
களிறெனநின்றசெங்கட்கண்ணனையெய்தினானால். ௩௮

விரவியவண்ணமோர்ந்தவ்வெய்யவன்றன்பாலாக
இருதிறமாக்கியாயரின்னெழிற்குமரீட்டத்
தொருதிறத்திராமனிற்பவொருதிறம்பற்றிநீலச்
சுரிகுழற்குரிசினேன்றார்சுமக்கெனவாடலுற்றான். ௩௯

மல்லலங்கங்கைபோலுமன்னவன்றிறத்துவெற்றி
புல்லலும்வண்டுபாடப்பொதியவிழ்குழவுமுல்லை
மெல்லிணர்விரியன்மாலைமிலைந்தசீர்த்தாயன்மன்றற்
கல்லினன்மாரியோப்பங்கரியவன்சுமத்தல்செய்தான். ௪௦

இகலறவிமைக்குமொண்கேழிந்திரநீலங்கான்ற
திகழொளிபுடைசூழ்வெள்ளிச்செழுங்கிரிகடுப்பநீலுண்
டுகில்புனைவெள்ளைமேனித்தோன்றலைத்துணைவினாயர்
மகனெனவந்தவஞ்சமனத்தினான்சுமந்திட்டானே. ௪௧

கமழ்ந்தபூந்தெரியன்மார்பன்கையகப்பட்டானென்னாச்
சுமந்தனனேகுங்காலைத்தொல்லைவல்லுருவுகொண்ட
சமங்கடந்தொளிசெய்வெள்வேற்றானவன்றலையிற்குட்ட
உமிழ்ந்தனன்குருதிமாலரியுந்தனன்குப்புற்றனனோ. ௪௨

விரைவிளையாடுமுல்லைமென்றொடைப்புதல்வரோடு
வரைவிளையாடுமார்பமால்விளையாடுமெல்லைத்
திரைவிளையாடும்யாற்றுச்செழுங்கரைமருங்குவண்டின்
நிரைவிளையாடுகானநீங்கியான்மறைந்தமாதோ. ௪௩

தண்ணறல்படுகான்யாற்றுத்தழைத்தபுற்கானஞ்சேர்ந்த
அண்ணலஞ்சேதாமைந்தாழைப்புழிமுழங்காவாய
கண்ணும்வாண்முகமுஞ்செய்யகமலமொத்தலர்ந்தமைக்கார்
வண்ணனின்றழைப்பப்பொங்கிமகிழ்ந்தெதிர்சிலைத்தமாதோ. ௪௪

காட்டழல்கனன்றுபொங்கிக்கடுவெளிப்புடைப்பிற்சூழ
மோட்டிளமுல்லைமெல்லென்முகிழ்முகைவிரிந்தபைந்தார்ச்
சேட்டிளங்குமரர்காத்திசெல்வவென்றிறைஞ்சநம்பன்
நாட்டநீர்புதைத்திரென்னாஎளியழல்பருகினானால். ௪௫

எரிபகைந்தன்னதேமாவிளந்தளிர்கோதுசெங்கட்
கருநிறக்குயில்வாய்வைத்தகாம்பிசைகேட்டுமொழ்கச்
சுரிகுழற்பவளச்செவ்வாய்த்தோகையரோகைகூர
நிரைபுரந்தினிதின்மீண்டானீணிறக்கொண்மூவன்னான். ௪௬

அரவின்மேலாடியவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨௪௫.

ஸ்ரீகிருஷ்ண சகாயம்.

---

# ௮-வது, வேய்ங்குழலிசைத்தவத்தியாயம்.

---

கலிச்சந்தவிருத்தம்.

கண்ணுந்திருமுகமுங்குளிர்கமலம்புரைமடவார்
வண்ணந்திகழெயிறூறுதெண்மதுவுண்பவர்நிகரா
உண்ணுந்தளிநறைதேரளியொருசோடிவெண்டளவின்
தண்ணென்முகைசுழலும்படிதலைவந்ததுபைங்கார். ௧

குடிக்குங்கனைகடனீருயர்குன்றத்தலைபொழியா
இடிக்கும்புயல்கண்டோவலைவிளமஞ்ஞைகளெல்லாம்
நடிக்கின்றனமகிழ்கூர்ந்தனகாத்தலைநடிக்கும்
வடிக்குங்கழைமுகில்கண்டுளமகிழ்கோவியர்மான. ௨

முற்றுந்தனியாழிக்கதிர்முறுகுஞ்சினவெயிலால்
வற்றுஞ்சினைமரமின்றுளிவளர்மாரியிற்றளிர்த்த
பற்றுந்தவத்துடல்வாடுநர்பரனின்னருண்மாரி
பெற்றின்புறுதிருவாலொளிபிறங்குந்திறனிகர்ப்ப. ௩

மறைகற்றவர்மறையென்பனதேடித்துளிமதுவின்
வெறிகக்கியதுளவப்புயல்விளையாடுறுதண்கான்
முறிமுற்றியகொடிமுல்லைமென்முகைவிண்டனவானோர்
செறிகற்பகவனமெள்ளுபுசிரிக்குஞ்செயல்புரைய. ௪

கலிவிருத்தம்.

நறைத்துளவமாமுகினந்தலையஞானம்
மறத்தின்மகனுளும்வகையாரமரினுண
மறைத்தெனமறைத்ததுவளைத்தெழுகருங்கார்
எறித்தவெயில்கான்றுவிண்ணெழுஞ்சுடரைமன்னோ. ௫

புட்கொடியுயர்த்தபுயல்பொங்கிதழ்விரிக்கும்
கட்கமலவாய்மலரின்வைத்தசிறுகாம்பின்
உட்கனியுமின்னமிழ்தமூறுமிசைகேளா
வட்கினவெனப்பெரிதடைத்தகுயில்வாய்கள். ௬

வெள்ளைமதிவான்மறையமின்மினிவிளங்கல்
உள்ளரியவெங்கலியிலோர்முதல்விழுச்சீர்
தெள்ளுமறைநின்றுதிகழாமன்மறையெல்லாம்
எள்ளுநர்விளங்குறுமியற்கையைநிகர்க்கும். ௭

வியலிருவிசும்புகதிர்மின்னுவிளையாடும்
புயறழுவநின்றுபொலிவுற்றதொருதோற்றம்
உயர்வறவுயர்ந்தநலனுற்றபொருண்மற்றுங்
கியல்குணமணப்புறவிலங்குதல்கடுக்கும். ௮

கலிச்சந்தவிருத்தம்.

இவ்வண்ணமுறுங்காரினிலாற்றுவினமேயாச்
செவ்வண்ணமணிக்குன்றுகள்சேர்ந்தின்னமுதயிலாப்
பைவண்ணவராவோடெறிபாலாழிகடுப்ப
மைவண்ணன்மகிழ்ந்தாடினன்மன்றற்சிறுகானம். ௯

வழங்குங்கலைமகள்காதலின்வளர்கின்றவெண்டோட்டுச்
செழும்பங்கயமலர்போலவுஞ்செந்தேனுகர்வரிவண்
டுழும்வண்டுளவணிவோன்கரத்தொளிர்வால்வளையெனவும்
எழுந்தங்கதுமதியோர்பெறவிறுத்தந்ததுகூதிர். ௧௦

தண்டோட்டிணர்விரிகற்பகத்தழைகொய்தழிகவுள்வீழ்
வண்டோட்டியகளிறெட்டொடுவரைதாங்கியகடற்பார்
உண்டோட்டறுபொன்னந்துகிலுடுத்தோனெனத்திகழ்கார்
வெண்டோட்டிளம்பனைமீமிசையுயர்த்தோனெனவிளர்த்த. ௧௧

ஒள்வாளுமிழ்திகிரிப்படையுயர்வோனடம்புரியும்
முள்வாளெயிற்றரவம்மெனமுகிழ்விண்டனகாந்தள்
கள்வாய்மடுத்திளவண்டினங்களுலத்துணர்விரியாப்
புள்வாய்கிழித்தவனுமெனப்பொலிவுற்றனபூவை. ௧௨

வந்தாதவனிளஞ்செங்கரம்வருடத்தளையவிழும்
செந்தாமரைமலர்நின்றுதண்டேன்சிந்தியதோற்றம்
அந்தாமரைக்கண்ணான்மலரடிநின்றலைபுரட்டும்
மந்தாகினிபெருகிப்பொழிதருகின்றதுமானும். ௧௩

இத்தன்மையதண்கூதிரிலின்றீங்குழலிசையா
அத்தன்புனிற்றுமேய்ப்பதற்கலர்கானகம்படர்ந்தான்
மொய்த்தஞ்சிறைவரிவண்டினமுருகுண்டிசைபயில்பூங்
கொத்துங்குறுமுறியுஞ்சிலகொய்தான்குழல்புனைந்தான். ௧௪

கதிராயிரம்பொழியாதவன்காய்வெஞ்சினந்திருகும்
முதுவேனலின்முளிபாதவமுகில்பெய்தலிற்றளிராப்
புதுநாண்மலர்துளவப்புயல்புனையத்தரவந்தண்
மதுநாண்மலர்தளிர்பாதவமழைக்கீவனமானும். ௧௫

கலிவிருத்தம்.

மோடுடைநெட்டிலைமுடவெண்டாழையந்
தோடுடைநறுமலர்தோன்றல்கொய்வது
பாடுடைநெடுமடற்பனைக்கைவேழவெண்
கோடடிபிடுங்கியகோலம்போன்மரோ. ௧௬

தளிர்க்கவின்கவற்றியதடக்கைபோகுயர்
நளிச்சினைமலர்கொளநம்பிநீட்டுதல்
களிச்சுரும்பாற்றுபூங்கற்பகங்கொள
வளைக்கரநீட்டியவண்ணமானுமே. ௧௭

அலங்கொளிமணிதெளித்தன்னபைஞ்சுனை
நலங்கொள்வெண்டாமரைநம்பிகொய்வது
பொலந்தருக்கவர்ந்தநாட்புதுநிலாப்பொழி
வலம்புரிவாங்கியவண்ணங்காட்டுமே. ௧௮

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

குருந்தமென்கண்ணிசூடுங்கோவலர்கொழுந்துசெய்ய
அரும்பவிழ்காந்தள்கொய்வதாடியகுரவைக்கந்தண்
முருந்தொடுமுல்லைசாய்த்தமுகிழ்நகையாயர்மாதர்
திருந்துபொற்றொடிசூழ்கையிற்றேமலர்தொடுத்தல்போலும். ௧௯

எழில்வளர்செம்பொன்மார்பனின்னணாஞ்செவ்விவாய்ப்பக்
கழைவளர்வரைசாரெல்லாங்களிற்றிளங்கன்றுபோன்றும்
மழைவளர்கானமெல்லாமழவிடைபோன்றுந்தோன்றிக்
கொழுமுகையவிழ்மென்போதுகொய்தனன்மிலைந்தான்மன்றோ. ௨௦

கலிவிருத்தம்.

மழலைவண்டிசைமுரலவணர்பசுந்தெரியன்மது
ஒழுகநின்றுயர்வரையுமுருகநுண்டொளைகடொறும்
அழிபசுந்தளிநறவவமுதமுங்குமுழியெழ
எழுதரும்புயல்கழையினிசைநவின்றனனினிதின். ௨௧

படுமான்களுநறியபசியதண்டளிர்தழைய
அடைவுறுங்கழையினிசையமுதமஞ்செவிநிறைய
இடைமடந்தையர்கணொசியிடையிளங்கொடியொசிய
மடவனம்பொருவமலர்வனமடைந்தனர்குழீஇ. ௨௨

மருவிரிந்தொழுகுகுழன்மழையெனும்படிசரிய
இருவிசும்பொருவியெழுமிசையினெஞ்சகமுருகி
முரிதடந்திரையமுதமுனிவுகொண்டணுகினர்கள்
அருமருந்தனையமொழியாமடந்தையரடைய. ௨௩

வேறு.

மழையெனமதங்கலுழுமாவுமரியேறும்
உழுவையுமுழைக்குலமுமொன்றியினமென்னக்
கழையினொடுநின்றகளிறன்னவனைநோக்கி
எழுதுருவுபோன்றுருகிநின்றவிசையோர்ந்தே. ௨௪

மாமறைமுதற்பொருள்வடித்தவிசைகேளா
காமர்நதியாவுமுயர்கங்கையெனலாகித்
தேமருவுதாமரைதிரைக்கைகொடுசிந்தித்
தாமரைமருட்டுமிறைதாண்மலர்தவழ்ந்த. ௨௫

பைத்தவரவத்துவளர்பச்சைமுகில்செவ்வாய்
வைத்தகழையேழ்தொளையும்வாரியமுதூறித்
தத்தவெழுமின்னிசைதலைப்படமுழங்காப்
புத்தமுதநுண்டுளிபொழிந்தபுயலெல்லாம். ௨௬

அஞ்சுவைபழுத்தவிசையஞ்சனநிறத்தோர்
மஞ்சமுதுபெய்வதெனமாதவனிசைப்ப
வெஞ்சுடர்பணிக்கதிர்விரித்ததழல்வெவ்வாய்
நஞ்சுபொழிவாளரவுநல்லமுதுகுத்த.

பூவின்வருநான்முகன்புணர்ந்துமகிழ்மாது
நாவின்மிசைநீத்துநடனன்குநவிலுற்றாள்
சாவினறுநீழலமர்காவலனெடுங்கண்
தூவினகொழுந்தளிதொளைக்கணிசைகேட்டே. ௨௮

மங்கையொருபாகனுளமலியுவகைநன்னீர்
பொங்கியழனீள்விழிபுணர்ந்தவியவாா
அங்கமிசைசூடரவமாடலயர்வுற்ற
சிங்கலில்பரன்கழைதெரித்தவிசையோர்ந்தே. ௨௯

கலிநிலைத்துறை.

தெறித்தகன்றுவாய்வைத்தவம்முலையுணாதிரண்டு
கறித்தபுல்லுணாகறவைபூங்கற்பகச்செங்கேழ்
முறிக்கொழுங்கவின்கவற்றியமுகிணைச்செவ்வாய்
மறைக்கொழுந்தின்வேயின்னிசையஞ்செவிமடுத்தே. ௩௰

குமரிவண்டுழுதுளவினுன்குழலிசைகேளாக்
கமலநாண்முகைகடந்தசெங்கைம்மலர்முகிழாத்
தமனியப்பசுந்தார்முடிவணங்கினரிமையோர்
அமிழ்துணத்தருஞான்றினுமகமகிழ்ந்தனரால். ௩௧

வட்டவாயழற்றிகிரியான்வடித்தவேயிசையால்
பட்டபாதவந்தளிர்ப்பவும்பச்சிளந்தென்றல்
சுட்டசூடுறவெதும்புமத்துடியிடைமடவார்
கட்டுமின்றளிர்க்கண்ணிசள்வாடினகரிந்த. ௩௨

பழுத்தவேயிசைபரஞ்சுடர்தெரிப்பவான்பசுங்கார்
இழித்தபொன்னெடுங்கிரிவளர்குங்குமங்குழைத்த
குழைத்தகுங்குமங்கரிந்தனகுழைபொருதலைக்கும்
மழைக்கட்கோவியர்வளரிளவனமுலைக்குவடு. ௩௩

வேரியந்துழாய்ப்படலையான்வேயிசைநவில
மாரிபெற்றெனமரனெலாங்குளிர்ப்பவுமலயச்
சாரன்மன்னுசெஞ்சாந்துவெண்டளவரும்பன்ன
கூரெயிற்றிளங்கோவியர்க்கனலெனக்கொதித்த. ௩௪

கலவமாமயிலெருத்துறழ்கண்ணன்வேயிசையால்
புலியுமானுமோரினமெனப்புகுந்தனவேனும்
அலர்சுலாவியவசைநடைத்தென்றலம்புலிவாய்
மலருமுல்லையங்சுருங்குழன்மானெடுமறலும். ௩௫

மதம்பெய்மாமருப்பொசித்தவன்மணிக்கழையிசையால்
வெதும்புவெங்கதிர்வெம்மையிற்றீரவும்பசும்பொன்
துதைந்தபோலுமஞ்சுணங்கணிமுலையினார்க்கமுதம்
ததும்புதிங்களந்தண்கதிர்தழலெனக்கனலும். ௩௬

கஞ்சநாண்மலர்க்கண்ணினான்கழையிசைகேட்ட
அஞ்செவிக்கெலாமஞ்சிறைக்குயிலிசையழன்ற
நஞ்செனத்தகுநாகிளம்பிறைநுதல்பசந்த
வஞ்சிநுண்ணிடைமடந்தையர்க்கென்கொலாமதிக்கின். ௩௭

பாந்தண்மேற்றுயில்பசும்புயல்பவளவாயமுதம்
மாந்தவெத்தவம்புரிந்ததிம்மணிக்கழையென்னா
ஏந்துகோட்டிளவனமுலைக்கோவியரேக்கற்
றாய்ந்தவந்துணர்வல்லியிற்குழைந்தனரயர்ந்தார். ௩௮

வேய்ங்குழலிசைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௨௮௩.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௯-வது, கோவியர்துகில்கவரத்தியாயம்.

---

### கலிநிலைத்துறை.

செழுந்துழாய்முகிறீங்குழலிசையினாலுருகிக்
குழைந்தகோவியர்குவிமுலைவெதும்பவிற்காமன்
பொழிந்தவெங்கணைமுகத்தெழுபூம்புகைப்படலம்
தழைந்ததாமெனவெழுந்ததுதண்பனிப்பம்மல். ௧

பாட்டுவண்டிமிர்துளவினான்பசுங்கழையிசைப்பக்
கேட்டுமாலுறுகிளிமொழிக்கன்னியர்வதனம்
தோட்டதாமரையென்பதுநிலமெலாந்துணிய
வாட்டமுற்றனவருபனியிறுத்தலுமன்னோ. ௨

ஐயதாமரையாயிதழ்மலரெலாங்கரியப்
பெய்யுமீர்ம்பனிப்பெருகனல்வெம்மையிற்பெயரா
மையகூந்தலார்வட்டவாயிரும்பினில்வளர்த்த
செய்யவாரழல்சேயிதழ்முளரியிற்சிறந்த. ௩

பனிவிளைத்திடுமென்றுகொல்பட்டவெங்கனலின்
கனலுமென்றுகொல்காழ்படுகாமமுற்றுருகி
இளையுமாயர்தங்கன்னியரேந்திளங்கொங்கை
தனிவெண்முத்தமுந்தமிழ்வரைச்சாந்தமுந்தணந்த. ௪

பனியும்வீங்கிரும்பனிபொறுப்பரிதெனவெய்ய
கனல்விழுங்கிமெய்கனிந்துவீழ்திறத்தமற்றன்றே
நனிகரிந்தனநளிபனிதவழ்தருஉக்கொழுந்தீம்
புனறவழ்ந்தெனப்பொதிந்தசெந்தாமரைப்போது. ௫

இன்னதன்மைப்பனிப்பருவநல்லிளநறுவொழுகு
கன்னியந்துழாய்க்கண்ணனெங்கணவனாகென்ன
அன்னமென்னடையாயர்தங்கன்னியர்நோற்றார்
மன்னுவெம்பனிமால்வரைக்கன்னியைத்தொழுதே. ௬

பனிநிலாக்கதிர்பரப்பியமுத்தவெண்மணலால்
பனிவரைக்கொடிதிருவுருப்பாற்படவகுத்துப்
பனிமலர்த்தொடைசூடியும்பரவியுநோற்றும்
பனியிறப்பினிற்படர்புனலாடுவான்படர்ந்தார். ௭

தண்ணந்தாமரைத்தாளிருதடக்கையுமுகமும்
கண்ணுங்காட்டலிற்கண்ணனிற்றிகழ்தருநீல
வண்ணவார்புனல்யமுனையிற்படிந்தனர்வரிவண்
டுண்ணவின்னறாவூற்றிருந்தொழுகுபூங்குழலார். ௮

குரவமெல்லரும்பென்னவெங்கூரெயிற்றரவின்
உரிவையன்னவானுண்டுகிலொலிபுனலாற்றங்
கரையின்வைத்தனர்கமழலந்தண்டுறைகமழ
விரையொடுந்துவர்மெய்துவர்ந்தாடினர்மன்றே. ௯

அருப்புநாண்மலர்த்தொடைபரிந்தாடியவேலை
கரைக்குறும்பெறியமுனையந்திரைவரிக்களிவண்
டிரைக்குமுல்லையங்கோதையரிடைநெறித்திருண்ட
விரைக்கருங்குழல்வேற்றுமைதெரிந்திலமாதோ. ௧௦

சுண்ணமாடியதுணைமுலைக்கன்னியர்படிய
நண்ணுபன்மலர்நாற்றமுநாந்தமுங்கமழ்ந்து
வண்ணமன்றியுமொத்தனவணிருங்கூந்தல்
தண்ணந்தீம்புனல்பெருகியயமுனையந்தரங்கம். ௧௧

திங்கள்வாணுதற்கன்னியர்தேனவாங்கூந்தற்
கொங்குவிம்முறுகுவிமுகைமுல்லைமெல்லிணரும்
பொங்குமல்லியின்விரியல்வெண்டோடுமேற்போர்த்துக்
கங்கையொத்ததுகல்லெனமுழங்குகாளிந்தி. ௧௨

யாணர்க்கோங்கின்மென்முகிழ்முலையெழுதுகுங்குமமும்
வாணிலாமதிமுகத்தியர்வாரொலிகூந்தற்
காணமாகியவாய்மலர்ச்சுண்ணமுமளாவிச்
சோணையாற்றுறையுநிகர்த்ததுதொல்லைநீர்யமுனை. ௧௩

தெளிவிசும்புலாங்கதிரவன்றிருமகளென்றே
அளவளாய்த்திகழம்புயநறுமலர்கடுத்த
நளிதடந்திரையமுனைமாநதிப்படிந்தெழுந்த
முளையெயிற்றிளங்கன்னியர்முழுமதிவதனம். ௧௪

களிக்கருங்கயலன்னகட்கடைசிவப்பூரக்
குளிக்குமேழையர்குங்குமக்குவிமுலைவளாகம்
கிளைக்குந்தாமரைக்கேழ்கிளர்நறுமலர்மணத்தல்
திளைத்தல்போன்றனசெழுந்துழாய்க்கருமுகில்செங்கை. ௧௫

கற்றைவார்குழற்கன்னியர்கதிரிளங்கொங்கை
முற்றந்தோய்தருமுழுநெறிக்குவளையம்பசுந்தோ
டுற்றகண்ணனல்லொள்ளொளிநிறனுமுண்ணிறைந்து
பொற்றமாமையும்புறத்திடைதவழ்வதுபோன்ற. ௧௬

ஆட்டுகுங்குமக்கொழுங்களியளாயசெங்கமலம்
சேட்டிளங்கதிர்முலையெனவொழிந்துவெண்டிங்கள்
காட்டுவாணுதற்கன்னியரெழுதுசாந்தழிந்த
மோட்டுவெம்முலைமுளரியென்றளிகுலமொய்ப்ப. ௧௭

அமிழ்திற்றோன்றியவம்மலர்த்திருமகளேய்ப்ப
இமிழ்திரைப்புனலாடுமவ்வின்னகைமடவார்
உமிழ்நிலாத்திகழ்பூந்துகிலொருங்குகைக்கொண்டு
கமழலர்த்துறைகடம்பின்மேலேறினன்கண்ணன். ௧௮

ஆவியந்துகில்வாரினனலர்கடம்பிவர்ந்த
ஆவியன்னவன்றன்னையவ்வரிவையர்நோக்கிப்
பூவைவண்ணவெம்பூந்துகில்வழங்குதியென்றுப்
பூவைபோல்விளைபுத்தமுதுகமிழற்றினரால். ௧௯

அரவமாநதிதுகிலொழிந்தாடினீரதற்குக்
கரையிவர்ந்துநீர்கைதொழத்தருகுதுமென்ன
முருகுவிம்மியகோதையர்முகமுகநோக்கி
உருகுகாதலுநாணுமீதூர்ந்தனரொல்கி. ௨௦

இருடொந்துதாழ்கூந்தலாரிறங்கியமுகத்தர்
சொரிதரும்புயறுறந்தெழுமின்னெனநுடங்கிப்
பரவையல்குலோர்பங்கயச்செங்கரமறைப்பக்
கரையிவர்ந்தொருகையினற்றொழுதனரன்றே. ௨௧

ஒருகையாற்றொழிரேடரித்தடங்கணீர்செங்கை
அரிதல்வேண்டுமென்றஞ்சனவண்ணனின்றுரைப்பக்
குருகிளங்கொடிமறைந்தனர்சிலர்சிலர்குழைந்து
முருகுவிம்மியமொய்ம்மலர்த்தண்டுறைபடிந்தார். ௨௨

எந்துகோட்டல்குன்மறைதரவிருள்கணிந்தொழுகும்
கூந்தல்சுற்றியுங்கொய்தழைசுற்றியுங்குளிர்தேன்
பாய்ந்ததாமரைப்பாசடைசுற்றியுமெதிர்ந்து
காந்தண்மென்முகிழ்கவற்றிருகையினுந்தொழுதார். ௨௩.

அலர்க்கருங்குழற்கன்னியரகன்மதியடைந்து
நலத்ததாமரைநாண்மலர்குவிவதுகடுப்ப
மலர்க்கைகூப்பினர்வணங்கலுமறிகடலகடு
கலக்கியின்னமுதளித்தவனளித்தனன்கலிங்கம். ௨௪

மகிழ்ந்துகொண்டவம்மாசிறாசுடைபுனைதோறும்
நெகிழ்ந்துசோர்தரிச்சலுநெகிழ்ந்தநோக்குதவி
முகிழ்ந்துவீங்குறுநும்முலைமுயங்குவமெனவகன்றான்
திகழ்ந்தவால்வளைகொண்டெறிபாற்கடற்சேர்ப்பன். ௨௫

கோவியர்துகில்கவரத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௩௦௮.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௧௦-வது, வேள்விமங்கையருணவளித்தவத்தியாயம்.

---

### கலிவிருத்தம்.

கோழரைநாகமுங்குருந்துங்கொன்றையும்
தாழ்சினைமரவமுந்தழைத்தகானிடைத்
தோழரொடின்னிரைதுரந்துசென்றனன்
ஆழிவாய்த்துயிலொழியண்ணலென்பவே. ௧

பூந்துணர்முருகுலாம்பொதும்பர்பற்பல
நீந்தினனிளையவர்நெகிழ்தண்பூங்குலைக்
காந்தளஞ்சாரலினெய்த்துக்கண்ணனைக்
கூர்ந்ததுபசியெனக்குழைந்துபோற்றினர். ௨

வளர்த்தனரங்கழன்மறைவலாளர்சோ
றளிக்கெனக்கண்ணனின்றறைந்திட்டானெனக்
கிளக்கினல்குவரெனக்கிளந்தகாலைவாய்க்
களிப்புடையிளையவர்கடிதின்மேயினர். ௩

தம்மின்வெள்வல்சிவெந்தழற்கட்பாந்தளின்
பைம்மிசையாடியபச்சைமாமுகில்
நும்முழைவிடுத்தனனெனநுவன்றனர்
செம்மையந்தாமரைத்தெரியலார்க்கரோ. ௪

மறையவர்நான்மறைவழுத்தும்வேள்வியின்
இறையையோர்மகனெனவெண்ணியில்லென
அறைதாவத்திறனடைந்துகூறலும்
முறுவல்வாண்முகத்தினன்முதல்வன்கூறுமால். ௫

வேதியரிருக்கவவ்வேள்விவேதியர்
சோதையர்க்குரைக்கெனக்கூறமன்றலந்
தாதவிழ்முல்லையந்தாமமார்பர்போய்
மாதர்பாலத்திறன்வழங்கினாரோ. ௬

முல்லையங்கோதையர்முதிர்சுவைத்துவை
முல்லைமென்முகைபுரைமூரல்கைக்கொளா
மல்லன்மாமறையவர்தட்பவந்தனர்
மல்லடுதோளினன்மருங்கினென்பவே. ௭

மயிலின்மென்பீலியுமல்லன்முல்லையும்
துயல்வரச்சூடியோர்தோட்டதாமரை
இயல்பெறச்செங்கைகொடிருந்தசெல்வனைக்
கயன்மலைப்பன்னகண்களிப்பநோக்கினார். ௮

மூரல்வான்முகத்தினர்மூரலுண்டபின்
வாரொலிகூந்தலம்மடநல்லார்தமை
ஆரழற்சாலைநீரடைமினென்றனன்
காரெழில்கொண்டறங்காக்குமையனே. ௯

அநகவாங்கடைகலமடையினந்தணர்
முனிகுவரெனவவர்முனிவுசெய்கலர்
புனமயிற்சாயலிர்போமினென்றனன்
நனைவிரிகூந்தலார்நண்ணினாரோ. ௰

நண்ணலுமந்தணர்நகைமுகத்தினர்
கண்ணனையெய்திநாங்காணகிற்றிலேம்
பெண்ணறிவிலநணிபேதையேமெனு
உண்ணெகிழ்காதலினுருகினாரோ. ௧௧

நிரையொடுமீண்டனனிலவுசெங்கதிர்
வரைமறைதரவெழுமாலைவெண்பிறை
சொரிநிலவெனவலர்தோட்டுமுல்லையந்
தெரியல்சூழ்கருங்கழற்செங்கணேறனன். ௧௨

வேள்விமங்கையருணவளித்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩௨௦.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

# ௯௧-வது, கோவத்தனமெடுத்தவத்தியாயம்.

கலிவிருத்தம்.

உந்துநீரமுதுடனுயிர்த்தபேதையர்
அந்தண்வானகையமுதருந்தியின்புறும்
இந்திரன்மகிழவாங்கியேற்றியீட்டினன்
பைந்தொடைநந்தர்கோன்பண்ணிகாரமே. ௧

ஆவயின்மாயவனறிந்துமென்செய்வான்
மேவினைநீயெனவிளம்பநந்தர்கோன்
பூவைபோல்வண்ணயான்புரியவேட்டது
தேவர்கோன்பூசனையென்றுசெப்பினான். ௨

சேணுலாமிந்திரன்சீற்றமீங்கினிக்
காணலாமென்றுசெங்கமலவீட்டுறை
வாணிலாமென்னகைமணந்தசெம்மணிப்
பூணுலாமார்பினன்புகன்றன்மேயினான். ௩

பண்டுசெய்வினையலாற்பரவுதெய்வமொன்
றுண்டெனிற்றான்பயனுதவவல்லதோ
அண்டர்கோன்பூசனையாற்றுகின்றதால்
கண்டிலனொருபயன்கருதுங்காலையே. ௪

எவ்வினையேனுமொன்றிழைக்கினீறிலா
தவ்வினையேபயனளித்தல்செய்யுமால்
செய்வினையல்லதுதெய்வமென்செயும்
மவ்வலம்பசுந்தொடைமார்பமற்றரோ. ௫

செழுமறையவரொடுசெம்பலாணினம்
விழைதருமுணவெலாம்வெறுப்பநல்கிடாப்
பொழிமழைதவழுநம்பொன்னங்குன்றினை
வழிபடலினிதெனவள்ளல்கூறினான். ௬

திருத்துயில்பெற்றவச்செம்பொன்மார்பினான்
உரைத்தவாறேமன்னுவந்துநந்தர்கோன்
அருச்சனைபுரிந்தனனருவிமாலைதாழ்
பொருப்பினைவெண்டிரைப்புவிகளிப்பவே. ௭

கன்னலின்றீஞ்சுவைக்கனியின்குப்பையும்
பொன்னெடுங்குன்றெனப்பொலிந்ததோர்தலை
கொன்னவில்வெள்ளியங்குன்றமாமெனச்
செந்நெல்வெள்ளடிசிலோர்திசைமலிந்ததால். ௮

உண்ணுமின்னமுதுடனுடையும்பாற்கடல்
கண்ணுறுகின்றதோர்காட்சியாமென
வெண்ணெய்வெண்டயிரொடுவிளங்கவோர்தலை
அண்ணலான்பொழிந்தபாலலையெறிந்ததால். ௯

வெடித்தநாண்மல்லிகைவிரியல்வாசிகை
தொடுத்தனர்விரைகமழ்சுண்ணந்தூவினர்
எடுத்தனர்தீம்புகையினியதேனுக
வடித்தனர்கழையிசைவயிரிசைத்தனர். ௧௰

அவிழ்ந்ததாமரைமலரனையசெங்கணன்
நிவந்தகோவத்தனமாகிநெய்யொடு
குவிந்தவால்வல்சியுங்கூட்டுண்டவ்வழி
உவந்தனமெனச்சிலவுரைவழங்கினன். ௧௧

ஆமிழ்தன்னநல்லடிசின்மாந்தியோர்
கார்வரைமகிழ்வதுகாண்மினோவென
வேரியங்கருந்துழாய்விமலன்வெண்ணிலா
மூரலனிவ்வழியொழிந்திட்டானரோ. ௧௨

உண்டதுவாய்திறந்துவந்துளோமென
விண்டதுமற்றிதுவியப்பிற்றுமென
அண்டர்மால்வரையினையன்புற்றேத்தினர்
வண்டிமிர்போதுதூஉய்வணங்கினாரரோ. ௧௩

முகிழ்விரிமெல்லிணர்முல்லையாயர்கோன்
மகன்மொழிகேட்டனன்மலைவழுத்தினன்
நகையுடைத்திஃதெனநாட்டஞ்சேர்ந்தனன்
அகலிருவிசும்புகாத்தளிக்குமண்ணலே. ௧௪

ஒருமகன்காப்பதூஉமுயர்பொற்கோட்டதோர்
கருவரைகாப்பதூஉங்காணத்தக்கதால்
வருகமாமுகிற்குலம்வாரிவற்றிடப்
பருகுபுசொரிகெனப்பணித்திட்டானரோ. ௧௫

எழ்பெருங்கொண்டலுமெழுந்துவான்வளைஇ
ஊழியினிறுதியினூறியொல்லெனச்
சூழ்கழலிந்திரன்சூழியானையின்
தாழிருந்தடக்கையிற்றுரைகான்றவே. ௧௬

இடியினில்வெருவுறுமிடித்துமின்னுமின்
கொடியினிற்கரிந்துமெய்குலைகுலைந்திடும்
கடியகன்மாரியிற்கலங்குமவ்வழிப்
படுமணியானிரைபட்டதென்சொல்கேம். ௧௭

சாய்த்தவஞ்சென்னியதளர்ந்தகாலன
காத்திளங்கன்றினைக்காந்தமெய்யன
ஆத்திரண்மறுகினவலமந்துற்றன
பார்த்தன்மான்றேர்க்கொருபாகன்றன்னையே. க௮

முடிந்ததோவூழியம்முதல்வனண்டமாங்
கிடிந்ததோவுலகியலிறந்துபோயதோ
கடும்புயலின்னதுகண்டிலேமென
நடுங்கினர்கோவலர்நனிகலங்கினார். க௯

ஆரழல்வளைத்தநாளாவிகாத்தனை
கார்முகில்வண்ணநீகாப்பவேண்டுமிம்
மாரியுமென்றனர்மல்லன்முல்லையந்
தாரவன்சேயடிதாழ்ந்துபோற்றினார். ௨0

வம்மினீர்யாவருமறுகுமாவெலாம்
தம்மினிவ்வழியெனத்தண்டுழாய்முகில்
செம்மையந்தாமரைச்செங்கையொன்றினால்
பெய்ம்முகிறவழ்வரைபிடுங்கினனரோ. ௨க

கலிநிலைத்துறை.

காவற்பொழில்பூண்டுலகேழையுங்காக்கவந்தோன்
ஆவக்கிடரொன்றணுகாவகையாழிமேய்ந்த
தூவற்கருங்கார்சொரிகின்றவம்மாரிகாத்தான்
கோவத்தனமோர்குடையாமெனக்கொண்டுநின்றே. ௨௨

பாரேழுதவும்பனிமாமலரண்ணலோடும்
ஈரேழுலகத்துயிர்யாவையுமீன்றநம்மான்
ஓரேழ்பகனின்றுயரண்டம்வெடிப்பவார்த்துக்
காரேழ்பொழியுங்கனைவெம்பெயன்மாரிகாத்தான். ௨௩

பாட்டாயிரம்வீழ்ந்திளவண்டினம்பாடுமுல்லைச்
சூட்டாயிதழ்ப்பூந்துளவோடுமிலைந்ததொல்லோன்
கோட்டாடகமால்வரையேந்தியகோலநோக்கி
மீட்டான்பொழியும்புயலேழும்விண்காவல்வேந்தன். ௨௪

தந்தாவளமோர்தடந்தாமரையேந்தியாங்குச்
செந்தாமரைக்கட்டிருமால்வரையேந்தனோக்கி
நந்தாயகிழ்ச்சிதழைகோவலர்நந்தகோனே
டந்தாமமார்பன்றனையோர்ந்தனரையமற்றே. ௨௫

ஏர்வண்ணம்வெவ்வேறெதிருழிதொறெய்துமீங்குக்
கார்வண்ணமெய்திக்கருங்கண்ணனெனன்றேத்தநின்றான்
போர்வண்ணநேமிப்புயலென்றனன்கர்க்கனென்றே
ஓர்வண்ணநோக்கியுயர்நந்தனுவந்துரைத்தான். ௨௬

ஓரேழ்பருவத்தொருதோன்றலொர்குன்றமேந்தி
ஓரேழ்கருங்காரொழியாதுபொழிந்தமாரி
ஓரேழ்பகல்காத்தளித்தானெனவுன்னியுன்னி
ஓரேழுலகத்தெவர்நெஞ்சமுவக்ககில்லார். ௨௭

பண்ணாயிரமஞ்சிறைவண்டுபடிந்துபாடும்
தண்ணார்துளவோன்றனிநின்றதொர்செவ்விநோக்கி
விண்ணாடுகாக்குந்தனிவெண்குடைவேந்துசெய்ய
கண்ணாயிரமுங்களிகூர்தரச்சென்றுகண்டான். ௨௮

கொழுதாமழலைக்குரற்றேனுழுகோதைமார்பன்
எழுதாமறையின்முடிமீதிலிருந்ததாள்விண்
முழுதாளுமன்னன்முளரிக்கரங்கூப்பிநின்று
தொழுதானிருதாண்முடிச்சென்னியிற்சூடினானல். ௨௯

உரைவாயிகந்துள்ளுணர்வுங்கடந்தோங்கிநிற்பாய்
தரைவாய்ப்பிறந்துதனிநல்லறங்காத்தல்செய்வாய்
விரைவாய்மலர்மேலுறைவாய்வரைவீற்றிருப்பாய்
திரைவாய்த்துயில்வாய்நினையெங்ஙனந்தேர்வல்யானே. ௩௦

மலர்மேலவன்கைம்மலைமேலுளென்மாசில்வெள்ளி
மலைமேலவனேனவருள்ளமயங்கியெம்மைத்
தலையாயவரேயெனநெஞ்சுதருக்கும்வேலை
உலையாமுதல்வாவொழிப்பாயஃதொல்லைமாதோ. ௩௧

மாற்றற்றபொற்றாமரையாள்புணர்மாலைமார்ப
ஆற்றற்றிகிரிப்படையாய்வெறுப்பார்வமில்லாய்
சீற்றத்திழைத்தசெயலீதுபொறுத்தியென்னாப்
போற்றிப்பணிந்தான்பசும்பொன்னகர்போற்றும்வேந்தன். ௩௨

ஒளியுற்றபொன்னாட்டுயரின்பமருந்தியுள்ளம்
களியுற்றனையக்களிமம்மர்கனன்றநெஞ்சம்
தெளிவுற்றிடவித்திறன்செய்தனமென்றுசெங்கண்
அளியுற்றதாரானளிகூர்ந்துரையாடினானல். ௩௩

நிலங்காத்தகோவேநெடுங்குன்றினின்மாரிகாத்தென்
குலங்காத்ததெய்வக்கொழுந்தேயருள்வாழியென்னாப்
புலங்காத்துயர்விட்புலஞ்சேர்பொலங்கோதைமாதர்
கலங்காத்தகண்ணன்றனைச்சார்ந்ததுகாமதேனு. ௩௪

மாலைக்கதிர்வாண்மதிநின்றுவயங்குகோல
நீலக்கிரிமேனிலவுக்கதிர்கால்வதென்ன
ஆலக்கருஞ்சேறுமிழ்பாம்பினின்றாடினானைப்
பாலிற்பரவிப்பரிந்தாட்டல்புரிந்ததன்றே. ௩௫

பாட்டுற்றவண்டுபடிந்தூதுபொற்பாரிசாதக்
கோட்டுற்றதெய்வக்குளிர்நாண்மலர்கோத்திறுத்துச்
சூட்டிற்றுநீண்டதொளைக்கைகொடுகங்கைவாரி
ஆட்டிற்றுக்கண்ணற்கயிராவதமாங்கடைந்தே. ௩௬

நாவந்தமாதுபுணர்நான்மறையோனையுந்திப்
பூவந்தளித்தோற்கொருபொன்னெடுங்குன்றமேந்தி
ஆவந்தளிக்குமடலாழியஞ்செங்கையாற்குக்
கோவிந்தனென்றோர்பெயர்கூறினன்கொற்றவேந்தன். ௩௭

காலக்கமஞ்சூற்கருங்கார்முகில்கண்டுவந்து
கோலக்கலவக்குலமஞ்ஞைகுனிக்குமாபோல்
வேலைக்கடல்வாய்விளையின்னமுதன்னதீஞ்சொல்
ஆலக்கருங்கணரமங்கையராடினரால். ௩௮

நந்தாதுபொன்வார்ந்தனயாழினரம்புளர்ந்து
பைந்தேனுறைப்பவுயர்கின்னரர்பாடலுற்றார்
செந்தேறல்சிந்தச்சிறைவண்டர்செறிந்துபாடும்
மந்தாரமன்றன்மலர்வானவர்தூவியார்த்தார். ௩௯

நறைவார்முளரிப்பொலம்போதுறைநங்கைமேவும்
இறைவாகமலத்தெழில்வாய்ந்தநின்செய்யபொற்றாள்
மறவாதருள்வாயெனமாயனைநின்றுவாழ்த்தி
அறைவார்கழற்காலமரர்க்கிறைபோயினனால். ௪O

கோவர்த்தனமெடுத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௩௯O.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## கஉ-வது, கோவியனைமணந்தவத்தியாயம்.

### கலிநிலைத்துறை.

ஈராறுசேர்த்திதியெய்தலுநந்தகோபன்
ஓராறுநண்ணியொலிநீம்புனலாடனேக்கிக்
காரேறுபோலுமொருதானவன்கைக்கொடேகப்
போரேறுபோலவெழுந்தான்றிகழ்பூவைவண்ணன். க

அணைந்தாயெவணென்றலராடகப்போதுதூவி
வணங்காவழுத்தவருணன்பதிசென்றுவல்லே
கொணர்ந்தான்கமழ்பூங்குருந்தம்புனைநந்தர்கோனைப்
பணந்தாழரவின்றலைநின்றுபதம்பெயர்த்தான். உ

மன்னுஞ்சிறப்பின்வருணன்மழைவண்ணன்மல்லற்
பொன்னங்கழற்கால்புனைந்தேத்தினன்பூவில்வாழும்
அன்னம்புணருங்கரியோனிவனுங்கொலென்னாத்
துன்னுந்தொறுவர்க்குயர்நந்தனுவந்துசொன்னான். ௩

தண்ணந்துணர்தூஉய்த்தடந்தாமரைச்செல்வனோடு
விண்ணும்பரவித்தொழுந்தன்னிலைகாணல்வேட்ப
வண்ணந்தெரிந்துமழைவண்ணனவ்வண்ணமாயர்
கண்ணும்மனமுங்களிக்கும்படிகாட்டினானால். ௪

தலைவந்தகூதிர்ப்பருவத்தினிலேர்தயங்கு
கலைவந்தகற்றைக்கதிர்மாமதித்தோற்றநோக்கி
அலைவந்துலாவும்யமுனைக்கரையெய்தியந்தில்
இலைவந்ததாராணிசைவேய்ங்குழனின்றிசைத்தான். ௫

## அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

நஞ்சுகொப்புளிக்கும்பேழ்வாய்நாகணைதுறந்தநம்பி
கஞ்சநாண்மலர்வாய்வைத்தகழையிசையமிழ்தமாரி
அஞ்செவிதவழ்தலோடுமாய்ச்சியர்சிறத்துமாரன்
செஞ்சிலைபழுத்துக்கான்றசெஞ்சரந்தவழ்ந்தமாதோ. ௬

வழிந்தமுதொழுகுமாலைமதிநிலாமேனிவெம்பச்
செழுந்தழலிறைக்குநெஞ்சந்தெருமாலுழப்பவாயர்
கொழுந்தின்வேயிசைவெங்காமக்கொழுங்கனல்வளர்க்குமென்னோ
பிழிந்துகொள்வனையபெண்மைப்பேதையர்பிழைக்குமாறே. ௭

காதளவோடிநீண்டுகடைசிவந்தகன்றுபோர்க்குப்
போதருகென்னுநீலப்போதினுக்கோலைபோக்கும்
மாதர்மென்னோக்கினுண்கண்மயிலியன்மாதரெல்லாம்
தாதுறுமறுகுசூழ்ந்ததம்புலமகன்றுமொய்த்தார். ௮

விசும்பிடஞ்சிறியதென்னவீங்கிளங்கொங்கைதாங்கி
ஒசிந்துநுண்மருங்குநோவவொலிகருங்கூந்தருழ
அசும்புபொற்கலாபமேங்கவணிசிலம்பரற்றவோடிப்
பசும்புயல்வண்ணத்தண்ணல்பண்வலைச்சென்றுபட்டார். ௯

நெடுநிலாக்குவித்தாலன்னநீண்மணற்குன்றமெல்லாம்
படுநிலாத்தெறுவெண்டுவிப்பவளவாயன்னம்போன்று
மடலவிழ்முல்லைவேலிமாதவிப்பந்தரெல்லாம்
சுடர்பொலங்கொம்பர்போன்றுதோகையர்துவன்றினால். ௰

எரிளமயிலின்மொய்த்தவேழையர்வதனநோக்கித்
தார்விரிந்தகன்றமார்வத்தலைவரைப்பிழைத்துக்கானத்
தாரிருட்காலையெம்பாலடைதனல்லறங்கொல்போமின்
நேரிழைமடவீரென்றுநெடியவனெடிதுசொற்றான். ௧௧

அல்லியங்கமலக்கண்ணனறைந்தசொற்கேட்டலோடும்
சில்லரித்தடங்கண்முத்தந்திருமுலைக்கோட்டிற்சிந்த
நல்லறங்கேட்பவென்றோநம்பியாமடைந்தேமென்னா
மெல்லெனப்பவளச்செவ்வாய்விண்டனர்மிழற்றல்செய்தார். ௧௨

துளிப்பதத்தேறன்மாந்தத் துதைந்துதாதளைந்துசூழ்ந்து
களிச்சுரும்பரற்றுதாரோய்காட்டழல்கடிந்திலாயோ
இளைத்தனந்துயரும்வண்ணமெண்டிசாமுகமும்வந்து
வளைத்தவெண்ணிலவுத்தீயைமாற்றலையென்னேயென்பார். ௧௩

பொருப்பினுன்மாரிகாத்தபூவைபோனிறத்தாயென்னே
கருப்புவார்சிலைகால்கோட்டிக்கலம்பெய்தோள்கழியவாங்கிச்
சுருப்புநாண்டொடுத்துத்தூணிதொலைவுறமாரனெய்யும்
அருப்புவெம்பகழிமாரியமைத்திலையயவென்பார். ௧௪

மல்லனீர்யமுனையாற்றுவல்விடமகற்றவல்லாய்
முல்லைவாய்பொழிந்ததேறன்மூழ்கிவெவ்வழல்வாய்கான்று
கொல்லியவெழுந்தவாடைக்கொலைவிடமகற்றுயென்னே
அல்லியங்கமலச்செங்கணமலவென்றயர்ந்துநிற்பார். ௧௫

பண்ணுறுகிளைகின்செங்கேழ்ப்பவளவாய்முத்தநாளும்
உண்ணவைத்திலையோநங்கட்குதவிலையொருநாளென்னே
பெண்ணலங்கனியவக்தபேய்முலையூறுபாலும்
வெண்ணெயுமினிதுமாந்துவிடைநடைக்குரிசிலென்பார். ௧௬

உருகினர்நிறையுநாணுமுகுத்தனர்நெகிழ்ந்துவீழும்
குருகினர்கொங்கைமுத்தங்கொதித்திடகரிந்ததண்பூஞ்
சருகினர்விளர்க்குமேனித்தளிரினர்கருங்கட்கையால்
பருகினர்வாரிவாரிப்பசும்புயலழகின்வெள்ளம். ௧௭

கழைபுரைதோளும்பச்சைக்கழைதருகதிர்முத்தன்ன
ஒழுகொளிநகையும்பெற்றவோடரித்தடங்கணல்லார்
இழைபுரைமருங்குறேய்க்குமிளமுலைமணந்தான்குன்றம்
குழைதரக்கழைவாய்வைத்தகோவலர்கொழுந்துமன்னோ. ௧௮

திகழ்மணிக்கூந்தலங்கைபற்றியுஞ்செய்யகோங்கின்
முகிழெனமுகிழ்த்தகொம்மைமுலைமுகந்தழீஇயுநீவி
நெகிழ்தரப்புரிந்துமந்தணிரையிதழ்ப்பூங்கொம்பன்னார்
மகிழ்தருமின்பத்தேறன்மாந்தினன்மணிவண்டன்னான். ௧௯

துளும்புநன்னலத்தசெவ்வாய்த்தோகையர்சிலவண்டீட்டம்
உளர்ந்தசெங்குமுதமாகவொழுகொளிமதியம்போன்றும்
தெளிந்தவின்முறுவநல்லார்சிலர்செழுங்கமலமாக
இளங்கதிர்பரிதிப்போன்றுமெழினலந்திகழ்வித்தானல். ௨0

அருப்பிளநிலவுகாலவாரமொத்திலங்குமந்தண்
சிரிப்பினும்புருவஞ்செய்யுஞ்செயலினுநகைகூர்தீஞ்சொல்
விருப்பினுமலர்க்கணோக்கின்விளைவினுங்களிநல்யானை
மருப்பிளங்கொங்கைமாதர்மனமகிழ்விளைத்தல்செய்தான். ௨௧

பொங்கிணர்க்காவுதோறும்புதுமணற்குன்றுதோறும்
பங்கயச்செங்கணெம்மான்பானலார்பயன்கொண்டோங்கு
கங்கையந்திரைவாயுற்றகளியிளவன்னம்போலும்
கொங்கவிழ்கோதைமாதர்குழாத்தொடுமாடல்செய்தான். ௨௨

முருகுவாய்சொரியுமுல்லைமொய்ம்மலர்தெரிந்துவேய்ந்தோர்
வரிமுலைத்துவர்வாயேழைவணரிருங்கூந்தனோக்கும்
இருள்படப்பொதுளுஞ்சோலையின்னிணர்கிழித்துவீழ்ந்து
விரிகதிர்நிலவுபாய்ந்துவிளங்குபூங்கானநோக்கும். ௨௩

சிறைச்சுரும்பெழுந்துபாடச்செவ்விதிற்றிகழ்சிந்தூரம்
பொறித்துமற்றொருத்திநீலப்புரிகுழற்காடுநோக்கும்
எறித்தசெம்பவளவல்லியிடைத்தவழ்ந்தழகுபூத்து
நெறித்தபைந்தோட்டுமென்றனெய்தலங்காடுநோக்கும். ௨௪

மருக்கமழ்கமலக்கையான்மான்மதத்திலகந்தீட்டி
முருக்கிதழொருத்தியந்தண்முகிழ்நகைவதனநோக்கும்
உருக்கிளர்மறுவிற்றாகியொண்கலைநிறைந்துதோன்றும்
திருக்கிளர்நிலவுபூத்ததிங்களங்கவினுநோக்கும். ௨௫

தீட்டுசாந்தழிதலானேதேங்கமழ்நரந்தங்கோட்டி
வாட்கணுளொருத்திகொம்மைவரிமுலைச்செவ்விநோக்கும்
பாட்டயர்ந்தொழுகுநீலப்பனிச்சிறைவண்டுமொய்க்கும்
மோட்டிருஞ்சுனையிற்பூத்தமுளரிமெல்லரும்புநோக்கும். ௨௬

ஒளிக்கதிர்மணியிற்செய்தவொண்டொடிதிருத்திமற்றோர்
கிளிக்குலமருட்டுமந்தீங்கிளவியஞ்செங்கைநோக்கும்
துளிப்பசுந்தேறன்மாந்தத்தோடுவாய்வைக்குநீலக்
களிச்சுரும்புடுத்தவந்தண்காந்தண்மென்முகிழுநோக்கும். ௨௭

வண்ணநுண்சுண்ணமாட்டிவளரிளந்திங்களன்ன
ஒண்ணுதலொருத்திமாமையொழுகுமாமேனிநோக்கும்
பண்ணமர்மழலைப்பல்காற்பறவைவீழ்ந்துழுதமென்பூந்
தண்ணறுந்தாதுதுற்றுத்தயங்குசெந்தளிருநோக்கும். ௨௮

கலிநிலைத்துறை.

வள்ளுறைசிந்துமழைப்புயன்மின்னுமணந்தாங்குத்
தெள்ளறலெக்கர்சிறப்பவொர்மாதொடுசென்றுழி
ஒள்ளிழைநின்முகமொப்பிலவாகியுடைந்தெங்கும்
கள்ளவிழ்தாமரைமாமலர்வாடுதல்காணென்னும். ௨௯

தொங்கலணிந்தொருசோர்குழலாளொடுகுன்முற்றும்
சங்கமுழங்கியதண்டுறைசென்றுதலைப்பெய்யா
மங்கைநினங்கலுழ்வாண்முகமஞ்சியவண்ணத்தால்
பைங்கதிர்மாமதிகாரிலொளிப்பதுபாரென்னும். ௩௦

ஓடரிமைக்கணொருத்தியொடின்னறவூறுந்தண்
கோடணிகைதைவனத்துமலர்ந்தலர்கொய்தாய்நீள்
காடுபடுங்குழல்காண்டொறுமென்றுகொள்காளிந்தி
ஆடுதிரைக்கையின்முத்தமளிக்குமதிர்ந்தென்னும். ௩௧

கோழரைநாகமணந்தமணற்சிறுகுன்றேறி
மாழைமென்னோக்கியொர்மாணிழையோடுமகிழ்ந்தாடித்
தாழ்குழனின்னகையொப்பவிணைந்துகொறண்முத்தம்
சூழ்பவளக்கிளையூடுசெறிந்தசுடர்த்தென்னும். ௩௨

ஆடுமொருத்தியொடாங்கருவிப்புனலாய்கோதை
சூடுமொருத்தியொடின்றொடையாழிசைசூழ்வந்து
பாடுமொருத்தியொடுற்றபளிக்கறைசென்றெய்திக்
கூடுமொருத்தியொடின்னிளவாடைகுளிர்ப்பெய்த. ௩௩

பாடறிருத்தியிளங்களிவண்டுபரந்தாடும்
ஆடறிருத்தியலம்புகவீழுறுமந்தாமச்
சூடறிருத்துமொருத்தியைமென்மொழிசொல்லாநின்
றாடறிருத்துமொருத்தியையுள்ளமுவப்பூர. ௩௪

இம்முறைகாமமுழந்தவனாகியியைந்தாட
நம்முழையார்வம்விழைந்தனனென்றுநயப்பெய்திச்
செம்மலராணிகர்சின்மொழிமாதர்செருக்குற்றார்
மைம்முகிலன்னவனவ்வழிமின்னின்மறைந்தானால். ௩௫

கலிவிருத்தம்.

இடிபோலதிரீங்கவுள்வேழமனான்
கொடிபோலுமொர்கோதையொடாங்ககல
வடிபோலமலர்ந்தகண்மாரியுகப்
பிடிபோன்மறுகுற்றனர்பேதையரே. ௩௬

மறைதேடருமாயவனாகுமெனா
நறைவார்குழலார்சிலர்நண்ணினரால்
வெறிமேவியபூஞ்சினைவிள்ளுமிணர்ப்
பொறையான்மெலிபூவையிளந்தருவே. ௩௭

ஆலப்பகுவாயரவத்துயிறீர்
மாலுற்றனனாமெனமாலுழவா
நீலச்சிறுகுன்றினைநீள்விழிசெஞ்
சேலிற்பிறழ்வார்சிலர்சேர்ந்தனரால். ௩௮

புவியிற்றிகழ்பொற்றருவல்லியெனக்
கவினிற்பொலிவார்சிலர்கண்ணனெனாப்
பவளக்கொடியுற்றபளிக்கரைமேல்
தவழப்புயல்சென்றுதழீஇயினரால். ௩௯

மண்ணுமணியேமழவேறனையாய்
உண்ணுவமுதேயெமதுள்ளுயிரே
கண்ணுவெமகண்ணெதிராய்கொலெனுப்
பண்ணார்மொழியார்பலபன்னுவரால். ௬௦

தளராநிலவுத்தழலிற்றமியேம்
குளியாவுருகிக்குழையத்தனிநீ
விளையாடுதியோவிரிதாரவனே
இளவாளரியேயெழுதற்கரியாய். ௬௧

வார்கொண்டிதழ்வாய்மழைவிண்டொழுகக்
கார்கண்டலருங்கமழ்வெண்டளவே
நீர்கொண்டெழுகார்நிகராயவனெம்
ஏர்கொண்டனனெவ்வழியேகினனே. ௬௨

தளவேயறியாய்தடமார்பணியும்
துளவேயறியுஞ்சொலவல்லகொலோ
களவேயுரைநின்கனிபோல்பவனெம்
அளவேபிறிவுற்றகலும்புலமே. ௬௩

இரவுத்தலையுந்துயிலாதிழுமென்
றுருவுக்கதிர்மாமணிகொண்டொழுகும்
அருவித்திரைகாளறிவீரறையீர்
மருவிப்பிரியும்மணிவண்ணனையே. ௬௪

கன்றால்விளவின்கனிசிந்தியமால்
சென்றாடிடனீர்தெரிவுற்றிலிரோ
பொன்றாழிணரிற்பொலிவுற்றிடுதண்
கொன்றாய்குரவேகொடியீருரையீர். ௬௫

தாதாடியவந்தளிர்மாதவியே
போதார்துளவப்புயலின்செயலீங்
கேதோபுகல்வாணிதழ்விண்டதுமற்
றேதாயளிநீயுடையாயலையோ. ௬௬

தரவுக்கோச்சகக்கலிப்பா.

தண்ணெணுங்கூர்வெண்முறுவற்றண்டரளநிரைமுகிழ்க்கும்
வண்ணநிலவுக்கொழுந்தான்மடநாணும்பெண்ணலமும்
உண்ணிறையுநெஞ்சமதொடொருங்குகொடுபோயகலாக்
கண்ணன்றனிறுத்தபுலங்காட்டாய்கொல்கழைமுத்தே. ௬௭

வண்டாயிதழ்குடையவாயவிழ்ந்துசெய்யபொலந்
தண்டாதுறைத்ததடந்தாமரைக்கண்டுஞ்சுதியால்
கண்டாய்நீயிலையோகொல்களவத்தெங்காதலனை
விண்டாயின்றிலையோதண்விரிநீரக்கொழுஞ்சுனையே. ௬௮

தேம்புசிறுமருங்கொசிக்குஞ்செம்மாந்தகொங்கையெனத்
தேம்படுமந்தீங்கிளவிசிலகிளந்துதோடோய்ந்த
ஆம்பலந்தீங்குழலிசையெம்மாயர்கடம்போரேற்றை
ஆம்பனீயறிதியன்றேயஃதுரையாதிருக்குதியே. ௪௯

மட்டருந்துவாசைபுனைமழலையிசைச்சுரும்பூதி
நெட்டிதழ்தேயப்பெரிதுநெறிக்குமிதழ்க்கருநெய்தால்
பட்டமரந்தளிர்தளிர்ப்பப்பண்ணுருங்குழலிசைத்த
கட்டெழிலங்காளையுருக்காட்டுதற்கென்செய்வேமே. ௫௦

முள்வாய்வெண்சங்குநனிமுரலுமிசைசெவியோர்ந்து
கள்வாய்ச்செங்கழுநீர்நீள்காலனையசெங்கமலத்
துள்வாய்க்கண்டுயில்குருகேயொன்றுமுணர்ந்தாயிலையே
புள்வாயங்கிடந்தகரும்புயல்கரந்துபோயதுவே. ௫௧

என்றென்றுளம்முருகியிளமாக்காவகத்துழையே
தென்றலெனும்பசுங்கொழுந்துந்தெள்ளுநிலாவெண்மதியும்
கொன்றுநனிகுறைத்திட்டகுரையாவிகொண்டயர
நின்றுநிறைதாமழிந்துநெஞ்சமதுகலுழ்ந்தனரால். ௫௨

கலிவிருத்தம்.

தடங்கொடாமரைக்கையாற்றண்ணந்தாரினான்
பிடுங்கியவரைத்தலைபெய்யுமாரிபோல்
நெடுங்கணீர்முலையுகநின்றுநீணிலம்
கடந்தமாமுகில்செயல்காட்டன்மேயினார். ௫௩

மைதவழ்நெடுவரைமாரிகாப்பநல்
கொய்துழாய்ப்படலையங்கொண்டலேந்தல்போல்
ஐதெழின்முலைத்தலையழுந்தவேனிலான்
எய்ததாமரைபறித்தேந்துவார்சிலர். ௫௪

கரியவன்வெண்டுகில்கவர்தல்காட்டுவான்
விரிமலர்ப்பசுந்தொடைவேனின்மன்னவன்
பொருகணைமுகத்தெழுபுகைமுகந்துற
நிரைவளைச்செங்கரநீட்டுவார்சிலர். ௫௫

தொளைவழியிளநறுச்சொரியுந்தீங்கழை
ஒளிமணிவண்ணனின்றூதுமாறுபோல்
முளைமதிக்கவிசையான்முரியவாங்கிய
வளரிளம்பசுங்கழைவாய்வைப்பார்சிலர். ௫௬

வெஞ்சினவரவெனவெறுத்ததாரின்மேல்
துஞ்சியகளியளித்தொழுதிபாண்செய
நஞ்சுவாய்வழிபடநாகத்தாடிய
அஞ்சனப்புயலினின்றுடுவார்சிலர் ௫௭

மோட்டிளங்குரும்பைபோன்முகிழ்த்தவெம்முலை
ஆட்டுசெஞ்சாந்தினையள்ளியங்கையால்
பாட்டளித்துளவினான்பருகவாரிவெங்
காட்டழலேந்துதல்காட்டுவார்சிலர். ௫௮

நனிவரும்பனிமலர்நான்றகூந்தலார்
அனைவருங்குழீஇயிளவன்னநேர்பவர்
வனைவருங்குரிசில்கார்வண்ணங்காட்டிய
துனைவருங்கடும்புனல்யமுனைதுன்னினார். ௫௯

இடுமணலெக்கரினிறுமென்சாயலங்
கொடியிடைமடந்தையர்கொய்துழாய்முகில்
மடலவிழ்மலரடிவைப்புநோக்கினர்
கடிகமழ்தாமரைக்கண்களிப்பவே. ௬௦

பூவைமென்முகையவிழ்பூவையன்னவன்
சேவடியழுந்தினதேம்பெய்கோதையோர்
பாவையையெடுத்தனன்படர்கின்றான்கொலென்
றேவுறுபிணையனாரிரங்கியேகினார். ௬௧

நெட்டிடைகழிதலுநிலாக்குவித்தென
விட்டொளிர்வெண்மணற்குன்றமீமிசை
இட்டிடையொசிதரவெழுந்தவெம்முலை
மட்டவிழ்மலரடிவைப்புநோக்கினார். ௬௨

உருவவெண்ணிலாக்கதிருகுத்தமுத்தவெண்
பருமணன்ஞெமரியபனிகொள்பூந்துறைத்
தெரியிதழ்நறுமலர்சிதர்ந்துதாழ்ந்தவை
கருநெறிக்குவளையங்கண்ணிற்கண்டனர். ௬௩

பாடல்சால்சிறப்புடைப்பவளவாய்முகில்
தோடவிழ்நறுமலர்சூட்டிப்பாவையோ
டாடியகுழலீதாகுமென்றுநின்
றோடரித்தடங்கண்முத்துறைப்பமாழ்கினார். ௬௪

தணந்தவரின்னணந்தளர்வுற்றையபொன்
சுணங்கணிவனமுலைசுமந்துபின்செல
மணங்கொளஞ்சாயலம்மதர்வைநோக்கியைப்
புணர்ந்துடன்போயினன்பூவைவண்ணனே. ௬௫

அல்லிநாண்மலர்புரையஞ்செஞ்சீறடி
மெல்லியனின்னடைவெருவியன்றுகொல்
ஒல்லெனமடவனமொதுங்குமீங்கெனாச்
சொல்லினன்புல்லினன்றொடையல்சூட்டினான். ௬௬

அரும்பவிழ்நறுமலரலங்கல்சூட்டியும்
மருங்கிறுமென்னவீழ்வரிவண்டோச்சியும்
கரும்புயலளிசெயக்கண்டுசாலவும்
விரும்பினனெனக்களிவிளைஇவியந்தனள். ௬௭

நடத்தலோவரிதினிநம்பிவேண்டுழி
எடுத்தெனையேகுவாயெனமிழற்றலும்
சுடர்த்தொடிமடநலாய்தோளினேறெனா
வடித்தபூந்துளவினான்வழங்கினானரோ. ௬௮

இந்நிலைமடவாலேறுவானெழும்
அந்நிலையாடல்வாளரவினாடிய
கன்னியந்துளவினான்கரப்பக்காண்கலள்
பொன்னலர்கோதையும்புலம்புற்றேங்கினாள். ௬௯

வேறு.

வழிந்தநறைதோய்ந்தவிளவாடைவரவொல்கா
விழுந்தவிளவான்மதிசெய்வெங்கதிரின்வாடும்
எழுந்தளருமென்மெலவியங்கியிடைதேடும்
அழுந்தமியளுற்றதுயரார்புகல்வரம்மா. ௭௦

அரக்கெறியுநீலமலரன்னவிழிநல்லார்
புரிக்குழல்புலம்புறுபுலத்திடையிருத்தார்
மருக்கமழும்வல்லிபுரைமாதிவளுமுள்ளம்
செருக்கினள்கொலென்றுதமசிந்தைநினைவுற்றார். ௭௧

ஐயனெவணுற்றனனணங்கெனவிறைஞ்சிப்
பொய்யளிபுரிந்துமுலைபுல்லியிவணெய்தா
வெய்யனெனையுந்தனிவிடுத்தனனெனத்தன்
மையுலவுசெய்யவிழிமாரியுகநின்றாள். ௭௨

வண்ணமதிகொண்டுளமயங்கிமெலிகின்றேம்
கண்ணினெதிர்நின்வதனகாந்தியுமுறாதோ
அண்ணன்மதவேழமனையாயெனவிரங்கிப்
பண்ணின்மொழிவஞ்சியர்கள்பாடல்பயில்வுற்றார். ௭௩

நிறங்குலவுநித்திலநிரைத்தனையமூரல்
பிறங்குநிலவாலுருகுபேதையரையெல்லாம்
வெறுங்கனலிறைக்குநெடுவெண்ணிலவிளித்தல்
அறங்கொலரசேயமுதமேயுலகளிப்பாய். ௭௪

வண்ணமுறுதாமரைமலர்ந்தனையவாநின்
கண்வலையகப்படுதல்கண்ணநினையாமே
அண்ணன்மதன்விற்பொழியுமம்புயமலைப்பத்
தண்மலர்வனத்திடைதணத்தறநகைமைத்தோ. ௭௫

அறந்தலைமணந்தபுயலேயருமருந்தே
மறந்தலைமணந்துபொருமாரனமர்தன்னால்
இறந்துபடுமாவியிறைசெல்லினெனவேங்கிப்
பிறங்கினரவ்வல்லிபுரைபேதையரயர்ந்தார். ௭௬

தேனுமமுதும்பொருவுசின்மழலைநல்லார்
மானுமெறிவேலுநிகர்மைவிழிகளிப்ப
வேனிலரசாளனும்வியக்குமுருவுற்ற
நீணிறமுகுந்தனெதிர்நின்றனனுவந்தே. ௭௭

கண்டனர்வியந்தனர்களித்தனர்துளித்தேன்
உண்டவரிவண்டினினமொத்தனர்கருங்கண்
தெண்டிரைமுகத்தெழுசெழும்பரிதிகண்ட
புண்டரிகமென்னவெழில்பூத்தனர்முகங்கள். ௭௮

மன்னியொருவர்க்கொருவனாகிமணிவண்ணன்
புன்னைமணநாறுமுயர்பூம்புளினமீதும்
கன்னிநறுஞாழல்கழிசாவுமிருகைகோத்
தன்னநடைமாதருடனாடினன்மகிழ்ந்தே. ௭௯

பொடித்தபிறைபோலவெழில்பூத்தநுதனுண்வேர்
துடைத்தணியணிந்துமலர்சூட்டிமடவாரோ
டடுத்துநெடுமால்குரவையாடியதொர்தோற்றம்
எடுத்துநவிலுந்திறனெவர்க்குளதுமன்னோ. ௮௦

கலிநிலைத்துறை.

மைக்கருங்கணார்மாணெழிற்புணரியிற்பொடித்த
மொக்குளன்னவெம்முலைமுகம்பொறித்தசெஞ்சாந்தும்
நக்கநாண்மலர்நறியசெஞ்சுண்ணமுமாடிச்
செக்கர்வானெனச்சிறந்தனன்பாற்கடற்சேர்ப்பன். ௮௧

குரவையாடியுங்குளிர்நதியாடியுங்கோதை
அருவியாடியுமகன்சுனையாடியுங்கொண்டற்
கருவியாடியகாவினுங்கடிமணற்றடத்தும்
மருவியாடினன்மாதர்தங்குழாத்தொடுமாயன். ௮௨

பலரிறைஞ்சினர்பரவுறப்பச்சைமான்றடந்தேர்
அலரிமண்டிலமதிர்திரைக்கடன்முகட்டரும்பு
புலறிமுல்லையம்புலத்துவந்தடைந்தனன்புனிதன்
மலரிவர்ந்தபைங்கூந்தலார்மனையகம்படர. ௮௩

நெறிந்துநெய்த்திருணேமிமால்வரையிறந்தோடச்
செறிந்தகார்க்குழற்சிறுநுதற்கோவியரெல்லாம்
நறுந்துழாய்முகினின்றுழிநண்ணியுந்தம்பால்
உறைந்துளாரெனத்தோன்றினர்காதலர்க்கொருங்கே. ௮௪

எனலுமன்னவனென்னைகொலறந்தலைமணப்பப்
பனியிருங்கடற்பாரகம்புரப்பவந்துதித்தோன்
அனையவாய்ச்சியராய்நலநுகர்ந்ததோரறங்கொல்
முனைவவென்றலுமூரல்வாண்முகத்தினன்மொழியும். அ௫

அழலனைத்தையுநுகர்ந்திலதேகொலொள்ளழலின்
எழில்விரிந்தசெஞ்சடைமிசையின்னமுதுறைக்கும்
குழவிவெண்பிறைக்கொழுங்கொழுந்தணிதருவெவ்வாய்
மழுவலானன்றிப்பிறர்விடமாந்திதுய்குவரோ. அ௬

இழைப்பன்யாவையுமிறையவனிறையவனெழுகும்
ஒழுக்கம்யாவரும்மொழுகமேற்கொள்ளுதலொல்லா
விழுச்சிறப்புடையிறையவன்விதியினில்விதித்த
வழக்கினிற்பதேயறனெனப்பழமறைவழங்கும். அ௭

நிறுத்தியாறையுநெறியினினெகிழ்ந்துதண்டேறல்
உறைத்ததாமரையிறைபவற்குருத்தடர்விடைமேல்
இறைக்குநாடரு்மிறைவனுமெங்கணுநிறைந்த
அறத்தின்வித்தினுக்கறமெவன்பாவமென்னம்மா. அஅ

தோய்ந்துந்தோய்விலான்றுகளிலாமாணியினெழுக்கம்
ஏய்ந்துளான்றனியிறையவனுயிழையவர்க்கு
நீந்தலில்லதோர்நீணலநெடிதுதந்தனன்றற்
சார்ந்துளார்க்கறனுதியதாலவன்வழக்கே. அ௯

கோவியரைமணந்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௪௪௬.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## க௩-வது, சங்கசூடனைக்கொன்றவத்தியாயம்.

---

### கலிநிலைத்துறை.

சேட்டிமன்னவகேழ்கிளரிளவெயில்கிளைக்கும்
சூட்டராவணைதுயின்றவன்முதலினோர்தொடர
வேட்டுநந்தகோன்விழாவயரம்பிகாவனத்து
நாட்டமூன்றுடைநம்பனையிறைஞ்சுவானடந்தான். க

ஆறறிந்தவவ்வாயர்கோனடைந்தளுான்றருந்தா
தாறெனப்பகர்தொழிலுடையந்தணர்க்கெல்லாம்
ஆறெனப்படுமஞ்சுவையடிசிலூட்டினனுல்
ஆறெனப்பொழிநெய்யொடுபோல்பொருதலைப்ப. உ

வள்ளிதழ்த்தொடைநந்தகோன்வள்ளவாய்முளரி
வெள்ளிமண்டபத்துறைபவள்பெரியனுல்விளங்கும்
தெள்ளுதீம்புனற்றிருநதிகுடைந்தனன்மலர்தூஉய்ப்
பிள்ளைவெண்மதிபிறங்குசெஞ்சடையவற்பணிந்தான். ௩

அங்கண்மாநிலம்விளங்குறத்தோன்றலாலளியாள்
பொங்குபல்கலைதழைதலாற்புகழ்நிலாவுறலால்
திங்களாமெனத்திகழ்தருஉநந்தகோன்றன்னைக்
கங்குல்வாயொருகட்செவிவிழுங்கியதன்றே. ௪

துயிலுமெல்லையின்விழுங்குறுசுடுசினப்பகுவாய்
வெயின்மணிக்கொடுஞ்சுடிகைவாளரவினைவெள்ளை
அயிலெயிற்றுவாளரவினின்றுடியசெங்கட்
புயல்கருங்கடற்புவிபொதிதாளினெற்றினனால். ௫

கஞ்சநாண்மலர்க்கண்ணினன்கடற்புவிகவைஇய
அஞ்செஞ்சீறடிபடுதலினரவுருவகலா
மஞ்சுகொண்டொளிர்மின்னெனமணிமுடியிமைப்ப
விஞ்சைமன்னவனுதலுநோக்கினன்வியந்தான். ௬

ஆரைநீயெனவண்ணனின்வலம்படுதிகிரிப்
பேரினேனொருவிஞ்சையன்பெருந்தவமுனிவர்
ஏரிலாரெனவெள்ளினனகைத்தனனிதற்குச்
சார்கவெவ்வராவுருவெனவாங்கவர்சவித்தார். ௭

மன்னுவெஞ்சினவாலெயிற்றரவினதுருவம்
பின்னல்வெண்டிரைப்பெருகுமந்தாகினிபூத்த
பொன்னந்தாமரைப்பூங்கழல்படுதலிற்றீர்ந்தேன்
அன்னமாய்மறையறைந்துளாயெனத்தொழுதகன்றான். ௮

மருப்பிளம்பிறைவாலெயிற்றரவுநாண்கொளுவு
பொருப்புவில்லினற்புரஞ்சுடுமுக்கண்வானவனை
விருப்பினுற்றெழுதியாவரும்விழாக்கழிவழிநாள்
அருப்புமுல்லையம்புலத்திடையினிதுவந்தடைந்தார். ௯

## கலிவிருத்தம்.

அள்ளிருட்படலமள்ளிவிழுங்கும்
வெள்ளிவெண்ணிலவுவிண்ணெழுகாலைக்
கள்ளுண்வண்டுதுயில்காவகமேவி
வள்ளல்வேயிசைவடித்தனன்மன்னோ. ௧௦

செம்மல்வேயிசைசெவிப்படலோடும்
அம்மெலோதியரகங்களிகூர
மைம்முகிற்குமகிழ்மாமயில்போலக்
கொய்ம்மலர்ப்பொழில்குறித்தனர்சென்றார். ௧௧

அண்ணலம்பரிதிகண்டலர்கின்ற
வண்ணவாண்முளரிபோல்வதனங்கள்
வெண்ணிலாவினிடைவிட்டுவிளங்கக்
கண்ணனின்றநிலைகண்டுகளித்தார். ௧௨

மங்குல்கண்படுவனத்திடைமேய
கொங்குடைந்தொழுகுகோதையரெல்லாம்
அங்குடைந்திடவடைந்துதுரந்தான்
சங்கசூடனெனுமோர்தறுகண்ணன். ௧௩

மின்றிகழ்ந்தகருமேகநிறத்தோன்
சென்றெதிர்ந்துவிழிசென்றழல்கால
நின்றதீயவனிறத்தினிலெற்றிக்
கொன்றுசென்னிமணிகொண்டனன்மாதோ. ௧௪

மேயதோகையிளமென்மயிலன்ன
சாயலார்முலைதழீஇவிளையாடி
மாயன்வைகறையில்வண்டுளர்தண்டார்
ஆயர்பாடியிலடைந்தனன்மன்னோ. ௧௫

நிலம்புரக்குமுகினித்திலமென்ன
விலங்கிவில்லுமிழுமேனியினாற்கு
வலங்கொள்செங்கதிரின்மல்கிருணூறி
இலங்குசெக்கர்மணியீந்தனனன்றே. ௧௬

சங்கசூடனைக்கொன்றவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௪௬௫.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## கச-வது, ஸ்ரீ நாரதர்கஞ்சனோடுரைத்தவத்தியாயம்.

---

### எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

குரவெலாம்வெருவமுருகுகொப்புளித்துக்குழன்றிடைநெறித்தபூங்குழ [லார்
அரவெலாமறுகவயிலெயிற்றரவினுடியகூத்தனோடாடி
இரவெலாங்கதிர்வாணிலாக்குவித்தென்னவிடுமணற்குன்றமுங்காவும்
மருவுலாமுல்லைவிரிந்துமட்டுயிர்க்குமாதவிப்பந்தரும்பயின்றார். ௧

அரந்தினைப்படுபொ னரும்பிளங்கொங்கை யாய்ச்சியர்பகற்பொழுதெல்லாம், திருந்தெழில்பெருகி யலையெறிதிங்கட் டிருமுகஞ்சிறிதிடங்கோட்டி, விரும்பெழிற்செங்கை விரன்முளைப்பொதிந்தும் விடுத்துநல்வேயிசை வடிப்போன், கருங்கொடிப்புருவச் செயலும்வெண்ணகையுங் கருதினர்நெஞ்சகங் கனிவார். ௨

பழமறைக்கொழுந்துசெழுமலரவனும்பாசிழைபாகனுமருளக்
குழையிசைவடித்தல்கருங்குயில்கேட்டுக்களிக்குமேசுரும்புகண்படுமே
உழையுழைபரந்துநோக்குமேயென்னுவோடரித்தடங்கண்முத்துறைப்ப
எழுதுபொற்பாவையனையவரேக்சற்றிருத்தலாரெடுத்தனரிசைப்பார். ௩

நீணிறநெடியோனினநிரைமேய்த்துநீலயாற்றடைகரைநிவந்த
பானிலாச்சொரியும்படுமணலெக்கர்ப்பரப்பினின்றுமோர்காலைக்
கானிலங்கீறிவான்மிசையுயர்த்துக்கதிர்மணிமருப்பிடைநோக்கி
ஆனிளவேறுமடுசமர்க்கெழுந்தானசனியேறென்னவோரவுணன். ௪

தீக்கனன்றெழுகு செங்கண்வெள்ளேறு திருகுவெஞ் சினந்தலைக் கொண்டு, தாக்குவானடைதன் முருகவிழ்செய்ய தாமரைக்கண்ணினா னோக்கி, மாக்கடல்வேலி நெடுநிலப்பரப்போர் மரைமலரடியினுட் பொதிந்தோன், நூக்கிநூறடிமுன் சென்றுவீழ்த்தினனா னுதிமருப்பங்கைகொண்டடர்த்தே. ௫

விரிநிலங்கிழிய வீழ்ந்தெழுந்தழன்று விண்டொடு நெடுவரைகுலுங்க, உருமெனவுரறி யுடன்றுமேனடந்த வுருகெழுசெவ்விமால் விடையைச், சொரிபசுங்குருதி யாறலைத்தொழுகத் துளக்கில்கூர்ங் கோடுறப் பற்றி, அருமணிகடகக் கையினாற்சுற்றி நந்தியும்வெருக்கொள வறைந்தான். ௬

ஏற்றமருழந்த வேற்றுவாளவுண னிறந்துபாடெய்தலு முவந்து, போற்றிசைத்தமரர் புதுமதுத்துளிக்கும் பூமழைபொழிந்தன ரமுதம், ஊற்றிருந்தொழுகு பாடல்யாழ்முனிவ னூழிவெங்கனல்விழி யொழுகக், காற்றெடுத்தெறியுந் தழைசெவிப்புழைக்கைக் களிற்றுவெங் கஞ்சன்மாட்டடைந்தான். ௭

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மன்னநீயறிந்திலாயேமதிநுதலசோதையீன்ற
கன்னிநீயடர்த்தகன்னிகாரிருட்பிழம்புவாரிப்
பின்னிவிட்டன்னவைம்பாற்றேவகிபெற்றதோன்றல்
மின்னுநக்கொளிகால்கூர்வாள்விறல்கெழுகண்ணனன்றே. ௮

மற்றுணையொளித்தாரம்மறந்தனனின்னுமொன்று
கொற்றவகேட்டிவெள்ளிக்குன்றெனப்பணைத்ததிண்டோள்
விற்றிறலிராமனென்பான்வெள்வளையுரோகிணிப்பேர்ப்
பொற்றொடிவயிறுவாய்த்தபொங்கெழிற்புதல்வனாமால். ௯

உடைத்திளந்தேறல்பாயவூதுவண்டுழுதுதாது
மடுத்துணுமலங்கன்மாலைமார்பவாய்ப்பாடிமற்றுங்
கடுத்தனர்வளராநின்றவாசிளங்குமரர்கண்டாய்
விடுத்தவாளவுணராவிவீட்டினாரென்றுசொற்றான். ௧௦

அத்திறங்கேட்டலோடுமழலுகுசடைக்கண்சேப்ப
முத்தவெண்முறுவனூறமுரிவுறப்புருவம்வல்லே
மைத்துனன்றன்னைக்கொல்வான்வன்றிறற்கஞ்சன்சீறித்
தத்துவெங்குருதியொள்வாடடறீஇநடந்தானங்கே. ௧௧

மலைக்கும்வெண்கோட்டதாகிமலைமதம்பட்டாலன்ன
கொலைக்களிற்றுழவகொல்லல்கொல்லலீங்கிவனையென்னா
விலக்கியமகதிநல்யாழ்வித்தகன்கண்ணனோடவ்
வலப்படையவனைக்கொல்வானமைகவென்றேகினானால். ௧௨

தாதுகமழலைவண்டுதளையவிழ்த்திறங்குமந்தண்
போதுலாந்தெரியன்மாலைபுனைவசுதேவனோடு
தீதறுசிறப்புவாய்ந்தசெழுமறைக்கொழுந்தையீன்ற
மாதவக்கொழுந்துதன்னைவன்றளைப்படுத்தல்செய்தான். ௧௩

பூசுறுபரிதிபோலப்பொன்னணிந்திலகுமார்பன்
பாசிலைப்படலைமாலைப்பங்கயக்கண்ணனோடு
மாசறுதிங்கண்மேனிவள்ளலையடுகவென்னாக்
கேசியையழல்வெஞ்சீற்றங்கிளர்ந்தெழவேவினானால். ௧௪

இழைக்கவில்வேள்விமற்றீங்கியற்றுகமல்லர்சாலை
மழைக்கடாஞ்செருக்கித்துஞ்சுமணிநெடுங்கோட்டுநால்வாய்ப்
புழைக்கைவெங்களிற்றுச்சாலைபொன்னெடுவாயில்சேர்க்க
அழைக்கமற்பழுத்ததிண்டோளரசர்தங்குழுவையென்றான். ௧௫

மண்ணெழுவனையதோளான்மல்லர்தம்வதனநோக்கித்
துண்ணெனப்பொருதுநுங்கடோள்வலியொருங்குகாட்டி
வெண்மடற்கரியபோந்தைமீமிசையுயர்த்தோனோடும்
கண்ணனைப்படுத்திரென்னாக்கண்ணறக்கழறினானால். ௧௬

கூற்றுறழ்குருதிக்கோட்டுக்குஞ்சரப்பாகன்றன்னைச்
சீற்றவாளரசனோக்கிச்செஞ்சிலைவேள்விக்கெய்தும்
பாற்கடல்வண்ணனோடும்பசும்புயல்வண்ணன்றன்மேல்
காற்றெனக்களிறுதூண்டிக்காய்கெனப்பணித்தான்மாதோ. ௧௭

சீந்துதீமுகத்தவைவேற்றெவ்வடுதானைவேந்தன்
காந்திணிபுதல்வன்றன்னைக்கனன்றகட்கடையினோக்கிப்
பாந்தண்மேலாடினானைப்பாணிறவண்ணனோடு
கூந்தன்மான்றேரின்வல்லேகொணர்கெனக்குறித்தான்மன்னோ. ௧௮

அஃவிருளையுதறிவானமலக்கணுற்றிரியவார்த்துப்
புவிமுதுகுளுக்கப்பாய்ந்துபூந்துழாய்க்கொண்டன்முன்னர்க்
கவிகுளம்பெறியுந்தூளிகருங்கடறூர்ப்பமற்றாங்
கிவுளியாய்க்கேசியென்னுமெறுழ்வலியவுணனேற்றான். ௧௯

விழுங்குவான்போலச்சாலவிரிந்ததீவாயினூடு
பிழிந்துபேயாவியுண்டோன்பிறங்குபொற்றொடிக்கைநீட்டி
வழிந்தழகொழுகுசெங்கைவளர்த்தனன்வளர்ப்பவாகம்
கிழிந்துவாம்புரவியாயகேசிமாண்டுயிர்நீத்தானால். ௨0

பண்ணுறுமகதிநல்யாழ்ப்பழமறைமுனியாங்கெய்தி
அண்ணலங்களிநல்யானையடுதிறற்சஞ்சனுதி
நண்ணியோர்மாய்வதின்றுநாமினிக்காண்குமென்னக்
கண்ணனைப்பரவிநெஞ்சங்களிகொளவேகலுற்றான். ௨௧

ஸ்ரீநாரதர்கஞ்சனோடுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௪அ௬.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## ௬௫-வது, அக்குரூரன்வந்தவத்தியாயம்.

### கலிவிருத்தம்.

கள்வர்சிலராச்சிலர்கள்காக்குநர்களாகத்
துள்ளுமறியாச்சிலர்துளங்குபணிமாலை
வெள்ளருவிவெற்பின்விளையாடினர்விரிந்த
அள்ளிலையபைந்துளவணிந்தமுகிலனையர். ௧

உந்துதிரைநீருலகுமும்பருநடுங்கும்
வெந்திறன்மயன்புதல்வன்வேற்படைவியோமன்
அந்தளிரலங்கல்புனையாயர்மகனாகி
வந்துவிளையாடினன்வரைத்தலையிவர்ந்தே. ௨

காழகவுடைச்சிறியகள்வனெனநண்ணு
மேழகமெனக்குலவுமெல்லிணர்நறுந்தார்
வாழியெழின்மைந்தர்தமைவவ்வினனடந்தான்
தாழ்புயல்கிழித்துயர்தடங்கிரிமுழைஞ்சின். ௩

சொல்லியவடைந்ததுகுறிப்பினிலறிந்தான்
மல்லடுபுயத்தவனைமாய்த்துமணிவண்ணன்
கல்வளையகத்திளையர்கண்ணுறநடந்தான்
மெல்லமருண்மாலைவரமேதகுநிரைப்பின். ௪

கங்கைவளநாடுடையகாந்தினிபயந்தோன்
அங்கணிலமாதுபுணரண்ணலையழைப்பான்
பொங்குளைவயப்புரவிபூண்டதொருதேர்மேல்
செங்கதிரெழக்கடிதுசென்றனனெழுந்தான். ௫

சேணுலகில்வாழுமுயர்தேவருள்மாலும்
மாணெழிலுடைக்கமலமன்னவனையின்னே
காணலுறுமேநமதுகட்புலமுமென்று
யாணர்நறுமுல்லைநிலமெய்தினன்விழைந்தே. ௬

நலங்கிளருமாளியினடந்தவெழினம்பன்
இலங்கெழிலதாமரையொடேரெழில்கிளேக்கும்
வலம்புரிபொறித்தவடிவைப்பினெழில்காணுக்
கலந்தனன்மகிழ்ச்சியிருகண்மலர்குளிர்ப்ப. எ

மேதகுசிறப்புடையவிண்ணவர்பசும்பொன்
கோதைபுனைநீண்மகுடகோடிமிடைகின்ற
ஆதியிருசெங்கமலமன்னவடிவைப்பின்
தாதுகவிரிந்துகமழ்தாமமுடிதாழ்த்தான். அ

மீளிமையுடைக்கனசன்வெஞ்சமரடர்க்க
வாளரியுருப்புணருமல்லல்வரைமார்பன்
தாளகமலத்தழகுதந்தவிருபொற்றூட்
டூளியில்விழுந்தொழுதெழுங்களிதுளங்கும். கூ

வேறு.

இத்திறமகிழ்சிறந்தெறிக்குஞ்செங்கதிர்
அத்தமால்வரைசெலவாவின்பைத்தலைக்
கொத்தின்மேலாடியகுறிசில்சேவடி
வைத்தொளிர்நீணெறிவல்லையேகினன். க0

துளங்கொளிநீலநுண்டுகிலுடுத்தநல்
இளங்களிறன்னவவ்விராமனேடுற
விளங்குசெம்பொற்றுகின்மிளிரச்சார்த்திய
களங்கனிவண்ணனைக்கண்டிறைஞ்சினன். கக

அல்லியந்தாமரையனையசேவடி
எல்லையிலுவகையினிறைஞ்சுவான்றனை
முல்லையந்தாரணிமுழவுத்தோளினர்
புல்லினருடன்கொடுபோயினாரரோ. க௨

விருந்தினிதூட்டினர்விரித்துவண்டுதா
தருந்துதார்மாலையுமருவிமாலைதாழ்
திருந்துதண்டமிழ்வரைத்தெய்வச்சாந்தமும்
நரந்தமுநல்கினர்நன்றுவப்பவே. க௩

கனைகழற்காலவேற்கஞ்சன்வாழ்தலால்
இனிதிருந்தாய்கொலென்றெங்ஙன்கூறுகேன்
வினையினேனெனச்சிலவிளம்பினுன்புது
நனைவிரிபூந்தொடைநந்தகோபனே. கச

வெந்திறலாழியான்வேறுகொண்டிருந்
தெந்தையுமாயுமற்றென்பொருட்டினல்
நொந்ததையல்லதுநுவல்வதுண்டுகொல்
வந்ததென்கூறெனவழங்கினனரோ. க௫

நல்லிசைநாரதனவின்றமாற்றமும்
சொல்சினமன்னவன்கொற்றவேந்தனை
வல்லியிற்படுத்ததும்வந்தவண்ணமும்
சொல்லினன்மல்லடுதோளினாற்கரோ. ௧௬

அரசுவெஞ்சிலைமகமாற்றுகின்றனன்
வருகவென்றழைத்தனன்வல்லைசேறுமென்
றுரைசெய்தானந்தனுக்கோங்குகற்பகத்
தருமுதல்பிடுங்குகைத்தடக்கைமாயனே. ௧௭

வண்டுசூழ்கானகநாடன்வல்லையே
தெண்டிரையமுதினைச்சிரிக்குந்தீஞ்சுவை
வெண்டயிர்நறுநெய்பால்விரைசெலப்பெரும்
பண்டியிற்பாப்பினன்படர்தன்மேயினான். ௧௮

மழகதிரெழுதலுமழலைவண்டுணப்
பொழிமதுக்கமழ்மலர்ப்பூவைகொண்கனை
எழுகவென்றிசைத்தனனிளநிலாச்சொரி
குழைமுகக்காந்திணிகுமாரனென்பவே. ௧௯

செய்யபொற்கொடிஞ்சியந்தேரின்மீமிசை
ஐயதாரண்ணலையழைப்பத்தோன்றினன்
வெய்யவனளியிலன்வெங்கணனென
மையகட்கோவியர்மறுகினாரோ. ௨௦

வளைக்கையீர்வருந்தன்மின்வழியுமும்மதக்
களிற்றடுகஞ்சனைக்கண்டுமீடுமென்
றளிக்குலமாற்றுதாரண்ணன்மாதரைத்
தெளித்தனன்கதிர்மணித்தேர்சென்றேறினான். ௨௧

நாலைமாநிலம்புகழ்நந்தகோபனும்
எரிமணிக்குன்றிரண்டெனவேந்துதோள்
ஒருகுழையொருவனுமுடனிவர்ந்தனர்
விரைசெலப்பரிபுணர்வியன்பொற்றேரரோ. ௨௨

மவ்வலங்கருங்குழன்மாதர்நெஞ்சமும்
நவ்விமென்னோக்கமுந்தொடரநன்பகல்
பவ்வவெண்டிரைத்துயில்பச்சைமாமுகில்
கவ்வைநீர்யமுனையங்கரைசென்றெய்தினான். ௨௩

முடம்படுமுள்ளிலைமுடங்கல்மூரிசால்
கடம்படுகரிமருப்பீன்றுகட்கமழ்
தடந்துறையமுனையந்தண்ணந்தீம்புனல்
படிந்தனன்காந்தினிபயந்ததோன்றலே. ௨௪

தூம்புடையெயிற்றவிர்சுடிகைப்பாழிவாய்ப்
பாம்பின்வெம்பஃறலைபனிப்பவாடிநின்
றாம்பலந்தீங்குழலிசைக்குமண்ணலைப்
பூம்புனல்குடைகுவான்புனலுட்கண்டனன். ௨௫

ஒழுகுதீம்புனலிடையுற்றதென்னெனுச்
செழுமணிக்கொடிஞ்சியந்தேரைநோக்குமால்
எழில்கனிந்தொழுகியவெழிலிவண்ணனேர்
பொழிபொலந்தேரினும்பொலியக்காணுமால். ௨௬

நீரிடைக்காண்டல்போனிலவுபொற்கொடித்
தேர்மிசையிருந்தனன்செல்வனுமெனு
ஓர்தருமுளத்தினனெழுகுபூம்புனல்
வேரியந்தாரினன்மீட்டுமூழ்கினன். ௨எ

கறங்குதண்புனலிடைக்கமலக்கண்ணனை
அறம்புரைவெண்ணிறத்தரவப்பாயன்மேல்
உறங்குவானுகநெஞ்சுவந்துகண்டனன்
இறைஞ்சினன்கைம்முகிழ்த்தேத்தினனரோ. ௨அ

எத்தனுமறைத்தனனெடுத்தவவ்வுருக்
கூத்தினர்கொண்டதங்கோலயாற்றல்போல்
பூத்தளித்தேழிரும்பொழிலுமூழியில்
தீத்திடுதாமரைச்செங்கண்மாயனே. ௨௯

மதிநுதற்காந்தினிமகன்வியப்பினன்
விதிர்விதிர்ப்பெய்தியமெய்யனெய்தலும்
புதுவதுகண்டனைபோலுநீயெனு
முதல்வனின்னகைநிலாமுகிழ்த்துக்கூறினன். ௩0

பொன்னவந்தாமரைப்பூம்போகுட்டுறை
அன்னமென்னடைமயிலன்னசாயலாள்
மன்னவநிலமகண்மணுளநின்னுழை
என்னகாண்பரிதெனவேத்தினனரோ. ௩௧

கொழுந்திறன்மடங்கலங்குருளைகுன்றினின்
றிழிந்தெனத்தேரினின்றிழிந்துதண்ணருப்
பொழிந்தெழுந்துளவினன்போதிநீயெனு
வழங்கினன்காந்தினிமைந்தன்றன்னையே. ௩௨

உளமலியுவகையனுயர்பொற்றேர்விடத்
தளையவிழ்தாமரைத்தலைவிமன்னவன்
வளமலிமதுரைமாநகர்மருங்கினேர்
இளமரக்காவுசென்றெய்தினனரோ. ௩௩

கலிநிலைத்துறை.

தண்ணந்தாமரைக்கண்ணினன்சேவடிதாழ்ந்து
நண்ணல்வேண்டுமென்மனையெனநண்ணுதுமெனலும்
பண்ணமைந்ததேர்கடாயினன்படர்ந்துமன்னவற்குக்
கண்ணனுற்றமைகூறினன்காந்தினிபுதல்வன். ௩௪

அக்குரூரன்வந்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௫௨0.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௧௬-வது, மதுரைகண்டவத்தியாயம்.

---

கலிநிலைத்துறை.

வெதிரிசைத்தகார்வண்ணனும்விரியல்வெண்டோட்டுப்
புதுநறுப்பொழிபோந்தைமீமிசையுயர்த்தவனும்
முதிருங்காதலர்தம்மொடுமுழவுகண்டுயிலா
மதுரைகாணியவெழுந்தனர்மாலைவந்திறுப்ப. ௧

தேன்றதும்புதார்த்தேவர்திருக்கைமற்றுலகம்
மூன்றுமுந்தியந்தடத்தலர்முளரியம்பொகுட்டின்
ஈன்றுகாத்தழியிமையவர்தலைவன்வீற்றிருப்பத்
தோன்றுமந்நகர்க்குவமையொன்றெங்ஙனஞ்சொல்கேம். ௨

படுதிரைத்திருப்பாற்கடல்போலவெம்மருங்கும்
அடைதல்வேண்டுமென்றான்முடிக்கம்புனலளித்த
மடலவிழ்ந்ததாமரையடிவணங்குவானீலக்
கடல்கிடந்தெனக்கிடந்ததுகடிமதிட்கிடங்கு. ௩

உறைபிலிற்றியவுருவமாமுகிலியைந்ததனால்
பொறிமணத்தலாற்பொலமுகடுடையநீண்டதனால்
கரையணற்கடுங்கட்செவியணையினிற்றுயின்ற
இறையெனத்திகழ்வுற்றதாலெழின்மணிப்புரிசை. ௪

வடித்தபைந்துழாய்வனைமுகில்சேவடிக்கமலம்
உடைத்தவண்டநீள்முகட்டின்வீழ்கங்கையினொளிர்வ
விடத்தபாழிவாய்வெவ்வராவுண்டுமிழ்திங்கள்
துடைத்துமாளிகைச்சூளிகைதொடக்குவெண்கொடிகள். ௫

ஒளிரும்வெண்மருப்பொசிப்பவனெதிர்ந்தனனென்றுப்
பிளிறியஞ்சினபெயர்வபோன்றனவெழில்பிறங்கி
அளறெழக்கடிமறுகெலாமழிமதம்பொழியும்
களிறுசௌவையிற்காழ்வரைநிற்கிலசழிவ. ௬

ஒண்ணிறப்பரியுருவெடுத்தவனுடல்கீண்ட
அண்ணலுற்றனனெனவெரீஇயலம்வாலுற்று
மண்ணினிற்கிலவானிடைப்பறப்பனபோலும்
பண்ணமைந்திடுபல்லுளைப்பசும்பரிபாய்வ. ௭

செழுந்தடங்கிரிபுரையணித்தேர்கிழித்தோடக்
கிழிந்துபொன்னிலங்கிளைத்திருவிசும்பகமறைய
எழுந்ததூளியாங்கேழுலகளிப்பவனெய்தப்
பொழிந்ததண்ணறும்பூந்துகளாமெனப்பொலிந்த. ௮

பைந்தண்கோதையர்புலவியிற்பரிந்தவெண்முத்தம்
மந்தரத்துயர்மாடநீண்மறுகினிற்றிகழ்வ
அந்தளிர்ப்பனிமுல்லையந்தாரினானடையச்
சிந்துவெண்பொரிசிதர்ந்தனகிடந்தனசிறந்த. ௯

அளப்பில்வெஞ்சுடர்மணிதிகழாவணம்புள்வாய்
பிளக்கும்வன்றிறற்பெய்ம்மதக்களிறனானெய்தத்
துளக்கமில்லெனத்தூங்கிருட்குறும்பெறிந்தோட்டும்
விளக்கெறிந்தனவாமெனவிளங்கொலிபடைத்த. ௧௦

கூந்தலம்பிடிக்குலமெனக்குலவியமடவார்
சாந்தளாவியதடமுலையெதிரெதிர்தயங்கல்
பாந்தளங்கதிர்ப்பணாடவிப்பரப்பினின்றாடும்
ஏந்தலெய்துதற்கேந்தியமணிக்குடநிகர்த்த. ௧௧

பின்னல்வெண்டிரைப்பிறந்ததண்முத்தினாற்குயின்ற
கன்னிமாடநின்றெழுதருபனிநிலாக்கற்றை
பொன்னந்தாமரைப்பொகுட்டுறைசெய்யபொற்கொழுந்தின்
மன்னவற்கெதிர்வைத்தவெண்கவரிணையமானும். ௧௨

மாலைமுற்றியவணரிருங்கூந்தலார்துணைக்கண்
காலதர்ப்புறத்தொளிர்வனகனைபெயல்காப்பச்
சோலைமுற்றியவரையெடுத்தாற்கொளிசொரிநல்
நீலமொப்பவற்கேந்தியவிணைக்கயனிகர்த்த. ௧௩

கோடுடைப்பனிமதிவடிம்பிடறுபொற்குடுமி
மாடமீண்டியவரிமுலைமகளிராற்சிறத்தல்
ஆடலந்தனிநேமியானடைந்தனனென்று
ஏடவிழ்ந்தபல்கோதையாற்புனைந்தவையேய்க்கும். ௧௪

திருந்தொளிப்பசுங்கொடிக்காங்கோல்பொரச்சிவப்ப
முருந்தொளித்திடமுகிழ்த்தவெண்முறுவலார்பாடல்
பரந்தளிக்குலம்பாடுபூந்துளவினான்றனக்கு
விருந்தளிப்பதுபோலுமால்விளைசுவையமிழ்தம். ௧௫

இன்னமாநகர்நோக்கியவிறைவன்விண்ணெழுந்த
பொன்னங்கொம்பெனப்பொழிகமஞ்சூற்புயல்கிழித்த
மின்னெனக்குழீஇமென்னகைமாதரார்தனது
கன்னவின்றதோட்பணைப்பெழினோக்கினர்களிப்ப. ௧௬

மழைமதம்பொழிமதக்களிறனையவம்மாலோன்
நிழலும்வெண்மதிநெற்றிதோய்மாடநீண்மறுகில்
அழலும்வேற்படைக்கஞ்சனதந்துகின்மாசு
கழுவுவான்றனைக்கண்டனன்கலைதருகென்றான். ௧௭

பொன்னந்தூசணிபொருவிலோன்புகன்றமைகேட்டு
மன்னுகானினுமலையினும்வாழ்பவருடுப்ப
தின்னபூந்துகிலாங்கொலென்றியம்பலுமவன்றிண்
சென்னிசிந்தினன்செம்முகத்திகிரியஞ்செல்வன். ௧௮

கையினாலவன்கருந்தலைதுமித்தபின்கழுமச்
செய்யதாமரைகருமுகில்பூத்தெனத்திகழ்வோன்
ஐயபூந்துகிலொன்றுடீஇயந்துகிலனைத்தும்
வெய்யதோழருக்குதவினன்விடையெனநடந்தான். ௧௯

ஊசிநுண்வினைகுயில்பவனொருவன்வந்தெய்திப்
பாசிலைத்துழாய்ப்படலையம்பரம்பொருளவற்குக்
கோசிகப்பொலம்பட்டொடுகோலம்வீற்றிருப்பக்
காசில்பொன்றெளித்தெழுதுபூங்கச்சினிதணிந்தான். ௨௰

அந்நுண்டுசுநல்லணிபெறவணிந்தவன்றனக்குப்
பின்னல்வெண்டிரைக்கருங்கடல்வயிற்றிடைப்பிறந்து
பொன்னந்தாமரைப்பூம்பொகுட்டுறைந்தபொற்கொழுந்து
மன்னுமார்பினன்றன்னுருவழங்கினன்மாதோ. ௨௧

அலர்ந்தகாவியுமாக்ககிதழ்க்கமலமுமொருபால்
கலந்தவாமெனக்கண்கவர்கட்டெழில்படைத்த
இலங்கலாழியானிரும்பொழில்வரையெலாங்கமழ
மலர்ந்தபன்மலர்தொடுப்பவன்மருங்குசென்றடைந்தான். ௨௨

எண்டிசைக்களிற்றீர்ங்கவுள்படிந்தவஞ்சிறகர்
வண்டுமொய்த்தெழமருப்பாந்துலாயபூந்தெரியல்
கொண்டலிற்சிலைகுலாயதோர்கோலம்வீற்றிருப்பப்
புண்டரீகக்கட்புராதனற்காங்கவன்புனைந்தான். ௨௩

விழைவதென்னெனவெந்திறல்பழுத்தகூராழி
உழவநின்கழற்பொதுமைநீங்குருகுபேரன்பு
தழையநல்கெனத்தாமரைக்கண்ணருள்பெருகிப்
பொழியுங்கார்முகில்பூந்தொடையளித்தவற்களித்தான். ௨௪

## கலிவிருத்தம்.

எண்ணரியயோசனையிருங்கடிகமழ்ந்து
விண்ணும்விழையப்படும்விழுக்கலவையேந்தி
வண்ணமகள்கூனியெதிர்வந்துமழைவண்ணத்
தண்ணலையணிந்தனளகங்களிசிறந்தே. ௨௫

சேவடிசிலம்படிமிதிப்பவிறைசெங்கை
பாவையனையாளணரிபற்றினனெடுப்ப
மூவகையகூனொருவிமூவுலகின்மாதர்
மேவரியசெவ்வியின்விளங்கினள்விழைந்தே. ௨௬

நனைத்துணருநானமுநறும்புகையும்விம்மிக்
கனைத்துவரிவண்டிமிர்கருங்குழன்மடந்தை
புனைத்துளவினனணிபொலந்துகில்பிடித்தென்
மனைக்குவருகென்றுசிலமாற்றமுரைசெய்தாள். ௨௭

சிந்தரிமழைக்கணவள்சின்மழலைகேளா
உந்துதிரைவேலியுலகுண்டமணிவண்ணன்
வந்தவினைமுற்றியபின்வந்தருடுமென்னு
அந்தரளவாணகையரும்பினனகன்றான். ௨௮

இடங்கர்கதுவத்தளரிளம்பிறைமருப்பின்
கடங்கலுழ்கருங்களிறுகாத்தபுயல்வல்வில்
கிடந்ததெவணென்றுரைகிளந்துவிடையென்னத்
தடஞ்சிலைமகங்குலவுசாலையினடைந்தான். ௨௯

வரைக்குலம்வெருக்கொளவளர்ந்ததிணிதோளால்
சிரித்தெயிலெரித்தவிறைசெஞ்சிலையிறுத்தான்
கரைக்குமதவேழமொர்கரும்பினைவளைத்து
முரித்தெனவெடுத்துநெடுமூரிவிலிறுத்தான். ௩௦

பொற்றகமலத்தழகுபூத்ததொருகையில்
இற்றவரிவிற்றுணியெடுத்துலகளிப்பான்
விற்றொழில்பழுத்தமர்விளைப்பவவணோரும்
கொற்றமறவீரருயிர்கூற்றுணவளித்தான். ௩௧

பைத்தவரவத்துவளர்பச்சைமுகிலன்னான்
அத்தவரைவெங்கதிரடைந்திடலுமந்தண்
மூத்தெனமுகிழ்ந்துமென்முறுக்கவிழுமுல்லைக்
கொத்தணியுநந்தனுறைகொய்பொழிலடைந்தான். ௩௨

ஆலுமழல்வெவ்விடவராவரசுநீத்தோர்
சோலைகிழன்மேயபுயரேழருடன்மேவி
வேலையமுதிற்சுவைவிளைந்தெழுகொழுந்தீம்
பாலிவிரவுமின்னடிசில்பாற்படவயின்றான். ௩௩

மதுரைகண்டவத்தியாயம் முற்றிற்று:
ஆக திருவிருத்தம் ௩௩௫.
ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௩௭-வது, கஞ்சனைக்கொன்றவத்தியாயம்.

---

### கலிநிலைத்துறை.

பூத்தபல்லிரும்பொழிலெலாம்விழியருள்பெருகிக்
காத்தளிப்பவெங்கட்செவித்துயிலொரீஇயரவின்
கூத்துவந்தவன்கொடுஞ்சிலைமுரித்ததுகேளா
நீத்தனன்றுயில்கஞ்சனும்புழுங்கினனெஞ்சம். ௧

கல்லென்வெண்டிரைக்கருங்கடன்முகட்டிருள்பருகி
எல்லெழுந்துறவினமலர்ப்பள்ளிநின்றெழுந்து
பல்லியத்திரளதிர்குறப்பால்வளையலற
மல்லர்சாலைசென்றடைந்தனன்மானவேற்கஞ்சன். ௨

கதிர்நிலாப்பொழிகடவுள்வெண்கவிகைமீக்கவிப்ப
எதிர்நிலாப்பொழியெயிற்றினேரேந்திணைக்கவரி
பொதியவிழ்ந்துகாலுயிர்ப்பநீள்பொன்னெயிலுடுத்த
மதுரைமன்னவன்மஞ்சமீமிசையிவர்ந்தனனால். ௩

கட்டமைந்தவார்கழலினர்களிச்சுரும்பரற்ற
விட்டலர்ந்தபூந்தாரினர்வெண்ணிலாவிரியும்
வட்டவெண்குடையாதவர்மற்றெழில்காண்பான்
இட்டபொற்றவிசிவர்ந்தரியேறெனவிருந்தார். ௪

மழைக்கருங்கணார்வளரிளவனமுலைக்கோடு
கிழிப்பமென்முகைகிழிந்துபச்சிளநறுக்கலுழி
கொழித்தபைந்தொடைகுலவுதோட்கொடுந்திறற்கஞ்சன்
அழைப்பநந்தர்கோனடைந்துவேத்தவைசிறந்தனனால். ௫

அலங்குசெந்துவராடையராடசப்பசும்பொன்
விலங்கறன்றொடுவெஞ்சமர்விளைத்திடவேட்ட
உலங்கொடோளினருறுவலிதழைந்துமற்பூத்து
மலர்ந்தமார்பினர்மல்லர்வந்தீண்டினர்மாதோ. ௬

வேறு.

வென்றிமற்பறைகறங்கலும்விளங்குவெயில்சூழ்
குன்றெனக்குலவுமாடமறுகிற்குளிர்துழாய்
மன்றலங்தெரியன்மார்பன்வளேமேனியனுடு
நன்றுவந்துமழவேறெனநடந்தனனரோ. ௯

கஞ்சநாண்மலரணங்குபுணர்கண்ணனுறலும்
பிஞ்சுநாண்மதிபிறங்குநுதன்மாதருயர்வான்
நெஞ்சுபோழுநெடுமாளிகைநிலங்கடொறுநீள்
மஞ்சுகண்டுமகிழ்மஞ்ஞையெனமொய்த்தனர்களால். ௧0

வண்டுசூழ்தருமணிக்குவளேவண்ணன்வரலும்
கண்டுகட்குவளேமாமலர்களிப்பநிலவுத்
துண்டமன்னநுதன்மாதர்சிலர்சூழுமுகைவாய்
விண்டபன்மலர்செய்மாலேயின்விளங்கினர்களால். ௧௧

அம்பொனுழிவளேயங்கைதிகழண்ணல்புகலும்
செம்பொனுழிவளேசென்றுழியமின்பொழிதரும்
பைம்பொன்வார்குழைதுளங்கவளிபாய்தருமலர்க்
கொம்பினின்றுசிலகோதையர்குழைந்தனர்களால். ௧௨

ஆவியாயவனடைந்திடலுமாவிமகிழா
மேவியன்பினுடுபின்படரமேதகுகருங்
காவிநாண்மலர்கடந்தவிழிமாதர்சிலர்பொன்
பாவைபோலியபரந்துதவகின்றனர்களால். ௧௩

எல்விளங்குவளேயேழையரிரிந்தகையராய்ச்
செல்லுறங்குநெடுமாடமறுகிற்செறியவோர்
நல்லிளங்களிறுபோன்மெனநடத்தல்புரியா
மல்லர்சாலேயயன்மாதவனடைந்தனனரோ. ௧௪

வேறு.

ஏறுபோனடந்தேகுழியிளங்களியானை
மாறுவந்தெதிர்நிற்றலுமாயவனேக்கி
ஆறகன்றிடவடுகளிறுய்த்திமற்றன்றேல்
கோறுநாமெனக்குஞ்சரப்பாகொடுகுறித்தான். ௧௫

மாற்றமன்னதுகேட்டலும்வயங்குவான்முறுவல்
தோற்றவல்லமூற்சுடுசினங்கதுவிவெம்பாகன்
காற்றெனத்தெறுகனலெனக்கனேகடலென்னக்
கூற்றமென்னமேற்றூண்டினன்குவலயாபீடம். ௧௬

களிக்கும்வண்டுணக்கடாந்திறந்தொழுகுபோர்க்களிறு
வளைக்குங்கைப்படுமழைமுகின்மின்னெனமறியா
ஒளிக்குஞ்சென்றுரற்காலிடையொருப்படுநெஞ்சத்
தொளைக்கைமால்கரியழைப்பமுன்தோன்றியதோன்றல். ௧௫

மஞ்செனக்குலாய்வளைத்திரும்பனைக்கையாற்றொடராக்
கஞ்சநாண்மலர்க்கண்ணன்வால்பற்றிநின்றிருபத்
தஞ்சுவிற்கிடைவாங்கிநின்றழிமதஞ்செருக்கித்
துஞ்சுறுக்கரிசுழல்வுறவொல்லையிற்சுற்றும். ௧௬

மும்மைசாலுலகளித்தகார்முகிலெதிர்தோன்றிச்
செம்மைவாலொளிசிந்துபொன்னோடைசூழ்நுதலில்
கொம்மைகோட்டிடுங்கோக்களிறழன்றுமேனடப்ப
வெம்மைகூர்விளையாட்டினனோடினன்வீழும். ௧௭

குளிறுதெண்டிரைமேய்ந்தகார்க்குலமெலாமயங்கப்
பிளிறுவெங்குரற்பிணர்படுபணைநெடுந்தடக்கைக்
களிறுகட்கடைகனலுகக்கவிழ்ந்துமேற்குத்த
ஒளிறுவெண்பிறைமருட்டுவார்மருப்பிடையொளிக்கும். ௧௮

ஏடவிழ்ந்தபூந்துழாய்முகிலித்திறன்களிற்றோ
டாடிமண்மிசைவீழ்த்தினனழிபெருங்குருதி
யோடுகொண்டவம்மும்மதக்கலுழியிற்பெருகி
ஓடவங்கையாலொளிறுவெண்மணிமருப்பொசித்தான். ௧௯

பகடுதூண்டியபத்திரன்முதலியோர்கெடுவான்
முகடடைந்திடமுனையுபுவெந்திறற்கஞ்சன்
அகடுதீயெழவேந்துகோடையசீறடியால்
சகடமாய்த்தவன்றடக்கைவெண்சங்குகாட்டியதால். ௨௦

அடங்கருந்திறற்கனகனதநுசமங்கடப்ப
மடங்கலாயவன்மாலைவெள்ளருவியிற்பெருகக்
கடங்கவிழ்க்கும்வெங்காடமாக்களிற்றுவெண்கோடு
விடுங்குகொற்றத்தும்பெருந்திறன்மடங்கல்போன்றனனால். ௨௧

பாடல்சான்றபொற்பாரிசாதத்தைவேரகழும்
ஆடன்மேம்படுமருமறையுருக்கொள்புட்பாகன்
பீடுதாங்கியநடையினாலல்லதுபிறங்கு
கோடுதாங்கியுநிகர்த்தனன்மழைமதக்குன்றம். ௨௨

செருவிருப்பினாற்செழுங்கவினோங்குகால்படைத்து
வருபொருப்புறழ்களிற்றுவெண்மதிக்கொழுந்தன்ன
ஒருமருப்பொசித்தேந்தினனுலகெலாமோப்பும்
இருபொருப்பெனவேந்தெழில்வாய்ந்ததோளிராமன். ௨௩

சோரிநுண்டுளிசொரிமதத் துளியொடுதுவலைக்
காரிலங்கியகண்கவர்மேனியிற்கவின
எர்துளும்பியவிலங்கொளிமதிமுகத்தரும்பு
வேர்தயங்குறவெண்மருப்பேந்தினன்விரைந்தான். ௨௪

குடுமிமால்வரைக்குலனெனப்பணைத்ததோண்மல்லர்க்
கிடியெனப்பொருகஞ்சனுக்கெய்துகூற்றென்ன
மடலவிழ்ந்துதேன்மழைபொழிமன்றலந்துளவப்
படலைமாமுகில்படர்ந்தனனவைக்களப்பரப்பின். ௨௫

கொண்டலாமெனப்பிளிறுவெங்கொலைக்களிறட்டு
மண்டுவெஞ்சினமடங்கலங்குருளையின்வயங்கும்
புண்டரீகக்கட்பொருவிலான்செவ்விபார்புரப்போர்
கண்டுகண்டுகண்குளிர்ந்தனர்நெஞ்சகங்களித்தார். ௨௬

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கொங்குடைந்தொழுகுகோதைகுளிர்மதுத்துவலைதூற்றப்
பங்கயக்காடுபூத்தபசும்புயலென்னநின்றோன்
அங்கதிர்க்குழவித்திங்களவிர்நுதற்புயலைங்கூந்தற்
செங்கயலன்னவுண்கட்டேவகிமைந்தனென்பார். ௨௭

கருவரையுழுவையன்னான்காலவேற்கஞ்சற்கஞ்சம்
மருவிரிதெரியன்மாலைவாள்வசுதேவனுய்ய
நாலைமாஞாலமேத்துநந்தகோனன்புபூத்துப்
புரியவிழ்நறியமுல்லைப்புலத்தினில்வளர்ந்தானென்பார். ௨அ

கடுஞ்சிலைவேள்விநென்னற்காணியபுகுந்துவென்றிக்
கொடுஞ்சிலைமுரியவாங்குகுங்குமக்குவவுத்தோளான்
நெடுஞ்சிலைவானம்பெய்தநீள்பெயன்மாரிகாப்பத்
தடஞ்சிலைபிடுங்கிச்செங்கைதாங்கியகுரிசிலென்பார். ௨௯

பொழிகதிர்மணியினீலப்பூஞ்சிறைவரிவண்டாட
மழைமதவருவிதூற்றுமத்தமாநாகஞ்செற்றோன்
நிழன்மணிச்சுடிகையுச்சிநெரியவாய்க்குருதிகால
அழல்விடம்பொழியுநாகத்தாடினான்போலுமென்பார். ௩0

பாடல்சாலோடைநெற்றிப்பாவடிச்சிறுகண்யானைப்
பீடுசால்கோடுதோளிற்பிறழ்தரவைத்துநின்றோன்
தோடுவாய்வைத்துவண்டுதுதையுமென்முல்லைசூடிக்
கோடுவாய்வைத்துமுல்லைக்குழலிசைகுறித்தோனென்பார். ௩க

வெற்பகம்வெறுத்ததோகைவிளங்குமஞ்சாயலாரும்
மற்பகமலர்ந்ததிண்டோண்மைந்தருமகிழ்ச்சிகூர்ந்து
கற்பகங்கொணர்ந்தான்செவ்விகண்களாற்பருகுவார்போல்
அற்பகந்தழையநோக்கியாடமராங்குமொய்த்தார். ௩௨

### கலிநிலைத்துறை.

தளையவிழ்ந்ததார்க்கண்ணனையடைந்துசாணூரன்
களிமுகக்கடாக்களிற்றுவேற்காவலன்காண
விளையுமல்லமர்விளைக்குதும்யாமெனவிளம்ப
இளையமெங்ஙனநின்னொடுபொருதுமென்றிசைத்தான். ௩௩

ஓடைசூழ்நுதலொருபதினாயிரங்களிற்றுப்
பீடுசால்வலிபெற்றதோர்பெரும்பணைத்தடக்கை
ஆடல்யானையினணிமருப்பொசித்தனைநின்போல்
ஏடுலாவுதாரிளையர்மற்றுளர்கொலிவ்வுலகின். ௩௪

வருதிவல்லைநீவருதிநின்மற்றொழில்விளங்கப்
பொருதியாலெனப்பொருப்புறழ்தோளினான்புகலக்
குருதிதோய்பிறைக்கோடடிபிடுங்கியகொற்றப்
பரிதிமார்பினனேற்றனன்வேந்தளம்பனிப்ப. ௩௫

காரிடித்தெனக்கண்ணனோடெதிர்ந்தசாணூரன்
போர்விளைத்தலும்பொருசினத்தலாயுதன்றன்னோ
டாரமர்த்தொழிறொடங்கினனுடன்மற்பழுத்து
மூரிவெற்பெனப்பணைத்ததோண்முட்டிகண்முட்டி. ௩௬

தாளிற்றாள்பொரத்தலையொடுதலைபொரவுலங்கொள்
தோளிற்றோள்பொரத்துன்னியும்பின்னியுஞ்சுழன்றும்
வாளுடைத்திறன்மன்னவர்மணிமுடிதுளக்க
ஆளிமொய்ம்பினராடமர்விளைத்தனரன்றே. ௩௭

இலங்குபூணெழிலின்னிளங்குமரர்மேலமர்க்கு
விலங்கலன்னவெம்மல்லரைவிடுத்தனர்நோக்கல்
அலங்கல்வெண்குடைமன்னவர்க்கறங்கொன்மற்றென்னா
நிலந்தளர்ந்துழிநெடியவன்வீழ்த்தினனிலத்தின். ௩௮

தொடித்தடக்கையாற்றுழாய்முகிலெடுத்திருநிலத்தில்
அடிப்பமாய்ந்தனனருவரைபொருவுசாணூரன்
இடித்தகாருருமேறெனவெறுழ்வலியிராமன்
முடிப்பவெந்திரன்முட்டிகனாருயிர்முடிந்தான். ௩௯

தத்திவீழ்ந்தளிதவழ்ந்ததார்மாயவனவனி
பொத்துதாளினாற்சலனொடுசவுசலன்பொன்ற
முத்தெனத்திகழுருவினன்முழுவலிக்கரத்தால்
குத்தமாய்ந்தனன்குன்றெனப்பணைத்ததோட்கூடன். ௪௦

ஒளித்துமல்லர்மற்றேனையோருழையுழையொதுங்கத்
துளித்தகார்முகிலன்னவன்றொழாடாட
வெளியிற்றிளம்பனைவெருட்டியவிறல்செழுதடக்கைக்
களிற்றுமன்னவருவந்தனர்சிவந்தனன்கஞ்சன். ௪௧

பூட்டுமின்றளைநந்தனைப்புதல்வரைவல்லே
ஒட்டுமின்மகிழுக்கிரசேனனோடொருங்கே
வீட்டுமின்வசுதேவனையென்றுவாய்வெம்பித்
தீட்டுமின்னெனத்திகழ்ந்தவேற்கஞ்சனுங்குரைத்தான். ௪௨

மதுக்கமழ்ந்தமென்மழலைவாய்வண்டினம்பாய்ந்து
மிதிக்கவாய்நெகிழ்வேரியந்துழாய்முகினோக்கிக்
கதக்கடாக்களிறன்னபோர்க்கஞ்சன்மெல்லணைதாய்க்
குதித்தனன்பொருசினத்திளங்கோளரிகடுப்ப. ௪௩

பிஞ்சுநாண்மதிதவழ்தரப்பிறங்குதண்டுளிவான்
நெஞ்சுபோழ்ந்துயர்நெடுநிலைத்தவளநீண்மாட
மஞ்சநின்றெழாவாளொடுகேடகந்தாங்கிக்
கஞ்சனெஞ்சொடுகட்கடைகனலுகக்கனன்றான். ௪௪

மல்லலைத்தபோர்மாயவன்வளைத்தனன்றொடரக்
கல்லெனத்திரண்டேந்துதோட்கஞ்சன்வெஞ்சினத்தன்
வில்லிலங்குபூண்பிறழ்தரவென்றிவாண்மிளிரத்
தொல்விசும்பிடைச்சுலாவுறுபாறெனச்சுழன்றான். ௪௫

வெவ்வராவினைவிரிசிறைப்பசியபுள்ளரசு
வௌவியாங்கணிமலர்த்தொடைவண்டெழுந்தார்ப்பத்
தெவ்வடுந்திறற்கஞ்சனைக்குஞ்சியைச்சேர்த்துப்
பௌவவெண்டிரைத்துயில்பசுங்கொண்டல்பற்றினனால். ௪௬

அலங்குதாதுகவலைத்ததார்முடியினன்செங்கை
இலங்குவாளினனெரிமணிமாளிகையிறந்து
விலங்கலாமெனவீழ்பவன்மேலுடன்வீழ்ந்தான்
நிலங்கடந்ததாணீலமால்வரைபுரைநெடியோன். ௪௭

பஞ்சியூட்டியபங்கயச்சீறடிமடவார்
அஞ்செஞ்சாந்தணியலர்முலைகளிற்றொடுபொருத
மஞ்சுதோய்வரைமார்பொடுமணிப்புயநெரிந்து
துஞ்சினனடுகஞ்சன்வெஞ்சோரிவாய்சொரிய. ௪௮

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கட்பரந்தொழுகுபைந்தார்க்கருங்கழற்கஞ்சனஞ்சி
நட்பொடுபகையிலானைநாடொறுநினைத்தவாற்றால்
புட்கொடியுயர்த்தநம்மான்பொலங்கழல்புல்குநோன்றாள்
விட்புலவிபுதரெல்லாம்வியப்புறவிரைந்துமேயான். ௪௯

தடஞ்சிலைவளைத்துக்கஞ்சன்றம்பியரெண்மர்சீறிக்
கொடுஞ்சமம்விளைப்பவெள்ளிக்குன்றெனப்பணைத்ததிண்டோள்
மடங்கலஞ்சீற்றத்துப்பின்வால்வளைமேனிவள்ளல்
உடன்றவராவிபேழ்வாய்க்கூற்றினுக்கூட்டினனால். ௫௦

பரூஉத்தடம்பனைக்கையானைப்பருமதத்துவலையாடிக்
குரூஉத்துளிக்கமஞ்சூற்கொண்டற்கொழுந்தெனநின்றதோன்றல்
அராத்தலைகுனித்தசெம்பொனடிதொழுதமரரெல்லாம்
விராய்ப்பசுந்தேறலூற்றும்விரைமலர்தூவியார்த்தார். ௫௧

இந்திரநகரமெல்லாமெழுசருங்கொண்டனைத்
துந்துபிமுழங்கியார்ப்பச்சொரிமதவருவிதூங்கி
மந்தரவரையிற்றோன்றுமத்தமால்யானைக்கஞ்சன்
அந்தின்மாநகரமெல்லாமழுங்கியுண்மயங்கிற்றன்றே. ௫௨

மறந்தலைமணந்தவெள்வேன்மலைந்தகண்மாரிகற்ப
நறுந்துணர்க்கூந்தல்சோரநங்கையரழுதன்மாற்று
பிறந்துபாடுற்றகஞ்சற்கீமநல்வினைகளெல்லாம்
அறந்தலைமணந்தகூர்வாயாழியான்புரிவித்தானால். ௫௩

ஆயிரம்பகுவாய்நாகத்தறிதுயிலுணர்ந்தசெங்கண்
மாயனும்வெள்ளைமேனிவள்ளலும்வல்லிநீக்கித்
தாயொடுதந்தைதாளிற்றாமரைபுனைவதென்னச்
சேயபொற்றொடிக்கைகூப்பிச்சென்னியினிறைஞ்சிநின்றார். ௫௪

எம்மைநீருயிர்த்தவாற்றாலின்பொன்றுந்துய்த்திலீர்மற்
றும்முழைவளரயாங்களொருதவமுஞற்றிலேமே
அம்மவென்றுலகங்காக்குமாழியந்தடக்கைவீரர்
செம்மைசால்பவளச்செவ்வாய்திறந்தனர்செப்பினாரால். ௫௫

இறைவரேயிவரென்றெண்ணியீன்றவரிறும்பூதெய்த
மறுவறுசிறப்புத்தொல்லோன்மாயையின்மறைத்தலோடும்
பெறலரும்புதல்வரென்னாப்பிறந்ததோர்காதல்கூரக்
கறவைகன்றெதிர்ந்ததென்னக்கசிந்துளங்கரையலுற்றார். ௫௬

சேட்டிளங்குமரர்தம்மைச்செங்கையான்முகந்துபுல்லி
மோட்டிளம்பரிதிகண்டமுளரிவாண்முகத்தராகி
ஆட்டினருவகைக்கண்ணீரங்கண்வானுறைந்தோர்தூற்று
நாட்டுணர்க்கண்ணீரோடுநறியமெய்திகழமன்னோ. ௫௭

உள்ளுயிர்தளிர்ப்பவாகந்தீண்டியுமுச்சிமோந்தும்
முள்ளரைமுளரிவென்றுமுழுமதியென்னத்தோன்று
தெள்ளொளிமுறுவற்செவ்வாய்த்திருமுகச்செவ்விகண்டும்
விள்ளருமுவகைவேலைவீழ்ந்தனரழுந்தினாரால். ௫௮

மாற்றருஞ்சிறப்புவாய்ந்தவலம்புரிபொறித்தசெங்கைக்
கோற்றொடிப்புதல்வர்செம்பொற்குழைமுகமுளரித்தண்போ
தூற்றிருந்தொழுகுதீந்தேனொத்தமென்மழலைகேட்ப
நோற்றனமல்லேமென்றுநொந்துநெஞ்சுருகிச்சேர்வார். ௫௯

உரைப்பரும்பரமாநந்தவோங்கெழிலுருவுதாங்கித்
திருப்பொலிபவளச்செவ்வாய்திறந்துநின்றத்தாவென்றும்
விருப்பமுற்றன்னையென்றுமிழற்றுமாகேட்கப்பெற்ற
வரத்தினர்மகிழ்ச்சியாரேவகுத்தனருரைக்ககிற்பார். சுO

வாட்டிறற்செறுநாவிவன்றிறற்பேழ்வாய்க்கூற்றுக்
கூட்டியபரிதிவைவேலுக்கிரசேனன்றன்னை
நாட்டினனரசனாகநகுமணிச்சுடிகைநெற்றிச்
சூட்டுவாளரவினூடுந்தொடுகழற்காலினெம்மான். சுக

தடந்தவழ்முதலைவெளவத்தடக்கைவிண்ணீனீட்டிக்
கடந்தவழ்கடாத்தநால்வாய்க்கருங்களிறழைப்பவந்தோன்
படந்தவழரவிற்சீறும்படுகொலைக்கஞ்சற்கோடும்
விடந்தவழ்குடுமிவெள்வேல்வேந்தரையழைப்பித்தானால். சுஉ

மூப்புடையவரும்பாந்தண்முடிமிசைக்கிடந்தஞாலம்
காப்பவந்துதித்தசெங்கட்கண்ணனைக்கண்டுகண்டு
நீப்பிலாவிளமையெய்திநிறைந்தபேரின்பமாந்திப்
பூப்புறுபோகபூமிபொருந்தினாரனையரானார். சுங

பைந்துழாயலங்கலானும்பால்வளைமேனியானும்
நந்தகோன்றன்னைப்பல்கானகைமுகமலர்ந்துபுல்லி
மைந்தரின்வளர்த்தல்செய்தீர்மற்றுநீரல்லீர்சொல்லோ
தந்தையுமுருகுதாதற்றாயுமென்றியம்பினாரால். சுச

எண்ணனீயொன்றுமெந்தாயெய்துதுநின்பாலென்று
வெண்ணிலாவிரிக்குந்தூசுமெயில்கிளைத்தொழுகுஞ்செக்கர்
வண்ணமாமணிப்பொற்பூணும்வரம்பிலவழங்கிமன்றற்
றண்ணுலாங்கானமுல்லைத்தலைவனைவிடையீந்தாரால். சுரு

வெள்ளிவெண்முல்லைப்பைந்தார்விரைசமழ்மார்வமெல்லாம்
வள்ளிதழ்க்கமலக்கண்ணீர்வார்தரநந்தகோபன்
கள்ளவிழ்துளவமாலைக்காதலர்தம்மைநீங்கா
துள்ளமுமுயிரும்வைகவொருதனிப்போகலுற்றான். சுசு

வருபிறப்பின்றிநாளுமலர்தலையுலகங்காப்ப
ஒருபிறப்பெய்தித்தோன்றுமுயர்நலமுடையமைந்தர்
இருபிறப்படைந்தாரகவிள்கிலாவொழுகுமுந்நூல்
தருபிறப்பெறிந்தகர்க்கமுனிவனூற்புனைந்தான்முதை. சுஎ

கஞ்சனைக்கொன்ற வத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் சுஉO.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

# ௧௮-வது, குரவன்மைந்தற்கொணர்ந்தவத்தியாயம்.

கலிநிலைத்துறை.

பூந்தாதுழக்கிப்பொறிவண்டுதண்டேறன்மாந்திக்
காந்தாரம்பாடுங்கமழ்சோலையவந்திமேய
சாந்தீவினிபாற்படர்குற்றுயர்தான்றன்முன்னோ
டாய்ந்தான்கலைபண்டருநான்மறைசொற்றவையன். ௧

சிறையுற்றநீலச்சுரும்பின்னிளந்தேறலாடி
வெறியுற்றதாதுவிருந்துண்டிசைபாடுமந்தண்
நறையுற்றதாரார்பகலோரறுபத்துநான்கின்
அறுபத்துநான்குகலையும்பகுத்தாய்ந்தறிந்தார். ௨

திருவிற்கிளைக்குங்கதிர்மாமணிச்செய்யசெஞ்சூட்
டரவிற்குனிக்குங்கருங்கார்முகிலன்புபூத்துப்
பரவற்கமைந்தகுரவன்றனைப்பண்பினேத்திக்
குரவற்குநல்குங்கடனெம்வயிற்கோடியென்றான். ௩

கோடற்கிவர்பாலுரித்தென்னெனக்கோதைமாலை
சூடுற்றமன்றற்குழலாளொடுசூழவன்னோள்
பாடுற்றவேலைப்பரப்பின்றலைப்பட்டுமுன்னம்
வீடுற்றமைந்தன்றனைக்கோடல்விரும்புகென்றாள். ௪

மடலாட்டுவண்டுதுதைபூந்தொடைமாதுசொற்றாங்
குடலாட்டமெய்தித்தளர்பாம்பினதுச்சிமேனின்
றடலாட்டுவந்தமழைவண்ணனைநோக்கியன்னோன்
கடலாட்டின்மைந்தன்கழிந்தான்றனைத்தம்மினென்றான். ௫

என்னுந்துணையிற்றுணையாகியவேந்தலோடு
மின்னுங்கவீங்குதிரடோட்கருமேகவண்ணன்
மன்னுந்திரைநீர்வருணன்பதிவல்லையோட்டிப்
பொன்னங்கொடிஞ்சித்தடந்தேர்மிசைப்போயினானால். ௬

வருணன்றெருமந்தெதிர்வந்தெவன்வந்ததென்னாப்
பரவும்பொழுதைப்படர்வெண்டிரைப்பட்டுமாய்ந்த
குரவன்புதல்வன்றனைவல்லைகொடுத்தியென்றான்
அரவஞ்சுமந்தவகன்ஞாலமளந்தவண்ணல். ௭

கடலுற்றுவாழுங்கனலிற்கனல்கான்றவெங்கண்
மிடலுற்றபாஞ்சசனன்வவ்விழுங்கினான்கொல்
அடலுற்றவாழிப்படையாயெனவாழிபுக்கு
மடலுற்றபைந்தார்மணிமார்பினோடினானால். ௮

வஞ்சம்படைத்துமறிவெண்டிரைவேலையூடு
துஞ்சுந்திறல்வாளவுணன்றனைச்சூழ்ந்துபற்றி
நெஞ்சம்பிளந்துநிலவுக்கதிர்ச்சங்குகொண்டான்
கஞ்சங்கடுக்குங்கருணைத்தடங்கண்ணன்மாதோ. ௯

மின்னும்பிறைவாளெயிற்றந்தகன்வீற்றிருக்கும்
தென்னம்புலத்திற்கதிர்மாமணித்தேர்கடாவிப்
பின்னுந்திரையிற்கவர்சங்குபிறங்கயாவும்
முன்னம்படைத்தமுகிவினின்றுமுழக்கல்செய்தான். கO

வெருவுற்றகூற்றம்விரைவோடெதிர்வந்திறைஞ்சி
வரவுற்றதென்கொலெனவேத்தலும்வந்தவண்ணம்
தெரிவுற்றதாக்கிச்சிறுவற்றரவொல்லேமீளாக்
குரவற்பணிந்துகுமான்றனைக்கொல்கவென்றான். கச

பண்டார்கலிநீர்ப்பரப்பின்றலைப்பட்டுமாய்ந்த
வண்டாரலங்கற்சிறுதோன்றன்முன்வந்துநிற்றல்
கண்டார்களித்தார்களிபாரமுதள்ளியள்ளி
உண்டார்சிகர்த்தாரெவரேயவரோகைசொல்வார். கரு

அடித்தாமரையாலகன்ஞாலமளந்தசாப்போன்
தொடித்தாமரையாற்றெழுதின்னுநின்னுள்ளம்வேட்ட
துடைத்தேலுயர்ந்தோயுரையின்றெனவும்மையிஞ்ஞன்
படைத்தேற்குளதோகுறையென்றுபழிச்சினனல். கசு

கஞ்சுட்டுபேயின்முலையுண்டொருநச்சராவின்
அஞ்சுட்டினடுங்கருங்கொண்டலனைந்தகஞ்சப்
பைஞ்சுட்டணிந்தமறையோன்விடைகொண்டுபைம்பொன்
செஞ்சுட்டெயில்சூழ்மதுரைப்பதிசென்றடைந்தான். கஎ

குரவன்மைந்தற்கொணர்ந்த வத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் சுகச.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## கசுஎவது, உத்தவனைக்கோகுலத்தில்விடுத்த வத்தியாயம்.

---

கலிநிலைத்துறை.

அருட்டந்தைதாயினிடாற்றுபலங்கல்வெள்வேல்
வெருட்டுங்கருங்கண்மடக்கோவியர்வெய்யநெஞ்சம்
தெருட்டும்பொருட்டுவிடுத்தான்றிகழொற்றையாழி
உருட்டுங்கதிரிற்றிகழுத்தவன்றன்னைமாயன். க

தேதாவெனவண்டொருகோடிசிலம்புதொங்கற்
றூதாடுமன்றற்குழற்காதெயங்கமல்லற்
கோதுளிமொய்ப்பமருண்மாலையிற்கொண்டல்வண்ணன்
தூதாகிநின்றோனுயர்கோகுலந்துன்னினனல். உ

## கலிவிருத்தம்.

தோட்டெழுந்துளவினான்றுணைவன்வந்தனனெனா
நாட்டுணர்விரவுதார்நந்தகோனெதிர்கொளாச்
சேட்டிளம்பரிதியிற்றிகழுமார்புறத்தழீஇ
ஊட்டினன்விருந்தினிதுளங்களிசிறப்பவே. ௩

பொன்னலந்தாமரைப்பூமகள்காமுறும்
கன்னியந்தண்டுழாய்க்கமழ்தொடையணிந்ததோள்
இன்னெழிற்புதல்வனோடினிதிருந்தனன்கொலோ
மன்னவர்திலகனென்மனமகிழ்தோழனே. ௪

கனைக்குமாவண்டுணைக்கலுழிபாய்கருங்கவுட்
பனைக்கைமால்யானையின்பான்மருப்பொசித்தநம்
தனிப்பெருஞ்சங்கொளிர்தாமரைக்கரத்தினான்
நினைக்குமேயெம்மைநிரைமலர்த்தாரினாய். ௫

கறங்குவெள்ளருவிபாய்கனவரைச்சாரலும்
சிறந்தசெங்கதிர்தருதெய்வமாநதியும்வண்
டுறங்குபூஞ்சோலையுமுடன்குலாந்தோழரும்
மறந்தனன்போலுமம்மணிநிறவண்ணனே. ௬

மனமெலாமுருக்கியமகரவார்குழையுமென்
பனிநிலாமுறுவலும்பவளவாய்மலருமோ
கனியும்வாண்முகமுமெங்கண்களாற்காணுமா
றினமலர்த்தாரினானின்னுமிங்கெய்துமே. ௭

முல்லையந்தாரினான்மூரிமால்வரைநிகர்
வில்லிறுத்தெண்டிசைவேழமேபோல்வரும்
மல்லடர்த்தேந்தியமணிவரைத்தோளினாற்
புல்லுநாளின்னமும்பொருந்தலுண்டாகுமே. ௮

கோட்டுமால்வரையினாற்குளிர்மழைதாங்கியும்
காட்டழல்பருகியுங்காத்தகார்பயின்றவால்
எட்டிணர்க்கானமுமிளமாச்சோலையும்
நாட்டமுற்றிடுதொறுநாடுமெம்முள்ளமே. ௯

எனப்பலநந்தகோனிசைத்தலுமன்னையும்
புனைத்துழாய்மாலையம்புதல்வனைநினைந்துகண்
பனிப்பவெம்முலைசுரந்தொழுகுபால்பாரெலாம்
நனைத்திடக்கலுழ்ந்தனளன்னர்நெஞ்சுருகியே. ௧௦

கலிநிலைத்துறை.

அத்திறனோக்கியலங்கலாழியான்மேல்
இத்திறமன்புறுமும்மையார்நிகர்ப்பார்
பைத்தரவேந்துமிப்பாரிலென்றுபைந்தார்
உத்தவனெஞ்சமுவந்துரைக்கலுற்றான். ௧௧

சங்கமிலங்கியதாமரைக்கைமாயோன்
உங்கண்மனத்தினுமென்மனத்துமுண்டால்
வெங்கனலுருவின்மேவிநின்றவாபோல்
எங்கணுமுண்டவனெங்ஙனும்மைநீத்தான். ௧௨

வெள்ளிவெண்முல்லைமிலைந்தசெம்பொன்மார்பன்
உள்ளமுவப்பவுமக்குதித்தகாதற்
பிள்ளைகொல்விண்ணொடுமண்ணுமன்றுபெற்ற
தள்ளில்சிறப்புறுதந்தையல்லனோகொல். ௧௩

என்றவர்நெஞ்சுதெளித்துவண்டிசைக்கும்
மன்றல்விரிந்தமலர்த்துழாயலங்கற்
குன்றனையானிலைகூறினனலங்கூர்
மின்றிகழ்வெள்ளியும்விண்முளைத்ததன்றே. ௧௪

குடைந்திளவண்டினங்கோதைதாழமின்னின்
சுடர்ந்திலகொண்குழைதோடியங்கநல்லார்
கடைந்தனர்வெண்டயிர்காய்சினத்தபாம்பின்
நடம்புரிகார்செயனுவினனவின்றே. ௧௫

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

திரையெறிதுளியுஞ்சிந்துசெழுமணித்திரளுஞ்செய்ய
மரைமலர்வீழும்வண்டும்வயின்வயின்வயங்கலுற்ற
உரவுநீர்யமுனையாடவுத்தவனெழுந்துசென்றான்
பரிதியஞ்செல்வன்போலப்பசும்பரித்தேரின்மன்னோ. ௧௬

கதிர்மணிக்கொடிஞ்சித்திண்டேர்காண்டலுமமுதங்கால
வெதிரிசைவடித்தசெவ்வாய்வேரியந்துளவினானை
மதுரையிற்கொண்டுபோயான்வந்தனன்கொல்லோவென்னாச்
சிதரரிமழைக்கண்மாதர்திரண்டனர்நெருக்கினால். ௧௭

முகினிறவண்ணன்செய்யமுளரியங்கண்ணன்றாழ்ந்த
மகரவார்குழையன்வட்டவாண்மதிமுகத்தன்பைம்பொன்
துகிலினனிவனம்மாயன்றோழனேயாகுமென்னு
அகிலுணவிரிந்தகூந்தலாய்ச்சியர்வளைந்துமொய்த்தார். ௧௮

மடங்கலங்குருளைபோலமத்தமால்யானைக்கோடு
பிடுங்கியதடக்கையானைப்பெற்றெடுத்தவர்தந் துன்பம்
கடிந்திடந்தாய்நீயன்றேகாவலவென்றுவெள்வேல்
கிடந்தபோற்பிறழுங்கண்ணார்கிளியெனக்கிளக்கலுற்றார். ௧௯

கலிவிருத்தம்.

நறையுணின்வரிவண்டங்காண்மலர்விடுமன்றே
அறைகடலமுதாறுமாய்கனிநுகர்வுற்றால்
பறவையம்மரம்விட்டுப்படர்குவதுளதன்றே
எறிகதிர்மணிமார்பற்கெம்முறைழயெவனென்றார். ௨௦

கண்டலின்முகைவிண்டேழ்காவதமணநாறும்
தண்டலைவிளையாடத்தாதளைதருசெங்கண்
வண்டெதிர்வரல்காணுமாயவன்விடுதூதாக்
கொண்டொருமுகிழ்மூரற்சொல்வளையுரைசெய்வாள். ௨௧

வெம்மதுநுகர்கிற்பாய்விரைகமழ்துளவத்தார்
மைம்முகில்வரைமார்வமருவியமடநல்லார்
கொம்மைவெம்முலையாடுங்குங்குமமெழுகுற்ற
செம்முகமுடையாய்நீதீண்டலெம்மடிவந்தே. ௨௨

விடவரவினிலாடும்விண்ணவனிசைகானத்
திடையர்தம்மடவார்முன்னென்னைகொனவில்கிற்பாய்
வடவரைபுரைசெம்பொன்மாடங்ன்மதுரைக்கட்
படைவிழிமடவார்முன்பாடுதல்புரிசென்றே. ௨௩

மற்றிணைபெறுகல்லாமதுரையினுறைகின்ற
பொற்றொடிமடவார்தம்புதுநலனுகராமே
சிற்றிடைமடவார்தோள்சேர்தரகினைவானோ
கொற்றமும்மதயானைக்கோடுகொணெடியோனே. ௨௪

போக்கறுபொலவண்ணம்பூப்புறமெலிவேலைக்
காக்கவுகினைவானோசாமருகொடியேபோல்
ஏக்கறவுடனெய்துமின்னகைமடமாதின்
மூக்கறமுனிவுற்றமொய்யடுசிலையோனே. ௨௫

கலிநிலைத்துறை.

ஓர்குறளாயருண்மூவடிமண்ணெனவுற்றோதா
நீர்செலவானகநெஞ்சுபிளப்பநிவந்தானல்
வார்கடன்மண்புகவாலியைமுன்புமறைந்தெய்தான்
காருருவத்தனையார்கொறெளிந்தனர்சற்றோரே. ௨௬

மட்டவிழ்தாமரைமாமலர்மேலுறைமாமாதும்
பெட்டவுருப்புணர்பூதனையாவிபிழிந்துண்டோன்
கட்டுறையானிரைபோன்மடநெஞ்சுகலுழ்ந்தாளாம்
விட்டிலள்செக்கர்மணித்திருமார்வம்விழைந்தாளே. ௨௭

தண்ணகையாலுயிருண்டுவிடுங்குளிர்தார்மார்பன்
கண்ணன்வளைந்ததிருப்புருவச்செயல்கண்ணுற்றால்
எண்ணறுநெஞ்சுகுழைந்துவிரும்புதல்யாமேயோ
விண்ணும்விளங்கியவெம்முலைமாதரும்வீழாரோ. ௨௮

மங்கையொருத்திமணித்தடமார்பினில்வாழ்வாளாம்
செங்கயலுண்கணொருத்திபுயத்திடைசேர்வாளாம்
கொங்குபடிந்தெழுவண்டுலகுக்கொருகோவோடே
எங்களையித்திறமின்றுபுணர்க்கவெழுந்தாயே. ௨௯

பொற்றவிலங்கிதழாயிரம்விண்டலர்பூமேவும்
நற்றிருமாதுமணந்தவனின்னருணன்றாமால்
பற்றுபுதன்னைமனத்துநினைத்தவர்பார்மேலோன்
றற்றுமணிச்சிறைவண்டினையொப்பவளிப்பானே. ௩௰

நாமுமறக்குதுநம்மைமறந்தநறுந்தேறற்
பூமகள்கொண்கனையென்னின்விளங்குமொர்பொன்னாழிக்
காமருசெங்கதிர்நல்கியமாநதிகண்டாலும்
மாமணிகாணினுநெஞ்சுநினைக்குறுமாறாதே. ௩௧

என்றலுமஞ்சனவண்ணனிடத்தினிலிவ்வாறே
ஒன்றியகாதல்விளைத்ததிறத்தினிலுய்தீரால்
மன்றலிலங்குழலீரனவஞ்சிறைவண்டூது
மென்றளிர்சேர்தருபைந்தொடையுத்தவன்விண்டானால். ௩௨

அங்கணிலம்புனறீவளிவானெனுமைம்பூதம்
எங்குமுறைந்தனனுங்கண்மனத்துமிருந்தானால்
வெங்கதைதாமரைநேமிநிலாவுமிழ்வெண்கேழொண்
சங்கெளிர்கைம்முகிலெங்குமையின்றுதணந்தானே. ௩௩

மற்றிறைசெய்மையின்வைகியதும்மைமறந்தேயோ
பற்றிடவன்றுகொனும்மனமன்புபழுத்தென்னா
விற்றிகழ்பொற்குழைபற்றியலைத்திடும்வேலுண்கட்
சிற்றிடைவெம்முலைமங்கையர்நெஞ்சுதெளித்தானால். ௩௪

இவ்வழிநல்வெதிரின்னமுதூறவிசைத்தான்மற்
றுவ்வழிதோழரொடாடினனுள்ளமுருக்காநின்
றவ்வழியெம்மொடமர்ந்தனனாலெனவந்தேனார்
மைவழிவார்குழன்மங்கையர்கூறலதிந்தானே. ௩௫

நாங்கைதநறைக்குழன்மாதரசோதைநடந்தேழ்பார்
பரந்தபெரும்புகழ்நந்தனுவப்பொடுபாராட்ட
விரிந்தமலர்த்தொடைவேள்சிலதிங்கள்விருப்பாலங்
கிருந்துதிருந்தெயில்சூழ்மதுரைக்கணெழுந்தானே. ௩௬

வண்டிசைபாடுமலர்த்தொடையுத்தவன்வந்தெய்திப்
புண்டரிகம்பலபூத்தகரும்புயல்போல்வானைக்
கண்டனனெஞ்சுகளித்தனனன்பொடுகார்முல்லை
அண்டர்தமக்கிறைநல்கினயாவுமளித்தானே. ௩௭

காருவரித்துகில்சுற்றிவிளங்கியகாரோதிப்
பார்மகள்கொம்மைமுலைத்தடமேவுபரந்தாமன்
ஏர்வளர்கூனியெனப்பெயர்பெற்றவளில்லின்கண்
ஓர்தருமுத்தவனோடெமெழுந்தனனுற்றானே. ௩௮

வெள்ளிவெண்முல்லையமெல்லிணர்துன்றுவிரைக்கோதைக்
கள்ளவிழோதியரிற்றொறும்வெண்ணெய்கவர்ந்துண்டோன்
அள்ளிலைவேல்விழியாரமுதம்புரையஞ்சாயல்
ஒள்ளிழைபச்சிளவேய்புரைதோணலமுண்டானல். ௩௯

மின்னினுடங்குநுணங்கிடையுள்ளம்விருப்பூர
இன்னணமென்னைமணந்தனைநாளுமிருக்கென்ன
அன்னதுநேர்ந்தனனின்னிளமூரலரும்பாத்தன்
பொன்னெடுமாடமடைந்தனன்மைப்புயல்போல்வானே. ௪0

விருந்துணவண்டுநெகிழ்ந்துநறுவுமிழ்வெண்டோட்டுக்
கரும்பனைமீதுயர்காவலனோடெழுகார்வண்ணன்
அருந்ததிநேர்வருகாந்தினியீன்றருளக்குரூரன்
திருந்தொளிமேவியசெம்பொன்மனைத்தலைசெலவுற்றான். ௪௧

உள்ளமுவந்தெதிர்வந்துகணின்பணியூர்கின்றேன்
வெள்ளியவெண்டிரையாடியகங்கைவிளங்கும்பொன்
கள்ளவிழ்தாமரைநீம்புனல்கொண்டுகழீஇயேத்த
வள்ளிதழ்விண்டதுழாய்மணிமார்பன்மகிழ்ந்தானல். ௪௨

உத்தவனைக்கோகுலத்தில்விடுத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ௨ திருவிருத்தம் ௬௭௬.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

# ௨௰-வது, அக்குரூரனை அத்தினபுரத்துவிடுத்த வத்தியாயம்.

### அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

தந்தையிறப்பத்தளர்ந்ததண்டாரைவர்தம்மை
மைந்தர்க்கிணையாக்கண்ணின்மன்னன்காப்பான்கொல்லோ
அந்தினீசென்றறியென்றருட்காந்தினியீன்றெடுத்த
பைந்தார்மார்பன்றன்னைப்பசும்புட்பாகன்பணித்தான். ௧

ஆயும்பழநான்மறையுமறியலாகாச்செங்கண்
மாயன்பணிப்பமகிழ்ந்துமல்லற்கங்கைநாடன்
பாயுங்கலினப்புரவிப்பைம்பொற்றேர்மேலிவாக்
காயுங்கனல்கால்சிறுகட்களிற்றுநகர்சென்றடைந்தான். ௨

நிழல்வாய்நேமியுருட்டிநிலவுக்கதிர்வெண்டிங்கள்
எழில்வாய்க்கவிகைநீழலெறிநீருலகங்காக்கும்
வழுவில்சிறப்புவாய்ந்தவடசொற்பெயரால்விளங்கும்
அழல்வெம்பரிதிவதனத்தரசற்கண்டானன்றே. ௩

அரவக்கொடியோன்முதலாமரசர்குமரர்தம்மோ
டுரவுத்திரைநீர்க்கங்கையுயிர்த்தோன்றன்பாலெய்தா
விரைகொப்புளிக்கும்பசுந்தார்விதுரற்காணுவுலகம்
பரவத்தகுசீரைவர்ப்பயந்தாண்மனைசென்றுற்றான். ௪

ஆலக்கருஞ்சேறுமிழுமாவின்னழல்வெஞ்சீற்றக்
காலக்கதிர்வேற்றடக்கைக்கஞ்சன்வெம்போர்கடந்த
நீலக்கொண்டலெமையுநினைக்குங்கொல்லோவென்னாக்
கோலக்குவளைக்கருங்கட்குந்திநெஞ்சங்கலுழ்ந்தாள். ௫

நஞ்சமூட்டன்முதலாநச்சுநாகமுயர்த்த
வஞ்சமனத்தான்செய்திவருத்துமொழிவாடன்னை
நெஞ்சந்தளரேனும்மைநெடியோன்காக்குமென்னாச்
செஞ்சொற்பலவாங்கியம்பித்தெருட்டல்செய்தானன்றே. ௬

வெங்கணரவமுயர்த்தவெள்வேற்குமரன்செயலும்
அங்கண்ஞாலமளிக்குமரசன்செயலுநாடாத்
திங்கள்சிலவாண்டுறைந்தான்றிங்கணிலவிற்றிகழும்
பொங்கர்த்திரைநீர்க்கங்கைபுரக்குநாடுகிழவோன். ௭

பெற்றபுதல்வர்போலப்பிள்ளைச்சுரும்பர்பாடும்
பொற்றாரைவர்தம்மைப்போற்றிக்கொள்ளல்வேண்டும்
ஒற்றைத்திகிரியுருட்டியுலகம்புரப்பாயென்னா
வெற்றிக்கதிர்வேற்றடக்கைவேந்தற்குரைத்தல்செய்தேன். ௮

பொதுநின்றுலகம்புரத்திபொங்குபுகழேயல்லால்
எதுநின்றதுமற்றென்னுவினியபலவாங்கியம்ப
மதுநின்றொழுகுந்தாரான்மைந்தர்தம்மேற்காதல்
முதிர்கின்றதனுலுளத்தின்மொழிசார்கிலதென்றுரைத்தான். ௯

விடப்பாந்தளின்மேற்கிடந்தவிரிநீர்நிலத்தின்விழுமம்
துடைப்பான்பிறந்தகண்ணன்றளவோன்விதிக்கும்விதியார்
கடப்பாரென்னுச்செங்கட்கண்ணற்பரவிக்கடுகி
அடுத்தான்மதுரைப்பதிசென்றண்ணற்கனைத்துங்கிளந்தான். ௧௦

அக்குரூரனை அத்தினுபுரத்துவிடுத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௬௮௬.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## உக-வது, சராசந்தனொடுபொருதவத்தியாயம்.

### கலிநிலைத்துறை.

எழ்கடன்ஞாலமளித்திடுகஞ்சனிறப்பெய்த
மாழ்கியவன்பனிமால்வரைமார்வமணப்புற்ற
தாழ்குழலாரிருபேதையர்தந்தைசராசந்தன்
சூழ்கழல்சென்றுவிழுந்தனருற்றதுசொற்றூரே. ௧

அங்கலுழ்கோதையர்கண்கலுழ்கின்றனராங்கோதும்
பொங்கழல்வெவ்வுரைகேட்டலுநெஞ்சுபுழுங்குற்றோன்
செங்குருதிப்புனலோடுசுழன்றிமைநீகின்ற
வெங்கணழற்பொறிசிந்தவுருத்துவெகுண்டானே. ௨

பல்லுளைவாம்பரிபண்ணுகபான்மருள்வெண்கோட்டுக்
கொல்கரிபண்ணுகபண்ணுகவாடுகொடித்திண்டேர்
வெல்படையாதவர்தம்முயிர்கூற்றுவிருந்தூட்டச்
செல்ககடற்படையென்றனன்வெவ்வியதீயொப்பான். ௩

எதிர்ந்ததொலூழியிடிக்குமிடிப்பொலியின்றென்னு
வெதும்புறுதீவிடநாகமொரெட்டும்வெருக்கொள்ளத்
ததும்பினபேரிதழங்கினவெள்வளைதண்காரின்
அதிர்ந்தனவார்முரசண்டகடாகமதிர்ப்பெய்த. ௪

கொண்டன்முழங்குகடாக்களியானைகுழுக்கொள்ளத்
தெண்டிரைபோலவலங்குளைவாம்பரிசென்றீண்ட
மண்டமர்வேட்கைமலிந்திடுமாகதன்மான்றேரின்
எண்டிசைமன்னவர்கண்டுவணங்கவெழுந்தானல். ௫

### எழுசீர்க்கழிநெடி லாசிரியச்சந்தவிருத்தம்.

வழிந்துதேனொழுகுபாரிசாதமுகைவாய்நெகிழ்ந்தனவயின்றொறும்,
பொழிந்தசெந்துகடுடைத்தசென்றுபலபொன்னெடுங்கொடியெனக்சொ
லோ, முழங்குதெண்டிரைமுடங்குவேலையெனமொய்த்தெழும்படையெ
ழுச்சியால், எழுந்ததூளிபடலம்பரந்தனவிலங்குபொன்னுலகமெங்குமே.

நேரெழுந்துபொருமன்னர்செங்குருதிநீர்குடித்துநிணமுண்டுவெம்
போர்விளைந்தழலும்வென்றிவாட்படைபொழிந்ததீயுணவறந்துமே
ஏர்தழைந்தமணியோடைமால்களிறிரும்பனைக்கையின்முழங்குமேழ்
கார்பிழிந்திடவெழுந்ததீம்புனல்கனத்தலாற்கடல்சிறந்தவே. ௭

கற்றைவானிலவுகான்றவெண்மதிகடுக்கும்வெண்குடைசெறிந்துமேல்
ஒற்றையாழியினன்வெய்யசெங்கதிரொளித்துநீடிருள்விளைத்தவே
மற்றழைந்ததிணிதோண்மறங்குலவுமானவேன்மகதமன்னர்தம்
கொற்றநீண்மகுடகோடிசெஞ்சுடர்கொழித்துவல்லிருள்கிழித்தவே. ௮

சூழவிஞாயிறுகடுப்பவாரிருள்குடித்துவாள்வெயில்விரித்திடும்
எழின்மணிச்சுடிகையரவினுக்கிறையெருத்துளுக்கவெழுதானைபோய்ப்
பொழிமதக்கரிமருப்பொசித்தசிறபூந்துழாய்ப்படலைநம்பிபோல்
மழைதவழ்ந்துவிளையாடுமாடமலிமதுரைமூதெயில்வளைத்தவே. ௯

அக்குரோணியிருபத்துமூன்றெனவறைந்ததானையெதிர்முற்றலும்
திக்கயங்களெனவென்றியாதவர்சினந்தலைக்கொளவெழுந்துதீக்
கக்குகண்ணினர்விசித்தகச்சினர்கதிர்த்திலங்குகனைகழலினர்
மைக்கரும்புயல்கிழித்தமின்னெனவயங்குவாள்கொடெதிர்மண்டினர்.

நீணிறப்பரவை வெள்ளிவெண்டிரை நிரைத்துவெண்டிரையொ டெதிர்வ
பானிறக்கவரிநெற்றிமாவினொடுபல்லுளைப்பரியெதிர்ந்தவால் [போல்
வானுறத்திகழும்வரையினோடருவிமாலைமால்வரைமலைந்தபோல்
கூனிறப்பிறைமருப்புவேழமொடுகொலைமதக்கரிமலைந்தவே. ௧௧

அறைகருங்கடலுடுத்தமாநிலமளிக்குமன்னர்முடியுழுதலால்
பறைகருங்கழலலம்பயாதவர்படைப்பரப்பினிடந்திடா
உறைகழித்தவடிவாளழன்றுதழலுமிழ்தலாடமருழந்தவேற்
செறுநருணனிசுவைத்துமற்றதுதெவிட்டிநின்றுமிழ்தன்மானுமே. ௧௨

கொற்பழுத்தகொலைவேலினோடுசிலகொற்றமாகதரெடுத்தபோர்
விற்பழுத்துமிழும்வெய்யவாளியொருமேலதிர்ந்தெதிரும்யாதவன்
மற்பழுத்ததிணிதோளின்மொய்ப்பனவடித்தகாண்மலராலங்கல்சூழ்
அற்பழுத்தகுழன்மாதர்செங்கணமராடுகின்றனகடுக்குமே. ௧௩

அழிந்துமட்டொழுகுதாரினொருவனம்பகட்டுவரைமார்பின்மேல்
குழந்தைவெண்பிறைமருட்டுகோடடிகுளிப்பவெஞ்சினமிருந்துபாய்
செழுங்கடாக்கரியின்மத்தகத்தெழுதுசிந்துரஞ்செறிதனெஞ்சகம்
விழைந்தமாதர்முலையெழுதுகுங்குமமெழுக்கெறிந்தெனவிளங்குமே. ௧௪

வளைந்ததெண்கடல்கிளைத்தசெம்பவளவல்லிபோலொளிபிறங்குமாண்
குளம்புடைப்புரவிபார்மிதிக்கிஃகுழீஇயமன்னர்நெடுமுடியுநல்
இளங்களிச்சிறுகண்யானைநெற்றியுமிவர்ந்தியங்கினும்வலங்கொள்போர்
விளைந்தசெங்குருதிபாய்களத்தினின்மிதித்தெழுந்தனகடுக்குமே. ௧௫

வர்திரண்டொழுகுமாதர்வெம்முலையிளங்களிற்றினொடுபோர்புரிந்
தோரிரண்டுவரையென்னமேம்படுவுலங்கொடோண்மகதமன்னவன்
போர்முரண்டொலையவெஞ்சமம்புரிதல்பூவைவண்ணனிளையப்பொலந்
தேரிரண்டொருவிசும்பினின்றொளிர்திசாமுகங்கிழியவந்தவால். ௧௬

நம்பிபான்மதிநிறத்தினொடுநனந்தலைப்புவிபுரந்திடும்
ஐம்படைக்கிழவன்வந்துமுன்னுறுமலங்குளைப்புரவிபூண்டதேர்
வெம்புசெம்பரிதிநாணவேறினன்விடுத்தனன்கடிதுவேரியந்
தும்பைசூடினன்மிடைந்துகன்னியெயில்சூழ்பெரும்படைதுளங்கவே. ௧௭

வெண்ணிலாக்கதிருமிழ்ந்ததண்மதியைவெங்குரற்புயல்வளைந்தபோல்
அண்ணல்யானைபலகொண்டுமுற்றமுகையவிழவண்டினமரற்றுதார்க்
கண்ணன்மற்றிளையனிற்கவென்னொடுகடுஞ்சமர்த்தொழில்விளைத்திபால்
வண்ணவென்றுவளைமேனிவள்ளலொடுமகதன்வெஞ்சமர்தொடங்கினான்.

மறுவறத்திகழுமதியமாமெனவயங்குவெண்கவிகைமகதர்கோன், வி
றல்விளங்குபடைவெள்ளமொல்லையினில்வீட்டிவெண்டிரையுடுத்தபார்ப்,
பொறையகற்றுதுமெனத்தடக்கையெழுபொருசிலைக்குடுமிகோட்டினான்,
கறைமிடற்றரவவரசனுச்சிமிசைகால்பெயர்த்ததிறலாட்டினான். ௧௯

பட்டமுற்றகரிநெற்றிமேலுமெழுபச்சைவாம்பரிமுகத்தினும்
வட்டுடைக்கொடியவீரர்மார்பினும்வடித்தவாளிமழைதூவினான்
கட்டெழிற்பிறைகடுப்பவெய்யதொருகார்முகக்கடைகுழைத்திடா
விட்டிலங்குகுழைமின்னெனத்திருவில்வீசநின்றகருமேகமே. ௨௦

குண்டலத்தினொடுகொற்றநீண்மகுடகோடிசிந்துகரமணிகொழித்
தெண்டிசாமுகநடுங்கநின்றெதிரிரட்டுவெள்வளைசுழித்திடா
வுண்டிரைத்திமிழுயாலவேன்மகதர்மானவெண்கவரிநுரைகுலாய்
வெண்டிரைக்கடல்சிவப்பவோடினவிரிந்துபாய்குருதிவெள்ளமே. ௨௧

சூடுபொன்முடிதுணிந்துவாணிலவுதூற்றுவெண்குடைகவிழ்ந்துபோர்
ஆடல்வன்மகதரானைவருந்தொலையவண்ணனின்றநிலையெண்ணினால்
பாடல்சால்பரிதிவீழ்ந்தவட்டமதிபட்டுவானவரொடுங்குநாள்
சேடனென்றுலகிசைத்திடத்தனிசிறந்துநிற்குநிலைதோற்றுமே. ௨௨

போந்தைமீமிசையுயர்த்துவெள்ளிவரைபோலநின்றதிறலண்ணல்கண்
சேந்துபாகனதுசென்னிமுண்மிசைதெறித்திடப்பசியபுல்லியற்
கூந்தன்மாபுரளவிண்கிழித்துநிகர்குன்றின்வீழசனியேறுபோல்
ஏந்துதோண்மகதனூர்ந்ததேர்மிசையிருப்புலக்கைகொடுமோதினன். உந

நெட்டெயிற்றபலபேய்குனித்திடநெடுஞ்சிலைக்கடைகுழைத்துமேல்
விட்டவிட்டகணையாவும்விண்ணுறவிலக்கிநின்றவளைமேனியான்
வட்டவான்முகடளந்தபொங்கர்மலிமகதர்மன்னனைவளைத்திடாக்
கட்டினன்வருணபாசம்வீசிநனிகண்டவானவர்களிப்பவே. உச

விளைவதுண்டிவனைவிடுதியாலெனவிரைத்துழாய்முகில்விடுத்திடா
அளிபரந்துசுழல்பாரிசாதமலரங்கண்வானவரிறைப்பவால்
உளைவயப்புரவிபூண்டதேர்கடிதினூர்ந்துமீண்டமரிலெய்துநல்
வளமனைத்தினையுமாறிலாமதுரைமன்னவன்பெறவழங்கினன். உடு

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

வாளினைநோக்குஞாஞ்சில்வலத்தினன்சிக்கயாத்த
தோளினைநோக்குமிற்றசுற்றமைவரவைநோக்கும்
கேளினைநோக்கல்செய்யான்சினைவரால்கெளிறுபாயப்
பாளைவாய்விரியும்பூகப்படப்பைசூழ்மகதவேந்தே. உசு

பரந்ததன்பழியைநோக்கும்பரந்ததன்பழியேபோலச்
சுரும்பொடுவண்டுபாடச்சொரிமதஞ்செருக்கித்துஞ்சாக்
கருங்களிற்றீட்டமெல்லாங்களத்திடைக்கவிழ்ந்துதுஞ்சி
இரும்பெருங்குருதிச்சேற்றினிடையிடைக்குவிதனேக்கும். உஎ

அற்றதன்புகழைநோக்குமற்றதன்புகழேபோலக்
கற்றைவெண்ணிலவுகான்றகவிகையுங்கவரிக்காடும்
ஒற்றைவெள்வளையுஞ்சிந்தியொழுகொளியோடைநெற்றிக்
கொற்றமால்களிருமாய்க்குங்குருதியாறொழுகனேக்கும். உஅ

நிழலும்வெண்டிங்களன்னநித்திலக்கவிகைவேந்தர்
அழலவிருளையசெங்கணரியணையிருந்தனேக்கும்
புழைபடுதடக்கையற்றுப்பொன்வரைதுளங்கவீழ்ந்த
கழைசுளிசிறுகணல்வாய்க்களிற்றினைக்கிடந்தனேக்கும். உகூ

அடல்விடைநடந்ததென்னவரசிளங்குமரர்முத்தக்
குடையொடுபிச்சம்பெய்தகுளிர்நிழல்குறுகநோக்கும்
படுபசுங்குருதிமாந்தப்பனியிருவிசும்புபோர்த்து
மிடைதருபருந்தினீழன்மேயதோர்வண்ணநோக்கும். நO

மானவேன்மகதர்மார்பின்மன்றலந்தெரியன்மூசித்
தேனுகர்பறவைசூழச்செருக்களம்படுத்தனேக்கும்
ஆனைசாய்த்தொழுகுகின்றவரத்தநீராறழுந்தி
ஊனுகர்பறவைசூழவோங்கலிற்கிடத்தனேக்கும். ௩௧

எழுயர்களிற்றுமன்னரெறியும்வெண்கவரிக்காற்றின்
தாழ்பசுந்தெரியலாடச்சமர்க்களங்குறுகனேக்கும்
வீழ்தருவளைவாய்ப்புள்ளின்விரிசிறையெறிந்தகாற்றின்
சூழ்குடர்மாலையாடத்துஞ்சினர்கிடத்தனேக்கும். ௩௨

வடிமலர்த்தும்பையார்த்துவாளமரழுவத்தேற்ற
முடிகெழுவேந்தர்கொற்றமுரசுகண்டுயிலனேக்கும்
கடவுளரெழுந்துதுள்ளக்கல்லெனக்கலித்துமல்லற்
சுடர்தவழ்விசும்பிற்றெய்வதுந்துபிமுழங்கனேக்கும். ௩௩

இன்னனபலவுநோக்கியெள்ளினனரசின்வாழ்க்கை
மன்னியசிறப்புவாய்ந்தமாதவம்புரிதனன்றென்
றுன்னினன்மற்றென்செய்வாளெளிறுவெள்ளருவிமாலைப்
பொன்னெடுங்குன்றநோக்கிப்போவதுபுரிந்தான்மன்னே. ௩௪

வெல்லலுக்தோற்றருனும்விளைகிலதெவர்மாட்டைய
செல்லனீதவத்தினென்னுச்செறிந்தவாளரசர்தேற்றக்
கொல்லியவெழுந்தகூற்றிற்கொடுஞ்சமம்புரியநாடி
மல்லலைத்தெழுந்ததோளான்மகதநாடெய்துற்ருனல். ௩௫

சராசந்தனெடுபொருத வத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் எ௨௧.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௨௨-வது, முசுகுந்தற்கருள்புரியத்தியாயம்.

---

### கலிச்சந்தவிருத்தம்.

முதிருங்களியினவண்டினமுரலத்தகைதொடுதார்
ததைபைந்தொடைபுனைகின்றசராசந்தனல்வலத்தால்
பதினேழ்முறையிவ்வாறெறிபடைவெள்ளமொடெய்தா
மதுரைக்கடியரண்முற்றினன்மலைந்தாடவர்தோற்றான். ௧

பின்னுஞ்சமர்புரிதற்கடல்பெருகும்படைதிரட்டா
மன்னும்பொழுதினிலின்றொடைமகதித்தனியாழோன்
பொன்னங்கிரிபுரைதோட்பசும்புலவுப்படையவனன்
தன்னைக்கடிதடையாவமர்தலைப்பெய்திடவுரைத்தான். ௨

இளைத்தானிகன்மகதன்பொரவினியெம்மொடுவெம்போர்
விளைப்பாரிலையெனச்செஞ்சினவேல்யாதவரெல்லாம்
களித்தாரெனமுக்கோடிகடற்றுனைகொண்டெழுந்தான்
வளைத்தான்விரிபுனற்குண்டகழ்மதுரைக்கடியரணம். ௩

மலைக்குந்திறல்யவனன்படைவளைக்கும்மமொருபால்
அலைக்குஞ்சினமகதன்படையொருபாலினியடையின்
சலக்குற்றிடுநகராமெனக்கதிர்கான்மரகதப்பா
சிலைக்கொத்தவிழ்துளவத்தொடையெம்மானினைத்தனனால். ௪

கார்மேவியபரவைத்திரைக்கடறன்னகட்டிடையே
ஈராறெனப்பகர்யோசனையிடனல்கவவ்விடத்தின்
ஓராயிரம்பெயரோன்விசும்புறைதச்சனைக்கூவாச்
சீர்மேவியதுவரைப்பெயர்த்திருமாநகரமைத்தான். ௫

சிந்தாமணியொன்றேவுயர்செம்பொற்றிருநாடன்
பைந்தாதுணவளிகோடிபரந்தாடியவந்தண்
மந்தாரமலர்ச்சோலையுமழைமட்டிழிந்தொழுகும்
அந்தார்புனையிமையோருறையத்தாணியும்விடுத்தான். ௬

விரைமட்டுறுதண்டாமரைவிரியக்கதிர்விசியாத்
திரைபட்டவெங்கதிராமெனத்திகழ்கின்றனசெஞ்சுட்
டரவெட்டையும்விழைவிப்பனவருமாமணியுடனே
வரவிட்டனனளகைக்கிறைவளங்கூரிருநிதியம். ௭

எண்ணற்றனவெறிவண்டிரையேழ்பாரையுங்கடப்ப
விண்ணத்திடைபறக்கின்றனவிழுப்புள்ளியல்படைத்த
பண்ணுற்றனபால்போல்வனபழிதீர்பசும்பச்சை
வண்ணத்தனகலினப்பரிவருணன்விடுத்தனனால். ௮

செறிவுற்றபல்வளத்தாலருஞ்சிறப்பெய்துமந்நகர்வாய்
நெறியுற்றதண்மடற்றுமைநிலவத்திகழ்செம்பொன்
மறுவற்றொளிர்வரைமார்பினன்மதுரைத்திருநகர்க்கண்
உறைவுற்றவர்தமைமாயையினுணராவகையுய்த்தான். ௯

சீர்முற்றியமதியாமெனத்திகழ்தம்முனையொன்னார்
போர்முற்றுமிந்நகர்காக்கெனப்புகலாப்புயல்வண்ணன்
கார்முற்றியமதுரைக்கடியெயினீள்கடைக்கண்ணுற்
றேர்முற்றியபடையேந்தலனெழுந்தோடினனன்றே. க௦

மணிகுண்டலம்வெயில்சிந்திடமணிமார்பினிற்றிகழ
அணிகின்றபைந்துளவத்தொடைவணிதார்துயல்வாமின்
பணியுங்கதிர்கான்றுடகப்பசும்பொற்றுகில்குலவத்
திணிதேரொளொருநான்கொண்மணிச்சிகரங்களிற்றிகழ. கக

உருவப்பசும்புயல்போலெழுந்தோன்றிறங்காணுப்
புரையற்றதண்டமிழ்யாழ்முனிபுகல்கண்ணன்மற்றிவனென்
றெரிகக்குசெங்கதிர்வேற்படையவனன்பசும்பொற்றூர்த்
தூரகத்தடந்தேர்தூண்டலன்றொடர்ந்தோடினன்மாதோ. கஉ

செய்ப்பட்டசெங்கமலம்புரைசெம்பொற்கழல்சேர்ப்பக்
கைப்பட்டனனெனவோடியொர்கருங்கல்லளைபுகுதா
மெய்ப்பட்டதொன்மறையுச்சியின்மிசைவீற்றிருந்தருளும்
மைப்பட்டதண்புயலொப்பவன்மறைந்திட்டனன்மன்னோ. கங

ஆரத்திரள்பொழிமாலைவெள்ளருவிக்கிரிமுழையின்
காரொப்பவற்றொடர்ந்தேகியகாலக்கதிர்வேலான்
சீருற்றபைந்துளவோனெனச்செங்கண்டுயில்கின்ற
மூரிச்சிலைவலந்தாங்கியமுசுகுந்தனைக்கண்டான். கச

எயில்வந்துவெம்படைமுற்றவுமிகல்வெங்களத்தெய்தா
அயில்வாளமர்தருகின்றிலையறியார்பிறரெனக்கொல்
துயில்கின்றனையிவணீயெனச்சுடர்கின்றசெங்கதிர்போல்
வெயில்சிந்தியவெவ்வாய்வடிவேலோன்றனையுதைத்தான். கரு

அழித்தார்கலியுலகேழையுமணியுற்றதனுந்திச்
சுழித்தாமரைமலரிற்றருதுளவப்புயலேபோல்
எழிற்றாமரைவிழிதுஞ்சியவிகல்வேன்முசுகுந்தன்
விழித்தானெதிர்பார்த்தானுடல்வெந்தான்விறல்யவனன். கசு

என்னுமுனமுசுகுந்தனென்றிசைப்பானெவனென்னுப்
பொன்னுழியொன்றுருட்டாக்கடற்புவிகாத்தசெங்கதிரோன்
அன்னுன்விருப்பொடுகூறலுமறைவானனிறபவாழ்
பன்னுண்மதியெனத்தோன்றியபழநான்மறைமுனிவன். கஎ

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கொய்யுந்துணர்ப்பூந்தொடைமார்பகுன்றேடெட்டுங்கடாக்கலுழி
பெய்யுங்கரடக்களிறெட்டும்பேழ்வாயரவும்பொறையுயிர்ப்ப
வையம்புரக்குந்தனிக்கவிகைமாந்தாதாவின்றிருமைந்தன்
எய்யுஞ்சிலைக்கைமுசுகுந்தனென்னுநாமத்தினன்மன்னோ. கஅ

ஆலக்கருஞ்சேறமிழ்பாந்தளரசுசுமந்தபுவிநிழற்று
மாலைக்கவிகைநிழலொதுங்கிமலர்த்தாரிமையோர்குறையிரப்பக்
காலக்கனல்போலுருத்தவுணர்களத்திற்கவிழக்கற்பகப்பூஞ்
சோலைத்திருநாடினிதளித்தான்சுடர்செய்வடிவேற்படையோனே. கசு

குருகின்பெயரால்விளங்குமுதுகுடுமிநெடுமால்வரைகிழியத்
திருகுசினவேற்படையெறிந்தசெம்பொற்றொடித்தோட்டிறன்முருகன்
முருகுகமழ்தாரமரர்படைமுழுதுங்காப்பத்தோன்றலுமல்
பருகுபசும்பொற்கழலானைப்பார்த்தாரிமையோர்பகர்குற்றூர். உ0

மருவின்சாயன்மடமகளிர்மைந்தர்யாருமாங்கிறந்தார்
புரவுபூண்டிங்கெமையளித்தாய்பொழியுங்கதிர்மாமணிச்சுடிகை
அரவிற்கிடந்தபுயலன்றியளிப்பாரில்லைதனிவீடு
தருதும்பெறநீவேட்டவரஞ்சாற்றென்றமரரிசைத்தனரால். ௨௧

அழிவின்றுயர்ந்ததனிமுத்தியல்லால்வரங்களணுகுதற்கு
விழைவொன்றில்லான்பன்னெடுநாள்விண்காத்துறங்காவேல்வேந்தன்
ஒழிவின்றுயர்ந்தவிண்ணுடருதவுமுறக்கத்தினனாகி
மழைகண்டுயிலுமலைமுழைஞ்சின்மலர்த்தாமரைக்கண்டுயின்றனனால். ௨௨

மலைச்செஞ்சிகரமெனப்பணைத்தமல்லற்றடந்தோளவுணர்குலம்
தொலைச்சிக்குடுமிவேற்றலையிற்சுடர்ப்பூவாகைநறுந்தெரியல்
மிலைச்சிப்பசும்பொனுடளித்தவேந்தனியலார்விரிக்குநரென்
றலைச்சங்கணிந்ததடக்கைமுகிற்கண்பனன்பினுரைசெய்தான். ௨௩

பதுமப்பொகுட்டுவட்டவணைப்பாவைமணக்குந்தடமார்பில்
கதிர்கொப்புளிக்குமணிதிகழக்கவின்செய்மகரக்குழைதாழ
உதிரங்குமட்டிநிணங்குதட்டுமொளிறுவடிவேன்மன்னவற்கு
வெதிர்நின்றிசைத்தசெங்கனிவாய்விமலனருளால்வெளிப்பட்டான். ௨௪

அருணமணிகள்விளிம்படுத்தவம்பொனுடைத்திருமருங்கும்
தருணவெயில்கான்மணிமார்புந்தாடோய்தடக்கையொருநான்கும்
இருணன்ககற்றுமதிமுகமுமிருளுஞ்சுருளார்குழற்காடும்
கருணைபொழியுஞ்செங்கமலக்கண்ணுமெதிர்கண்டுவந்தனனால். ௨௫

தழைக்கும்பரிதியொருகோடிதலைவந்தெறிக்குந்தகைபோற்கண்
வழுக்குற்றிடநின்றிமைத்திடுபேர்வனப்பாருருவமுத்தொழின்மற்
றிழைக்கின்றவருட்சிறக்கின்றாயாரைநீயென்றெறிகங்கை
சுழிக்குங்கமலமலர்ப்பொற்றாடொழுதுகுழைவுற்றேத்தினனால். ௨௬

முரியுந்திரைப்பாற்கடற்றுயிலுமுகுந்தன்யாமேபணிமுருகு
சொரியுந்தாரோயளவிலவெந்தோற்றப்புவியின்பொறைதவிர்ப்பான்
குருதிவடிவேல்வசுதேவன்குமரனென்னத்தோன்றினமால்
வரமிங்குனக்குத்தரவடைந்தேம்வழங்கென்றிசைத்தான்மறைமுதல்வன்.

ஊழியிருபத்தெட்டிலழலொழுகும்வடிவாள்வசுதேவற்
காழிவளருங்கூராழியமலன்றோன்றியளிக்குமெனத்
தாழ்வின்முதியசர்க்கமுனிசாற்றிக்கிடந்தவுரைசூழ்ந்தான்
சூழுமுள்ளங்குளிர்ப்புற்றான்றுளித்தான்கண்ணீரிவைசொற்றான். ௨௮

இறக்குமுடலம்யானெனப்பட்டிறந்துபோயவித்துணைநாள்
பிறப்பின்மக்கட்பிறப்பம்மபெறுதற்கரிதாலினிப்பிறவாச்
சிறப்புநெறிதந்திடல்வேண்டுந்தெவிட்டாவமுதேயருட்கடலே
துறக்குமுனிவருளக்கமலந்துறவாத்தெய்வச்சுடரொளியே. ௨௯

யாழின்மிழற்றுமாதர்முதலெல்லாப்பொருளும்போயதுவும்
ஆழித்தடக்கைமுதல்வனதருளால்விளைந்ததென்றறிந்தேன்
வீழ்தலிலன்மற்றனியொன்றின்வீழ்ந்தேனமரர்முடிசூடி
வாழிவளநான்மறைமுடிமேல்வைத்தநின்றாட்டாமரையே. ரு0

பொலந்தாமரையினரசிருக்கும்பொன்னங்கொழுந்தின்முலையுழக்க
மலர்ந்தாய்பிழிதாதுறைக்கின்றமன்றற்றுளவமணிமார்பா
நிலந்தாய்விசும்பிற்றவழ்கங்கைநீர்பூத்தலர்ந்ததாண்முளரி
அலந்தார்க்களிக்கலாகாதோவமலாவெனநின்றிறைஞ்சினனால். ருக

நாட்டமிதுவந்ததுநன்றுநன்றாலம்மாநறுந்தாரோய்
வேட்டமாடுந்திறந்தன்னால்விளைந்தபாவந்தவமியற்றி
வாட்டிமறையோர்குலத்துதித்துவந்தெம்மடிசேர்கெனப்பணித்தான்
ஆட்டுந்திரைமாக்கடல்கலக்கியமுதமமரர்க்களித்தோனே. ருஉ

உழுதாயிரம்வண்டலம்பநறவூற்றுந்தொடைமார்பினன்சையின்
தொழுதான்குழைந்தான்றுள்ளினான்றுள்ளிப்புனல்கட்டுணைபனிப்ப
அழுதானுவகைத்தடங்கடலினாழ்ந்தான்வீழ்ந்துதனிமுதல்வன்
எழுதாமறையின்முடிபுனைந்தவிருதாள்சென்னிமிசைப்புனைந்தான். ருங

விடைபெற்றெழுந்தானாற்றிசையும்விழியிற்பார்த்தானிற்பனவும்
நடைபெற்றனவுங்குறைந்தவகைநாடிக்கலிவீற்றிருந்ததெனப்
படைபெற்றோங்குதடம்புயத்தான்படரும்வதரிகாச்சிரமம்
அடைவுற்றொழியாவாசையைவேரரிந்தோர்விருந்தாயினனன்றே. ருச

கலிநிலைத்துறை.

கோட்டினான்சிலைகுரைகடல்வெதும்பவெம்பகழி
மாட்டினானொருமடங்கல்போன்மதுரைவந்தெய்திச்
சூட்டினான்விளங்கெயிற்புறஞ்சூழ்பவர்நூழில்
ஆட்டினான்பலகவந்தநின்றடுகளத்தாட. ருரு

வேழவெண்மருப்பொசித்தவன்வெண்டிரைப்பாயல்
ஆழியன்னவன்றன்னொடுமாடல்வேல்யவனன்
பாழிவெம்படைபடுத்தனன்படுபொருளெல்லாம்
சூழுங்கட்டெயிற்றுவரையில்விடுத்தனனெழுந்தான். ருசு

முளைத்தவெண்பிறைக்கோட்டகார்முகிலெனவதிர்வ
களித்துவண்டுவீழ்கடாத்தநீள்கழையெனக்கனல்வ
வெளிற்றிளம்பனைக்காத்ததிண்வெங்கரிநிரைத்து
வளைத்தெதிர்ந்தனன்வால்வளைகலிப்பவேன்மகதன். ருஎ

கரைக்குறும்பெறிகடல்புரைகதழ்சினத்தானைப்
பெருக்கினானிணம்பில்குவேற்படைச்சராசந்தன்
நெருக்கவோடினனிலைக்களமிழந்தவன்கடுப்ப
அரக்கர்வேரறவடற்சிலைகுழைத்தபோரண்ணல். ௩௮

அருவிமாலையந்தடவரைக்குடையெடுத்ததிரும்
கருவிமாமழைகாத்தவனிதியெலாங்கைவிட்
டுருவவார்குழையொன்றணிந்தவனொடுமோடிப்
பருவமாமுகில்போலவோர்பருப்பதம்படர்ந்தான். ௩௯

காரிரும்புயல்களப்படுபாளைவாய்க்கமுகின்
ஆரருவியவகன்பணைமகதநாடாளும்
மூரிவேற்படைமன்னவன்முளரியாற்பொத்தும்
சாரல்வெற்பெலாந்தயங்கழலூட்டினன்மன்னோ. ௪௦

மோட்டிருங்கடல்புழுங்கவெம்முனையடுபகழி
வாட்டினானொடுவால்வளைமேனியான்றன்னை
ஊட்டுவெவ்வழலுண்ணுமென்றெழுகுநீர்மகத
நாட்டகந்தனிப்புரப்பவனடந்தனனகரம். ௪௧

கப்புவாயிப்பிகான்றவெண்முத்தொடுசெங்கேழ்த்
துப்புவெண்டிரைசுழித்தெறிதுவரையம்பதியின்
மைப்புயற்குலந்தவழ்தருவரைமுகடிவர்ந்து
குப்புற்றனொருகுழையினன்றன்னொடுகுழகன். ௪௨

முசுகுந்தற்கருள்புரியத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௭௬௩.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௨௩-வது, உருக்குமிணிமணத்திறமுறைத்த வத்தியாயம்.

---

### கலிவிருத்தம்.

ஆநத்தநாடுதனியாளுமடன்மன்னன்
ஊனுற்றவேல்விறலிரேவதனுயிர்த்த
தேனுற்றசின்மொழியிரேவதியைமைதீர்
வானுற்றதண்பனையுயர்த்தவன்மணந்தான். ௧

சேறுற்றநாண்முளரிசெம்முகநகைக்கும்
வீறுற்றதண்பணைவிதர்ப்பன்மகள்பைந்தேன்
ஊறுற்றமென்மொழியுருக்குமிணிதன்னை
மாறுற்றபொற்றிகிரிமான்மணமயர்ந்தான். ௨

என்னுமுன்வெந்திறலிராக்கதமணத்தால்
பொன்னுழிமாமுகில்புணர்ந்ததுணற்கிற்பான்
அந்நீர்மையாவையுமறைந்தருள்கவென்று
மன்னுதாத்தொடுவழங்கமுனிகூறும். ட

விண்ணுற்றதண்டலைவிதர்ப்பவளநாடன்
மண்ணுற்றசெக்கர்மணிமானுமெழின்மாதைப்
பண்ணுற்றவண்டுபடுபைந்துளவமாலைக்
கண்ணற்களிப்பதுகருத்துறவிழைந்தான். சு

வீடாதவென்றிகெழுவேந்தனதுநாட்டம்
நாடாவவன்புதல்வனச்சிலையவேலான்
வாடாதவாகைமலர்மாலைதலையாத்த
ஒடாவயப்படையுருக்குமியுரைப்பான். ரு

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

விரியல்வெண்டோட்டுமுல்லைவேயிசைவடித்தசெங்கட்
கரியவற்குதவவெண்ணல்கரும்புறழ்கிளவியாளைச்
செருமுகங்கடந்தவென்றித்திறற்சிசுபாலனென்னும்
வரிசிலைவடித்ததிண்டோண்மன்னவற்கீதுமென்றான். சா

துப்பிதழ்முளரிச்செங்கட்டுளவினன்செவ்விகேட்டு
வெப்புறழ்காமமேன்மேல்விளைதரவிரைமென்சாந்தம்
அப்பினும்வெதும்பாநின்றவலர்முலையணங்குமுன்றோன்
செப்பியமாற்றங்கேட்டுச்செவிமுதல்வெதும்பினாளால். எ

கவிமதங்கடந்தயாணர்க்கவின்குடியிருந்தகொம்மைக்
குவிமுலைப்பவளச்செவ்வாய்க்கோற்றொடிகாதல்கூறி
உவவுவெண்டிங்களன்னவொருமறையவனையாங்குப்
புவிபொதிகமலப்பொற்றாட்புயலுழைவிடுத்தல்செய்தாள். அ

உப்புநீர்ப்பரவையெல்லாமொண்மதுப்பரவையாக்கும்
குப்பைவெண்மணலிற்செய்தகுளிர்மதுக்கலுழிதூற்றும்
துப்பிதழ்மலர்ப்பூஞ்சோலைசூழ்தருதுவரையெய்திச்
செப்பினன்கண்ணற்கண்டுசென்றவம்மறைவலோனே. கூ

புடைதவழ்வானயாற்றுப்பொங்குவெண்டிரையேபோலக்
கொடிபலநுடங்குமாடக்குண்டினபுரத்துவேந்தன்
மடமகண்மறிமானன்னமதர்வைமென்றோக்கிமற்றுந்
தடவரையகலந்தோயத்தழைத்தனள்காதன்மன்றே. கO

ஆங்கவடன்னையையவாயிரம்பகுவாய்நாகம்
தாங்குபேருலகின்மன்னர்த்தருக்கறப்பொருதுவென்ற
தேங்கமழலங்கன்மாலைத்திறற்சிசுபாலனென்னும்
வாங்குவிற்றடக்கையாற்குவழங்குவானிருக்கின்றாரால். ௧௧

விழவயர்நாளின்முன்னாள்வெற்பிளங்கன்னிதன்னை
வழிபடவெழுவலாங்குவந்தெனைக்கவர்ந்திலானேல்
அழலிடையவிந்துதோன்றியஞ்சனவண்ணன்செய்ய
எழில்வரையகலந்தோய்வலென்றனளணங்கனாளே. ௧௨

என்னலுமுந்நீர்வேலியிருநிலவலயங்காக்கும்
மன்னவர்யாருங்காணமானவேல்விதர்ப்பன்காதற்
கன்னியைக்கவர்ந்துகோடுங்காண்டிநீயென்றுகண்ணன்
கொன்னவில்புரவித்திண்டேர்கொணர்கெனக்கூறினானால். ௧௩

நிலப்பொறைதவிர்ப்பவந்தோனிலமுதுகுளுக்கவேண்டிக்
கலித்தெழுகடலந்தானைசூழ்வரக்கமழ்தேன்சான்ற
இலைப்பசுங்கோதைதூதாமிருபிறப்பாளனோடு
சிலைப்புறகலினவாமான்றேரிவர்ந்தேகலுற்றான். ௧௪

கடற்படைகளுலவந்துகளத்தெதிர்வேந்தர்கொற்றம்
முடித்துமென்முருகார்முல்லைமுடித்தலர்கூந்தற்கன்னி
தொடுத்ததாரெம்பிதோளிற்சூட்டுவித்திடுதுமென்னா
அடற்பெருந்தானையோடுமலாயுதனெழுந்துசென்றான். ௧௫

ஊனகுபரிதிவைவேலுரவிறல்விதர்ப்பவேந்தன்
கானகுமலர்த்தார்மைந்தன்கட்டுரைகடக்கலாற்றான்
தேனகுமாலையம்பொற்றிறற்சிசுபாலற்கீவான்
மாநகர்புனைகவென்றுமணிமுரசறைவித்தானால். ௧௬

திருமகள்வளர்தலானுந்தெண்டிரைவேலிஞாலத்
துரைபெறுமன்றலாலேயோங்கியதிறத்தினானும்
சொரிகதிர்ப்பனிவெண்முத்தந்தோற்றுபுசுடர்தலானும்
மரைமலரென்னத்தோன்றும்வளநகர்மன்னினாரே. ௧௭

விண்ணிகர்குடுமிமாடவீதிவாய்நிரைத்தபைம்பொன்
கண்ணவிர்கமுகும்பொன்செய்கதலியும்விளங்குதோற்றம்
பெண்ணமுதோடுமுந்நீர்ப்பிறந்தபொற்பாரிசாதம்
மண்ணிடைவிழவுகாண்பான்வந்ததோர்மாட்சித்தாமால். ௧௮

மாமழைதவழுமாடமழைமுதிர்சூற்கொண்டீன்ற
தாமவெண்டாளமாலைதயங்கொளியுமிழுந்தோற்றம்
தேமொழிமன்றல்வேட்டதிறற்சிசுபாலனென்னும்
நாமவேற்றடக்கையானைநகையசிபுரிவபோலும். ௧௯

பொன்னிதழ்க்கோதைமாதர்புரிகுழல்கமழவூட்டும்
இன்னகிற்புகைவெண்மாடத்திடைவிராயெழுந்ததோற்றம்
கன்னியந்துளவமேசங்கள்ளவிழ்கமலவீட்டு
மின்னிணைக்கோடல்காண்பான்மேகம்வந்தீண்டல்போலும். ௨0

தாமரைதுறந்தசெங்காற்றளர்நடையன்னமேபோல்
கோமறுகீண்டுமாதர்குழைமுகஞ்சுடருந்தோற்றம்
காமருகமலமாதைக்கமலலோசனன்கொண்டேகல்
தேமருகமலங்காண்பான்றிரண்டெழுசெவ்விமானும். ௨௧

பைந்தொடைமுருகுதூற்றும்பகட்டெழிற்பரிதிமார்பின்
அந்திவான்மருப்புத்திங்களலர்கதிராரமின்ன
உந்துநீருலகம்விற்குமொளிமணியோடைநெற்றிச்
சிந்துரக்களிநல்யானைத்திறற்சிசுபாலன்வந்தான். ௨௨

மாக்கடல்வண்ணன்வந்துவளைப்பினுமுழுவெண்டிங்கள்
ஏக்கறுமுகத்துக்கன்னியிகற்சிசுபாலன்பால
தாக்குவனென்றுபொங்குமடற்சராசந்தனுதிக்
கோக்கணமெழுந்துசெம்பொற்கொடிநகர்குழீஇயதன்றே. ௨௩

இருபிறப்பாளனென்கொலெய்திலனின்னுமென்னு
வரிமிடற்றளிவீழோதிமனத்தினிலுணருமேல்வை
முருகுகொப்புளிக்குஞ்செய்யமுளரியம்போதுபூத்த
கருநெறிக்குவளையன்னகண்ணிடனுடிற்றன்றே. ௨௪

துளிக்கருங்கொண்டலென்னத்தோன்றிமூதுலகமெல்லாம்
அளிப்பவன்விடுக்கப்பட்டாங்களிக்குலமாற்றநுண்டேன்
தளிர்க்குமாயிரமென்றோட்டுத்தாமரைத்தெரியன்மார்பன்
களிக்கயலன்னவுண்கட்கண்ணிமுன்னெய்தினனால். ௨௫

மறுவறுசிறப்புவாய்ந்தமாமறையந்தணாளன்
முறுவல்வாண்முகமோரந்தண்முழுமதிபோன்றதேனும்
எறிகதிர்ப்பரிதியாயிற்றிளநிலாக்கற்றைதூற்றும்
செறிதொடிமடந்தைசெவ்வித்திருமுகமுளரிக்கன்றே. ௨௬

கொந்தழலுமிழும்வெவ்வாய்க்குருதிவாய்ப்படையினோடும்
பைந்தடத்தலர்ந்தநீலப்பணிமலரொதிர்ப்பவாற்றுச்
சிந்தரிமழைக்கட்பேதைசெவிமுதல்குளிர்க்குமாறு
வந்தனன்கண்ணனென்றுமறையவன்வழங்கினனால். ௨௭

வெயில்பொரவாட்டமுற்றமென்றளிர்ப்பசியவல்லி
புயல்பொழிதுவலைமாந்திப்பொங்கெழில்படைக்குமாபோல்
மயிலெருத்துறழுமேனிமாயவன்வரவுகேளாக்
குயிலெனமிழற்றுயாதுகொழுங்கவினெய்தினளே. ௨௮

புரிவளையலறிமுத்தம்பொழிபுனற்றடங்களெல்லாம்
விரைகமழ்கமலம்பூத்தவிதர்ப்பநாடணைதல்செய்தான்
குரைதிரைப்பரவைமுந்நீர்க்குவலயம்வந்துதோன்றும்
ஒருபெருங்கமலம்பூத்தவுந்தியந்தடத்துநம்மான். ௨௯

பொழிமதவருவிமாலைப்பொருப்பின்வெண்கோடுகொண்ட
எழுவுறழ்தோளினனம்மின்னனைக்கனிவாய்மாதின்
விழவினுக்கடைந்தானென்றுவீங்குநீர்விதர்ப்பங்காக்கும்
கழைசுளிகளிநல்யானைக்காவலனெதிர்கொண்டானல். ௩௦

ஆயிரம்பகுவாய்நாகத்தறிதுயிலேற்குஞ்செய்ய
ஆயிரங்கண்ணினன்வந்தடைதலுமிடைந்துபாண்வண்
டாயிரமலம்புதாரிவ்வண்ணலேர்காணக்கண்கள்
ஆயிரம்பெற்றிலேமென்றகங்கனிந்துருகிநிற்பார். ௩௧

வலம்புரிபொறித்தசெங்கைமரைமலர்தனிலொண்சேழ
வலம்புரிதிசழத்தாங்கிவருவதுமிகையென்றேயோ
வலம்புரிதாங்கல்செய்யான்வந்தனனிலவுகாலும்
வலம்புரித்தடக்கையானேவாழியிவ்வள்ளலென்பார். ௩௨

ஆழியம்பொருப்புவேலியவனியோரேழுமொற்றை
ஆழியேகாக்குந்தீவாயாழிமற்றென்கொலென்றே
ஆழிகைத்தாங்கல்செய்யானடைந்தனனாழியானே
ஆழியந்தேரிற்றோன்றுமரசிளங்குமரனென்பார். ௩௩

நாமெலாம்பண்டுசெய்தநற்றவமுடையேமாயின்
தாமரைமலரினீங்கித்தண்பணைவிதர்ப்பங்காக்கும்
கோமகன்மனையிற்றோன்றுங்கொழுங்கயற்கருங்கட்செவ்வாய்க்
காமருவனப்பினாளைக்கவருமிக்காளையென்பார். ௩௪

எழுதருஞ்செவ்விவாய்ந்தவீங்கிவன்றனக்கேயந்தண்
முழுமதிபுரையுமொண்முகத்தவளுரியளென்பார்
மழைமதர்நெடுங்கட்செவ்வாய்மாணிழையவட்கேமற்றித்
தழைவிரிதுளவத்தண்பூந்தாரவனுரியனென்பார். ௩௫

கருங்கடலன்னசாதல்கைம்மிகவளைத்துநீண்ட
கருங்கடலன்னகண்ணார்கருந்துழாய்ப்படலைமாலைக்
கருங்கடல்வண்ணன்றன்னைக்கண்டொறுங்கதிர்கள்பொங்கு
கருங்கடற்படுவெண்சங்கங்கையிகந்தொழியநிற்பார். ௩௬

நுணங்குமென்மருங்குநோவநுண்ணெழில்வாய்ந்தமாமைச்
சுணங்கணிந்தேந்துகொங்கைத்தோகையர்தூசுவாரி
மணங்கமழ்கடப்பினேறுமாயனைக்காணுந்தோறும்
அணங்காவுரியினன்னவந்துகினெகிழநிற்பார். ௩௭

அலங்குவெண்மதியைவென்றவண்ணல்வாண்முகத்தைமானும்
மலர்ந்தசெங்கமலமென்றுமதிப்பதோர்மதிகொலென்பார்
பொலங்கிரிமருளவீங்குபுயத்தொடுபொருவுமென்ன
இலங்கொளிநீலக்குன்றமெத்தவம்புரிந்ததென்பார். ௩௮

செஞ்சுடர்விரிக்குமின்னுத்திரண்டெழுதோற்றம்போல
மஞ்சிவர்குடுமிமாடமறுகுதோறீண்டுமாதர்
நெஞ்சகமுருகாநிற்பநித்திலமுறுவற்செவ்வாய்
அஞ்சனவண்ணனங்கோரகன்மணிக்கோயில்புக்கான். ௩௯

உரைப்பரும்பொலிவிற்றாகியோசனைநூறுதெய்வ
மருக்கமழ்மாலைக்காங்கோர்மலர்மணங்கொளுத்துமாபோல்
அரக்கிதழ்க்கமலநீங்கியரசிற்பிறந்தமன்றற்
புரிக்குழற்பவளச்செவ்வாய்ப்பூவையைப்பனைதல்செய்தார். ௪0

முள்ளரைமுளரியன்னமுழுநகைமுகத்தினுடன்
வள்ளைவார்காதிற்றாழ்ந்தமணிக்குழைகுலாயதோற்றம்
கிள்ளையிற்சிறந்தபாராள்கேள்வன்மேற்றாதுபோக்கும்
பிள்ளையஞ்சுரும்புவந்துபேசுவபோன்மற்றம்மா. ௪௧

முருகுணமழலைவண்டுமூசுபூங்கூந்தற்பேதை
அரிபரந்தகன்றவாட்கணஞ்சனமணிந்ததோற்றம்
திரைபடிந்தெழுந்தகாரிற்றிகழ்பவனுருவக்காந்தி
பருகினதெவிட்டிக்காலும்பான்மையேபோலுமாலோ. ௪௨

ஒடிக்கவஞ்சுடர்கால்பச்சையொண்மணியாரந்தாழ்ந்து
வடிக்கருங்கண்ணிகொம்மைவரிமுலைத்திகழுந்தோற்றம்
கடற்புவிபொதிந்தசெம்பொற்கனைகழற்காளைகாமர்
அடைத்துழாயலங்கன்மாலையணிந்ததுபோலுமன்றே. ௪௩

கழைக்கரும்பனுக்குமின்சொற்கன்னிமென்மருங்கிற்கொம்பு
குழைத்தெழுகொங்கைமுன்றிற்குங்குமமெழுகுந்தோற்றம்
அழைத்தமால்களிறுகாத்தோனமபசட்டலைகன்மார்வம்
தழைத்தசெம்மணியின்காந்திதவழ்ந்ததுபோலுமன்றே. ௪௪

புரிநரம்பிரங்குசொல்லாள்புணர்முலைக்களிநல்யானைச்
சொரிகதிர்ப்பனிவெண்முத்தஞ்சுடர்தரச்சூடுந்தோற்றம்
பெருமதவரைநீள்கோடுபிடுங்கினன்குவவுத்திண்டோள்
வரையொடுமலையத்தும்பைமலைந்தனபோலுமாதோ. ௪௫

மலர்தலையுலகங்காத்தோன்மலரடிகங்கைசேர்ந்த
துலகெலாமுயிர்த்தாள்பொற்றாளுறுதுசாமென்றுநாடி
அலைதவழ்யமுனைசெய்யவடிமலரடைந்ததேய்க்கும்
சிலைநுதல்புனையுநீலச்சில்லரிச்சிலம்புமன்றே. ௪௬

மருப்பிளந்திங்களன்னவாண்மருப்பொசித்தமைக்கார்
விருப்பிளந்தோகைவெவ்வாய்வேற்படைவெள்ளஞ்சூழ
அருப்பிளமுலையாரீண்டவாடகப்பசும்பொற்கோட்டுப்
பொருப்பிளங்கன்னிநோன்புபோற்றுவான்போயாண்மாதோ. ௪௭

முதுமறைமுதலிசெம்பொன்மொய்வரைமார்வமேவி
விதுபுனைசடிலன்றூயவிரிஞ்சனாதியரைப்பூத்துப்
பொதுமலியருளினோம்பிப்புரக்குநம்மன்னைதண்பூ
மதுவருகூந்தற்கன்னிவணக்கமேற்கொளல்வியப்பே. ௪௮

கன்னிநன்னகரினெய்திக்கள்ளயாவுயிர்க்குமந்தண்
கன்னியந்துளவுசூடுங்கண்ணனேகணவனாகக்
கன்னிநீயருள்செய்கென்னக்கண்ணுதல்வேட்குங்கொங்கைக்
கன்னியையுலகமீன்றகன்னியாங்கேத்தினாள். ௪௯

சில்லரிச்சிலம்புபாடக்கிங்கிணிசிலம்பக்காஞ்சி
ஒல்லெனவொலிப்பச்செம்பொனெழுகுமாலியமீன்ற
வல்லியைவலங்கொண்டேகிமடநடையன்னமன்னாள்
எல்லிலங்காழித்திண்டேரேறுவானெண்ணிநின்றாள். ௫௦

நறையகிலாவியுண்டுநரந்தமுமலருநாறி
உறைமுகிலாவியுண்ணுமொலிகருங்கூந்தற்கற்றை
செறிதொடியிடக்கையேந்திச்செம்மலெங்கிறுத்தானென்னாக்
கறையுறுவடிவேலன்னகண்மலர்பரப்பினாள். ௫௧

சூழ்படைகிழியத்தெய்வச்சுடர்மணிப்பொலந்தேர்தூண்டி
ஆழ்கடலவனியாளுமரசருங்காணவாங்குப்
போழ்படுதிங்களன்னபுதுநிலாக்கற்றைதூற்றும்
காழிளமுலையினாளைக்கவர்ந்தனன்கமலக்கண்ணன். ௫௨

வெண்டலைப்புணரியாடும்விரிகடல்கலக்கிக்கொண்ட
பண்டருகிளவியாளைப்படைக்கடல்கலக்கிக்கொண்டு
சொண்டலங்கொழுந்துமின்னுக்கொடிதலைமணந்ததொத்தான்
வண்டுணமலர்ந்ததெய்வமாசதத்துளவத்தாரான். ௫௩

ஆலமுற்றிருந்தவெள்வேலடற்சராசந்தனாதி
மாலைவெண்கவிகைவேந்தர்மறலிவாளரவிற்சீறிக்
கோலவெந்தூணியாத்துக்கொடுமரங்குழையவாங்கிக்
காலியற்புரவித்திண்டேர்கதுமெனக்கடாஅய்ச்சூழ்வுற்றார். ௫௪

கலிநிலைத்துறை.

மாற்றாதவென்றிமறமன்னர்மலங்கிவீற்று
வீற்றாகவோடவிறற்பால்வளைமேனிவள்ளல்
கூற்றாடவாடுங்கொடித்தேர்கடிதோட்டியாங்கே
ஏற்றானிடிக்குமிடிபோலவின்னாணெறிந்தான். ௫௫

மாமன்னதோன்றன்மறலைவரிவில்வணக்கும்
சராசந்தனோடுதனியேறெனச்சென்றுதாக்க
அராகின்றெழுந்தோனரவத்தடந்தேரினந்தண்
குராமன்னுநீழற்குழற்கொம்பினைக்கொண்டெழுந்தான். ௫௬

வாடாதவென்றிசெழுவால்வளைவண்ணன்வல்வில்
கோடாதமுன்னங்குலைவுற்றுவிற்கோட்டல்செய்யான்
ஆடாதவெம்போரினியாடுதுமென்றெதிர்ந்த
ஓடாததானைமகதர்க்கரசோடினானால். ௫௭

கார்வாய்க்கிழிக்குங்கதிர்மின்னனையாளைவந்து
போர்வாய்த்திகிரிப்புயல்வவ்வினனென்றுவாடும்
தார்வாய்த்திணிதோட்சிசுபாலனைச்சென்றுசார்ந்து
சீர்வாய்மகதத்திருநாட்டிறைதேற்றலுற்றான். ௫௮

மல்லுங்களிறுங்கடந்தானொடுமாறுடன்று
செல்லுஞ்செருத்தோறுடைந்தேனெதிர்சென்றுதாக்கி
வெல்லுந்திறனுமொருகால்விளைவுற்றதன்றே
சொல்லுந்திறனென்கலங்கேலெனசொற்றுநீத்தான். ௫௯

மூளைகாண்மதியிற்றிகழ்வாணுதன்முல்லைமூரல்
இளையாளைமாயனெறுழாற்கவர்ந்தேகனேக்கி
விளையாதசீற்றம்விளைவுற்றனனீள்விசர்பப
வளநாடன்மைந்தன்வடவானலம்போலெழுந்தான். ௬௰

தெரிவுற்றமுல்லைக்குழலான்றனைச்செற்றுத்தீந்தேன்
விரையுற்றமுல்லைக்குழனங்கையைமீட்கிலேனேல்
முருகுற்றபைந்தார்முடிமன்னவர்முன்னமீண்டு
வரையுற்றமாடமணிமாநகர்வாரலேனால். ௬௧

வாட்டானையெல்லாமெழுகென்றுவில்வாங்கிமான்றேர்
ஒட்டாவழல்வாயுமிழ்வாளிதெரிந்துசெல்லா
நாட்டாமரைமேலுறைகின்றவணங்கைமுன்னோன்
தாட்டாமரைக்கட்கரியோனொடுதாக்கினின்றான். ௬௨

பூத்துந்தியந்தாமரைவாய்ப்பொழிலேழொடேழும்
காத்தெங்குநின்றகருணைக்கடன்மேற்கனன்று
கோத்தண்டமுற்றுங்குலுங்கச்சிலைநாணெறிந்து
தீத்தும்முவாளிசிலசிந்தினன்றீயொடொப்பான். ௬௩

வாரும்பசுந்தேன்படிந்தஞ்சிறைவண்டுபொற்றூ
தாருஞ்செழுந்தார்புரளம்பகட்டாரமார்பன்
தேரும்பரியுஞ்சிலையோடிதுணிந்துசிந்தக்
காருங்கடலும்புரைவான்சிலைசாய்குழைத்தான். ௬௪

துஞ்சாமணிப்பூண்டுயல்கொங்கைசுமந்தொசிந்த
அஞ்சாய்மருங்கினமுதன்னவண்முன்னுதித்தோன்
செஞ்சோரிகான்றுதிகழ்கின்றவொள்வாள்விதிர்த்து
நஞ்சூறுநாகத்துயிர்தீர்ந்தவன்முன்னடந்தான். ௬௫

வில்லற்றுவாளோடெதிர்ந்தான்றனைவீட்டமாயன்
எல்லிற்கதிர்கான்றெறிவெஞ்சினவெஃகமேந்தக்
கொல்லற்கவென்றுகொடியின்னின்வயங்குகோதை
யல்லற்கமஞ்சுன்மழைவண்ணனைவேண்டினாள். ௬௬

ஊனாறுவெள்வேல்விறலோனையொர்தூசினாங்கி
வானாறுநக்குங்கொடித்தேர்மிசைமன்னையாத்துத்
தேனாறுதாமஞ்செறிகுஞ்சிகுறைத்தல்செய்தான்
மீனாறுவேலைக்கடல்வெம்பவில்வாங்குமேகம். ௬௭

பால்வண்ணனுங்குப்படுவெஞ்சமரேற்றுநின்ற
கோல்வண்ணவல்விற்குலமன்னவர்பாறவென்று
சூல்வண்ணமேகக்கொழுந்தாமெனத்தோற்றம்வாய்ந்த
நீல்வண்ணநேமிநெடியோனுழையெய்தினானே. ௬௮

வீக்குஞ்செயற்குமுனியாவருவேலினானை
யாக்கும்பிணிப்பினிடைநின்றுமகற்றியாவும்
காக்குங்கருணைக்கடன்முன்னமுதித்தகாளை
சேக்குங்குவளைத்தடங்கண்ணியைத்தேற்றினானால். ௬௯

கலிவிருத்தம்.

பொருப்புறழுமாடமலிபோசகடமென்னும்
திருக்கிளருமாநகர்திறப்படவியற்று
உருக்குமியுறைந்தனனுருக்கமைபசும்பொன்
தருக்கிளர்துறக்கநகர்தன்னகர்தணந்தே. ௭௦

தன்னிகரில்கற்பகதருக்கொணர்கருங்கார்
பொன்றொழுகுவல்லிகொடுபோவதுகடுப்ப
மின்றொழுகுபூணணியுமெல்லியறனைக்கொண்
டின்னெழில்சிறந்தநகரின்புறவடைந்தான். ௭௧

துளும்புகதிர்முத்தலைசுருட்டுநெடுமுந்நீர்
விளிம்புதிகழ்மாநகரமேவிவிரிபொற்று
தளைந்தளியலம்பலரினன்னமெனவாழ்வாள்
இளம்பவளவல்லியெனவின்னெழில்சிறந்தாள். ௭௨

வேழநகர்மன்னர்முதல்வெண்டிரையுடுத்த
எழிருநிலத்தரசர்யாவருமிறுப்ப
வாழிநெடுவானவர்வழுத்தமணிவண்ணன்
ஆழிதருமின்னமுதமன்னவளைவேட்டான். ௭௩

இக்கதையிசைக்குநரிசைப்பதுவிருப்பால்
புக்கினிதுகேட்குநர்கள்பொன்னிதழ்விரிக்கும்
செக்கர்கமலத்தவடிருந்தருள்வழங்க
மக்களொடுமிப்புவிமகிழ்ந்துறைவர்மாதோ. எசு

உருக்குமிணிமணத்திறமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆஆ திருவிருத்தம் அ௩ள.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## உச-வது, பிரத்துமனனவதரித்தவத்தியாயம்.

---

### எழுசீர்க்கழிநெடி லாசிரியச்சந்தவிருத்தம்.

தெண்டிரைத்துயின்றநம்பிசெம்பொனாரமார்புதோய்
வண்டாற்றுகோதையவ்வயிற்றுவந்துதித்தனன்
துண்டவெண்பிறைக்கொழுந்துசூடுநக்கணெண்ணுதற்
கண்டிறந்தகாலேயிற்கரிந்திறந்தகாமனே. க

ஊற்றிருந்துபச்சிரத்தமொழுகுகின்றபரிதிவேற்
சீற்றமிக்கசம்பரன்றெரிந்துவெய்யபகையெனு
மாற்றருஞ்சிறப்புவாய்ந்தமன்றல்வேனிலானையவ்
ஈற்றறைக்கரந்தெடுத்திருங்கடற்படுத்தினன். உ

அலைகுளித்தவேனிலானையாங்குமீன்விழுங்கவோர்
வலைஞன்மற்றுமயிலைவீசுவலையகப்படுத்திட
நலமிகுத்தநீதெனுநயந்துபோர்கடந்தவேற்
றலையலங்கல்வாகைவேய்ந்தசம்பரற்குநல்கினன். ௩

மட்டருந்திவண்டுபாடுமன்றன்மாலைமார்பினன்
அட்டிலிற்கொடுப்பவட்டின்முதல்வியாயமர்ந்திடும்
இட்டிடைத்தடங்கொள்கொங்கையிரதிமீன்குறைத்தலும்
விட்டிலங்குகுழவிமீனுள்விழிகளிப்பநோக்கினள். ௪

மெல்லென்முல்லைமூரலாள்வியந்தெடுத்தகாலையாழ்
வல்லமாதவத்தனெய்திவாணெண்டுங்கண்மங்கையிவ்
வெல்விலங்குகுழவிமாயனீன்றதோன்றல்வேனில்ஞ்
செல்வனின்மணாளனென்றுதேர்ந்துதன்மைசெப்பினன். ௫

இளங்களிச்சுரும்பர்கோடியேடுலாவுமுகைகிழித்
தளர்ந்துபாடவூறுமட்டுறைத்தமாலைவேனிலான்
விளங்குவானிலாவுகுத்தவெண்பிறைக்கொழுந்துபோல்
வளர்ந்தனன்றளர்ந்தநுண்மருங்குன்மாதர்மயரவே. ௬

காளையாயகாலையிற்கருப்புவிற்குழைத்தபோர்
வேளையோர்தணிந்தநீலவெற்பெனப்பணைத்ததிண்
டோளைநோக்கிநீலமுந்துளங்குகொற்றம்வாய்ந்தகூர்
வாளும்வென்றகண்ணிகாதல்வாரிவீழ்ந்தழுந்தினாள். ௭

கன்னல்வில்விசெங்கயற்கருங்கணாள்குறிப்பறிந்
தன்னைநீவிழைந்தசென்னையம்மவென்றியம்பலும்
மன்னனீயெனக்குமாயன்மைந்தன்வேனிலானென
மின்னுநுண்மருங்குலாள்விளைந்தவாவிளம்பினாள். ௮

நஞ்சளாவியமுதுதோய்ந்தநாமவேற்கருங்கணாள்
கஞ்சனைக்களத்துவென்றகண்ணன்மைந்தவிண்ணுலாம்
மஞ்சிலங்குமின்னினன்னவாள்வலங்கொள்சம்பரன்
வெஞ்சமங்கடத்தியென்றுவிஞ்சையொன்றுநல்கினாள். ௯

அரிமழைத்தடங்கணாளளித்தவிஞ்சையெய்தலும்
விரைகொழித்ததும்பைசூடிவேனிலாளிவல்லைபோய்ப்
பொரவழைப்பவிழிசிவந்துபொருமடங்கலேறுபோல்
எரியழற்சினத்தினானெதிர்ந்துபோரியற்றினான். ௧0

தண்டமொன்றுதாங்கியும்பர்தலைபணிப்பநெடியமூ
தண்டகோளமதிரநின்றடித்தசம்பராசுரன்
துண்டமாகமின்னெனச்சுடர்ந்தவாளின்வீட்டினான்
வண்டுபாடவாய்நெகிழ்ந்தவாகைமாலைசூடினான். ௧௧

வெளிமுகங்கிழித்தெழுந்துமின்னினன்னமாதொடும்
துளிமதுக்கடுக்கையான்றுளங்கவெய்தவேனிலான்
அளிகிடந்தலம்பவாயவிழ்ந்தகண்ணிமாயன்வாழ்
நளிகடற்கிடங்குடுத்தநன்னகர்க்குநண்ணினான். ௧௨

வேழவெம்படைத்தடக்கைவேனிலானிறுத்தலும்
கேழ்கிளர்ந்ததண்ணிலாக்கிளைத்தசங்கினோடுகூர்
ஆழிதாங்குசெங்கைநங்கையென்றுகோனகர்
காழணிந்தவெம்முலைக்கருங்கணார்மயங்கினார். ௧௩

அழலுநச்செயிற்றுவாளராவணைத்துயின்றமால்
எழில்விளங்குதேவிநோக்கியித்தறைக்கரந்தபைங்
குழவிகோலமன்னதேந்தல்கோலமென்றுமுலைசுரந்
தொழுகுபாலினிலனெகிழ்ந்துளுருகிநின்றிரங்கினாள். ௧௪

அறிந்தமாயனென்றுமாங்கறைந்திலனிருப்பவேல்
எறிந்தமைத்தடங்கணுண்முன்னெய்திநின்வயிற்றிடைப்
பிறந்ததோன்றலிவனெனப்பிறந்தவண்ணமோதினான்
உறழ்ந்துமென்னரம்புளர்ந்தவொற்றைமாதவத்தினான். ௧௫

காவிவென்றுவேல்பொருங்கருங்கயற்கணிருகக்
கோவைமுத்தணிந்தகன்னகொங்கைபால்கொழிப்பநின்
றாவியன்னமைந்தனைத்தனங்கையிற்றழீஇயினாள்
ஓவியப்பொலங்கொழுந்துவப்பசும்புளூரவே. கசு

மலைக்குமாழியானுமாழிமாலைநக்குமன்னனும்
சிலைக்கைமன்னன்மன்பெருஞ்சிறப்புவாய்ந்ததேவியும்
கலித்தவெண்டிரைத்தடங்கடற்சுறாவயிர்த்ததம்
குலக்கொழுந்தையன்பினிற்குழைந்துபுல்லினாரோ. கஎ

வேறு.

எழில்வளர்மாயாவதியெனும்பேர்பெற்றிருந்தவவ்வின்னகைமங்கை, கழைவளர்தோளிலெழுதுதீங்கரும்புகன்னவிற்றேளினிற்கதுவத், தழுவுதற்கடங்காத்தடமுலைமுகட்டிற்றண்மலர்த்தார்வடுப்பொறிப்ப, விழைவினிற்றமுவிவிழிகவர்வனப்பின்வேனிலஞ்செல்வன்வீற்றிருந்தான். கஅ

பிரத்துமன னவதரித்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகதிருவிருத்தம் அருகு.

ஸ்ரீகிருஷ்ண சகாயம்.

---

## உடு-வது, சத்தியபாமையை மணம்புரியத்தியாயம்.

---

### எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கொத்தலைதவழுங்குரைகடல்பொடித்தகுழவியஞ்செங்கதிர்ப்பரிதி, ஒத்தொளிகிளைக்குஞ்சமந்தகமணியோ டொருதனித்திகிரியான்றனக்கு, முத்தவெண்கவிகைமன்னவர்பசும்பொன் முடிபொரச்சிவந்தபூங் கழற்காற், சத்திராசித்துசித்திலமுறுவற்சத்தியபாமையைத்தந்தான். க

என்னலும்பின்னற்றிரைமுகஞ்சிவப்பவெழுந்தமாமணிகிடந்திமைக்கும், பொன்னுறையலங்கன்மார்பினுன்றனக்குப்பொழிகதிர்மணியொடு துவர்வாய், அன்னமென்னடையவணங்கினையரசனளித்தது விரித்தருளென்னு, மின்னகுபரிதிவேலினன்கிளப்பமெய்த்தவன்விளம்பலுற்றனனால்.

எரிமணிச்செஞ்சுட் டராவணைதுயிலு மிறையவரிறைவன்மார் வத்துத், திருமணிகடுப்பப் புணரிமேன்முளைத்துச் செம்பொன்மால் வரைவலந்திரியும், ஒருதனியாழித் தேரவற்பரவி யுடைதிரையாழியே முடுத்த, பெருநிலங்காக்குஞ் சத்திராசித்துப் பெற்றனன்சமந்தக மணியே. ௩

விழுத்தவப்பேற்றலடைந்தமாமணியைவிரைமதுத்துளித்தபூந்தாரான், கழுத்தினிற்புனைந்துவருதலு மற்றைக்கடிநகர்மாக்களுக்கினர்கண், வழுக்குசெஞ்சுடர்செய் பரிதியஞ்செல்வன்வருமெனத் திருமறுமார்பன், தழைத்தவெண்ணிலவு பொழிமதிக்கவிகைச் சத்திராசித்தெனக் கிளந்தான். ௪

விரிகடல்வயிறகீண்டுசெங்குருதிவெள்ளம்வந்தெழுந்தெனத்தவழும்
எரிகதிர்க்கற்றைசொரிமணிபிறப்பவெறுழ்வலியாவுகாலயர்த்த
வரையினிற்கலக்கும்வலயபுரித்தடக்கைவள்ளலம்மன்னனைநோக்கித்
திருவிழைபவளச்செய்யவாய்திறந்துசெம்மணிதருகெனக்கிளந்தான். ௫

செறியிருட்குறும்புதிசைத்திசையிரியத்திகிரியொன்றுருட்டுசெங்கதிரோன், மறைதரத்திகிரிவழங்கியதடக்கைமரகதவுருவினன்றனக்கு, உறுபொருள்வேட்கை யுடையனாய்க்களித்தவ் வுலம்பொருதோளினானொருநூற், றறுபதுநூலாய்பொனாடொறுமீனு மழன்மணி கொடுக்கிலேனென்றான். ௬

வெள்ளிவெண்டிங்கண் மீமிசைகவிப்பவிளங்கிளஞாயிறு நடந்தாங், கொள்ளொளியெறிக்குஞ் சமந்தகமணிபூண் டொற்றைவெண்கவிகைமேணிழற்ற, எள்ளருந்துப்பிற் சத்திராசித்துக் கிளவலாமெழிற்பிரசேனன், வள்ளுகிரிமாவழங்குதண்சாரல்வரையிடைவேட்டமேலெழுந்தான். ௭

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

அருவரைச்சாரல்வேட்டையாடுழியழன்றுபொங்கி
நிரையுளையரிமானேறுநிழல்சுளிகளிறுமானும்
வரிசிலையுழவற்கொன்றுமழகதிர்ப்பரிதியென்ன
எரிசுடர்க்கற்றைதூற்றுமெழின்மணிகவர்ந்தன்றன்றே. ௮

சோக்களிற்றுழவன்மார்பிற்குருதிநீர்தெறித்ததென்னத்
தீக்கடைதவழ்ந்தசெங்கட்டெறுசினவரிமாத்துஞ்சத்
தாக்கினன்மணிக்கைகொண்டுசாம்பவன்பிலத்துநண்ணித்
தூக்கினன்குழவியாடுந்தொட்டின்மேற்சுடரமன்னோ. ௯

தம்பியைக்காண்கிலானாற்சத்திராசித்துமாழ்கி
வெம்புசெஞ்சுடர்செய்சீர்சால்விழுமணிப்பொருட்டுப்பற்றித்
தும்பிவெண்கோடுகொண்டதொடிபொலிதடக்கையானே
எம்பியைச்சவட்டினானென்றெடுத்தெடுத்தியம்பலுற்றான். ௧௦

கடங்கலுழ்களிற்றுமன்னன்கரைவதுகேட்டுக்கண்ணன்
தடங்கிரிச்சாரலெய்தித்தாமவேற்காளைமாண்டு
கிடந்ததுமரிமாத்துஞ்சிக்கிடந்ததுமெண்கொன்றாங்கு
நடந்ததுங்கண்டுமற்றந்நடவையினடந்தான்வல்லே. ௧௧

இருட்பிலமொன்றுதோன்றவிருள்படுபிலத்தினெல்லைச்
சரைக்குறும்பெறிந்துபொங்குகருங்கடற்றுளைநிற்பத்
திரைத்தலைபிளந்துதோன்றுஞ்செங்கதிர்ப்பரிதிநாண
உருத்தெறிஞானூர்ந்தவருவினனெல்லைபுக்கான். ௧௨

குழவியின்விளையாட்டாகக்குழவியம்பரிதிபோலும்
எழின்மணிசுடரநோக்கியிந்திரநீலவெற்பின்
ஒழுகொளிவிரியுநம்மானுற்றனனாகத்துண்ணென்
றழுதனளழைத்தாண்மற்றவரும்பெறற்குழவிசைத்தாய். ௧௩

அஞ்சனத்தடங்கணல்லாளழுதனளழைத்தல்கேளா
நஞ்சுகொப்புளிக்கும்பேழ்வாய்நகுதலைநாகமேபோல்
வெஞ்சினந்திருகியெண்கின்வேந்துவந்தெழுதலாகா
மஞ்சனான்றன்னொடேற்றுமல்லமர்மலைதல்செய்தான். ௧௪

வெலற்கருங்களிறுபோலவெந்திறலெண்கின்வேந்து
மலைத்தலுமலையினாலேழ்மைம்முகின்மாரிகாத்தோன்
கொலைப்படையெடுக்ககில்லான்குங்குமக்குவட்டின்வீங்கிச்
சிலைத்தழும்பிருந்ததோளாற்செஞ்சமம்புரிந்தானன்றே. ௧௫

ஒல்லெனவருமின்வெம்போருழந்துறுவொன்பான்வைகல்
செல்லலுமெண்கின்வேந்துதெள்ளிதிற்றெளிந்துகொற்ற
வில்லினாலிலங்கைசெற்றவிறல்கெழுதடக்கைவீரன்
அல்லைகொனீயிங்கென்னோவடைந்ததென்றேத்தினானால். ௧௬

பணிபுரைசீற்றத்துப்பிற்பஃறலையரக்கன்சூடும்
துணிகதிர்மகுடபந்திதுணியவெஞ்சிலைகால்கோட்டும்
அணிமணிக்குன்றமன்னானலர்கதிரெறிக்குஞ்செக்கர்
மணியினுக்கடைந்தவண்ணமணியிதழ்விண்டுசொன்னான். ௧௭

வெண்மணிசுழிக்குந்தெண்ணீர்வியன்பணைவிதர்ப்பவேந்தன்
கண்மணியனையநங்கைகாதலங்கொழுநற்காங்குப்
பெண்மணியோடுமுந்நீர்ப்பிறந்தசெங்கதிரினன்ன
ஒண்மணியெண்கின்வேந்தனுவப்பொடுமுதவிநின்றான். ௧௮

எண்கின்வேந்தளித்தசாம்பவதியெனுமிலவச்செவ்வாய்ப்
பண்கனிமழலைத்தீஞ்சொற்படாமுலைப்பவளவல்லி
கண்கவர்மணியினோடுகாண்டகவிளங்கக்கொண்டு
மண்கவர்கமலத்தாளான்மாகடலென்னமீண்டான். ௧௯

பன்னிருவைகல்காறும்பாயிருட்பிலத்தினெல்லை
துன்னியதானைநம்பிதோன்றுதல்காண்கலாமே
மன்னியநகரமெய்திமால்வரவருள்செய்கென்னாக்
கன்னியர்துளவுசூடுங்கன்னியைப்பரவிற்றன்றே. ௨0

சிந்துரவருவிபோலச்செய்யபூஞ்சுண்ணமாடி
அந்தளிர்தொடுத்தகோதையழிகடக்கலுழிபாய
இந்திரநீலவெற்பினெழில்பெறப்பணைத்ததோளான்
வந்தனன்புணரிவேலிமாநகர்க்கிழமன்னோ. ௨௧

நளிர்கடல்கடைந்துவானநாட்டினர்க்கமுதநல்கி
அளைகவர்ந்துண்டவம்மானவைக்களத்தழைத்தல்செய்யாத்
தளையவிழலங்கன்மாலைச்சத்திராசித்துக்காங்கு
விளைதிறமுழுதுங்கூறிவிழுமணிநல்கினானால். ௨௨

பிழைத்தனமென்றுவேந்தன்பிழைத்தவப்பிழைப்புத்தீர்ப்பான்
விழைத்தகுமணியிஞேடுவெண்டலேப்புணரிவேலே
தழைத்ததெள்ளமுதின்சாயற்சத்தியபாமைதன்னே
மழைப்புயலன்னமேனிவள்ளலுக்குதவிஞனே. உரு

பொன்னிதழ்க்கமலவீட்டுப்பொற்கொழுந்தணிந்தமார்பன்
கன்னலுமமிழ்துங்கூட்டிக்கவின்குழைத்தெழுதுபாவை
அன்னமென்மருங்குற்செவ்வாயலர்முலேயணங்கைவேட்டு
மின்னகுமணியைமீட்டும்வேந்தனுக்கருளிஞனல். உசு

சத்தியபாமையைமணம்புரியத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் அஎக.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## உசுஎ-வது, சததன்னுவாவைக்கொன்றவத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அனலுமிழ்திகிரிமாயனதிந்தனனிருந்துமைவர்
புனேயரக்கில்லஞ்சேர்ந்துபொன்றிஞரென்னலோடும்
பனேவலனுயர்த்தசெங்கட்பாணிறவண்ணனேடு
நனேகவுட்களிநல்யானேநகர்க்கெழுந்தேகிஞனே. க

கங்கையாள்காதன்மைந்தன்கல்லென்வெண்டரங்கவேலே
அங்கண்மாஞாலங்காக்குமம்பிகைபுதல்வன்மற்றை
வெங்களிச்சிறுகண்யானேவிதுரனுற்றுவரையீன்ற
நங்கையென்றிவரைக்கண்டுநம்பியாங்கிருந்தான்மன்னே. உ

களிமுகச்சுரும்புண்கோதைகாந்தினிமகனுஞ்செய்ய
கிளரொளிப்பரிதிவைவேற்கிருதவன்மாவுமற்றுங்
களேயுறையரியேறன்னவடற்சததன்னுவாவின்
வளமனேகுறுகிமெல்லவகுத்துரையாடலுற்றுர். ௩

மாறிலாய்சினக்குநேர்ந்தமழைமதர்நெடுங்கணுளேத்
தேறல்பாய்தெரியன்மாலேத்தேவகிகுமரற்கீந்த
தாறுபாய்களிநல்யானேச்சத்திராசித்தையின்னே
கோறல்செய்தவன்கைக்கொண்டகுருமணிகோடியென்றுர். ச

அணிபுரைபணேமென்றேளாரலர்சதிராரந்தாழ்ந்த
பணேமுலேபொருததாரான்பள்ளிகொள்களிறுபோலத்
துணர்விரியமளிமீதுதுஞ்சுழியெருக்கித்துஞ்சா
மணியிலேக்கவர்ந்தான்மற்றமானவேற்றடக்கையானே. ரு

தண்ணறுங்கோதைசோரச்சத்தியபாமைநெஞ்சம்
துண்ணெனச்சோர்ந்துமாழ்கிச்சுடர்செய்வேற்றந்தைதன்னை
எண்ணெய்பெய்தோணியிட்டாங்கெய்தினள்கொழுநன்றன்பால்
புண்ணுறுபுலவுவாட்கட்புலம்புமுத்துகுப்பநின்றாள். ௬

கேட்டனன்விளைந்தவண்ணங்கிளர்கடலுலகங்காப்பச்
சூட்டுவாளரவப்பள்ளிதுயிற்சுவைதுறந்ததொல்லோன்
மோட்டுவெண்டிங்கண்மேனிமுன்னவன்றன்னொடொல்லை
ஓட்டினன்கொடிஞ்சித்திண்டேருற்றனனகரமாதோ. ௭

உந்துநீருலகங்காக்குமொருதனித்திகிரிமாயன்
வந்தனனென்னவோடும்வயிறெரிதவழ்வஞ்சிக்
கொந்தழல்வேலினானைக்கொன்றெறிமணிகைக்கொண்ட
கந்தடுகளிற்றுத்தானைக்காவலன்கலக்கமுற்றான். ௮

மழைத்தலைமின்னனார்தம்வரிமுலைக்கோடுபாய்ந்து
இழுத்ததண்படலைமாலைக்கிருதவன்மாவைநண்ணி
அழற்சினந்திருகுகூர்வாயாழியானோடும்வெம்போர்
இழைத்துமென்றியம்பினானவ்வெழுவுறழ்தோளினானால். ௯

புரைவறுபசும்பொற்கோட்டுப்பொருப்பொடுபொருதயானைக்
குருவளர்குழவித்திங்கட்கோட்டடியகழ்ந்தகொற்றத்
தெரிசினநேமியானோடெங்ஙனம்பொருதுமென்னா
வரிசிலைத்தடக்கைமன்னன்வழங்கநெஞ்சழுங்கினைந்தான். ௧௦

விழாவரிமிடற்றவண்டுவிரைகமழ்முகைவாய்விள்ள
உழாவெரிபசும்பொற்றாதுண்டுறங்குபூந்தாமமார்வன்
கழூஉவிளங்காரமார்பிற்காந்தினிபுதல்வன்றன்பால்
எழாமழைவண்ணன்றன்மேலெதிர்பொரவிசைதுமென்றான். ௧௧

அலையெழுதழலின்வெம்பியாட்டமருழந்தமல்லர்
கொலையுறப்பணைத்துவீங்குகுங்குமக்குவவுத்திண்டோள்
மலையொடுமலையவல்லார்மண்ணினில்விசும்பின்மற்றை
உலகினினுளர்கொலென்னாவுரைபலவுத்தினானால். ௧௨

காய்சமர்விழைவுதீர்ந்துகாந்தினிபுதல்வன்றன்மேல்
மாசறவிளங்குசெங்கேழ்மணியினையெறிதல்செய்யா
ஓசனைநூறுதாவுமுளைவயப்புரவியூர்ந்து
பூசல்வேற்றடக்கைமன்னன்பொருக்கெனப்போயான்மன்னோ. ௧௩

கடங்கலுழ்களிற்றன்னானைக்காயழல்கவிழ்க்குஞ்செங்கண்
மடங்கலேறன்னதுப்பின்வால்வளையன்னமேனிக்
கொடுஞ்சிலையுழவனோடுகொடிஞ்சியந்தடந்தேரூர்ந்து
தொடர்ந்தனனவனிபொத்துஞ்சூழ்கழற்காலம்மானே. ௧௪

ஒளிமதிகமலத்தோடுமுறவுகொண்டுலவுமாபோல்
தலையவிழ்முளரிக்காட்டிற்சங்குசூலுளைந்துசூழும்
வளவயன்மிதிலையெல்லைமருவலும்பரிமாவீழக்
களிமதக்களிற்றுமன்னன்கால்வலிகாட்டினானால். ௧௫

கொதில்வயப்புரவித்திண்டேர்நூக்கலன்கண்ணனோடிக்
குறுகினனூழிவெந்தீக்கொழுந்துவிட்டெரிந்தாலன்ன
எறிசுடராலங்கனேமியெறிந்தனனிரியல்போய
கறையுறுவேலினான்றன்கருந்தலைதடிந்தான்மன்னோ. ௧௬

கட்டுயின்மேயகூர்வேற்காவலனொருவற்கொன்று
கெட்டுறக்கெய்தினான்பாணிழன்மணிகாணகிலானால்
விட்டொளிர்மணிச்செஞ்சூட்டுவிடவராப்பள்ளிநீத்து
வட்டவெண்டிரைப்பார்போற்றும்வலம்படுதிகிரிப்பெம்மான். ௧௭

திரைமுகங்கருகவென்றிச்சிலைகடைகுழைத்துநீண்ட
வரைமுகமுருக்குமுல்லைவணைபசுங்கழைவாய்வைத்த
கருமுகில்வண்ணனீங்குக்காண்கலன்மணிமற்றென்று
முருகுவீற்றிருந்தபைந்தார்முன்னவற்கியம்பினானால். ௧௮

இளவெயிற்கற்றைகாலுமெரிமணியிவன்றேத்தின்றேல்
வளநகரொருவன்கைப்பால்வைத்தனனாகல்வேண்டும்
நளிமதிமுகத்தாய்நீபோய்நாடுதிவருவலென்று
வெளிமுகடுடைக்குமாடமிதிலைசென்றெய்தினானே. ௧௯

ஒங்கிருந்தாழைநெற்றியொண்பழன்வருக்கைபோழ்ந்து
தீங்கரும்பெருத்திற்றாழ்ந்ததேற்றிறால்சிதையவீழும்
வீங்குநீர்மருதவேலிமிதிலைமாநகரங்காக்கும்
வாங்குவின்மருவுதோளான்வழிபடவைகினானால். ௨0

சொரிமதக்களிறுபோலத்துள்ளிவீழருவிமாலைத்
திருமணிசெய்குன்றோங்கித்திகழ்தருமிதிலைமன்னும்
ஒருகுழையொருவன்றன்பாலொளிமணிச்சுடிகைநெற்றி
அரவுயர்கொடியனான்வந்தடற்கதைபயின்றானன்றே. ௨௧

சேழ்கிளராரமார்பிற்கிருதவன்மாவுங்கொற்றக்
காழணிகதிர்மென்கொங்கைக்காந்தினிபுதல்வன்றானும்
எழுயர்களிநல்யானையிகற்சததன்னுவாவை
ஆழியான்றுணித்தல்கேளாவஞ்சினர்பாறலுற்றார். ௨௨

பண்ணெழவண்டுபாடும்பனிமலர்ப்பாரிசாதத்
தண்ணிழலடைந்தகூர்வாட்சத்திராசித்துக்காங்குக்
கண்ணகன்ஞாலமுண்டுகற்றிலையாலிற்றுஞ்சும்
அண்ணலம்பசும்புட்பாகனருங்கடன்புரிவித்தானால். ௨௩

### கலிவிருத்தம்.

அத்தலைவிரிதிரையாழிமீமிசைப்
பைத்தபாம்பணைத்துயில்பரமவானவன்
முத்தவாணகைமுகமுளரிநோக்கினர்
உத்தவன்முதலினருரைசெய்தாரரோ. ௨௪

எழில்வளர்காந்தினிபுதல்வனிவ்வழி
ஒழிதலிற்போலுமாலோங்குவெண்ணிலாப்
பொழிதருவலம்புரிபொறித்தசெங்கையாய்
மழைவளங்காந்திம்மல்லனுடரோ. ௨௫

கார்வளங்காத்தலிற்காசிமன்னவன்
ஆரருட்சுவர்க்கலையாங்கழைத்திடா
ஏர்வளங்காந்தினியென்னுமின்னைப்
பேரெழிற்கன்னியைப்பெட்பினல்கினான். ௨௬

அங்கலுழ்மேனியவ்வணங்கின்வெம்முலை
பொங்கியபுகழினான்புணர்ந்துவைகலால்
மங்குறோய்மழைவளமல்கின்றோங்கிய
கங்கையர்தீம்புனற்காசிநாட்டகம். ௨௭

தாதையையொத்தவத்தண்ணந்தாரினான்
போதரின்மழைவளம்பொலியுமீங்கெனா
ஓதலுங்காந்தினியுயிர்த்ததோன்றலைத்
தூதினாலழைத்தனன்சுடர்செய்நேமியான். ௨௮

எரிமணித்திறத்தினாலெல்லையுந்தேறலன்
ஒருகுழையொருவனவ்வுருவமாமணி
தருகெனக்கரியவன்சாற்றநல்கினன்
பரிவுறுகாந்தினிபயந்ததோன்றலே. ௨௯

சேட்டிளங்கதிர்புரைதெய்வமாமணிச்
சூட்டுவாளராவணைத்தோன்றல்கைக்கொளாக்
காட்டினனவைக்களங்கண்டுவப்புற
மீட்டவற்களித்தனன்விருப்பினென்பவே. ௩0

சததன்னுவாவைக்கொன்றவத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௯0௯.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## உஎ-வது, காளிந்தியைமணஞ்செய்தத்தியாயம்.

கலிவிருத்தம்.

அளைத்தகவளர்ந்தவாளரியின்மாண்டக
வெளிப்படுமைவரைக்காணவீழ்ந்திளங்
களிச்சுரும்பாற்றுதார்க்கமலலோசனன்
துளிப்புயலெனவளைதுவைப்பவேகினான். ௧

நேரிலாவச்சிரநிலவத்தாங்கியும்
சோர்மதுக்கற்பகச்சோலைதுன்னியும்
காரிவர்மாளிகைகடவுளிந்திரன்
ஏர்பெறுமிந்திரப்பிரத்தமேவினான். ௨

தருமனோடுளர்வளித்தநயற்கைதொழாப்
பொருசிலைவிசயனைப்புல்லியேனையோர்
இருவரும்பணிந்தெழவினிதுவந்தனன்
மருடருபிறப்பிலிமகிழ்சிறந்தரோ. ௩

களிகொண்மாதவத்தினர்காணவெஃகிய
துளிமுகில்வண்ணனின்றோற்றங்காணிய
அளியமெத்தவமுனமாற்றினேனெனாத்
தளையவிழ்நெஞ்சினன்றருமனேத்தினான். ௪

இந்திரநீலமொத்தெறிக்குமேனியன்
இந்திரப்பிரத்தனின்றெழுந்துவேட்டமேல்
இந்திரன்சிலையெனவிலங்குபூந்தொடை
இந்திரகுமாரனோடேகினானரோ. ௫

சந்தக் கலிநிலைத்துறை.

அளிகோடிவிளையாடுமந்தாரநறுநீழலளியெய்தவேர்
இளவஞ்சியெனமாதரின்சொற்பசுங்கிள்ளையெனவெல்லுலாம்
வெளிசேர்கமஞ்சூற்கருங்கொண்டறோய்கின்றமின்னென்னவோர்
களியன்னமெனநின்றுகாளிந்திவிளையாடல்கண்டானரோ. ௬

அரக்குண்டசெந்தாமரைப்போதுநிகர்செங்கையலர்மீதிலோர்
விரைக்கொந்துமலர்தாங்கிவிளையாடுவாள்செவ்விவிழிகண்டுபாய்
திரைக்கொந்தலம்புங்கடற்கட்பொலம்போதுதிகழ்மாதெழா
வரக்கண்டநாளிற்களித்தான்மணிக்கோலவரைமார்பினான். ௭

பிறைக்கூரெயிற்றூடலாவிற்றிருத்தாள்பெயர்ந்தாடுவோன்
குறிப்பாலடைந்தாடல்விசயன்பசும்பொற்கொழுந்தென்னவோர்
வெறிப்பாரிசாதத்தினிழனின்றமடமாதைவிரைவிம்முதார்
அறற்கோதைநீயாரைவிழைவென்னுளாயென்றறைந்தானரோ. ௮

பரிதிக்குமகளோர்பசுங்கொண்டல்போன்மன்னுபாலாழிசேர்
விரைகக்குதுளவக்கருங்கொண்டன்மணமெய்தவிழைவேனெனுத்
திரையுற்றவமுதூறுசேதாம்பன்மலரன்னசெவ்வாய்திறந்
துரையற்றபொன்னங்கொழுந்தன்னவெழினங்கையுரையாடினுள். கூ

பண்டோயுமழலைப்பசுங்கிள்ளையினமென்றுபாலெய்தவாய்
விண்டாளையம்பொற்றடந்தேரின்மிசைகொண்டுமீண்டெய்தினன்
வண்டாயிரங்கோடியிசைபாடிமுகைவிண்டுமழைமட்டுவார்
தண்டாமரைச்செல்விமுலையானைவிளையாடுதடமார்பினன். க0

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஏர்முகந்தெடுக்கலாகுமிளமுலைமலராள்கொண்கன்
நீர்முகந்தெழுகார்தோயுநெடுங்கொடித்தடந்தேர்தூண்டிப்
போர்முகங்கடந்துபொன்னம்பொருப்பெனவளர்தோட்பார்த்தன்
கார்முகங்குழையவாங்கிக்காவெரியூட்டினுனல். கக

அரிவயிறாரத்தேனுண்டாற்றுதண்கானமெல்லாம்
எரிவயிறாரநுங்கியீந்ததுவெண்ணெய்வாரித்
திருவயிறாமாந்துசெம்மன்மைத்துனற்குத்திண்டேர்
வரிவயிறார்ந்தபாந்தள்வடிக்கணைத்தூணிவல்வில். கஉ

வீறுசால்வரிவிற்பார்த்தன்வெவ்வழலூட்டுகின்ற
நாறிணர்க்காவினுவிலகியதிறத்தினாலே
தேறுநீர்நிலமீங்கென்னத்தெரிவருமாடஞ்செய்தான்
மாறிலாமயனென்றோதுமன்பெருந்தச்சன்மன்னே. கரு

வான்பொழிகாலமெல்லாம்வலம்புரித்தடக்கைமாயன்
ஊன்பொழிவடிவேலைவருவப்புறவாங்குவைகிக்
கான்பொழியலங்கன்மாலைக்காமர்காளிந்தியோடும்
தேன்பொழிசைதைவேலித்திருநகர்க்கெய்தினனல். கச

தெளிந்தவாறெழுகுகங்கைத்திருநதிநீரமாந்தி
வளர்ந்தமந்தாரத்தம்பொன்மலர்மழையமரர்தூற்றக்
களங்கனிவண்ணத்தண்ணல்கற்பகக்கொழுந்துபோல
விளங்குகாளிந்திமன்றல்விதியுளியியற்றினனே. கரு

காளிந்தியைமணஞ்செயத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கூஉச.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

# உஅ-வது, மித்திரவிந்தையைமணம்புணரத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மருவுயிர்த்தலர்ந்தமாலைவாள்வசுதேவன்றன்னோ
டொருவயிற்றுதித்தநங்கையுயிர்த்தவள்வரிவண்டூத
விரையெடுத்தெறிபூங்கோதைமித்திரவிந்தைவையம்
திருவயிற்றொருபால்வைத்தசெம்மன்மேல்விழைதல்செய்தாள். க

வரிச்சிறையுவணப்பைம்புள்வலவயினுயர்த்தகார்மேல்
விருப்புறுமிளையாடன்னைவீறுசாலவந்தியாளும்
அரத்தமுண்டொளிருங்கூர்வேலடல்செய்விந்தானுவிந்து
உருத்தெழுசினத்தபாந்தளுயர்த்தகாவலற்குநேர்ந்தார். உ

கொவ்வைவாய்பதித்தமுத்தக்கோவையிற்றிகழுமூரல்
அவ்வளைத்தளிர்க்கைமாதினரும்பெறன்மன்றல்வேட்டுக்
கவ்வைநீர்வேலிகாக்குங்காவலர்குழாத்தோடுற்றான்
வெவ்வழனச்சுநாகவெல்கொடியுயர்த்தவேந்தே. ௩

காரெழில்கவற்றுங்கூந்தற்கைபுனைந்தியற்றாக்காமர்
எர்குடியிருந்துவீங்குமிளமுலைக்கொடியனாளை
ஆரமர்கடந்தகூர்வாளரசவைபணிக்கப்புக்கு
வார்மதுக்கமழும்பைந்தார்மாயவன்கவர்ந்துகொண்டான். ௪

மொய்வரைதுளக்குங்காற்றுமுகந்தெறிசிறைப்புட்பாகன்
மௌவலங்குழலினாளைவௌவினனிற்றல்கண்டான்
வெவ்வராவுயர்த்தோனுங்குவிழுச்சமம்புரியகில்லான்
தெவ்வடுசிலைக்கைமன்னர்திரளொடுசென்றான்மன்னோ. ௫

வெம்மதஞ்செருக்கித்துஞ்சாவெண்பிறைக்கோட்டுவேழம்
கைம்முகந்தெடுத்தவேழக்கரும்பொடுநடக்குமாபோல்
வைம்முகமணிந்தவேற்கண்மாதொடுவடவைகாலும்
செம்முகத்திகிரிமாயன்றேரிவர்ந்தேகினானால். ௬

நடாக்கரும்பெழுதிநட்டநாகுவேயன்னமென்றோட்
படாக்களியிளமென்கொங்கைப்பவளவாய்மயிலனாளை
விடாக்களிச்சுரும்புண்கோதைவிதியினிற்புனைந்துவேட்டான்
கடாக்களிறழைப்பவந்தகாயழற்றிகிரிமாலோன். ௭

மித்திரவிந்தையைமணம்புணரத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௯௩௧.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

# உகூ-வது, சத்தியையைமணம்புரியத்தியாயம்.

---

## எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

குளிறுவெண்டரங்கக்குரவைவான்பசும்பொற்குடுமிமால்வரையினுன்மது
அளறெழக்கடையவிளையமுதன்னவலர்முலைச்சத்தியைதன்னைக் [ணி
களிறுமாய்செந்நெற்கழனிசூழ்கிடந்தகோசலநாடுகாத்தளிக்கும்
ஒளிறுவேற்றடக்கைநக்கினசித்தென்றுரைபெறுமன்னவனுயிர்த்தான். க

எழிருங்கடலுங்கூப்பிடப்பரவையெழுந்ததெள்ளமுதினைவெருட்டி
எழிசைகடந்தமழலையந்தீஞ்சொலிளநகைப்பவளவாய்மகளை
எழிருங்குன்றுமெதிர்பொருதுடையவேந்துதோட்கோசலத்திறைவன்
எழ்விடைதழுவுமேறுழ்வலிபடைத்தாற்கீகுதுமெனவுரையிசைத்தான்.உ

செறிதிசைதழுவுகொற்றவேற்றானைத்திரளினர்திங்கள்வெண்குடையர்
மறிதிரைதழுவுகுழவிவெங்கதிர்போல்வயங்குநீண்முடியினர்தெய்வ
நறுவிரைதழுவுமாலைதாழ்மார்பர்நாகிளவிடைபுரைநடையர்
இறுவரைதழுவுதிணிபுயத்தாசரெழுவிடைதழுவுவாணிறுத்தார். ௩

இடியுருமேற்றிற்சிலைத்தெதிர்நடக்குமேழ்விடைதழுவுவானேற்ற
படுகளிச்சுரும்புபடிந்துழக்கிழிந்தபனிமலர்ப்பசுந்தொடைமார்பும்
குடவரைபொருவுதிணிதடந்தோளுங்கூர்நுதிக்கோடுழக்கலங்கி
வடியிருநெடியகுடுமிவேற்றடக்கைமன்னவர்மதவலியழிந்தார். ௪

வாளைவெம்போர்க்குவருகெனப்பிரமமழைக்சுணர்மனங்கவர்வணப்பின்
வேளையீன்றெடுத்தவேரியந்துளவோன்விற்றிறல்விசயனேடெழுந்து
பாளைவாய்க்கமுகின்பழக்குலைசிதறப்பகட்டிளவாளொடுமறலிக்
காளையங்கயல்பாய்கமழலந்துறைசூழ்கோசலநாடுசென்றடைந்தான். ௫

வெண்டயிருறைத்தகாரிரும்பித்தைவிரைகமழ்முல்லையம்பசுந்தார்
அண்டர்தங்கொழுந்துதெண்டிரைப்பிறந்தவாரமுதன்னவஞ்சாயற்
பண்டருமழலைப்பவளவாயணங்கின்பணையிளவனமுலைதழுவக் [ஞல்.
கொண்டலினேரேழுருவுகொண்டோரேழ்கொல்சினவிடைதழீஇயினை

திலகவெண்கவிகைமன்னவனுவந்துசெஞ்சிலைவளங்கொள்பொற்கோட்
மலைபகவிடிக்குமத்தமால்யானைமணிமருப்பொசித்தகார்வண்ணற் [டு
கிலவிதழ்குலிகமூட்டிவைத்தன்னவின்னகைச்செய்யவாய்க்கருங்கட்
கல்வமாமஞ்ஞைகடுக்குமஞ்சாயற்கதிர்முலைக்கன்னியைக்கொடுத்தான். எ

குரைதிரைப்பரவையமுதுவாய்நிறைசெங்குடம்புரைசெருத்தலானினமு
விரிநிலாச்சொரியும்வாலுளைப்புரவிவெள்ளமுமழிமதக்களிற்றுத் [ம்
திரளுநீள்கொடிஞ்சித்தேரதுதொகையுஞ்சினைப்பசுந்தெரியல்வேந்துதவ
ஒருதனிமூவாவறுகுணப்பெருமானுறைதருதிருநகர்க்கெழுந்தான். அ

மழைக்கருங்கண்ணு டன்னெடுகமஞ்சூன் மழைமருண்மேனியா னெழிலும், தழைத்தகூர்ங்கோட்டுத் திரளிமிலேறு தழுவுவான்படர்ந்திகலழிந்த, புழைக்கைமால்யானைப் புரவலரீண்டிப் பொருதொறும்பொருதொறுமுடையக், குழைத்தனன்வரிவிற் குழைத்ததண்கானங் கொந்தழலூட்டு பொற் குரிசில். ௯

உடைதிரையிடறுவலம்புரிமுழங்கவொளிறுவெண்சங்கினங்கலிப்பச்
சுடர்விடுபவளக்கொழுங்கொடிநுடங்கத்தூச்சிறைமடவனம்பூத்த
முடமுதிர்தடந்தாண்முள்ளிலைத்தாழைமுருகுவந்தெதிர்கொளமுந்நீர்க்
கடல்விளிம்படுத்தகன்னிமாநகரங்கருங்கடல்வண்ணன்வந்தடைந்தான்.

சத்தியையமணம்புரியத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௯௪௧.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௩0-வது, பத்திரையைமணம்புரியத்தியாயம்.

---

### எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

தழலும்வெஞ்சினவாட்படைவசுதேவன்றங்கைதண்டுளிமுகில்வயிறு
கிழிபடநிவந்ததண்டலைவேலிக்கேகயநாட்டினுக்கிறைவன்
எழில்வரையகலம்புணர்சுதகீர்த்தியீன்றசெவ்வாய்ப்பசுங்கிள்ளை
மழலையந்தீஞ்சொற்பத்திரைபூவைவண்ணன்மேற்காதல்கூர்ந்தனளால். ௧

### அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

தெளித்தொளிவிரிக்கும்பச்சைத்திருமணிகுயின்றுலென்னக்
கிளைத்தபைந்துளவோன்செவ்விகேண்மையிற்கேட்டஞான்றே
வளர்த்தபைங்கிளியினம்மென்மழலைகேட்டுவக்குமேனும்
நளிப்புயற்கூந்தல்யாழினல்லிசைகேட்கிலாளால். ௨

திகழ்மணிவண்ணன்செவ்விசெவிமுதலுற்றபோதே
நகுமணிதழைந்தபொற்பூணலந்தகப்புனையுமேனும்
தகைபடுவொருகாழ்முத்தந்தயங்கிணர்க்கோங்கின்யாணர்
முகிழெனமுகிழ்ந்தகொங்கைமுன்றிலிற்புனைகலாளால். ௩

அஞ்சனவண்ணன்செவ்வியஞ்செவிப்பட்டவன்றே
அஞ்செனக்கிடந்தவம்பிணைடமர்கடந்தகண்ணிற்
கஞ்சனமெழுதுமேனுமஞ்சனம்புரைபைங்கூந்தல்
அஞ்சுமற்றஞ்செஞ்சாந்தமணிமுலையெழுதவம்மா. ௪

கொத்தளிகொழுதுகஞ்சக்கொழுமுகையனையசெவ்வி
அத்தகுகாதனங்கையாக்கமுங்குறிப்புநாடி
முத்தவெண்கவிகைப்பைந்தார்முன்னவன்கருங்காரன்ன
மைத்துனத்தோழற்கீவான்மனத்தினில்வலித்தல்செய்தான் ௫

பொன்னிணரமர்தூற்றப்புரிவளையலறமுந்நீர்
இன்னமுதனையசாயலேரிளமுலையினாளை
முன்னவனளித்தல்செய்தான்முழங்கழல்சான்றதாகக்
கன்னியந்துளவுசூடுங்கார்முகில்வண்ணற்கன்றே. ௬

மறைமலருறைவோனாதிவானவர்வணங்கியேத்த
நரலையம்புணரிதீர்ந்துநல்லறநிறுத்துநம்பி
சுரியிருங்கூந்தனங்கைதோணலமினிதுமாந்திக்
கரையிறந்தோங்குமின்பக்கடலகத்தழுந்தினானால். ௭

முடப்பசுந்தாழையீன்றமுழுமடன்முருகுகான்று
கடற்படுபுலவுமாற்றுகண்ணகன்புரிசைமூதூர்
இடிக்குரன்முரசமார்ப்பவிளமழைக்கொழுந்துபோல்வான்
சுடர்த்தொடியுடுத்தசெங்கைத்தோகையோடெழுந்துசென்றான். ௮

பத்திரையைமணம்புரியத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௯௪௯.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௩௧-வது, இலக்கணையைமணம்புரியத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

எழில்வளர்தளிர்மாமேனியிலக்கணையென்னுநாமத்
தொழுகரித்தடங்கணாளையுயிர்த்தனனுவரிமேய்ந்த
மழைகிடந்துறங்குசோலைமத்திரநாடுகாக்கும்
நிழல்வளர்திங்களன்னநித்திலக்கவிகைவேந்தே. ௧

தண்ணறலகத்திற்றோன்றுந்தண்ணிழனோக்கியன்றிக்
கண்ணுறலரிதாய்வெய்யகடுவிசைக்கறங்கிற்பொங்கி
விண்ணிடைக்கொட்காநிற்கும்விழுக்கயற்பொறிநீர்வேலி
மண்ணகம்வியப்பச்செய்தான்மணிமுழவனையதோளான். ௨

குடவரையன்றிமற்றைக்கோதைவெள்ளருவிசூடும்
நெடுவரைபொடிக்குமொற்றைநேமியஞ்செல்வன்சூழும்
வடவரைவணக்கினானும்வணக்கருந்தன்மைத்தாய
தடநெடுஞ்சிலையுமொன்றுதந்தனன்பசும்பொற்றாரான். ௩

சிலைகடைகுழைத்துச்செய்யசெங்கயல்சிதையவெய்தாற்
கிலமலரன்னசெவ்வாயிலக்கணையுரியளென்னா
மலைமதம்பட்டாலன்னமத்தமால்களிற்றுமன்னன்
உலகுடைமன்னர்க்கோலையுவப்புறப்போக்கினானால். ௪

முத்தரிச்சிலம்புபோலமொய்த்திளவெகினமார்ப்பச்
செய்த்தலைக்கமலமாதர்சீறடியழகுகாட்டும்
மத்திரநாட்டுமன்னன்மன்னெயிலுடுத்தமூதூர்த்
தத்துநீர்ப்படுசங்கார்ப்பத்தரணிபர்வந்துதொக்கார். ரு

அயின்முகப்பகழிபோலவணிமணிக்குழைமேலோடிக்
கயலெனப்பிறழ்ந்துசெய்யகமலமொத்தலர்ந்தவுண்கட்
குயிலினைக்குயிலாப்பொன்னங்கொழுந்தினைக்கொழுந்தாரோதி
மயிலினைப்புனைந்துசெம்பொன்மாளிகைக்கொணர்தல்செய்தார். சு

அருவிபெய்மலயச்செஞ்சாந்தலர்கதிராரந்தாழ்ந்த
வரைமருளகலத்தப்பிவார்கழனரலவீக்கிக்
குரைகடற்சுறவின்கோலக்கொடுங்குழைதுளங்கவார்த்துப்
பொருகயறுணித்துமென்றுபுரவலர்குழீஇயினரால். எ

உலைமுகம்பழுத்தசெம்பொனுடைமாக்களிறுசாய்த்துக்
கொலைமுகம்பழுத்தகூர்வாட்கொற்றவனொருவனெய்வான்
மலையெனக்கிடந்தவல்விலெடுத்தனன்வணக்கலாற்றான்
நிலவுகொப்புளிக்குமுத்தநெடுமுடிவணக்கிநின்றான். அ

அலங்குசெங்கதிரிற்சூழ்ந்தவணிமணிவலயமின்னப்
பொலங்கிரிகடுக்குந்திண்டோட்புரவலனொருவன்போந்து
வலம்படவெடுத்தவார்வில்வணக்கினானேற்றவாற்றான்
இலங்கொளிவிரிக்கும்பொன்னாணேற்றினனணிந்துநின்றான். கூ

கடற்பெரும்புவனங்காக்குங்காவலனொருவன்வார்வில்
எடுத்துநாணேற்றிமின்னினெரியுமிழ்ந்திலங்குவாளி
தொடுத்தனன்றொடுத்தவம்பின்றொடைநனிவாங்கலாற்றான்
வடித்தபூந்தொடையல்வாங்கிமணிமுடிதிருத்தினானால். கo

சரிந்துதார்புரளவொள்வாட்டடந்தவக்கிரன்வில்வாங்கிப்
பருந்துசூழ்முகத்தவாளிபணைத்ததோள்கழியவாங்கி
விரிந்தநீரகத்திற்றோன்றுமீனதுநிழலைநோக்கும்
இரும்பெருவானைநோக்குமிலக்கமோர்ந்தெய்யகில்லான். கக

அள்ளிலையணிந்தவெள்வேலடற்சிசுபாலனெய்த
ஒள்ளழற்பகழியோடியுறுகயலுறாதுவிண்வாய்
கள்ளவிழ்பாரிசாதக்காடலைத்தொழுகுகங்கை
துள்ளுசெங்கயலின்மேலேதொடர்ந்துதாய்வீழ்ந்தன்றம்மா. கஉ

வில்லிடப்பசும்பொனாரம்விற்கடைகுழையவாங்கி
மல்லனீர்மகதங்காக்குமணிமுடிவேந்தனெய்த
கொல்சினப்பகழிவிண்ணிற்கொட்குமீன்கழியவோடிப்
பல்சுடர்வானமீனின்பாற்படப்படர்ந்ததன்றே. கங

கட்டவிழ்சிலைப்பூந்தாமங்கதிர்நிலாமுடியிற்றாழ
வட்டவார்சிலைகால்கோட்டிமல்லடுதிணிதோள்வீமன்
விட்டவெம்பகழிபொங்கிவிழுக்கயல்பிழைத்துவிண்வாய்
முட்டிவெண்டிங்கள்வாழுமுயன்முகங்கிழித்துச்சென்ற. கச

எரிமணிக்குழைபொற்றோளினெழுதுசாந்துழுதுமின்ன
அருவரைபுரையுமார்வத்தாரமும்பூணுமொல்க
வரிசிலைதளரவாங்கிவாளரவுயர்த்தோனெய்த
தெரிகணைபொறிமேனுடிச்செவ்வனேயெழுந்தேகிற்றே. கரு

கற்பகந்தளிர்த்ததேபோற்கதிர்மணிக்கடகங்கான்ற
பொற்றசெங்கதிர்கள்சூழும்பொங்கெழிற்பொருதோட்கன்னன்
விற்கடைகுழையவாங்கிவிட்டகோல்பொறியின்மேலே
உற்றுறாதாகிச்சென்றதுயரிருவிசும்புபோழ்ந்தே. கசு

நிழல்புனலகத்துநோக்கிநின்றவவ்விலக்கைநாடி
அழிபெருங்குருதியாடியவிர்தல்போற்பற்பாகக்
குழையொளிதவழவாங்கிக்கொடுஞ்சிலைப்பார்த்தன்விட்ட
முழுவிறற்பகழிசெஞ்சேன்மோந்துகொண்டேகிற்றன்றே. கஎ

திகழ்மணிக்குவட்டின்வீங்கிச்செஞ்சிலைவடித்ததிண்டோட்
டகைமலியரசரின்னதன்மையராகிநின்றார்
அகலிருவிசும்பிற்சூழ்ந்தவள்ளிருட்பிழம்புசீத்து
நகுகதிர்ப்பரிதிவட்டநடுவண்வந்துற்றதாங்கே. கஅ

பார்நனைமதத்தயானைப்பருஉச்சுடர்ப்பணிவெண்முத்தம்
கூர்நுதிக்கோடுகொண்டகொற்றவன்பொற்றதாமம்
வார்மதுத்துளிப்பச்செக்கர்மணிதிருமார்பின்மின்னக்
கார்முகிலென்னச்சென்றுகார்முகம்வணக்கிநின்றான். கக

விடம்பொதிமிடற்றுப்புத்தேள்வெஞ்சிலையிறுத்தவீரன்
கொடுஞ்சிலைகுழைத்தவாறுங்குழைத்துநாண்கொளீஇயவாறும்
அடுங்கணைதூர்த்தவாறுமார்கொலோதெரியக்கண்டார்
சுடுங்கயறுணிந்துமண்ணிற்கவிழ்ந்ததுகண்ணிற்கண்டார். உ0

ஒளிமணிவிசும்பினெல்லென்றொலித்தகாருவரிமேய்ந்த
துளிமுகிலதிருமாபோற்றுந்துபிதுவைத்தசூழ்ந்து
களிமுகச்சுரும்புமூசாக்கற்பகக்கனகப்பைம்பூ
வெளிமுகம்புதையமொய்த்துவிண்ணவர்சிதறியார்த்தார். உக

ஆடகப்பசும்பொற்றிண்டேரசெலாங்காணவாய்பொற்
பாடகப்போதுசூழ்ந்தபன்மணிச்சிலம்புபாட
நாடகமயிலஞ்சாயனுகிளவல்லியொல்கிச்
சூடகத்தளிர்ப்பூங்கோதைசூட்டினள்கண்ணற்கன்றே. உஉ

தருமலரமரர்தூற்றத்தாக்கணங்கனையாடண்டேன்
சொரிமலர்நறுமென்றெருங்கல்சூட்டுதல்கண்டுநோனர்
குரைகடல்வெதும்பவல்விற்கோட்டியகுழகன்றன்மேல்
விரிதிரைக்கடலந்தானைவேந்தர்போர்விளைத்தார்மாதோ. உரு

கான்குலாமலங்கல்சூடிக்கடைகுழன்றிருண்டகூந்தற்
றேன்குலாமழலையாளைச்செறிமணித்தேரிற்கொண்டு
நான்குதோளுடையானுகிநம்பிவிற்குழைத்துச்சென்றான்
மான்குழாநடுவட்செல்லும்வள்ளுகிர்த்தரக்குப்போன்றே. உச

தேர்விட்டுக்களிறுவிட்டுத்திண்டிறற்பரிமாவிட்டுக்
கார்விட்டுத்திகழ்தடித்திற்கனன்றெரிபடைகள்விட்டுத்
தார்விட்டுமலர்ந்தமார்பிற்றருக்குடைமன்னரெல்லாம்
போர்விட்டுநடப்பவாளிபொழிந்தனன்புயலோடொப்பான். உரு

பொலமுகடுடைந்ததென்னப்பொருகடற்படுவெண்சங்கம்
அலறவார்முழவுவிம்மவதிர்குரன்முரசமார்ப்பக்
கலுழனின்னமுதுகொண்டுநண்டகச்செல்லுமாபோல்
சிலைநுதலணங்கைக்கொண்டுசெம்மன்மாநகர்சென்றுற்றான். உசா

முத்துடைக்கோட்டுவேழமுரிதிரைப்பவளந்தன்னே
டொத்தவெங்குளம்பிற்பாய்மாவொழுகொளிவயிரக்குப்பை
பித்திகைப்பிணையன்மாலைபெண்மணிபிறகொண்டெய்தி
மத்திரநாட்டுமன்னன்மலர்மகண்மகிழ்நர்க்கீந்தான். உஎ

அளவில்வெங்காதற்பௌவத்தளறெழவழுந்தலுற்ற
இளமயிலன்னசாயலிலக்கணைமன்றலாற்றி
முளையிளமுல்லைமூரன்முறுக்கிதழமுதந்துய்த்தான்
தளையவிழ்ந்தடைந்தோர்க்கீறிறனிியின்புதருநந்தொல்லோன். உஅ

நெய்ம்முகமணிந்துகாய்ந்துமிழலுமிழ்தழல்வாய்நேமிக்
கைம்மலரணிந்தசெங்கட்காரணனின்னவாறே
அம்மலர்முருகுவிம்மியகில்வயிரூர்ந்தகூந்தற்
பொம்மல்வெம்முலையினார்தம்புதுமணம்பொருந்தினுல். உகூ

இலக்கணைமணம்புரியத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கஎஅ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

# ௬௨-வது, நரகாசுரனைக்கொன்றவத்தியாயம்.

கலிச்சந்தவிருத்தம்.

வாட்டானையனரகாசுரன்மாயப்பொருதம்மென்
பாட்டாயிரங்களிவண்டறைபைம்பொற்றொடைபுனையா
வேட்டான்பதினாறுயிரம்விரைக்கோதையர்தமைவெஞ்
சூட்டாடரவணைகண்வளர்துளவப்பசுங்கொண்டல். ௧

என்றோதலுநாகாசுரனெனும்வீரனையமரில்
கொன்றோர்பதினாறுயிரங்குலமாதரைமலர்மேல்
மின்றோய்கருமுகில்வேட்டதுவிளம்பாயெனவேந்தன்
நன்றோகையினுரைசெய்குறநவின்றான்முனியண்ணல். ௨

அழிவெம்மதம்பொழியோங்கலினயிராவதப்பாகன்
மழைவண்ணனையடைந்தன்னைதன்வார்காதணிமகரக்
குழைதன்னொடுபனிமாலைவெண்குடையுஞ்செழுங்கொடியும்
கழிவெஞ்சினநரகாசுரன்கவர்ந்தேகினனென்றான். ௩

விண்ணுங்கியதோண்மாயவன்விண்ணந்தனிபுரக்கும்
மன்னன்புகல்வதுகேட்டெழில்வளர்சத்தியபாமை
என்னுங்கதிரிளமாமுலையிணர்ப்பூங்குழலோடும்
பொன்னங்கிரியெனத்தோன்றியபுள்ளின்னெருத்திவர்ந்தான். ௪

பிளக்கும்பொலமுகடாங்கெனப்பிறழ்சங்கதிர்தரவான்
விளக்குங்கதிர்சூழ்குன்றினைவிரிசெஞ்சிறைக்காற்றால்
துளக்கும்பசும்புள்ளூர்ந்தனன்றனைவிற்படர்ந்தெழுபார்
அளக்கும்புயலவுணர்க்கிறையரண்முற்றினனன்றே. ௫

புயறோய்வரையரண்சிந்திடப்புடைத்தான்பொருகதையால்
வெயிறோயெரியரண்கட்டறவியனேமியின்விழுத்தான்
உயர்நீரரணெறிகாற்றரணுடலும்படையரனோர்
அயில்வாளியினழித்தான்புகுந்தறுத்தான்முரபாசம். ௬

மழைமுற்றியநெடுவெற்பரண்மாநீரரண்வானில்
சுழல்காற்றரண்சுடுதீயரண்சுழல்வாட்படையரனோ
டழிவுற்றமைகாணாவிழியழல்சிந்துறவெகுளா
முழைவிட்டெழுவயமாவெனமுரன்வந்தெதிர்முனைந்தான். ௭

புலவுஞ்செறிபலவுங்கமழ்பொருவெம்படைவழங்காக்
கொலைவெஞ்சினவரவாமெனக்கொதித்தாடமருடலும்
மலையஞ்சியதிணிதோண்முரன்மன்றற்றொடைகமழும்
தலையஞ்சையுமுலகுண்டவன்றனியாழியிற்றடிந்தான். ௮

மூரன்மாய்தலுமுரன்மைந்தர்கண்முரனுஞ்சினமுதிர்ந்தோர்
எரிகான்றழல்செங்கண்ணினரெழுகாளையர்குழுமா
வரையாவெனுமெழைகாத்தவம்மழைவண்ணனைவளையாச்
சாமாரியிற்பொழிந்தார்பொருதடக்கைச்சிலைகுழைத்தே. கூ

மழுவிற்பொருகுலிசத்தினின்மாயாவலந்தழையா
எழுவிற்பணைத்தெழுதோள்வலத்தெழுவீரர்தமெழிலார்
செழுவிற்பொழிசரமாரியுஞ்சிரமுந்துணிசெய்தான்
குழவிப்பிறைபுரைமால்கரிக்கூர்வெண்மருப்பொசித்தோன். க0

மாலைக்கதிர்வேல்வெம்படைமால்வெஞ்சமமாற்று
தோலைக்கடலுடைந்தாலெனவுடைகின்றமைகாணுக்
காலைக்கதழெரிகட்கடைகாலக்கனன்றெரியும்
சூலப்படைநரகாசுரன்சூழ்தானையொடெழுந்தான். கக

வில்லார்வடிவாளார்சினவேலாருருமிடிக்கும்
சொல்லார்கடையெழுவெங்கனல்சொரிகின்றசெங்கண்ணர்
பல்லாயிரமடற்றானவர்பரிதேர்கரிகடவா
செல்லார்மழைகாத்தான்றனைத்தெழித்தாரமர்விளைத்தார். க௨

பச்சைக்கிளிசிறப்பாய்பரிபவளக்குளம்பற்ற
கச்சைக்கருங்களிறொண்பிறைக்கதிர்வெண்மருப்பற்ற
அச்சற்றனபொன்னங்கொடியணிதேர்நறையகிலின்
செச்சைத்தடம்புயத்தான்சினத்திகிரிப்படைதொடவே. கங

விழுந்தார்சிலர்திரைவேலையில்விரியுந்திரைக்கடல்வாய்
அழிந்தார்சிலர்விண்கிறியவசன்குன்றிடைக்கவிழ்ந்தார்
கொழுந்தாரளையளைந்துண்டுமைக்கொழுந்தாமெனத்திகழும்
செழுந்தாரவனிவர்புள்ளினஞ்சிறைக்காலினின்மறுகா. கச

நடையிற்சினவிடையிற்றிகழ்நரகாசுரன்விண்ணோர்
அடையத்தெருமாலுற்றிடவயனண்டகடாகம்
உடையத்தனியுராவழலுயிர்க்குஞ்சுடரிலைவேற்
படையைத்தகுகருளன்பெரும்பணைத்தோளினிலெறிந்தான். கரு

மறிவெண்டிரைவடவானலமறுகக்கொழுந்தழல்வெம்
பொறிசிந்துபுவருவெந்திறற்புலவுப்படைகருளன்
செறிகுன்றுறழ்தோளுற்றதுசினமாமதகரிமேல்
எறிதண்ணறுமலர்மென்றொடையெனலாயதுமன்றே. கசு

செஞ்சோரியிற்படிகின்றதுசெறியூன்சுவைப்பதுகார்
நஞ்சூறுவதழல்கால்வதுநகுமின்பொழிகுவதோர்
வெஞ்சூலமதெடுத்தான்மதவெற்பாமெனநடந்தான்
பஞ்சாயுதமுடையான்முனம்படுவெஞ்சொலையவுணன். கஎ

பெருகாழியிற்குருதிப்புனற்பெருக்கெண்டிசைபிறங்கக்
கருகார்கலிசுவறச்சிலைகால்கோட்டியகண்ணன்
முருகாயிரம்வரிவண்டுணமுகைவிண்டலர்தண்டார்
நரகாசுரன்முடிவெங்கதிர்நகுநேமியிற்றடிந்தான். ௧௮

தகைசானிலமகளவ்வழிதண்டாமரையயில்சேர்
அகன்மார்வனைப்பணிந்தேத்தினளளிப்பாயினியென்று
நகுதார்முடிநரகாசுரனைறவிம்மியதுடவை
முகைவாயவிழ்திருநாட்டினின்முகக்கும்பொருளளித்தே. ௧௯

மந்தாகினியொடுபொங்கொளிமணிவார்கழலலம்பும்
செந்தாமரைபுகழ்பார்மகள்செஞ்சொற்செவிதிளையா
நந்தாவலந்தழைத்தோங்கியநரகாசுரன்மதலைக்
கந்தாதவிழ்துளவப்புயலபயங்கொடுத்தனனால். ௨௦

கந்தப்பியகளியானையின்கதிர்மாமருப்பொசிக்கும்
சந்தப்பெருவரைத்தோளவன்சமரின்றலையிமையோர்
சிந்தப்பொருதிறற்றானவர்திலகன்பெருஞ்சிறப்பார்
அந்தப்புரமோர்மாநிதியறைநோக்கினனன்றே. ௨௧

வளந்தங்கிருநிலவைப்பினின்மறமன்னவரெல்லாம்
துளங்கப்பொருதவுணர்க்கிறைதோளாற்றலிற்கவர்ந்தோர்
விளங்கும்பதினாறாயிரர்வெண்மாமதிவதனத்
திளங்கன்னியர்தனைவேட்டவணிருக்கின்றமைகண்டான். ௨௨

கழுவுற்றமென்றூசும்புனைகலனும்பலநல்கா
எழில்விற்றிருமாவிற்றிகழிளங்கன்னியர்தம்மைச்
செழுவிற்பொழிதிருமாமணிச்சிவிகைத்தலைசிறப்பால்
மழையிற்பொலிதருமாயவன்மல்லற்பதிவிடுத்தான். ௨௩

மால்கூர்ந்தவவ்வயிராவதமாபிற்பிறந்தனதீம்
பால்வெண்ணிறத்தனவானெழுபனிவெண்பிறைமருப்பேர்
நால்குற்றனநான்கீற்றிடுமருப்பானைகவுண்மா
ஆலம்பொழிபகுவாயரவணையான்கவர்ந்தனனால். ௨௪

## கலிவிருத்தம்.

கட்கமழ்ந்ததார்களுலுந்திண்புயம்
மட்பசுங்கொடிக்களித்தமாயவன்
விட்புலச்சிறப்பெய்தமேதகு
புட்கழுத்தினிற்போயினனரோ. ௨௫

ஈன்றசெங்கதிர்க்குழவியெய்தல்போல்
தோன்றுவெவ்வெயிற்சுடர்செய்குண்டலம்
ஆன்றபொற்புலாமதிதிக்கீந்தனன்
கான்றதும்புதார்க்கண்ணனென்பவே. ௨௬

ஆடனேமியானையதண்டுழாய்
சூடுதிண்புயந்தோயுமின்னனாள்
பாடல்வண்டுலாம்பைம்பொற்கற்பகக்
காடுகண்டுளங்காமுற்றாளரோ. உஎ

காரிருங்குழற்கலவமாமயில்
ஒருஞ்சாயலனுள்ளநோக்கினான்
வேர்பிடுங்கினான்வேரிமாமலர்ப்
பாரிசாதகம்பைம்பொன்மார்பனே. உஅ

கள்ளுளாந்துணர்க்காமர்கற்பகம்
கொள்ளனீயெனுக்குழுமுவானுளோர்
தள்ளருந்திறல்சாயமாறிலா
வள்ளல்வால்வளைவாய்வைத்தானரோ. உகூ

செய்யபொற்றருக்கொண்டுசெவ்விசால்
ஐய்பொற்கொழுந்தன்னமாதொடு
மையவேலைசூழ்மல்லன்மாநகர்
வெய்யபுள்ளின்மேல்விமலனெய்தினான். ௩௦

நாகணைத்துயினம்பிவம்புலாம்
போகிதழ்ப்பசும்பொன்னங்கற்பகம்
பாகின்மென்மொழிப்பவளச்செய்யவாய்த்
தோகையாடவோர்சோலையாக்கினான். ௩க

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

உருவம்பதினாறாயிரங்கொண்டொற்றைத்திகிரிநெடுமாயன்
குரவங்கமழ்ந்துநெறிந்தகடைகுழன்றாமுருகுகூட்டுண்டு
வரிவண்டுறையுங்கருங்கூந்தன்மாதர்பதினாறாயிரவர்
திருவமணமோர்காலையினிற்சிறப்பவினிதுபுரிந்தனனால். ௩உ

காதல்கனியக்கனியநலங்கனிந்தகதிர்மாமுலைக்கனிவாய்
மாதர்மகிழமந்தாரவனங்கடொறுமென்மாதவிப்பூந்
தாதுபடுந்தேன்பந்தர்தொறுந்தனியாடினனான்மழைகாத்த
கோதையருவிதவழ்பசும்பொற்குடுமிவிலங்கற்குடைநம்மான். ௩௩

நம்பால்விழையுநாகணையானம்பால்விழையுமெனநறிய
ஐம்பான்மகளிரெல்லோருமன்பான்மகிழவாய்வஞ்சிக்
கொம்பால்வகுத்தசிறுமருங்குற்குவளைத்தடங்கண்மடமாதர்
வம்பாற்றிகழுமுலைதழுவிமலராள்கொழுநன்வைகினனால். ௩௪

நரகாசுரனைக்கொன்றவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கO௪உ.

ஸ்ரீகிருஷ்ண சகாயம்.

# ௩௩-வது, உருக்குமிணியூடறீர்த்தவத்தியாயம்.

---

## அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

மலர்வீற்றிருந்தமடமாதுமானக்கவரிமருங்கிரட்டக்
குலவத்தொடுத்தமல்லிகைப்பூங்கோதைகமழமந்தார
அலரிற்றவழ்ந்தபசுந்தென்றலந்தீங்கொழுந்துமுருகுயிர்ப்ப
நிலவுப்பயன்கொண்முற்றத்துநெடியோன்செம்மாந்திருந்தனனால். ௧

அவிர்முத்தாய்ந்துஞ்செவிசவருமம்மென்மழலைக்கிளிசுமந்தும்
திவவுத்திகழ்யாழ்நரம்புளர்ந்துஞ்சிவந்ததளிர்க்கைசிவப்பூரக்
கவரியிரட்டுமுருப்பிணிவெண்கதிர்வாண்முறுவன்முகநோக்கி
உவரியமுதுபடக்கடைந்தவுரவோனொன்றாங்குரைசெய்தான். ௨

அரிமாசுமந்தவட்டவணைவலங்கவரசுவீற்றிருக்கும்
திருமால்வேந்தர்பலர்நினதுசெவ்விவிழையவெய்யநரை
உருமார்த்தனபோன்முழங்குகளிற்றொன்னாருடற்றுமமர்வெருவி
விரிமாக்கடலுளமர்ந்தேனைவிழைந்தாயென்கொன்மெல்லியலே. ௩

எவர்மற்றென்னைவிழைகிற்பாரேற்றூண்மிசைவாழ்க்கையரன்றி
உவவுமதியிற்கிளர்ந்தகவினொழுகுமுகத்தாயெனக்கலங்கிக்
குவவுக்கதிர்மாமுலைசுமந்துகுழைந்தமருங்குற்கொடிகுழைக்கும்
கவரிசோரத்தொடிசோரக்கையாறற்றுவீழ்ந்தனளால். ௪

அளிக்குநெகிழ்பூங்குழலணங்கையள்ளியிருகையாலணைக்கும்
துளிக்குங்கண்ணீரொருகையாற்றுடைக்குந்தூநீரொருகையால்
தெளிக்குஞ்சிறிதுதெளிந்ததற்பின்செவ்வாய்திறந்துசிலகிளக்கும்
களிக்குங்காடக்கடாக்களிற்றிற்கதிர்வெண்பிறைக்கோடொசித்தானே.

கொடிவார்புருவங்கூத்தாடக்குருகுபரந்தநெடுவானில்
பொடியார்வளர்நாண்மதிநுதல்வேர்பொடிப்பப்பவளவிதழ்துடிப்பக்
சடியார்குவளைமலர்க்கருங்கட்கடைசேப்பூரப்புலந்துரைக்கும்
வடியாரமுதமென்மழலைமாதர்க்கிவ்வாறியம்பினனால். ௬

மாதுவடவையழற்கவெனவண்டுஞ்சுரும்புமெழுந்தரற்றும்
கோதைதிருத்திநுதனீவிக்கொழிக்குஞ்சுடர்ப்பூண்கைசெய்யக்
காதுகடந்துகடைசிவந்துகளித்துமதர்த்துக்கருங்குவளைப்
போதுகடந்தவாட்டடங்கட்பூவைகொழுநற்போற்றினளால். ௭

முற்றத்துறந்துபற்றின்றிமுருகுபருகுமதுகரம்போல்
பெற்றபெற்றவழியருந்துபெரியோரன்றித்திருவுந்திப்
பொற்றகமலத்துலகேழும்பூத்தோய்செல்வக்களிமயக்கம்
உற்றமாக்கணினையெங்ஙனுணர்வுபடைத்துவிழைகிற்பார். ௮

எடுபடும்பூந்துளவமுகிலெல்லாவுலகுமிறந்தபட
நீடுதடங்கோட்டாலிலைமேனீலப்புயல்போனிமிர்பசும்பொற்

கோடுபிடுங்கித்திகிரிவரைகொன்றுநெடுவானடையவளைத்
தாடுதிரைக்கொத்ததிர்கடலிலார்க்குவெருவியமர்ந்தனையால். ௯

ஆலக்கருஞ்சேறுமிழ்பகுவாயரவிற்கிடந்தவாரமுதே
நீலப்பொருப்பேயருட்கடலேநெடுநீர்வேலியுலகளிக்கும்
மாலேத்திகிரிமழைமுகிலேமணியிலொளியுமலர்மணமும்
போலத்திகழ்வாயெங்குநினைப்புகலார்க்கென்சொல்புகலம்மா. ௧0

அண்டமெலாமன்னுயிரெல்லாமகத்தும்புறத்துங்கரந்தமரும்
புண்டரிகக்கட்பொருவிலிநின்புகழேயன்றியயலில்லை
பண்டைமறைகள்பறைவதெனிற்பவர்செஞ்சடையோன்மருநறையுள்
கொண்டவொருவனேனோர்நீகுறித்தபணிசெய்குமரரன்றோ. ௧௧

அழியாவுயிர்யாவையுந்தருநாளமர்ந்தகமலமலர்வேட்கை
ஒழியாப்போலவிழுத்தவத்தோருள்ளக்கமலத்துறைசுடரே
மொழியால்வழுத்தற்கெளிதோநின்முழுச்சீரெண்ணவருள்பெருகி
வழியாவிதழ்த்தாமரைமலர்க்கண்வள்ளலுள்ளமகிழ்சிறந்தான். ௧௨

அலைவாயெழுந்தமணிகொழிக்குமஞ்செங்கதிர்சடவழ்ந்தனபோல்
சிலையாரலங்கற்றிருமார்பிற்றேங்கொள்கலவைச்செழுஞ்சாந்தம்
முலையாலெழுதுமடமாதின்முறுவன்மாந்தியின்புற்றான்
மலையாற்பொழியுமழைகாத்துமண்காத்தளிக்குமறைமுதலே. ௧௩

உருக்குமிணியூடற்றீர்த்தவத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம். ௧0உ௫.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

# ருசு-வது, பிரத்துமனன்மணம்புரியத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பின்னற்றிரையினமிழ்தென்னப் பெருந்தேவியர்மற்றெண்மரொடு, பொன்னங்கொடிபோன் மடக்கிளிபோற் புயல்வாய்ப்பிறழும் புதுமின் போல், மன்னும்பதினாறாயிரமென் மழலைமடவாரொரோரொருவர், பன்னற்கரும்பண் புடைப்புதல்வர் பதின்மர்தமையீன் றெடுத்தனரால். ௧

தெய்வக்கமலமலர்துறந்துதெண்ணீர்விதர்ப்பநாடளிக்கும்
வைவேற்றடக்கைமன்னவர்பொன்மனைவந்துதித்தமடமாது
பௌவத்திரையிற்கிளைக்குமிளம்பவளக்கொடிபோல்விளங்குமொரு
கொவ்வைச்செவ்வாயமுதுகுமென்குதலைத்தீஞ்சொன்மகப்பெற்றாள். ௨

மன்றற்கோதைதிருவயிறுவாய்த்தசாருமதியென்னும்
கொன்றைக்குழலைக்கொழுங்குருதிகுமிழியெழுவேற்கிருதவன்மா
என்றிப்புவனமீரேழுமிசைக்குந்திறன்மன்னவனுயிர்த்த
வென்றிக்களிற்றுவிசாலாக்கன்விரிதார்புனைந்துவேட்டனனால். ௩

## தரவுக்கொச்சகக்கலிப்பா.

வார்சிலைக்கையுருக்குமிநல்வாமதனில்வந்துதித்த
ஆரமுதின்மென்சாயலரும்பெறன்மாமகள்வேட்டுச்
சோரிபடிந்துண்டுதசைசுவைத்துநிணம்வாய்பில்கிப்
போர்விழைந்தவேலரசர்போசசடத்திறுத்தனரால். ௪

மொய்க்குமிளங்களிவண்டுமுருகுயிர்க்குமலர்த்தாது
விக்குநறுந்தளிபருகுவிரைக்கோதைமணம்வேட்டுச்
செய்க்கமலத்தலரன்னசெங்கணெடுமால்பயந்த
மக்களின்மீனேறுயர்த்தமதவலியுமாங்கிறுத்தான். ௫

கூற்றிருந்துவிளையாடுகுடுமிநெடுவேன்மன்னர்
வீற்றிருந்தமாடத்துவிரைகமழும்பசுந்தேறல்
ஊற்றிருந்தபூங்கொடிபோலொழுகிநிலாவழியுமதிக்
கீற்றிருந்தனையநுதற்கிளிமொழிசென்றெய்தினளால். ௬

எழிற்குழையொன்றெல்கியணியெருத்தலைப்பவிருடேங்கு
குழற்பிணையல்புறந்தாழக்குடங்கைநிறைந்தடங்காத
மழைத்தடங்கண்மடமாதுவட்டவாய்த்திகிரிவலம்
தழைத்தபுயறருதோன்றறடம்புயமேநோக்குற்றாள். ௭

மெல்லியல்வாளரித்தடங்கண்மீனேற்றுக்கொடியோன்றண்
மல்லியலுந்திணிதடந்தோண்மணிவரையிற்றவழ்தோற்றம்
அல்லியம்பூந்துணருந்துமளிநாணிற்றொடுத்துலகம்
கொல்லியவோங்கியகுவளைக்கொழுமலரேபோன்றதால். ௮

எறிக்குநிலாக்கொழுந்தென்னவேவொழுகுபொறிநுதல்வேர்
உறைபபவுருத்தொளிர்கின்றவொள்ளொளிமென்னகைமொக்குள்
மறைத்துநறைக்குழற்றழமழைமின்னிற்றிகழ்வாளைக்
குறிப்பறிந்தவிளவேனிற்கோமமந்தன்கவர்ந்தனனால். ௯

அள்ளிலைப்பூணணிந்தேந்துமம்பகட்டுவரைமார்பின்
ஒள்ளிதழ்வெம்முலைமுளரியோங்கெழின்மெல்லரும்பொர
முள்ளரைத்தாமரைமுகையான்மூவுலகுந்தனிபொருத
கள்ளொழுகுபசுந்தாரான்கலவியினிற்களித்தனனால். ௧0

கரும்புகடைகுழைத்துநறுங்கார்முல்லைமெல்லரும்பால்
இரும்புவனம்பொருசழித்தவெழுவுறழுந்திணிமொய்ம்பன்
விரும்புறவின்னமுதூறும்வெண்டோட்டுப்பணிமுல்லை
அரும்புறழுமுள்ளெயிற்றாட்கிருத்தனுதித்தனனால். ௧௧

செருக்கியவெண்பிறைக்கோட்டுத்திருகுசினமால்யானை
உருக்குமிதன்மகனுயிர்த்தவோடரிக்கட்செங்கனிவாய்ப்
புரிக்குழலைத்தயங்குமெழில்பொலியும்வலம்புரிபொறித்த
அரக்கெறிதாமரைமலர்க்கையநிருத்தற்களித்தனனால். ௧௨

என்றலுமாயனேமுனிவுற்றிருக்கின்றேன்மால்பயந்த
மன்றலந்தாரவன்மகற்குமகட்கொடைநேர்ந்ததெனேகுணம்
குன்றனேயாயெனவேந்தன்கூறுதலுந்தங்கைமனம்
நன்றுவப்பநல்கினனெலென்றுமுனிவரனவில்வான். கங

அள்ளிலைவேல்வலனுயர்த்தவசிருத்தன்மணமாற்றக்
கள்ளவிழும்வெண்டோட்டுக்கரும்பனேமீமிசையுயர்த்த
வெள்ளிவரையனேயானும்வேதவிழுப்பொருட்படிவப்
புள்ளுயர்நீள்கொடியானும்போசகடத்திறுத்தனரால். கச

கழுகுசுலவுறநிணம்வாய்கான்றுகமழ்கருங்குருதி
ஒழுகுநெடுவேற்றடக்கையுருக்குமிகாதலினுயிர்த்த
புழுகொழுகுகருங்கூந்தற்பொற்கொழுந்தையழல்சான்றாய்
அழகொழுகுதிணிதடந்தோளசிருத்தன்வேட்டனனால். கரு

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மோடுசான்மன்றலாற்றிமுருகனுனுறையுநாளில்
பீடுசால்பிறைவெண்கோட்டுப்பிணர்ப்படுபனேக்கைநால்வாய்
ஓடைவேய்களிநல்யானேயுருக்குமிதன்னேடின்புற்
றாடினன்சூதுவென்றியலப்படையண்ணன்மன்னே. கசு

முள்ளெயிற்றணங்கினன்னார்முகிழ்முலைக்கோடுபாய
ஒள்ளிணர்கிழிந்தபைந்தாருருக்குமியிருகால்வெல்ல
வெள்ளியங்குன்றம்போலும்விளங்கொளிமேனியானேத்
தெள்ளொளிமுறுவறோன்றச்சிரித்தனன்கலிங்கவேந்தன். கள

குமுதமென்முகைவாய்விள்ளக்குரூஉச்சுடர்க்கற்றைகாலும்
அமுதவெண்டிங்களென்னவவிரொளிவிரிக்குமேனி
விமலன்மற்றொருகால்வெல்லவென்றனன்யானேயென்று
உமிழ்கதிர்ப்பரிதிவைவேலுருக்குமியுரைசெய்தானல். கஅ

சந்தனப்படப்பைவேலித்தண்பணேவிதர்ப்பவேந்தன்
மைந்தன்மேல்வென்றிநாட்டிமன்னவருரைத்தாராக
வெந்திறன்ஞாஞ்சிறுங்குவிமலனேவென்றானென்று
அந்தரவாணிமற்றொன்றாயிடையறைந்ததன்றே. கசு

நீணிறப்பரவைவேலிநெடுநிலம்புரக்கும்வேந்தர்
பான்மையிலாடலுற்றபல்படைத்தொழிலுஞ்சூதும்
ஆனினம்புரந்துகான்சேராயர்நன்கறிவாரென்றாங்
கூனுகுகுடுமிவேற்கையுருக்குமியசிசெய்தானே. உo

இருட்டறச்சுடருளாயிரெழுந்துசூழ்பசும்பொற்குன்றம்
வெருட்டியகுவவுத்திண்டோள்வெந்திறலிராமன்சீறிச்
சுருட்டுடற்பாந்தள்வேந்துசுமந்தபார்மன்னருட்க
உருட்டினனெழுவினலவ்வுருக்குமியுவ்வியன்றே. உக

சுடர்மணிக்குழைவில்வீசிச்சுழன்றெருத்தலைப்பக்காமர்
கடிமலர்க்கண்ணிசிந்தக்கலிங்கனுங்கோடுவானை
அடியொருபத்திற்பற்றியணிமணிக்கடகக்கையால்
படரொளிமுத்தமன்னபன்னிரையுகுத்தல்செய்தான். ௨௨

ஈற்றுவண்டறைந்துசெவ்வியிளமுகைகிழியப்பாய்ந்து
காற்றுதேன்சமழும்பைந்தார்கைபுனைசருமென்கூந்தற்
கோற்றொடிப்பாவையோடுங்குருதிவேற்றானையோடும்
ஆற்றலந்திகிரியம்மானணிநகரடைந்தானன்றே. ௨௩

பிரத்துமனன்மணம்புரியத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௦௪௮.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௩௫-வது, அநிருத்தன்மணம்புரியத்தியாயம்.

---

### கலிச்சந்த விருத்தம்.

குழவிப்பிறைபுனைவானவன்கூத்திற்கதிர்முழவம்
முழவிற்றிகழ்தோள்வாணன்மைம்முகிலாமெனமுழக்கத்
தழைவுற்றதொர்மகிழ்வாற்பொருதந்தாவளமுரித்தோன்
விழைவுற்றதென்றருவேமெனவிண்டானிதழ்ப்பவளம். ௧

கருணைக்கடலென்மாநகர்காப்பாயெனக்கரைந்தான்
எரிகக்கியசூலப்படையிறைகாத்தனனுறைந்தான்
உரவுத்திரைவிடமுண்டவனுழைச்சென்றுமற்றொருநாள்
செருவேட்கையன்வாணுசுரன்சிலகட்டுரைபுகன்றான். ௨

இடியுற்றனநெடுவான்கிழித்தெழுமேழ்பெருங்குன்றும்
பொடிபட்டனவென்றேளொடுபொருவெஞ்சமர்புரியாப்
பிடிமற்றிவையெனக்கிம்புரிபிறங்கும்பிறைவெண்கோ
டடியற்றிடப்பொருதோடினவடல்வாய்களிறெட்டும். ௩

வளர்திண்புயந்தினவுற்றனவாட்போர்பெறுசலனுல்
கிளர்வெள்ளியம்பனிமால்வரைகிழவோயுயர்கொற்றம்
விளையுஞ்சமரினையல்லதுவிளைக்கின்றவரிலையால்
தளராவிறல்செழுவாளமர்தருவாயெனக்கிளந்தான். ௪

அரணீறெழமுனஞ்செற்றவனம்மென்னகைமுகிழா
இருநீர்வரைப்பினிலென்னினுமெறுழ்மிக்கவனெய்தா
வரையாவையுந்திரண்டாலெனவளர்ந்தோங்கியபுயத்தாய்
செருவாற்றலையினினேடெனச்செவ்வாய்திறந்திசைத்தான். ௫

துன்னவமர் துன்னப்படுமெனத்தோட்குலம்பணையா
அன்னன்வருமெந்நாளெனவற்றங்குநின்னடல்சேர்
பொன்னார்கொடிவீழ்வுற்றிடுபோதாமெனப்புகல
மின்னுமெனத்திகழ்வேலினன்விளையாமகிழ்விளைத்தான். சு

அனையானெயிலரண்காவல்செயரன்மாமலைமடந்தை
புனைவார்முலைகுழையப்புணர்பொழுதத்துடலசுரன்
மனமோகைசெய்மகள்காணுபுமயலேறினண்மருவத்
தனைநேர்தருமுமையாளருடழையாவுரைதருமால். எ

சின்னாளினின்கனவின்றலைதிமிரக்கருங்களிற்றின்
மன்னாநறுமலர்ப்பூங்கணைமழையிற்பொழிமதனன்
தன்னாண்மையொடுறுபேரெழிறகுமாடவனொருவன்
நின்னாய்நலநுகர்வானவனின்காதலனென்றாள். அ

தனிவிற்றிறல்வாணாசுரன்றருகன்னியன்னமே
கனியிற்சுவைகனிமென்மொழிகரும்பன்னவள்கனவின்
பணிமுத்தணிந்திருகுன்றெனப்பணைத்தேந்தியதிணிதோள்
அநிருத்தனைமணந்தெவ்வழியகன்றானெனவிழித்தாள். கூ

என்னாருயிர்த்துணைநீயிவணிருந்தென்னைசொலம்ம
பொன்னார்வளைகழல்வுற்றனபுனைபூந்துகில்சோர்வ
கொன்னேநெடுநிலவுத்தழல்கொல்கின்றதுகுலையா
இன்னேயெனதுயிர்தேயுமென்றிசைத்தாளழலுயிர்த்தாள். கO

மொழிகுற்றதெனிவ்வாறொருமொய்தாரவன்றனைநீ
விழைவுற்றனைபோல்வாய்மனம்விழைவுற்றதையெவனோ
அழிமட்டுமிழ்வனைபூங்குழலறைவாயெனக்கிளந்தாள்
செழுமுத்தெனவிளவாணகைதிகழ்சித்திரரேகை. கக

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கள்ளவிழ்கோதைகண்டேன்கனவினிலொருவன்றன்னை
அள்ளிலைப்பூணினான்றனகம்பகட்டாரமார்பும்
புள்ளுணவிரிந்தபைந்தார்ப்பொன்வரைபொருவுதோளும்
ஒள்ளொளிநகையுமாவியுண்டவென்றுருகினாளால். கஉ

முழுமதிமுகத்துநங்கைமூவகையுலகின்மூவா
அழகுவீற்றிருந்ததிண்டோளாடவர்தம்மையெல்லாம்
கிழியினிலெழுதிக்காட்டக்கிளியங்கிளவிவாளா
எழுதியபாவைபோலவிருந்தனளென்பமன்னோ. கங

அரவுடனெளியவாடுமஞ்சனவண்ணன்றன்னைத்
திருமணிதெளித்துத்தீட்டிச்சித்திரரேகைகாட்ட
எரிமணியாரந்தாங்கியிணைத்தெழுமுகிழ்மென்கொங்கைக்
கருமணிக்கூந்தற்கன்னிகண்டுகண்களிமிக்கூர்ந்தாள். கச

சுறவுயர்கொடியினானைத் துகிலிகைகொண்டுதீட்டி
இறுமருங்கென்னவீங்குமிளமுலைத்தோழிகாட்டச்
செறிகதிர்க்குழவிக்கோட்டுத்திங்களிற்றிகழுநன்னர்
நறுநுதல்வறிதுநண்ணிநகைமுகங்கோட்டினாளால். ௧௫

கனியுறழ்மழலைமாதுகண்கவர்செவ்விவாய்ந்த
அநிருத்தனுருவுதீட்டியணிபெறக்காட்டலோடும்
நனியுற்றநாணினாலேநலங்கிளரெருத்தஞ்சாய்த்தாள்
இனிதிற்றன்குமுதவாய்விண்டிவனிவனென்றுசொற்றாள். ௧௬

கோங்கரும்பென்னவீங்குகுவிமுலைக்கன்னிகூறும்
தீங்கரும்பன்னவஞ்சொற்செவிமுதற்சார்தலோடும்
ஆங்கவன்றன்னைத்துஞ்சுமமளியினோடுவவ்விப்
பூங்குழற்றோகையன்னாள்புணர்ப்பினிற்கொடுவந்துற்றாள். ௧௭

கயலுயர்குரிசிலீன்றகட்டெழிற்காளையாங்குத்
துயிலொரீஇயெழுந்துதுஞ்சாச்சுடர்மணிவிளக்கமென்னக்
குயில்வதற்கரியபொன்னங்கொழுந்தெனமருங்குநின்ற
மயிலியல்வதனநோக்கிமதிகொலென்றயிர்த்தல்செய்தான். ௧௮

முறுவல்வாணிலவேயன்றிமுகிழ்நகைநிலவுபாய்ந்து
நறைகமழ்குமுதப்போதுநலந்திகழ்புரிவுநோக்கிப்
பொறிநுதல்வியர்ப்பநின்றபொற்கொழுந்தனையபேதை
மறுவில்வாண்முகமென்றெண்ணிமைந்தனுண்மகிழ்வுபூத்தான். ௧௯

ஆழிவாயமிழ்துபெற்றவாயிரமுளரிச்செங்கட்
சூழ்கழற்குரிசிலன்னசுடரிலைநெடுவேற்காளை
காழகில்கமழவுண்டுகடைகுழன்றிருண்டுநெய்த்த
தாழ்குழல்கமழுமற்றெய்தாத்தடமுலைதழுவினானால். ௨௦

கூந்தலம்பிடியோடாடுங்கொல்சினக்களிறுபோலக்
காந்தழலுமிழும்வேலான்கங்குலும்பகலும்விள்ளான்
மாந்தளிர்குழைவுகூரவழிந்தழகொழுகுமேனி
ஏந்திழைமுறுவன்மாந்தியிருந்தனனீர்ந்துமன்றே. ௨௧

துவர்ப்பவின்கனிகளுந்தீஞ்சுவைப்படுமழலைப்பேதை
தவப்பசும்பொன்னங்கொம்பிற்றயங்குமெய்வனப்புமுண்கட்
சிவப்புமென்முறுவற்செவ்வாய்த்திருமலர்விளர்ப்புநெஞ்சத்
துவப்புறுபுணர்ச்சியுண்மையுணர்த்தினவாயிலோர்க்கே. ௨௨

நாற்றமுநடையுமற்றுநன்னுதற்கன்னிமன்னும்
தோற்றமுங்கண்டவாற்றாற்றுணைபுணர்செவ்விகாட்டும்
ஆற்றல்வேலரசகாணென்றகன்கடைகாப்போரண்மிச்
சாற்றலுங்கன்னிமாடஞ்சார்ந்தனன்வாணன்மன்றே. ௨௩

வாள்விரிபசும்பொன்பூத்தவரிமுலைகிழித்தபைந்தார்த்
தோள்வரையுறைக்குந்தேறல்சூழ்ந்துணவரிவண்டாட
ஆள்வழக்கொழிக்குமுன்கணமுதுறழ்சாயலோடு
காளைசூதாடல்கண்டுகட்கடைசிவந்தான்மாதோ. ௨௪

களிச்சுரும்பாற்றுகோதைகடைசிவந்தகன்றுநீண்டு
விளர்ப்புறுநீலவுண்கண்வேல்பொரவிழைந்துவைகும்
அளைத்தளையரியேறன்னவரசிளங்குமரன்றன்னை
வளைத்தனரடுபோராடவாட்படைவயவர்மன்னோ. ௨௫

கரும்புகால்குழைத்தகாளைகாமருபுதல்வன்வெம்பி
இரும்புசெயுலக்கையொன்றுங்கெடுத்தனனிகலலோடும்
பொரும்புலிப்போத்திற்றுஞ்சுபொழிமதக்களிறுபோல
அரம்பொருநெடுவேன்மள்ளராருயிர்தொலைவுற்றால். ௨௬

மயிலொடுமாறுகொண்டமாதரஞ்சாயற்கன்னி
கயன்மலைப்பன்னநீலக்கண்ணிணைமாரிகாலப்
புயலுறழ்மேனியானைப்பொருசினத்தவுணர்வேந்தன்
அயிலெயிற்றரவின்பாசத்தார்த்தனன்சிறைசெய்தானே. ௨௭

திங்களோர்நான்குதண்ணந்தேனெடுத்தொழுகுபைந்தார்
ஐங்கணைக்கிழவன்பெற்றவரும்பெறற்புதல்வர்காணேம்
எங்குளன்கொல்லோவென்றுயாதவர்நாடுங்காலைத்
தூங்கயாழ்முனிவன்வந்துசொல்லினன்விளைந்தவாறே. ௨௮

தாட்படுதுளவப்பைந்தார்த்தனிமுதல்குமரர்வெள்ளம்
கோட்புலிக்குழாத்திற்பொங்கிக்குரைகழனாலவீக்கி
வாட்படைவிதிர்த்துத்திண்டோள்வலங்கெழுவாணன்றன்மேல்
ஞாட்பினுக்கெழுந்ததூழிநாலெனும்பரவைநாண. ௨௯

மல்லலஞ்சிறப்புவாய்ந்தவால்வளையலறமன்னும்
வெல்கொடிமகரமோங்கவேனிலஞ்செல்வன்றானை
கல்லெனக்கலிக்குநீலக்கடற்புறத்தெழுந்ததோற்றம்
ஒல்லெனவொலிக்கும்வேலையுடைந்ததுபோலுமாதோ. ௩0

கலிவிருத்தம்.

நாணுறத்தாமெலாநலந்தகப்பிறங்கிய
வாணன்மற்குலவுதோண்மாயவன்றணிப்பன
காணியவரையெலாங்கண்ணுறல்போன்றன
கோணைவெங்களிற்றினங்குழுமியாங்கெழுபவே. ௩௧

யாழிசான்முழுமடற்பனைவலன்னுயரிய
தாழிருந்தடக்கையான்றண்மதிபோன்றுமாங்
காழியந்தேர்கடாயழல்சினந்திருகிய
ஊழிவெம்பரிதிபோலுடன்றெழுந்தானரோ. ௩௨

வெண்டலைப்புணரிபோல்விரைசெலக்கலினமா
மண்டுவெம்படைக்கடன்மருங்குறவெழுந்தனன்
எண்டிசைத்தலைவரோடிமையவர்தொழுதெழத்
தெண்டிரைத்துயிலெழுந்திகிரியஞ்செல்வனே. ௩௩

மின்னுநேர்வாட்படைமிளிரவண்டிமிர்துழாய்
இன்னெழின்முகிற்கொழுந்தெழுமுனங்கெழுதரு
கொன்னவில்படைக்கடற்கொழுந்துபோயவுணர்கோன்
பொன்னெயிற்சோணிதபுரத்தினிலிறுத்ததே. ௩௪

புரிவளைமுழக்கினார்பொலமுசடுடைபடச்
செருவிளைகாதலிற்செலவயர்கொடிப்படை
உருமினைப்பாறவானேங்குபொன்னிஞ்சூழ்
அருமிளையெறிந்ததாலாழியிற்குழுமியே. ௩௫

கலிச்சந்தவிருத்தம்.

தோராயிரம்பரியாயிரஞ்செம்பொற்புகர்முகவெங்
காராயிரமொருபால்வரக்கனல்கட்கடைகதுவாப்
பாராயிரந்தலைதாங்கியபகுவாயரவென்ன
ஓராயிரம்புயத்தானவனுடன்றானமர்க்கெழுந்தான். ௩௬

முரசங்கடலெனவார்த்திடமுகில்போன்முழவிமிழப்
புரிசங்கதிர்தாக்கட்கடைபுகைகூபகன்னனும்வான்
உருமேறெனக்கும்பாண்டனுமூழிக்கடையுடைக்கும்
அரவக்கடல்பொருதானையொடமர்வேட்கையினெழுந்தார். ௩௭

ஆர்க்கும்புயல்கிழித்தோங்குநெட்டலைக்குலமடையக்
கூர்க்குந்தழலுமிழ்குண்டுகட்குறுத்தாட்பெரும்பூதம்
பார்க்குந்திசைதொறுந்தோன்றிடப்பாய்வெள்விடையிவரத்
தார்க்கொன்றைதண்ணறவூற்றுசெஞ்சடைவானவனெழுந்தான்.

இடிக்குஞ்சினவுருமேறெனவிருங்குன்றகம்பிளக்கும்
வடிக்கும்பணிமலர்த்தார்நெடுவடிவேலவனுயர்வான்
வெடிக்கும்படிவளையார்த்திடவிறன்மஞ்ஞையின்முந்நீர்
பொடிக்குங்கதிரிளஞாயிறுபோலக்கனன்றெழுந்தான். ௩௯

காராடுமின்புரைவாட்டிறற்கண்ணன்படைக்கடலும்
தாராடுதிண்டோட்டானவன்றானைப்பெருங்கடலும்
போராடினபிணமாந்தியபுள்ளின்குலமுகுபுண்
நீராடினகவந்தக்குலநின்றாடினநெடிதே. ௪௰

குருகின்பெயர்புணர்மால்வரைகொன்ருேங்கியகொற்றத்
திருகுன்றெனப்பணைத்தேந்தியவெறுழ்த்தோட்சுடரிலைவேல்
முருகுங்கமழ்முருகுண்டளிமுரல்பூங்கணையவனும்
திருகுஞ்சினமொடுவெஞ்சரந்தெரிந்தாரமர்புரிந்தார். சக

சுழிக்குங்கடுங்குருதிப்புனல்சொரிகின்றதொரலத்தால்
உழக்குந்திறலமர்மேம்படுமுருமொப்பவனெடுகால்
குழைக்குஞ்சிலைக்கும்பாண்டனுங்கொலைக்கூபகன்னனுங்கார்
கிழிக்குங்கொடித்தடந்தேரினிற்கிடைத்தாரமரடர்த்தார். சஉ

மாலைப்பனிமதிவெண்குடைவாணசுரன்மகனும்
நீலப்புயல்கிழியாவெழுசிழன்மின்னெனத்திகழும்
காலக்கதிர்வேற்சாம்பனுங்கடைநாட்பொழில்கனற்றும்
ஆலப்பகுவாய்வெஞ்சினவரவிற்கனன்றடர்த்தார். சங

காற்ருமெனக்கனலாமெனக்கனல்சிந்துசட்பேழ்வாய்க்
கூற்ருமெனவருவாணனைக்குருதிப்புனல்கமழும்
வேற்ருனையும்வாட்டானையும்விற்ருனையுந்துரத்தா
எற்ருனிசற்பெருஞ்சாத்தகியிளவாளரியனையான். சச

ஓடும்புனன்மந்தாகினியுடைந்தாலெனவுடலம்
கோடும்பிறைக்கதிர்தங்கியகுளிர்வேணியிலாவம்
சூடுங்கறைமிடற்றண்ணலுந்தொளைவாளெயிற்றரவத்
தாடுங்கருமுகில்வண்ணனுமமராடினரம்மா. சரு

துளவப்பனிமலரந்தொடைசூடுந்தனிமுதற்கும்
தளைவிட்டலர்தார்க்கொன்றையந்தார்சூடுகண்ணுதற்கும்
விளைவுற்றதுபெரும்போரெனவிண்மொய்த்தனர்விரைநா
றிளமட்டுமிழ்மந்தாரமெல்லிணர்சூடியவிமையோர். சசா

வேறு.

நீற்றணியணிந்தவனெடுங்கிரிதுரக்கும்
காற்றின்வடிவெங்கணைகடுப்பொடுதுரந்தான்
ஏற்றையரிமானெனவிகற்களிறுகொன்ருேன்
மாற்றினனவ்வாளியைவடிக்கணைதொடுத்தே. சஎ

தண்ணெனிலவுக்கதிர்தவழ்ந்தசடிலத்தோன்
விண்ணகடுதீயவழல்வெங்கணைதொடுத்தான்
அண்ணலரவிற்றுயிலமர்ந்தகருமேக
வண்ணன்வருணப்படையின்மற்றதுதுணித்தான். சஅ

பழுத்தொழுகுவெங்கொலையபாசுபதமென்ன
வழுத்துபடைசெந்தழலின்வண்ணனனிவிட்டான்
சுழித்துநறைபாய்துளவுசூடுமுகில்வண்ணன்
அழற்றுதிறஞராணனதம்படையின்மாய்த்தான். சகூ

செங்குருதிதோய்கணைதெரிந்துதிறல்வல்வில்
அங்குவளைசாத்தகியடுந்திறலையஞ்சி
பொங்குதிணியுந்துருபொருக்கெனவிழ்ந்தாங்
கைங்கரனிரிந்தனனமர்க்களன்விரைந்தே. ௫௰

ஆவித்தல்செய்யுமடலம்பினெயிலந்நாள்
வேவச்சிரித்தமலைவில்லியைமயக்காத்
தாவற்றவென்றிகெழுதானவரைமாய்த்தான்
தீவிட்டெரித்திடுசினத்திகிரிமாயன். ௫௧

பாடற்சுரும்புழுபசுந்துளவுசூடும்
கோடுற்றசெங்கைமுகில்விற்கடைகுழைப்ப
ஓடற்கமைந்தவமரூன்றுசுழல்கட்ப்பேய்
ஆடற்கிவர்ந்தபிணமார்ந்துலவுபேய்கள். ௫௨

வானப்பரப்பினில்வயங்குமிருகோட்டுக்
கூனற்பசும்பிறையெனச்சிலைகுழைக்கும்
வேனிற்குமன்னனைவெரீஇவரைபறந்த
தூனுற்றவேன்முருகனொக்கமடமஞ்ஞை. ௫௩

கும்பாண்டன்வென்றிகெழுகூபகனனென்போர்
வெம்பாவமாத்தொழில்விளைத்துவளைமேனி
வம்பார்மலர்த்தெரியல்வள்ளல்படையாலே
தம்பாடவிந்துபொருதானையொடுசாய்ந்தார். ௫௪

வண்டாடுதாரவுணர்மாளநெடுவல்வில்
கொண்டாழிமாயனொருகொண்டலெனநிற்றல்
கண்டானவற்கெதிர்கடாயினன்மணித்தேர்
தண்டாமவாணனுயர்சாத்தகியைவிட்டே. ௫௫

ஐந்நூறுசெங்கரமடற்சிலைகுழைப்ப
ஐந்நூறுசெங்கரமழற்கணைதொடுப்ப
பைந்நாகபாரமுழுதும்பதைபதைப்பப்
பைந்நாகணைத்துயில்பரம்பொருளொடேற்றான். ௫௬

புள்வாய்கிழித்தபுயல்புட்கொடியின்மேலும்
கள்வாய்மலர்க்கொடிகலந்தவகலத்தும்
தெள்வார்திரைப்புவிதிளைப்புறுபுயத்தும்
வெள்வாள்வலத்தவுணன்வெங்கணைபொழிந்தான். ௫௭

தடக்குஞ்சரத்திடர்தவிர்த்தமணிவண்ணன்
கடக்குஞ்சரத்தொடுகெடுத்ததிறல்வாணன்
விடுக்குஞ்சரங்களும்விழச்சிலைகுழைத்துத்
தொடுக்குஞ்சரங்களுமறக்கணைதொடுத்தான். ௫௮

### அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

தழைத்தபைந்துளவமாலைத்தனிமுதனெடியசார்ங்கம்
குழைத்தனன்வாணன்வல்விற்குறைத்தனன்வாவுமான்றேர்
அழித்தனன்பாகன்சென்னியறுத்தனன்பகுவாய்ச்சங்கம்
முழக்கினனெடுமூதண்டமுகடுகீண்டொழியமன்னோ. ௫௯

வாட்டிறல்வாணனற்றாய்வாளமரமுழவநண்ணித்
தோட்டபூங்கூந்தறாழத்தூத்துகிலின்றிநிற்பக்
கோட்டலன்வரிவில்வேழக்கோடடிபிடுங்குகொண்டல்
தீட்டருஞ்செவ்விவாய்ந்ததிருமுகங்கோட்டிநின்றான். ௬௦

தொடுசினப்படையுமின்றித்துணைவயப்புரவிபண்ணி
விடுகொடித்தேருமின்றிவிழுப்பிணக்குவாலின்றோறும்
இடறியுங்குருதிச்செஞ்சேறிழுக்கியுங்களத்தினீங்கி
வடியிடுநெடுவேல்வாணன்மாநகர்வந்துசார்ந்தான். ௬௧

மூன்றுகான்மூன்றுசென்னிபெற்றதுமுழங்குசெந்தீக்
கான்றதுபுவனமூன்றுங்கனற்றுவதாயவெப்பு
வான்றவழ்குடுமிவெள்ளிவயங்குமால்வரையனுங்குத்
தேன்றவழ்துளவப்பைந்தார்ச்செல்வன்மேற்சினந்துவிட்டான். ௬௨

கடற்புனல்சுவறவாங்கிக்கனைகடல்கவைஇயஞாலம்
சுடக்கனன்றெழுந்ததீயிற்றோன்றுமவ்வெதுப்பின்முன்னா
நடுக்கியகுளிர்வெப்பொன்றுநனிமுறுவலித்துநம்பி
விடுத்தனனுலகமெல்லாம்விதிர்விதிர்ப்பெய்தமன்னோ. ௬௩

காரழனஞ்சமுண்டகண்ணுதல்கடிதுவிட்ட
கூரழல்வெதுப்புமற்றைக்குளிர்ப்புறுவெதுப்புக்காற்றா
தேரொழிற்கமலமாதினிளமுலைபொருததிண்டோள்
ஆரொழிற்றிகிரிமாயனடிதொழூஉப்பரவிற்றன்றே. ௬௪

விடம்பொழிபடைகளெல்லாம்வேண்டுவமுகந்துகொண்டு
தடஞ்சிறைப்பறவையன்னதயங்குதாட்புரவிபூண்ட
கொடிஞ்சியந்தடந்தேரேறிக்குரைகடற்றானைசூழ
மடங்கலேறன்னவாணன்மண்டமர்க்களத்தினுற்றான். ௬௫

தோமரங்கணிச்சிநேமிசூலம்வேல்பிண்டிபாலம்
தீமுகத்துமிழுமொள்வாள்சிலசிலதடக்கைசிந்த
மாமரஞ்சிலகையோச்சமால்வரைசிலகைவீசத்
தாமரைக்கண்ணன்றன்மேற்சமர்த்தொழில்விளைத்தல்செய்தான். ௬௬

ஊன்சுவைத்துதிரமாந்தியொளிறுவேல்வாணன்றிண்டோள்
நான்கொழித்தொழிந்தவெல்லாநளியழற்றிகிரிதாங்கிக்
கான்குறைத்திடுதல்போலக்களப்படத்துணித்தல்செய்தான்
தேன்சுழித்தொழுகுதண்ணஞ்செழுந்துழாயலங்கற்றேவே. ௬௭

தணிப்பருஞ்சீற்றத்துப்பிற்றானவர்தலைவனுங்கு
வணக்கியசிலைகளோடும்வாங்கியபடைகளோடும்
பணைத்தெழுபஃறோட்கானம்படுகளப்பரப்பின்வீழ்த்துத்
துணிக்குமாயவனையேத்திச்சொல்லுமம்மழுவலானே. ௬௮

நின்னுடைமாயைதன்னானெடிதறிவழிந்துபல்லோர்
என்னையேனோரையேத்தியிழிபெருஞ்செல்வந்துய்ப்பர்
உன்னையேபுகல்புக்கோர்மற்றலப்பில்பேரின்பவீடு
தன்னைநன்கடைவரீறிறனியறனிறுத்தச்சார்ந்தோய். ௬௯

கைப்படுமமுதுவீசிக்கடுநுகர்கசடர்போல
மைப்படுகளத்தேன்மற்றைவானவர்ப்பேணிநின்னை
மெய்ப்படுபெருந்தேவென்னாவிழைகிலார்விழலர்யோகர்
எய்ப்பறநினைத்தநெஞ்சத்தியையநோக்குறுவரெந்தாய். ௭௦

பராத்தலைவானீள்பங்கிபனிமுகிலகடுவீரை
தராத்தலைகழல்சூழ்திக்குத்தாழ்குழைச்செவிவிண்கொப்பூழ்
விராட்டுருவாயவேதவிழுப்பொருளேபூம்பொய்கைக்
கராத்துயர்செகுத்தவாதிகாரணனீயேயன்றே. ௭௧

வாமதுதொண்டனேன்முன்வழங்கினேன்கருணைவள்ளல்
பொருசினக்கனகன்காதற்புதல்வனுக்கருள்செய்தென்ன
அருள்செயல்வேண்டுமாலிவ்வடுதிறலாற்குமென்ன
விரியிணர்க்கடுக்கைமாலைவிண்ணவனிறைஞ்சிச்சொற்றான். ௭௨

வல்விறற்கனகன்மைந்தன்மரபின்வந்துதித்தோர்தம்மைக்
கொல்கிலமென்றியாமுங்கொடுத்தனம்வரமாமேரு
வில்லிநீவிளம்புமாறும்விழுமிதென்றுலகங்காக்கும்
அல்லியங்கமலக்கண்ணனருள்சுரந்துரைக்கலுற்றான். ௭௩

இந்நெடுந்தோள்கணான்குமீறிலாவரத்தினோடு
மன்னுகவென்றுவெள்வேல்வாணனுக்களித்தல்செய்தான்
கொன்னிளம்பரிதிபோன்றுகுருதிநீர்குடித்தவாழி
மின்னுவிட்டெறிக்குஞ்செங்கைமேலவனுவந்துமன்னோ. ௭௪

வாளுகிர்நுதியிற்பொல்லாவாட்டிறற்கனகன்மார்வம்
கிளவோர்செம்பொற்றூணங்கீண்டுவந்தெழுந்தசெங்கட்
கோளரியவனிபோற்றுங்குரைகழன்முளரிவாணன்
தோளொருநான்கினோடுதொழுதனன்பாவினானால். ௭௫

படுமதக்களிறுசூழப்பாய்பரிவெள்ளமீண்ட
இடிமுரசதிரப்பொற்றேரேறிவண்டிரைக்கும்பைந்தார்
அடலநிருத்தன்றன்னோடாம்பலிற்கமழுஞ்செவ்வாய்
மடமயிலன்னசாயன்மகளையாங்குதவினானே. ௭௬

குளிர்மதிகங்கைசூடுங்குரிசிலோடெறூழ்வேல்வாணன்
வளநகரடையவாணன்மடமகண்மணந்தமார்பத்
திளவிடையனையான்கல்லெனிருங்கடல்வேலிசூழ்தார்
துளவணிபடலைமாலைத்தோன்றலோடுவந்துசென்றான். எஎ

அநிருத்தன்மணம்புரியத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ககஉ௫.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௯சு-வது, நிருகனுக்கருள்புரியத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

வான்விளையாடநீண்டமாமயில்குரங்கமேய
கான்விளையாடியுண்ணீர்காமுறுக்களித்தசெங்கட்
டேன்விளையாடுபைந்தார்த்திருமறுமார்பன்மைந்தர்
மீன்விளையாடுகூவன்மேயினரென்பமன்றே. க

கூற்றுநீர்க்கூவறன்னுளொருபெருங்கோம்பிகாணு
ஏற்றிளவரிமாவன்னவிளையவரெடுக்கலாற்றார்
சாற்றினர்சென்றமுட்டாட்டாமரைப்பொகுட்டின்வாழும்
கோற்றொடிக்குவவுக்கொங்கைக்கோடுழுமார்பினுற்கே. உ

விம்மிதப்பட்டுமைந்தர்விளம்புதல்கேட்டலோடும்
கைம்மலையழைப்பவந்தகருணையங்கமலச்செங்கண்
மைம்முகில்வண்ணனேகிமலையெனக்கிடந்தவோமான்
செம்மலர்முளரியங்கைதீண்டினன்வாங்கினுனல். ௩

காண்டொறுங்களிப்புநல்குங்கனியமுதனையான்செங்கை
தீண்டலுமமாணுகித்திரைதவழ்பரவைமுந்நீர்
கீண்டெழுபரிதிபோலக்கிளரொளியுருப்பெற்றாங்கு
நீண்டமூதண்டகோளநிலவுறத்தோன்றிற்றன்றே. ௪

எறிகதிர்க்குழவிஞாயிற்றேர்பெறவிளங்குவானை
அறிகிலான்போலநின்றவமலனீயாரையென்ன
நிறையுயிர்தோறுநின்றநினக்குநானுரைப்பதென்னே
மறைதுணிவரியநம்பமன்னன்யானிருகனென்பேன். ௫

கல்வினுன்மாரிகாத்துக்கணநிரைபுரந்தசெங்கண்
மல்லலேறனையாய்பைம்பொன்மாரியிற்பொழிந்ததல்லால்
தொல்லைவானகத்துமீனுந்தொடுகடல்மணலுமாற்று
எல்லையவஞ்செஞ்சேதாவீந்தனன்மறைவலோர்க்கே. ௬

மன்னியவெள்ளிவெண்ணூல்வலம்படக்கிடந்தமார்பின்
பொன்னிதழ்க்கமலப்பைந்தார்புனையுமோரந்தணாளன்
இன்னிளம்புனிற்றாவந்தென்னினநிரைகலந்ததாக
அன்னதோரந்தணாளற்கறிந்திலென்வழங்கினேனால். எ

புனிறுசேர்பருவச்சேதாப்புனலொடுகவர்ந்துசெல்லும்
தனிமறையவனுமற்றைத்தாமரைத்தாரினானும்
எனதெனதென்றுகூறியிறைவனென்புரிந்தானென்னாக்
கனலெனக்கனற்சிமிக்கென்கடைத்தலைகுறுகினாரே. அ

ஆய்மரைக்கிழவமற்றிவ்வானினதென்றுதேற்றா
தாயிதழ்முளரிப்பைந்தாரந்தணற்குதவினேனா
றாயிரமஞ்செஞ்சேதாவளிக்குவனெனவுங்கொள்ளான்
ஆயவெஞ்சீற்றத்தானவ்வந்தணனகன்றுபோயான். ௯

ஒருறுபுனிற்றாவேட்டதீகுவனருளாயென்ன
நீரொடுபெற்றுநின்றநெடுமறைக்கிழவன்றானும்
ஆரமுதூறுகற்றாவாயிரப்பத்தென்றாலும்
கூரழல்வடிவேன்மன்னகொள்கலெனென்றுசென்றான். ௧0

இறப்புவந்தடைந்ததாகவென்னையம்மறலிநோக்கி
அறப்பயன்பெரிதுநெஞ்சத்தறிந்திலையற்றுபாவத்
திறப்பயனென்னிற்சாலச்சிறிதுபூந்தெரியல்வேந்தே
முறைப்படக்கூறல்வேண்டுமுன்னெதுநுகர்வதென்றான். ௧௧

தீதுமுன்னுகர்வலென்றுசெப்பினன்செப்பலோடும்
ஓதியாய்வீழ்தியென்னவீழ்ந்தனனுலகுக்கெல்லாய்
ஆதிநின்மலர்க்கைதீண்டவவ்வுருத்தீர்ந்தேனென்னாக்
கோதைநீண்முடியிற்றாழ்ந்துகொழும்பொன்னுடெய்தினனால். ௧௨

கார்முகில்வண்ணத்தண்ணல்காதலர்வதனநோக்கி
ஆரழல்வெய்யநஞ்சமருந்தினுந்தீர்ச்சியுண்டாம்
ஒருநான்மறைவலாளருறுபொருணுகர்ச்சியொன்றால்
தீர்வதென்றென்னாச்செவ்வாய்திறந்தனன்கூறினனே. ௧௩

நிருகனுக்கருள்புரியத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௧௩அ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

# ௩௭-வது, நம்பிமூத்தபிரான்கோகுலமடைந்த வத்தியாயம்.

---

### கலிநிலைத்துறை.

கரும்பனைக்கொடிக்காவலன்முல்லையங்கானம்
பொருந்திநந்தகோன்பூங்கழற்றுமனைபோற்று
அரும்புமென்னகையசோதைநந்துணைரசோகின்
திருந்துசெந்தளிர்ச்சீறடிசென்னியிற்சேர்த்தான். ௧

கிளரும்வெள்ளியங்கிரியொடுமாறுகொண்டெழுந்து
வளருந்தன்னிணைமணிப்புயம்விழைந்துநன்மாமை
விளருங்கோவியர்வெம்முலைமணந்தனன்வரிவண்
டுளரும்பூந்தொடைமார்வனவ்வொருகுழையொருவன். ௨

மழைக்கணேழையர்மன்றலம்பூங்குருண்மானத்
தழைத்தநாண்முகைத்தலையவிழ்ந்துகுத்ததாதாடிக்
குழைத்தகொம்பினிற்குலவிவாழ்கருங்குயிற்பிள்ளை
அழைப்பவின்னிளவேனில்வந்திறுத்ததையன்றே. ௩

குரவவார்குழற்குறுநுதற்கோவியர்குழாத்தோ
டுருவவொண்சுடர்பரப்பியவொருகுழையொருவன்
விரவுமீனொடுவிரிகதிர்விதுநடந்தென்ன
அரவவண்டிமிரிளமரக்காவுசென்றடைந்தான். ௪

திரைக்கடற்படுமமுதெனத்திசைத்திசைதெய்வ
மருக்கமழ்ந்திளவண்டொடுசுரும்பினம்பாய்ந்து
விரிக்கும்பூம்பொழில்விளைதருவாருணிநறவம்
களைக்குமாமதக்களிறனன்பருகினன்களித்தான். ௫

விரைசெய்காவினில்விளைமதுத்துளிதெறித்தென்ன
முருகுவிம்மியமுளரிவாண்முகம்வியர்ப்பூரப்
பொருவின்மாதரோடாடுவான்பூம்புனலாட
வருகவென்றனன்மறிதிரையமுனையைமகிழ்ந்தே. ௬

மழைக்கடாக்களிறன்னவன்வருபுனலாடக்
கழைத்தகாலையில்யமுனைவந்தடுத்திலதாக
இழுத்தகூர்ங்கொடுங்கலப்பையாலீர்க்குதுமெனவண்
டுழக்கிழிந்ததாரவனினைத்துழியொழுகியதால். ௭

கொய்யுநாண்மலர்விரைகமழ்யமுனைகொய்யாத
செய்யபொற்றுணர்த்தேந்தொடையொன்றொடுசெறிந்த
நெய்யிருங்குழலிரேவதிகொழுநற்குநெய்யா
ஐயநீலநுண்டுகிலிரண்டளித்ததையன்றே. ௮

சங்கைவெண்டிரைகலந்தெனக்கண்கவரழகு
பொங்குதன்னுருப்பொழிதருநிலவொளிபூப்பச்
சொங்குவிம்மியகுளிர்மலர்க்கொழுங்கரையமுனை
செங்கணேறனன்றினைத்தனன்கோவியர்செறிய. கூ

நூறுகாவசநூற்றிதழ்த்தாமரைவிரிந்து
நாறுதண்டுறைதழுவியநளிபுனற்றடமும்
ஆறுஞ்சோலையுமாய்ச்சியர்நலனுகர்ந்தாறி
ஏறனனிருதிங்கள்வீற்றிருந்தனனிப்பால். க0

நம்பிமூத்தபிரான்கோகுலமடைந்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கக௪அ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## ௩அ-வது, பவுண்டரனைக்கொன்றவத்தியாயம்.

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பாட்டளிகொழுதுபைந்தார்ப்பவுண்டரனென்னும்வேந்தன்
தாட்டுழாயலங்கல்சூடிச்சங்கொடுதிகிரிதாங்கிப்
பூட்டியொண்மணிமற்றொன்றுபுட்கொடியுயர்த்துவெய்ய
வாட்டிறல்வாசுதேவன்யானெனவைகினனே. க

காசிலக்குருநாட்டேந்தல்கண்ணுதலவனைப்போற்றி
ஏசிலாச்சங்கநேமியிருங்கதைபிறவுமெய்தி
ஆசறவினிதுவாழ்ஞான்றணிகெழுயாழின்வல்ல
தேசுடைமுனிவன்கூற்றுற்சினந்துபோர்கெழுமிநின்றான். உ

செங்கதிர்க்கற்றைகாலுந்திகிரியஞ்செல்வன்யானே
சங்கொடுதழல்வாய்நேமிதாங்குதல்விடுத்தாலுய்ந்தான்
அங்கவைவிடுகலானேலாடமர்க்கெழுகவென்று
வெங்கடக்களிறட்டாற்குவிடுத்தனன்றூதுமன்னோ. ௩

சேட்டிளம்பரிதியென்னத்திகழ்வெயிற்குப்பைகாலும்
சூட்டராவணையினனத்தூதுரைகேட்டலோடும்
கோட்டினனிலவுகாலுங்குறுநகையெறிவேற்றானை
ஈட்டமொடெழுந்துமன்னனெயிற்புறத்திறுத்தானன்றே. ௪

பாழிசான்முழவுத்திண்டோட்பவுண்டரவாசுதேவன்
ஊழியாரழலிற்சீறியொலிகடற்றானைசூழத்
தோழமைகொண்டகாசிவேந்தொடுசுடருந்தீவாய்
ஆழியம்படைக்கைதாங்கியமர்க்களங்குறுகினனல். ரு

பண்ணமைகளிறல்யானைப்பவுண்டரன்வதனநோக்கி
வெண்ணிலாமுறுவல்கோட்டிவிடுதிவெந்தழல்வாய்சான்ற
ஒண்ணிறநேமியென்றுங்குரைத்தனைவிடுதுமென்னு
மண்ணமைமுழவுத்திண்டோண்மாலவன்விடுத்திட்டானல். ௬

ஊற்றிருந்திரமாரியொழுகுசெந்தழல்வாய்நேமி
சீற்றமொடெதிர்ந்துவெய்யசெருத்தொழில்விளையாநின்ற
பாற்றினஞ்சுழலும்வைவேற்பவுண்டரவாசுதேவன்
மாற்றருஞ்சிறப்புவாய்ந்தமணிமுடிதுணித்ததன்றே. ௭

விட்டிருவினையுநீங்கிவேரியந்துளவமாய்ன்
கட்டெழிலுருவநாடிக்கைபுனைந்திருந்தவாற்றல்
பட்டவெங்களிறல்யானைப்பவுண்டரவாசுதேவன்
வட்டவாய்த்திகிரிதாங்குமாலுருமரீஇயினனல். ௮

திங்களைநுதல்போலத்தெண்ணிலாவிரிக்குமுள்வாய்ச்
சங்கொடுநேமிதாங்குந்தாமரைத்தடக்கையண்ணல்
வெங்கொலைப்பகழிதூண்டிவெல்படையழுவத்தேற்ற
கங்கைநாட்டிறைவன்சென்னிகாசிமாநகரின்வீழ்த்தான். ௯

கன்னியம்புரிசைசூழ்ந்தகாசிநாடளிக்குந்தோன்றல்
மன்னவர்மகுடகோடிமணித்தொகைபொருதுமின்கால்
பொன்னெடுவாயில்வீழ்ந்தகுலமணிச்சென்னிதந்தை
சென்னியென்றறிந்துமாழ்கிச்செய்கடன்கழித்தான்மன்னே. ௧௦

காய்க்குலைக்கமுகவேலிக்காசிநாடளிக்குந்தோன்றல்
பேய்க்குலந்துணங்கைதூங்குபோமர்க்களத்துநெய்த்தோர்
சாய்க்கமற்றெந்தைசெம்பொற்றூர்முடிதடிந்தான்றன்னை
மாய்க்குவனென்றுமுக்கண்வானவற்பழிச்சினனல். ௧௧

துளிப்புயல்கிழித்தமின்னிற்சுடர்விடுசெடிலத்தண்ணல்
வெளிப்படவங்கைகூப்பிவெஞ்சமர்க்களக்கணெந்தை
களிச்சுரும்பாற்றுபைந்தார்க்கதிர்முடிதுணித்தாற்சொல்ல
அளித்தியோர்வரமென்றேத்தியணிமுடிவணங்கிநின்றான். ௧௨

மழலைவண்டரற்றுதாரோய்மாரணவினையிற்றென்பால்
அழலினைவளர்த்திமற்றவ்வழலிடைவெதும்பியூழித்
தழன்முனிந்தெழுந்ததேய்ப்பத்தடம்பிறையெயிற்றுப்பேழ்வாய்ச்
சுழல்விழிப்பூதமொன்றுதோன்றும்விண்கிழித்துமன்னே. ௧௩

எழும்பிறையெயிற்றுப்பூதமெழுதருமறைவலோர்க்குத்
தழைந்தபோன்பிலார்மேற்சார்தாவிடுத்தியாயின்
விழைந்ததுமுடிக்குமென்னுவெள்ளிவெண்ணிலவுகாலும்
குழைந்தைவெண்டிங்கள்சூடுங்குரிசிலாங்கியம்பிச்சென்றான். ௧௪

கூரழலொழுகுவைவேற்கோவிளங்குமாரனங்கே
ஆரழல்வளர்ப்பமற்றவ்வழலினேர்பசுங்கட்பூதம்
ஈரெழுபொழிலுமின்னேயெரிக்குமென் றிமையோரஞ்சக்
காரெழுமுருமேறென்னக்கனற்சிமிக்கெழுந்துசென்ற. கரு

தழைந்தவெஞ்சினத்திற்றந்தைதார்முடிதுணித்தானவி
பிழிந்துணவிடுத்தலோடும்பிறங்குவெண்பிறைப்பற்பூதம்
விழைந்தசெங்கமலமாதின்மென்முலைக்கோடுபோழச்
சுழிந்துமட்டொழுகுதாரான்றுவரைபோய்ச்சுட்டதன்றே. கசு

கலிநிலைத்துறை.

சேதாமிடையச்செழுந்தீங்குழலின்றிசைத்தோன்
சூதாடுகாலைச்சுடுகின்றதொர்பூதமூதூர்
போதார்துளவப்புயல்வண்ணபுரத்தியென்னுத்
தாதார்முளரித்திருத்தாணிழன்மாந்தர்சார்ந்தார். கஎ

சேடுற்றனாயிரொருகோடிதிரண்டதேபோல்
பாடுற்றதெய்வப்பரிதிப்படையண்ணல்பார்ப்பச்
சூடுற்றசெந்தீச்சொரிகட்பெரும்பூதமஞ்சி
ஓடத்துரந்ததழனேமியுருத்துமன்னே. கஅ

விண்ணந்திகழப்பொடிக்குங்கதிர்நாணவெம்பி
நண்ணுந்திகிரிப்படையஞ்சிநடந்தபூதம்
கண்ணன்புரத்திற்றனையேவியகாமர்கங்கைத்
தண்ணந்துறைவன்றனதாருயிருண்டதன்றே. ககூ

குறுத்தாட்பூதங்கொலப்பட்டவக்கொற்றவெள்வேல்
நறைத்தாமமார்பனகர்தீமடுத்தாடனேமி
உறைத்தாய்பிழிவண்டொருகோடியுழக்கவிண்ட
வெறித்தாமரைப்பூங்கொடிகேள்வனைமேயதம்மா. உ0

என்றுமுன்மன்னனிளங்கோவியரேர்சனிந்த
பொன்னார்திலைப்புணர்வெம்முலைப்போகமாந்தி
மின்னார்ந்திலங்குவிதுமேனியன்வீற்றிருக்கும்
அந்நீர்மைசொல்வாயெனக்கூறினனைந்தவித்தான். உக

பவுண்டரனைக்கொன்றவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கககூகூ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

# ௫௯-வது, சாம்பன்மணம்புரியத்தியாயம்.

---

## எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

ஆடமர்கடந்த குருதிவாட்டடக்கை யடனரகாசுரன் றோழன், காடுறைவாழ்க்கைத் துவிதனென்றுரைக்குங் கடுந்திறற்கவிகுலத் தலைவன், ஒடையாலியானை மணிமருப்பொசித்தோ னெக்கல்வீற்றிருந்தமாநத்த, நாடுமால்வரைவீழ்த் தழித்தனன்கடற்சார்நகர்கடல்கொளப்பரிந்தழித்தான்.

படுமதஞ்செருக்கிப்படர்சினவயிராவதப்பெரும்பகடுபண்ணமைந்த
மடநடைப்பிடியோடாடுதல்கடுப்பவால்வளைமேனியான்மகிழ்ந்து [ட்
கொடிபுரைமருங்குற்குவிமுலைக்கனிவாய்க் குழைபொருகுவளையங்கருங்க
சுடரிழையாயர்மாதரோடாடுஞ்சோலைசூழ்குன்றகம்படர்ந்தான். ௨

சேயுயர்விசும்பின்விளங்குவெண்டிங்கட்செல்வனிற்றிகழ்பவன்றன்மேல்
காயழற்கதிரிற்கடுஞ்சினந்திருகிக்கவுளிழிகடாத்தவெண்பிறைக்கோட்
டாயிரங்களிற்றுவிறல்கெழுதுவிதனாச்சினைநெடுமரந்துரந்தும்
மீயுயர்குடுமிமால்வரைபிடுங்கிவீசியும்வெஞ்சமம்விளைத்தான். ௩

பைத்தலைப்பாம்பிற்பாரகமேழும்பணைநெடும்புயத்தினிற்பரிப்போன்
முத்தவெண்முறுவல்வெண்ணிலாவிரிக்குமுளரிவாண்முகத்தினனாகித்
தத்துவெள்ளருவித்தடவரைமுகட்டிற்றழங்கழலுருமுவீழ்ந்தென்னக்
குத்தினன்குருதிநீத்தம்வாய்கான்றுகுரக்கரசிறந்தனன்மன்னோ. ௪

எழுஞ்சுடர்கடுக்கு மெரிமணிச்செஞ்சூட் டேந்துபாராயிரம் பகுவாய், முழைஞ்சுகொப்புளிக்கும் விடத்தழல்பரந்து முகத்தழல்பாய்ந்தும்வெந்தொழிய, ஒழிந்துநின்றதனாற் சேடனென்றுரைக்கு மோங்குசீர்ப்பெரும்பெயர் படைத்த, செழுங்கதிர்விரிக்கு மொற்றைவார்குழையோன் றிருவளர்துவரைசென் றடைந்தான். ௫

## அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கழைபுனைவரிவிற்காமன்கடல்விளையமுதினாலே
எழுதியதன்னகோலத்திலக்கணையென்னுமாதைத்
தழையுநற்றவத்தினீன்றான்றழலெழவுயிர்க்கும்பேழ்வாய்
ஒழுகுநச்செயிற்றுப்பாந்தளுயரியகொடியான்மன்னோ. ௬

எங்கினிச்சேறுநாமென்றிரங்குபொற்குன்றுசூழும்
அங்கதிர்ப்பரிதியண்ணாந்தகல்விசும்பாறுபார்க்கும்
குங்குமக்குவட்டின்வீங்கிக்குமுதநாறமுதச்செவ்வாய்ப்
பைங்கிளிமழலைமாதின்படாமுலைபணைத்தமாதோ. ௭

நஞ்சமுமமுதுங்காட்டிநம்மொடுநிகர்க்குமேகொல்
அஞ்சனக்கடன்மற்றென்னாவையரிபரந்துநீரார்
கஞ்சமுங்கயலும்வென்றுகட்கடைசிவக்குமென்றால்
வெஞ்சிலைப்புருவவல்வில்விழிக்கிணையாவர்சொல்வார். ௮

எழுபெரும்புவிக்குமப்பாலிருளெலாமெழுந்துபொங்கி
முழுமதிதன்னைவந்துமுற்றியதன்மைகாட்டும்
மழைமுகங்கிழிக்குமின்னுமயருநுண்ணுசுப்பிற்பாவை
குழைமுகஞ்சூழ்ந்துதாழ்ந்துகுழன்றுநெய்த்திருண்டகூந்தல். கூ

ஒடிக்குநுண்மருங்குலென்னவுருத்தெழுகுவவுக்கொங்கை
வடிக்கருங்கண்ணியாக்கமதித்தனன்வதுவைநாட்டிக்
கடற்புவிகாக்குந்தண்ணங்கவிகைமன்னவர்கட்கெல்லாம்
விடுத்தனன்முடங்கல்வெவ்வாய்விடவராவுயர்த்தவேந்தே. க0

வரைமுகங்கிழியவீழுமண்டழன்மடங்கலென்னச்
செருமுகத்தேற்றதெவ்வர்திணிதடம்புயங்கள்போழ்ந்து
குருதிகொப்புளிக்குங்கூர்வேற்கோசலநாட்டுவேந்தன்
பொருகடற்பவளச்செவ்வாய்ப்பூவையைக்கருதிப்போந்தான். கக

அவிழிணர்ப்பொலம்பூந்தும்பையாத்துவாளமரிலேற்ற
புவிபுகழ்மன்னர்செங்கைப்புண்டரிகங்களெல்லாம்
குவிதரநிலவுதூற்றுங்குரைகழல்யாத்தநோன்றாட்
கவிமதங்கடந்தவண்கைக்கன்னிநாட்டிறைவன்வந்தான். கஉ

உமிழ்கொழுங்குருதியொள்வாளொளிறுமின்பிறழவீசிச்
சமரெதிர்ந்தாடுமன்னர்தாருடைந்தோயச்செம்பொற்
சிமயமொத்தெழுந்துவீங்கித்திரண்டதிண்டோளிற்றேத்தார்
கமழ்நறாத்தூற்றவந்தான்காம்பிலிக்காவலன்மன்னன். கந

பாற்றினஞ்சுழலுஞ்செவ்வேற்பற்றலராவியெல்லாம்
கூற்றொடுமறலிவாரிக்கொள்ளைகொண்டுண்ணுநால்வாய்க்
கீற்றிளந்திங்களன்னகிளரொளிமுத்தவெண்கோட்
டாற்றலங்களிநல்யானையவந்திநாட்டதிபன்வந்தான். கச

செருப்பெருஞ்செருக்கினின்றதிசைக்கடாக்களிற்றின்கொற்ற
மருப்பிறப்பொருதமார்பன்வாரணவாசிமன்னன்
கருப்புமென்மழலைக்கன்னிகதிர்மணிமருப்புவென்ற
அருப்பிளங்கொங்கைவெம்போராட்டுவந்தடைந்தானங்கே. கரு

சிலையொடுபொருதுவென்றுசெக்கர்வானரும்புதிங்கட்
கலையொடுமலையநாடுங்கட்டெழினுதலினார்தம்
முலையொடுபொருதபோலமுகிறவழ்பசும்பொற்கோட்டு
மலையொடுபொருதமார்வன்மாகதன்வந்தான்மன்னோ. கசு

அழிமதவருவிதாவுமண்ணலங்களிற்றினுச்சி
செழுமணிக்குடத்திற்றந்ததெய்வமாக்கங்கைத்தூநீர்
தழையுநல்லழகின்வெள்ளந்ததும்புவாண்முகத்தினாளைப்
பொழிமதுக்கமழ்பூங்கூந்தற்பூவையாட்டினரால். கஎ

பூம்புகைசுழுமவுண்டபுரிகுழன்முருகுவிம்மு
தேம்பிணையணிந்துநாணத்திலகநன்செழுதிப்பச்சைக்
காம்பெனப்பணைத்ததோளிற்சுரும்பொடுவல்லிதீட்டி
ஆம்பல்வாயணங்கினுண்கணஞ்சனந்திருத்தினரே. கஅ

எழிலெரிபசும்பொன்செவ்வாயிலங்குசெம்பவளநீலக்
குழன்மணிக்கொத்துமுத்தங்கூரெயிறுகவெல்லா
அழகுவீற்றிருந்தநங்கைக்கழகெனவணியணிந்தார்
மழைமதர்நெடுங்கணேழைமருங்குலின்பாவமீதே. ககூ

உவரியாரமுதத்தேறலூறுமென்மழலைப்பூவைப்
பவளவாய்மடந்தைகூந்தல்பாயிருளென்றுநாடாக்
குவிமுகிழ்பரந்தவண்டுகொழுதுபூங்காவென்றுள்ளத்
தவழ்கதிர்வதனத்திங்கடழீஇயெழிறழைந்ததன்றே. உ0

தெண்டிரையமுதின்சாயறிருமுகமுருகுவிம்மு
புண்டரிகங்கொலென்றுபுள்ளிமான்பிள்ளையெண்ணு
மண்டிலநிறைந்தமாசின்மதியெனமகிழ்ந்துநோக்கக்
குண்டலங்குலாயமீனிற்குரூஉச்சுடர்கொழித்ததன்றே. உக

தேமருகோதையஞ்செஞ்சீரடிசிறந்ததெய்வத்
தாமரைமலரேசெய்யதளிரெலாமல்லவென்னுக்
காமருசுரும்புமூசக்களியிளவெகினம்போல
மாமணிச்சிலம்புபாடுமழலைவீற்றிருந்தமன்னே. உஉ

கார்க்குழலாகமெல்லாங்கவர்ந்தெழில்கனியவீங்கி
ஈர்க்கிடைபோகலாகாவெதிரெதிர்பணைத்துவீங்கும்
வார்க்குலமறுத்தகொம்மைவரிமுலையாட்டுசுண்ணம்
போர்க்குமஞ்சுணங்குபோலும்பொற்புவீற்றிருந்ததன்றே. உங

அருப்பிளமுலையஞ்சாயலணிமணிக்கதிர்மென்றோனின்
வரித்தபூங்கரும்பின்பாங்கர்மண்டகத்தவழுந்தோற்றம்
சுருப்புவிற்குழையவாங்கிக்கடற்சுறவுயர்த்தகாளை
சுருப்புநாண்செவ்விவாய்ப்பத்தொடுத்ததுபோலுமன்றே. உச

மழைக்கருங்கண்ணிசெங்கேழ்மாமணித்தொடிகால்சுற்றை
நிழற்சுதிர்தீட்டுவல்லிநேரெழுந்தெறிக்குந்தோற்றம்
எழிற்கழையன்னமென்றோளெழுதியகாமவல்லி
குழைப்பதுபோலுஞ்செய்யகுறுமுறிக்கொழுந்துமன்னே. உரு

சுனைமுகமவிழ்ந்தபொன்னந்தோட்டுமாமலரேயன்றிச்
சினைமுகநெகிழ்மென்பூவுந்திறப்படச்சேருமாபோல்
புனையிழைமடவார்சூழப்போதினுந்தாதுவிம்மு
நனையினுமிதித்துநல்லநறுநுதனடக்கலுற்றாள். உசு

செழுந்தளிர்மேனிமாதர் திருத்தகவிரித்தல்செய்த
கொழுந்துணருறைப்பப்பூத்தகொப்புளம்போலப்பொற்றாள்
அழுந்துமெல்லரும்புதோன்றவணமெனவொதுங்கித்தீந்தேன்
வழிந்தபூந்தாமநாற்றிவனைந்ததோர்மாடஞ்சார்ந்தாள். ௨௭

முட்டியதிங்கள்கான்றமுழுக்களியமுதமூழ்கி
விட்டொளிர்கின்றதென்னவிளங்கியதவளமாடத்
திட்டபூந்தவிசின்வைகுமிருநிலவேந்தர்காண
மட்டவிழ்கோதைசென்றோர்மாலையின்வயங்கினாளால். ௨௮

கவளமார்களிநல்யானைக்காவலனொருவன்செம்பொற்
குவடெனப்பணைத்ததோளிற்கோற்றொடியொருகாழ்முத்தின்
அவிரொளிதவழமாதரானனைகநிலவுவந்து
தவழ்வதோவென்னாச்செங்கட்டாமரைபரப்பல்செய்தான். ௨௯

வலம்படுகுருதிவைவேன்மன்னவனொருவன்மார்வத்
தலங்கொளிவயிரப்பூணினணங்குசெந்தளிர்க்கைதாங்கும்
இலங்கிதழ்க்குவளைதோன்றவேந்திழைநோக்குநோக்கம்
கலந்ததுபோலுமென்றுகட்கடைதிருப்பினானால். ௩0

கோட்டிளங்களிறனானோர்கொற்றவன்குவளைவென்ற
வாட்டடங்கண்ணிசெக்கர்மணிக்குழையெறிக்குமொண்கேழ்
ஈட்டம்வந்துலவச்செய்யவிளந்தளிர்க்கண்ணிநங்கை
சூட்டினள்கொல்லோவென்னாத்தோட்டடந்துணைந்துநோக்கும். ௩௧

இத்திறனோக்கிநோக்கியெறழ்வலியரசர்வைகச்
சித்திரத்தெழுதவொண்ணாத்திருமுகஞ்சிறிதுகோட்டித்
தத்தரியொழுகுசெங்கட்டாமரைபரப்பிநின்ற
மைத்தவார்குழலினாளைவெளவினன்வடிவேற்சாம்பன். ௩௨

கலிவிருத்தம்.

கோடிவரிவண்டுபடுகோதைபுனையாமுன்
ஓடரிநெடுங்கண்மயிலொப்பவளைவந்துற்
றேடுபடுதாரவனெடுத்தொழிதல்காணா
ஆடரவுயர்த்தவனராவெனவழன்றான். ௩௩

கார்முகம்வணக்கியெழுகன்னன்முதல்பொன்னந்
தேரினர்களோரடவர்தீயெழவிழிக்கும்
போருழவையன்னவர்கள்போகலினியென்னா
எரினிளவேறனையவேந்தலைவளைத்தார். ௩௪

பூம்பிணையன்மார்பினவர்போகலெனவெவ்வாய்
வேம்பகழிபற்பலவிடுத்தனர்வளைப்ப
வாம்பரியதேரினன்வளைத்தவரிவில்லன்
சாம்பனமர்மேம்படுதருக்கினனெதிர்ந்தான். ௩௫

ஈரிருவடிக்கணையினாலெரிபசும்பொற்
றேர்புணர்பரித்தலைகள்சிந்திவிறல்சாயா
ஓரொருவடிக்கணையினாலுவரிமுற்றும்
பார்புகழுமோராறுவர்பாகருயிர்மாய்த்தான். ௩௬

நாற்றிசையுமுற்றியழனச்சிலையவெள்வேல்
ஆற்றலர்கள்கூற்றமெனவாடுசமராற்றா
எற்றுடலும்வெய்யபுலியாப்புறுதல்போலக்
காற்றின்விசைகொண்டுபொருகாளைதனையாத்தார். ௩௭

வேறு.

தீப்படவிழித்தவெஞ்சீற்றக்கட்செவி
மீப்படவுயரியவேந்தனாதியோர்
பாப்பணைத்துயின்றவன்பயந்தகாளையை
யாப்புறுத்தணிநகரேகினாரரோ. ௩௮

வழிந்துதேனுகுதொடைமகதியாழ்பயில்
செழுந்தவனத்திறஞ்சென்றுகூறலும்
கொழும்பிறைக்கோட்டிளங்குஞ்சரங்கள்போல்
எழுந்தனர்யாதவரிகலுக்கென்பவே. ௩௯

சிலைத்தொழிலிளையவர்செருக்கிப்போர்க்கெழல்
விலக்கினன்குமரனைமீட்கும்யாமெனா
அலப்படைக்கொற்றவனமுதமூற்றெழு
கலைக்கதிர்மதியெனக்கடிதினேகினான். ௪௦

புகரணிபூணுதற்புழைக்கைமால்கரி
நகரணித்தாமுகிழ்நனைகுடைந்துதா
துகவரிமிடற்றளியுழுமொர்காவிடை
இகலரியேறனாணிறுத்திட்டானரோ. ௪௧

ஒருகுழையொருவனாங்குற்றவன்றனைக்
குருகுலவேந்தொடுகூறவேண்டுநம்
வரவெனப்படர்ந்தவன்வல்லைகூறலும்
அரவுயர்கொடியினானவணடைந்தனன். ௪௨

பிறங்கிணருழுதிளம்பிள்ளைவண்டிசைத்
துறங்குபூநறவுவாயுறைப்பநீண்முடி
இறைஞ்சினன்மன்னவனிருந்தகாலையின்
நறுஞ்சினைமாம்புரைநம்பிகூறுவான். ௪௩

குரைகழற்காலினங்குமரன்றன்னொடும்
உருமெனமுழங்கியவோடைமால்களிற்
றரசர்பல்லோர்பொராலறங்கொலன்னது
பொருவினங்கேளெனப்பொறுத்தல்செய்தனம். ௪௪

விடுகவேற்சாம்பனைவிடுத்திரில்லையேல்
உடல்சமம்விளையுமென்றுலங்கொடோளினிர்
படுமதஞ்செருக்கியபனைக்கைமால்களிற்
றடல்கெழுகுருதிவேலரசுகூறிற்றால். ௪௫

என்னலுநஞ்சுமிழெயிற்றுப்பாழிவாய்க்
கொன்னவில்பாந்தளங்கொடியினுனெடு
மன்னியபெருவிறன்மன்னர்யாவரும்
மென்னகைமுகிழ்த்தனர்விளம்பன்மேயினர். ௪௬

சற்றைவெண்கவரியுங்கதிர்நிலாப்பொழி
கொற்றவெண்குடையும்யாங்கொடுப்பவேத்தியல்
உற்றிடும்யாதவருற்றநன்றெனச்
சொற்றனரெழுந்தனர்துணைவினேகினர். ௪௭

மறுத்தனருரைத்ததுவல்லையேகினர்
செறித்தபூந்தாரினர்நிலைமைநன்றெனு
வெறித்துணர்மாரம்புரைவெள்ளைமேனியான்
கறுத்தனன்செய்யகட்கடைசிவந்தவே. ௪௮

முறம்புரைதழைசெவிமூரிமாநகர்
கறங்குநீர்க்கங்கையிற்கவிழ்க்கும்யாமெனுப்
பிறங்கலையமுனையைப்பெயர்த்தகாவலன்
மறங்கெழுஞாஞ்சிலின்வாங்கினனரோ. ௪௯

விரைசெலன்மிதவையின்மிதந்துவெள்ளிவெண்
டிரைதவழ்கங்கையிற்றிருவமாநகர்
வரவொருகுழையினன்வாங்கவாகைவேல்
அரசர்கண்டஞ்சினரதிர்ப்புற்றாரரோ. ௫0

பாம்புயர்கொடியினன்பசியபச்சிளங்
காம்பெனப்பணைத்ததோட்கன்னிதன்னெடும்
சாம்பனையுய்த்தனன்றவளமேனியான்
மேம்படுசேவடிவீழ்ந்திறைஞ்சினன். ௫௧

ஒள்ளொளிநெடுநிலாவுதறுவாலுளைப்
புள்ளியிற்பொன்செய்தார்ப்புரவியீட்டமும்
பிள்ளைவண்டுண்மதம்பில்குமால்கரி
வெள்ளமுஞ்சிறப்பொடுவெறுப்பநல்கினன். ௫௨

முருகுலாங்கொம்பொடுமுருகனன்னசெங்
குருதிவேற்காளையைக்கொண்டுமன்னிய
திருநகர்க்கேகினன்செக்கர்மாமணி
ஒருகுழையுலாவருவுலங்கொடோளினன். ௫௩

புரவலவின்னும்பொன்னஞ்சூட்டெயில்
திருநகர்த்தென்றலைச்சேணிலோங்குரு
விரிதிரைக்கங்கையில்வீழ்தல்போன்றுமற்
றொருகுழையவன்வலியுணர்த்துகின்றதால். ருசு

சாம்பன்மணம்புரியத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கஉஉங.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## சO-வது, பதினாறாயிரந்திருவிளையாட்டுரையத்தியாயம்.

---

கலிநிலைத்துறை.

தண்ணந்தாமரைத்தலைவிவீற்றிருந்ததாரகலத்
தண்ணலெண்ணிரண்டாயிரமரிவையருவப்பக்
கண்ணுறுந்திறங்காண்குமென்றமிழ்தினிற்கனியும்
பண்ணமைந்ததீம்பாடல்யாழ்ப்பண்ணவன்படர்ந்தான். க

வளர்க்குங்கற்பகப்படப்பைவாய்வழிநறுமாந்தி
களிக்கும்வண்டுபூங்கற்பகக்கொடியெனமறுகத்
தளிர்க்குநல்லெழிறயங்கிழைமோயொடெவ்வுலகும்
அளிக்குங்கார்முகிலமர்ந்துழியடைந்தனனன்றே. உ

முழுதுணர்ந்தமாமுனிவரன்வருதலுமெழுந்து
கொழுதிவண்டறைகொழுந்தொடையமரர்கோடீரம்
உழுதபூங்கழற்காலினானொண்டொடிக்கரத்தால்
தொழுதுவந்தவாறென்கொலென்றினனுரைசொற்றான். ங

மறைவழுத்துநின்மலரடிவந்தடைந்தல்லால்
பிறவிமாக்கடலெங்ஙனங்கடப்பதுபிறவாச்
சிறியபச்சிளங்குழவியாயாலிலைச்சேக்கை
இறைகொண்மூத்தொழிலிறைவவென்றேத்தினனகன்றான். ச

மீட்டுமற்றொருமெல்லியல்கடிமனையிறுப்பச்
சூட்டராவணைத்துயின்றவனறிந்திலான்போன்று
நாட்டமின்னருள்பொழிதரநடந்ததெப்பொழுதிங்
கீட்டுமாதவவெனவுரையாடல்கேட்டிகந்தான். ரு

விரிந்தவெண்டிரைவேலிமண்பொதிந்தாள்விமலன்
இருந்துமில்லறச்செய்வினைதிறப்படக்காட்டி
அருந்தவத்தினோனடைதொறுமடைதொறுமாங்காங்
கிருந்தவண்ணமற்றெங்ஙனம்வகுத்தியாமிசைக்கேம். சு

கஞ்சநாண்மலர்க்கடவுண்முன்கடவுணீராட்டச்
செஞ்சுடர்ப்பொலஞ்சேவடிசேயுயர்விசும்பின்
நெஞ்சுபோழ்படநீட்டியநேமியந்தடக்கை
அஞ்சனப்புயலொருத்திசெயிதழமுதருந்தும். ௭

கல்வினால்வருத்தன்னதோளரக்கர்போர்கடந்து
வில்லினாலொருமெய்த்தவன்வேள்விகாத்தளித்தோன்
சொல்லினாற்பசுங்கிளிபுரைசுடரிழையொருத்தி
இல்லினான்மறையேத்தியமுத்தழல்வளர்க்கும். ௮

தேன்வழங்கியசெழுந்துணர்முல்லையந்தண்பூங்
கான்வழங்கியகணநிரைமேய்த்தகார்வண்ணன்
வான்வழங்கியமதிநுதலொருத்திதன்மனைவாய்
ஆன்வழங்கும்வீழ்ந்தருமறையந்தணர்முகப்ப. ௯

தமரவெண்டிரைத்தடங்கடல்வரையினாற்கலக்கி
அமரர்கூட்டுணவமுதுணவளித்தருளிறைவன்
குமரிவண்டுணக்குவிமுகிழுடைந்துதண்டேறல்
உமிழ்மலர்க்குழலொருத்திதன்மனைவிருந்தூட்டும். ௧௦

ஆட்டுவெண்டிரைக்கருங்கடலவனிமாதணையச்
சூட்டுசெம்மலர்த்தொடைபுனைமணிமுடிதுறந்து
காட்டினேனெனக்கருங்குயிற்கிளவியன்றுரைத்தல்
கேட்டமாயவனொருத்தியொடிருந்தறங்கேட்கும். ௧௧

துணரகற்பகஞ்சுரிமுகமுழக்கிவிண்டுளக்கிக்
கொணர்கரும்புயல்குழன்றுநெய்த்திருண்டுவார்ந்தொழுகும்
வணரிருங்குழல்வாணுதலொருத்திதன்மனைவாய்
இணர்மணங்கமழிளமரச்சோலைமற்றிழைக்கும். ௧௨

விண்ணம்போழ்படவிரைமலர்ச்சேவடிநீட்டிக்
கண்ணகன்புனல்கண்ணுதல்சடைக்கருள்கண்ணன்
வண்ணவார்குழலொருத்திதன்வளமனைப்புறத்துத்
தண்ணந்தாமரைதளையவிழ்மணித்தடம்வகுக்கும். ௧௩

மாமன்விட்டதோர்மழைமதக்கருங்களிறட்ட
தாமமார்பினன்றளையவிழ்தாமமோடிற்பூந்
தூமஞ்சூடியசுரிகுழலொருத்திதன்மனைவாய்
நாமவெஞ்சினநனைகவுட்புழைக்கைமாநடத்தும். ௧௪

பூத்தபொங்கர்பொங்கெரியுணப்பொருசிலைவாங்கும்
பார்த்தன்றேர்விடுபாகன்வெண்பனிநிலாமுத்தம்
கோத்தெனத்திகழ்கூரெயிற்றொருத்திமாநகரின்
றேத்துமின்பொழிசெழுமணிகுயின்றதேரூரும். ௧௫

பரியுருப்புணர்படுகொலையவுணனைப்படுத்த
கரியவன்கருங்களிக்கயலிரண்டெதிர்கலந்து
பொருவபோன்றசட்பொற்றொடியொருத்திதன்மனைவாய்
உருவவானிலவொழுகுவாலுளைப்பரியுகைக்கும். கசு

நெடியமூதெயினீள்பொலம்பொருப்பினன்முருக்கு
கடவுள்வார்சிலையிறுத்தவன்கருங்கயல்வெருட்டித்
தடநெகிழ்ந்தசெந்தாமரைமலரின்மேனடந்த
வடிநெடுங்கணோர்கொடிமனைவரிசிலைவடிக்கும். கஎ

தெழித்துநாக்கடைகவ்வியுஞ்செந்தழல்சிதற
விழித்துநூக்கியுமூக்கியும்வெருவருவெம்போர்
இழைத்தமல்லர்தம்மெறுழ்வலிகடந்தபோரேறோர்
மழைத்தடங்கணாள்வளமனைமற்றொழின்வகுக்கும். கஅ

பொழிந்தசெஞ்சுடர்ப்பொன்னகருறைகுநர்நெஞ்சம்
விழைந்துநாடியவிழுப்பொருணல்கிறேன்விதுப்பூங்
கொழுந்தினல்லெழில்கவற்றியகுறுநுதலொருத்தி
செழும்பொனில்லிடைத்திருத்தகச்செய்பொருடிருத்தும். கசூ

திரைசெய்தெண்கடலெழுமிளம்பரிதியிற்றிகழும்
விரைசெய்தார்முடிவிண்ணவர்பரவவீற்றிருப்போன்
வரைசெய்மாமுலையொருத்திதன்வளமனைவளாகத்
தரசர்வந்துவந்தடிதொழவரசுவீற்றிருக்கும். உo

விரியும்போதுறைவேதனும்வேதமுமானும்
பரியுநெஞ்சொடுபாடியுநாடியுந்தெரிதற்
கரியனாகியவண்ணலோரரிவைதன்மனைவாய்த்
தெறியுஞ்சொற்றிறனமைச்சொடுசெய்வினைதேரும். உக

காட்டினண்ணுபுகண்கவர்காஞ்சனவுருக்கொள்
மோட்டுவெந்திறன்முழுவலிமானுயிர்முடியக்
கோட்டுவார்சிலைக்குரிசிலோர்கோற்றொடிமனையின்
வேட்டமாடுவானெழுமிகல்வேற்படைமிடைய. உஉ

எழுபொருப்பெனவெழுதருமெழுவிடைதழுவித்
தழுமுற்றெய்திடத்தடமுலையொருத்தியைமணந்த
முழுமுதற்பொருண்முருக்கிதழொருத்திதன்மனைவாய்
மழலைமென்மொழிமக்கடம்மணவினைமன்னும். உங

விரிந்ததாமரைப்பொகுட்டுறைவேதியன்முதலாத்
தெரிந்தநான்மறையந்தணர்தெள்ளிதின்வேட்டுச்
சொரிந்தநல்லவிதுய்ப்பவன்சுருண்டிறைநெறித்துப்
புரிந்தவார்குழலொருத்திதன்மனைமகம்புரியும். உச

காய்ந்தவெஞ்சினக்கறையணற்பிறையெயிற்றகல்வாய்ப்
பாந்தள்வல்விடம்பாய்ந்தநீர்த்தடத்துவீழ்ந்தாடும்
ஏந்தலேந்திளவெழின்முலையொருத்தியோடினிது
சாந்தளாவியதண்புனற்றடம்படிந்தாடும். ௨௫

சுரும்புசூழ்பசுந்தோட்டிணர்க்கற்பகம்பிடுங்கு
பெருங்கைவேழமோர்பிடிபுணர்ந்தாடுதல்கடுப்பக்
குரும்பைமென்முலைக்கோற்றொடியொருத்தியோடந்தண்
அரும்புவாயவிழிளமரக்காவகத்தாடும். ௨௬

மழலைவண்டுணமடல்வயிறுடைந்துதேத்திவலைப்
பொழிகருந்துழாய்ப்புயல்கதிர்மின்னொடுபுணர்ந்தாங்
கொழுகுநுண்ணிடைமடவரலொருத்தியோடுருத்த
குழவிவெண்பிறையிடறுசெய்குன்றினிற்குலவும். ௨௭

தாளதாமரைத்தாளலாற்கங்கையந்தரங்கம்
தோளினுந்தவழ்ந்தெனநிலாத்தூற்றுவெண்கவரி
வாளிரண்டெனமதர்விழியொருத்திநின்றிரட்டக்
காளமேகமன்னன்மலர்மெல்லணைகவினும். ௨௮

கருப்புவெஞ்சிலைக்காமவேள்கதிர்முடிவணக்கிப்
பொருப்புஞ்செய்யபொற்பொருப்பொடுபொருதமால்யானை
மருப்புமஞ்சுறமாணெழிற்சூதொடுமலைந்த
அருப்புவெம்முலையொருத்தியோடமர்ந்துசூதாடும். ௨௯

மழலைகேட்குநரின்றியேமரகதக்கொழுந்தின்
அழகெறித்தபைங்குழவியாயாலிலைக்கிடந்தோன்
எழிலிளங்கிளிபோலுமோரேழையீன்றெடுத்த
குழவியின்னமுதுயிர்த்தநீங்குதலைகேட்டுவக்கும். ௩0

படுதிரைக்கடல்படிந்தெழுபசும்புயற்கொழுந்து
வடவரைத்தலைமணத்தல்போன்மடவரலொருத்தி
நெடுநிலாப்பொழிநித்திலப்பூண்சுமந்தேந்திச்
சுடுபொன்பூத்தவஞ்சுணங்கவிரிளமுலைதோயும். ௩௧

விரிந்தபைத்தலைவெள்ளிவெம்பாப்பணைதுயின்ற
கருந்துழாய்முகில்கார்நிறக்கட்செவிச்சேக்கை
பொருந்தியாங்கொருபுரிகுழல்புணர்முலைக்கோட்டின்
நரந்தமூழ்கியநறுமலர்ப்பிணையன்மேற்றுயிலும். ௩௨

மாயுமக்களூன்மலிபொடியென்பணிவனைந்து
தூய்மைநீங்குமெண்டோளவன்றூய்மையெய்திடுவான்
சேயதன்னடித்தெய்வநீர்சென்னிமீத்தருநம்
மாயனோர்மடவரன்மனைமஞ்சனமாடும். ௩௩

திரைத்ததண்சுடர்நித்திலநேரும்வாண்முறுவல்
ஒருத்திபொன்னுரையொத்தநுண்டிதலைவெம்முலைமேல்
வரித்தகப்புரமன்றலங்கலவையிற்றோய்ந்து
விரித்ததீங்கதிர்வெண்மதிக்கடவுளின்விளங்கும். ௩௪

மொழியுஞ்சாயலுமுழுக்களிவிளைக்குமாரமுதின்
தழையுமற்றொருதளரியநடமுலைமுற்றத்
தெழுதருங்குமக்கொழுங்களியளாயெரிபசும்பொன்
ஒழுகுகுன்றுசேர்குழவியம்பரிதிபோன்றொளிரும். ௩௫

பாடல்சால்பசுங்கிளிபுரையொருமடப்பாவை
மோடுகொண்டெழுமுதிரெழின்முகிழ்முலைக்கோடு
சாடவிண்டதாருகுத்ததாதளைந்துவெஞ்சுண்ணம்
ஆடுமஞ்சனக்களிறுபோலணிபெறவிளங்கும். ௩௬

பணங்கொள்பாந்தளின்பஃறலைக்கிடந்தபார்வியப்பக்
கொணர்ந்தகற்பகக்கொழுந்தளிர்ப்பசுங்கொடிநோக்கி
இணைந்துவிம்மியவிழைமுலையொருத்திமென்றோளின்
மணங்கொண்மான்மதச்சாந்தினால்வல்லிசின்றெழுதும். ௩௭

பாட்டுவண்டிமிர்பனிமலர்ப்பசுந்தொடைபரிய
மோட்டுவெண்டிரைமுத்துரிஞ்சிளமுலைமுயங்கி
ஊட்டியன்னவொண்டளிர்புரைந்தாலெனச்செங்கை
கூட்டிமற்றொருகோற்றொடிகருங்குழன்முடிக்கும். ௩௮

எழில்செய்நல்லணியேந்துபுநிற்பதையல்லால்
தழையுமாரமுந்தயங்கிழைபுனைவதுகடுப்ப
முழுநிலாப்பொழிமுத்துகமுயங்கிமற்றொருத்திக்
கழகுகண்படுமவிரிழையங்கையாலணியும். ௩௯

இயலினிற்கழையேழிசையமுதுகவிசைத்த
மயிலெருத்துறழ்மாயனோர்மயிலியன்மடவாள்
கயிலெருத்திடங்கோட்டினள்கனியினிற்கனியப்
பயிலும்பண்ணமைபஃறொடையாழிசைபருகும். ௪௰

இன்னதன்மையவெண்ணிரண்டாயிரமுருக்கொண்
டன்னமென்னடையரிவையர்மனைதொறுந்தோன்ற
மன்னுநின்பெருமாயையாரறிகுவரென்னா
நன்னர்யாழ்முனிநன்றுவந்தேத்தினனடந்தான். ௪௧

பதினாறாயிரந்திருவிளையாட்டுரையத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧௨௬௪.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௪௧-வது, சிசுபாலனைக்கொன்றவத்தியாயம்.

---

### கலிநிலைத்துறை.

சேட்டிளம்பிறைக்கொழுந்தெனத்திகழ்தருபால்வெண்
கோட்டுவாரணங்கூப்பிடத்துயிலெழுகொண்டல்
மோட்டுமுட்புறமுருக்கின்மொய்யிணரெனவிரிந்த
சூட்டுவாரணங்கூப்பிடத்துயிலெழுந்தனனால். ௧

இனைத்தெனத்துணிந்தெழுதிடாப்பழமறைக்குலங்கள்
அனைத்துமெட்டுதற்கரியதோராகந்தமயமாய்
நினைப்பரும்பரதத்துவமாய்நிறைந்தோங்கு
தனிப்பெருஞ்சுடர்தன்னையேநினைந்தனனிருந்தான். ௨

கங்கைசேவடித்தாமரையொன்றுமேகலந்த
தங்கதிர்த்திருநகைமுகைமுளரியுமாய்பொன்
செங்கைமாமலர்முளரியுந்தீண்டினனென்னாப்
பொங்குவெண்டிரைப்பூம்புனன்முழங்கமூழ்கினனால். ௩

பொங்குவெண்டிரைபூத்திடுகவுத்துவம்பொழிந்த
அங்கதிர்க்குலந்தவழ்ந்தெனவருவரைமார்பில்
குங்குமக்கொழுஞ்சாந்தணிதிருத்தினன்குளிர்ந்த
திங்கள்வாண்முகந்தீட்டினன்றிருமணிற்றிலகம். ௪

வேலைவெண்டிரைமுகட்டினில்வெங்கதிர்பொடிப்ப
நீலவண்டுசூழ்தாமரைநெகிழ்ந்துதேன்பொழிதல்
போலவீர்ம்புனல்பூந்தொடித்தடக்கையாற்பொழிந்து
காலையாற்றுறுகடனெலாந்திறப்படக்கழித்தான். ௫

கலித்தவெண்டிரைக்ககனநீர்வளர்த்தகற்பகத்தின்
ஒலித்ததண்சினையொழுகுசெந்தளிர்நலங்கவற்று
மலர்க்கரத்தினான்மண்ணுநல்லாவுதிமண்ணி
நலத்தமுத்தழல்வளர்த்தனனான்மறைநெறியின். ௬

படுதிரைக்கடல்படிந்தெழுபசும்புயலென்றே
நெடுநிலத்தவர்நினைந்திடநெகிழ்ந்தசெங்கமலப்
படலைசூடியபழமறையந்தணர்க்கெல்லாம்
சுடர்துளும்புவெண்முத்தொடுபொன்மழைசொரிந்தான். ௭

விழைவெறிந்தெழுவெகுளியைவேரொடும்பிடுங்கு
முழுதுணர்ந்தமாமுனிவரைச்குரவரைப்பசுவைப்
பழுதில்காட்சிசால்பழமறைக்கிழவரைக்கையால்
தொழுதல்செய்தனன்மங்கலப்பொருள்பலதொட்டான். ௮

மற்றுநேரிலாமரகதமணிவரைமருங்கில்
எற்றுதெண்டிரையெழுதருமிளங்கதிரெறிக்கும்
கற்றைவாள்வெயில்காண்டகவளைப்பதுகடுப்பப்
பொற்றைபைங்கதிர்பொழிதருபொற்றுகிலுடுத்தான். ௯

வெறுத்தகாரிருள்விழுங்கிடுவெண்ணிலாக்கதிர்விட்
டெறித்ததண்பிறையிதயனின்றெழுவதேயெய்ப்ப
நெறித்தபோதுறைநேரிழைவனமுலையாரம்
பொறித்தமார்பினிற்பூண்டனன்பொழிகதிராரம். ௧௦

கான்முல்லையுங்கானுலாந்துளவமுங்கஞலித்
தேனுண்வண்டொடுதேனவாங்கற்பகஞ்செறிந்த
பூநறும்பிணைபூமகள்புணர்புயப்பொருப்பின்
வானவில்லெனவான்மருடோள்வளைவனைந்தான். ௧௧

அறல்புறந்தருகருங்குழலாய்ச்சியர்மனைத்தூங்
குறிசெறிந்தநெய்பார்த்ததுகிடக்கமற்றுருகு
நறுநெய்பார்த்தனனல்லொளிதுவன்றுகண்ணாடி
மறுவில்வெண்ணிலாமதிமுகமலரநோக்கினனால். ௧௨

ஒட்டமைந்தசெம்பொற்கலனொழுகொளியாரம்
ஆட்டுவந்தவாளரவுரியன்னநல்லறுவை
வேட்டவேட்டனவிரையெடுத்தெறிதருதண்பூந்
தோட்டதாமரைத்துணையடிதொழுபவர்க்களித்தான். ௧௩

உவவுவெண்மதியுருவவொண்குடைமிசையோங்கக்
கவரிகால்செயக்கருங்கடல்வெள்வளைகடுப்பப்
பவளநல்லொளிபழுத்தவெண்குளம்புடைப்பசிய
இவுளிபூண்டதோரெரிமணித்தேர்மிசையிவர்ந்தான். ௧௪

குரைசெய்வண்டொடுகொழுங்களிச்சுரும்பினங்கொழுதா
விரைசெய்கற்பகநறுமலர்விண்ணவர்பொழியத்
திரைசெய்வேலையிற்செழுமணித்திரளொளிதிளைக்கும்
அரசிருக்கைசென்றடைந்தனனரசெலாம்வணங்க. ௧௫

### அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

அழியுமருவிக்கடாயானையழைப்பவருங்காரருள்பெருகி
வழியுமுளரித்திருநோக்கமாநீர்க்கங்கைப்பெருக்காறு
தழையுமெழிற்றாட்செம்முளரிதாழுமரசர்க்கருளிவெயில்
பொழியும்பசும்பொன்வட்டவணைபொலியவரசுவீற்றிருந்தான். ௧௬

வைத்தநெடுவேற்சராசந்தன்வைக்குஞ்சிறையிற்கிடந்தவளிக்
கொத்துமுரலும்பசுந்தெரியற்கொற்றக்கவிகைமுடிவேந்தர்
ஒத்ததூதனத்தலைவந்துடைக்குந்திரைமந்தாகினியின்
தத்துதளிபோன்முத்தமணிதயங்குகழற்காறாழ்ந்தனனால். ௧௭

மடங்கலனையபோராற்றன்மடங்கிமகதன்சிறைக்கிடந்த
விடங்கொப்புளிக்குநெட்டிலைவேல்வேந்தர்க்கருளவேண்டுமெனக்
குடந்தம்படுவானவர்மகுடகோடியுழுதபழந்தழும்பு
கிடந்தபசுந்தாட்கமலமலர்கிடையாவிறைஞ்சிக்கிளத்தினனால். ௧௮

நடவுங்கலினப்பரித்தானைநறுந்தாரரசர்குறையிரந்து
விடவந்திறைஞ்சுதூதனுரைவிரியாநிற்கும்வேலையின்கண்
பிடவம்புனைந்தவாயர்தவப்பேற்றினால்யாழ்நரம்பு
நடவந்திருத்தான்முருகொழுகுதடந்தாமரையோன்றருதோன்றல். ௧௯

வேறு.

பௌவவெண்டிரையிற்பட்டபல்கரப்பரிதிபோல
எவ்வெலாத்திசையுமொண்கேழெறிப்பவந்தினிதுதோன்றும்
தெய்வயாழ்முனியைச்செய்யாத்திருமொழிகடந்துநின்ற
அவ்வெண்சொற்பொருளாவாணின்றாங்கணன்கேத்திப்பின்னும். ௨௦

தழைத்தபேருலகின்செய்கைதயங்கநீயறிதியன்றே
அழற்பொலிந்திலங்குகூர்வேலவரென்செய்கின்றார்கொல்
விழுத்தவவென்றுசெந்தீவிழுத்தவெஞ்சினத்தபுள்வாய்
கிழித்தவனுலகமுண்டகிளரொளிப்பவளம்விண்டான். ௨௧

அரம்பொருகுடுமிவைவேலவராங்கிராசசூயம்
புரிந்திடவேட்கின்றாராற்பொழியருண்முளரிச்செங்கட்
கருங்கடல்வண்ணநீயேகாத்திடல்வேண்டுமென்னா
நரம்புளர்ந்திசைக்கும்பாடனாரதனவின்றானன்றே. ௨௨

சோர்மதுத்தெரியல்வேந்தர்தூதனின்றிசைத்தகூற்றும்
நாரதனவின்றபாட்டுநகைமுகமலர்ந்துகேளா
ஓருநல்லுணர்வின்மிக்கவுத்தவன்வதனநீலக்
கார்முகிற்கொழுந்துபோலுங்காரணன்கடைக்கணித்தான். ௨௩

யொற்றசெங்கமலமாதின்புணர்முலைபொருதமார்வ
ஒற்றைவெண்கவிகைநீழலுடைதிரைஞாலங்காக்கும்
கொற்றவன்வேள்விக்கேகிற்கொற்றவர்குறிப்புமாங்கே
முற்றுமென்றுரைத்தல்செய்தான்முழுதுணர்காட்சியோனே. ௨௪

உவவுவெண்டிங்களன்னவுத்தவனுரைத்ததீஞ்சொல்
செவிமுதன்மடுத்துமாந்தித்திவவுயாழ்முனிவன்றன்னோ
டவிர்கழலரசர்தூதற்கருளினன்விடைவிற்பார்த்தன்
இவர்மணித்தடந்தேர்ப்பாகனெழுந்தனன்வேள்விக்கென்றே. ௨௫

நேமியஞ்சிலம்புமற்றோர்நிழன்மணிச்சிலம்பிற்றோன்றத்
தாமரைமலர்த்தாளொன்றிற்றடங்கடலுலகம்வைத்த
தேமருதுளவத்தாரோன்றீம்புனல்யாறுங்குன்றும்
காமருகழனிநாடுங்கடந்தனன்போயினானால். ௨௬

அரந்தினப்பிறந்தபொன்போலைதெழிற்றிதலைபூத்த
குரும்பைமென்கொங்கையார்தங்குழாத்தொடுமெய்தினானால்
கருங்கடலமுதினோடுகொண்டகச்செல்லுமாபோல்
இரும்புவியளந்ததாளானிந்திரப்பிரத்தமன்னோ. ௨௭

நீலமாகடல்போலொற்றைநேமியானெய்தலோடும்
வாலுளைப்புரவித்தானைமறிதிரைக்கடலிற்சூழப்
பால்வளையலறவள்வார்ப்பல்லியந்துவைப்பவல்லே
கால்வளைவரிவிலைவர்களித்தனரெதிர்கொடுற்றார். ௨௮

தம்பியரிறைஞ்சநின்றதடஞ்சிலைவிசயன்றன்னை
அம்பகட்டாரமார்பிற்புல்லினனவற்குமூத்த
வம்புலாந்தெரியலாரைவணங்கினன்மனவாக்கெட்டா
தும்பர்பொன்மகுடகோடியுழநின்றகழலம்மானே. ௨௯

புண்டரிகங்கள்பூத்தபுயற்பசுங்கொழுந்துபோல
வண்டுழாய்முருகுதூற்றவந்துமுன்னிற்பப்பெற்றுப்
பண்டைநான்மறையுங்காணாப்பரமனைத்தருமனுக்குக்
கண்டிலனுவகைக்கண்ணீர்கண்ணகநிறைந்துமன்றே. ௩௦

உண்மலிகுற்றமும்மையொருவிநெஞ்சொருப்பட்டீறில்
எண்பிரபத்திநிட்டையேயமாமுனைவர்காணும்
ஒண்மணியாழிக்கையனுருப்புறங்காணலுற்றார்
கண்மழைவாரநிற்றல்கழறலாந்தகைமைத்தாமே. ௩௧

துளிப்புயல்கீண்டமின்னிற்றோன்றெழின்மடவாருண்கண்
களிக்கயல்கடலிற்பாயுங்காட்சிபோன்மேனியெல்லாம்
திளைப்பவெண்டிரைப்பாலாழிச்சேர்ப்பனள்ளார்செஞ்சோரி
குளித்தநெட்டிலைவேலைவர்கோயில்சென்றெய்தினனால். ௩௨

வெஞ்சரங்கடந்தநீலவிழியிணைகளிப்பநோக்கி
நெஞ்சகத்துவகைவேலைநிறைந்தெழநின்றகுந்தி
கஞ்சநாண்மலர்த்தாண்மற்றோர்கருங்கடல்படிதலைப்பக்
குஞ்சரங்கோடுகொண்டகொற்றவன்வணங்கிநின்றான். ௩௩

பாற்றிரைக்கங்கையல்லாற்படுபுனல்யமுனைவந்து
தோற்றுதல்கடுப்பக்கண்ணன்சூழ்கழற்காலிற்பைந்தேன்
ஊற்றிருந்தொழுகுகோதையுடுத்தமெல்லோதிதாழ
வேற்றிறலைவர்வேட்டவிளங்கிழையிறைஞ்சினாளால். ௩௪

கார்தமோர்நான்குதெய்வக்கடிகமழுஞ்செஞ்சாந்து
மாதிரமெட்டுமுட்டமணங்கமழ்மலருமேந்திக்
கோதைவேற்றடக்கையைவர்கோதிலாவழிபாடாற்றத்
தாதுலாங்கானமுல்லைத்தாரவன்மகிழ்வுபூத்தான். ௩௫

உயர்மரச்சோலைவெந்தீயூட்டுஞான்றேம்புமாற்றால்
மயனுவந்திழைத்தசெம்பொன்மண்டபத்தலங்கலாழிப்
புயல்கரும்புயலினன்னபூங்குழற்பவளச்செவ்வாய்க்
கயன்மலைப்பன்னகண்ணார்களிகொளவைகினனால். ௩௬

மதிசிலகழிந்தபின்னர்மதியுறழ்கவிகைமன்னன்
அதிர்கடலுலகமுண்டவஞ்சனப்புயலையெய்தி
எதிரிலாவிராசசூயமியற்றுவான்விழைகின்றேனால்
கதிர்மணிவண்ணத்தண்ணல்காத்திடவேண்டுமென்றான். ௩௭

குன்றுறழ்குவவுத்திண்டோட்கொற்றவன்மாற்றங்கேளா
மன்றலந்துளவமாலோன்மாதிரத்தரசையெல்லாம்
வென்றலாலிராசசூயமேதகப்புரியலாகா
தென்றுசெம்பவளவாய்விண்டினிதுரையியம்பினானால். ௩௮

மலர்ப்பசுந்தெரியன்மாலைமார்வமெய்யுணரார்தம்மால்
வெலப்படாவென்னைவென்றாய்மெய்யுரைப்பதனான்மற்றைச்
சிலைத்தொழிலிளைஞராலேதிசையெலாம்வெல்கவென்றான்
கொலைத்தொழிலவுணர்க்கொன்றகூரழற்றிகிரிப்பெம்மான். ௩௯

பசியபைந்துளவத்தண்பூம்படலையம்பரமன்றன்னைத்
தசைசுவைத்திலங்குமொள்வேற்றருமனெஞ்சுவந்துபோற்றித்
திசையெலாம்பொருதுவெல்வான்றெம்முனைகடந்துவீங்கி
இசைசுமந்தெழுந்ததிண்டோளிளைஞரைவிடுத்தல்செய்தான். ௪0

கலிநிலைத்துறை.

மின்னுங்கருங்கட்சுடர்கான்றெழுவெள்ளெயிற்று
மன்னுந்தழல்வாய்க்கொடுங்கூற்றுமலங்கமற்றத்
தென்னம்புலத்திற்படர்ந்தான்செருவேட்டெழுந்து
பொன்னங்குவட்டிற்பொலிதோட்சகதேவன்மன்னோ. ௪௧

நெடுவானரும்புரிலவெண்பிறைக்கோடுசாய்த்த
தடவான்மருப்புத்திகழ்மால்கரித்தானைசூழக்
குடபாலெழுந்தான்குறுகாருயிர்கொன்றுருத்த
அடல்வாணகுலனமர்வெந்திறலாளியனான். ௪௨

சுடர்சூழ்பசும்பொனெடுங்குன்றுதுளங்கவீங்கிப்
படுபோர்விழைந்தபசுந்தார்த்தடந்தோள்பணைப்ப
வடபாலெழுந்தானுயர்வானுறமண்டுசெந்தீக்
கடிகாவளைப்பக்கடுவெஞ்சிலைகால்வளைத்தோன். ௪௩

தாழ்நீர்ப்பரவைதலைப்பட்டவெண்டிங்களனைச்
சூழ்தாரலங்கற்பனிவெண்குடைதோற்றம்வாய்ப்பக்
கீழ்பாலெழுந்தான்முகைபாய்ந்துகிழித்துவண்டு
வீழ்தாதருந்தவிரைவிம்முபைந்தாமவீமன். ௪௪

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

ஊழிவிளம்பரிதிமார்பரேந்தெழில்விளைஞர்மற்றுங்
கழலுமிழ்ந்திலங்குவைவேலரசெலாமமரினெஞ்சி
மழலைவண்டுழலும்பைந்தார்மணிமுடிவணக்கவென்று
விழுநிதிக்குப்பைவாரிமீண்டனர்மீளிமொய்ம்பர். சரு

செஞ்சிலைவடிப்பவீங்கித்திரண்டுயர்பசும்பொற்குன்றம்
அஞ்சுறப்பணைத்ததிண்டோளடற்சராசந்தன்றன்னை
வெஞ்சமராழுவத்தேற்றுவெல்கலாத்தன்மைகேட்டுத்
துஞ்சலின்மணிப்பூண்வேந்தன்சூழ்ச்சிமிக்கிருந்தானம்மா. சசு

முத்தவெண்கவிகைமன்னர்முத்துடைக்கோட்டுவேழ
மத்தகம்பிளந்தகூர்வாண்மன்னவன்சூழ்ச்சிநாடி
உத்தவனுரைத்ததன்மையுரைக்கலுற்றனனல்வெய்ய
துத்திவாளரவினுடெஞ்சூழ்கழற்காலெம்மானே. சஎ

அந்தணர்படிவந்தாங்கியாடமரிரந்துபெற்று
வெந்திறல்விளையும்வெம்போர்வீமனேவிளைப்பினல்லால்
மைந்துவீற்றிருந்ததிண்டோண்மகதர்கோன்கடலந்தானை
சிந்திடப்பொருதுவெல்லுந்திறத்தினர்யாவரொன்றுன். சஅ

தண்டுறைக்கங்கைபூத்ததாமரைத்தாளினானும்
திண்டிறற்காற்றின்சேயுஞ்செருமலிவரிவிற்செங்கை
அண்டர்கோன்மகனுமற்றுங்கந்தணர்படிவந்தாங்கி
மண்டுபோர்முற்றலாகாமதிட்கிரிவிரசம்புக்கார். சகூ

பருந்தொடுகழுகும்வெந்தீப்பசிதணித்தொழுகுகூர்வேல்
அருந்திறன்மகதவேந்தனதியர்வரவுநோக்கி
இருந்துழிவிரைவினண்ணியிரந்தனர்விரைதேர்வண்டும்
சுரும்புமொய்த்தாற்றுதண்பூந்தொடையல்சூழ்குவவுத்தோளார். ருO

இறலுறுகின்றபூதவுடம்பினுலிறத்தல்செய்யார்
உறுபுகழுடம்புகோடலுணர்ந்தவருறுதியன்றோ
புறவினுக்காகமற்றோர்பொன்னெடுந்திகிரிவேந்தன்
நிறைபுகுவண்மையின்றுகிலத்தின்மேனின்றதன்றே. ருக

முன்பொருகாலமூரன்முகிழ்த்தவாண்முகத்தனுகி
என்புமற்றொருவற்கீந்தானில்லைசொல்யாங்கள்கேட்ட
தன்பினிலருளவேண்டுமாடமர்கடந்துயெம்பி
மின்பொழிகுடுமியொள்வேல்வேந்தவென்றியம்பினால். ருஉ

சொல்லினுஞ்சொல்லலாகாச்சுடர்விடுதோற்றத்தானும்
நல்லெழிற்றடக்கைவல்லினுண்பொருதழும்பினானும்
மெல்லிணர்விரியன்மாலைவேந்தரொன்றறிந்தான்வீங்கு
மல்லனீர்மகதங்காக்குமாலைவெண்குடையான்மன்னே. ருங

மூவடிமண்வந்தேற்ருேன்முதல்வனென்றறிந்துமீந்த
மாவலிசீர்த்தியின்னமன்னுபுவிலவும்மா
யாவரேயானுமாகவீகுதுமிரந்ததென்னுக்
கோவடுகுருதிவைவேற்கொற்றவன்கருத்தூக்கொண்டான். ருச

பாட்டளிப்படலைமூசிப்பருமுகையுழுதுபைந்தேன்
கூட்டுணுமுளரியந்தண்கோதையீர்நீவிரின்று
வேட்டதுதருவலென்ருன்விரியிருட்பிழம்புசீக்கும்
சேட்டிளம்பரிதிபோலத்திசழ்கடிமார்வனுங்கே. ருரு

விரிகடற்ருனைமன்னவேட்டதுதருதியாயின்
ஒருவனெடொருவனுகியுடற்றுபோர்தருதிமற்றுச்
செருவிழைந்திறுத்தோமென்னுத்தெரிக்கலுற்றனனுற்செம்பொன்
தருமுதல்பிடுங்கிவந்ததடக்கைமாகளிறன்னுனே. ருசு

மலர்ந்தபூங்கோதைமாதர்வாளரியொழுகுகண்போல்
உலம்பொருதிணிதோண்மன்னருராங்கிழித்துதிரமூழ்கி
அலங்குகெட்டிலைவேல்வீமனவனிவன்பார்த்தனம்பொன்
இலங்குபூண்மார்வகண்ணன்யாமெனக்கூறினுனல். ருஎ

கேட்டலுமுறுவல்கோட்டிக்கிளர்ந்தெழுபெரும்போரஞ்சி
ஆட்டுவெண்டரங்கவேலையகத்தடைந்தனைநீயந்தண்
எட்டிணாலங்கற்பார்த்தனிளையனுலெதிர்ந்துவெம்போர்
வாட்டிறல்வீமனுற்றவல்லனென்றியம்பினுனே. ருஅ

எழுகபோர்க்கின்னேயென்னுவெரியுமிழ்ந்திலங்குமொள்வாள்
உழவனேர்வயிரத்தண்டமுளர்வளிமகற்குநல்கிக்
கழுகுசூழ்கதையொன்றேந்திக்கட்கடைகாலவெந்தீப்
பொழிதாமல்லன்மூதூர்ப்புறத்தமர்க்கெழுந்துபோயான். ருகூ

வெளிற்றிலம்பனையினன்னவிறல்செழுதடக்கைவெங்கட்
களிற்ருெடுகளிறுசீறிக்கதிர்மணிமருப்புநெற்றி
குளித்திடப்பொருதல்போலக்கொலைசெழுசதையிற்ருக்கி
அளிக்குலமாற்றுதாராருஞ்சமமாற்றலுற்ருர். சுO

ஊழிவாயுருமேறென்னவுடல்சினங்கதுவத்தாக்கும்
பாழிசால்வயிரத்தண்டம்பஃறுணிபடுதலானே
ஆழியங்கதிர்சூழ்வந்தவாடகப்பசும்பொற்குன்றம்
தேர்ழமைகொண்டதோளார்தொடங்கினர்நெருங்குமற்போர். சுக

கண்ணழல்பொழியவூழிக்காற்றெனக்கடைஞான்றியாவும்
உண்ணியவெழுந்தபேழ்வாயுருசெழுகூற்றமென்ன
மண்ணகமதிரநின்றமால்வரைதுளங்கமற்றை
விண்ணகம்பனிப்பவார்த்துவெஞ்சமம்விளைத்திட்டாரே. சுஉ

எறுழ்வலிசிகர்த்தவாற்றாலிகற்சராசந்தன்றன்னை
விறல்கெழுதடக்கைவீமன்வெல்லுமாவிழைந்துநோக்கப்
பிறைபுரைகதிர்வெண்கோடுபிடுங்கியகருங்கார்வண்ணன்
குறுமுறிவிரிபைங்கோடுகொண்டனன்கீண்டானங்கண். ௬௩
விண்ணொன்றுவிலங்கலன்னவீங்கெழிற்றோளாங்கொன்று
கண்ணொன்றுபுருவமொன்றுகருங்கழற்காலொன்றாக
மண்ணொன்றுமணிப்பூண்மார்வமகதனைப்பிளந்துமாய்த்தான்
பண்ணொன்றுபாடல்வண்டுபயின்றதார்ப்பவனன்றோன்றல். ௬௪

வேறு.

மதமால்கரியின்மருப்பொசித்தமாயனருளால்வலிதழைத்துக்
கதழ்வெஞ்சினவாளரிகடுக்குங்காற்றின்மதலைபணைக்கரத்தால்
பதினாயிரவெங்களிற்றுவலிபடைத்தோனுடலம்பகிர்ந்திடலும்
அதிராச்சிறப்பினெடுவானோரம்பொற்றுணர்தூஉய்ப்பராவினரால். ௬௫
வரையிற்பணைத்ததிணிதடந்தோண்மகதனிடுவெஞ்சிறைக்கிடந்த
பரிதிவடிவாளரசிருபதினாயிரத்தெண்ணூற்றுவரை
அருளின்விடுத்தான்முருகொழுகுமந்தண்மலர்க்கோட்டைந்தருவும்
குருதிகுமிழியெழவேழக்கோடும்பிடுங்குநெடியோனே. ௬௬
வாடுமலங்கற்றோளரசர்வந்துதொழுதுதமதுமுடி
சூடுதுளவக்கருங்கொண்மூதுணைத்தாட்கமலமலர்பூத்த
ஆடுதிரைமந்தாகினியினந்தீந்துவலைமுகந்தெறிப்ப
நீடுபொலிவுதழைத்துவகைநெஞ்சந்தளிர்ப்பப்பராவினரால். ௬௭
விடையுங்களிறும்பொருவுநடைவெள்வேலரசர்மாசறுதூ
சுடையும்பசுந்தேனுமிழ்தொடையுமொளிர்பொன்முடியுமுருவமதிக்
குடையுங்கொடியுமுடையோராய்க்கொற்றவளையுமடலாழிப்
படையுந்திகழுங்கரத்தானைப்பரவித்தத்தம்பதியடைந்தார். ௬௮
ஆண்டகடற்பாரரசாட்சியடையக்கடைக்கணருள்பொழிந்து
மாண்டபெரும்போர்ச்சராசந்தன்மைந்தற்கலங்கன்முடிகவித்தான்
நீண்டகனகவரைபொருதநெடும்பொற்றடந்தோட்கனகனுரம்
கீண்டுபொருதகரும்புள்வாய்கிழித்துத்தளர்க்கைசிவந்தோனே. ௬௯
உலருந்தருவுங்குழைப்பவமுதுகவேயிசைத்தவொருவனொடு
மலரும்பொழிறீமடுத்தோனுமற்பூத்துயர்தோண்மாருதியும்
கலினப்பரித்தேர்கடிதோட்டிக்கலிக்குங்கடல்போல்வெற்றிவளை
அலறநகர்சார்ந்தறத்தின்மகற்கறைந்தார்விளைந்ததிறமன்னோ. ௭௦
பொடிக்குங்குழவிஞாயிறெனப்பொலிவுற்றுந்தித்தடத்துமுகை
வெடிக்குங்கமலமலர்ப்பொகுட்டுவிரிஞ்சனொடுமண்படைத்தளித்து
முடிக்குமுதல்வன்முன்னின்றான்முடியாப்பொருண்மற்றெவையென்னோ
வடிக்குங்குடுமிக்கூரிலைவேன்மன்னனனையாமகிழ்வுற்றான். ௭௧

வேறு.

இழைக்குவனிராசசூயமெய்திடவேண்டுமென்று
அழைத்தனன்முனிவர்தம்மையகனிலத்தரசர்க்கெல்லாம்
விழுப்பொறிமுடங்கலாங்குவிடுத்தனன்வண்டுகோடி
உழக்கிழிந்தலரும்பைந்தாரொருதனிக்கவிகைவேந்தன். ௭௨

செங்கதிர்க்குழவிமானத்திருமணிக்குழைவில்வீசக்
கொங்குடைந்தொழுகுதண்ணங்கோதைதாழ்மகுடமின்னப்
பொங்குளைப்பரிமாபூண்டபொன்னெடுங்கொடிஞ்சித்தேர்மேல்
அங்கண்மாஞாலவட்டத்தரசெலாமிறுத்தவன்றே. ௭௩

நுதியழல்வடிவேன்மைந்தர்நூற்றுவர்தம்மோடொற்றைக்
கதிர்மதிக்கவிகைநீழற்கண்ணிலாவரசன்வந்தான்
விதுரன்வந்திறுத்தான்வெற்றிவீடுமன்மேயான்மற்றை
அதிர்கடல்வரைப்பின்மன்னரார்கொலாங்கடைந்திலாதார். ௭௪

மாலைவாய்விளங்குதிங்கண்மாலைவெண்குடையான்வேள்விச்
சாலைவாய்வந்துமொய்த்தார்சதுமறைக்கிழவரெல்லாம்
வேலைவாயமுதமாந்திவிரைகமழ்பாரிசாதச்
சோலைவாயுறையுந்தேவர்தொக்கனர்விசும்பின்மாதோ. ௭௫

மலர்தலையுலகமேழின்மாண்டகுபொருள்களெல்லாம்
கலினவாம்புரவித்திண்டேர்க்கடுந்திறனகுலனுய்த்தான்
அலைவிளையமிழ்தமென்னவஞ்சுவையடிசிற்சாலைத்
தலைமையெய்தினனாற்காற்றுத்தருமழைத்தடக்கையானே. ௭௬

விரிகதிர்முத்தமன்றிவிளங்கொளிதழைத்தநீலம்
சொரிவதுகடுப்பவண்டுசூழ்தருமுளரிப்பைந்தார்
அருமறைக்கிழவர்தம்மையருச்சனைபுரிதல்செய்தான்
செருவிழைபரிதிவைவேற்றிறற்சகாதேவன்மன்னோ. ௭௭

விண்ணெடுமுகடுகீண்டவிரைமலர்க்கமலபாதம்
அண்ணலங்கமலவீட்டிலந்தணன்விளக்கநின்ற
கண்ணன்மாமறைநூல்கற்றகாட்சிசாலந்தணாளர்
தண்ணறுமுளரியன்னதாண்மலர்விளக்கினானால். ௭௮

அதிர்கடன்ஞாலவட்டத்தரசெலாங்கொணர்ந்துகற்றைக்
கதிர்மணித்திரளும்பொன்னுங்காண்டகக்குவித்தல்செய்யும்
நிதியறைக்கிறைமைபூண்டானிழன்மணிச்சுடிகைநெற்றிக்
கொதியழனச்சுநாகக்கொடிவலனுயர்த்தகோவே. ௭௯

பழுக்கும்வெங்கொலைவேற்றெவ்வர்பகட்டெழின்மார்வம்போழ்ந்து
விழுக்கொடுநிணம்வாய்ப்பில்கிமின்னெனப்பிறழும்வெள்வேல்
முழுக்கரும்புயலேய்செங்கைமுருகவிழ்பசுந்தார்க்கன்னன்
வழக்கமேற்கொண்டுநின்றான்வான்பொருண்முகந்துமன்னோ. ௮௦

காசிபன்பரத்துவாசன்கண்ணுவன்மயித்திரேயன்
கோசிகன்பரசுராமன்கோதமன்வாமதேவன்
மாசறுவியாதனுதிமாதவக்கிழவரோடு
பூசல்வண்டாற்றுதாரான்புரிந்தனனிராசசூயம். ௮௧

நெருப்புறழ்தோற்றஞ்சான்றநெடுந்தவக்கிழவர்தொன்னூற்
பரப்பெலாந்தெளியக்கற்றபழமறையந்தணாளர்
திருத்தகுகொற்றவேந்தர்திரண்டபேரவையின்முன்னம்
அருச்சனைபுரிதல்யார்க்கென்றரசுளத்தெண்ணினானால். ௮௨

மற்பழுத்தேந்துதிண்டோண்மன்னவன்குறிப்புநாடி
முற்படப்பூசையாற்றன்முருகுலாம்பசும்பொற்கோட்டுக்
கற்பகங்கொணர்ந்தவந்தகண்ணனுக்கன்றேயென்னச்
சொற்புகன்றுரைப்பான்முற்றுந்துணிசகாதேவனங்கே. ௮௩

பூப்பவன்றானும்பூவாப்பொழிலெலாம்பூத்துநின்று
காப்பவன்றானுமூழிக்கடையினிற்கனலுந்தீயால்
தீப்பவன்றானுமாயர்தேமொழிமாதர்செங்கை
கூப்பிடத்தூசுவாரிக்குளிர்மரத்திவர்ந்தகோவே. ௮௪

உலகெலாங்கண்ணனன்றியொன்றிலையுணருங்காலைக்
கலவமாமயிலெருத்திற்கவின்கனிந்தொழுகுமேனி
மலர்த்துழாயலங்கன்மாலைமாயனுக்காற்றுபூசை
அலர்தலையுலகுக்கெல்லாமாற்றியபூசையாமால். ௮௫

என்னலுமுவகைமீதூர்ந்தின்னெழிற்பவளச்செங்கால்
அன்னமுமயிலுமன்னவாய்வளைத்துணைவியோடு
மன்னவனெழுந்துசெய்யாள்வரிமுலைகிழித்தபைந்தார்க்
கன்னியந்துளவினானைக்கைதொழூஉப்பழிச்சல்செய்தான். ௮௬

எழுந்திறுமாந்துவிம்மியிணைமணிக்குடத்தின்வீங்கிக்
குழைந்தநுண்மருங்குதேய்க்குங்குவிமுலைத்தலைவிநின்று
பொழிந்தபொற்கலசநீராற்பொழிமதுக்கமழுந்தெய்வச்
செழுந்துழாய்க்கொண்டல்செம்பொற்சேவடிகழீஇயினானே. ௮௭

நாயவேற்றடக்கைவேந்தனல்வினைப்பயனென்சொல்கேன்
மாமறைமுடிவினின்றவலம்புரித்தடக்கைமாயன்
காமருகடவுட்கங்கைக்கடும்புனல்பூத்தபொற்றாட்
டாமரைவிளக்குநீர்சம்புவிற்றாங்கினானால். ௮௮

கருங்கடல்சிவப்பத்தோன்றுங்கதிர்மணிக்கிடந்தமார்பின்
திருந்தொளியாரம்பூட்டித்தேங்கமழ்கலவைபூசிச்
சுருப்புசூழ்தொடையல்சூட்டிச்சுடர்ந்தபொன்றுடைசாத்தி
அருந்தவம்பழுத்தவேந்தனண்ணலைவழிபட்டானே. ௮௯

நெறித்தபூங்குவளைமேனிநெடியவன்றனக்குப்பூசை
முறைப்படப்புரிதனோக்கிமுனிவருமுவகைபூத்தார்
அறத்துறையொழுகுசெங்கோலரசருமகிழ்ச்சிகூர்ந்தார்
திறற்சிசுபாலனேனோன்சிவந்தனன்பெரிதுஞ்செங்கண். ௬௦

நெடுமறைக்கிழவர்வைகநீணிலவலயங்காக்கும்
முடிகெழுவேந்தர்வைகமுற்படவழிபாடாற்றல்
படுதிரைபுரப்பாற்கேசொல்பார்த்திவன்செயனன்றென்று
விடுசுடுமுறுவனாறவெகுண்டனனெழுந்துநின்றான். ௬௧

இலைப்பசுந்தெரியன்மாலையிளையவனிசைத்தகூற்றால்
நலத்தகுமுதுநூற்கேள்விநல்லறக்கிழவனெஞ்சம்
கலக்கமுற்றனன்கொலம்மகாலமார்கடப்பரென்னச்
சிலைத்தழும்பணிதிண்டோளான்றீயனகிளக்கலுற்றான். ௬௨

நாட்டவோர்குலனுமின்றிநண்ணியகுணமுமின்றி
வேட்டவாறொழுகுகின்றான்வெள்ளைமுள்ளெயிற்றுப்பேழ்வாய்ச்
சூட்டராவரசுதாங்குதொன்னிலத்துயர்ந்தானென்று
கேட்டவாநன்றுமெய்ந்நூற்கேள்வியிற்சிறந்ததன்றே. ௬௩

நன்றுதீதென்றுநாடானானிலத்துறைவான்யாங்கும்
பொன்றலில்வேதமின்னும்புரிந்தொருங்குணரகில்லான்
குன்றுகானுறைவார்வேட்குங்குணன்பசுப்புரப்போன்பித்தர்
மன்றநன்கன்னமேற்போர்வழுத்திறையிவன்வேறுண்டோ. ௬௪

நக்கவெண்முல்லைசூடிநாந்தழுமகிழுநாறு
மைக்குழலாயர்மாதர்வரிமுலைதழுவுதூர்த்தன்
முக்குறும்பெறிந்தமூவாமுழுத்தவமுனிவர்தம்மின்
மிக்கவனாகவந்துவிளைந்ததுவிழுமிதாமால். ௬௫

வெய்யபோர்விளைக்கலாற்றான்வியனகராட்சிவிட்டு
மொய்திரையடைந்தான்றன்னைமொய்பெருமுழுவுத்திண்டோள்
ஐய்யதாரரசர்முன்னரருச்சனைபுரியநின்ற
மையறுகாட்சிநாளும்வாழியபெரிதுமாதோ. ௬௬

கலிநிலைத்துறை.

என்றுபற்பலவெவ்வுரையிகற்சிசுபாலன்
நின்றுரைத்தனனெடியவன்பேசலனிருந்தான்
நன்றுணர்ந்தவர்செவிமுதல்புதைத்தனர்நடந்தார்
வென்றிவெஞ்சிலையெடுத்தனர்பாண்டவர்வெகுண்டார். ௬௭

விறல்பழுத்தவொள்வேலவணேந்தினர்வெதும்பி
நறைகொழித்ததார்யாதவரமர்க்கெதிர்நடந்தார்
திறல்பழுத்ததிண்டோட்சிசுபாலன்வெஞ்சினவாள்
உறைகழித்தனன்சேடகந்தாங்கினனுடன்றான். ௬௮

நன்மின்போன்றவிர்நாந்தகவுழவனைப்பற்றிக்
கொன்மினுவினைக்குறைமினென்றுடலுநர்தம்மை
நின்மினின்மினென்றெழுந்தனனீணெறிகிடந்த
கன்மினுகமுன்கருங்கழல்வைத்தகார்வண்ணன். ௯௯

பாழிசால்கரும்பனைபுரைபாழியந்தடக்கைச்
சூழியானையின்சுடர்மணிநெடுமருப்பொசித்தோன்
ஊழியாரழல்வாயுமிழ்ந்தொளிறுசெம்முகத்த
ஆழியாற்சிசுபாலன்வன்றலையினையறுத்தான். ௧௦௦

சமரெதிர்ந்தவேற்றரியலர்கதிரொழச்சாய்ந்த
திமிரமாமெனத்திசைத்திசையிரிந்தனராகக்
கமழலந்துணர்க்கற்பகநறுமலர்தூவி
அமரரார்த்தனரந்தரதுந்துபியதிர்ந்த. ௧௦௧

உருள்பொலங்கொடித்தேர்ச்சிசுபாலனதுடனின்
றிருள்பிளந்தெழுமெரிகதிர்ப்பரிதிபோற்சோதித்
திரளெழுந்ததுதிரண்டபேரவையெலாங்காண
அருள்பொருந்துலகளிப்பவன்றாளடைந்ததுவே. ௧௦௨

மறத்தினூற்றிருமறுப்பொலிமார்பினன்றன்னைப்
பிறப்புமும்மையினினைத்தலாற்பிறங்கழல்வாய்கான்
றெறித்தசெஞ்சுடராழியாலிறந்தவவ்வேந்தல்
நெறித்தபூந்தொடைநேமியஞ்செல்வனைநேர்ந்தான். ௧௦௩

எத்திறத்தினுமிலங்கொளிவிரிமணிச்சூட்டுத்
துத்திநாகணைத்துயில்பராற்பரனையுண்ணினைப்போர்
முத்தராகுவர்முத்துடைமூரிவெண்கோட்டு
மத்தமால்களிற்றரசவென்றருந்தவன்வழங்கும். ௧௦௪

எழுபுலப்பகையெறிந்தமாதவரும்வேதியரும்
மழைமதக்களிற்றரசருமனமகிழ்சிறப்பச்
செழுநிலக்கணெண்டிசையெலாந்தெள்ளொளிநிலவு
பொழிதனிக்குடைப்புரவலன்பூசனைபுரிந்தான். ௧௦௫

சூட்டராவணைத்துயில்பவனுந்தியங்கமலம்
காட்டுமந்தணன்கடுக்குமவ்வேதியரோடு
வேட்டதண்மதிவெண்குடைப்பெருவிறல்வேந்தன்
மோட்டுவெண்டிரைமுழங்குமந்தாகினிபடிந்தான். ௧௦௬

கள்ளவிழ்ந்தபூங்கற்பகத்திருந்தகாவலனை
எள்ளவீற்றிருந்தெண்டிசைவளாகமுநிழற்றும்
வெள்ளிவெண்குடைவேந்தனல்விடையளித்தனனால்
வள்ளிதழ்ப்பொலந்தார்முடிமன்னவர்க்கன்றே. ௧௦௭

உகந்துபாந்தளங்கொடியினானல்லதையொருங்கு
திகந்தமுட்டியசெழும்புகழ்மன்னரெல்லோரும்
அகந்தழைத்தெழுமுவகையாதிர்திரைப்பரவை
முகந்தகாரெனமுரசொலிகறங்கவேகினால். ௧௦௮

என்றிசைத்தலுமன்னனல்லிருநிலவேந்தர்
நன்றுவப்பொடுநடந்திடநச்சராவுயர்த்தோன்
ஒன்றுநெஞ்சகமுவக்கிலன்போயவாறென்னே
மன்றகூறெனமாதவனுரைக்கலுற்றனனே. ௧௦௯

துளங்குவெள்ளிடைதுளும்புதண்புனலெனத்தோன்ற
விளங்குதண்புனல்வெள்ளிடைப்பரப்பெனக்காட்டும்
வளங்கொண்மண்டபமயனினிதிழைத்ததுவயங்கு
பளிங்கிற்செய்ததுபன்மணிகுயின்றதொன்றுளதால். ௧௧௦

விழுச்சிறப்புடைவியனிலப்பரப்பெனவிளங்க
இழைத்ததண்புனலிடையெழுமரகதச்சுடரைத்
தழைத்ததோட்டறுகாமெனத்தகைபெறவளர்க்கும்
உழைக்கருஞ்சிறுகற்றினமுழையுழைநோக்கும். ௧௧௧

தெள்ளுநீரெனத்திகழ்தருதிருநிலத்திலங்கு
வெள்ளிவெண்கதிர்நித்திலம்விரியல்வெண்டோட்டு
முள்ளரைச்செழுமுளரிநாண்முகிழெனமுற்றுக்
கள்ளுண்வேட்கையிற்களியிளஞ்சுரும்பினங்களுலும். ௧௧௨

பட்டகாரிருள்பருகுசெம்பதுமராகத்தின்
விட்டிலங்கியசெங்கதிர்மீமிசைத்தவழ்ந்த
கட்டவிழ்ந்தசெந்தோட்டபூங்கமலமற்றென்னாப்
பெட்டநெஞ்சொடுபெயர்தருமடவனப்பிள்ளை. ௧௧௩

பொழியுமொண்கதிர்நீலமென்போதியனீலக்
கொழுமலர்க்குலமாமெனக்கொய்வதற்கெய்து
மழலையேழையர்குழுவெலாமதர்த்ததங்கருங்கண்
நிழலுமொண்ணறுநீலமென்றங்கரநீட்டும். ௧௧௪

இன்னதன்மையவிலங்கொளிமண்டபநடுவண்
மன்னுய்வாளரிசுமந்ததோர்மணியணைபொலியப்
பின்னல்வெண்டிரைப்பெருநிலவேந்தர்வந்திறைஞ்ச
மின்னுநக்கவேன்மன்னவன்வீற்றிருந்தனனால். ௧௧௫

அச்சணங்குவேலிளையருமரும்பவிழ்துளவப்
பச்சைமேகமும்பாங்குறவிருந்தபார்த்திவனை
நச்சராவலனுயரியநனைகவுட்பரூஉத்தாட்
கச்சமால்களிற்றரசனுங்காணியவெழுந்தான். ௧௧௬

கருவிவானெனக்கவினுநங்கண்ணனைவைகுதலான்
உருவமாமணியுலப்பிலவொளித்தலானுடைக்கும்
பரவைவெண்டிரைப்பாற்கடலாமெனவிளங்கு
திருவமண்டபம்புக்கனன்சினக்களிறன்னான். கசஎ

சூழ்ந்தபேரொளிதுளும்பியவிலனைநீரென்று
தாழ்ந்தவர்துகிலிடைவயிற்றழீஇயினன்பளிங்கு
போழ்ந்தியற்றியவிலனெனப்பூம்புனலிடைப்போய்
வீழ்ந்தனன்பெருவேத்தவைமுகிழ்நகைவிளைப்ப. கசஅ

நகைமுகிழ்த்திடனகைமுகிழ்த்திடலெனநகுமென்
முகைதொடுத்ததார்மன்னவன்மொழிந்தனனாக
இகல்விளைத்திடுகரியவனின்னருட்கண்ணால்
மிகநகைத்தெனவிடுநகைபுரிந்தனன்வீமன். கசகூ

சுரும்புசூழ்தொடைத்திருவதன்வரத்திறற்றோன்று
கரும்பினன்னசொற்களிக்கயலன்னவாட்கருங்கட்
குரும்பைமென்முலைக்கோதையுமிகுளையர்குழாமும்
அரும்பவாணிலவணிநகைமுகிழ்த்தனரன்றே. கரு0

விளைநகைத்திறங்காண்டலும்விளைநறைப்பருகிக்
களியளிக்குலமாற்றுதார்க்காவலற்கானான்
நளியழற்சினநச்சராவுயர்த்தவனனு
புளைவயப்பரித்தேர்கடிதோட்டினனெழிந்தான். கருக

இன்னதான்முனிந்தேழுயர்குஞ்சரநகர்க்கு
மன்னனேகியகாரணமாமருப்பொசித்தோன்
துன்னுசாலுவற்றொலைத்தமைகேட்டிமற்றென்று
முன்னைநான்மறைமுற்றியமுழுத்தவன்மொழிவான். கருஉ

சிசுபாலனைக்கொன்றவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் சகூஅகூ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## சஉ-வது, சாலுவனைக்கொன்றவத்தியாயம்.

---

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஊழிவெங்கனல்போலுருசெழுசீற்றத்தொளிறுவாட்படைச்சிசுபாலன்
தோழன்வெற்புறழ்தோட்சாலுவனென்பான்சுரும்புசூழ்தாமரைதுறந்து
வாழிநல்வளத்தவிதர்ப்பநாடுதித்தமாழைமென்றேக்கிளையலங்கல்
ஆழியான்கவர்நாளடுசமமாற்றியழிந்தனன்யாதவர்க்கன்றே. ௬

அழிதருதிறத்தான்முனிவுமீதூர்ந்தவடுதிறற்சாலுவன்சுரும்பு
கொழுதியபசுந்தார்யாதவர்மாபுகோறுமென்றின்னிளந்தேறல்
வழிதருகடுக்கைப்பசுந்தொடைபுனைந்தவார்சடைவள்ளலைநினைந்து
புழுதிவாய்மடுத்துப்பன்னிருதிங்கள்புரிந்தனனருந்தவமன்னோ. ௨

எரியுமிழ்கணிச்சியிமையவன்வெளிப்பட்டென்னைநீவிழைந்ததென்றியம்ப
விரிதலைவிசும்பும்பாவைமாநிலனும்வெலப்படாவெருவருசெலவின்
ஒருபெருவிமானம்வேண்டுமென்றுரைப்பவுவந்தனன்மயனையவ்வாறு
புரிபுநல்கெனலுமுருகெழுவிமானம்புரிந்தவனளித்தனனன்றே. ௩

அரும்புவெண்டிங்க ளணிந்தவனம்பி னழற்படுபுரத்தினை நகைப்ப, திரும்பினிற்புனைந்த தேழிரும்பொழிலு மிமைப்பினிற் படர்குவதாய, திருந்தெழில்விமான மிவர்ந்தனன் செருக்கிச் செருவிழை தானையோ டெழுந்து, கருங்கடல்வேலித் துவரைசென் றிறுத்தான்காலவேற்சாலுவன்கடுகி.

பன்மலர்ப்படப்பையெறிந்துவெண்கோட்டுப்பச்சிளமதிமுதுகுரிஞ்சு
பொன்மதிற்குடுமிகொண்டுநாற்றிசையும்பொழிந்தசெந்தூளியாற்கரந்தும்
மின்முகங்கிழித்துவிளங்குகார்தவழும்வியன்சினைமரம்பலதூர்ந்தும்
கன்மழைசொரிந்துங்கறங்கிடிவீழ்த்துங்கலக்கினன்றுவரைமாநகரம். ௫

மூவெயில்கலக்கக்கலங்கியவுலகின்முதுநகர்கலக்குறல்காணு
நாவலம்பசும்பொனோடைசூழ்நெற்றிநனைகவுட்கரிமருப்பொசித்த
காவலனுயிர்த்தகடற்சுறவுயர்த்தகாளையேமுதலியகுமரர்
பூவணியிலங்குகுடுமிநீடிலைவேற்போர்பொருதானையோடெழுந்தார். ௬

அருப்புநாளலங்க லமரரோடவுண ராடியவடுசமங் கடுப்பச், செருக் கொடுமறலி யிருபெருஞ்சேனைத் திரளுமாடமர்த்தொழில் விளைப்ப, வரைத்தலைபொடிக்குங் கதிரிருள்பிளந்து மாற்றல்போன்மகரவெல் கொடியோன், பொருப்புறழ்திணிதோட் சாலுவன்புணர்த்த புணர்ப்பெலாம் பொருக்கெனத் தொலைத்தான். ௭

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கொய்சுவற்புரவிமேலுங்கூந்தலம்பரித்தேர்மேலும்
மையிருங்குன்றமன்னமழைமதக்களிற்றின்மேலும்
பெய்கழலிளையர்மேலும்பெய்தனனப்புமாரி
ஐயபூந்தெரியன்மாலையங்கணைக்கிழவன்மன்னோ. ௮

பூங்கணைதுறந்துவெய்யபூத்தலைப்பகழிசிந்தும்
வீங்கெழிலலங்கற்றோளான்விற்றொழில்வியந்துநோக்கித்
தாங்கருங்கதழ்வெஞ்சீற்றச்சாலுவன்சிலைகைத்தாங்கி
ஓங்கெழில்வலவனேவாவூர்திமேற்கடாயினானால். ௯

உலைப்பிலவலத்தவூர்தியொன்றெனத்தோன்றுமாங்கே
பலப்பலவாகும்விண்மேற்பறக்குமட்பாப்பதாகும்
மலைத்தலையிவருமொல்லென்வாரியிற்பயிலுங்கண்ணின்
கலப்புறுங்கரக்குமெங்குங்கறங்கெனச்சுழலுமம்மா. ௧௰

சூழ்சுடர்விமானம்வந்துதோன்றியவிடங்களெல்லாம்
ஊழிவாயுருமுத்தீயுமுருகெழுகதிருநச்சுப்
பாழிவாயரவுமன்னபல்கணைபொழிந்துநின்றான்
ஏழுயர்களிநல்யானையாதவர்பெயர்ந்திலாரால். ௧௧

கருப்புவில்காந்துமற்றோர்கார்முகங்குழைத்தகாளை
இருப்புவன்மானஞ்சிந்தவெய்தனனின்றகாலைத்
தருக்கினோர்தண்டந்தன்றூற்சாலுவன்சேனைகாப்போன்
பொருப்பின்வீழிடியேறென்னப்புடைத்தலுமுயங்கினானே. ௧௨

கலிவிருத்தம்.

மோட்டுவெண்டிரைநிலமுழுதும்வென்றவத்
தோட்டபூங்கணையினான்சோர்வுநோக்குறு
மீட்டனன்வலவன்மால்வேழவெண்ணிறக்
கோட்டினாலியற்றியகொடிஞ்சித்தேரரோ. ௧௩

மொய்யெனப்பணைத்தெழுமுழவுத்தோளினான்
ஒய்யெனமூர்ச்சனையொழிந்துதீர்தலும்
மையறுவலவனைநோக்கிமற்றுநின்
செய்வினையினிதெனச்செப்பன்மேயினான். ௧௪

இடிமுரசதிர்சமத்தேற்றஞான்றெலாம்
அடிபிறக்கிட்டிலாரடல்செயாதவர்
விடுபரித்தேரினைவிரைந்துமீட்டனை
நெடுநிலத்தென்புகழ்நிலவுநீடியே. ௧௫

கொன்னவில்களிற்றுவெண்கோடுகொண்டெழும்
என்னைமுன்னின்றநாளென்னைகூறுகேன்
மன்னியபெருவிறன்மாமனல்கிய
நன்னுதற்பேதையர்நகைமுகிழ்ப்பரே. ௧௬

எனச்சிலகட்டுரையிறைவனின்றருள்
வனப்புவீற்றிருந்ததோண்மைந்தன்கூறலும்
கனைத்தவெண்டிரைக்கருங்கடனிலப்புகழ்
தனித்திறற்றருகன்றநயன்சாற்றுவான். ௧௭

தெய்மலைதிறத்தினான்செம்பொற்றேரவன்
சும்மைசால்களத்தினிற்றுளக்கமெய்துமேல்
வெம்முனைமுகத்ததேர்விசைத்துமீட்டன்மற்
றெம்முடையறனெனவியம்பினானரோ. ௧௮

## அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தாருகன்காதன்மைந்தன்சாற்றியமாற்றங்கேளா
ஆரமாராற்றல்செய்தவடுபடைத்தலைவன்றன்மேல்
தேர்செலவிடுதியென்றான்செஞ்சிலைவளைத்துமற்றோர்
காரெனத்திகழ்ந்துநின்றகல்லெனக்கவினுந்தோளான். ௧௯

நெடும்பனைத்தடக்கையானைநிலவுமிழ்பிறைவெண்கோடு
பிடுங்கிவெஞ்சினத்தபுள்வாய்பிளந்தவனுகைத்தவேகத்
தடஞ்சிறைப்பறவையன்னதலைமைசாலியலகாய
கடுஞ்செலவிவுளித்திண்டேர்கதுமெனக்கடாயினானே. ௨௦

நாலிருபகழிதூண்டிநலத்தகுபசும்பொற்றிண்டேர்ப்
பால்செழுபுரவிநான்கும்படுத்துவெம்பாகற்கொன்று
கோலுமிழ்வரிவிற்சிந்திக்கொடிமுதறுணித்துவெய்ய
சாலுவன்கடலந்தானைத்தலைவனைத்தலைகொய்தானல். ௨௧

சாம்பனுங்குருதிவைவேற்சாத்யகியென்னநின்ற
தேம்படுதாரினானுஞ்செஞ்சிலைகுழைத்தலோடும்
தூம்புடைத்தடக்கைவேழந்துணிந்தனகவிழ்ந்ததிண்டேர்
வாம்பரிவெள்ளமாய்ந்தவாட்படைமறிந்தவன்றே. ௨௨

இன்னணமிருபத்தேழ்நாளிருஞ்சமநடந்ததாக
அந்நிலையறத்தின்மைந்தனாற்றியவேள்விகாத்து
மன்னியபசுந்தார்மாயன்வால்வளைமுழக்கம்விம்மத்
துன்னினன்முந்நீர்வேலித்துவரைமாநகரமன்னோ. ௨௩

மாற்றலர்வளைந்தவாறுமாற்றருந்தறுகட்சீற்றத்
தேற்றரிமாவினன்னயாதவர்பொருதவாறும்
பாற்றிரைபடிந்தபச்சைப்பசும்புயல்வண்ணனோக்கிக்
காற்றெனக்கலினமான்றேர்களத்திடைக்கடாவினானல். ௨௪

தாப்புலிப்போத்தினின்றசாலுவனுலகமெல்லாம்
காப்பவன்பசும்பொற்றிண்டேர்கடாயதாருகன்மேற்காய்ந்து
பூப்பொலிந்தடுபோர்வேட்டுப்புழுங்கிவாய்புகைந்துவெய்ய
தீப்பொலிகுடுமிக்கூர்வேற்சினப்படைதெரிபுவிட்டான். ௨௫

மாறடுதிகிரிப்பெம்மான்மண்டுவெஞ்சினத்தவொள்வேல்
நூறுநூறாகிவீழநூறினனுனிக்கூர்ங்கோட்டுத்
தாறுமாய்களிற்றின்சீற்றச்சாலுவன்மார்பின்மேலும்
வீறுயர்விமானமேலும்வெங்கணைவெய்துதூர்த்தான். ௨௬

இடித்ததிரசனியெய்ப்பவிருங்கணைபொழிந்துமுந்நீர்
குடித்தெழூஉங்கமஞ்சூற்கொண்டற்கொழுந்தெனத்திகழ்ந்துநின்ற
வடித்தபூந்துளவமாயன்வாங்கியவரிவில்வீழத்
தொடிக்கரத்தெய்துவெய்யசொற்பல்சோறலுற்றான். ௨௭

என்னுயிர்த்துணைவன்கொள்வானிருந்தபொற்கொடியைவவ்வி
மின்னுயிர்த்தொளிரும்வெய்யவேலவன்றனைத்துமித்தாய்
உன்னுயிர்க்கிறுதிசெய்யாதொழிகுவனல்லேனென்னாத்
தன்னுயிர்க்கிறுதிசூழ்ந்தசாலுவன்பிதற்றினானால். ௨௮

வெளிற்றுறைவிடுதியென்னாவெயிலுமிழோடைநெற்றிக்
களிற்றுவெண்கோடுகொண்டகதிர்மணிவண்ணன்புண்ணீர்
குளித்ததோர்கதைகைத்தாங்கிக்கொம்மெனவடித்தல்செய்தான்
ஒளித்தனனேற்றுவெம்போருடன்றவில்லுழவன்மன்னோ. ௨௯

தேவகிவிடுத்தோனாச்சென்றுமற்றொருவனண்ணி
ஏவுமிழ்வரிவிற்செங்கையிகல்வசுதேவன்றன்னைத்
தாவுறுகலினமான்றேர்ச்சாலுவன்பிணித்துவௌவிப்
போவதுபுரிந்தான்கண்ணபோற்றெனப்புகன்றுநின்றான். ௩௦

புகலுமச்செவ்விதன்னிற்புணர்ப்பினாலமைத்துவெய்தா
இகல்வசுதேவன்றிண்டோள்யாப்புறத்தெய்தியாங்கு
மகிழ்சுரும்பாற்றுதாரோய்வல்லையேற்காத்தியென்னாத்
தகைசிறந்தொளிறுவாளாற்சாலுவன்றடிதல்செய்தான். ௩௧

மணிப்பொருப்புறழுந்தோளான்மலங்குவான்போன்றுகாட்டிப்
புணர்ப்பெனநெஞ்சினாடிப்பொருசிலைகுழையவாங்கித்
தணிப்பருஞ்சினத்துப்பொல்லாச்சாலுவன்றடக்கைவல்வில்
துணித்தனன்றூணியோடுதொலைத்தனன்கவசமன்றே. ௩௨

மீயுயர்தனிவிமானம்வெங்கதையொன்றினாலே
ஆயிரந்துணியாய்வீழவடித்தனனடித்தலோடும்
காய்சினந்திருகிமற்றோர்கடுங்கதையெடுத்துஞாலம்
தாயசேவடியான்முன்னஞ்சாலுவன்றனிப்போந்தானால். ௩௩

எறித்தெழுபிறைவாயம்பாலெடுத்தவெங்கதையுங்கையும்
தறித்தனனாழிதாண்டிச்சாலுவன்மணித்தாழ்சென்னி
அறுத்தனனாலமூறுமயிற்றலையெயிற்றுப்பேழ்வாயப்
பொறிப்படவரவினாடுபூங்கழற்காலம்மானே. ௩௪

மண்டுசெங்குருதியானும்வளரொளிமணியிற்செய்த
குண்டலம்பிறழ்ந்துகான்றகுரூஉச்சுடர்க்கற்றையானும்
வெண்டலைப்புணரிசேப்பவீழ்ந்தது துணிந்தசென்னி
அண்டநீண்முகட்டின்மாறாததிர்ந்ததுந்துபிமற்றன்றே. ௩௫

சாலுவனைக்கொன்றவத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௧௪௨௯.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

# ௪௩-வது, தந்தவக்கிரனைக்கொன்றவத்தியாயம்.

---

## எழுசீர்க்கழிநெடி லாசிரியச்சந்தவிருத்தம்.

நட்டசாலுவனிறந்துபோயதுவுநனிகடுங்குருதியாறுபாய்
வட்டவாயழல்செய்நேமியம்படைவலங்கொள்பச்சைமுகினின்றதும்
கட்டழற்கதுவநோக்கிவெங்கொலையகாளகூடவிடமொழுகிவார்
தட்டவாயரவமென்னவெய்தினெழுதந்தவக்கிரனுலம்பினான். ௧

மற்றுமாமன்மகனாகிநின்றுமெனைமாய்ப்பதற்குளம்வலித்தியால்
கொற்றமேவுசிசுபாலனீண்முடிகொலைக்களத்திடைதுமித்தியால்
உற்றநின்னைவிடுகிற்பனேயினியொறுத்திடாதெனவுரைத்திடா
வெற்றிமேயதொருகாலதண்டநெடுவிண்டுளக்கமுறவீசினான். ௨

கார்கிழித்துலவுமின்னுநாணவொளிகாலுமோடைநுதல்வேழமும்
தேரும்வாம்பரியுமூர்தலின்றியொருசெங்கணேறெனவிரைந்தெழாப்
பார்பனிப்பவெதிர்சென்றுகண்ணனுயர்பாரமார்பினிடையெற்றினான்
கூரழற்பரிதிசுற்றுவெற்பினொடுகுன்றெலாநிலைகுலுங்கவே. ௩

பொடித்ததண்குழவிமதிவடிம்பிடறுபொன்னெடுஞ்சிகரவெற்பின்மேல்
இடித்தகாரசனியேறுவீழ்ந்ததெனவெறுழ்படைத்ததொருகதையினால்
தடித்தெனச்சுடர்பரப்புபூணுலவுதந்தவக்கிரனுரத்தின்மேல்
அடித்தனன்புவியளிக்குமாழிமுகிலங்கண்வானவர்களிப்பவே. ௪

வளங்கொள்பொற்றுணர கற்பகத்தினை வளைத்துவேரொடு கொணர்ந்தபோர், இளங்களிச்சிறுகண் யானையன்னவ னெதிர்ந்துவெங்கதையினெற்றலும், விளைந்தபோரிலெதிர் தந்தவக்கிரன் விரிந்தபூந்தொடையன் மார்வகம், பிளந்துவீழ்ந்தன னெழுந்தசெங்குருதி பெருகுவெண்டிரை யலைப்பவே. ௫

அடுகளத்தின்விழுதந்தவக்கிரனதாக்கைநின்றுமொருசோதிவிண்
சுடர்தரக்கடிதெழுந்துசெக்கரொளிசொரிமணிச்சுடிகைவெய்யவாய்
மடைதிறந்தொழுகுநச்செயிற்றரவின்மகுடபந்திமிசைமேயநீர்
நெடுநிலப்பொறைதவிர்ப்பவந்ததனிநேமிமாயனடிசேர்ந்ததே. ௬

முன்னவன்பொருதிறத்தல்கண்டுசினமூளவெண்டிரைமுகந்தகார்
மின்னுநக்கவடிவாள்விதிர்த்திகல்விடூரதன்சமர்விளைத்தலும்
கன்னியந்துளவுசூடுகண்ணனழல்காலுகொற்றநெடுநேமியால்
அன்னவன்றலைதடிந்தனன்கடவுளலர்பொழிந்தமரர்வாழ்த்தவே. ௭

தந்தவக்கிரனைக்கொன்றவத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧௪௨௮.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

# ௪௬-வது, நம்பிமுந்தபிரான் தீர்த்தயாத்திரை செய்தவத்தியாயம்.

---

## வேறு.

வாய்ந்தசெம்முளரி வலஞ்சுழியுந்தி மடுவினின்மலர்ந்ததே யன்றிச், சாந்தளறெடுத்துப் பாய்ந்தபூணாகத் தடத்திலுங்கிளைக்குமா போலத், தேந்துளியுறைப்ப நெகிழ்ந்தபூங்கமலச் செழுமலர்ப்பொகுட்டாசிருக்கும், ஏந்திழைகொம்மை வரிமுலைமுயங்கு மேந்தல்வண்டுவரைசென்றிறுத்தான்.

நளியிருமுந்நீருடுத்தமாநிலமுநானிலம்பொறுத்தவாளரவும்
நெளியமாகடலந்தானைவந்தீண்டநெய்ம்முகங்கமழும்வேலவர்க்
களையுறையரவமுயர்த்தவனொடுபோரடுத்திடநடுநிலையமைந்த [தான்.
வளைமருண்மேனி யொருகுழையொருவன் வண்புனலாட்டின்மேலெழுந்
படுகளிப்பலகாற்பறவைபாண்மிழற்றப்பச்சிளந்தேறல்வாயுறைக்கும்
கடிமலர்கஞலிக்கருகிவார்ந்தொழுகக்காழ்படுகார்முகிலேந்தி
விடுசுடரிமைக்குந்திருமணியலைத்துவெள்ளிவெண்டிரைக்கடலுடுத்த
நெடுநிலமடந்தைகுழலெனக்கிடந்தநீள்புனல்யமுனையாடினனால். ௩

அறுபதமுரல நறைகமழ்பசுந்தோ டாயிரமவிழ்ந்தசெங் கமலத், திறைகொள்காரன்னத் தொழுதியும்புரிசங் கீன்றவெண்மணிகொழித் தெதிர்ந்த, மறிதிரையமுனை மாநதிப்பெருக்கும் வயின்வயின்மயங்கிய தண்ணந், துறைகெழுகங்கைமாநதிபடிந்துதொளைக்கைம்மாக்களிறெனநடந்தான்.

## அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கலைமதியிளையதலானுங்கருங்கலையுடைமையானும்
நலமிகுதன்னைமானுநைமிசாரணியநண்ணி
மலர்தலையுலகமேத்துமாதவக்கிழவரெல்லாம்
இலைவிரிசாலைநின்றுமெழுந்தனரெதிர்கொண்டாரால். ௫

இன்னகைமுகத்தானன்றியெழில்வளருருவத்தானும்
நன்னகைமதியைவென்றானண்ணலுமெழுதலன்றி
மன்னுபூந்தவிசின்வைகுமாதவச்சூதன்சென்னி
புன்னுனைபடையாக்கொண்டுபோக்கினனென்பயன்றோ. ௬

சொல்வளங்கனியத்தொன்னூல்சொல்வதற்காகயாங்கள்
நல்கியதவிசின்வைகுநற்றவக்கிழமையோனைக்
கொல்வதோரறங்கொலென்னாக்குங்குமக்குவட்டின்வீங்கி
மல்வளர்தோளினாற்குமாதவர்கூறலுற்றார். ௭

கலையினதகலமெல்லாங்கடந்தமாமுனிவற்காய்ந்து
கொலைபுரிந்ததற்குவெள்ளிக்குன்றுறழ்குவவுத்தோளாய்
உலகொழுக்கிறவாவண்ணமோங்கியபுனிதநன்னீர்ப்
பலதுறையாடல்வேண்டும்பன்னிருதிங்கட்காலம். ௮

மலைக்கும்வெஞ்சிற்றப்பொல்லாவற்கலனென்னும்வெய்யோன்
அலைக்கும்வந்தெம்மையெல்லாமறங்கடையவனையெய்தாக்
கொலைக்களப்படுத்தல்வேண்டுங்கொங்குலாய்முருகுவிம்மிச்
சிலைக்கவின்பெற்றபைந்தார்ச்செம்மலென்றியம்பினால். ௯

பொருவிலாஞானவொள்வாள்பூமுகமழுங்கவெட்டி
இருவினைக்காடுசாய்த்தவிருந்தவர்வதனநோக்கி
அருள்பொழிகமலக்கண்ணனன்னதுபுரிவேமென்னத்
திரைவிளைபவளச்செவ்வாய்திறந்தனன்கூறுமாங்கே. ௧௦

தந்தையேவந்துகாதற்றநயராய்த்தோன்றுமென்று
முந்தையாரணங்களெல்லாமொழிதருதிறத்தாற்சூதன்
மைந்தனேசூதனென்றுமரபுளிநாட்டல்செய்தான்
அந்தமினலத்ததொன்னூலரிறபக்கிளக்குமாறே. ௧௧

## கலிவிருத்தம்.

இலங்குவாட்படையில்வலன்காதலன்
அலங்கன்மாலையமரரைவென்றுபோர்
வலங்கெழீஇயவன்வற்கலனென்பவன்
விலங்கலாமெனவீங்கெழிற்றோளினன். ௧௨

செய்யபங்கியன்றீப்பொழிகண்ணினன்
மையினல்வகுத்தன்னவண்ணத்தினன்
கையிலங்கியகட்டழலெஃகினன்
ஒய்யெனக்கனன்றுற்றனனங்கரோ. ௧௩

ஆளிமொய்ம்பனசனியினார்த்தெழு
தூளிமாரிசொரிந்தனன்றோன்றலும்
வாளிலங்குவலம்புரிமேனியான்
கோளிலங்குகொடும்படையுன்னினன். ௧௪

காத்தினுற்றகலப்பையினல்வளைஇ
இருப்புலக்கைகொண்டேந்தலடித்தலும்
பொருப்பின்வீழ்ந்தனன்பொன்றினன்மல்குசீர்
வரைப்புவந்திடவற்கலனென்பவே. ௧௫

மைந்துடைப்பகைமாட்டியவற்றைஞான்
றிந்திரற்கிமையோர்புனலாட்டல்போல்
பைந்துழாய்புனைபாற்கடற்சேர்ப்பனை
அந்தணீர்சொரிந்தாட்டினரந்தணர். ௧௬

மொய்சுடர்ப்பொன்முளரியினாற்புனை
வைசயந்தியெனாநறுமாலையும்
கைசெய்பூணுங்கலையுமுதவினார்
நெய்சிறந்தொளிர்நேமியஞ்செல்வற்கே. கஎ

நண்ணுமாதவர்நன்றுவழிப்பட
உண்ணிறைந்தவுவகையனாகிநீள்
வெண்ணிலாக்கதிர்வீசியமேனிய
அண்ணனீங்கினனவ்வழியென்பவே. கஅ

முரிதடந்திரைமுத்தெறிதெண்கடற்
கரைமெலிக்குங்கவுசிகநீர்படிந்
தரசவன்னமமர்தருபூந்துறைச்
சரயுமாநதித்தண்புனலாடினான். ககூ

வேறு.

நிலவிரிவெண்மணற்குன்றினெற்றிமேல்
குலவுசெங்காலனங்குமரிஞாழலின்
மலர்தொறுமறைதரவான்றிநித்திலம்
அலையெறிபயாகைசென்றாடினானரோ. உ0

யாணர்நீர்க்கோமதியெய்திவானதி
வேணவாத்தீர்த்தருள்வீங்குதண்புனற்
சோணையாற்றடைகரைதுன்னித்தண்கயாக்
காணியநடந்தனன்கமலக்கண்ணனே. உக

ஆடியவெண்டிரைக்கங்கையாழியின்
கூடியதண்டுறைகுடைந்துமேதகப்
பாடல்சால்சிறப்புடைப்பரசுராமனற்
றுடொழூஉத்தேகினன்றுமமார்வனே. உஉ

தொழுதகுகமழலந்துறையின்மூழ்கின
எழுவகைத்தோற்றமுமிரியவேழ்வகை
ஒழுகுகோதாவிரியோங்குபெண்ணையா
றழிபுனற்பம்பையென்பவற்றினாடினான். உங

நிழன்மதிதவழ்வரைநெஞ்சுபோழ்ந்தெழும்
அழலவிரள்ளிலையலங்கல்வேற்படை
முழவெனப்பணைத்ததோண்முருகற்கண்டுநார்
தழுவமீக்கிளர்தருசயிலநண்ணினான். உச

விண்டொடர்குன்றொடுவிரியல்வெண்மடற்
கண்டல்சூழ்நதிபலகடந்துகாவலன்
தெண்டிரைநிலக்கொருதிலகமாகிய
தண்டமிழ்நாட்டகஞ்சார்ந்திட்டானரோ. உரு

## எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

பண்படுமழலைச்சுரும்புபாய்ந்துழலப்பசுநறுப்பிலிற்றுவெண்டோட்டுத்
தண்கமழ்முல்லைத்தாரவன்பிடுங்குதவழ்மதக்கரிமருப்பேய்ப்பத்
தெண்கடல்பருகிக்கண்படுகமஞ்சூற்செழுமுகின்முகங்கிழித்தெழுந்து
விண்படுகுழவிமதிதவழ்சால்வேங்கடமால்கழறொழுதான். ௨௬

வரிமிடற்றறுகால்வண்டினம்பாடமடமயிலகவுபூஞ்சினைய [ன்
குரவமுங்குருந்துங்கொன்றையுங்குமிழுங்கோங்கமுநாகமுங்கொழுந்தே
அருவிபெய்தடங்காவமரர்பொன்னாட்டாவருங்குளகருந்தமேனிவந்த
ஒருதனிமுதலவ்வும்பலோங்கலின்மீதோங்கெழிற்காஞ்சிசென்றுற்றான்.

தெள்ளொளிகிளைக்குமணிதெளித்தன்ன திங்களம்பொய்கையிற்றிகழும்
வெள்ளிவெண்ணிலவுத்திங்களிற்றோன்றிவிரையெடுத்தெறியும்வெண்
முள்ளரைமுளரிகங்குலுமலரமுழுவெயில்பொழிகதிர்கடந்த [டோட்டு
கள்ளவிழ்துளவப்படலைநம்பெருமான்கண்வளர்கோயினண்ணினனால்.

மாறிலாக்கடவுண்மணிகிடந்திமைக்கும்வளங்கெழுவெண்மணற்புளினத்
தாறுகால்வரிவண்டாயிரமாற்றவரக்கிதழாயிரம்விரிந்து
தேறல்பாய்முளரிப்பொகுட்டுவீற்றிருக்குஞ்செந்திருமணக்குமாபோல
வீறுசால்பவளக்கொடிபடர்ந்தேறிவீங்குநீர்க்காவிரிபடிந்தான். ௨௯

பிறைமுதுகுரிஞ்சவழியுமின்னமுதப்பெருக்கறாத்தண்ணறுஞ்சாரல்
உறையழற்றிகிரிமாலலங்காரனுருவவொண்காந்திமேற்றவழச்
செறிசுடர்வயிரத்திரளும்வெண்முத்துந்தெள்ளுநீர்யமுனையிற்றோன்றி
எறிதருசிலம்பாறொழுகுபூஞ்சோலையிடவமால்வரையடைந்தனனால். ௩0

இளைத்தவெண்டிங்கண்முழுநிலாத்தவழுமெரிமருளீர்ஞ்சடைக்கடவுள்
முளைத்தெழுமுளரிப்பொகுட்டுறைமுதல்வன்முழுவலிற்பணிந்தனரேத்த
கிளைத்தபூந்தெரியல்வேம்பணிவழுதிகிளர்கமண்டலுவின்மால்சேலாம்
வளைத்தபொன்னிஞ்சிமாடமார்மதுரைவளநகரினிதுநண்ணினனால். ௩௧

கடற்சுறவுயர்த்த காமனிற்கவினுங் சடுந்திறல்விசயன்கைத் தனுவா
ல், அடிப்பவஞ்ஞான்று மழவிடைப்பாக னழலவிர்புரிசடைக் காட்டில்,
பொடித்தவெண்டிங்கள் பொழியமுதளாவு பூந்திரைக்கங்கையின் வார்ந்
து, வடித்ததீந்தமிழ்தண் டுறைதொறுமணக்கும் வையையமாநதிப்புனல் ப
டிந்தான். ௩௨

திண்டிறலரக்கன் பஃறலைசிதறச் செஞ்சிலைவளைத்தொருநீலக், கொ
ண்டலங்கொழுந்திற் றிகழ்பவன்பசும்பொற் குழைகழற்றாட்டுகண் மணந்
து, கண்டவர்பிறவிச் சருங்கடல்கடப்பக் கதிர்மணித்திரளெடுத்தெறியும்,
வெண்டலைப்புணரிச் சருங்கடல்விளங்கு மேதருசேதுவி னடைந்தான்.

கதிரொடுபனிவெண்மதிபுகாதோங்குகடிமதிளிலங்கைகட்டழித்த
மதவலிமலர்த்தாள்வைப்பினிற்றோன்றுமல்லன்மந்தாகினிகடுப்ப
முதிர்கொளம்பவளக்கிளைசுழித்தெறிந்துமுழுநிலாநித்திலம்வான்றீ
அதிர்கருங்கடல்வெண்டிரைதவழ்ந்தாடுமணிதிகழ்சேதுவிற்படிந்தான்.

அமுதமூற்றிருந்ததடங்கடல்பருகியமுதுவேறமைப்பதுகடுப்பத்
தமிழ்தருகடவுட்குறுமுனிவிழையுஞ்சண்பகவனத்தினிற்றவழ்ந்த [தன்
கமழலர்த்தென்றற்கொழுந்தெதிர்கொள்ளக்களிவிளைந்தொழுகுதெள்ளமு
குமிழிபாய்திங்கட்பசுங்கொழுந்திடறுகோடுயர்குலாசலமடைந்தான். ௩௫

இடுமணலெக்கர்மீமிசைச்செங்காலிளவனஞ்செறிவதுகடுத்தும்
முடமுதிர்தடந்தாண்முள்ளிலைத்தாழைமுகந்தொறுமுருகுவாயுறைக்கும்
மடல்கிளைத்தெழுதல்போன்றுமாமேனியலர்தாவாணிலாத்தவழ
விடுசுடர்வெயிலாரொருகுழையொருவன்விரிபுனற்பொருநலாடினனால்.

பொன்னவிர்குன்றம்பொருதமால்யானைப்புணர்நெடுமருப்பினின்றுக்க
நன்னிலத்தாளமணிசிதர்ந்தென்னநளிமணற்குன்றினிற்பாய்ந்து
மன்னியமுடவெண்டாழைமெல்லரும்பின்மருங்கெலாமன்றலூற்றிருந்த
கன்னியம்புன்னைமென்முகைகளுலுங்கன்னியந்துறைபடிந்தனனால். ௩௭

ஒழுகொளிவிரிக்குஞ்செம்மணிக்குப்பையோங்கிரும்பணாடவிதழைத்த
எழில்வளர்நாகபோகமீமிசைவந்திலங்கொளிமரகதங்கிளைத்துத்
தழையுமாபோலப்பொதியவிழ்விரிசெந்தாமரைக்கண்ணருள்பெருகிப்
பொழிதருதுளவப்புயல்வளாநந்தபுரத்துவந்தடைந்தனனன்றே. ௩௮

தனிமுதலவற்குத்தற்பமாய்த்தாங்குதணப்பில்சீரலப்படையொருவன்
மதிசதிர்விரிக்கும்வெள்ளிமால்வரையும்வயங்குபொற்கொடுமுடிவரையும்
எதிருயர்வில்லாவின்பவீடளிக்குமின்னிசைகேட்டுவந்திறைஞ்சும்
யதுகிரிபாரவியிறைவனாரணனையிருங்கழல்பராவியேகினனால். ௩௯

வழுத்தருமலைநாடிகந்துகோகன்னம் வலங்கொடுவலவையிற் செந்தீ, விழித்தபாம்புயர்த்த வெந்திறல்வேந்தும் வீழ்மணிச்சுரும்பினம் பாய்ந்து, கிழித்தபூந்தொடையல் வீமனுங்கிடைத்துக் கிளைத்தெழுமருப்பிளங் கரி போல், பழுத்தவெங்கொலைய கதைகொடுமலையும் படுகளப்பரப்படைந் தனனால். ௪௰

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கருகுழைத்தடங்கட்செவ்வாய்க்காதலங்கொடிக்குப்பைம்பொன்
விரிகுழைநெடுமந்தாரம்வேரொடுகொணர்ந்துநல்வேய்
வரைகுழைந்துருகவூதுமாலொடுநின்றவைவர்
ஒருகுழையொருவன்றன்னையூழ்முறைவணக்கஞ்செய்தார். ௪௧

வெருவருசெலவின்வீரர்வெஞ்சமம்விளைத்தனோக்கி
ஒருவனேசெயலின்மிக்கானொருவனேவலியின்மிக்கான்
இருவிருநிகரேயாற்றுமிருஞ்சமமொழிகவென்னாக்
குருமணியிமைக்குமொற்றைக்குழையினானுரைத்தல்செய்தான். ௪௨

கேட்டிலர்காற்றின்சேயுங்கிளைத்தமுள்ளெயிற்றுப்பேழ்வாய்ச்
சூட்டராவுபர்த்தவேந்துந்துளக்கமிலமர்விளைத்தார்
மோட்டுவெண்டரங்கமுந்நீர்முற்றியதுவரைசேர்ந்தான்
வாட்டிறல்விளங்குசெங்கைவாள்வளைமேனிவள்ளல். ௪௩

முல்லையங்கோதையோடுமுழுமதித்தோற்றஞ்சான்ற
நல்லெழினம்பிமீட்டுநைமிசாரணியநண்ணி
எல்லையில்வேள்வியாற்றியியற்றுமாதவத்தோர்க்கெல்லாம்
தொல்லைநூன்முடிவுதெள்ளித்துகளறத்தொகுத்துச்சொற்றான். ௪௪

மாறின்மெய்யுணர்வுதோன்றமன்னுமைம்புலனும்வாட்டி
ஆறறிமுனிவர்க்கெல்லாமருமறைதெரித்தபின்னர்
வீறுயர்துவரைமேவிவீற்றிருந்தனனற்றேன்மட்
டுறுவெண்டோட்டபோந்தையுயரியகொடியான்மாதோ. ௪௫

என்னலுமுவந்துமன்னனிந்திரத்திருவில்லேய்க்கும்
கன்னியந்துளவப்பைந்தார்க்கருமுகில்விளையாட்டின்னம்
பன்னுவாயென்னலோடுர்பகாருஞ்சிறப்புவாய்ந்த
மெய்ந்நிலைவிளங்கநாடும்விழுத்தவன்விளம்பலுற்றான். ௪௬

நம்பிமூத்தபிரான்தீர்த்தயாத்திரைசெய்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௪௭௪.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௪௫-வது, குசேலற்கருள்புரியத்தியாயம்.

### கலிநிலைத்துறை.

பாயும்வல்லிருள்பருகுமொண்கதிர்மணிச்செஞ்சூட்
டாயிரந்தலையலர்த்துபாம்பணைத்துயிலகற்றிக்
காயும்வெஞ்சினக்கட்செவித்தலையினின்றாடும்
மாயனன்பினன்குசேலனென்றுளனொருமறையோன். ௧

எனைத்தொன்றாயினுமெதிர்ந்ததுமிசைந்துவண்டிரைக்கும்
புனத்துழாய்முகில்பொன்னடிகருதுமம்மறையோன்
மனைக்கிழத்திவெம்பசியினால்வாடியமுகத்தாள்
பனித்தகண்ணினள்பவளவாய்திறந்தனள்பகர்வாள். ௨

பொன்பிறங்கியபுணர்முலைத்திருமகள்கொழுநற்
கன்பனாகியுமகன்றிலைவறுமைமற்றன்றே
மின்பிறங்கியவிழுமணிமார்பினாற்கண்டு
மன்பெரும்பொருள்வாரினைவருகெனவகுத்தாள். ௩

வடித்தநான்மறையந்தணன்மாயனைக்காணின்
கொடுப்பதென்னெனக்குறுநுதலறவர்பாற்கொடுவந்
திடித்தபாசவலிரந்தவெண்டுகில்பொதிந்தீந்து
நடத்தியென்னலுநசையிலன்மென்மெலநடந்தான். ச

தெரியுநான்மறையின்னமுந்தெரிவுறக்காண்டற்
கரியனாகியவரக்கிதழ்முளரியஞ்செங்கட்
கரியவன்றனைக்காணுறக்கடுகுபேரன்பு
விரியவேகினன்விழுப்பெருங்கோயின்மேயினனால். ரு

மன்னர்மன்னவர்மணிமுடித்திரள்பொருதுக்க
பொன்னிவர்ந்தொளிர்பொற்கடைமுன்றிறந்தேகிக்
கன்னியந்துழாய்க்கருமுகிலொருகனித்துவர்வாய்
அன்னமென்னடையரிவையோடிருந்துழியடைந்தான். சு

உருகுகாதலன்பைப்பயவொல்கினன்வருதல்
முருகுவிம்முசெம்முளரியஞ்செங்கணானோக்கி
எரிபொன்சேக்கைநின்றெழுந்தெதிர்சென்றிவண்வருக
வருகவென்றுபொன்மார்புறத்தழீஇனன்மகிழ்ந்தான். எ

களித்தசெங்கயற்கருங்கண்மாமாதுவெண்கவரி
வளைத்தளிர்க்கையாலிரட்டமாமணியணையிருத்தி
இளைத்திசாலவென்றிளநிலாவொழுகுநூன்மார்பின்
அளிக்குலஞ்செறிசெய்யதாரணிந்துபாகளித்தான். அ

பயிற்றுநான்மறைக்குரவனம்மனையவள்பணியால்
வெயிற்குவெம்பியகானிடைவிராய்தாற்கேகிப்
புயற்கசைந்தொருபொதும்பரினிரவுநாமிருந்த
தயர்த்திபோலுமென்றளவளாயுசாவினனன்றே. கூ

முளைத்தவெண்ணிலாமுறுவல்வாண்முகத்தினனாகி
அளிப்பமற்றெனக்கென்கொடுவந்தனையன்ப
ஒளிப்பதென்னைநீயுதவுகென்றுள்ளாக்கூட்டும்
தளிர்க்கையாற்றுகில்வாங்கினன்றனிமறைமுதலி. கO

பொருள்விழைந்திவன்போற்றலனமையொருபொழுதும்
திருவிழைந்திவன்றிருமனைக்கிழத்திசெல்கென்ன
வரவுவந்தனன்மற்றிவற்களித்துமென்றள்ளி
விரைகமழ்ந்தபூந்துளவினான்பாசவன்மிசைந்தான். கக

வாட்டநுண்ணிடைவடவரைக்குவடெனப்பணைத்த
மோட்டிளங்கதிர்முலைசுரந்தொழுகியதீம்பால்
ஊட்டுபேயினுள்ளுயிர்பிழிந்துண்டசார்வண்ணன்
மீட்டும்பாசவன்மிசைவதற்கெடுப்பவுள்விழைந்தான். கஉ

ஊர்ந்தகாதலியொருமுறைபருந்தியதிறத்தால்
எந்தவிந்திரனெனக்கருஞ்செல்வமெய்தினனல்
மார்தன்மற்றினியென்றுசெம்மலர்க்கரம்பிடித்தாள்
பூந்துழாய்வரைமார்பகமகன்றிலாப்பூவை. கங

தடநெகிழ்ந்தசெந்தாமரையவள்குறிப்பறிந்து
விடுசுடர்ப்பனிவெண்ணகைமுகிழ்த்தருள்சுரந்து
மடைதிறந்தசெங்கண்ணினன்மறையவன்றனக்கு
விடைபுரிந்தனன்வீறுசால்வேதியனெழுந்தான். கச

அம்மவுய்ந்தனமுய்ந்தனமரும்பொருளெய்தல்
மம்மர்கூர்தரமறக்குவனமையெனமதித்தே
மும்மைசாலுலகளித்தருண்முளரியஞ்செங்கட்
செம்மனல்கலன்செல்வமென்றுவந்தனன்சென்றான். கரு

களித்தவண்டினங்களுலவாய்விரிந்துதண்டேறல்
துளித்தநாண்மலர்ச்சோலையுஞ்சுடர்மணித்தொழுதி
தெளித்தெனத்திகழ்தீம்புனல்வாவியுஞ்செறிந்து
பளிக்குமண்டபம்பல்குதன்மனையகம்படர்ந்தான். கசு

தெளிநிலாக்கதிர்சிந்தியவெள்ளிவெண்மாடம்
முளையிளம்பிறைதவழவிண்முகடுகீண்டோங்கி
அளகைகாவலனருநிதியறைதிறந்தென்ன
வளமலிந்தவம்மனையகநோக்கினன்மயர்ந்தான். கஎ

விலகிவில்லுமிழ்மீன்குழாத்தொள்ளொளிவிரிக்கும்
கலைநிறைந்தவெண்மதியெனக்கவின்வழிந்தொழுகு
திலகவாணுதற்சிற்றிடைத்தெரிவையர்செறிய
இலகுபூணணிந்தில்லவள்வருதல்கண்டயிர்த்தான். கஅ

பதியைநோக்கினன்பதிதொறும்பதிதொறுங்கிடந்த
நிதியைநோக்கினனேரிழைமடப்பிணைமருட்டும்
புதியநோக்கொடுபோதருமனையவள்வதன
மதியைநோக்கினன்மால்செயலிதுவெனவலித்தான். ககூ

பெறலருந்திருப்பெற்றும்வெண்பிறைமருப்பொசித்த
இறைகருங்கடலிருநிலம்பொதிந்ததாட்கமல
மறவியொன்றிலன்மாட்சிசால்பெருநலமாந்தி
அறநிரப்பிநின்றளவிலாத்தனிநெறியடைந்தான். உ0

குசேலற்கருள்புரியத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கசகூச.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## ௪௯-வது, சமந்தபஞ்சகத்திற்சென்றவத்தியாயம்.

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பரிதிவாளரவுதீண்டப்படுவதோர்காலநண்ண
அரசர்செங்குருதிநீராலடுதிறற்பரசுராமன்
தரைபுகழ்தடமதாக்குஞ்சமந்தபஞ்சகத்திற்றண்டேன்
சொரிதொடையரசர்வெள்ளந்தொக்குடனடைந்ததன்றே. ௧

முளைத்தவெண்முறுவற்செவ்வாய்முகிழ்முலைமாதரீட்டம்
கிளைத்தசெம்பவளவல்லிக்கிளையெனப்பரந்துசூழ
வளைக்குலமலறநீலமாகடலெழுந்ததேபோல்
களிச்சுரும்பாற்றுபைந்தார்க்கண்ணனும்போயானங்கண். ௨

ஆவியேயனையளாயவசோதையுமாவிபூத்த
காவியுங்கயலும்வென்றகடைக்குழையெதிர்ந்தவுண்கட்
கோவியர்குழாமுமொண்கேழ்க்குங்குமக்கலவைச்சாந்தும்
நாவியுங்கமழ்ந்துசெல்லநடந்தனனந்தகோனும். ௩

அங்கதிர்மழுவலாளனாக்கியதடமுன்போலக்
குங்குமச்சாந்துதோய்ந்துகுருதியின்றன்மைகாட்டத்
திங்கள்வாண்முகத்துச்செவ்வாய்த்தேவியர்குழாத்தினோடும்
கங்கைநீர்பூத்ததாளான்கடவுணீராடினானால். ௪

கொடிபுனைகொடிஞ்சியான்றேர்க்குருகுலத்தரசும்வெய்ய
இடிமுழங்கோடையானையதுகுலத்தரசுமீண்டிப்
படிபுகழ்தெய்வநன்னீர்படிந்தொருபசும்பொற்கோட்டுக்
கடிமலர்ச்சோலைநீழல்கலந்துடனிருத்தயாதோ. ௫

புவிபுகழ்நந்தகோபற்போர்வசுதேவன்கண்ணுற்
றுவகைமீக்கூரவந்நாளோங்கெழின்மருதினூடு
தவழ்பசுங்குழவியோடியாடவந்தாதுசிந்தி
அவிழ்தொடையணிந்தமார்வமழுந்துறத்தழீஇக்கொண்டானே. ௬

கோல்வளையசோதைவந்துகுறுகலுமுலகமுண்டோர்
ஆலிலைப்பள்ளிதுஞ்சுமஞ்சனக்குழவியுண்ணப்
பால்சுரந்தூட்டுசெம்பொற்படாமுலைச்சாந்துதோயச்
சேலொடுபொருதவுண்கட்டேவகிபுல்லினாளால். ௭

சுரும்புசூழ்பனிமென்முல்லைத்தொடையணிநந்தகோனும்
அரும்புவெண்டரளமூரலசோதையுமுவப்பநண்ணி
இரும்பனைக்கொடியினானுமேடவிழ்கமலச்செங்கட்
கரும்புயல்வண்ணத்தானுங்கைதொழுதிறைஞ்சினின்றார். ௮

குன்றெதிர்நிற்றலாகாக்குங்குமத்தோளினானை
அன்றெதிர்காணப்பெற்றவசோதையுநந்தகோனும்
சென்றெதிர்முளரிவென்றசெய்யகண்களித்துமுற்றாக்
கன்றெதிர்கறவைபோலக்கசிந்துளமுருகினாரால். ௯

வெயினுழையறியலாகாவிரிமலர்க்காவினீழல்
கயலெனக்களிக்குமுண்கண்பரப்பினர்கருங்கட்டோகை
மயிலெனநின்றவாயர்மாதர்தங்குழுவையெல்லாம்
புயலெனநின்றசெங்கட்பொருவிலிபுல்லினானே. ௧௦

கஞ்சனைக்கொன்றபின்னுங்காய்ந்தெழுவேந்தரோடு
வெஞ்சினந்திருகுவாட்போர்விளைத்தனமிருந்திட்டேமால்
வஞ்சிநுண்மருங்குனல்லீர்மறந்தனிர்கொல்லோவென்னாச்
செஞ்சுடர்விரிக்குந்தெய்வத்திகிரியஞ்செல்வன்செப்பும். ௧௧

இருந்துநாமெங்குழுங்களிடத்தினுமிருக்கின்றேமால்
உரைப்பின்மற்றும்மைநீங்கியுறைந்ததையுண்டுகொல்லோ
அருப்பிளமுலையீரொன்னாவரும்பவிழ்பசும்பொற்கோட்டுத்
தருக்கொடுதந்தநம்பிதன்னிலைதெரித்தான்மாதோ. ௧௨

அளித்தளித்துலகமீளவமைத்தருளிறைவனின்று
தெளித்தலுநெஞ்சந்தேறித்தெருமரலுழத்தறீர்ந்து
களிக்கயல்பொருதுவென்றுகடைசிவந்தகன்றகண்ணார்
தளிர்க்கரங்கூப்பிச்செவ்வாய்த்தத்தையிற்கிளக்கலுற்றார். ௧௩

வலஞ்சுழியுந்தியந்தாமரையினின்றுலகந்தந்த
அலங்கிதழ்முளரிச்செங்கணமலநீராழிவேலி
நிலம்பொதிகமலப்பொற்றாணிணைவதேயருள்செய்கென்னா
விலங்கிவில்லுமிழும்பூணார்வேண்டினர்வழுத்தல்செய்தார். ௧௪

அத்தலையவர்வேட்டவாரமுதன்னசாயற்
றத்தரிநெடுங்கட்பேதைதாமரைக்கண்ணன்வேட்ட
மைத்தகாரன்னகூந்தன்மாதரோடடவளாவி
எத்திறனும்மைவேட்டானிறைவனென்றியம்பினாளால். ௧௫

தொடுத்தபூங்கோதையொன்றுசுரிகருங்குழலிற்சூட்ட
எடுப்பினுமம்மவோவென்றிரும்புயல்கிழித்தமின்போல்
நடுக்குறுமருங்குற்செவ்வாய்நறுநுதன்மாதர்தம்மை
வடித்தபூந்துளவோன்வேட்டவண்மையாங்குரைத்தல்செய்தார். ௧௬

குவிமுகிழ்விரிதார்மன்னர்குருதியான்மழுவலாளன்
தவழ்திரைஞாலம்போற்றத்தடம்புரியிடத்தினூடு
கவளமாக்களிறுசாய்த்தகண்ணனைக்கண்ணுற்றைவர்
உவகையங்கண்ணீர்வாரவொருதடமியற்றியிட்டார். ௧௭

யாணர்வெண்டரங்கக்கங்கையாறெடுத்தொழுகுதாளின்
சோணமாநதியும்வந்துதோற்றியதோற்றமொப்பச்
சேணொலிமௌலிச்செக்கர்ச்சிகாமணிக்கதிர்கள்பாய
வாணிலாமணிப்பூண்மன்னர்மாயனைவணக்கஞ்செய்தார். கஅ

இமிழ்திரைப்பரவையீன்றவின்னகைக்குமுதச்செவ்வாய்
அமுதுகுமழலைத்தீஞ்சொலரிவைவீற்றிருந்தமார்வக்
கமழ்துழாயலங்கன்மாலைக்கண்ணனைக்கண்ணிற்காண
தமிழ்முனிதொடக்கமாயதபோதனர்சார்ந்துளாரால். ககூ

களிமதக்களிறுமாய்த்தகண்ணனைக்கண்ணினோக்கி
அளவறுஞானாநந்தமருவமென்றறைவதென்னே
இளநிலாநகைத்துச்செவ்வாயின்னருள்பொழியுஞ்செங்கட்
டொளிமணியுருவிற்றென்னாவுணர்ந்துணர்ந்துருகாநின்றார். உ0

சதுமறையிறுதியினுஞ்சழக்கறத்தெரிகலொல்லா
முதிர்பெருஞானாநந்தமூர்த்தநம்விடக்குக்கண்ணுக்
கெதிர்தரலென்னேயென்னேயென்றிறும்பூதெய்தாவாங்
கெதுதவமிழைத்தேமென்னாவேங்கினரவசமுற்றார். உக

அவிழ்ந்தபூந்துணர்தூய்த்தாழ்ந்தவமரர்பொன்மகுடகோடி
தவழ்ந்தசெங்கதிர்கள்பொங்குந்தனிமணியுழுதுமாடல்
உவந்தவாளரவின்செஞ்சூட்டொளிர்மணிகிழித்துஞ்செக்கர்ச்
சிவந்ததாட்குழகன்பூசைசெய்தனன்செய்தவர்க்கே. உஉ

அழற்பொலிந்திலங்குகூர்வேலடல்வசுதேவனுற்ற
விழுத்தவர்தம்மைத்தாழ்ந்துவினையினால்வினையையெல்லாம்
ஒழித்திடும்வண்ணநீவிருரைமினோவெனவினவ
முழுப்பெருமுனிவர்மூரன்முகிழ்த்தனர்மொழியலுற்றார். உங

விரைகமழ்துளவினானைமெய்ப்பொருளென்றுநாடி
அருவினையெறிதல்செய்யாதவனையோர்மகவென்றெண்ணி
இருவினைவினையினான்மற்றெறிந்திடனினைத்தல்கங்கைத்
திருநதிவிடுத்தோராறுசென்றடைந்தாடல்போலும். உச

வியனிலமன்னதக்கவினைப்பயன்விழையாதாற்றின்
மயலறுமற்றபோதுமாண்டமெய்யுணர்வுதோன்றும்
உயர்வறவுயர்ந்தவுண்மையுணர்வுவந்துற்றகாலை
இயலிருவினையினீட்டமிரியுமென்றியம்பினாரே. உரு

வாவியங்கமலமெல்லாம்வந்துபோர்க்குதவினாலும்
காவிமுன்னிற்கலாற்றாக்கட்டழகுடையவுண்கட்
டேவகிகொழுநன்றேவர்திரண்டவிழுகந்துமாந்த
ஆவியின்முனிவர்தம்மோடருமகமாற்றினனால். உசா

கறையணற்பாம்பிணுகெண்ணேப்பாவியொள்வேல்
விறல்கெழுவிதுரன்சென்ருன்வெவ்வராவுயர்த்தோனுதி
நொறில்வயப்புரவித்திண்டேர்நூற்றுவர்கடந்தார்மற்றை
அறன்மகனுதியாயவைவருமரிதிற்சென்ருர். உஎ

கறுத்தெதிர்கடந்தயானேக்கதிர்நிலாக்கழுமுவெண்கோ
டிறுத்தமராடுமல்லர்க்கிடியெனக்கடந்தவேந்தல்
நறைக்கொடித்தளவுசூடுநந்தகோனேடுநடந்த
அறற்குழலசோதைக்கன்பாலருஞ்சிறப்பாற்றினுனல். உஅ

கண்ணிணேயிமைகாத்தென்னக்கண்ணனைக்காத்தல்செய்தீர்
எண்ணின்மற்றுமக்கியாங்களிழைத்ததையெவன்கொலென்னுத்
தண்ணருப்பில்குமௌவற்ருரவன்வதனநோக்கி
எண்ணலார்க்கடந்தகூர்வாளிகல்வசுதேவன்சொல்வான். உகூ

கரைக்குமாமதத்தயானேக்கஞ்சனுன்முன்னரின்னற்
பெருக்கின்வீழ்ந்துதவிசெய்யப்பெற்றிலம்பின்னர்ச்செல்வச்
செருக்கினுற்செய்வதொன்றுந்தெரிகலமம்மவென்று
உருக்கமைந்தொளிசெய்செம்பொனுலப்பிலவழங்கினுனல். கூ0

உகுபசுங்குருதியொள்வேலுக்கிரசேனனுங்கு
நகுதருதளவப்பைந்தார்நந்தகோனுவந்துகொள்ளப்
புகைமுகந்தன்னதூசுபுவிவிலேகொண்டபொற்பூண்
அகவிருவிசும்புவிற்குமாரமோடுபகரித்தான். கூக

நேசமொடளித்தநெய்யாப்பொற்றுகின்முதனிலாவு
தூசுநல்லணியும்பொன்னுஞ்சுடர்மணித்தொகையும்வாரிக்
காய்சினவரவின்றுத்திக்கணபணமகுடத்தாடு
மாசிலாமணியைநந்தன்மனத்திடைப்பொதிந்துசென்ருன். கூஉ

காமருவேனினீங்கிக்கார்தலேப்படுதலோடு
மாமயில்குழீஇயபோலமைவிலேபெற்றவாட்கட்
டேமொழிமாதரீண்டச்செழும்புயலெழுந்ததேபோல்
தாமரைக்கண்ணன்முந்நீர்தழுவுமாநகர்சென்றுற்ருன். கூகூ

சமந்தபஞ்சகத்திற்சென்றவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கருஉஎ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

# ௬௭-வது, இறந்தகுழவிகளைக்கொணரத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கைதொழவடைந்தசெங்கட்கண்ணனையொருகானோக்கி
மைதொழுநிறநம்வள்ளன்மறைக்கொழுந்தாகுமென்னாச்
செய்தவக்கிழவரான்றுசெப்பியவண்ணமுன்னி
மெய்திகழறிவுசாலும்விறல்வசுதேவன்சொல்வான். ௧

விண்ணிடையொலியுங்காற்றினூறும்வெங்கனலிதன்பால்
ஒண்ணிறவொளியுநீரினுழைநறுஞ்சுவையுமோங்கு
மண்ணிடைமணமுநீயேமற்றுனைமகனென்றெண்ணா
தண்ணன்மெய்ப்பொருளென்றெண்ணுமறிவுதந்தருளவேண்டும். ௨

அண்டமுமவற்றுணின்றவாருயிர்த்தொகையுமற்றும்
எண்டகுமமரர்யாருமிறைவர்மூவருமொருங்கு
பண்டருமறையினேடிப்பார்க்கினின்னுடைமையாவர்
தொண்டரேமெமக்குவாளாத்தூயறிவுதவல்வேண்டும். ௩

யாவுமாய்நின்றநின்னையிறைவனென்றறிந்தாலன்றி
வீவிலாவினைகளெல்லாம்வீட்டுமாவேட்கலாமே
பூவைபோனிறத்தாயென்றுபுகலுழிப்பூவைபோலத்
தேவகிவந்துசெவ்வாய்திறந்தனள்செப்பலுற்றாள். ௪

துஞ்சியபுதல்வற்கொண்டுதுணையறுகுரவற்குத்தாய்
வெஞ்சினவுருமேறன்னவெகுளியங்களிநல்யானைக்
கஞ்சன்முன்கோறல்செய்தகருங்கடற்பவளச்செவ்வாய்
மஞ்சரைத்தருகவென்றுமனங்குழைந்துரைத்துநைந்தாள். ௫

இளங்கிளிமழலையன்னையிசைத்தசொல்கேட்டலோடும்
உளங்கசிந்துருகவின்னேயுய்த்துநீகாண்டியென்னாக்
களங்கனிவண்ணன்மற்றைக்கலைமதிவண்ணனோடு
வளங்கெழுசுதலலோகம்வல்லையிற்சென்றுசார்ந்தான். ௬

காவலனாகிமற்றுக்கண்ணகலுலகங்காக்கும்
மாவலியெதிர்கொண்டேத்திமலரடியிரண்டினானே
மூவகையுலகங்கொண்டமுழுமுதலுற்றவண்ணம்
யாவதோவென்னப்பூவைவண்ணனுங்கினிதியம்பும். ௭

ஆறறிமரீசிமைந்தரறுவருமலரோனீன்ற
நாறிணர்க்கோதைகொங்கைநயந்தனரென்றுதக்கார்
வீறினால்விரிஞ்சன்சாவவிளைவினாலவுணராகி
ஈறிலாவுணர்வுகுன்றியிரணியற்குதித்தாரன்றே. ௮

சிறந்தவெண்முறுவற்செவ்வாய்த்தேவகியகட்டின்மீட்டும்
பிறந்தனர்பிறங்குநோங்கர்ப்பெரும்படைக்கஞ்சன்வீட்ட
இறந்தனர்வந்துநின்பாலிருந்தனர்தருகவென்றுங்
குறைந்தவர்தமைக்கொண்டெய்தியுய்த்தனனன்னைக்கன்றே. ௯

நீட்டருஞ்செவ்விவாய்ந்தசெகுமகப்பலவுங்கண்டு
வாட்டடங்கண்ணீர்வாரவாரினளணைத்துமோந்து
மோட்டிளங்குரும்பைவென்றமுலைசுரந்தொழுகுதீம்பால்
ஊட்டிளமுறுவன்மாந்தியுவந்தனள்பெரிதுமுள்ளம். ௧௦

உடைதிரைவேலைஞாலமுண்டவனுண்டபைம்பொன்
தடமுலையுண்ணப்பெற்றதவத்தின்வெஞ்சாபநீங்கிக்
கடவுளராகிமன்றற்கற்பகத்தருவினீழல்
அடைகலுற்றனரான்மற்றவ்வறுவருமுவகைகூர்ந்தே. ௧௧

இறந்தகுழவிகளைக்கொணரத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௫௱௮.

ஸ்ரீகிருஷ்ண சகாயம்.

---

## ௪அ-வது, சுபத்திரைமணமுரைத்தவத்தியாயம்.

---

### கலிவிருத்தம்.

என்னலுமணிக்கழையிசைத்தமுகிறங்கை
மின்னிசர்சுபத்திரையைவென்றிசெழுபார்த்தன்
நன்மணமிழைத்ததுநவின்றருள்கவென்னா
மன்னவனுரைப்பமறைமாதவன்வகுப்பான். ௧

ஆயிரமணிச்சுடிகையண்ணலரவேந்து
மாயிருநிலத்தினில்வளங்கொள்புனலெல்லாம்
தோய்தரவெழுந்துதழறும்முபடையொன்னார்
சாயவில்வணக்கியதனஞ்சயனடந்தான். ௨

கன்னியுயர்பொன்னியொடுகங்கைமுதலாகப்
பன்னியநதித்துறைபடிந்துகடல்வண்ணன்
மன்னியசெழுந்துவரைமாநகர்மருங்கோர்
பொன்னொழுகுசால்வரைபோயினிதுபுக்கான். ௩

அத்தலையமர்ந்துறையருந்தவர்களெல்லாம்
முத்தெறிதடந்திரைமுழங்குதுறையாடா
மத்தமதயானையெனவந்தடையும்வல்வில்
வித்தகனைநண்ணினர்விளைந்ததுகிளப்பார். ௪

தோடணிசெவிப்புனைசுபத்திரையைமுன்னேன்
ஆடரவுயர்த்திடுமவற்குதவகாடும்
நீடுபுகழ்வில்வலநினக்குதவவெண்ணும்
கோடுயர்தருப்புவிகொணர்ந்தபுயலென்றார். ௫

அவ்வுரைசெவிப்படலுமம்மென்முகைவிள்ளும்
மவ்வல்கமழ்வார்குழன்மழைக்கண்மடமானை
எவ்வகைமணப்பதெனவெண்ணினனிருந்தான்
வெவ்வமர்கடந்தவரிவில்விசயன்மாதோ. ௬

வண்ணவளைமாதினைமணக்குநெறியென்னென்
றெண்ணினனிருந்தவனிரும்பெரியமுக்கோற்
பண்ணவருருக்கொடுபடர்ந்தனன்மலர்த்தார்க்
கண்ணனுறைகின்றதொருகன்னிநகரத்தே. ௭

அறிந்தனனிருந்துமிகலாளரியனைத்
துறந்தவனடைந்தனனெனத்துளிமதுச்சோர்
நறுந்துளவமாலைபுனைநம்பிகிளையோடும்
செறிந்தடிபணிந்துயர்சிறப்பின்வழிபட்டான். ௮

பிள்ளையளியுண்ணநறைபில்கியமலர்த்தார்
வள்ளலதுகைதவமனைத்தும்வறிதேனும்
உள்ளலனிலாச்சொறியுமோர்குழையணிந்த
வெள்ளைவளைவண்ணனும்விரும்பிவழிபட்டான். ௯

அண்ணல்வசுதேவன்மெய்யறந்தலைமணந்தோய்
நண்ணும்திபித்தலையிறன்குமதியென்று
உண்ணெகிழ்வுபூசனையுவப்பினுடனுற்ற
விண்ணரசுதந்தவன்விருப்பினொடுமேயான். கO

மின்னெனவிளங்குமணிமேகலைமிழற்ற
அன்னமெனநூபுரமலம்பவிளையாடும்
நன்னயசுபத்திரையைநச்சிலையவேற்கட்
கன்னியைமறைந்தொழுகுகாளையெதிர்கண்டான். கக

அண்டமுழுதாளிதருமாடல்வரிவிற்கைக்
கொண்டலனையான்வரைகுலுங்குவளர்தோளும்
மண்டலநிறைந்தமதிவாண்முகமுநோக்கா
வெண்டரளவாணகையும்வேல்விழிகளித்தாள். கஉ

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இளைத்தசெந்தளிர்ப்பூஞ்சோலைகிளரொளியெழுந்துபொங்கி
வளைத்துணைநெடியசாபம்வளைத்தவன்மாணுருக்காண்
களிக்கயலன்னவுண்கட்கன்னிதன்செய்யமேனி
தளிர்க்கவின்வாடவந்துதளிர்த்ததுகாமவெந்தீ. கங

பொருதடஞ்சிலைக்குப்பார்த்தன்பொருவிலானேனுஞ்செய்ய
திருமலர்நெடுங்கட்பேதைதிருமுகத்தெழுதிவைத்த
இருபெருஞ்சிலைக்குமாரனிருகடைகுழையவாங்கும்
ஒருபெருஞ்சிலைக்குஞ்சாலவுரனழிந்துருகுமம்மா. ௧௪

அங்கலுழ்மேனிமற்றோரணங்கினைமணஞ்செய்கிற்பான்
வெங்கயல்பொருதுவென்றவில்வலான்மெல்லென்சாயற்
கொங்கவிழ்கோதைமாதர்குழைபொருதலைக்குமுண்கட்
செங்கயல்பொருதற்காற்றான்றெருமரலெய்திச்சாம்பும். ௧௫

பிறையிளங்குழவிபோலப்பிறங்குமுத்தாரம்பூணான்
துறவினர்படிவங்கொண்டுதோன்றியவறிவிற்றோன்றல்
மறுவறுமதியமன்னமதிமருள்வனப்புவாய்ந்த
நறுநுதன்முறுவன்முத்தநகையெழநலிவான்மாதோ. ௧௬

நறவுவாயுறைக்குமந்தணளினமுமதியுங்கூடி
உறவுகொண்டெதிர்ந்தபோதுமோசனையுடையுஞ்செவ்வி
முறுவல்வாண்முகத்தினாளைமுகந்தனன்கொண்டுபோகப்
பெறுவதோர்காலநோக்கிப்பெட்பொடுவைகினானால். ௧௭

போந்தைமீதுயர்த்தவென்றிப்புரவலனாதியாய
வேந்தெலாந்திரண்டோர்தெய்வவிழாவணிகாண்டற்கேகக்
கூந்தலம்பரித்தேர்க்கண்ணன்குறிப்பறிந்திருந்தபார்த்தன்
மாந்தளிர்மேனியாளைவெளவினன்போயான்மன்னோ. ௧௮

நில்லெனப்புகன்றுபொங்கிநெருப்பெழவிழித்துச்சூழ்ந்த
தொல்லெயிற்கடைகாப்பாளர்தொலையவெஞ்சிலைகால்கோட்டிப்
பல்லுளைப்புரவித்திண்டேர்பாகின்மென்மழலைதூண்ட
மல்லலைத்தெழுந்ததோளான்மணிநகர்வல்லைச்சென்றான். ௧௯

கலிநிலைத்துறை.

மழையொன்றுமின்னுக்கொடியன்னவம்மாதைவஞ்சித்
துழையொன்றுபார்த்தனுடன்கொண்டுநடந்தவண்ணம்
குழையொன்றணிந்தகுருதிப்படைவள்ளல்கேளா
அழலொன்றுவெங்கணைவென்னவழன்றுமிக்கான். ௨௰

விடப்பாழிவாய்வெவ்வரவக்கொடிவேந்தனுக்கே
கொடுப்பானிருந்தகுவளைத்தடங்கண்ணினாளை
எடுப்பான்கொல்வஞ்சித்திகற்பார்த்தனென்றேங்குநீலக்
கடற்பார்கலங்கச்செழுந்தாமரைக்கண்சிவந்தான். ௨௧

சீறற்கயாவுந்தெரிந்தோய்நறுந்தேங்கொடாரான்
ஊறுற்றகன்னியுறற்செங்குரியாள்கொலென்றே
மாறற்றதெய்வமணிவண்ணன்முன்மல்குசீற்றம்
மாறற்றமைந்தவுரைகூறினனாற்றினானால். ௨௨

நிழலுற்றவொற்றைக்குழையாளொடுநீலமேகத்
தெழிலுற்றமாயன்கொடைப்பாலன்யாவுமுய்ப்பக்
குழையுற்றபொன்னங்கொழுந்தன்னவக்கொம்பனாளை
விழைவுற்றபார்த்தன்விதியான்மணமாற்றினானால். ௨௩

சுபத்திரைமணமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௧௫௬௧.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௮௯-வது, மிதிலைக்குச்சென்றவத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மதிதவழ்குடுமிமாடமறுகுசூழ்மிதிலைமூதூர்
எதிரிலாச்சுருதிதேவனென்னுநான்மறைவல்லோனும்
ததைமலாலங்கல்வெள்வேற்சனகனுங்கமலச்செங்கட்
கதிர்மணிவண்ணற்கன்புகனிந்தனர்வைகினாரே. ௧

கசிந்துநெஞ்சுருகுவாரைக்கண்டருள்புரியவேண்டி
அசும்புபொன்னுடையம்மானரக்கிதழ்முளரிபூத்த
பசும்புயற்கொழுந்துபோலப்பழமறைமுனிவரோடும்
விசும்புவீழ்திருவிற்றுயமிதிலைமாநகரமேயான். ௨

பொருகடல்புலம்பமுல்லைப்புலத்தினில்வளர்ந்தநீலக்
கருமுகின்முருகுவிம்முகமலமுமொத்தசெங்கண்
அருண்மழைபொழிந்துதோன்றவகங்கனிந்துருகுமன்பர்
இருவருமுவகைமீதூர்ந்தெழுந்தனரெதிர்கொண்டாரால். ௩

என்மனையடைதல்வேண்டுமென்மனையடைதல்வேண்டும்
தொன்மறைமுதல்வமுற்றத்துறந்தவர்துணைவவென்றுப்
பொன்மதின்மிதிலைவேந்தும்புரையறுமறைவலானும்
பன்மலர்தூவிப்பல்காற்பணிந்தனர்பாயினாரே. ௪

முத்தொழினடாத்தற்காகமூவுருக்கொண்டுசிற்கும்
பைத்தவாளரவப்பள்ளிப்பாற்கடற்பரமனாங்கே
எத்தகையவர்க்குந்தோன்றாதிலங்குமீருருக்கொண்டாங்கண்
அத்தகையிருவரில்லுமடைந்தனனருளின்மன்னோ. ௫

பரவியும்பணிந்துமின்னம்பழமறைகாண்டற்கெட்டா
ஒருதனிமுதல்வனம்பாலுறுவதற்கம்மயாமுன்
புரிதவமென்சொலென்றுப்பொருவிலாச்செல்வராய
இருவருமுற்றவோகையாவரேயியம்பற்பாலார். ௬

உள்ளமுமுரையுஞ்செல்லாதோங்கியபரமாநந்த
வெள்ளமாய்நின்றதோன்றல்விரிதிரைக்கங்கைவெள்ளம்
துள்ளியகமலப்பொற்றாள்சுழித்துமட்டொழுகுமந்தண்
வள்ளிதழ்ப்போதுதூவிவாழ்த்தினர்வணங்கலுற்றார். ௭

இருபிறப்பாளனேற்றவிலைமலர்கனிநீர்கொண்டு
புரிதலுற்றனனாற்பூசைபூம்புகையெடுத்துத்தெய்வ
விரைகமழ்மலருஞ்சாந்தும்விழுச்சுவையமுதுங்கொண்டு
வரையெனத்திரண்டதிண்டோண்மன்னவன்வழிபட்டானால். ௮

வழிபடுமறைவல்லோனும்வாங்குவிற்றடக்கைவேந்தும்
அழிவில்பேரின்பமெய்தவருள்புரிந்தாழிவேலிச்
செழுநகரடைந்தான்றெய்வத்திருமறைவழுத்தநின்ற
முழுமணிவண்ணனென்னமுனிவரன்மொழிந்தான்மாதோ. ௯

மிதிலைக்குச்சென்றவத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧௫௭௦.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௫௦-வது, சுருதிகீதையுரைத்தவத்தியாயம்.

---

### கலிவிருத்தம்.

உரைகடந்தவொருதனிச்செல்வனைத்
தெரியநான்மறைசெப்புவதெங்ஙனம்
விரியமற்றிதுவிள்ளுதல்வேண்டுமென்
றரசுகேட்பவருந்தவன்கூறுவான். ௧

கண்ணகன்றகடற்புவிகாத்தருள்
அண்ணலானையரசமற்றன்னது
நண்ணிமுன்னநாரணர்தங்கடேத்
தெண்ணுமீர்ந்தமிழ்யாழ்முனிகேட்டதால். ௨

சனகனாதிதபோதனர்க்கீறிலா
வினையெறிந்துவிளங்குசனந்தன
முனியெடுத்துமொழிந்திடப்பட்டதால்
இனிதுகூறுதுமிங்கென்றியம்பினான். ௩

உயர்நலத்திற்றருமுலகேழுமுண்
டயிலெயிற்றவரவணைமீமிசைப்
புயலெனத்துயில்பூமகள்கொண்கனைத்
துயிலெழுப்பினதொன்மறைவாழ்த்தின. ௪

வியக்குஞ்செல்வவிரைமலர்மெல்லியல்
நயக்குமார்பங்ளினமலர்ந்துபார்
பயக்குமுந்திப்பாமவிம்மன்னுயிர்
மயக்குமாயையின்மாற்றிடவேண்டுமால். ௫

முடியுமாரமுமொய்கதிர்ப்பட்டமும்
தொடியுஞ்செஞ்சுடர்தூற்றுபொன்னூகல்போல்
படியுநீருங்கனலும்பவனமும்
நெடியவானமுநின்னலதில்லையால். ௬

திருந்துநின்கதைத்தெள்ளமுதத்தினைப்
பரிந்துநாளும்பருகுவதல்லது
வருந்தியைம்பொறிவாடுறவீழ்சரு
சருந்துவார்கொலறிஞர்களாழியாய். ௭

பகைத்துநாடோர்பற்றுமாறற்றுனே
அகத்துநாடோராயவிருவரும்
நிகர்த்துன்சேவடிநீழல்வந்துற்றனர்
மிகுத்தநின்னிலைவிள்ளவல்லேங்கொலோ. ௮

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

மடலவிழ்கமலம்பூத்தமழைமுகிலனையாய்மற்றுன்
தடமலரனையசெம்பொற்றாணிழலடைந்தாரன்றே
விடமுமிழ்கனற்கட்பேழ்வாய்வெருவருமுருவக்கூற்றின்
அடுதிறல்வெகுளிவேகத்தாழன்மூழ்கலாரே. ௯

விட்டலர்பசும்பொற்றோட்டுவேரியங்கமலத்தோனும்
எட்டிநின்னிலைமையின்னுமிற்றெனத்தெரிதரேற்றான்
வட்டவாய்த்திகிரிச்செங்கைவள்ளலவ்விரிஞ்சனினப்
பட்டவர்தெரிகிற்பார்கொல்பார்க்கினின்னிலைமையம்மா. ௧௦

புனிதமற்றுன்னையல்லாப்பொருள்பரப்பிரமமன்றால்
எனவெடுத்துரைப்பதல்லாலீரேறுதோற்றமின்றித்
தனிமுதலாகிநின்றசச்சிதானந்தமூர்த்தி
நினைவருஞ்சுடரேநின்னைநிகழ்த்துமாறறிகிலேமால். ௧௧

என்றனமறைகளம்மவிம்முறைமறைகளெல்லாம்
நன்றறிவியாதனல்யாழ்நாரதனவில்க்கேட்டு
மன்றமற்றெனக்குச்சொற்றான்மானவேலரசவென்றுத்
தன்றுணையின்றிநின்றதபோதனன்சாற்றினனே. ௧௨

சுருதிகீதையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௫௮உ

---

# ருக-வது, விருகாசுரனைக்கொலைபுரியத்தியாயம்.

---

## அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இரப்புறுமிறைவற்றாழ்வோரிருநிதியெய்துமாறும்
திருப்புணரிறைவற்றாழ்வோர்செம்பொருள்விழையாவாறும்
விரித்திடவேண்டுமென்றுவிரிதிரைப்பரவைமுந்நீர்
வரைப்பெலாம்புரப்போன்கூறமாதவன்வழங்கலுற்றான். ௧

தருமனிவ்வண்ணங்கேட்பத்தழைந்தவீட்டின்பம்யாவர்க்
கருள்செயவிழைந்துநின்றேமாங்கவரடையப்பட்ட
பொருளெலாங்கவர்வம்யாமேபுரவலவென்றுசெங்கட்
கருமுகிலன்னகண்ணன்கனியிதழ்விண்டுசொன்னான். ௨

ஆதலானழிவொன்றின்றியதிசயமாகிநின்ற
மேதகுபரமானந்தமேவுமாவிழைந்துநின்ற
தீதிலாவுணர்வினார்பாற்செறியுமவ்வெறுக்கையாவும்
தாதுலாந்துளவத்தாமத்தற்பரனகற்றுவானே. ௩

புயலுறழ்கவிகைமன்னபொருவிலாத்தனிவீட்டின்பம்
வெயில்பொழிமணியினோடுவெண்டிரைக்கடலிற்றோன்றும்
குயில்புணர்கொழுநனீவான்குன்றெனப்பணைத்தகொங்கை
மயிலியல்பாகத்தண்ணல்வளர்பொருள்வழங்குமாதோ. ௪

அரவணைத்துயிலுமம்மானளிக்கலான்விரைவின்யார்க்கும்
வரைமயின்மருவுபாகனாகலான்வண்டுண்கொன்றை
விரைகமழ்வேணியீசன்விழைந்ததுவிரைவினல்கும்
ஒருகதையுரைக்குதுங்கேளொற்றைவெண்கவிகைவேந்தே. ௫

## கலிவிருத்தம்.

விரைந்துவிருகாசுரன்விளங்குதனதாகம்
அரிந்துபகலாறெரியழற்றலைசொரிந்தான்
கருந்தலையறுப்பவருகண்ணுதல்விலக்கா
வரந்தருதும்வேட்டதுவழங்கெனமொழிந்தான். ௬

துப்பினொடுமுத்தலைசுருட்டுகடல்சுற்றும்
இப்புவியின்வானினெவர்சென்னிமிசையேனும்
முப்புரமுருக்குதிறன்முக்கணிறையென்கை
வைப்பினவர்சாவுறவரந்தருதியென்றான். ௭

அன்னதுகளிற்றுரிவையண்ணலுமளித்தேம்
என்னவதுதேர்தரவிளம்பிறைபுனைந்தோன்
சென்னிமிசையேதனதுசெய்யகரம்வைப்பான்
உன்னியெழமுக்கணிறையோடினன்விரைந்தே. ௮

அளித்திடும்வரத்தினைவளித்திடநறுந்தேன்
துளித்திடுகடுக்கையொடுதூநிலவெறிக்கும்
இளைத்தமதிவேணியரனெவ்வுலகுமோடிக்
களித்தைவிபலிக்கொடியின்சாரிடைசார்ந்தான், ௯

சிந்தவமுதத்துவலைதிங்கண்முடிவைத்தோன்
வந்துபுகல்புக்கிடலும்வாளவுணன்முன்னம்
உந்துதிரைவேலியுலகுண்டமணிவண்ணன்
அந்தணரெழிற்குமாரஞகியெதிருற்ருன். கO

வாட்டிறல்விளங்கவுணர்மன்னனைவழங்கா
ஒட்டமெவனென்னவவனுற்றதுகிளப்பத்
தீட்டரியவெண்முறுவல்செய்துகைபுடைத்துச்
சூட்டரவமீமிசைதுயின்றபுயல்சொல்லும். கக

வாய்விரியருக்கமலர்மாலைதலைசூடாக்
காயழல்பரந்தசுடுகாடெழிலரங்காப்
பேயொடுநடிக்குமொருபித்தனுரைமெய்யோ
ஆய்மறைசொறக்கனுரையாசுறுதலுண்டோ. கஉ

மின்னெழுகுகொற்றவடிவேலுழவமற்றுன்
சென்னிகரம்வைத்ததுதெளிந்திடுதலன்றே
கன்னிலைமையித்திறமுணடுதியெனத்தன்
மன்னியதடக்கைதலைவைத்தவுணன்மாண்டான். கங

நன்றெனமகிழ்ந்தமரர்நாண்மலர்பொழிந்தார்
வென்றிமழுவாளனும்வியந்தனனடந்தான்
மன்றல்கமழ்தண்டுளவமாயனுமகன்ருன்
என்றுமுனிபுங்கவனெடுத்தனனிசைத்தான். கச

விருகாசுரனைக்கொன்றவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கருகூசு.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ருஉ-வது, பிருகுமுனிசென்றவத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

முருகுலாமலரினன்கொன்முளரியங்கண்ணினன்கொல்
உருகெழுமழுவலான்கொலுயர்பரம்பொருளாவானென்
றருமறைமுனிவர்தேவரைந்தவித்துயர்ந்தவாற்றற்
பிருகுமாமுனிவன்றன்னைப்பெட்பொடுவினுதல்செய்தார். க

மூவரின்முற்குணத்துமுழுமுதல்யாவனென்ன
ஓவறவினிதிஞய்வலுடன்றுமற்றேஞர்சாவம்
ஏவினன்ஞேரின்யாமுமெளியமோவுரைமினென்ஞத்
தேவுமெய்த்தவக்குன்றன்ஞன்சென்றனன்விரைந்துமன்ஞே. உ

அந்தணன்மலர்மேலானையடைந்தனன்வணங்காநிற்பத்
தந்தையைவணங்காநிற்றறக்கதேயென்னக்கட்டிச்
சிந்துபுளினக்குக்கோயிறீர்கெனச்சினந்துசெப்பிக்
கொந்தழன்மழுவலாளன்குளிர்வரைச்சாரல்சார்ந்தான். ௩

சார்ந்தனனன்னகாலைத்தழல்வணனுமையாள்கொங்கை
ஆர்ந்தனனின்பந்துய்க்குமமைதியென்றறிந்தன்னோர்க்குப்
பேர்ந்திருகுறியும்வீழப்பெரிதுழைத்தகறலோடும்
ஓர்ந்துமுக்கணனழைப்பவொய்யெனப்பெயர்த்துய்வந்தான். ௪

உற்றவிம்மறைவலோனம்முடன்பிறப்பென்றுவெவ்வாய்ப்
புற்றரவணிந்தோனீத்தோற்புல்லுவானுறலுந்தீண்டேல்
நிற்றிநீதூய்மைநீத்தாயென்னலுநீடுசெந்தீ
நெற்றியிற்கண்டிறந்துநீடழறோற்றிநின்றான். ௫

மாதவனடுக்குறாதுவளர்தழற்பெருவிறற்கண்
வேதனுறுசெந்தீயேவிவிழித்தழல்செகுத்துமற்றும்
ஓதுநான்மறையோர்போற்றுமுயர்பிராமணியதெய்வம்
ஆதனீயொழிகவென்றுவறைந்தனன்கடுகிச்சென்றான். ௬

அறங்கரைநாவினன்போயலம்புபாலாழிவந்து
பிறந்தவின்னமுதின்சாயற்பிறைநுதலரிவைவாழைக்
குறங்கின்மேற்சென்னிவைத்துக்கொண்டலங்கொழுந்துபோல
உறங்குமப்பரமன்மார்பினுதைத்தனனென்பமன்றே. ௭

தடங்கடலுலகமுண்டதனிமுதலெழுந்துமின்னின்
சுடர்ந்தபொற்றொடிசூழ்செங்கைத்துணைமலர்கூப்பிநீவந்
தடைந்தமையறிந்திலேன்யானருமறையந்தணாள
கிடந்ததுபொறுத்தியென்றுகேண்மையினியம்பினனால். ௮

ஒருநிலைபெற்றவுள்ளத்துயர்முனிதலைவமற்றுன்
மருநிலைபெற்றபொற்றாமரையடிபட்டவாற்றால்
திருநிலைபெற்றதாலென்செய்யதார்மார்வமென்றான்
தருநிலைபெற்றவானந்தாழ்ந்தபொற்றாளம்மானே. ௯

கண்டனன்முனிவன்றெய்வக்கங்கையங்கரையினெய்தி
விண்டனனிகழ்ந்தவெல்லாம்விழுத்தவர்க்கிழவர்கேளா
ஒண்டிறலாழியானேவுயர்பரம்பொருளாமென்னாக்
தொண்டனர்கொண்டுநெஞ்சங்குழைந்தனர்பாவினாரே. ௧௦

பிருகுமுனிசென்றவத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௧௬௦௬.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௫௩-வது, இறந்தமக்களைத்தந்தவத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

விரைசெய்பூந்துளவத்தண்டார்விண்ணவன்விளையாட்டின்னும்
உரைசெயவொன்றுகேட்டிவொலிகடலுலகந்தாங்கும்
வரைசெய்தோண்மன்னவென்றுவாண்முகமலர்ந்துவாரித்
திரைசெய்தெள்ளமுதுங்கைப்பத்திருமுனிசெப்பலுற்றான். ௧

மோதுவெண்டரங்கவேலைமுற்றியதுவரைமூதூர்
ஓதுநான்மறைவலாளனொருவன்வந்துதித்தபோதே
காதலங்குழவிமாயக்காவலன்கடைக்கொண்டேகி
ஆதகாதரனேயென்னாவழுதழுதாற்றினானால். ௨

இளம்பசுங்குழவியோரெட்டிறந்துபாடெய்தவிவ்வா
றுளங்கசிந்துருகிமீட்டுமொன்பதாங்குழவிதுஞ்ச
வளங்கெழுவேந்தன்கொற்றவாய்தலிற்கொணர்ந்துசென்று
துளங்கியமறைவலாளன்சோர்ந்தனன்புலம்புவானால். ௩

அல்லலுற்றழுங்குகின்றவந்தணன்வதனநோக்கி
மல்லலங்குழவியிங்ஙன்மாய்ந்திடாவண்ணங்காப்ப
வில்வலாரில்லைகொல்லிவ்வியனகர்ப்பரப்பிலென்னாப்
பல்லுளைப்புரவித்திண்டேர்ப்பார்த்தனாங்கியம்பினானே. ௪

அருமறையந்தணாளனவ்வுரைகேட்டலோடும்
ஒருகுழையொருவன்றன்னினோங்கலான்மாரிசாத்த
விரைமலர்த்தாரினானின்வில்வலாய்கொல்லோசெங்கட்
குரிசினீயென்றுநெஞ்சங்குழைந்தனன்கூறினானே. ௫

அலப்படையவனுமல்லேனதிர்புயன்மாரிகாப்ப
மலைக்குடையெடுத்துநின்றமணிநிறமாலுமல்லேன்
நலத்தகுமறைவலாளநானிகல்விசயன்மற்றென்
சிலைத்தொழில்காண்டியென்னாத்தேர்ந்துரையாடலுற்றான். ௬

எழில்வளர்குழவிதோன்றினினியுயிர்காப்பல்காவா
தொழிவனேலழலின்மூழ்கியுள்ளுயிர்துறப்பலென்னா
மழலைவண்டுழலுந்தாரோன்வஞ்சினமுரைப்பக்கேட்டாங்
கழுகுரலந்தணாளனகன்மனைகுறுகினானால். ௭

அங்கமோராறுந்தேர்ந்தவந்தணனன்பின்வேட்ட
கொங்குடைந்தொழுகுமன்றற்குழற்கருக்கொண்டுபத்தாம்
திங்கள்வந்துற்றதாகச்செம்மணிகாத்தியென்று
வெங்கொலைபழுத்தபோர்வில்விசயனுக்கியம்பிமீண்டான். ௮

எர்கனிந்தொழுகுமாதினீற்றறைமருங்குமுற்றும்
ஆரமர்கடந்தவெம்பியடுசரக்கூடமாக்கிக்
கூருறுபகுவாய்வெய்யகூற்றமுங்குலுங்கியஞ்சக்
கார்முகங்குழைத்துநின்றுகாத்தனன்பார்த்தன்மாதோ. ௯

வேணவாத்தழைந்துமொய்த்தவெண்ணகைக்குமுதச்செவ்வாய்ப்
பூண்முலைமாதரெல்லாம்பொம்மெனப்பொருமியேங்க
மாணெழில்கனிந்தபேதைமாதிளவயிறுவாய்த்த
காண்வருகுழவிதானுங்காண்கலாக்கரந்ததன்றே. ௧௦

கூற்றுயிர்வாரும்வண்ணங்கொடுஞ்சிலைகுழையவாங்கிக்
காற்றுறழ்கலினமான்றேர்க்காளைநீகாத்தவாற்றால்
தோற்றியகுழவிமெய்யுந்தோன்றலதொளித்ததேயென்
றூற்றலனாகிமற்றவ்வந்தணனாற்றினானே. ௧௧

விற்றிறனன்றுகாப்பவில்வலாரிலைகொலென்னும்
சொற்றிறனன்றுகாத்ததொழிலுநன்றம்மவென்னாப்
பற்றலர்பரவுநோன்றாட்பார்த்தனைப்பலகானோக்கிக்
கற்றுணர்மறைவலாளன்கரைந்தனன்கலுழ்ந்தானன்றே. ௧௨

அலைதருந்துயரிற்றாழ்ந்தவந்தணன்குழவியீரேழ்
உலகமுந்தேடிக்காணாதொள்ளழற்புகுவலென்னா
மலைகொலாமென்னவீங்கிவனப்புவீற்றிருந்தவார்பொற்
சிலைகுலாந்திண்டோட்பார்த்தன்செந்தழல்வளர்த்தானங்கே. ௧௩

பாட்டிளஞ்சுரும்புமூசுபனிமலர்க்கானஞ்செந்தீ
ஊட்டியகுரிசின்மற்றாங்கொள்ளழற்புகுவானிற்பக்
காட்டுவெங்குழவிதன்னைக்காண்டிநீயென்றுகண்ணன்
கோட்டினிற்செய்ததேர்மேற்கொண்டனன்போயினானால். ௧௪

ஆழிமால்வரையினப்பாலடரிருட்பிழம்பிற்செல்லா
ஆழியந்தடந்தேர்பூண்டவலங்குளைப்புரவிநிற்ப
ஆழியைவிடுத்தான்செஞ்சுட்டாயிரந்தலையநாகத்
தாழிவாய்த்துயிற்சிநீத்தவாயிரஞ்செங்கணம்மான். ௧௫

ஒள்ளழற்பரிதிகோடியுட்கும்வாளொளிய்நேமி
அள்ளிருட்பிழம்புநக்கியலர்கதிர்க்கற்றைதூற்றப்
புள்ளியகலினமான்றேர்ப்பொருக்கெனப்பறந்துபொங்கு
வெள்ளிவெண்டரங்கமாடுவிரிகடலிறுத்ததன்றே. ௧௬

கலிநிலைத்துறை.

பின்னல்வெண்டிரைப்பெரும்புறக்கடன்முகட்டிடையே
மன்னுசெங்கதிர்மணிமுடியாயிரங்கவித்த
பன்னகத்தின்மேற்பணைப்புயமெட்டொடுங்கிடந்த
கன்னியந்துழாய்க்கருங்கடல்கண்டனர்தொழுதார். ௧௭

துளும்புசெஞ்சுடர்மகுடமுந்தொடியும்வார்குழையும்
வளங்கொண்மால்வரைமார்புசேர்கவுத்துவமணியும்
கிளர்ந்தபேரொளிமின்செயக்கிடந்தவப்பெருங்கார்
தெளிந்தநல்லமுதுகுத்தெனவின்னுரைசெப்பும். ௧௮

மலைகுலாவியமாணெழிற்றேளினிர்மற்றெம்
கலைகளாகியநம்மையான்காண்பதுகருதி
அலைகுலாவியவகனிலவரைப்பினுங்குதித்த
குலவுகூரெழிற்குழவிகளிவ்வுழிக்கொணர்ந்தேம். கக

நறையுயிர்த்தபூந்தாரினிர்நளிகடன்ஞாலப்
பொறைதவிர்த்துநீர்வம்மினென்றின்னுரைபுகலா
மறைவடித்தவன்மாணெழிற்குழவிகள்பத்தும்
எறிதிரைக்கடறுயின்றருளிறையவனீந்தான். உO

முழுமுதற்பொருண்முளரியஞ்சேவடிவணங்கி
மழைமதக்கரிமணிமருப்பொசித்தமாதவனும்
எழுவெனப்பணைத்தேந்துதோள்விசயனுமீளாக்
குழவிபத்துமக்குலமறையவற்கவட்கொடுத்தார். உக

உன்னுகின்றவக்குழவிகளெய்தலுமுயிர்த்தோர்
துன்னுகின்றபேர்மகிழ்ச்சியைசொலவெவர்வல்லார்
மன்னுகின்றநம்மாயவன்மகம்பலவியற்றி
மின்னுகின்றநன்னிதித்திரள்வேதியர்க்களித்தான். உஉ

வேலைமாநிலமெல்லியலரும்பொறைதீர
ஆலமன்னவாளரசொடுபொரவிளையாடு
நீலமேனியனீர்விளையாட்டுவந்தனனல்
கோலவார்குழற்கோதையர்குழாத்தொடுமணந்தே. உங

இறந்தமக்களைத்தந்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கரு௨௩.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ருச-வது, புனல்விளையாட்டத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

போர்விளையாடுகூர்வேற்புரவலகேட்டியென்னுச்
சீர்விளையாடுபொற்பூந்திருப்புணர்மார்வத்தண்ணல்
கார்விளையாடுதண்ணங்காடுசூழ்மதுரைமூதூர்
நீர்விளையாடுவண்ணநிகழ்த்துவன்முனிவன்மாதோ. க

### கலிவிருத்தம்.

எவ்வமற்றுறையெண்ணிரண்டாயிரம்
கொவ்வைவாய்ச்செழுங்கோதையரின்புற
ஒவ்வொருத்தருக்கொவ்வொருகாந்தனுச்
செவ்விவாய்ப்பத்திகழ்ந்தனன்செங்கணுன். உ

காந்தண்மெல்விரற்காரிகையாரொடும்
பாந்தண்மேற்றுயில்பண்ணவன்பல்பிடிக்
கூந்தன்மாவொடுகுஞ்சரமெய்தல்போல்
சாந்தளாவுதடத்தடைந்தானரோ. ரு

ஞாலமீதுநடந்துபன்மின்னொடு
நீலமேகநெடுங்கடலாடல்போல்
சேலுலாவுகட்டேவியர்தம்மொடு
கோலிவாவிகுடைந்தனன்மாயவன். சு

வாங்குகோலமருங்கினர்வந்துற
ஓங்குநூபுரத்தாலினமாமெனப்
பாங்கர்மேவிப்படர்நடைகாண்டலும்
ஆங்குநாணியகன்றனவன்னமே. ௭

பூவின்மென்கரத்தான்முனம்புள்ளடும்
காவிவண்ணன்வருவதுகண்டுகொல்
தாவிநன்மலர்சார்ந்துறைபுட்குலம்
வாவிவிட்டுமறைந்தனவல்லையே. அ

வேறு.

அல்லியந்தாமரையாவிசுற்றினர்
மல்லியம்பற்பலர்பாடல்யாழ்பலர்
முல்லையங்குழல்பலர்முழக்கினர்புகழ்
மல்லடுபுயத்தனைவழுத்தினாரோ. எ

மந்தரநிகர்தருமலையினான்முனம்
அந்தரமழைதடுத்தாண்டவாண்டகை
எந்திரநீரொடுத்திலகுதோகையர்
சுந்தரத்தனவரைதூவினனரோ. அ

விரைதருசிவிறிநீர்மின்னனார்தன
வரைதருமாற்றின்மாமாயன்றூரைநீர்
நிரைதருமழைக்கெழினிறத்தினன்றியும்
உரைதருதொழிலினுமுவமையாயினான். கூ

மங்கையர்துகிலுறமாயனங்கையால்
குங்குமச்சிவிறிநீர்கொண்டங்கெற்றலும்
அங்கரவல்குலினழகுதோற்றலால்
நங்கையர்வாவியிறணிமூழ்கினார். க0

நீரிடைக்குளித்தெழுநேயமங்கையர்
வேரியங்குழலினிற்றூரைமேவலால்
ஒரொழுதினம்பொழிந்துருத்தவென்றெழு
காரின்மேற்பொழிவதோர்காட்சிபோன்மரோ. கக

தொண்டைவாயினர்முகந்தோற்றல்பூந்தடம்
அண்டர்கோனடைதலுமதிசெயம்பெறக்
கண்டுசேதாம்பனீள்காவிபூத்தெழு
புண்டரிகங்களும்பூத்தபோலுமே. ௧௨

மாக்கருங்கண்ணியர்வளைந்தவண்குழற்
றேக்கமழ்மலர்நனிசிதறவாடலால்
காக்களின்மரங்களுங்கமழும்வல்லியிற்
பூக்களும்பூஞ்சுனைபூத்தபோலுமே. ௧௩

மாக்கரும்புயல்புயமகிழ்ந்துநோக்குமவ்
வேற்கண்மங்கையர்முகம்விளங்கன்மீனமார்
பாற்கடனம்பியைப்பார்க்குமாசையால்
சேற்கணங்களுமலர்சேர்தல்போலுமே. ௧௪

விரைதருதாரினன்விளங்குதோளிணை
குரைதருபுனலவர்குடைந்துநோக்கலால்
திரைமிசைமாதரிற்சிதைந்துளேமெனு
வரைமிசைகுவளைபோய்மலர்தல்போலுமே. ௧௫

பங்கயவாவிநீர்படிந்தபாவையர்
குங்குமமான்மதங்குளிர்வெண்சாந்தளாய்ப்
பொங்குநீர்செந்நிறம்பொருந்துசோணையும்
கங்கையும்யமுனையுங்கலத்தல்போலுமே. ௧௬

கழையணிதோளினர்காமுற்றவ்வழிக்
குழகனைவளைத்தனர்குழுமியங்கையால்
எழிலியைப்புணர்ந்துநின்றியங்குமின்னெனத்
தழுவினர்வாசநீர்தாமூழ்குவினர். ௧௭

குருதிவேற்கண்ணினர்குங்குமத்தநீர்
பொருதிறன்மாயவன்புயத்திற்றூவுதல்
வருகதிர்நீலமால்வரையின்மீதிளம்
பரிதியின்கதிர்க்குழாம்பாய்தல்போலுமே. ௧௮

கன்னியர்துளவணிகண்ணன்மேனிமேல்
பொன்னவிரணியினூர்பொழிதல்வாசநீர்
மின்னினங்களுநனிமிடைந்துமேகமேல்
துன்னுவெண்டாரைநீர்சொரிதன்றேற்றுமே. ௧௯

நீளொளிப்புயத்தினீர்நிறைந்தகங்கையாள்
தாளினிற்றவழ்ந்துநற்றகைபெற்றுளன
வாளினிற்பொலிவிழிவாணிப்பேர்நதி
தோளினிற்காண்வரத்தோற்றல்போலுமே. ௨௦

சளிதருகண்ணியர்கரையின்மீதுறத்
தெளிதருபுனற்றுளிசிதறல்பூங்குழல்
தளிதருமுகிற்கணஞ்சார்ந்துதண்ணிலா
ஒளிதருமுத்தினமுகுத்தல்போலுமே. உக

இன்னணம்புனல்விளையாடியின்னகைக்
கன்னன்மென்றனையசொல்லியருங்கண்ணனும்
வன்னநுண்டுகின்மலர்மாலைசாந்தெழிற்
பொன்னணிமணியணிபுனைந்துவைகினார். உஉ

வெண்ணகைமடந்தையர்விளங்குநல்லெழிற்
கண்ணனையருள்பொழிகமலக்கண்ணனை
அண்ணலையேநினைந்தழிவிலாநெறி
நண்ணினரத்திறனவிலுவாமரோ. உங

தரவுக்கோச்சகக்கலிப்பா.

பள்ளத்தினிற்பரந்துபாய்புனல்போன்முன்னமலை
கள்ளத்தினுண்டநங்கள்கண்ணனுழைபோய்த்திரும்பா
உள்ளத்தராகியொப்பிலுருவமடவார்விரக
வெள்ளத்தினுள்ளழுந்திமெலிந்துசிலவிளம்புவரால். உச

மன்றலெறிநறுந்துளவமதுமாலைவேட்டுருகித்
தென்றலுழுவைப்போத்தாற்றெருமாலுற்றுமெனவே
கன்றுகொடுநனியுதிர்த்தகண்ணனெழில்காதலித்தோ
அன்றிலெழிற்குலமெல்லாமயர்ந்துறங்காதார்ப்பதுவே. உரு

பண்ணீர்மைகொண்டசெய்யபவளவிதழ்வாய்மலராள்
எண்ணீர்மைகொண்டிலகுமிருகடைக்கணாலெளியேம்
உண்ணீர்மைகொண்டதனியொருமுகிலைவுண்ணினைத்தோ
கண்ணீர்மைசிந்தநனிகரைகின்றிகழறுமே. உசு

ஆரமணியீங்கெறிவாயணிவளைக்கைபோகநிற்பாய்
நீரதனினவியாதநெடுந்தழலையுள்ளமைப்பாய்
ஈரமுறுவெண்மதியமெழுவிரவினினிதுறங்காய்
வாரிதியேயெங்களைப்போன்மாயனையேன்வேட்டனையே. உஎ

கூறாய்கொன்மலைநீயுங்கோசநகைசேர்புயலின்
வீறாரும்புயக்குவட்டின்மேவமனம்வைத்தனையோ
மாறாதுசாந்தெறிந்தமாமழைக்கணீரருவி
ஆறாகியொழுகுபரிசசையாயேநிற்குதியே. உஅ

கண்ணனெனுங்கருணையலைக்கார்க்கடலைக்காணாமல்
எண்ணமிகயாக்கைநனியிளைத்தயருமெங்களைப்போல்
தண்ணென்னுநீர்க்கடலாந்தலைமகனைக்காணாமே
வண்ணநதிகாணீரும்வற்றிமெலிவுற்றீரோ. உகூ

தாதலருந்தேமாவின்றளிரருந்துகோகிலமே
ஓதுநசையுற்றோர்களுனைவெறுப்பரானாலும்
கோதறுதீங்கழையிசைத்தகொண்டலொத்துக்கூவுதலான்
காதல்பெறநினக்கென்னைகைம்மாறுசெய்குவமே. ௩௦

நந்தாதுவளியருந்துநாகணையின்மீதுதுயில்
கொந்தார்நறுந்துளவக்குரிசிலுடன்கூடினையோ
சந்தாடவியின்மிசைமேற்றவழ்ந்துவருந்தண்ணெனுஞ்சீர்
மந்தாநிலம்மெனுங்கால்வருத்துதனின்னீர்மைத்தோ. ௩௧

மூரணிலவாலந்தண்முகமதியான்மோகவிருள்
சேரும்வகையேயெமக்குச்செய்தகன்றமாயவனை
ஈரமதியேநீயுமெய்தமதியுண்ணினைந்தோ
காரிருள்கால்சீக்கவருகலையிழந்துவாடுவதே. ௩௨

போதிருக்கும்புரிகுழலாள்புகழ்ந்துபுணர்மான்மருவும்
தூதுரைக்கவந்தனையோதோயானீங்கும்மையெனும்
தீதுரைக்கவந்தனையோசெங்காலமடவனமே
ஏதுரைக்கவந்தாய்நீயியம்புதியென்றோதினரால். ௩௩

கலிவிருத்தம்.

கொத்தலர்ந்தகொழுந்தொடைப்பூங்குழற்
றத்தைமென்மொழியார்தவமென்சொல்கேன்
மத்தவெங்கரிமாய்த்தவம்மாயனை
இத்திறன்புகன்றெய்தினர்முத்தியே. ௩௪

நண்ணுமுத்திமாணுமந்தனைச்சொலின்
வண்ணமுற்றமணிநிறவண்ணனைக்
கண்ணிற்கண்டுங்கலந்துங்கழறியும்
உண்ணினைத்தும்வீடோங்கலரிதுகொல். ௩௫

நல்லறத்துருவாகியநாயகன்
மல்லலுற்றவறம்பொருள்வாழ்வுடன்
இல்லறத்தினர்க்கின்பமுமுண்டெனச்
சொல்லலுற்றனன்போன்றுதுலங்கினான். ௩௬

பாரின்மேற்பகைபாற்றுபசுந்துழாய்
வேரியந்தொடைவிண்ணவன்வேட்டவர்
ஈரெண்ணாயிரரென்றுசொலெண்ணொடும்
சேருநூற்றிருநான்குதெரிக்கினே. ௩௭

மன்னுமொவ்வொருமங்கையரைந்தொடைந்
தென்னுநல்லெழிலேய்ந்தபுதல்வரைப்
பொன்னகர்ப்புலவோர்புகுந்தாரெனப்
பன்னுதெண்டிரைப்பாரிலளித்தனர். ௩௮

அரசகூறுமரிவையர்தங்களில்
பெருமைசேர்ந்துபிறங்குமுதன்மையோர்
உருவமார்ந்தவுருக்குமிணிப்பெயர்த்
திருவனாண்முதற்செப்புமவ்வெண்மரே. ௩௯

கண்ணனல்கியகாதலர்தம்மினற்
பண்ணமைந்தபரிதிகழ்மாரதர்
அண்ணலம்மலராங்கணைவேண்முதல்
எண்ணிரண்டொடிரண்டெனவென்பவே. ௪௰

கலிநிலைத்துறை.

அன்னமைந்தருக்கரும்பெயர்கூறினைங்கணைவேள்
பன்னரும்புகழ்சேரநிருத்தனற்பானு
மன்னுநல்லெழிற்காந்திமான்சாம்பன்வேல்வரூஉதன்
பொன்னங்குன்றெனப்புயப்பிரகபானுபுட்கரனே. ௪௧

அருணனற்கவிதேவபானுப்பெயரரசன்
விருகன்சித்திரபானுவேன்மித்திரவிந்தன்
மருமலர்த்தொடைமதிச்சனந்தனன்சுரதேவன்
இருநிலத்தவர்புகழுநிர்க்குரோதனென்றிசைப்பார். ௪௨

தோடுவாய்விரிபூங்கணைவேளெனுந்தோன்றல்
மாடநீணகர்மாதுலன்மகண்மூலமணந்து
பீடுசேர்பதினாயிரங்கரிவலிபெறுஞ்சீர்
ஆடல்சாலநிருத்தனையளித்தனனன்றே. ௪௩

ஐயதாரணியநிருத்தனளித்தருளரசன்
வையமேபுகழ்வச்சிரன்வச்சிரனெனும்பேர்ச்
செய்யதாமரைக்கண்ணினானொருவனுந்தெரித்த
வெய்யசாவத்தீக்குய்ந்தனன்விளிவுறாதன்றே. ௪௪

வாரிசூழ்புவிமுழுவதுங்காத்தழிமதுப்பாய்
தாரினானெழில்வச்சிரனளித்தருடநயன்
காரினேர்கொடைத்தடக்கையான்கயல்விழிமடவார்
எரினான்மதனெனுமிறைபிரதிவாகென்ப. ௪௫

பிரதிவாகுவென்றுரைதருபெயரினான்பெறுஞ்சேய்
இரதிநாதனுமேக்கறுமெழிறிகழிறையோன்
கரதிசாமுகக்களிற்றினான்கலியிருள்காயும்
வரதிவாகரன்மானவேற்சுவாகுமன்னவனே. ௪௬

தேங்கொடாரினான்சுவாகுநற்றவத்தருள்சிறுவன்
ஓங்குமந்தரத்தடம்புயனுக்கிரசேனன்
வாங்குவிற்கையம்மன்னவன்மதலைவாளரவம்
தாங்குமிந்நிலம்புரந்தருடருசதசேனன். ௪௭

இன்னவாறுநல்லறத்தினராயினராயக்
கன்னியந்துழாய்க்கருமுகின்மரபினிற்பிறந்தார்
மன்னர்மன்னவயாவதர்யாவருமதிக்கின்
பொன்னினுட்டகத்துறைதரும்புலவர்தங்குழுவே. சஅ

வேறுவேறெடுத்தெதுகுலவேந்தர்பேர்விளம்ப
ஆறுகோடியாண்டாயினுமறைவதற்கரிதால்
மாறுநீங்கியமன்னவவொன்றுமேன்மருவு
நூறுகோத்திரமாயதவ்வெதுகுலநுவலின். சகூ

ஆன்றசீர்திகழ்யாதவராளப்பிலாவருக்
கூன்றநல்லறிவோதுவித்துயர்தருங்குரவோர்
மூன்றுகோடியும்பதினொருநூறுமுன்மருவ
என்றவெண்பதுமெட்டுமென்றிசைக்குமெண்ணினரால். ரு0

நோற்றிருந்தயனான்றுதிநுவலவுமெட்டா
தூற்றிருந்தியோகியருளத்துவட்டெழுமமுதன்
போற்றிருந்தவர்புங்கவர்புவியினர்காண
வீற்றிருந்தனன்றுவரையினெங்கணும்விளங்க. ருக

கொன்பொருந்தயிற்கொற்றவகுரைகடற்புவிமேல்
தன்பெருங்கதைத்தெள்ளமுதத்தினைத்தவத்தால்
அன்பினஞ்செவியகமடுத்தருந்தினராழியா
இன்பமெய்துவானெதுகுலத்துதித்தனனிறையோன். ருஉ

இன்னமாக்கதைகேட்குநரிசைக்குநரெவரும்
மன்னவேட்டனவேட்டனயாவையுமருவி
மின்னுலாமணிவேலைசூழ்விபுலம்வீற்றிருந்து
பின்னுமால்பரந்தாமமேபெறுகுவர்மாதோ. ருங

புனல்விளையாட்டத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கசுஅஉ.

க0-வது, ஸ்கந்தம் முற்றிற்று.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## கக-வது, ஸ்கந்தம்.

## க-வது, இருப்புலக்கைபெற்றவத்தியாயம்.

கலிநிலைத்துறை.

எண்டரப்பெரிதாகியயாதவர்குலனும்
மண்டுவெஞ்சமம்விளைத்துயிர்மடிதரப்புணர்த்துப்
பண்டைநீணெறிப்பட்டர்தாங்குறித்தனன்பாவை
வெண்டிரைக்கடலிலப்பொறைதவிர்த்தருள்வியலன். க

தாதலர்ந்தசெந்தாமரைநறுமலர்மணந்த
கோதைசேர்தடமார்பினான்குறிப்பறிந்தாங்குக்
காதிகாதலன்முதலியமுனிவரர்களிவண்
டேமென்முருகுறைத்தபூங்காவின்வந்துற்றார். ௨

கண்ணன்காதலர்கழைசுளிகடாக்களிறனைய
தண்ணந்தாமரைச்சாம்பனைச்சூற்கொள்பெண்ணுருவா
மண்ணிமாதவர்மருங்குபோய்மற்றிவள்பெறுவ
தெண்ணியோதுமின்யாவையுந்தெரிந்தநீரென்றார். ௩

விரித்தகட்டுரைகேட்டலும்விழுத்தவமுனிவர்
சிரித்துமின்னுமிழ்செம்மணிச்சூட்டுவாளரவம்
பரித்தபாரினில்யாதவருயிரெலாம்பருகும்
இருப்புலக்கையொன்றுயிர்க்குமென்றெடுத்திசைத்தனரால். ௪

உரைப்பருந்திறற்சாவம்வந்தெய்தலுமுயிர்த்த
இருப்புலக்கைகண்டென்செய்துமெனமனங்கலங்கி
விரைப்பசுந்துணர்வேந்தனுக்குணர்த்திமற்றதனை
அரத்தினாற்பொருதிரைக்கடலினிட்டனரால். ௫

வட்டவெண்டிரைவாரிவீழ்நுண்பொடியனைத்தும்
விட்டலர்ந்தவாட்கோரையாய்விளைந்தனவெய்ய
கட்டழற்பொறிகதுவுவாளரம்பொரவரிதா
இட்டகூர்நுதியிரும்பைமீன்விழுங்கியதன்றே. ௬

விற்றடக்கையோர்வேட்டுவன்வலையகப்பட்ட
மற்றம்மீனினைக்குறைத்தலுமாங்கதன்வயிற்றின்
உற்றகூர்நுதியிரும்புகண்டொள்ளிதென்றுவந்து
புற்றராவெனப்புழுங்குவெங்கணைமுகத்தமைத்தான். ௭

இருப்புலக்கைபெற்றவத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧௬௮௧.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௨-வது, வசுதேவற்குநாரதர்தத்துவமுரைத்தவத்தியாயம்.

---

கலிநிலைத்துறை.

அன்னநாளினிலழல்சுடப்பசும்பொன்வார்ந்தன்ன
இன்னரம்புளர்யாழ்முனிவருதல்கண்டெதிர்போய்
மன்னர்மன்னவன்மானவேற்றிறல்வசுதேவன்
பொன்னந்தாதுதாழ்போதுதூஉய்ப்பணிந்தனன்புகல்வான். ௧

அரிதுமானிடயாக்கைபெற்றிடல்பெறும்யாக்கை
எரியுமின்னெனவிறந்திடுமிறந்திடாமுன்னம்
மரகதப்பசும்பாசடைத்துளவநாண்மாலைக்
கரியவன்றனக்கன்பரைக்காண்டலோவரிதே. உ

விரிதிரைத்துயின்மெய்ப்பொருள்வெளிப்படுஞான்று
வருதிநீயொருமதலையாயென்றதையல்லால்
தருதியாலுயர்தருநெறியென்றுகேட்டிலனல்
அருளவேண்டும்வீடுறுதிறனெனமுனியறைவான். ங

மனுகுலத்தொருமதியெனத்தோன்றியவிடபன்
தநயர்நூற்றுவர்தங்களிற்கவிமுதலாக
வினையினீங்கியவிழுத்தவமுனிவரொன்பதின்பர்
சினவுவேற்றிறனிமிமகமியற்றுழிச்சேர்ந்தார். ச

கலிவிருத்தம்.

புவிமீதுவணங்கிமகம்புரிவோன்
பவவேர்தெறுபாகவதர்க்குரிய
தவமாநெறிதான்மொழிவீரெனலும்
நவயோகியரோதினர்நல்லறனே. ரு

மதமாகரிமுன்சொலவந்தருள்கார்
கதையார்கறையுண்டகருத்தொடுபல்
விதமாகும்வினைப்பயன்விட்டெழில்சேர்
பதநாளும்வணங்குநர்பாகவதர். சு

அறைகின்றசராசரம்யாவுமெழில்
நிறைகின்றவுருத்திருநேயமுறும்
இறையென்றறிகின்றவிலங்குமுளத்
துறைகின்றவருத்தமபாகவதர். எ

நிகரின்றிவளர்ந்தநெடுந்திருமால்
பகருந்தனிபத்திமைபாகவதர்
புகரொன்றியபுந்தியர்பேதையருள்
நகலொன்றியநட்பிகல்வான்கருணே. அ

எண்ணும்முறையின்னவன்னவர்பால்
நண்ணும்படிசெய்யுநலத்தினர்தாம்
தண்ணந்துணர்துன்னியதாமமணி
திண்ணம்புயசெப்புறுமத்திமரே. கூ

துதிபெற்றமலர்த்துளவோன்வடிவாய்
வதிவுற்றவுருக்களின்மாத்திரமே
இதமுற்றுறைகின்றனனென்றுதொழும்
விதமுற்றவர்மேவுபிராகிருதர். க0

அறமார்மனையாரொடுமன்புசெயும்
திறமாரெழின்மேவுசிறார்களொடும்
இறையோன்பொருள்யானெனதென்பதற
உறைவோர்களுமுத்தமபாகவதர். கக

தருமாலைமலர்த்துளவத்தணியார்
உருமாலைகிகர்த்திடுமொள்ளொளிசேர்
திருமாலைவழுத்துநர்செய்யின்வினை
அருமாலையொழித்தவராரவதுகேள். கஉ

கருமத்தையியற்றுகருத்தருளத்
தருண்முற்றவழுக்கறுமற்றவுடன்
உரமுற்றறிவுற்றிடுமுற்றிடினோர்
பிரமத்தொடுமொன்றுவர்பின்னமறுர். கங

பிழையுற்றமனத்தொடுபேதைமையால்
விழைவுற்றுவிகன்மம்விளைத்தவர்கள்
தழைவுற்றசமன்படர்தள்ளவுளம்
குழைவுற்றுவருந்துவர்கும்பிதொறும். கச

வேறு.

மங்கைபாகனைவாணிகணவனைப்
பொங்குநோன்புபுரிகுநராயினும்
அங்கவர்க்குளமாரிறைமாயனென்
றங்கணேத்துநராய்ப்பயன்கொள்வரே. கரு

போற்றுகின்றபுனிதமறைமுறை
ஏற்றுகின்றங்கியற்றல்கருமமாம்
சாற்றுகின்றமறைமுறைசார்ந்திடா
தாற்றுகின்றதறையின்விகன்மமே. கசு

ஒருகருமமுமுள்ளுவதாற்றிடா
தரிதின்வைகலகன்மமென்றுமால்
கருமமாற்றுழிக்கார்நிறவண்ணன்மேல்
புரியுமன்பிலதேற்புகரெய்துமே. கஎ

உழுதுவண்டுறைதாருரவோய்புவி
முழுதுமுண்டமுதல்வனையேயன்பின்
தொழுதுதூயதொழில்புரிவோரொரு
பழுதுமின்றிப்பயன்பெறுவாரரோ. கஅ

என்றியோகியர்கூறவிறையவன்
மன்றமாணிசையான்மக்களுய்யுமா
றென்றுபோவதாரமுளங்கொள
நன்றுகூறுமெனவுநவின்றனர். ககூ

அலகில்லவறிவாயவரும்பொருள்
உலகெலாமுடலாகவுவந்துறைந்
திலகுபேர்விராட்டென்னவுமுத்தொழில்
குலவுமும்மையுருவமுங்கொண்டதே. உ0

பூவினுள்புணர்புங்கவன்றன்கலை
மேவுபூசுரர்மிக்கமறைபயில்
நாவினர்நரநாரணரென்பவர்
தாவிலாததவம்புரிந்தார்முனம். உக

தவமியற்றுதல்கண்டுசதமகன்
அவமியற்றவரம்பையர்தம்மொடு
நவமலர்ப்பொழினண்ணினனண்ணலும்
உவமையற்றமுனிவருணர்ந்தரோ. உஉ

உருவமார்ந்தவுருப்பசியாதியாம்
அரிவைமாரப்படைப்பவரம்பையர்
பொருவிலாவவர்பொற்பினைக்காண்டலும்
பெருகுகாதலிற்பேதுற்றுப்போயினர். உங

பூணினோடுபொருந்துமரம்பையர்
நாணினோடுநடந்தபினல்லெழில்
எணினோடுமிருந்தபுரந்தரன்
பாணினோடுதொழுதுபாரயினன். உச

எவர்களேனுந்தவநின்றியற்றுழி
அவர்களேயுமைத்தம்மனத்தெண்ணினோர்
பவமுறூர்பகைநீக்குவரென்னின்யார்
அவனிமேனுமக்கும்மனுர்செய்வரே. உரு

கலிநிலைத்துறை.

என்றுகூறியமுனிவரரேவலினிசைப்போர்
ஒன்றுமூருவிற்றோன்றலாலுருப்பசியெனும்பேர்
நின்றநேரிழைமுதன்மடவாரொடுநெடிய
குன்றின்வார்சிறைகொய்தவன்குறுகினனகரம். உசு

நாவியன்னதோர்நறைகமழ்நறைக்கருங்கூந்தற்
காவியன்னகட்கதிர்முலைத்திருமகள்காந்தன்
ஆவியன்னமீதுயரியவந்தணன்றனக்குத்
தூவியன்னமாயுரைத்தனன்றொன்மறைதோன்ற. உஎ

மீனமாகியுமேதினியெடுத்தவன்பிறைக்கோட்
டேனமாதியாயிச்சையிற்பலவுருவியைந்து
மானவேலவமாலுலகளித்திடும்வகைநூ
றூனகோடியாண்டறையினுமடங்குவதரிதே. உஅ

## அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

சேழ்கிளர்வெண்மைசெம்மைகிளரொளிப்பசுமைமற்றும்
சூழ்சுடர்க்கருமையென்றுசொல்லியவண்ணநான்கும்
ஊழிதோறடைவினெய்தியுலகெலாங்காணத்தோன்றும்
வாழிநான்மறைக்குமெட்டாவலம்புரித்தடக்கையானே. உக

ஓதியவண்ணத்தாதியூழியிற்பிரமசாரி
கோதறுமுறுவமெய்திக்குலவுவன்மாயனென்னுப்
பேதவெவ்வினையொன்றுதுபெட்பொடுகருதும்யோகர்
ஏதவெம்பிறவிசோரரின்பொடுநீடுவாழ்வார். ௩௦

எழிருபுவனமுண்டோனிரண்டெனவியம்புகின்ற
ஊழியின்வேள்விசெய்வார்க்குருவமுற்றுறைவனந்நாள்
ஆழிசூழ்புவியின்மாந்தருமகமுறையியற்றிச்
சூழிமால்வேழங்காத்ததோன்றலைவழுத்துவாரே. ௩க

பொன்னவிராடைமாயன்புகாறுமூன்றூழி
மன்னியகாலஞ்செங்கோன்மணிமுடிவயங்குவேந்தர்
சின்னமோடுறைவனந்நாட்டிருமறுமார்பினனைத்
துன்னுநாண்மலர்சுவித்தொழுதனர்வழுத்துவாரே. ௩உ

கருதருங்கலியினம்மகார்முகிற்கொழுந்துபோலும்
திருமகள்கொழுநனுமகீர்த்தனம்செய்யும்யோகர்
மருவுவரொருவீடென்னின்வழங்கியகலியினன்றாய்
ஒருதிருவுகமுமில்லையுரைக்கினிங்காசமன்னே. ௩௩

எனவிவைகிமியென்றேதுமிலங்குவேலரசுகேட்ப
வினையறுதவத்தின்மிக்கோர்விளம்பினர்விசும்பிற்போயார்
புனைமதிக்கவிகைச்செங்கோற்புரவலவென்றுகூறி
நனைமலர்த்தொடையநல்யாழ்நாரதன்மீட்டுஞ்சொல்வான். ௩௪

பொழிமழைபருவநூறுபொய்ப்பவெவ்வழலின்வெம்பி
எழுபரித்தேரோன்காலுமெரிமணிக்குப்பைபாய்ந்து
நிழலறக்கிடந்துகாய்ந்தநெடுநிலம்பிளக்குமெங்கும்
முழுமணிச்சுடிகைச்சேடன்முகத்தழல்கனற்றுமன்றே. ௩௫

நிலவியவண்டம்யாவுநீறெழப்பாந்தள்வெந்தீ
உலவைவந்தெறியச்சிந்துமுராறிமற்றொருநூறாண்டு
மலையொடுபொருதயானைமல்லலந்தடக்கைமானக்
கலிகெழுகருவிவானங்கல்லெனப்பொழியுமம்மா. ௩௬

எற்றுநீர்பரந்துகோப்பவிறந்திடும்பூதமைந்தும்
மற்றிறவாதுநின்றமாயையின்றலைவன்றன்னைப்
பெற்றனைமதலையாகப்பெறுவதென்பேறுசொல்லாய்
முற்றுநீருலகங்காக்குமுத்தவெண்கவிகைவேந்தே. ௩௭

பொறிமடமயிலிற்றேன்றும்பூதனையுயிருந்திங்கட்
குறுநதற்பவளச்செவ்வாய்க்கோவியர்முல்லைமெல்லன்
முறுவலுமாந்துசெங்கண்முகிலைநின்மகனென்றுள்ளல்
இறுதியுமுதலுமில்லாவிறையெனத்தெளிதிமேலோய். ௩அ

தாறுமாய்களிநல்யானைத்தடமருப்பொசித்தான்றன்னை
மாறுகொண்டெழுந்துபொங்கிமண்டமர்கடந்துவெல்வான்
சீறினர்நினைத்துவைவேற்றிறற்சிசுபாலனாதி
ஈறிலாநெறிசென்றுற்றாரெனையரென்றுரைப்பல்யானே. ௩௯

அல்லியங்கமலம்பூத்தவஞ்சனப்புயலிற்றோன்று
மல்லலைத்தெழுந்ததிண்டோண்மாயனைக்கண்ணிற்கண்டு
புல்லியுமோர்ந்துமன்புபூத்துளங்களிப்பப்பெற்றாய்
சொல்லருநெறிநீசேர்தல்சொல்வதென்சுடர்செய்வேலோய். ௪0

## தரவுக்கொச்சகக்கலிப்பா.

என்றுமுதுமறைதெளிந்தயாழ்முனிவனேகுதலும்
வென்றிவயிரப்படையோன்விதுவணிநீள்செஞ்சடையோன்
மன்றறிணிமரைமலரோன்மலர்தலைவான்வந்துற்றுக்
கன்றுகொடுவிளாவெறிந்தகார்வண்ணற்போற்றினரால். ௪௧

உந்துதிரைசூழ்முந்நீருலகின்வன்பொறைதவிர்த்தாய்
ஐந்துதலையிட்டவொருநீற்றிருபாணண்டகன்ற
எந்தைநினைதிருவுளமேலெய்துனதுதாமமெனா
முந்தைகெழுநான்மறையின்முதல்வனருள்பெற்றகன்றார். ௪௨

வசுதேவற்குநாரதர்தத்துவமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் களஙக.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௩-வது, உத்தவர்தத்துவம்வினவத்தியாயம்.

---

### கலிவிருத்தம்.

களங்கனிவண்ணனைக்கண்டுகாதல்கூர்
வளங்கொளும்வானவர்வணங்கிப்போயபின்
விளைந்ததுமவ்வழிவிண்டோரதனுக்
குளங்கொளமுனிவரனோதினனரோ. ௧

மருவிரிதுளவணிமாயனேவலால்
கருதருநிலமுறுகம்பமாதியாப்
பொருவலியாதவர்பொன்றவெவ்வினை
தருபலநிமித்தமுஞ்சார்ந்தவாங்கணே. ௨

கண்ணுறுதீயனநிமித்தங்கண்டன
அண்ணலங்கடற்றுறையாடுவோமெனாத்
தண்ணறுந்துளவணிதலைவன்சாற்றினான்
எண்ணிலாயாதவரெழுதன்பேயினார். ௩

அவ்வழிமால்கருத்தறிந்தவுத்தவன்
செவ்வழிப்படர்தரச்சிந்தையுற்றனை
இவ்வழிநிற்பிரிந்திறையுமுய்கலேன்
உய்வழியென்னையுமுடன்கொண்டேகுவாய். ௪

பைத்தவெவ்வராமிசைப்பதம்வைத்தாடிய
வித்தகவென்றுழன்வீழ்ந்துபோற்றுறும்
உத்தவனுளங்கொளவுரைத்தன்மேயினான்
தத்துவநெறிமுறைதலைவனாங்கரோ. ௫

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

ஊற்றினிற்களிறுதுஞ்சுமொளியினிற்பதங்கமாயும்
நாற்றத்தின்வண்டுவீயுஞ்சுவையின்மீனாசமெய்தும்
ஏற்றதோரிசையினாலேயிறக்குமாலசுணங்கல்வி
ஆற்றலிற்புலன்களைந்துமடக்கிடல்வேண்டுமன்றே. ௬

ஐயமிலறிவினாலேயழிவின்றியகண்டமாகி
மெய்யெனும்பொருளாமெய்ம்மைமேவுவான்கானனீர்போல்
வையகமாதியாயவழங்கியவுலகமெல்லாம்
பொய்யறுபகுதிநின்றுபோந்தவென்றெண்ணல்வேண்டும். ௭

கண்ணுறுபவற்றினாலுங்கருதநுமானத்தாலும்
எண்ணியுட்டெளிவுபெற்றிங்கேதமாயிவைகளொன்றும்
நண்ணுநற்குணங்களென்றுநாடுதலொழிந்தியாவும்
தண்ணறைதுளித்ததாரோய்சமமெனக்காணல்வேண்டும். ௮

இனிவருமேழாநாளின்யாதவர்பொருதுமாய்வர்
பனிவருகடலுமிந்தப்பதியினைமறைக்கும்வெய்ய
துனிவருகலியும்பூமான்றயருறப்பொருதுமென்னத்
தனிவருமரசுமாழ்கச்சாற்றினன்மாயப்பெம்மான். ௯

என்றலும்பிரிவிற்கஞ்சியேங்கினன்குருவைநீங்கித்
துன்னியகாட்சியானுஞ்சொல்லநுமானத்தானும்
நன்றுளந்தெளிதலெங்ஙனவின்றருளெனமுன்போற்றி
ஒன்றுமுத்தவற்குநம்மானொருகதையுரைக்கலுற்றான். ௧௦

உத்தவர்தத்துவம்வினாவத்தியாயம் முற்றிற்று.

௮௰ திருவிருத்தம் ௫௧.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

தீதிலன்மகிழுந்தத்தாத்திரேயனென்றுலகமெல்லாம்
ஓதவதூதவேடத்தொருவனையதுமுன்கண்டு
நீதிசெய்யறம்பொன்காமங்களைந்திலைசிறிதுமின்பம்
ஏதினிலடைகின்றாய்நீயென முனியிசைக்கலுற்றான். க

தரைபுனல்கனல்கால்வானந்தபனன்வெண்டிங்கள்வாரி
வரையுறையரவுமான்கான்வருகரிபதங்கமீனம்
முரலளிகணைசெய்கின்றோன்மொய்குழற்குமரிதேனீ
உரைதருபுறவுவேசியூன்கவான்றிருகம். உ

உறைந்தநூற்சிலம்பிமைந்தனூதுவண்டெடுத்தகீடம்
சிறந்தனவிவைநான்காறுஞ்சிந்தையிற்குருவென்றாக்கி
மறந்தருமிஃதுதீதாமற்றிதுநன்றாமென்றிங்
கறிந்திலனின்பமுற்றேனவ்வகையாசகேண்மோ. ந

கலிநிலைத்துறை.

பரிவின்வெட்டினுங்கல்லினும்பயன்பொறுத்தளித்தும்
புரியுநல்வகைமாறெதிர்பொருதிடாதசலத்
தருவிநீரடவிக்கனிமுதலியவளித்தும்
இருதிறத்தையுமெனக்கறிவித்ததித்தரையே. ச

களிகொளும்முருகினைக்கினுங்காண்கினுநலஞ்சேர்ந்
தொளிகொளும்பெயர்வழுத்தினுமன்னவருளத்தை
அளிகொளும்புனிதம்பெறவாக்கலுமருந்தண்
டெளிவுமப்புவினிடத்தினின்றறிந்தனன்றெரிக்கின். ரு

இருந்திராகமொடியம்பருவெறுப்பறவெறிந்து
பொருந்துகின்றனயாவையும்பொசிப்பதுமெவரும்
விரைந்துவந்தணுகாவகைவீற்றிருப்பதுவும்
திருந்துகின்றநற்காந்தியும்பெற்றனன்றீயின். சு

வளர்ந்தகாதல்வெவ்விருப்படைந்தாரெனவரினும்
தெளிந்தயோகியருயிர்க்கவையில்லெனத்தெரிந்தேன்
விளைந்தவாசமும்விளம்புநற்கந்தமுமேவி
அளைந்துவந்துமக்குணம்பெறாதநிலமென்றறிந்தேன். எ

கண்ணகன்றிடமிடத்துளவான்கடத்துளவான்
எண்ணநின்றனபோகவொன்றாயியைந்ததனால்
பண்ணுகின்றதன்மாயையிற்பற்பலபடைப்பாய்
நண்ணுகின்றவும்பிரமமொன்றாருவெனவறிந்தேன். அ

உறைவுறுவிடனின்றெனவுறையும்வானென்றால்
குறைவுறுவகைகண்டதிற்கூறுமொன்றாலும்
மறைவுறுதொருகுறையுமன்னுதுமற்றெங்கும்
நிறைவுறுதுவைகாதெனநினைந்தனன்பிரமம். ௯

அருவமாமறிவானவனுக்கைகள்பலவும்
ஒருவனாகியேயுறைகுவனென்பதையுணர்ந்தேன்
பரிதிவானவனொருவனேயாய்ப்பலகடத்தின்
மருவுநீர்தொறுநிழல்பலவாயுறன்மதித்தேன். ௧௦

திங்களோடொறும்வளர்தலுந்தேய்தலுந்தெரிக்கின்
அங்கண்மாநிலம்விளக்கும்வெண்கதிர்க்குணமதனால்
தங்குமோராறுவகைவிகாரங்களுந்தமியேன்
இங்குநாடினனுடற்கலாலுயிர்க்கிலையெனவே. ௧௧

விளங்குமெய்ப்பொருளாக்கைமேவினுமதன்குணங்கள்
உளங்கொடெண்ணினப்பொருட்கிலையென்பதுமோர்ந்தேன்
களங்கமென்பதுமதிக்கிலைகருதுமக்களங்கம்
வளங்கொள்பூமியின்சாயையென்பாரதைமதித்தேன். ௧௨

நிறைவினொடொறுங்குறைவறவமைந்தயனீர்வந்
தறையுநீடிரைகூடினுமதன்குணமடையா
துறையும்வாரிகம்பீரமுற்றென்பதையுணர்ந்திங்
கிறைவயானுமக்குணங்களையுவந்தியைந்தனனால். ௧௩

உற்றவுற்றவைமுயற்சியினுயங்கிடாதுண்ணும்
குற்றமற்றுநீண்மலையராவென்பதைக்குறித்திங்
கற்றமற்றநல்லறிஞருக்கிதுவழக்கென்னப்
பெற்றபெற்றனமுயற்சியற்றருந்தினன்பெரியோய். ௧௪

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

மடந்தையர்மொழியுங்கானமுன்கேட்டுமன்னவன்மகண்முலைமணந்தான்
கடந்திரிகலையின்கோடுபெற்றுயர்ந்தகருதருந்தவனெனல்கேட்டுப்
படர்ந்திளமறிமான்வேட்டுவன்பாடும்பண்செவிமடுத்தவன்வலைமேல்
கிடந்தனகண்டும்வெவ்விசைகேளேன்கேட்டன்மானுமகீர்த்தனமே. ௧௫

துதிதருவயவர்படுகுழிப்படுத்துந்தூகளறுபிடியையுள்ளுவந்து
மதகரிதழுவிவயவர்கைவசமாய்வயங்குதல்கண்டுமட்டொழுகும்
ததைமலர்க்குழலார்தனகிரிதழுவித்தணப்பரிதாய்மதன்வசமாய்
விதலையின்மனமாய்மயக்குறுமென்னவிடுத்தனன்புணர்ச்சிமற்றன்றே. ()

ஒளிகொளும்விளக்கின்றீப்பிழம்புணராதுணவுகொலெனவெதிர்சூழா
விளிவுறும்பசியசலபமுன்கண்டுவெய்யதித்தொழிலெனக்கருதித் [றிக்
தெளிவுகொண்முனிவராயினுங்காணிற்சிந்தைதன்வயங்கொளீஇக்கவற்
களிகொளுங்கருங்கண்மடந்தையருருவங்கருத்தொடுகொண்கிலனம்மா. ()

வஞ்சநெஞ்சினராய்த்தூண்டிலின்வலைந்தவண்சுவையூண்பெறவடைந்து
துஞ்சுதலடைந்தமீன்குழுக்கண்டுதுன்னுமைவகையெனும்வாயுப்
பஞ்சரமென்றுற்றுடலுறைவதற்காப்பசிக்கனறணிப்பதற்கன்றி
அஞ்சுவையிவையென்றவாவினுளலம்வந்தருந்துதலொரீஇயினனடிசில்,

வண்டினஞ்சிறிதுசிறிதெனவல்குமலர்தொறும்வருமுருகுவப்பால்
உண்டனதிரிதல்கண்டனன்யானுமுறைக்கினித்தொழிலழகிதென
எண்டருநகரின்மனைதொறுங்குறுகியெனதொருகரமிசையையம்
கொண்டனன்சிறிதுசிறிதெனவுவந்துகொள்கலத்தேற்றிடாதன்றே. ககூ

ஒருமரைமலரேயுவந்துமென்முருகுண்டுறைதருமொருசுரும்பரவின்
விரியிதழ்குவியம்மலரகப்பட்டுவிளிந்ததுகண்டொருநாளும்
கருதியநகரினொருமனையுறைந்துகடிசுவையுணவுவந்தருந்தேன்
மருமலர்மகுடகோடிகளிடறுமலர்புரைதருபதயுகத்தோய். உ0

கலிநிலைத்துறை.

முந்தவேயொலியாதியினொருகுணமுன்னிப்
பந்தமோடிடருற்றிறந்தன பலவென்னின்
ஐந்துசேர்குணங்களுமொருங்காசையினடைந்தோர்
உய்ந்துபோநெறியுண்டுகொலோமதித்துரைக்கின். உக

பம்பிரும்பொறிவழிமனம்பரந்துறுதடக்கி
அம்புசெய்ததன்கோணறத்திருத்துவானவன்போல்
வெம்புமைம்புலன்வழிமனம்வேட்டுதல்வெறுத்துக்
கம்பமில்லறிவாம்பொருளறிந்தனன்கருத்தால். உஉ

தாயுந்தந்தையும்வேற்றொருநகர்வயிற்சார்நாள்
நேயமாயதன்மணத்திறநேர்தரநிகழ்த்த
மேயசீருறவோர்க்குணவருத்துதல்வேண்டித்
தூயதாமெழிற்குமரிநெற்குத்துதறுணிந்தாள். உங

பெரியகைவளையார்ப்பவர்கேட்கினிப்பேதை
உரைசெய்நல்குரவுற்றவளென்பரென்றுணர்ந்தாங்
கரியகைவளைகழற்றினளொற்றுவைத்ததனால்
சருதும்வெவ்வுரைவருங்கொலென்றுறுங்குழக்கடிந்தேன். உச

துன்றிவைத்ததண்டேனுணதிழந்துசூழ்ந்தெடுப்ப
ஒன்றுமற்றவரானுயிருலந்தலமையுணர்ந்து
நன்றறிந்துபற்றெறிந்தவர்க்கொன்றையுநாளைக்
கென்றுவைப்பதுமிகையெனத்தெளிந்தனனிறையோய். உரு

நீணிறக்கொடுவேட்டுவன்படுத்தநீள்வலைவாய்த்
தாணிறப்பெடைபார்ப்பினந்துயர்தல்கண்டனுகித்
தானுமுற்றதினொருபுறவிறந்ததுதன்னால்
ஊனமுற்றிடுமெனத்தமர்கேண்மையீங்கொழிந்தேன். உசு

கலிவிருத்தம்.

சோதிமாடந்துவன்றுமிதிலைவாழ்
பேதையாமொருபிங்களையென்பவள்
ஓதுவேட்கையொருவுதனன்றெனக்
சோதிலாக்குருவானமைகூறுவாம். உஎ

பேசுகின்றவப்பிங்களையென்பவள்
வேசிதோய்நலன்விற்கும்விரகினள்
ஆசையாம்பொருணல்குநல்லாடவர்
பூசுசாந்தப்புயம்புணர்வாழ்க்கையாள். உஅ

இன்னவண்ணமிரும்பொருளீட்டுநாள்
சொன்னவண்ணம்பொருடந்துதோய்பவர்
மன்னும்வண்ணமொர்மாடம்வாராமையால்
அன்னவண்ணநடையளயர்ந்தனள். உகூ

மறுகினூடுவருபவர்யாரையும்
பெறுகநீபொருளென்றுறுபெட்பொடு
குறுகியீர்த்துடன்கூடுவரோவெனச்
சிறுகுநுண்ணிடைபார்த்துளந்தேம்புமே. ௩0

நேசமாய்நெடுமாடநிலைபுகும்
ஆசையாம்வளியாங்குநின்றுந்தலால்
வாசவார்குழன்மீளுமறுகுறும்
ஊசலாடுபவரையுமொக்குமே. ௩க

வாய்தனின்றுமயங்குநடுவிரா
ஆயதென்றயர்வெய்தியகம்புகும்
நேயநன்பொருணெஞ்சினினைந்தழும்
பாயன்மீதுபடுக்கும்பதைக்குமே. ௩உ

இன்னதன்மையங்கெய்தியவேந்திழை
பொன்னினுற்றவிவ்வேட்கைபொல்லாததென்
றுன்னியுன்னியொழிவுசெய்நெஞ்சொடு
மன்னர்மன்னமகிழ்ந்திவைசொல்லுமால். ௩௩

துயரமோதொலைவின்றுசெய்யாசையும்
செயிரினேங்குறுஞ்சேணடங்காவனம்
வயிரமாகியவாள்கொடுவெட்டிடா
துயரினோர்க்கெங்குவகையுண்டாகுமே. ௩ச

உன்னிற்போதவுருவத்தலைவனுள்
மன்னிப்போகம்வழங்கிவதியவும்
மின்னைப்போலவிழுநரைவீதிதேர்ந்
தென்னைப்போலயர்வாரெவருண்டரோ. ௩ரு

சலத்தையுந்தசையென்பொடுசாற்றும்
மலத்தையும்மயிர்த்தோலின்மறைத்ததை
நலத்ததென்றுநயந்துநவித்தவென்
புலத்தையென்கொல்புகலப்பெறுவதே. ௩௬

என்றுகூறியவ்வேந்திழையீறிலா
தொன்றுமாசையொருவியுவப்புற்றுள்
அன்றியானவ்வகைதெருண்டாசையை
வென்றிவீரவிடுத்தனன்வேரொடும். ௩௭

அன்றிலூன்கவர்ந்தந்தரத்தேகுழித்
தொன்றுமோர்புட்டொந்துபறித்தலும்
ஒன்றவ்வூனையொழிந்துவப்புற்றதால்
என்றுமோர்பொருளெய்திடருற்றிலேன். ௩௮

சுற்றின்மேவத்தொகுசிதலைபுரி
புற்றின்மேவும்புயங்கமென்றோர்ந்தபின்
உற்றியானுஞற்றேனென்றமர்தொறும்
மற்றுளோர்செய்மதிக்குகைவைகுவேன். ௩௯

நுண்ணிதாச்சில்சிலம்பியிழைக்குநூல்
நண்ணியேயுறைந்துண்பதைநாடியான்
எண்ணிலாவுயிர்தந்தவையேய்ந்துமற்
றுண்ணுமோர்பொருளேயென்றுணர்ந்தனன். ௪௦

மானமோடவமானமடைந்திடா
தூனநீங்கியுவந்தசிறுவனைத்
தேனுலாந்தொடையோய்முனந்தேர்ந்ததால்
யானுமோகையுற்றேனவையுற்றரோ. ௪௧

அன்பினுயினுமாசையினுயினும்
வன்பயத்தின்வயிரத்தினுயினும்
நன்பெருந்திருநாதனையேநினைந்
தின்பமவ்வுயிரெய்துவதென்பதை. ௪௨

ஈங்கறிந்தனன்யானுற்றெடுத்தொரு
பாங்கர்வைத்துப்பரிவிற்பறந்தயல்
நீங்கும்வண்டைநினைந்தபசும்புழு
ஆங்குவண்டுருவாயதுகண்டரோ. ௪௩

வாக்கினைக்கடந்தோங்கிமற்றெங்கணும்
நீக்கமின்றிநிறைந்தவவ்விண்டுவை
ஊக்கமுற்றுணர்தற்கிடனாகலின்
ஆக்கையுங்குருவாயதரசனே. ௪௪

மடல்விரித்தமரைமலர்வைகுவோன்
சடமனைத்தையுந்தந்தமுவந்திலன்
இடாறுக்குமென்றெண்ணினன்மானுட
உடல்படைத்தபினேகையுற்றான்முனம். ௪ரு

மாந்தர்யாக்கையிம்மாநிலத்தெய்துதல்
வேந்தர்வேந்தமிகவரிதாயினும்
காய்ந்தகண்ணமன்கைப்பட்டிருக்குமென்
றாய்ந்துசீலத்தமர்தனன்றாகுமே. ௪௬

உறக்கமும்விழிப்பும்முறுதன்மைபோல்
பிறக்கும்யாக்கையிறத்தன்மெய்பெட்பொடும்
இறக்கும்யாக்கையுமேய்ந்துபிறத்தலின்
துறக்கவேண்டுமெய்யாசையைச்சூழ்ச்சியோய். ௪எ

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இத்திறமெதுவென்பானம்மெழிற்குலத்திறைவன்கேட்ப
அத்திரிபுதல்வனென்னவறைதருதவத்தின்மிக்கோன்
சித்துருவாயதத்தாத்திரேயன்முன்செப்பினனென்
றுத்தவற்காழிமாயனுவந்துரையாடினனால். ௪அ

ஆசிரியரையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧0எ.

ஸ்ரீகிருஷ்ண சகாயம்.

---

## ரு-வது, ஞானகன்மமுரைத்தவத்தியாயம்.

---

### கலிவிருத்தம்.

அவ்வியம்விட்டறிவுற்றவுளத்தோய்
இவ்வகையங்ஙனிசைத்தகருங்கார்ச்
செவ்விநிறத்திருமாலவனுக்கு
வெவ்வினைகட்டறமீளவிரிக்கும். ௧

நித்தியமென்னநிகழ்த்தியகன்மம்
உத்தவனன்பினுஞற்றுதனன்றாம்
சத்துடலென்றுதரும்பலனுள்ளிச்
சித்தமொடும்வினைசெய்வதுதீதே. ௨

## அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

அறிவினிலாக்கைமூன்றுமசத்தியமென்றுநீத்து
நிறைவுறுமறிவுதானேநித்தியமென்றுதேர்வோர்
பிறவிவெங்கடலையொன்றூர்பிறங்குவர்பிறங்கும்வண்ணம்
நறைதுளித்தொழுகுதாரோய்நவிற்றுவனினிதுகேட்டி. ந

தருக்களினுருவமெங்குந்தழனிறைந்தென்றுநீங்கா
திருக்கினுங்கடையின்வேறுயெரிக்குமவ்வனத்தையேபோல்
திருக்கிளர்காலமூன்றுஞ்சேர்ந்துறையறிவுதேரின்
உருக்கள்வேறுகவேறுயுடலுறும்பிறவிநீங்கும். ச

வளர்தருதருக்களாகிவயங்குமோர்தழலேபோல
ஒளிகொளுமுருக்களாகியுறையுநல்லறிவுமொன்றே
அளிதருமியமமாதியருங்குணத்தமர்மாணுக்கன்
தெளிவுறுகுரவன்சொல்லாற்றேறுதல்வேண்டுமாதோ. ரு

போற்றுகீழாணிபோல்வான்புகாறுகுரவனுங்குற்
றேற்றுமேலாணிபோல்வானியைந்தநற்குணமாணுக்கன்
மாற்றருஞ்சந்திபோலும்வழங்கியவுபதேசச்சொல்
தோற்றியவங்கிபோலுந்தோன்றுநல்லறிவுமாதோ. சா

அரும்பலனெஞ்சினுள்ளானணிவினைவிளைத்தல்வேண்டும்
தரும்பயனடையவேண்டிச்சாற்றியமகங்களாதி
வரும்பலவினையுஞ்செய்வோன்வான்மிசைப்போகந்துய்த்துப்
பெரும்பலன்றொலைந்தகாலைப்பிறந்திறந்தயர்தறிண்ணம். எ

அழிவுறும்போகம்வேண்டியருவினையிழைத்துவான்போய்க்
குழைமுகவரம்பைமாதர்குவிமுலைப்போகமார்ந்தல்
எழிறிகழரசனுல்வாளேற்றவேயேகுகள்வோர்
உழையுறுநகரிலோர்பாலுணிரந்தருந்தல்போலும். அ

பொன்னகர்ப்போகம்வேண்டிப்பொருந்துநல்வினைசெய்மாந்தர்
துன்னுபற்பலவாமான்மாச்சொல்லுமாறீசனில்லை
உன்னினென்றுரைப்பரோராரும்பர்கோனுதியானோர்
என்னெழிலேவலஞ்சியியற்றினரியங்குவாரே. கூ

என்றலுமொன்றுதானேயாவுமென்றுரைத்துப்பின்னர்
ஒன்றுமென்னேவலஞ்சியுஞற்றுவரும்பரென்றாய்
நன்றுளந்தெளியவீதுநவின்றருளென்னவேந்து
மன்றலந்துளவத்தெம்மான்வழங்கினன்விளங்கமன்றே. க0

மாயையாமுபாதியாலேவழங்கினபலவல்லாமல்
தூயவாமணியிற்பொன்போற்றுலங்குமெவ்வுலகுமாகி
மேயதோர்பொருளேயாகும்வினையினுற்பேதமாகிக்
காயமேதாமென்பார்கள்கலங்குவர்வெருக்கொண்டம்மா. கக

நித்தியமுத்தனென்றுநித்தியபத்தனென்றும்
தத்துவந்தெளிந்தோர்சொல்லுந்தன்மையாதென்றுகேட்கின்
உத்தவவுரைக்குதுங்கேளொப்பின்றியுயர்ந்தவீசன்
முத்தனுஞ்சீவனென்பான்மொழிந்தவப்பத்தனுமே. ௧௨

சீவனுமீசன்றானுஞ்செப்பியவாக்கைதோறும்
மேவவருபாதியாலேவிழைந்தநல்லின்பதுன்பம்
தாவிலாச்சீவனுண்ணுஞ்சார்ந்துண்ணாந்தன்மையெய்யோன்
பூவுலவாவிநீருட்பொருந்திநின்றசைதல்போலும். ௧௩

கலந்தனனுகருஞ்சீவன்கனவுகண்டிருக்கின்றோனும்
மெலிந்தொன்றுநுகராவீசன்விழித்தினிதிருக்கின்றோனும்
நலந்தரும்வித்தையென்றுநலிவுறுமவித்தையென்றும்
வலந்தருமெமதுமாயைமருவுடலிரண்டுண்டாமால். ௧௪

அவித்தையாமுடலமுற்றோரளவறுபிறவிசேர்வார்
பவித்திரவித்தையென்னப்பகர்தருமுடலமுற்றோர்
புவித்தலத்தரசவீட்டிற்பொருந்துவர்புகன்றோர்தன்மை
நவிற்றின்மாவித்தையென்னுநலந்திகழுடலமுற்றோர். ௧௫

கூறிருவினையினொன்றோர்கொடுங்சதைகொண்டுமோதிச்
சீறினர்வைதுளோர்க்குஞ்சிறப்புநன்கியற்றினோர்க்கும்
மாறறுசமனேயாகிமவுனமுற்றிருப்பர்மற்றோர்
ஆறறியாசதம்மையறிந்திடார்வருந்துவாரே. ௧௬

என்னிடத்தன்புசெய்யாதியற்றியவினையினோரும்
உன்னுபல்வினைகள்யாமேயுஞற்றுவமெனச்செய்வோரும்
நன்னயக்காமமில்லாநாரியர்ப்புணர்ந்துளோரின்
துன்னுமைப்பசுக்காத்தோரிற்றுயருவர்பயன்பெறாரே. ௧௭

மன்னுமைம்புலனுமாய்த்துமருவியமனத்தையென்றும்
என்னிடத்திருத்தல்வேண்டுமிருத்தலிங்கரிதாமென்னின்
சொன்னநல்வினைசெய்தாலுந்துசனூறுபவைசெய்தாலும்
பன்னுறுமன்பினந்தப்பயனெமக்களித்தனன்றே. ௧௮

அளிசெயுமனத்தாகியைம்புலனடக்கியென்றும்
ஒளியொடுபுனிதமேன்மையுவப்பருஞ்சமனுற்றுள்ளம்
தெளிவுறுபெரியோர்தம்மைச்சேரினல்லன்புகூரும்
களிதருமன்புகூரிற்கலக்குநல்லறிவுதானே. ௧௯

இயம்புமெம்மிடத்தினன்பிங்கியற்றுதலெங்ஙனென்னின்
நயஞ்செயெஞ்சரிதங்கேட்டனவிற்றுதனுமம்போற்றல்
பயன்றருமெமதுகோயிற்பணிவிடைமுதல்செய்தல்
வயந்தரும்பொறுமையுண்மைபரீஇயமைவழுத்தலாமே. ௨0

பரிதிசெந்தழல்வான்பூமிபசுவருமதிதியன்பர்
விரிபுனல்வளிதன்னாக்கைவிளம்புபல்லுயிர்களென்ன
உரைதருபதினொன்றின்பாலுவப்பொடெம்பூசையாற்றின்
இருவினைச்சிமிழ்ப்புநீங்குமின்பவீடெய்துமன்றே. உக

தினகரனிடத்துப்பூசைசெய்வதுமறையிற்போற்றல்
அனலிடையாற்றுபூசையாகுதிமுறையிற்பெய்தல்
நினைவருவானிற்பூசைநெஞ்சினுட்டியானஞ்செய்தல்
இனிதுறுதரையிற்பூசையந்திரமெழுதியேத்தல். உஉ

துதிதரும்பசுவிற்பூசைதொழுதுபுல்லுதவறுன்னும்
அதிதிதன்னிடத்துப்பூசையகமகிழ்ந்தடிசினல்கல்
மதிதருமன்பர்பூசைமருவுதந்தமர்போற்காணல்
ததைமலர்ப்புனலிற்பூசைதருப்பணம்புரிதலாமே. உங

சங்கொடுதிகிரிவில்வாடரித்தவெம்வடிவுபெற்ற
பொங்கெழிலுருக்கண்ணாடிபூசைசெய்வதுநன்றாம்
கொங்கலர்சோலைவாவிகுளங்களுண்டாக்கலும்
மங்குலினுதவுவேந்தேமருவுமெய்பூசையாமே. உச

பேசியவளியிற்பூசைபிராணனைக்காத்தலாகும்
காசிறம்முடலிற்பூசைகலன்றுகில்புனைதலாகும்
மாசில்பல்லுயிரிற்பூசைவழங்குதம்முயிரேபோல
ஆசறுமுயிரின்கூட்டமனைத்தையும்புரத்தலாமே. உரு

நண்ணியவன்பினாலேநயந்தெமையடைதல்போல
எண்ணுசாங்கியத்தினாலுமெண்வகையோகத்தாலும்
பண்ணுறுதவத்தினாலும்பகர்வருவிரதத்தாலும்
மண்ணகத்துறைவோரெம்மைமருவுதற்கெளிதன்றம்மா. உசு

சொல்லுநற்றவரைச்சேரிற்றுகளில்பேரன்புவந்து
புல்லுமென்றுரைத்ததல்லாற்பொருந்துதம்புந்தியாலே
வல்லையினன்புசெய்துவந்தெமையடைந்துளோர்கள்
அல்லலிங்கொழிந்துநின்றோளப்பிலாரறைதுங்கேண்மோ. உஎ

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

மாவலிமுதலாவழங்குதானவரும்வண்புகழ்வீடணன்முதலாத்
தாவிலாவலிசோரக்கருமகஞ்செய்தவத்தினர்மருவெழின்மடவர்
கோவியர்முதலாமடந்தையர்குழுவுங்குஞ்சரஞ்சாம்பவானநுமான்
காவில்வாழ்கவியின்றலைவனேமுதலாக்கருதரும்பற்பலவிலங்கும். உஅ

அருச்சுனன்முதலாநந்தமர்குழுவுமமரரும்யமுனையின்கரைசேர்
உருச்சுனையடைகாளிங்கனேமுதலாமுரகரும்பறவையுமுரைக்கும்
திருக்கிளர்வணிகர்பின்னவர்வேடர்செப்பரும்பூரியர்முதலாத்
தரைத்தலத்தமர்ந்தமாக்களுமாவார்சாற்றிலீங்கின்னமும்பலரே. உகூ

பொற்புறுமதுரைப்பதியினின்முன்யாம்போயபின்கோவியர்யாரும்
பற்பலயுகமேயொருகணமாகப்பரிவொடுமெம்மையேநினைந்து
சொற்பலநதியுங்கடலினையடைந்துசொல்லியநாமரூபத்தை
முற்பகலொழித்தபோற்றமைமறந்துமுன்னுமெஞ்சமையடைந்தனரால்.()

உரைப்பதுமுரைப்பக்கேட்பதுமினிவேறொன்றிலையெனவுளத்துணர்ந்து
திரைப்பணிக்கடல்சூழ்புவிமுதலுலகாச்சேர்ந்துநூல்படத்துருவாகி
இருப்பதுபோலவெங்கணுநிருக்குமெம்மையேநினைந்தனையாகி
விரைப்பசுந்துணர்த்தாருத்தவநீயும்வெவ்வினையொழிதிமற்றின்றே. ருக

மாயையென்றுரைக்கும்வித்தினிற்பிறந்துமருவுமுக்குணப்பாரையின்மேல், மேயவிந்தியவோர் பதுசினைவிடுத்து வேட்கையாம்வேர்பல வுடைத்தாச், சேயுயர்ந்திரண்டு வினைப்பயன்பழுத்துச் சீவனோடீசனென்றுரைக்கும், தூயபொற்பறவை யிரண்டுடனிருப்பத் துலங்குமாலாக்கையாந் தருவே. ருஉ

சொல்லிருவினையின்பயனெனும்பழத்தைத்தோற்றுறுசீவனும்பறவை
புல்லிநின்றருந்துமீசனும்பறவைபொசித்திடாதுணர்ந்துகொண்டிருக்கும்
நல்லெழிற்குருவான்ஞானவாட்டிநவிற்றுடற்றருவறத்தடிந்தால்
மல்லுயர்புயத்தோய்பிறிந்திடுபொன்றும்வரம்பிலாவின்பமும்வருமே. ருரு

ஞானகன்மமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கசO.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## கூ-வது, குணவிகாரமுயிர்க்கில்லையென்றவத்தியாயம்.

---

### தரவுக்கொச்சகக்கலிப்பா.

வளர்ந்துவருகுணமூன்றுமனத்தைநனிதொடர்ந்திருக்கும்
தளர்ந்துமனமுந்தொடர்ந்துசாற்றுகுணத்தொடுமிருக்கும்
உளர்ந்துநறையளிநுகர்தாருத்தவனேயொண்புலத்தால்
பிளந்தகுணத்தொடுமனத்தைவெவ்வேறுபிரித்தறியின். க

உத்தமமென்றுரைக்கும்வினையுண்டாஞ்சத்துவத்தெனவும்
மத்திபமென்றுரைக்கும்வினைவயங்குமிராசதத்தெனவும்
வித்தகனேயதமவினைவிளைகுறுந்தாமதத்தெனவும்
இத்தகையகுணமூன்றினியலும்வினையொருமூன்றும். உ

அறைந்தவினையொருமூன்றுமரியகுணமிரண்டுமெதி
நிறைந்தபுகழ்ச்சத்துவந்தானீங்கியபினீங்குறுமால்
சிறந்துசெறியருஞ்சுரத்திற்சேர்ந்துவளர்கிளையிடத்துப்
பிறந்தவெரியவையெரித்தபினையாங்குக்காப்பதுபோல். ௩

என்றலுமுக்குணத்தினொடுமியங்குமனத்தொடுநீங்கா
தொன்றியுறையுயிர்பிரித்திங்குடலொழிப்பதெவ்வாறு
நன்றுணரும்படிவகுத்துநவிற்றெனவுத்தவன்வினவத்
தொன்றுதொடுமறைப்பொருளார்தூயவனுங்கிதுசொல்லும். ௪

வன்னமலரோன்மருங்குவந்துசனகாதியர்நீ
சொன்னபடியேயீதுசொல்லுதியாலெனவினவ
என்னையயனுள்ளிருணீக்கெனநினைந்தானினைத்தலுமே
அன்னவுருவுற்றவண்யாமடைகுற்றேமடைதலுமே. ௫

மாமலரோனயிடைக்கண்மருவினர்களெல்லோரும்
ஏமவெகினத்துருவமெய்தியநீயார்கொலென
நாமவறிவுருவாகிநண்ணுபொருளொன்றேயாம்
காமருடலைக்கருதிற்றிவணென்னக்கழறலுமே. ௬

தோற்றுருவமிவ்வெல்லாந்துலங்குமைந்துபூதமல்லால்
வேற்றுருவமொன்றேனும்விளம்பினிலையாகலினுன்
ஏற்றவெகினத்துருவமெய்தியநீயார்கொலெனச்
சாற்றுற்றவம்மொழிக்குத்தருபயனொன்றுற்றிலதே. ௭

என்றுமுனங்கூறியவவெழிலாருமலரானோ
டொன்றுமுருவத்தோர்களுவப்பினொடுகடாயிறைஞ்ச
அன்றுபுனற்பால்பிரிக்குமன்னவுருவாகியயாம்
வென்றிதிகழ்வெள்வேலோய்மீட்டுமிவைசெப்பினமால். ௮

வழுத்துபெருங்குருவானுமருவதுபோகத்தானும்
தழைத்துவரும்பேதமையைத்தள்ளியொன்றுய்ப்பாராமே
பழித்தவிருஞ்செயல்பொருந்திப்பலவாக்கண்டிருப்போர்
விழித்திருந்துங்கனவுநனிமேவினரைப்போலுவரே. ௯

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சித்தமுஞ்சித்தத்துதித்தமுக்குணனுஞ்சீவனுக்காகையாற்றெரிக்கின்
சத்துவகுணத்திற்சாக்கிரமுண்டாஞ்சாற்றியகனவிராசதத்தான்
மற்றவையவத்தையிரண்டலான்மூன்றுமவத்தையுந்தாமதத்தாகும்
இத்தகையவத்தைமூன்றையுமடையாதிடைவிடாதுயிரறிந்திருக்கும். ௰

சாற்றியகுணமுமாக்கையுமனமுந்தானலவென்பதையறிந்தால்
போற்றியவாக்கையுடனிருப்பதுவும்போவதுமறிந்திடாராகி
ஏற்றதம்புயமேற்றுகில்கழிவதுவுமிருப்பதும்வெண்ணறைபருகி
மாற்றருமதத்தினறிந்திடாதொழுகுமாக்களைப்போலுவர்யாதோ. ௧௧

யானெனதென்னுஞ்செருக்கறவெறிந்தோன்யாக்கையோடுறையினும்யாக்கை, தானெனதெனமுன்னிழைத்தவெவ்வினைதான்றருபயன்றொலைதருங்காறும்,போனகமருந்திப்பொன்றியபின்னர்ப்புகலுடலொன்றையும்பொருந்தான், ஊனுடலடைந்தவுறக்கமற்றுறைவோருருவரோ வொருகனவுரைக்கின். கஉ

கலிவிருத்தம்.

சொல்லினர்தியிற்றோன்றியசீவனுக்
கல்லல்செய்குணமில்லையறியெனன்
றெல்லையற்றவிருந்தவர்தம்முளம்
வல்லையுற்றுவருட்டினன்முன்னமே. கங

துங்கமாதவர்சொல்லியவெண்வகை
அங்கமாகியயோகநன்காற்றினர்
எங்குமாகியிருந்தவெம்பானுறல்
சிங்கவேறனையாயினிச்செப்புதும். கச

குணவிகாரமுயிர்க்கில்லையென்றவத்தியாயம் முற்றிற்று.
ஆ திருவிருத்தம் கருசு.
ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## எ-வது, யோகசித்தியுரைத்தவத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

ஏர்பெறுநியமத்தோடுமியமமாசனங்களென்று
பேர்பெறும்பிராணாயாமம்பிரத்தியாகாரமென்று
தார்பெறும்புயத்துவேந்தேதாரணைதியானமென்று
சீர்பெறும்சமாதியென்றுசிறக்குமட்டாங்கயோகம். க

திருந்தியயோகநூலிற்செப்புமாசனத்துச்செவ்வே
இருந்தலைவற்றுமூக்கினெழினுனிகண்ணினோக்கி
விரிந்தவைம்புலனுமாய்த்துவிளம்புபூரகமுன்னாகப்
பொருந்தியபிராணாயாமம்புகரறப்புரிதல்வேண்டும். உ

பூரகங்கும்பகஞ்சேர்பொருந்திரேசகங்களாயும்
சீருறுரேசகாதிதிகழ்விபரீதமாயும்
பேருறுபிராணாயாமம்பிரணவத்தொடுமோர்திங்கள்
ஏருறவியற்றின்வாயுவினிதவன்வயமதாமே. ௩

வசம்வரினிடாவினோடுவயங்குபிங்கலையைமூட்டி
அசைவறநடுவினுற்றுங்கவிர்சுழுமுனைமேற்போகின்
பசியநற்கதலிப்பூப்போற்பண்புறுமிதயமாகி
இசைதருகமலமேவாவெழில்பெறவலர்த்துமக்கால். ச

அலர்ந்தவம்மலர்மேலன்பர்க்கருள்சுரந்தொழுகுகண்ணும்
நலந்தருமுகமும்வாயுநான்செனும்புயமும்பொன்சேர்ந்
திலங்குசெம்மணிதாழ்மார்புமெழிற்றொடிபுனைசெங்கையும்
துலங்குபொற்றோளுமாகத்தோன்றுமெம்முருவநாடி. ௫

நண்ணும்யாமென்றும்வேறுநாடியதாங்கொலென்றும்
எண்ணிடாதொன்றுபட்டாங்கிருப்பரேற்றுபமூன்றின்
கண்ணுறுரின்பமென்னுங்கரையிலாக்கடலேயாழ்வர்
அண்ணலேயோகசித்தியறுமூன்றுமவையுங்கேண்மோ. ௬

அறைதருமணிமாவென்றுமரும்பெறன்மகிமாவென்றும்
விறலுறுலகிமாவென்றும்வீறுயர்பிராத்தியென்றும்
நிறைபிரகாமியஞ்சீர்நிலவுமீசத்துவஞ்சொல்
மறுவறுசிறப்பின்மிக்கவசித்துவங்கரிமாவென்றும். ௭

நலங்கிளர்சித்தியெட்டுநவிலுறுமுதன்மையாகும்
இலங்கியயோகசித்தியின்னுமீரைந்துண்டோதின்
துலங்கியவேற்றுத்தீவிற்றோன்றுமெம்முருவநாடி
இலங்கறுவகைவிகாரமேவிடாவாக்கைசேர்தல். ௮

புவிபுகழறிவின்மிக்கோய்புரையறும்யோகத்தானே
செவியிணைவானிற்சேர்த்திச்சேய்த்துளமொழிகடேர்ந்தும்
சவிதிகழ்சவிதாவின்கட்டண்ணிருகண்ணைவைத்து
நவையறத்தூரத்தெங்குநண்ணுருயாவுங்காணல். ௯

அற்றமின்மனத்தின்வேகமடைந்திருந்திசையிற்சேறல்
உற்றநல்லிங்கமென்னவுரைதனுவோடும்புக்குக்
குற்றமில்லாசாயத்திற்குலவுதறமக்குவேண்டின்
உற்றிடலரம்பைமாரோடினிதுவந்தாடலன்றே. ௧0

சிந்தையிற்றிகழ்முக்காலச்செய்கையுந்தெளிதலின்பம்
வெந்துயரடையாதற்றல்வேறுளோர்சித்தமோர்தல்
அந்தழற்றம்பனாதியரியதம்பனங்களாட்டல்
புந்தியின்வருமிப்பத்தும்போகநற்சித்தியாமே. ௧௧

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

இணையறுவணிமாவாவதுமுணஞ்சொலெண்வகையோகநன்கிழைத்தோர்
அணிபெறுபரமாவணுவெனவெம்மையகத்திடைநினைத்தணுவாதல்
தணிவறுமகிமாவாவதுமகத்தாய்ச்சாற்றுமிங்கெமைநினைவுற்றோர்
மணியெழுவனையமல்லுயர்புயத்தோய்மகத்தெனமருவுதன்மாதோ. ௧௨

மருவியலகிமாவாவதுலகுவாய்மனத்தெமைநினைத்தலுவாதல்
உரைதருபிராத்தியாவதிந்தியங்களுறும்புலனெனவெமைநினைத்தோர்
விரவுதல்பிரகாமியமகத்தோடுவீறுயர்சூத்திரமாகிப்
புனைதபவெங்குமிருப்பமென்றெம்மைப்புந்தியினினைத்தவர்விளங்கல். ()

எழுவகைப்பிறப்பினுயிர்க்குழுவியக்குமியம்பருங்காலத்தினுருவாய்
விழுமியவுளத்திலெண்மைநினைவுற்றோர்விளம்புமீசத்துவம்பெறுவார்
மொழிதருமவத்தைமூன்றையும்பொருந்தாமுழுமுதலாயநிந்திருக்கும்
அழிவறுதுரியனெனவெண்ணிநினைந்தோரடைகுவர்வசித்துவமன்றே. சச

கருதருங்காமமென்றுமுன்னுனக்குக்கழறுநற்சித்தியாதென்னின்
அருவமாயறிவாயாநந்தமயமாயாகுவனெனவெண்ணிநினைந்து
விரைகமழ்நறுந்தாருத்தவயோகம்விதித்தவாறினிதுறவிழைந்தோர்
பொருவிலவ்வாறேயாநந்தமயமாய்ப்பொருந்திவீற்றிருப்பர்தாமன்றே. ()

எவ்வகையெவையே யியைந்தெனமனத்திலிடைவிடாதன்பொடுநி
னைந்தோர், அவ்வகையவையே யடைந்துவப்படைவா ரகம்புறநடுவும்யா
மென்ன, மௌவலந்தொடையாலுத்தவன்றனக்குவழங்கினனெனச்சொ
லிமீட்டும், தெவ்வலர்புகழும் விண்டுராதனுக்குத் தெரிக்கலுற்றனன் சுக
முனிவன். சகூ

யோகசித்தியுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கஎ0.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## அ-வது விபூதியுரைத்த வத்தியாயம்.

---

### கலிவிருத்தம்.

வெளியுமுள்ளும்விமலனீயாயினும்
தெளிகலாவொருயோகமுஞ்செய்கலார்
எளியர்தாமுனையெங்ஙனஞ்சேர்வதென்
றொளிகொள்வேற்படையுத்தவனோதினன். க

அநகனன்னதுகேட்டறைகின்றனன்
நினைவருஞ்சமனேர்ந்திலனுகிநீ
வினவும்வண்ணம்விசயனுங்கேட்பயாம்
சினவுவேலவசெப்பினமுன்னமே. உ

நீதிமுத்தொழிலும்மவைசெய்வதும்
பூதத்துள்ளுயிரும்பலபூதமும்
ஏதமற்றயாமாதலினெம்முரு
ஓதின்முற்றுமுரைக்கடங்காதவே. ங

பொறியடங்கவடக்கியபூட்சியில்
அறையுமுள்ளத்தவர்களுமெம்முரு
அறியும்வண்ணம்யாமானவிபூதியுள்
குறைவிலோய்சிலகூறுதுங்கேட்டியால். ச

வண்மையாமகத்துக்கும்வயக்குமோர்
திண்மையாமகத்தாசவுஞ்சேர்ந்தியாம்
நுண்மையாயபொருளினுவலரு
முண்மையாமுயிராகவுமுற்றனம். ௫

அந்தமுற்றவெழுத்திலகாரம்யாம்
மந்திரத்தின்மறைசொல்பிரணவம்
சந்தமுற்றுத்தயங்குசந்தச்சினில்
நந்தலற்றகாயத்திரிநாமரோ. ௬

சீலமேவியதேவரிற்றேறல்பாய்
மாலைநீண்முடிவாசவன்வான்றழற்
பாலலோசனப்பண்ணவர்தங்களின்
நீலலோகிதனென்னவுநின்றனம். ௭

வளம்பொருந்தும்வசுக்களிலக்கினி
விளங்குகின்றவாதித்தரின்விட்டுணுத்
துளங்கிரும்புனற்றேன்றிறையாகிநல்
உளந்திருந்தறிவுற்றவருணனும். ௮

போற்றுகின்றபுரோகிதர்தங்களின்
மாற்றருஞ்சொல்வசிட்டனிவ்வையகம்
சாற்றுஞானச்சதுமறையோர்களின்
ஏற்றசீர்க்குறுயாமென்றறிதியால். ௯

வண்ணவேந்தமுனிவரின்மாமனு
நண்ணுதேவமுனிவரினாரதன்
எண்ணலாதபிரமமுனிவரின்
அண்ணலேநாரணன்யாமரோ. ௧௦

சித்தரிற்கபிலப்பெயர்சேர்ந்தவன்
பத்தெனப்பகரும்படைப்போர்களில்
வித்தகத்துறைதக்கன்வில்லாளரின்
முத்திறப்புரந்தீத்தமுக்கண்ணன்யாம். ௧௧

விரியுநால்வருணத்தினில்வேதியர்
வருணநாமவ்வருணத்தினென்கென
உரைசெயாச்சிரமத்திெனுடுக்கமாம்
புரையிலாச்சிரமம்புகல்வீரயாம். ௧௨

அரியநான்மறையந்தணர்தங்களின்
பிருகுநாம்பலபேசுறுமாந்தரின்
மருவுபார்புகழ்மன்னவன்விண்ணவர்
சருதுசேனைத்தலைவரிற்காங்கேயன். ௧௩

தருணமங்கையரிற்சசரூபையாம்
புருடரிற்சுவாயம்புவெனப்புகல்
உருவநன்மனுவோர்தனுடுக்களின்
இருவிசும்பினிலங்கியதிங்களே. ௧௪

கண்ணகன்றநதிகளிற்கங்கையாம்
தண்ணிருந்தசலநிலயங்களின்
மண்ணசழ்ந்துவளைப்புறுவாரிதி
விண்ணுயர்ந்தசிகரியின்மேருவே. ௧௫

வினைகடந்துயர்வேதியர்தம்முழை
மனையொடன்புசெய்வோர்களின்மாவலி
புனிதநல்லொளிபுல்லினரிற்பெரும்
பனிகடந்தபரிதியஞ்செல்வன்யாம். ௧௬

மாசிலாக்கவிஞோரின்வண்சுக்கிரன்
தேசுசேர்பகவானெனுந்தேவரின்
வாசுதேவன்வழுத்துநல்லன்பரின்
ஆசிலாதநீயாமென்றறிதியால். ௧௭

அடக்கருமவைதம்மிலரும்பொறி
நடக்கலுற்றமனநவைநீங்கிய
படைக்கலத்திற்பகர்பெருங்கார்முகம்
கடக்கருங்கபட்டிற்கவியாமரோ. ௧௮

மல்லலுற்றவவியின்மன்னுவினெய்
புல்லலுற்றதருப்பையிற்பூங்குசை
சொல்லலுற்றயோகத்திற்றுணிவுடன்
அல்லலற்றுமனத்தையடக்கல்யாம். ௧௯

விரதமானவைதம்மின்விளங்கிய
விரதமோருயிர்க்கிழிழையாமையாம்
வரதயாம்மறைவானவைதம்மினில்
சாதமாகத்தரித்தமவுனமே. ௨௰

சாற்றுகின்றதவத்தினியமம்யாம்
போற்றுகின்றதாதுக்களிற்பொன்னனி
ஆற்றுகின்றயாகங்களினன்பொடும்
ஏற்றுகின்றபிரமவியாகமே. ௨௧

தரவுக்கொச்சகக்கலிப்பா.

தயித்தியரினல்லறிவுசார்பிரகலாதனியாம்
இயக்கர்களின்மந்திரியாமெழிற்பிரமசாரியரின்
நயக்குமுளத்துத்தவகேணுஞ்சனற்குமாரனென்றும்
மயக்கறுநற்பிதிர்கடமின்மருவரியமாயாமே. ௨௨

பறவைகளின்யாங்கருடன்பன்மாவின்யாமடங்கல்
கறவையெனுநிறைகளின்யாங்கடவுளராப்பரிகளின்யாம்
சுறவமெறிதிரைக்கடலிற்றோன்றுபரிகரிகடமின்
மறவைநுனிநாற்கோட்டுமேதவயிராவதம்யாமே. உரு

அரவுகளின்வாசுகியாமரவரசராயவரின்
பாவுபலமணித்தலையிற்பார்ப்பரித்தசேடன்யாம்
விரவுபலதருக்குழுவின்விளங்குசினையாசுருயாம்
புரவுபுரியாசமுதற்புகல்பவரிலயன்யாமே. உச

அழிவுசெயுந்துடிமுதலாமாகாலத்தாண்டுருயாம்
விழையுமிருதுவினிலிளவேனிலெனுமிருதுவம்யாம்
தழைவுபெறுமதிகளின்யாத்தனுமதிநன்னாட்களினில்
மழைநிகருங்குடைக்கரத்தாய்வழங்கபிசித்தெனுநாளே. உரு

அரசயுகநான்கினிலுமாதியுகமாவதியாம்
பரவரியவியாதனியாம்பாராசரமாமுனிபுதல்வன்
பொருதிறல்சேர்வீரர்களிற்புகன்றவெழிலருச்சுனன்யாம்
பெருகுசுகிகளிற்சுகியாம்பெலவானிற்பெலவான்யாம். உசு

நவையறுகந்திருவர்களினலஞ்செய்விச்சுவாவசுநாம்
புவனமுழுதும்புறமும்பொருந்தியவானத்தொலியும்
பவனனினற்பரிசமுஞ்சேர்பாவகனினெழிலுருவும்
அவனியினிலருமணமுமப்புவினிலிரதமும்யாம். உஎ

எழுசீர்க்கழிநேடி லாசிரியவிருத்தம்.

சுடர்நவமணியிற்பதுமராகமும்போய்த்துன்னுதற்கரிதெனுஞ்சுரத்தின்
கெடலருவலிசேரிமயமால்வரையுங்கிம்புருடரிலியமானும்
உடைதிரைப்புனல்வாழுயிரினின்மகரவுருவமுமூதியம்பெறுவோர்
விடலருவிவசாயங்களின்மலர்மேல்விளங்கியவிமலையும்யாமே. உஅ

மருவியமாயைமகத்தகங்காரமதிபொறிபுலன்குணஞ்சீலம்
தரைபுனல்கனல்கால்வான்முதலெவையுஞ்சாற்றுநாமாயினுந்தருமம் [த
திருவருளெழில்சீர்திகழ்வலம்பொறுமைதெளிவுமெய்கொடைசிறப்பார்ந்
அரசவெங்குறையுமவணெலாநீமற்றறிதியெங்கலைப்பிரிவெனவே. உகூ

சுருக்கினமிவ்வாறுரைத்ததையன்றிச்சொல்லுமெம்பூதியைமுழுதும்
விரித்துமற்றுரைப்பவேண்டுமேலெமக்கும்விளம்புதலரிதிவையெல்லாம்
உரைத்திடுமெமதுவடிவெனமாயனுத்தவற்குரைத்தனனென்றுத்
திருத்தகுமுனிவனரசுளந்தெரியத்தெரித்துமீளவுஞ்சிலதெரிக்கும். ௩0

விபூதியுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உ00.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

# ௯-வது, வருணாச்சிரமமுரைத்தவத்தியாயம்.

---

## கலிவிருத்தம்.

என்னலுமுத்தவனிறைஞ்சியெம்முழை
மன்னியவன்பொடுவருணநான்கினோர்
உன்னியதமவினையுனாற்றனன்றென
முன்னவவுரைத்தனைதொகுத்துமுன்னமே. ௧

அவ்வகைவருணவாச்சிரமமன்பொடும்
இவ்வகைவருவர்வந்தியற்றுதம்வினை
செய்வகையிவையெனத்தெரித்தியென்றலும்
மௌவலந்தொடைபுனைமாயன்கூறுமால். ௨

எண்ணியமுதலெனுமுகத்தின்யாவரும்
நண்ணியஞானநன்னலத்தினோங்குவர்
தண்ணறுந்தொடையலாய்தருமமானயாம்
வெண்ணிறவிடையுருவெடுத்துமேவுவேம். ௩

உரைத்தனநான்மறைமுழுதுமொன்றெனத்
தெரித்திடும்பிரணவமாகிச்சேர்துமால்
அருத்திசெயிரண்டெனவறைந்தவூழிவாய்
விரித்திடும்பெயர்விராட்டென்னுமெம்முழை. ௪

உலவியவுயிர்ப்பினிலுதித்தமாமறை
குலவியமுகம்புயங்குறங்குதாளினில்
நிலவியமுறைமுறைநிகழ்த்துதந்தொழில்
நலனொடுவருணமோர்நான்குந்தோற்றின. ௫

உத்தவவிரண்டெனுமுகத்தினாதியின்
இத்திறமுதித்தவெம்முருவமாகிய
சித்திரவிராட்டெழில்சேர்முகத்திடை
தத்துவஞானமுந்தயங்கித்தோன்றிற்றால். ௬

அல்லலிவிருபிறப்பாவதும்மதற்
கொல்லுநற்றருமமுமிதயத்துற்றெழ
இல்லினாவதுமியைந்ததன்மமும்
வல்லையிற்சகனமேல்வந்துதோற்றின. ௭

வனத்திடைச்சேறலும்வனத்திற்செல்லுநர்
நினைத்தனசெயத்தகுமெனநிகழ்த்திய
வினைத்தருமங்களும்விளங்குமார்பிடைச்
சனித்தனதுறவறந்தலையிற்றோற்றின. ௮

உரைதருசமதமமுவப்பிருந்தவம்
கருதருவஞ்சனைகளைதலெம்முழைப்
புரிதருமன்புமெய்பொறுமைநல்குதல்
அருண்முதலறங்களந்தணர்க்காகுமால். ௯

குறைவறுகிதிவலிகொடைபொருந்துதல்
மறையவருழைமருவன்பின்வைகுதல்
முறையுயிர்புரத்தலிம்முதலநல்லறம்
இறையவர்தருமமென்றியம்புநூல்களே. ௧0

அணிபெறுகிதிக்குவையடையினும்மவாத்
தணிவறவளர்ப்பதுஞ்சாற்றுமந்தணர்ப்
பணிவதுமுதலியபளகிலாவறம்
வணிகருக்கியல்பெனவழங்கற்பாலவே. ௧௧

இன்னமுத்திறத்தினர்க்கேவல்செய்வதும்
உன்னியபொருளுறல்கொண்டுவப்பதும்
மன்னியதேவரைவணங்கிவாழ்த்தலும்
பின்னவர்க்கறனெனப்பேசல்வேண்டுமால். ௧௨

அழிவறுவருணநான்கடைந்துளோரலால்
இழிகுலமாயவர்க்கியற்கையென்பன
பழியுறுமசிசுகாமாதிபட்டிமை
கழறுபொய்பயனிலாக்கலகமாதியாம். ௧௩

நவையுறுகரவொடுநசைபொய்ந்நீக்குதல்
குவையுறுமுயிரிலொன்றனையுங்கொல்லிடா
தவைமகிழ்கூர்தரவன்பின்வைகுதல்
இவைமுதலியவறனெவர்க்குநல்லவே. ௧௪

தூயநன்மறையவர்துய்ப்பநற்பொருள்
ஏயதந்தொழிலினினியைவதில்லெனின்
மாய்விலவணிகர்தந்தொழிலுமன்னர்தம்
ஆயுதத்தொழிலுமுற்றருந்திவைகுவார். ௧௫

மன்னவருணவறவறிஞராய்விடின்
பொன்னுறுவணிகர்தந்தொழிலும்பூசுரர்க்
குன்னியதொழிலுமுற்றுண்பரொட்டியர்
பின்னவர்தொழிலுநீர்ப்படையிற்பேணுவார். ௧௬

வறுமைபின்னவர்நனிமருவினூணற
அறுவைநெய்வதுமுதலாயசெய்குவார்
உறுதமதொழிலினிலுணவின்றுமெனின்
பிறர்தொழிலியற்றுதல்பிழைமிக்காமரோ. ௧௭

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

விதிமுறைபிரமசாரியராயமேதகுமாச்சிரமத்தோர்
முதுமறைபயிலுமுபகுருவாணர்மொழிதருநயிட்டிகரென்ன
மதிபெறுமரசவிருவகையினராம்வழங்கியநயிட்டகாவோர்
துதிபெறுகுரவற்றொழுதருமறையின்றுணிபொருண்முழுவதுந்தெரிந்தே

இளமுலைமடவார்தமைமணமியற்றுவேனையாச்சிரமராயிருப்பார்
வளமுறைமுழுதுமுபகுருவாணர்வழுவலதெளிந்துசொற்குருவுக்
குளமகிழ்கூரநிதிபலகொடுத்தாங்குரைவிரதாதியவுஞற்றி
அளியுளர்தாரோய்விதித்தகன்னியரையருமணம்புரிகுவான்றே. ௧௯

மறையவர்நான்குவருணம்வந்துதித்தமடக்கிளிமொழியினர்தமையும், இறையவர்மறையோர் குலமலாலேனை யியம்புமுக்குலத்தினிற்பிறந்த, பிறைநுதன்மடவார் தம்மையும்வணிகர் பேசிருகுலத்துமாதரையும், முறைமுறைமணத்தற்குரியர்பின்னவர்தம்மொழிகுலத்தினரையேமணப்பார்.

ஞானநான்மறைதேர்நயிட்டிகர்துறந்தோர்நவையறமனையகமறந்து
கானில்வாழ்கின்றோர்காதலின்மடவார்க்காண்கலுந்தீதெனக்கரைவார்
மானவேலரசவிடுத்தவாச்சிரமமகிழ்ந்துமீண்டிறங்குதலாகா
தேனவாந்தொடையலரசரந்தணரேர்ச்சிறப்புடைவணிகர்மற்றிவர்க்கே.

குரவரைவணங்கிநான்மறையோதல் கூறியமகமும்வந்தாற்றல், இருநிதிவழங்கலென்னுமுத்தொழிலுமியையுநல்வேள்விசெய்வித்தல், பொருவருமறைநூ லோதுவித்துறைதல் புகல்பொருளேற்றன்முத் தொழிலும், உரைதருமறையோர்க்குரியமற்றேனோருஞற்றுவரேற்பழுதுறுவார். ௨௨

தேவர்நன்முனிவரதிதியர்பூதந்தென்புலத்தவரெனத்தெரிந்தோர்
தாவரும்பூசைநிச்சலும்புரியுந்தவறிலாவில்லறத்தினரும்
காவலநலஞ்சேர்கதிபெறுகுவராற்காமம்விட்டில்லுறைந்தாங்கு
மேவியவிதிபோலுறைகுவரேன்மீள்கலாவீட்டினுமுறைவார். ௨௩

ஆயுளின்மூன்றாங்கூற்றினில்வனம்போயடைகுதலறமடைகுற்றோர்
காயும்வெவ்வேனிற்காலம்வந்தணுகிற்கருதுபஞ்சாக்கினிநடுவும்
மேயகார்பனிசேர்காலம்வந்தடையின்விரிபுனலிடத்துமுற்றுறைந்து
தூயதாந்தவநன்காற்றிமெய்ப்பொருடேர்சூழ்ச்சியின்வைகுதறுணிவே.

மனத்தினிலோமத்தழன்முறையடுக்கிவரும்வழித்தத்துவம்போக்கிக்
குனித்திடுஞ்சிலையோயாயுளினாலாங்கூற்றினிற்றுறந்தெதியாவார்
நினைப்பருவயிராக்கியமுடன்ஞானநிலைபெறமுன்னமேவரினும்
வினைத்திறமொழியத்துறவறம்பூண்டுமெய்ப்பதமடைந்துவீற்றிருப்பார்.

விளம்புநற்பதம்பெற்றுயர்குவரென்ன விண்ணவர்பொறாமையால்விரைந்தாங், குளங்கனிந்துருகுமனையவளாதியுருவினராகிமுன்றடுப்பார், வளம்பெறுவாச வவ்வகையறிந்துவருமிடர்கடிந்தெதியாகிக், களங்கமின்மனத்திற்றுறவறமியற்றல்கடனெனவுரைப்பர்கற்றுணர்ந்தோர். ௨௬

### தரவுக்கொச்சகக்கலிப்பா.

அதிவருணாச்சிரமியெனவடைந்தமுனிதிறங்கூறின்
விதிசவுசாசமனமுதல்வேண்டுதல்வேண்டாமையிலான்
பதிதருறுமிடத்தணுகான்பாலனைப்போன்மகிழ்ந்துறைவான்
எதிர்மருவியெவரேனுமெவையளிப்பாரவைபெறுவான். ௨௭

உற்றவினவறத்தினனென்றுரைப்பவொருசின்னமிலான்
எற்றிடினுமெறிந்திடினுமீனனெனவைதிடினும்
மற்றவரைவெகுண்டுரையான்வழங்குமுணவேற்பதற்குச்
செற்றமறும்படிமுயற்சிசெய்தாலுஞ்செய்குவனல். உஅ

பயம்புரியான்பயமடையான்பழியான்மற்றொருவரையும்
நயம்புரிந்ததருமமிவைநவையிவையென்றுளத்தோரான்
இயம்புபெயர்தேகியெனவிருந்தாலுந்தனுவிறப்பின்
வயம்புரியுமரசவவன்வழங்கியவெந்தமராவான். உகூ

துறந்தவருக்குரியனவாஞ்சொல்லுமுயிர்க்கிதஞ்செயலும்
மறந்தவிடயங்களினுமனஞ்செலுத்தாதுறைகுவதும்
நிறைந்தபுகழுத்தவனேநெடுங்கானமடைந்தோர்க்குப்
பிறங்குதவம்புரிவதுவும்பிரமவிசாரமுமுரித்தே. ௩0

இல்லறத்திலிருந்தவருக்கெவ்வுயிர்களிடத்தினிலும்
நல்லவழிபுரிகுவதுநாயகர்பூசையுமுரிய
சொல்லுகுருசேவையொடுதொல்பிரமசரியமுநூல்
ஒல்லுமுபநயனவினையுற்றவருக்குரித்தாமே. ௩க

அருமுனிவர்தாம்பிரமமானாலும்வெய்யவினை
மருவவருமோகாதிவந்தணுகாவெவ்வுலகும்
விரவுபுகழரசவவர்விளம்புமுடல்விழுமளவும்
பிரமவிசாரத்திருப்பர்பின்னமறவெனவுரைத்தான். ௩உ

வருணாச்சிரமமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உ௩உ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## க0-வது, இயமநியமாதியுரைத்தவத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

இத்திறத்தனகேட்டலுமின்னமும்
பத்தியும்பகர்தற்கருஞானமும்
புத்தியிற்பொருந்தப்புகலென்னுமவ்
வுத்தவற்கருண்மாதவனோதினன். க

அருமையாமறிவாகியவெம்முறை
ஒருமையாயநல்லன்பொடுஞற்றிய
கருமம்யாதெனினும்மதுகாண்கினற்
றருமமாமெனச்சாற்றுவர்மேலவர். உ

சுகத்தின்மேம்படச்சொல்லியஞானமாம்
மகத்தினனன்மஃபதியாயயாம்
அகத்துமேவுவமாகவாராதிக்கின்
நிகழ்த்துநித்தியனுருதிநீயரோ. ரு

மொழியுங்காலமோர்மூன்றினுந்தான்றனி
வழியுந்தேமலர்மாலையொன்றுய்நடு
ஒழியுமுள்ளமயக்கினுரகமாய்த்
தழையும்வெம்பயமுந்தால்போலுமே. ௬

அன்னவாறருமாயையினனடு
இன்னலாம்படைப்பாயதல்லாதினி
துன்னுவோற்குப்பிரமமுமொன்றெண
மன்னுகாலமோர்மூன்றும்வயங்குமே. ௭

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தருமன்முன்னியமநியமநற்றபசுசமதமம்வேள்விதக்கிணைமெய்
உரைதனந்தியாகஞ்சவுரியம்வித்தையூதியம்பண்டிதன்மூர்க்கன்
தெரியுநல்வழிதீவழியருந்தனவான்றெரித்திரனீசுரனநீசன்
மருவுறுங்குணமகுணம்புகலென்றுவணங்கலுங்காங்கெயன்வகுத்தான். ௬

அன்னவனிசைத்தவாறுனக்கிசைப்பமாசநீகேட்டிமுன்னருஞ்சீர்
மன்னியவியமநியமமென்பனதாம்வருமுயிர்க்கிதஞ்செயன்மவுனம்
பன்னுநம்பூசைசபதபம்புனிதம்பகருமெய்பொறைமுதலியவாம்
உன்னியசமமூண்மனத்தினையடக்கலுறுந்தமமிந்தியமடக்கல். ௭

கலிவிருத்தம்.

தகைசெய்கின்றதவமெனச்சொல்வது
புகர்செய்காமம்விடுப்பதுபுந்தியின்
மகமெனப்படுகின்றதுமற்றெமக்
ககமகிழ்ந்துபயனளித்தாற்றலே. அ

தாவிலாதநற்றக்கிணையாவது
பூவினோர்க்கருள்பொற்கொடையன்றுசொல்
ஆவிவேறென்றயர்வுறுமாந்தருக்
கோவிலாப்புகழ்ஞானமுதவலாம். கூ

பெருமையாயதனமெனப்பேசுதல்
தருமமாகுந்தனையிற்றவறிலா
உருமையாயதியாகமென்றோதுதல்
கருமமோடுவெங்காமம்விடுப்பதே. ௧0

சாற்றுகின்றசவுரியமாவதிங்
காற்றலுற்றமனத்தையடக்குதல்
ஏற்றமுற்றநற்சத்தியமென்பது
சீற்றமற்றுவேதாந்தந்தெளிவதே. கக

வித்தையாவதுவேதம்விடுத்தொரு
புத்தியாகப்பொருந்துதல்பொற்புறும்
உத்தவாமிகுமூதியமாவதெம்
பத்தியாமெனவேதம்பகருமே. கஉ

### தரவுக்கோச்சகக்கலிப்பா.

பந்தமொடுநல்வீடுபெருத்தறிவோன்பண்டிதனும்
அந்தமிலான்மாவாக்கையானென்பானேமூர்க்கன்
நந்தலிலெந்நூலறிதனல்லநெறிதீநெறிதான்
புந்தியொடுநிவர்த்தியிலாப்பொய்ந்நூல்பார்த்தறிவதுவே. கங

நல்லகுணஞ்சேர்தருவோனவையிறனவானுகும்
சொல்லுமகிழ்வில்லானேதுகளாருந்தரித்திரனும்
மல்லலுறுமீசனென்பான்வழங்குபுலத்தாசையிலான்
அல்லலுறுமாசைதனையடைகுறுவோனநீசுரனே. கச

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

குணமிஃதகுணமென்னக்குறிப்பதேயகுணமாகும்
கணமுறுகுணமீதென்றுங்கருதினகுணமீதென்றும்
மணமிகுதாமமார்பமனத்திடைமதித்திடாமை
இணையறுகுணமதாகுமென்னலும்வேந்துசொல்லும். கரு

இயமநியமாதியுரைத்தவத்தியாயம் முற்றிற்று.
ஆ திருவிருத்தம் உசஎ.
ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## கக-வது, மனத்தொருமைப்பாடுரைத்தவத்தியாயம்.

### அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

ஒளிதருகுணங்களென்றுமுறும்பழியகுணமென்றும்
தெளிதருவினதுவாக்காஞ்சுருதியுந்தெரிக்குமென்றால்
களிதருகுணுகுணந்தானுடிடாதிருப்பதெங்ஙன்
அளிதருகமலக்கண்ணுவையுறும்டியேனுள்ளம். க

உற்றவையுறவுநீக்கியுணுதுரையமுதுதன்னல்
பற்றுறுமிழுதையாயபணியின்வெவ்விடத்தின்மூழ்கப்
பெற்றிடுமெனதுநெஞ்சம்பிழையறநினைத்தியென்று
கொற்றவன்கூறநம்மான்கூறினன்றெரியமாதோ. உ

நலந்தருஞானயோகநவையிலாப்பத்தியோகம்
பலந்தருகருமயோகம்பகருமிம்மூன்றுமுன்னே
வலந்தருமாந்தருய்யவகுத்தனமிவையேயன்றிக்
கலந்தருமார்பநன்மைகாட்டவொன்றில்லைமாதோ. ரு

ஒழிந்தவர்தமக்குஞானயோகமூமுரைக்குமாசை
தழைந்திடாராகியாவுந்தவிர்ந்திடாதெமதுகாதை
மொழிந்திடல்கேட்கன்முன்னமுயன்றநற்றவத்திஞேர்க்கும்
விழைந்திடும்பத்தியென்னவிளம்பியோகமுநன்றுமால். சா

காமமொடுறைந்தமாந்தர்கருமயோகத்தின்வாழ்வார்
தீமையுநலனுமின்னோர்சேர்வர்மற்றவருக்கில்லை
மாமகமுதலகன்மம்வரும்பயன்விழையாதாற்றின்
நாமநற்குணத்தோடைந்தாய்நண்ணிடார்ஞானஞ்சேர்வார். ரு

பேதமற்றிருந்தஞானம்பிறந்திடுமளவுமெஞ்சீர்
நீதியுற்றிருந்தமாந்தர்நிகழ்த்துதல்கேட்குங்காறும்
ஓதுநைம்மித்திகத்தோடுற்றநித்தியகன்மங்கள்
ஏதமற்றியற்றல்வேண்டுமிறையவவியல்பின்மாதோ. சா

தேவருமாந்தராகிச்சேரவேணவாக்கூர்வாரால்
காவலவெனினுமாந்தர்கருதுதம்பிறவிமீட்டும்
மேவவேண்டுவரோவென்னின்வினவருமென்றேவேண்டார்
தாவில்வீடொன்றநிற்பார்சமன்விரைந்துறுமுனன்றே. எ

எறிந்திடுமரத்தின்வாழுமிருஞ்சிறைப்பறவையப்பால்
பறந்திடநினையாதாகிற்பயக்குமோர்நன்மையுண்டே
குறைந்துநாளென்னுங்கூர்வாளரிதரச்குன்றுமாக்கை
உறைந்துயர்நெறியினெட்டாவுயிர்க்குநன்குறுங்கொலம்மா. அ

மானிடவாக்கையென்னுமருவரும்பஃறிபெற்றும்
ஊனமில்குரவன்சொல்லாமோடமூய்ப்பவனேடெஞ்சீர்
ஆனதோரனுகூலக்காலனுகவும்பிறவிவேலை
தாணெழிதரவொண்ணுதான்றன்னையேகொல்வனன்றே. கூ

பொன்னுலகடைவான்காதல்புரிகுவீர்பொருவில்வீடு
துன்னுதிர்தருதுமென்றுசொற்றலுமேட்டைகூரார்
மன்னுமேகாந்தம்பற்றிமருவினவர்க்குவேறு
கொன்னுறுதீமையென்சொல்குணனென்கொல்குறிக்கினம்மா. க0

மனந்தொருமைப்பாடுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆரு திருவிருத்தம் உருஎ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

# கஉ-வது, தேசகாலமுரைத்தவத்தியாயம்.

## அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

தருமநற்பொருள்சொல்காமஞ்சார்தருபாக்குச்செய்யா
விரிதருவேதநூலால்விதித்ததங்கருமமன்பால்
வருணமாச்சிரமர்செய்யின்மருவுவர்குணத்தின்வண்மை
புரையுறுவினைசெய்வாரேற்பொருந்துவரகுணமன்றே. க

வருணமாச்சிரமந்தத்தம்வருவினைபுரியுங்காலைத்
தெரிவுறுதேசகாலஞ்செழும்பொருள்கருத்தாயோர்
கருமமந்திரங்களென்னக்கழறுமிவ்வாறின்பாலும்
அரசநற்புனிதம்பொல்லாவசுத்தமுண்டறியற்பால. உ

அந்தணர்க்கன்புசெய்யாவரசினிதுறையுநாடு
வந்துறுபகையைநீக்கிமாநிலங்காவல்செய்யா
வெந்திறல்வேந்துசேருமேதினியெமதுதொண்டை
நிந்தைசெய்பதகர்வாழுநெடுநகர்மூன்றுந்தீய. ங

கருங்கலைக்காட்டின்வைகாக்கண்ணகனுடுங்கையான்
நெருங்கலைப்புனறூவாதநிலனும்வெவ்வுவரினூர்ந்தே
இருங்கலைமதிபோல்வெண்மையெய்தியநாடுந்தீய
அருங்கலைமுழுதுந்தேரெம்மடியர்சேரிடனன்றுமே. ச

இவ்வினைக்கின்னகாலமியல்பெனவிதித்ததல்லால்
வெவ்வியகாலந்தானும்விழித்திடுஞ்சூதகாதி
கவ்வியகாலந்தானுங்கலகமாங்காலந்தானும்
செவ்வியநெறிசேர்வேந்தேசெப்புறுபுனிதமன்றே. ரு

செப்பியபொருள்களெல்லாந்தேசகாலத்தினானும்
தப்பருஞ்சுசியினோடேசாற்றியவசுசிசேரும்
அப்பொருட்கரியசுத்தியந்தணர்வசனந்தெண்ணீர்
ஒப்பருந்தபனனுதியுரைத்திடும்விதியினுண்டால். சு

சீதநீர்படிதலானுஞ்செழும்பொருளுதவலானும்
மேதகுதவத்தினானும்விளம்புநற்கருமத்தானும்
ஓதுமெம்மிடத்தினன்புற்றுறைதலினானுநீங்காக்
காதல்கூரரசசொல்லுங்கருத்தர்நற்புனிதஞ்சேர்வார். எ

நிந்தையில்வினையின்றூய்மைநிகழ்த்திடிற்பயன்வெஃகாது
தந்திரமறைசொல்லாறேதறைமிசைமுறையினூற்றல்
மந்திரசுத்தியென்னவழங்கியவாறிங்கோதின்
அந்தமந்திரத்தினல்லவரும்பொருளறிதலாமே. அ

தெரிவுறுமரபுநான்குஞ்செப்புறுநிலைகளுன்கும்
மருவியகுணத்தினேடேமறுத்திடுமகுணஞ்சொல்லின்
ஒருவழிக்குணமென்றேதலொருவழியகுணமாகும்
புரைதருமகுணந்தானும்புகலொருவழியினன்றும். ௯

தேசுறுமறையோர்க்கேற்றல்செப்புநற்குணமென்றாலும்
ஆசறுநிதியம்பெற்றோர்க்கத்தொழிலகுணமேயாம்
பூசுரர்தமக்குவேள்விபுரிவித்தல்குணமென்றாலும்
மாசறுமரசராயோர்க்கச்செயலகுணமாமே. ௧௦

சொல்லியதுறவுபூண்டோர்சுரிகுழலாரைச்சேரின்
அல்லல்செயகுணமாகுமாயினுமனைவிமாரை
இல்லறமியற்றுகிற்போரியம்பியநாளிற்றோய்தல்
நல்லநற்குணமேயாகுநான்மறைதெரித்தவாற்றால். ௧௧

பற்றறுகுணத்தினேடுபெழுதுறுகுணனுஞ்சொல்லின்
குற்றமினிவிர்த்தியல்லாக்கொடுநெறியடைந்தார்க்கல்லால்
சொற்றிடுநிவிர்த்தியென்னுந்தூநெறியடைந்துளோர்க்கு
மற்றவைவருவவில்லைமன்னவவுரைக்கின்மாதோ. ௧௨

அமரர்தமுலகுவேள்விக்கரும்பயனென்றவேதம்
இமையவர்புகழ்வேள்வியியற்றனெஞ்சியையவேண்டிக்
குமரவிம்மருந்தருந்திற்கொழுங்கனிதருதுமென்னும்
தமரினர்போலல்லாதுதரும்பயன்சழக்கில்வீடே. ௧௩

மன்னுநல்வேள்விசெய்யின்மறுமையினடையும்பேறு
பொன்னுலகென்றுசொல்வார்பூவையேபலமென்றன்னும்
கொன்னுறுகுணத்தார்போல்வார்கூறியபயன்வெஃகாமல்
அன்னநல்வேள்விசெய்யினரும்பயனழிவில்வீடே. ௧௪

இருள்படுகாட்டினூடேயிருந்துழல்சிதடராயோர்
தெருள்படுநகரந்தாமேசேரதாறிகலார்போல்
மருள்படுகாமமுன்னிவருவினைமுயலாநிற்போர்
பொருள்படுநலஞ்செய்வீட்டிற்புகுமதாறிகலாரே. ௧௫

தாமத்தான்மூடுங்கண்ணர்சூழ்ந்தண்மையிருந்துஞ்சாலைச்
சேமத்தான்மூடுமோமத்தீயினைத்தெரிகலார்போல்
காமத்தான்மூடுநெஞ்சக்கருமத்தோருலகமாயை
நாமத்தான்மூடுமுள்ளத்தம்மைநன்கறிகலாரே. ௧௬

பழுதுறவழியிற்றேன்றும்பரமமாமணுவின்கூட்டத்
தெழுமொலிவீற்றுவீற்றுவெழுத்தெனமனமுண்டாக்கும்
விழுமியவெழுத்துநாளுவேதமேமுதலவாகும்
தொழுதகுமவையுமொன்றேசொற்றிடுந்துணிந்துபார்க்கின். ௧௭

மருவியஞானகாண்டமந்திரகாண்டமென்று
கருமநற்காண்டமென்றுகருதுமவ்வேதமூன்று
உரைதருபவனும்யாமேயுஞற்றிடுபவையும்யாமே
அரசநன்ஞானத்தானேயறிந்திடுபவனும்யாமே. க௮

தேசகாலமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உஎரு.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## கரு-வது, தத்துவமுரைத்தவத்தியாயம்.

### கலிவிருத்தம்.

இத்திறமுன்னமிசைத்தருள்கண்ணன்
பத்துமுதற்சிலபற்பலசெய்யும்
தத்துவமெத்தனைசாற்றுதிநீயென்
றுத்தவனோதவுணர்த்தினனன்றே. க

### எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

உரைத்தநாலாறுதத்துவத்துடனேயுயிரொடுமீசனைக்கூட்டிப் [ய்
பெருக்குமையைந்தோடொன்றெனச்சில்லோர்பேசுவர்சிலர்களையைந்தா
விரித்திடுமுயிரோடீசனென்றுகவிளம்புவர்சிலர்சிலர்சுருக்கிச்
சுருக்கியமொழிவர்தத்துவமெல்லாஞ்சொன்முறையடங்கியாங்கிருக்கும்.
வழங்குதத்துவத்தின்கூட்டமாமாக்கைமாய்தலும்பிறத்தலுமதிக்கின்
விழைந்திடுசனவிற்பர்பலவாக்கைவிழைவதுமறைவதும்போன்மால்
தழைந்தமெய்ந்நெஞ்சமறத்தலேமரணஞ்சடமுறநினைத்தலேசனனம்
ஒழிந்திடுமரசபுருடனுக்கென்றுமுளைத்தலும்மிறத்தலுமிலையால். ௩
இருவினைக்கீடாவேறுடல்படைத்தீங்கியங்குறுமுடலையுமறந்து
மருவியதுயரிற்சாக்கிரத்தறிவுமறைதல்போன்முன்னுறுமறிவும்
தெரிதரலின்றியாதனையுடலஞ்சேர்ந்துமற்றெனதெனத்தெளிந்து
பெருகிடர்க்கிடனுய்ப்பிறங்கிடுமனமிப்பெற்றியாற்பிறந்திறந்துழலும். ௪
இன்னமிலிங்கசரீரமேயுடலத்தெய்தலுநீங்கலுமல்லால்
மன்னியபுருடன்றனக்கவையின்றுன்மற்றவன்சுயம்பிரகாசன்
துன்னிடுஞ்சடனச்சடத்துருவாகிச்சொற்பலவாம்பிரகிருதி
பன்னுபற்பலவாந்தன்மைமற்றுரைக்கிற் படைத்ததத்துவங்களாவனவே.

போற்றுநீணதிபோற்பொங்குவெந்தழல்போற் பொருந்தியபற்பலப லம்போல், சாற்றுமோர்கணத்துக் கொருகணமாக்கைதரைமிசைநாசமுற் றிருக்கும், தோற்றுமோர்புருடன்சொல்லியவுடல்சேர்தொகுவினைபொரு ந்தலெவ்வாறேல், ஆற்றுநீரலையந்நீருறுமாத்தினருமிழலடைந்தவாறுமால்.

பொருந்தியயாக்கைபுணர்ந்தவவ்வினையப்புருடனுக்கில்லைமற்றென்னின்
வருந்தியிங்கிவ்வாறறிவதென்னெனின்மதியுறவறிந்தவர்க்கன்றித்
தருந்துயர்போகத்துற்றிடுவிருப்புத்தவிர்ந்தொழியாதிகலாச
திருந்தறிவில்லோர்யாக்கைதாமென்றேதினந்தினம்பிறந்திறந்துழல்வார்.

தத்துவமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உஅஉ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## கச-வது, நிந்தைபொறுத்தவத்தியாயம்.

---

### கலிவிருத்தம்.

வெய்யவர்செருக்கினும்வெகுண்டுபலநிந்தை
செய்யினுமதிக்கினிவைசேர்கனவுபோன்மால்
பொய்யெனமனத்தொடுபுகன்றிடர்பொறுக்கின்
மையலறுமென்னவிறைமன்னவன்வழங்கும். க

ஒறுக்கும்வகையொன்னலருடற்றுபடைமெய்புக்
கறுக்கும்வகையாற்றினுநினன்பரறிஞர்க்கு
வெறுக்கும்வகைசெய்யவரும்வெய்யபலநிந்தை
பொறுக்கும்வகையெவ்வகைபுகன்றருள்செயென்றான். உ

அவந்திபுரியுற்றுறையுமந்தணன்முன்முனியா
துவந்திடர்பொறுத்தகதையொன்றுளதுனக்குத்
துவந்தவினைபோகவதுசொல்குதுமெனக்கண்
சிவந்தெழுபணித்தலைநடித்தபுயல்செப்பும். ௩

அந்நகரின்வாழுமறையோனளகையாளும்
மன்னவனெனப்பொருள்வருந்திநனியீட்டித்
தன்னையடைவுற்றவறிஞோர்தமரினோருக்
கின்னலறவொன்றுமுதவானினிதியம்பான். ச

உற்றமனையாளொடுமுவந்தனதெவிட்டப்
பெற்றபுதல்வர்க்குநனிபெட்பினுடனீயான்
செற்றமொடும்வெவ்வியசினத்தொடுமுழந்து
குற்றமொடுமிக்கநிதிகொண்டுறையுநாளின். ரு

கள்ளர்களினுமுறைகாவலவனும்
கொள்ளுமுறையென்றெழுகுடித்தமரினுனும்
நள்ளிருளினில்லினலிநண்ணழலினுனும்
உள்ளபொருள்யாவுமொழிவுற்றிடவயர்ந்தான். சா

அயர்ந்தவனரும்பொருளடைந்திடுமிடத்தும்
வியந்துநணிகாத்தவைவிருப்பினுறைபோதும்
நயந்தபொருள்போம்வழியுநண்ணுமிடரென்று
உயர்ந்தவுரவோர்களினுளந்தெளிவுகொண்டான். ௭

அறைந்தநிதியாதியவசத்தெனவவ்வாசை
மறந்துமெய்யறிந்துமகிழ்கொண்டமறைவல்லோன்
துறந்தமுனிவேடமொடுதொன்னகர்திரிந்தான்
நிறைந்தபதியோர்கணமுநிந்தைசெயமாதோ. ௮

கண்டுசிலர்கன்னலொடுகந்தைகள்பறிப்பார்
தண்டுசிலர்கைக்கொடுதருக்கொடுமகைப்பார்
உண்டுசிலவஞ்சமிவனுள்ளமிசையென்று
மண்டுசினமொன்றுசிலர்வைதனரொறுப்பார். ௯

மோனமெனவுற்றதெவனீமொழிதியென்பார்
ஈனனிவனென்றுசிலர்மிச்சில்களிறைப்பார்
போனபொருளென்றுமெய்புழுங்கியிவன்வேடத்
தானதுகரக்கநிதியையமிலையென்பார். ௧௦

கவ்வைநெடுவேலைவளைகாசினியர்வெய்யோர்
இவ்வகையறிந்தவனியற்கையறியாமே
அவ்வியமனத்தினொடடைந்தஞரியற்றத்
திவ்வியமுனிக்கரசுசிந்தையொடுசெப்பும். ௧௧

### வேறு.

நிந்தையேமுதலாயநிகழ்த்திடாச்
சிந்தையேமனங்கற்பனைசெய்யுமே
மைந்தையேயுமனமடங்காவழி
ஐந்தையேயும்புலனெனங்கடங்குமே. ௧௨

நல்லசத்துவஞானமுதலிய
ஒல்லுகிற்குமுபாயத்தொடுங்கிநற்
சொல்லுகிற்குமனத்தைத்துணிவொடும்
வெல்லுகிற்பதுவேவென்றியாகுமே. ௧௩

வளங்கொண்ஞானவழக்குந்தவமுநல்
உளங்கொடானமுதலருளாதியாம்
களங்கமற்றகருமநல்வெண்மையாய்
விளங்குசத்துவத்தின்வினையென்பரே. ௧௪

உவந்துபோகமுளுற்றியநல்வினை
சிவந்தராசதத்தின்செயலென்பரால்
அவந்தரும்வினையாவுங்கருமையாய்
நிவந்ததாமதத்தின்னிகழ்கன்மமே. கரு

இன்னணங்குணத்தின்வினையாவையும்
பன்னுகின்றருநெஞ்சுபடைத்திடும்
சொன்னவல்வினைசூழ்ந்ததுபோன்மலால்
உன்னுகின்றவுயிர்க்கவையில்லையே. கசு

எங்குமோடியிடருறுமாமனம்
தங்குமோநிலையுற்றெனச்சாற்றிடின்
கங்கையாள்பெறுகாவலன்முன்மனம்
அங்கண்ஞாலம்வியப்பவடக்கினன். கஎ

பகைவர்மற்றிவர்பற்றுடையாரிவர்
மிகவருத்தினர்வெய்யவர்வேண்டினோர்
அகலவற்புறுமன்புசெய்தாரெனப்
புகல்வர்சற்றும்பொருந்தறிவின்மையோர். கஅ

உயிரெனச்சிலவுற்றிடுமுண்மையும்
அயர்வொழித்தவொன்றுகுமெவ்வாக்கையும்
வெயிறழைத்தநீரென்னவெம்பூதத்தாய்ச்
செயிர்தழைத்தலிற்செப்பினென்றுகுமே. கசு

உண்மையாயவுயிருக்குவகைசெய்
வண்மையாந்துதிநிந்தனைமற்றிலை
திண்மையாயவுடற்கவைசேரினும்
எண்மையாவுமியம்பினென்றுகையால். உ0

எண்ணுநிந்தைசெய்வோரையென்செய்குதும்
கண்ணிற்கைப்படிற்கையையென்செய்வதே
தண்ணுறுஞ்செழுந்தாலுற்றெயிறுறின்
பண்ணமைந்தவப்பல்லையென்செய்வதே. உக

இன்னதன்மையிசைத்தங்குளத்தொடும்
பன்னுநிந்தைபலவும்பொறுத்தவன்
தன்னையெங்கிழமைப்பொருடானென
உன்னியுண்மையினென்றுபட்டானரோ. உஉ

என்றுகண்ணனிசைத்தலுமுத்தவன்
ஒன்றுநிந்தையுவந்துபொறுக்குவன்
நன்றுநன்றினியென்றுநலந்திகழ்
மன்றல்செய்தமலர்ப்பதம்போற்றினன். உரு.

செம்மைநங்கதைத்தேறலருந்தினர்
தம்மைநன்குணர்தன்மையினல்வரு
வெம்மைநிந்தைபொறுத்துவிருப்புடன்
மும்மையற்றுமுயங்குவர்முத்தியே. உச

நிந்தைபொறுத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩0சு.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## கரு-வது, குணங்கலத்தலுரைத்தவத்தியாயம்.

---

### கலிவிருத்தம்.

பவந்தருமுக்குணத்தின்பயனையோர்ந்
தவந்தருமற்றவையென்றறிந்தலால்
துவந்தவல்வினைத்தோற்றம்விடாதெனச்
சிவந்தபூமகட்சேர்ந்தவன்செப்புமால். க

ஞானமேமுதலாகியநல்வினை
ஆனபோதருஞ்சத்துவமென்பரால்
மானமாதர்தமாசையின்வைகுவோன்
ஈனமோங்குமிராசதனென்பவே. உ

துஞ்சல்வெஞ்சினஞ்சோம்புகொலைமுதல்
வஞ்சவல்வினைவந்துடன்வைகுழி
எஞ்சலில்லையெனச்சொற்றமகுணம்
நெஞ்சுநின்றுநிகழ்ந்தனனென்பவே. ௩

சத்துவத்தொடுசாற்றுமிராசதம்
ஒத்திருக்கினுளத்திலறம்பொருள்
சித்தமன்புறுமின்பந்தெளிவினல்
முத்தியென்னமொழிந்தவைமூன்னுவார். ச

தாமதத்தொடுசத்துவஞ்சார்ந்தவர்
தீமைசெய்திடுஞ்சோரலர்ச்செற்றிடின்
பூமலர்த்திருப்புங்கவனல்லறம்
ஏமமுற்றிங்கியற்றுதுமென்பரால். ரு

ஓங்குராசததாமதத்துற்றவர்
தீங்கிறும்பொருள்சேர்த்துபலன்பெற
வாங்குநீர்த்திரைவையகமேலறம்
நீங்கலாதநெடுவினைசெய்வரே. சு

இறக்குங்காலத்திராசதமுற்றவர்
பிறக்குங்கான்மனுடப்பிறப்பாகுவர்
அறத்தின்மேவருஞ்சத்துவராகின்மேல்
சிறக்குந்தேவரெனத்திகழ்வார்களே. ௭

சாகுங்காலத்தமோகுணஞ்சார்ந்திடின்
சேகுசேர்நரகத்திடைச்சேர்வரால்
மோகமூன்றுகுணமுமுன்றொரெனின்
ஏகமாகுவரெம்மிற்பிறிந்தரோ. ௮

கூறுமூன்றுகுணமுமொன்றாயெழில்
மாறுசெய்பவர்மாய்ந்துவளர்திகழ்
ஈறில்செல்வமியையினெழிற்பொனல்
வேறொர்கோயில்விளக்குவமென்பால். ௯

தாமமார்பநற்றத்துவமுற்றவர்
காமமற்றுக்கருமமியற்றுவார்
நாமநல்வினைநற்பலன்முன்னியே
சேமமாருமிராசதர்செய்வரே. ௧0

வெய்யதாமதமாங்குணமேவினர்
செய்யுநல்லறந்தீமையென்றோர்தரும்
துய்யசிந்தையரன்றித்துகளற
ஐயமற்றங்கனுதினமாற்றுவார். ௧௧

பிணங்கிநின்றவிப்பெற்றியமுக்குணம்
இணங்கிநின்றெமதேவலியற்றுமால்
மணங்கடந்தமதுமலர்த்தாரினாய்
குணங்கடந்தவரேமுத்திகூடுவார். ௧௨

குணங்கலத்தலுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ருகஅ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௧௯-வது, பூசனையுரைத்தவத்தியாயம்.

### கலிநிலைத்துறை.

இன்னவாறறியாதவராயினுமெவரும்
மன்னவாறலைநீர்மலராதிகண்மருவித்
துன்னவாவொடுபூசனைசெய்தெமைத்தொழினே
அன்னவாசைகடுய்த்தபின்னும்மெமையடைவார். ௧

என்றுகூறலும்வருணவாச்சிரமர்களிணர்த்தார்
மன்றலோதியர்பின்னவர்வழுத்துமவ்வகைமுன்
கொன்றைவேணியனாதன்முதலினர்குறித்தார்
நன்றுகூறெனுமரசனுக்கரிந்தமனவிலும். ௨

இலங்குவைதிகந்தாந்திரிகமிச்சிரமென்னப்
பலங்கொள்பூசனைமூவகையாமெனப்பகர்வார்
துலங்குபூசனைக்கேற்றவர்செய்திடத்துணிவார்
வலங்கொள்வேதமந்திரங்களிற்செய்தல்வைதிகமே. ௩

குற்றமற்றதாந்திரிகபூசனைச்செயல்குறிக்கின்
உற்றபஞ்சராத்திரவைகாநசமுறையுஞற்றல்
முற்றுணர்ந்தவர்முழுமறையாகமமுயறல்
சொற்றமிச்சிரபூசனையெனத்துலங்கிடுமே. ௪

மணம்பொருந்தியசந்தனம்வாலுகம்வனப்பார்
பணம்பொருந்தியமணிமுதன்மணிபலதாருக்
கணம்பொருந்தியலோகநல்லோவியங்கவின்கல்
குணம்பொருந்தியமனமெனக்கூறுமெட்டிடத்தும். ௫

பூசைசெய்வரப்பூசனையிருவகைத்தாமால்
பேசினவ்வகைசாற்றிடுந்திரமெனப்பெறுமால்
தேசுதந்திடுமறையினுவாகனஞ்செய்து
மாசிலுத்தியாபனஞ்செயல்சரமெனவகுப்பார். ௬

உரைத்தசீர்செயாவாகனமுத்தியாபனத்தால்
விரித்தபூசனையன்றிநிச்சலும்விழைவிருப்பால்
தெரித்தமந்திரத்தான்முறைமுறைசெயும்பூசை
தரைத்தலத்தினிற்றிரமெனுந்தனிப்பெயர்சாரும். ௭

புனிதராகியுள்ளன்பொடுபூசனைக்கேற்ற
இனியபல்பொருளியைந்திரண்டெட்டுபசாரத்
தனசபூசனைகாமமற்றுற்றுவராயின்
வினையினொன்றிடார்வீடவர்க்களிக்குதும்விழைவால். ௮

ஆசையுற்றவர்பூசனையாற்றினுமவர்தாம்
நேசமுற்றனவழங்குவநினைத்தனபொசித்தோர்
பேசுமுத்தியும்பெறுகுவர்பிறங்கிவையல்லால்
பாசிலைக்கொடுபழிச்சினும்பலனினிதளித்தும். ௯

ஆரியந்தமிழாதிமற்றவரவரெழுத்தாம்
சீரியங்கியபதத்தொடையாற்றிருமகள்சேர்
வேரியந்துழாய்விமலவென்றெந்தமைவிளம்பின்
மாரியஞ்சுகைம்மன்னவவளிக்குதுமகிழ்ந்தே. ௧௦

நிகரின்மன்னவனேசமுற்றெமக்கிவணிலவ
நகரினிற்றவாத்திருவிழாநடத்திடுநலத்தோர்
மகரவாரிசூழ்மாநிலத்தினுமறுமையினும்
புகரிலும்பரும்புகழ்தரப்போகமுற்றுறைவார். ௧௧

பூசனையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௫௨௯.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௧௭-வது, நைம்மிசமடைந்தவத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

ஆக்கையும்புலனுமன்றாலசைவுறுமனனுமன்றால்
வீக்குறும்வினைசேர்மன்றவெவ்வகங்காரமன்றால்
போக்குறும்புந்தியன்றாற்பொருளெனவிவ்வாறெல்லாம்
நீக்கிமற்றறிவுதானேநித்தியப்பொருளென்பாரால். ௧

இப்பியேயிரசிதம்போலிலங்குறுதன்மைத்தென்ன
ஒப்பிலாப்பிரமந்தானேயுலகுபோற்றோற்றிற்றென்று
செப்புமுள்ளுணர்வினாலேதேர்ந்துகொண்டிருப்போர்தம்மைத்
தப்பிலாஞானயோகத்தலைவரென்றியம்புவாரே. ௨

கலிநிலைத்துறை.

எங்குமாய்நிறைந்திலங்கியஞானவாரிதியின்
பொங்குதெண்டிரைநுரைவரும்புற்பதமெனவே
அங்கண்மாநிலத்தொடக்கத்தவுலகங்களனைத்தும்
தங்கிநின்றெழும்வேறுவேறறிவிலர்சாற்ற. ௩

மறிந்துதோன்றியதிரைநுரைகுமிழிமற்றனைத்தும்
சிறந்துதோன்றுமந்நீரலாற்றெறிக்கின்வேறிலைபோல்
குறைந்துதோன்றியவுலகங்களனைத்தையுங்குறிக்கின்
நிறைந்துதோன்றுமப்பரமலாணிகழ்த்தவொன்றிலையால். ௪

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

ஆதியுநடுவுமற்றவந்தமுந்தானொன்றாயும்
ஓதியநடுவிற்பல்பூணுருவொடும்பெயர்வேறுற்றுத்
தீதறவிளங்கும்பொன்னிற்செகத்துருநடுவிலுற்றுப்
பேதமினடுவுமுன்னும்பின்னுமேபிரமம்வைகும். ௫

மனமெனுமாசனாலேமருவுகற்பனைகளாகி
புனைவுறுபெயருலோகம்பொருந்துதல்குறித்தலாது
நினைவுறுபரமாநந்தநித்தியப்பொருளுக்காதி
வினைநடுவந்தமென்னவிளம்பலோர்தன்மைத்தன்றால். ௬

உன்னின்யாமன்றிமற்றென்றில்லையாலும்வோயென்னத்
தன்னிலையறியுமாறுதாமரைக்கண்ணன்கூற
மன்னுமெய்ம்மயிர்சிலிர்ப்பமாமலர்க்கண்ணீர்வார
இன்னதென்றியம்பலாகாவின்பமாகடலுளாழ்ந்தான். எ

வழுத்தருந்தகையவின்பவாரியினழுந்திமூழ்கும்
பழுத்தவன்புடையோன்செய்யாப்பழமறைப்பொருளான்கங்கை
சுழித்தலையெறியும்பொற்றாட்டுணைமலர்க்கமலப்போதில்
விழிப்புனல்பாந்துபாயவீழ்ந்தனனிறைஞ்சினானல். அ

கலிவிருத்தம்.

சேயதாட்டாமரைசென்னிசூடிய
தூயனையருந்தவர்சூழல்சேர்கென
மாயவன்பணித்தனன்மறுக்கவல்லனே
போயினனிருகணீர்பொழியுமன்பினான். கூ

நீக்கருமன்பினனேமியானைப்பின்
நோக்கினனோக்கினனோக்கிநோன்மையான்
ஆக்கினன்சிந்தையுளமரவையனை
வாக்கிநிற்றுதித்தனன்மறுகியேகினான். க0

அணிதிகழ்நைம்மிசாரணியத்தன்பினில்
தணிவிலவ்வுத்தவன்சார்ந்ததன்மைசெம்
மணிபுனைமன்னமுன்வழங்கினாமெனாத்
துணிவுறுசுகமுனிசொல்லினனரோ. கக

நைம்மிசமடைந்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩௪0.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## கஅ-வது, தன்னுடைச்சோதிக்கெழுந்தருளிய வத்தியாயம்.

கலிவிருத்தம்.

என்றலுமன்னவனிசைத்தசாபத்தீ
ஒன்றியயாதவருற்றதன்மைநீ
மன்றமாதவவினிவழங்குவாயெனப்
பொன்றியவாறவட்புகறன்மேயினான். க

மண்ணினும்வானினுமருவுற்பாதமற்
றெண்ணிலகண்டனமீங்குவைகிடல்
நன்றொருகன்னலுநயக்கொணாதெனக்
கண்ணனுத்தவனொடுகெழறினனரோ. உ

கோதையரின்னிளங்குமரர்மூப்பினர்
ஓதுமிங்கரிடத்தொருங்குவைகுற
வேதியர்க்கரும்பொருள்வெறுப்பகல்கிமற்
றேதமில்லவரொடுமேகிவல்லையே. ௩

பாமகட்காரியம்பகரும்பேர்பெறு
காமர்வண்ணதிகடல்கலக்குமோர்துறை
நாமநன்னீரிடைநயந்துதோய்தரின்
தீமையற்றிடுமெனச்செல்வன்செப்பினன். ௪

திங்கணற்றவமுனஞ்செய்துதீங்கறப்
பொங்கொளிசேர்பிரபாதம்போம்பொருட்
டங்குறையந்தணர்க்காக்கநீணிதி
மங்குலின்வழங்கினர்வழிப்பட்டாரரோ. ௫

தேரினிற்சிலர்சிலர்சினக்கடாமழைக்
காரினிற்சிலர்சிலர்கவனவாம்பரித்
தாரினிற்சிலர்சிலர்தயங்கவேகினர்
சீரினிற்சிறந்தவர்சிவிகையேறினர். ௬

குடவளையலறவெண்கூந்தன்மாத்திரள்
உடைதிரையெனவெழுந்துழைதொறீண்டமா
கடலொடுகடல்பொரக்கலக்குங்காட்சிபோல்
மிடல்கெழுதார்ப்படைவெள்ளஞ்சென்றதால். ௭

விரைசெலுமிவுளிமேல்வேந்தர்சூழ்வரக்
குருதிவேலரசிளங்குமரரீட்டமோ
டொருதனியாழியானுலகம்போற்றிய
திருமறுமார்பனுஞ்செலவயர்ந்தனன். ௮

வரையினிற்பொலிதருமத்தயானையும்
திரையினிற்பொலிதருபரியுந்தேர்களும்
விரைவினிலுடன்வரவீரரோடுநல்
நிரையினிலேறியந்நீத்தநீங்கினர். ௯

ஏர்பெறுபேர்பிரபாதமென்றுசொல்
சீர்பெறுதலத்திடைச்சென்றுவாணியின்
பேர்பெறுநதிகடல்பெயருமோர்துறை
தார்பெறுபுயத்தவர்தலைப்பட்டாடினர். ௧௦

போந்துநீர்படிந்தவப்புகழினரெலாம்
ஏய்ந்தநல்விரதமுற்றிருந்தகாலையின்
பாந்தளினடித்தவப்பரமன்மாயையால்
மாந்தினர்மதுப்பலமயங்கினருளம். ௧௧

கூடினர்மதுக்களிகொற்றமேம்படச்
சூடினர்சுரும்புணத்தொடுத்தபைந்தொடை
ஆடினரார்த்தனராயுதங்களால்
வீடினரெனவெகுண்டமர்விளைத்தனர். கஉ

கண்ணன்முனல்கியகாமன்றன்னெடும்
தண்ணறுந்தொடைபுனைசாம்பனேற்றனன்
அண்ணலங்களிற்றினைக்குரோன்முன்
நண்ணினன்சமர்செயநலஞ்செய்போசனே. கங

தீத்திரள்பொழிதருசெய்யதாமரை
நேத்திரத்தானகிருத்தனீணிலம்
காத்தினிதளிப்பவன்கருத்தையோர்கிலன்
சாத்தகிதன்னெடுசமருக்கேற்றனன். கச

இத்திறமுன்னவரிளையர்மைத்துனர்
ஒத்துறைமருமகருவந்தமாதுலர்
புத்திரர்தாதையர்புழுங்கித்தங்களின்
மத்தவெங்களிறெனமலைந்திட்டாரரோ. கரு

உள்ளுறுஞ்சினத்தமொழிமினீரென
விள்ளருந்தனிமுதல்விலக்கவவ்வழி
எள்ளினர்புணர்ப்பறியாதயாதவர்
தள்ளினர்தழலுறுபதங்கத்தன்மையார். கசு

முன்னவரிவரிவர்முதியர்மாதுலர்
பின்னவரிவரிவர்பெரியர்தாதையர்
என்னவங்கெண்ணிலர்யாருமீறுசெய்
ஒன்னலரெனநினைந்துருத்துடன்றனர். கஎ

பல்லுளைப்புரவியும்பருமயானையும்
வில்லுடைத்தேர்களும்வேறுவேறுசேர்
சொல்லுடைவெற்பெனத்துணிபட்டோங்கின
எல்லுடைப்படைகளுமிற்றவென்பவே. கஅ

காரகங்கிழிக்குமின்கடுக்கும்வாளினுல்
போரகத்திறந்திடாப்பொருநர்யாவரும்
பாரகஞ்சூழ்கடற்பரப்பினுங்கெழும்
ஏரகத்தார்பொருதிறந்திட்டாரரோ. கக

துன்றிருங்கிளையினஞ்சுழல்வெங்காலுற
ஒன்றொடொன்றுரிஞ்சியாங்குருத்ததீச்சுட
நின்றவவ்வனத்தினீறுகிநீங்கல்போல்
பொன்றினர்யாதவர்புனிதன்மாயையால். உ0

முருகுறழ்காளையர்முனையின்மாய்தல்கண்
டொருகுழையொருவன்மூதலகஞ்சேர்தர
விரிசினையாலிலைதுயின்றமேலவன்
அரசினன்னிழலிடையடைந்துவைகினன். ௨௧

கலிநிலைத்துறை.

பாட்டாயிரம்வண்டுறைபங்கயப்போதின்மீது
வேட்டாயிரஞ்செங்கதிர்வெய்யவன்சூழ்தலேபோல்
சூட்டாடரவந்தொழுதேத்தநடித்ததூய
தாட்டாமரைமேன்மறைநூபுரந்தாழ்ந்திலங்க. ௨௨

நன்காட்டுகின்றகளபந்துறுநான்குதோளும்
பொன்காட்டுகின்றமணிமார்வமும்பொற்புவாய்ந்த
தென்காட்டுகின்றவடவெற்பெழில்சேர்ந்துகாட்ட
மின்காட்டுகின்றகருமாமுகின்மேனிகாட்ட. ௨௩

பஞ்சாயுதமும்பகர்தேவுருக்கொண்டுமேவ
அஞ்சாரனீலவரைசூழ்ந்தவிராழிவெய்யோன்
எஞ்சாதகாந்தியெனவேமணிச்செம்பொனுடை
மஞ்சாயொளிருந்திருமேனிவயங்கமாதோ. ௨௪

கோலப்பிறையுங்கொழுஞ்செஞ்சுடர்கொண்டதேவு
நீலக்கடலினிலவிற்றிகழ்கின்றதென்னப்
பாலுற்றவேலைப்படுசெம்மணிப்பைம்பொனாரம்
மாலைத்துளவத்தொடுமால்வரைமார்பின்மின்ன. ௨௫

இணையுற்றுவந்தகதிரோரையிரண்டுபோலும்
அணியுற்றசெந்தாமரையாமெனநாளுமேவித்
துணியுற்றுடல்வெம்மறுவாய்மதிதோற்பவென்ற
மணியுற்றகோலக்குழைவாண்முகம்வாய்ந்தமாதோ. ௨௬

பொன்னுடையுற்றகுறங்கொன்றினிற்பொற்புவாய்ந்த
மின்னாணிசேரொருதாண்மலர்மேவவைத்தாங்
கந்நாண்மலர்த்தாளமரேசரடைந்துவாழ்த்தத்
தன்னுருவைத்தனிநோக்கித்தயங்கினனே. ௨௭

தேனென்றுதண்ணந்துளவோன்றவர்செப்புசாபம்
தானென்றிரிற்பத்தகைசெய்துமயக்கலாலே
கானென்றுவேடன்சரனென்பவன்காட்டின்மேய
மானென்றுதாளிற்றொருவாளிவழங்கினனால். ௨௮

மொழிகின்றவாளிவிடுத்தொல்லைமுன்சென்றுகண்டாங்
கழிகின்றநெஞ்சத்தினனாகியயர்ந்துதாரை
பொழிகின்றசொண்டலெனநின்றுபுலம்பிநீத்தம்
வழிகின்றகண்ணனடிவீழ்ந்துவழுத்தினனே. ௨௯

கண்ணாகருணைக்கடலேகவினோங்குநீல
வண்ணாவனசமலர்மேலவன்மங்கைபாகன்
விண்ணோரறியாநினையெங்ஙனம்வேடனாகி
எண்ணாதியற்றும்பழியேன்றெளிந்தேத்துமாறே. ௩0

என்னுஞ்சரனையெதிர்நோக்கியிரங்கலென்னின்
மன்னும்முலகினுயிரெங்கும்வதிந்துளேன்மற்
றுன்னின்னுறைந்துவினைசெய்யவுஞற்றினேன்யான்
பொன்னின்றிலங்குமுலகெய்துதிபோதியென்றான். ௩க

அவ்வாறிசைத்தவநந்தன்கழல்சூழ்ந்துபோற்றி
வெவ்வாளிவிட்டோன்மிடல்யாக்கையினோடுமேவி
எவ்வானவரும்மிறும்பூதடைந்தேத்தநாளும்
செவ்வாந்தவஞ்செய்பவர்சேர்நெறிசென்றுசேர்ந்தான். ௩உ

கலிவிருத்தம்.

மண்ணியதேரொடுமருவுதாரகன்
கண்ணனையவ்வழிக்காண்குறானெனவண்
ணண்ணினனெனத்துழாய்நாற்றந்தேர்ந்துதேர்ந்
தண்ணலச்சுதனைவந்தடிவணங்கினான். ௩௩

நேடினனெங்கணுநின்னைக்காண்கலேன்
வாடினன்றிசைத்தனன்வழியுந்தேர்கலேன்
கூடினனினாதடிகுளிர்ந்ததுள்ளமும்
மூடியதுயரிருண்முற்றும்போயதால். ௩ச

திசைகளுந்தெரிந்தனவென்றுசெப்புழி
இசைதரும்புட்கொடியியைந்துநோலர்
தசையுறுபடைக்கலஞ்சாரத்தேரும்வான்
மிசையெழத்தாருகன்வியந்துநோக்கினான். ௩ரு

காமருதேரவன்கைவிதிர்ப்பவான்
மாமணிவண்ணனைவலங்கொண்டேகலும்
தாமரைக்கண்ணருடழையவைகிய
தேமறைச்சிலம்படிச்செல்வன்செப்புமால். ௩சு

தேவகிகொழுநனைச்சென்றுசேர்ந்திவண்
கோவடுகுருதிவேற்கொற்றயாதவர்
சாவினையடைந்ததுந்தயங்குதாமநாம்
போவதுபுரிந்ததும்புகன்றுபின்னரும். ௩எ

ஏருறுதுவரையையேழுநாளினில்
வாரிதிகொள்ளுமவ்வாரிகொள்ளுமுன்
சேருநரிந்திரப்பிரத்தஞ்சேர்க்கெனத்
தாருகதனஞ்சயன்றனக்குச்சாற்றென்றான். ௩அ

எம்முடையானஃதிசைப்பக்சேட்டலும்
விம்மினனேங்கினன்வெய்துயிர்த்தனன்
பெய்ம்முகிலெனக்கணீர்பெருக்கினான்விழுந்
தம்மவென்செய்வலென்றரற்றிமாழ்கினான். ௩௯

மன்னுநம்மாளுடைவள்ளறேற்றிநீ
என்னைவந்தடைகுதியென்றுசொற்றனன்
தன்னுளந்தேற்றலுந்தடுக்கவல்லனோ
பின்னுறும்பார்வையான்பெயர்ந்துபோயினான். ௪௰

சுந்தரனேகுதமெருழுதுகாண்குற
உந்தியம்போதிடையுதித்தநான்முகன்
இந்திரனைம்முகனிலேகர்தம்மொடும்
அந்தரத்தடைந்தனனன்புற்றேத்துவான். ௪௧

முக்கணன்முதலியமொய்யுயிர்க்குழாம்
ஒக்கநன்கிழைக்குமாறுதவினாயெனை
மக்களிலொருவனாவந்துதோன்றினை
சிக்கறநின்செயறெரியற்பாலதோ. ௪௨

அச்சுதனநந்தனென்றருமறைக்குலம்
நிச்சலுங்கழறுமானின்னைநீயெனே
கொச்சைமக்களிற்பலகோலங்கோடிநின்
மெய்ச்செயலிற்றெனவிளம்பவல்லனோ. ௪௩

நிலையுறவறநெறிநீடுதீவினை
குலையுறச்செய்குநர்க்குறிக்கினின்னின்யார்
மலரவனரனொடுவழுத்தியின்னணம்
தலையஃதிறைஞ்சினன்சரணிற்றாழ்ந்தனன். ௪௪

மனமகிழ்ந்தருள்பெறீஇவணங்கிவான்மிசைப்
புனைமுடிவிண்ணவர்புதியதேறல்பாய்
பனிமலர்சொரிந்துபல்லியந்துவைப்புறத்
தனிமுதலுயர்பரந்தாமமெய்தினான். ௪௫

குண்டலம்வெயிலெனக்குலவுவாண்முக
மண்டலமதியெனமாயனேகுதல்
விண்டலநிறைந்தெழுவிரிஞ்சனாதியர்
கண்டனர்சிலர்சிலர்கண்ணிற்கண்டிலர். ௪௬

தற்பரஞ்சுடர்மிகத்தயங்குகாந்திய
நற்பதக்கேகுதனயந்துபோற்றினர்
அற்புதமடைந்தடைந்தமரர்யாவரும்
பொற்புறுந்தத்தமபதியிற்போயினார். ௪௭

தாங்கருந்துயர்மொழிசாற்றக்கேட்டலும்
தேங்கமழ்தார்வசுதேவன்றேவகி
ஆங்குறையுக்கிரசேனனாதியர்
ஏங்கினாவணடைந்தெரியின்மூழ்கினர். சஅ

காவியுங்கமலமுங்கயலுமன்னகட்
டேவியரனைவருந்தீயின்மூழ்கினர்
தூவியம்பெடையனஞ்சுடர்பொற்றாமரைப்
பூவிரிந்தனகயம்புக்கபோலவே. சகூ

மேதகுபுகழுடைவிதர்ப்பன்பாவையே
ஆதிநன்மடந்தையரழலின்மூழ்கமற்
றேதமின்மடந்தையர்யாருமீறிலா
நாதன்மெய்யொடுதழனண்ணினாரரோ. ருo

வந்துமுன்றருகன்வருந்திக்கூறலும்
பைந்தொடைமார்பினிற்பார்த்தன்செங்கணீர்
சிந்தினன்மாக்களஞ்சென்றுகண்டனன்
புந்தியுங்கலங்கினன்புலம்புற்றேங்கினான். ருக

அறந்தருமாயன்முன்னறைந்தகீதையால்
மறந்தருவேலினான்மனந்தெருண்டனன்
இறந்தவரெவர்க்குமங்கிமேநல்வினை
சிறந்ததொன்னூல்வழிச்செய்வித்தேகினான். ருஉ

வருபகலேழினில்வளைத்ததெண்டிரைக்
குரைகடல்கோப்பதுகூறுபார்த்தனல்
திருவநீணகருறைமாக்கள்சென்றனர்
பெருமைசாலிந்திரப்பிரத்தமென்பவே. ருங

அந்தமில்லவரொடுமறைந்துபார்த்தனங்
கிந்திரப்பிரத்தமென்பதனில்வச்சிரற்
குந்திதெண்டிரைப்புவியோம்பிக்காக்கெனச்
சுந்தரமணிமுடிசூட்டினானரோ. ருச

இன்னணநடந்ததையிரங்குபார்த்தன்வந்
துன்னெறிற்பிதாமகற்குரைப்பமற்றவர்
மன்னவரினக்கிவண்மௌலிசூட்டினர்
துன்னினர்கண்ணனைத்தொழுதுசொல்பதம். ருரு

சொல்லுநல்வளந்திகழ்துவரைசூழ்ந்தநீர்
ஒல்லெனவொலித்துவந்துறமறைந்ததால்
செல்லுறழ்மாதவன்சிறந்தகோயிலை
மல்லலந்திரைக்கடன்மறைத்ததில்லையே. ருசு

அண்டரும்புகழுமக்கோயிலின்னமும்
தெண்டிரைக்கடலிடைச்சிறந்துதோற்றுமால்
மண்டமர்கடந்தவேன்மன்னவன்னது
கண்டவர்பிறவியைக்காண்குறாரரோ. ருஎ

கருமுகிலனையவக்கண்ணன்பின்றொடர்ந்
திருவிசும்பேகியவிசையுமெய்ம்மையும்
தருமமும்பொறுமையுந்தவமுந்தானமும்
மருவினதவனியின்மறஞ்செய்வெங்கலி. ருஅ

சாலமும்பிறிவொடுகலப்புமற்றுயர்
சீலமுமானவன்செய்கையிந்திர
சாலமுமவைக்களஞ்சான்றகூத்தினர்
கோலமுமல்லதென்கூறல்வேண்டுமோல். ருகூ

இகலுறுமரசவிச்காதையாமமு
தகமொளிதரவுவந்தருந்தருந்தவர்
புகலருமொருபதம்பொருந்துவாரெனச்
சுகனெனுமுனிவரன்சொல்லினனரோ. சுO

தன்னுடைச்சோதிக்கெழுந்தருளியவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் சுOO.

கக-வது, ஸ்கந்தம் முற்றிற்று.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## கஉ-வது, ஸ்கந்தம்.

## க-வது, கலிதன்மமுரைத்தவத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மருவலர்புகழும்வேலாய்மகதநாடாளுமன்னன்
திருமதிக்குலத்துவேந்தன்றிறற்சராசந்தன்மைந்தன்
தரையிலேந்தருவேபோலத்தருஞ்சகதேவனென்னும்
புரவலன்மரபின்வந்துபுரஞ்சயனுதிக்குமன்றே. க

அன்னவன்கலியின்காலத்தவனிகாத்துறையுநாளம்
மன்னவன்றனக்கன்பாயமந்திரிசுனகனென்பான்
பொன்னவிர்மகுடச்செங்கோற்புரவலனவனைவீட்டித்
தன்னெழின்மதலையாளத்தாரணிதொடுக்குமன்றே. உ

சொல்லுமவ்வமைச்சனல்குந்தோன்றலைத்துவக்கியவர்
எல்லைமற்றொருநூற்றோடிரண்டிலாநாற்பதாண்டு
நல்லுலகாள்வரப்பாணந்திமாநந்தியென்னும்
வில்லினரிறுதியாகமேதினிபுரப்பர்சில்லோர். ௩

வேந்தர்தம்வேந்தனாகிவிறல்செய்மாநந்திபுல்ல
வாய்ந்தநல்லெழில்சேர்வேளான்மரபினளொருத்திபெற்ற
நாந்தகவுழவன்யாருநவில்பற்பதியென்றோதும்
எந்தன்மன்னவரைச்செற்றுங்கிருநிலம்புரக்குமன்றே. ௪

இவனுமோர்பரசுராமனென்றுலகேத்தும்வண்ணம்
கவனவாம்பரியின்றானைக்காவலர்குழுவையெல்லாம்
அவனிமீதமரிற்கொல்லுமன்னவன்றொடங்கிவேந்தாய்ப்
புவனிமேற்புரவுபூண்போர்பின்னவர்போலுவாரே. ௫

பின்னர்தம்வேந்தாதிபிறங்குதெண்டிரையின்மேவு
கொன்னவிலெயிற்றுப்பேழ்வாய்க்கூற்றுணவினிதினூட்டித்
துன்னியசேனைகாப்போர்துலங்குபொன்னடப்பைதாங்கி
மன்னியதொழும்புசெய்வோர்மாநிலங்காப்பர்மாதோ. ௬

வெல்லருயவனர்கள்ளர்வேசரியீட்டத்தாலே
சொல்லருநிதிகளீட்டுந்தொழிலினர்மறவர்பின்னோர்
அல்லுறழ்கோதைமாதராதியராங்காங்கெய்தி
மல்லலம்புவிமாணின்றுமயர்வுறவாழுவாரே. ௭

அரும்பழியுறாததெய்வத்தரசுபோலங்குற்றோரும்
பெரும்பழியியற்றக்கூசார்பிணியினாற்சோரர்தம்மால்
வருந்துவர்வறுமையெய்திமன்னரான்மயங்கிநிற்பார்
பொருந்தலில்புன்மைக்காகப்புழுங்கினர்கலங்குவாரால். ௮

கடக்கருவலிமைசான்றகலியெனுங்காலத்தரசை
அடக்கரிதாகியுண்மையருள்பொறைபுனிதமாயுள்
உடற்குறுதிண்மைபுந்தியுற்றிடுநினைவுபார்மேல்
நடக்குறுதருமமெல்லாநாட்குநாட்குறையுமம்மா. ௯

கலிவிருத்தம்.

விரியுநூன்முறைதமவீரமாற்றிடார்
உரியதோர்குருகுலவாசமுற்றொரு
புரையிலாநியமத்தாற்புகன்றிடார்மறை
பிரமசாரியரறம்பிழைத்துவாழ்வரே. ௧௦

உள்ளுவந்தில்லறமுற்றுளோர்மகம்
எள்ளலிலன்பொடுமியற்றிடாரவை
வள்ளிதழ்மலர்த்தொடைமன்னராற்றினும்
கள்ளொழுக்காய்நிதிகருதிச்செய்வாரால். ௧௧

வந்தவெங்கலியினின்மறைவலோர்மறை
சிந்தைசெய்யார்தமசெயலுஞ்செய்கலார்
சுந்தரமுப்புரிதுலங்குநூலினால்
அந்தணரிவரெனவறியவாழ்வரே. ௧௨

சொல்லியகலியெனுங்காலந்தோற்றினிங்
கில்லறந்துறந்தனரேய்ந்தகாட்டுழைச்
செல்லினுமவர்வனஞ்சேர்ந்தவூணலால்
நல்லனநாட்டுணவெனநயப்பரே. ௧௩

துறந்தவர்துறவறந்துணிந்துஞற்றிடார்
சிறந்துசெந்துகிலினுஞ்சேர்ந்ததண்டினும்
நிறங்கிளர்கன்னலினாலுநீத்திவண்
உறைந்தவரிவரெனவுலவுவாரரோ. ௧௪

முதற்பெருந்தேவெனுமுகுந்தன்பூசனை
அதர்ப்படவாற்றிடாரறியமாமறை
விதத்தொடுமுரணியவிரியுமாகம
மதத்தொடுமருவுவர்மாக்களென்பவே. ௧௫

இந்நிலத்துயர்குலமியைந்துளோர்களும்
மன்னுபின்னவரறமருவிவைகுவார்
பின்னவர்தமதறம்பிழைத்துநான்மறை
பன்னுநம்மிறைவனைப்பழிச்சிவாழ்வரால். ௧௬

ஒழிவறுபுகழுடையுயர்குலத்தரும்
இழிகுலத்தவருழையேவல்செய்குவார்
பழியுறுதொழில்பரிந்திழைத்தும்பாருளோர்
அழிபொருளடைவதற்காசைகூருவார். ௧௭

நெறியுடையறிவிலரெனினுநீணிதிச்
செறிவுடையாளரைச்சேர்ந்துசேர்ந்தநல்
அறிவுடையாரெனவறைவரன்னவர்
குறியுடைமொழியையுங்குணமிக்கென்பரால். ௧௮

நாயகனிருக்கவுநங்கைமார்பிறர்
ஏயநல்லழகுகண்டேக்கற்றன்னவர்த்
தோய்தரநினைகுவர்துணிந்துமாந்தரும்
சேயிழையார்பிறர்ச்சேரவெண்ணுவார். ௧௯

மைந்தர்தம்மாமியர்மாமனார்சொலச்
சிந்தையுண்மகிழ்ந்துநீங்கெனினுஞ்செய்குவார்
தந்தையர்தாயர்சொற்சார்ந்துகேட்கலர்
நிந்தனைபுரிகுவர்நிலத்தினென்பவே. ௨௰

நிறைபொருளுடையரெங்ஙினதைசொல்லினும்
முறையுறுவழக்கெனமொழிந்துபோற்றுவார்
வறுமைமிக்குடையர்வாய்வழங்குநன்மொழி
அறமொழியெனக்கொளாரதனையெள்ளுவார். ௨௧

உயர்பயனுவதிங்குதாரத்தாண்பெறல்
மயிர்நனிவளர்ப்பதேவனப்பென்றுன்னுவார்
புயல்வளங்காத்தலிற்பொலிவழிந்ததம்
பயிர்வளங்கரிந்திடப்பசியின்வைகுவார். ௨௨

வெங்கலிமுதிர்வுறவிரியின்மாந்தர்கள்
இங்கியல்யாண்டிருபத்தின்மேலிரார்
மங்கையரேழெனும்பருவம்வந்துறின்
பொங்கெழிற்புதல்வரைப்புவியினல்குவார். ௨௩

விதைபயிர்முதலியவிளையுள்குன்றுமால்
மதிவலிகுறைவுறுமாக்கள்யாவரும்
முதிர்வுறுபலன்பெறுமுன்னமேயகாய்
புதிதுறுகொழுந்திலைபூக்கொய்துண்பரே. ௨௪

கடும்பசியடைகுவர்காந்துகங்குலின்
படும்பொருளெங்கெனப்படர்ந்துபற்றற
விடும்புகழெதிசளுர்வீடொன்றுரிவண்
குடும்பமுற்றுறைவதேகுணமென்றுன்னுவார். ௨௫

தள்ளருஞ்சிறப்புடைத்தலைவரேனுமற்
றுள்ளுறைமனைவியருவந்தியற்றலர்
எள்ளுநர்வெருஉச்சிறிதியைந்தியற்றுவார்
விள்ளருவெறுமையரெனின்வெறுப்பரே. ௨௬

கிட்டியபுனிதநீர்செழுமிவைகுதல்
விட்டதினன்பிலராகிவேறுசெய்
பட்டநன்னதிகளேபழுதில்லாகுமென்
றுட்டெளிந்தவாவருறுதிகூறுவார். ௨௭

காக்களுங்குறுகுநற்கனிகளாதிய
நாக்குறுஞ்சுவைப்பொருணலனுங்குன்றுமால்
மாக்களுங்குறுகுவர்வயங்குதம்முருக்
கோக்களும்யாடெனக்குறுகுமென்பவே. ௨௮

கலிதன்மமுறைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௪௨௮.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## உ-வது, கற்கியவதாரமுரைத்தவத்தியாயம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உன்னுநான்மறையும்வருணமுநான்காயுரைத்தவாச்சிரமமுமொழிய
இன்னவாறெவருமறந்தபத்தீங்கிங்கிழைத்திடுங்கலியுகத்தீற்றின்
மன்னுநான்முகனையரனையீங்குதவிமாநிலங்காத்தளித்தழிக்கும்
அன்னமாமாயன்பரியுருவாகியறத்தினைநிறுத்துவனன்றே. ௧

தண்டலையுடுத்துநீள்வளஞ்செறியுஞ்சம்பளக்கிராமத்தின்றேத்தவ்
வண்டரும்புகழுமருந்தவப்பேறுமந்தணர்குலத்தினுரியத்தால்
விண்டுவின்பெயரோடிசைக்குறும்பெயர்சேர்வேதியன்வதிவனுங்கவன்
பண்டைநான்மறையுங்காணரும்பரமன்பரியவதாரமுற்றிடுமே. [பால்

அவ்வுருவெடுத்தவாழியான்வேதத்தடைதருநற்பரியிவர்ந்து
தெவ்வடுகுருதிவாள்கரத்தேந்தித்தீங்குசெய்கரவடரெனவே
கவ்வையங்கடல்சூழ்காசினிபனிப்பக்காவல்செய்தரசராயுறையும்
அவ்வியமனத்தோர்யாரையுமறுத்தாங்கறனிலைநிறுத்துவனன்றே. ௩

ஆங்கறநிறுத்துமாயவன்றடமார்பணிவனமாலையின்காற்றுத்
தீங்கருமேனிதைவரப்பெற்றோர்தெளிவுறுசிந்தையராவார்
வாங்குவிற்றடக்கைமன்னவவந்நாண்மாநிலமேற்பிறவார்தாம்
ஓங்குறுமாதியுகத்தினுக்கேற்றவொளிபெறுகுணத்தராயுதிப்பார். ௪

ஆதியாமுகம்வந்தணையுறுங்காலத்தருக்கனுமதியுமந்தணனும்
ஓதுமோர்பூசநாளிலுற்றுறைவாருரைப்பருந்தவம்புரிந்திருக்கும்
தீதிலாத்திங்கண்மரபுளானெனுஞ்சீர்சிறக்குந்தேவாபியுமருவா
மீதுலாம்பரிதிமரபின்மன்னவனும்விளங்குதம்மரபினைவிளைப்பார். ௫

அந்தணர்முதலாமூழியினீங்காதருந்தவமியற்றியன்பாவார்
வந்துறுமிரண்டாமூழியின்மகிழ்வான்மன்னருமாதவம்புரிவார்
நந்தலின்மூன்றாமூழியினலஞ்சேர்நாய்கருநற்றவம்புரிவார்
நொந்துறுகலியிற்பின்னவர்தாமுநொடிப்பருந்தவமியற்றுவாரால். ௬

தேன்றருதொடையாய்முதலெனுமூழிசேர்தரினறமெனும்வெள்ளே
றூன்றிடுநான்குபாதமுமிரண்டாமூழியினொருபதம்வாங்கி
மூன்றெனமொழிவார்மொழிந்திடுமூழிமூன்றினினிரண்டுதாளூன்றும்
என்றிருங்கலியிலொருபதமூன்றுமிலங்குமித்தலைமிசையன்றே. ௭

அறமெனும்வெள்ளேறொருபதமூன்றினவனியினொருபதமகற்றும்
நிறைதருதருமமொருபதநீங்கிநிலமிசையொருபதநிறுத்தும்
தெறுகொலைவரம்பொய்கடுஞ்சோகஞ்செப்புமிந்நால்வகையனவாம்
மறமிகுநான்குதாளுடைத்தாகிமருவியதீங்குறமாதோ. ௮

நாடொறுகொடுமைநனிதவநடாத்துநாமவெங்கொடுங்கலிமீற்றின்
கேடுறுகொலைசேர்தருமநான்காகக்கிளத்தியதான்முழுதான்றப்
பீடுறுகருணையுண்மைநற்புனிதம்பெருந்தவமென்னுநான்கடியும்
நீடுறுபுகழ்சேர்தருமமிந்நிலமேனிறுத்திடாதொளித்திடுமன்றே. கூ

கலிவிருத்தம்.

பன்னுமன்னர்பலர்நமன்கூற்றராய்
என்னதென்னதென்றென்னிடத்தாசையால்
துன்னுவெஞ்சமரிற்றொலைவாரென
நன்னிலப்பெணகைத்துரையாடுமே. கO

வாசமாய்நமன்வாழ்வதுபார்த்திடார்
ஓசைநீர்க்கடலுற்றழிமொக்குள்போல்
பேசமாயுடற்பிண்டமெய்யாமென
ஆசைமாகடன்மூழ்கியழுங்குவார். கக

இளனும்வண்மையெழிலிக்குவாகுவும்
நளனும்யாதியென்றோதுநன்னூலுணர்
உளனும்வீமனுமுற்றநன்னீதியும்
வளனுமேவுமனுவெனுமன்னனும். கஉ

மகுடம்வேய்ந்தெழுமாநிலங்காத்தருள்
நகுடனுங்கயனுநவிலண்டநீள்
முகடளப்பமுளைத்தபெரும்புகழ்ச்
சகரனுந்திறல்சார்ந்தசையாதியும் கங

கனகனுங்கனகப்பெருங்கண்ணனும்
அநகவெள்ளிவெற்பேந்துமரக்கனும்
இனையாதிமற்றேனையராக்கையும்
வினையின்வீந்தனவென்றுவிளம்பினன். கச

அசைவில்சிந்தையரசவிங்கோதினர்
இசையினுலிங்கிருந்தனரன்றியூன்
தசையுடம்பொடுதங்கினரில்லையால்
விசையவுள்ளம்விளங்கிடக்கேட்டியால். கரு

எண்ணிலாவைராகமதெய்துமென்
றண்ணல்வாட்கையரசரையோதினன்
விண்ணினோரும்விரும்புமமுதமாம்
கண்ணன்மாக்கதையேகளிசெய்யுமே. கசூ

தீயவெங்கலிசேருமிவ்வூழியின்
தூயனெங்குந்துலங்குவன்சொல்லுநர்
நேயனற்புதனையநெடியவன்
மாயன்கீர்த்தனத்தால்வருமூத்தியே. கஎ

கோவினாலுங்குணங்களினாலுமிப்
பூவினாலும்பொருபலவானுஞ்சேர்
தாவிலாப்பழிசாற்றிடிற்றீர்ந்துபோம்
நாவினாலுரையார்நாசெய்துவார். ௪௮

தானத்தானுந்தவங்களினானுநன்
மோனத்தானுமுனமகலாப்பழி
ஞானத்தார்தொழுதேத்துநவையிலா
வானத்தான்பெயர்வாழ்த்திடத்தீருமே. ௪௯

கற்கியவதாரமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௪௪௭.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௩-வது, பிரளயமுரைத்தவத்தியாயம்.

---

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முடிபுணையாசபிரளயமுரைக்கின்மொழிதருநித்தியமெனவும்
நெடுநிலமுதலமூவுலகிறப்புநிலவுநைமித்திகமெனவும்
படிமுதலுலகம்படைத்தவனொழியப்படர்வுறுபாகதமெனவும்
அடலுறுமாத்தியந்திகமெனவுமறைதருநால்வகைத்தாமே. ௧

நோலர்பரவுநெடுமுடியாசநித்தியப்பிரளயமென்றல்
பாருறைமாந்தர்முதற்சராசரங்கள்பார்த்தறியாவகைப்பெருக்காம்
நீருறுதீயிற்கணங்கணங்கழியுநின்றிறந்திறந்துவேறுதல்
சீருறுமயன்மற்றுறங்குழிமுதலாச்சேர்பிரளயங்களைத்தெரிப்பாம். ௨

ஆயிரமுறைநான்கூழிவந்தடையின்றுமறையந்தணன்றனக்கு
மேயவோர்பகலப்பகலுளேழிரண்டாய்விளம்புறுமனுக்களுங்கழிவார்
ஏயவப்பகலினீற்றினிலாசவிப்புவிமுதலமூன்றுலகும்
தூயநீர்ப்பெருக்குற்றிறந்திடுமந்நாள்சொன்மகலோகமுற்றுறைவார். ௩

அவ்வுலககன்றுபுகழ்சனலோகத்தடைகுவர்பிரளயப்பேரே
வெவ்வியநைமித்திகமெனவிதிப்பார்விளம்புமப்பகலளவிரவாய்த்
திவ்வியதினத்தாலாண்டுநூறிறக்கிற்றிசழயன்போம்பிரளயப்பேர்
பவ்வவெண்டிரைப்பார்பரித்தவேலாசபகர்தருபாகதமாமே. ௪

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கார்மழைபருவநூறுகாந்திடக்கதிர்வெய்யோனால்
பார்புனல்சிறிதுமின்றிப்பசையறப்பிளக்குஞ்சேடன்
சீர்தருமுகத்தின்றீயாற்சேர்பொருள்யாவுந்தீய
ஓர்தருமண்டந்தானுமுலந்துநீறுகுமன்றே. ௫

விடந்திகழ்தீயினண்டம்வேமியல்விளம்பின்வெய்ய
கொடுந்தழல்பட்டுநீருக்கோமயபிண்டம்போலாம்
அடைந்திடும்பருவநாறுங்கதிர்நெடுங்காற்றக்காற்றால்
உடைந்துமுன்னீறுகண்டமுற்றிடுமணுக்களாயே. ௬

மன்னுமக்காலினாலவண்ணமாமங்குலீண்டித்
துன்னுதேரச்சிற்றாரைசொரிதரவெங்குநீராய்
முன்னுறுமணமுன்போகமுதுநிலம்புனலுண்மாயும்
அன்னநீர்ச்சுவைமுன்போகவழல்புகுந்தடங்குமன்றே. ௭

ஆரழலுருமுன்போகவநிலனிலடங்குமக்கால்
சேருறுமூறுபோகச்சேணுறஞ்சிறந்தசேணும்
பேருறுமொலிமுன்போகப்பிறங்ககங்காரத்தொன்றும்
ஏருறுகுணங்கண்மூன்றற்றியையகங்காரமூன்றும். ௮

மருவுறுமகானினொன்றும்வழங்கியமகானும்வந்தாங்
குறைதருபகுதியுட்புக்கொளியுமாற்பகுதிதானும்
புரையறுபுருடனோடுபோதமாயநாதியாகிப்
பெருகொளியாகிவைகும்பிரமத்தினடங்குமன்றே. ௯

இன்னணந்தோற்றுமாறேயியைந்தனயாவும்போகத்
துன்னியபிரளயப்பேர்சொல்பிராகிருதமாகும்
மன்னவபிரயமொன்றேவயங்குநித்தியமாங்காணின்
பின்னமிலாதஞானபிரளயங்கூறுவாமால். ௧0

சேலமாய்ச்சேலத்தூற்றசித்திரம்பலவாநூல்போல்
ஞாலமேமுதலவாகிநவையறுமுயிர்களாகிக்
காலமாய்க்கருவியாகிக்காரணமாகியொன்றாய்
மூலமாயழிவொன்றின்றிமுதன்மையாம்பிரமமென்றே. ௧௧

விண்ணெழுபரிதிதன்னால்விளைந்தனமழைவெய்யோனை
மண்ணிடைநின்றுபார்க்கும்வயங்குவெஞ்சுடர்க்கூறாய
கண்ணுறன்மறைத்தல்போலக்கருதரும்பொருளினானே
நண்ணகங்காரந்தேருநற்பொருண்மறைக்குமாதோ. ௧௨

கரும்புயனீங்கிவெய்யோன்கண்ணிடைத்தனதுகூறாய்
அரும்பொளிபொருந்தவொன்றாயவிருமவ்வாறுபோலப்
பெரும்பொருளகந்தைநீங்கிற்பேசுதன்கூறாய்த்தன்பால்
திருந்துயிர்பிறிந்தொன்றாகத்திகழ்ந்திடுந்தேரின்மாதோ. ௧௩

அறிந்திடுஞானவாளாலகந்தையாம்வலைத்தைவீட்டி
நிறைந்திடும்பிரமமாகிநித்தியமாவர்வேறாய்ப்
பிறந்திடுமுயிருங்காணார்பின்னமாய்ப்பிரிந்துநீங்கி
இறந்திடுபொருளுங்காணாரேகமென்றிருப்பான்றே. ௧௪

நடையுறுதொடையலொன்றேநாகமாய்விளைந்தவாபோல்
தடையுறுமாலையநீங்கித்தற்பரமாவாராய்ந்தோர்
விடலருஞானயோகவித்தகவிவேகத்திவ்வா
றடைதருபிரளயப்போராத்தியந்திகமென்றாமே. கரு

இன்னதொன்ஞாலைமாயனிலங்கவதாரமாகி
மன்னுநாராயணப்பேர்மருவியமுனிவன்கூற
நன்னரம்புளர்ந்துபாடுநாரதமுனிவன்றேர்ந்து
முன்னமெந்தாதைகேட்பமுழுவதுந்தெளித்தான்மன்னோ. கசு

தாதையென்றுரைக்கும்வேதத்தலைவனுள்ளுவப்பமேவி
ஓதினனெமக்கவ்வண்ணமுரைத்தனனினக்கென்றோது
காதையைச்சவுனகாதிகருதருந்தவத்தோர்கேட்பச்
சூதனுநைமிசைப்பேர்சொல்வனத்திருந்துகூறும். கஎ

பிரளயமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் சசுச.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## ச-வது, பரீட்சித்துவீடுபெற்றவத்தியாயம்.

கலிவிருத்தம்.

பிறத்தலுமிறத்தலும்பேசிறுக்கைகள்
உறத்தகுமுண்மையாயுற்றநல்லுயிர்க்
குறத்துறையாசவக்குணங்களின்மையால்
இறத்தன்மற்றுனக்கிலையென்றுவைகுவாய். க

அல்லதுமைந்தர்களாயும்வைகிலை
சொல்லுமிவ்வுலகினிற்றுலங்குதாதையர்
நல்லெழிற்புதல்வராய்நயந்துதிப்பரென்
றெல்லையில்சுருதிகளியம்புகின்றவால். உ

தாதையர்மைந்தர்களாகிச்சார்வதிங்
கோதுபீசாங்குரமுற்றதன்மையாம்
பேதமாமரந்தொறும்பிறங்குதீயெனப்
பூதமாமுடறொறும்பொருந்துஞ்சீவனே. ந

உறங்குழிக்கனவிடையொருவன்றன்றலை
கறங்கெனச்சுழல்பவர்கையிற்கொய்தெழ
மறங்கிளர்வேலவமரணங்காண்கையால்
இறந்திடுமாக்கைநீயென்றுமல்லையே. ச

சடத்துறைவானுமக்கடமுடைக்கின்வான்
இடத்தொடுமொன்றுபட்டிருக்குமாறுபோல்
சடத்துறையுயிருமச்சடந்தணக்கினீங்
கடக்கரும்பாத்தினொன்றுகிலைகுமே. ௫

மாயையான்மனமெழுமனத்தினாலுடல்
நேயமோடடைதருநிகழ்ந்தவாக்கையால்
மேயசீவனுக்குமோர்வினைக்கட்டுண்டெனத்
தூயநூலுணர்பவர்சொல்லுவாரரோ. ௬

சொற்றருதயிலநூலொருலையுமட்டுமே
விற்றருதீபமென்பெயர்விளங்குமால்
பெற்றிடுமுக்குணம்பிறங்குமவ்வள
வுற்றிடுமாக்கையென்றுரைவழக்கமே. ௭

வினைத்திறம்பொருந்தியமெய்மையெய்யென
நினைத்திடலன்றிநீங்கலாதிவண்
நுனித்துணர்திவிடைநுவலுமொன்றென
மனத்தைவைத்துறைகுதிமன்னர்மன்னனே. ௮

யாவருமிறக்கிலரெடுத்தவாக்கையே
சாவதுநினையலிதண்ணந்தாமரைப்
பூவிரிகருமுகில்போலுமாதவன்
சேவடிபடர்தியாற்றெளிந்தகேள்வியோய். ௯

தீக்கனல்சுட்செவிதிருகுஞ்சீற்றமோ
டாக்கையிற்கதுவுமற்றதுநினைத்திடேல்
போக்கறுதனிமுதல்பூவைவண்ணனை
நீக்கமொன்றின்றிநீநினைத்தல்செய்தியால். ௧௦

அரவுவாய்பொழிந்தநஞ்சாக்கைசேரினென்
ஒருதனிமுதல்வனையுளத்தினுள்ளுணர்ந்
திருவிசும்பேக்கறுமீறிலின்பமாம்
பெரியதோரோதநீபெறுதியென்றனன். ௧௧

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மண்ணியமணியிற்றோன்றுமாதவன்குணங்களெல்லாம்
புண்ணியப்போலத்தோன்றும்புங்கவனுரைப்பக்கேட்டுக்
கண்ணுறும்பிறவிவேலைகடந்தனனுய்யப்பெற்ற
அண்ணல்பேரின்பவேலையலையிடைக்குளித்தான்மன்னோ. ௧௨

விழிபொழிகருணைதன்னால்வெவ்வியபிறவிமாசு
கழுவினைநின்னையீங்குக்காட்டியதவமற்றென்னோ
முழுதுணர்முனிவவென்னாமுருகவிழ்கமலப்பொற்றாள்
தொழுதனன்சென்னிசூடச்சுகனகன்றேகினனால். ௧௩

என்றுநல்லுணர்வுவாய்ந்தவிருந்தவமுனிவர்போற்று
மன்றலந்துளவுசூடுமரகதக்குன்றுபோல
நின்றவன்கமலபாதவிணைந்துளங்குளிர்ந்தசூதன்
நன்றெடுத்துரைத்துமீட்டுநடந்தனநவிற்றினானே. ௧௪

துறந்தநன்முனிவர்சூழச்சுகமுனிபோயபின்னர்ச்
சிறந்தநன்மனத்தையொன்றாத்திகழுமால்கழலிற்சேர்த்தி
அறந்தருவேந்தர்வேந்தனரியதோர்காட்டமேபோல்
நிறந்தலையெறிநீர்க்கங்கைநீள்கரையிருந்திட்டானால். ௧௫

கலிநிறைதன்மையானுங்கலந்ததண்ணளியினானும்
மலர்கதிர்மதியிற்றோன்றுமாசினைத்தீண்டநாடி
மலர்தலையுலகங்காணவழங்குதக்ககனென்றோதும்
கொலைமலிநச்சுநாகங்கொதித்தழன்றெய்திற்றன்றே. ௧௬

கூற்றுறழ்தக்ககன்வேற்கொற்றவன்றன்னைத்தீண்டின்
மாற்றுவனின்னேயென்றோர்மறையவனெழுந்துசெல்ல
ஆற்றிடையவனைக்கண்டவரவும்யாங்கடைதியென்னச்
சாற்றருமறைவலோனுந்தன்னிலைகிளத்தல்செய்தான். ௧௭

கேட்டலும்வெகுளிநாகங்கிளந்தவவ்வாறுநஞ்சம்
மீட்டிடவல்லையேலிவ்விடத்தினைமீட்டியென்ன
மோட்டுநீண்மரமொன்றாங்குமுதலொடுங்கரிந்துசாயச்
சூட்டழனஞ்சுபேழ்வாய்சொரிந்திடத்தீண்டிற்றன்றே. ௧௮

வெண்டிரைவேலிஞாலம்வியப்புறவிண்ணிற்றோன்றும்
துண்டநாண்மதியமென்னச்சுடரும்வாளெயிற்றுப்பாந்தள்
மண்டழல்விடத்திற்றீந்தமல்லலந்தருமற்றாங்கு
பண்டுபோற்றளிர்த்துநிற்பப்பார்த்தனன்பரிதியன்னான். ௧௯

வல்லைவெவ்விடமுமாற்றவல்லையான்மறையோயாங்குச்
செல்வதென்னென்றுமின்றோய்செழுமணிச்சுடிகைநாகம்
எல்லைநீர்முகட்டிற்றோன்றுமிளங்கதிர்ப்பரிதிநாண
வில்லுமிழ்மணிகணல்கிமீள்கெனவிடுத்ததன்றே. ௨௦

புயங்கநன்மணிபெற்றோங்கும்புனிதனாங்காசிபப்பேர்
வயங்கினன்மீண்டுபோகவல்லையின்மறைநூல்வல்லோர்
தயங்கெழிலுருவங்கொண்டதக்ககனென்னுநாகம்
நயங்கெழுமாசன்வைகுநதிக்கரையேகிற்றன்றே. ௨௧

நஞ்சினைமீட்பவந்தநான்மறையோனைமீட்டு
வெஞ்சினத்தடந்தநாகம்வெவ்வராவுயர்த்தோனஞ்சச்
செஞ்சிலைகுழைத்தபார்த்தன்றிருமகன்றன்னைஞாலம்
அஞ்சிமற்றாவாவென்றாங்கதிர்தபக்கதுவிற்றன்றே. ௨௨

நீத்தவழுயிர்ப்புநாகஞ்சீற்றமோடடைந்தவாறும்
நாத்தலைபுரட்டுவெய்யநஞ்சுகக்கடித்தவாறும்
பார்த்திலன்சுடிகைநெற்றிப்பஃறலையாவினோடும்
கூத்தனைநினைந்துநெஞ்சங்குழைந்திழைந்திருக்கின்றானே. ௨௫

விரிதலையரவுகான்றவெவ்விடவழலினாக்கை
எரிதரமுதுநூற்கேள்வியின்னமுதெய்திநின்றோன்
மருவிரிதருவினீழல்வாழ்பவர்வியந்துபோற்ற
அரவணைதுயிலுமம்மானடிநிழலெய்தினானால். ௨௬

தேமழைபொழியுந்தண்ணென்செழுந்தருநீழல்வானோர்
பூமழைபொழியவீடுபொருந்தினான்புதல்வனென்னும்
மாமழைபொழியுமும்மைமதக்களிறனையான்பைம்பொன்
ஆமழைபொழியுஞ்செங்கையரசுசெய்திறஞ்சொல்வாமால். ௨௭

பரிட்சித்துவீடுபெற்றவத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௩௮௬.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௫-வது, சர்ப்பவேள்வியுரைத்தவத்தியாயம்.

---

கலிநிலைத்துறை.

விடமீட்பவந்தமறையோன்றனைமீட்டுவெம்பும்
அடுசீற்றநாகமரசன்றனைத்தீண்டுமாறு
வடிவாட்டடக்கைச்சனமேசயன்கேட்டுவையம்
கடைநாட்கனற்றுங்கனலாமெனக்காய்ந்தழன்றான். ௧

மண்ணுந்திசையுந்தொழுதேத்தியமாலைசேர்ந்து
விண்ணுந்திகழுஞ்சுடர்யாமதிபோல்விளங்கும்
தண்ணங்கவிகைச்சனமேசயன்பாந்தள்வெந்தீ
உண்ணும்படிமற்றொருவேள்வியுஞற்றினானே. ௨

மைவ்வேலைஞாலத்துயரந்தணர்வந்துசூழத்
தெவ்வோடவென்றதிறன்மன்னவஞற்றுகின்ற
அவ்வேள்விவெய்யதழலின்றலையாலமூறும்
வெவ்வாயரவம்பலவந்தனவீழ்ந்தெரிந்த. ௩

எரிகின்றகாலத்தெரிவீழ்ந்திடவின்னுமென்னோ
வருகின்றதில்லைவடிநாண்மதுவாய்நெகிழ்ந்து
சொரிகின்றமன்றற்றொடைமாலைமிடைந்ததிண்டோள்
அரசன்றனைத்தீண்டடுசீற்றவரவென்றான். ௪

புயலுற்றசெங்கைப்புகழோனுரைகேட்டலோடும்
செயலுற்றவேள்விமறையந்தணர்தேர்ந்துநோக்கி
வெயிலுற்றகூர்வேல்விறல்வேந்தனைத்தீண்டுநாகம்
வயிரப்படையோர்புகல்புக்கதுமன்னவென்றார். ௫

யாழ்கொன்றதீஞ்சொலரமங்கையராடவின்றேன்
சூழ்கின்றபொன்னந்துணரீன்றமந்தாரநீழல்
வாழ்கின்றகொற்றத்திரையோனொடும்வந்துநாகம்
வீழ்கின்றதில்லையெவனோவெனவேர்ந்துரைத்தான். ௬

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

வைம்முகமணிந்தவொள்வாள்வச்சிரப்படையினானும்
பைம்முகமணிந்ததுத்திப்பஃறலைப்பாந்தள்வேந்தும்
மெய்ம்முகங்கரிந்துதீயவீழ்சமற்றின்னேயென்று
நெய்ம்முகந்தந்தணாளர்நீளெரிமுகத்திற்பெய்தார். ௭

தண்ணறுந்தருவினீழறனியரசிருக்கும்வானத்
தண்ணலுமண்ணறன்பாலடைந்தவாளரவின்வேந்தும்
கண்ணகல்விசும்பினின்றுங்கவிழ்தரவுற்றகாலை
விண்ணவர்குரவன்வல்லையேயினன்விலக்கினானால். ௮

முன்னமுதுண்டதாலம்பொழிதரும்பகுவாய்நாகம்
அன்னதுதன்னையெங்ஙனாழல்வீழ்த்திமாய்த்தல்
மன்னவர்மன்னமுன்செய்வல்வினைவந்துநல்கும்
இன்னலுமுவப்புநோயுமிறப்பதற்கேதுவாமே. ௯

அவரவர்வினைகளேமற்றவரவர்க்கழிவுசெய்யும்
கவர்படுநாவினாகக்கணங்களைக்கனலின்மாய்த்தல்
உவர்படுவேலைஞாலத்துற்றதோரறன்கொலம்ம
எவரிவைதுணிந்துசெய்வாரிறைவவென்றியம்பினானே. ௧0

ஆனதன்வேள்விநீக்கியடையலர்பரவும்வைவேற்
பூநறுந்தெரியன்மன்னன்பூசனைபுரிந்துபோற்ற
வானவர்மகுடகோடிமணித்தழும்பிருந்தபொற்றாள்
ஞானநன்மறைவலாளனன்றுவந்தேகினானால். ௧௧

அழலும்வாளரசர்க்கெல்லாமழற்கதிர்ப்பரிதிபோன்றும்
பொழிகதிர்மணியிற்செய்தபூங்கழலிலங்குநோன்றாள்
நிழலுறுமன்னர்க்கெல்லாநிழன்மதிபோன்றும்வையம்
முழுவதும்புரத்தல்செய்தான்முத்தவெண்கவிகைவேந்தே. ௧௨

ஆழியானன்பர்நாளும்யாமெமதென்றுபாரார்
ஏழொடேழுலகமாதியெவைகளுமொன்றாய்நோக்கி
வாழிமால்பாதஞ்சேர்வாரென்றுளமகிழ்ச்சிகூர்ந்து
சூழ்மாதவரெல்லோருஞ்சூதனைப்புகழ்ந்துசொல்வார். ௧௩

வேதமோர்நான்கதாகமெய்த்தலவியாதன்முன்னர்
ஓதினன்முனிவர்க்கென்னவுரைத்தனைசுருக்கியாங்குக்
கோதிலாச்சுருதிநூலுங்குலவியபுராணநூலும்
சூதமாமுனிபரக்கச்சொல்கெனச்சோறலுற்றான். ௧௬

சர்ப்பவேள்வியுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௫௦௩.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ௬-வது, வேதநான்காகவகுத்தவத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தண்ணறுங்கமலத்துற்றசதுமுகனிதயமென்னும்
விண்ணிடையெழுந்தநாதம்விளங்கியபிரணவப்பேர்
நண்ணிமுன்றுறந்துளோருநாடினர்மொழியினன்றோர்
எண்ணுறும்பரமாநந்தமெய்துதற்கேதுவாமால். ௧

மந்திரமறைகளாதிமறுத்தபுநூல்கட்கெல்லாம்
முந்துறுதன்மைத்தாகிமுதன்மையாய்க்குணனோர்மூன்றும்
தந்துறுமகாரநற்சீர்சார்ந்துறையுகாரத்தோடு
நந்தலின்மகாரமென்னநவிற்றுமூன்றெழுத்தின்வைகும். ௨

மூன்றெனவெழுத்தினுற்றமொழிபிரணவத்தினின்றும்
தோன்றினவுயிர்மெய்யென்னச்சொல்லியவெழுத்தின்கூட்டம்
ஆன்றவவ்வெழுத்தினாலேயயன்முகநான்கினின்றும்
என்றிடுமறைகணான்காயெய்திடப்பயந்தான்மன்னோ. ௩.

ஆங்குவந்துதித்தவேதமனைத்தையுமலரின்மேலான்
தீங்கறுபுதல்வரோதச்செப்பினனவருந்தத்தம்
ஓங்கெழிற்புதல்வர்தங்கட்குரைத்தனரின்னவாறே
வாங்குதெண்டிரைசூழ்பார்மேல்வயங்கினபெரிதுமாதோ. ௪

கலிவருங்காலத்தாயுள்கருதிடிற்குறையுமென்று
நிலைபெறவேண்டிமூன்றாய்நிலவியயுகங்கடோறும்
அலருறையயன்முன்கூறுமாரணமலைகடம்மை
மலைவறச்சுருக்கிமேலோர்வகைபெறவழங்கினாரால். ௫

மழகளிறன்னவிந்தமனுவுறைகாலமென்னச்
சுழல்வுறுமிருபத்தேழாந்துவாபரயுகத்தின்மேவும்
முழுமறைவகுத்தல்செய்தான்முற்றுணர்வசிட்டன்சேய
பழுதறுசத்திபெற்றபராசரமுனிவன்மாதோ. ௬

வயங்கெழுபுகழ்சேர்வைவச்சுதனெனுமனுவேந்தற்று
நயங்கெழுமூழிநான்காநடந்தனநாலேழிங்கு
முயங்கியகலிநான்கேழாமுறையவெங்கலியின்காலம்
துயங்குமிக்கலிக்குமுன்போந்துவாபரந்தன்னின்மாதோ. ௭

பராசரமுனிவனல்கும்பண்ணவன்வியாதன்றேரின்
அராவணைதுயிலுமம்மானருங்கலையாகுமன்னோன்
புராதனநான்குவேதப்பொருப்பிலெவ்வொருகையமொண்டு
தராதலந்தன்னினான்காச்சாற்றினன்வகுத்துமாதோ. ௮

இருந்தவமுனிவர்காளீங்கினிவருமூன்றாமூழி
பொருந்தினன்வேதநன்னூல்புகரறப்பிரிப்பான்பூமேல்
திருந்தியபுகழ்த்துரோணன்சேயெனவுதித்துநாளும்
அருந்தவம்புரிந்துமேவுமச்சுவத்தாமனன்றே. ௯

திருத்தகுவேதநான்காச்செப்பியவியாதன்முன்னம்
இருக்கெனுமறையையன்பாலிசைத்தனன்பயிலற்கன்னோன்
சரித்தனன்பழுதின்றாகிச்சார்ந்தவர்க்குரைப்பவந்நூல்
பரித்தமாணாக்கராலேபரம்பரைவிளங்கிற்றன்றே. ௧௦

மன்னியவிரண்டாம்வேதம்வகுத்தவம்முனிவியாதன்
உன்னருந்தவஞ்செய்வைசம்பாயனற்குரைப்பக்கற்றாங்
கன்னவன்றானுமன்பால்யாஞ்ஞவற்கியனேயாதிப்
பண்ணுமாணாக்கரோதப்பயிற்றுவித்துறையுநாளில். ௧௧

விடலருவினையின்கட்டால்வெவ்வியபிரமகத்தி
அடைதலின்மறைநூல்கற்றயாஞ்ஞவற்கியனேயாதிப்
புடையுறும்வழிபாடாற்றிப்பொருந்துமாணாக்கர்தம்மைத்
தொடருமிப்பாவநீவிர்தொலைத்திடுந்தவத்தினென்றான். ௧௨

குரவனங்கிசைத்தல்கேட்டகோதின்மாணாக்கர்தம்முள்
அரியநற்றவத்தின்மிக்கயாஞ்ஞவற்கியனென்பேர்சேர்ந்
துரைசெய்மாணாக்கன்செய்தாரன்றியேயேனையோரால்
புரியுமிப்பாவம்போகாதென்றலுங்குரவன்சொல்வான். ௧௩

சிந்தையுண்மகிழ்ந்தியானேதீர்க்குவனேனையோரால்
வந்தவிப்பாவம்போக்கும்வல்லமையில்லையென்று
நிந்தனைசெயநின்றாயானிகழ்த்திடவுணர்ந்தவேதம்
தந்திவணுழிதியென்றான்றடாதினிதுமிழ்தல்செய்தான். ௧௪

அன்னவனுமிழ்ந்தவேதமாங்குநின்றிலங்கநோக்கிப்
பன்னுதித்திரியென்றோதும்பறவையினுருவமெய்தி
மன்னியமுனிவர்சில்லோர்மருவினருந்துமாற்றால்
பின்னருமறைநூல்பெற்றபேர்தயித்திரியமாமே. ௧௫

அருமறையுமிழ்ந்துபோயவருந்தவமுனிவன்வான்போய்
விரிகதிரெல்லோன்றன்னைவிருப்பொடுவணங்கிவாழ்த்தி
ஒருமறையடியேனுக்கவுரைத்தியென்றியம்பலோடும்
துரகதவுருவாயவெய்யோன்சொற்றனன்மறைமற்றன்றே. கசு

கலிநிலைத்துறை.

காசிலம்மறைகண்ணுவன்முதலியோர்கற்றோர்
வாசிநல்லுருவாய்முனம்வெய்யவன்வகுத்துப்
பேசநின்றதாலம்மறையுரித்தெனப்பெற்றோர்
தேசுறும்பெயர்வாசிதனேயராத்திகழ்ந்தார். கஎ

சீர்தழைந்தமூன்றுமறைதிகழ்சயமுனிக்கும்
எர்தழைந்தநான்காமறைசுமந்துவென்பவற்கும்
பேர்தழைந்திடும்புராணமென்றுரைக்கும்பெட்பால்
பார்தழைந்துறப்பரம்பரையம்முனிபகர்ந்தான். கஅ

நிகரினான்மறைதெரித்தவவ்வியாதன்முன்னிலமேல்
புகலுமொன்பதிற்றிரட்டியாப்பொருந்தியபுராணம்
அகலுந்தத்துவப்படைப்புரைத்திடன்முதலாகப்
பகருமையிருவகையுடைத்தஃதிவட்பகர்வாம். கசு

பூதமிந்தியமுதலியபடைப்பினைப்புகறல்
கோதிலாதவித்தின்வழிவித்தாறுங்குணம்போல்
பேதமாகியசராசரம்பிறப்பனபேசல்
ஓதுசீவன்மற்றவற்றுக்கிவ்வில்லெனவுரைத்தல். உ0

ஞாலமீதுமாலவதரித்தருள்வகைநவிற்றல்
கோலமேவியமனுமுதற்றேவரைக்கூறல்
காலமூன்றுமரசரையிவரெனக்கழறல்
சீலமேவுமம்மன்னவர்சரித்திரந்தெரித்தல். உக

எயநால்வகைப்பிரளயமியம்புதலெழில்சேர்
மாயையால்வருமுயிர்த்திறனொருவகைவழங்கல்
மேயமற்றவற்றிருப்பிடனாய்விளங்கறிவாய்த்
தூயகாரணமாம்பொருடெரிதரச்சோறல். உஉ

சொன்னவையிருவகையிலக்கணத்தொடுதொக்கு
முன்னுகின்றமாபுராணமற்றப்புராணங்கள்
பன்னுமிவ்வகையிலக்கணத்தாற்பதினெட்டாய்
மன்னுகின்றனமாபுராணப்பெயர்வகுப்பாம். உங

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

பிரமமாம்புராணம்பற்பம்பீடுசால்வைணவஞ்சீர்
மருவுபேர்சைவமென்றேவழங்குநூலிலிங்கநீர்சூழ்
தரைசொல்சாருடநல்வண்மைதயங்கியநாரதீயம்
பரமபாகவதமண்ணோர்பகர்தருமாக்கிநேயம். உச

காசறுகாந்தமின்பங்கலந்துறுபவுடிகம்பார்
பேசியபுகழ்சேர்கின்றபிரமகைவத்தநன்னூல்
மாசறுமார்க்கண்டேயம்வாமனம்வாராகமச்சம்
தேசுறுகூர்மஞ்சிலங்கிகழ்பிரமாண்டமாமால். உரு

இத்தகைப்புராணமூவாறியலும்பாகவதம்பற்பம்
பெரய்த்தலில்வாரகம்வைணவத்தொடுபுகல்காருடம்
மெய்த்தநாரதியமென்பவிளம்புசாத்திகநூலாமால்
கத்தறுமார்க்கண்டேயங்கருதுபௌடிகம்பிராமம். உசு

பிரமகைவத்தமிக்கபிரமாண்டம்வாமனஞ்சீர்
பெரியராசதநூல்காந்தம்பேசுமாக்கினேயஞ்சைவம்
விரியுமச்சியமிலிங்கம்வீறுறுகமடமென்னத்
தெரிதருதாமதப்பேர்சிறந்தநூலென்பர்மேலோர். உஎ

என்றுணர்சூதன்கூறவியற்றருந்தவத்தோரெல்லாம்
நன்றுவந்துரைத்தவாறுநன்றெனவியந்துகாலம்
வென்றுயர்மார்க்கண்டேயன்விழுத்தவம்புரிந்தவண்ணம்
மன்றநீதெரித்தியென்னவகுத்தனனுரைசெய்வானால். உஅ

வேதநான்காகவகுத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ருகுக.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## எ-வது, மார்க்கண்டேயர்தவமுரைத்தவத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

மாற்றரும்பெருந்தவமார்க்கண்டேயன்முன்
ஆற்றினனயுதமொடயுதமாண்டிருஞ்
சீற்றமோடடைந்ததீச்சிதறுஞ்செங்கண்வெங்
கூற்றையுங்கடந்தனன்கூறுமாயனால். க

அன்னவன்சீலநல்லழகுகண்டெழிற்
பொன்னவிர்மதிச்சடைப்புனிதன்போதினன்
துன்னுதென்புலத்தினர்சூாருந்தவர்
மன்னுமற்றேனையர்மனம்வியந்தனர். உ

ஆதிமாமனுமுதலறுவர்காலம்போய்
நீதியேழாமனுக்காலநேரிலான்
ஓதுபூம்பத்திரையென்னுமொண்பெயர்ச்
சீதநீர்நதிக்கரைசேர்ந்துவைகினான். ரு

ஊதுவண்டுடுத்தபோதுறையுஞ்சேயிழை
காதலன்சேவடிகருதிநாண்மலர்த்
தாதெறிந்தொழுகுறுதண்ணெனாற்றிடை
மாதவம்புரிந்தனன்மார்க்கண்டேயனே. ௬

அன்னவனருந்தவமகற்றுவாயெனப்
பொன்னகர்மன்னவன்புகலப்போயினான்
மன்னெழிலரம்பையர்மருங்குசூழ்வர
இன்னிளவேனிலஞ்செல்வனென்பவே. ௭

எத்திசையும்புகழிமயமால்வரை
உத்தரபக்கநின்றெழுகன்மேயபூம்
பத்திரைநதியில்வேள்படர்ந்துநோக்கினான்
மெய்த்தவம்புரிந்துறைவிமலன்றன்னையே. ௮

கூனல்யாழின்னிசைக்குயில்குடைந்துகும்
கானுலாந்தண்மலர்களுலுங்காவெலாம்
தேனுலாம்வண்டொடுசெறிந்துபாண்செய
வேனிலான்வருதலின்வேனிலுற்றதால். ௯

கொங்கைமென்முகிழினர்குழைந்தசாயலர்
அங்கலுழ்மேனியரரமடந்தையர்
பொங்கெழில்வேனிலிற்பூத்தகொம்பென
மங்குறேய்தண்டலைமருங்குமேயினார். ௧௦

கொந்தவிழ்கோதையுங்குழலுஞ்சோர்தர
இந்திரவில்லெனவெறிக்குங்காஞ்சிசூழ்
அந்துகில்சோர்தரவந்தணாளன்முன்
மந்தமாருதத்தொடுவந்துதோன்றினார். ௧௧

அயிலெனப்பிறழ்ந்துசேந்தரிபரந்தகண்
வெயின்மணிக்குழைபொருதலைப்பமெல்லென
மயிலெனமருங்குலாய்மலர்க்கொம்பாமெனக்
குயிலொடுமாறுகூய்க்குலவினார்சிலர். ௧0

சில்லரிச்சிலம்பொடுசெம்பொற்கிங்கிணி
மெல்லெனமிழற்றிடமிளிர்பொன்மேகலை
ஒல்லெனவொலிசெயவொல்கிமென்மலர்
அல்லியங்கோதையராடினார்சிலர். ௧௧

ஓடரிக்கண்ணியரொளிர்பொன்னூபுரம்
சூடியகலையொடுசிலம்பத்தோகையின்
ஆடலுநயந்திலனமுதவின்னிசைப்
பாடலுநயந்திலன்றவஞ்செய்பண்ணவன். கஉ

தொடுத்தமென்மழலையஞ்சுருப்புநாண்கமழ்
கடித்தொடையேந்துதோள்கழியவாங்கினன்
அடக்கருமைம்பொறியவித்ததூயன்மேல்
விடுத்தனன்பூங்கணைவேனில்வேந்தனே. கங

தொலைவுறப்பாழிவாய்த்தூணிப்பல்கணை
மலையும்வெஞ்சரம்பொருமாரன்மாட்டினன்
பலமலர்பூத்ததோர்பழுமரத்தையொத்
தலர்பொறியவித்தநல்லறிவன்றோன்றினன். கச

மாயனைவழிபடூஉமாதவத்தர்பால்
தீயநம்மாணைதாய்ச்சேர்கலாதெனத்
தூயசெஞ்சடையவற்றொலைப்பப்பூங்கணை
ஏயதன்வடுநனியெண்ணிமாழ்கினன். கரு

துளக்கிலனிவன்றவமென்றுசூழிளங்
களிச்சுரும்பாற்றுதார்க்காமனேகினன்
விளைத்தவைதெரித்தனன்விரிந்தவானுல
களிப்பவன்கதிர்முடியசைத்திட்டானரோ. கசு

வேறு.

அரிதாநற்றவமாற்றுவானென
உரைசாலன்னவன்முன்னமூறுதேன்
விரைசேர்தாமரைவென்றசெங்கணார்
நரநாராயணர்நண்ணினாரரோ. கஎ

உற்றாரென்னைவிழைந்ததோதெனாச்
சொற்றார்மற்றவர்சொற்றசொற்கொளாப்
பெற்றேனும்மருள்பேறென்வேறெனாப்
பொற்றாள்சென்னிபுனைந்திறைஞ்சினான். கஅ

வேறு.

கடையுறுபிரளயங்காணவேண்டுமால்
மடைதிறந்திளநறாவொழுகுமன்றலந்
தொடையலிரென்றலர்தூற்றிப்பூங்கழல்
அடிதொழவாங்கவரருள்செய்தேகினார், ககூ

வேலையம்புவிமகள்விரைசெய்கற்பகச்
சோலையங்கிளியெனத்தோன்றிப்பைந்துழாய்

மாலையம்புயத்தனைவணங்கிவைகிய
காலைவந்தெதிர்பெருங்காற்றெழுந்ததால். ௨௦

வெடிப்பவான்முகடுமண்சுமந்தவீங்கெழிற்
படத்தவாளரவமும்பதைபதைப்பமீத்
தடித்தொளிதிசைதிசைதவழச்சூழ்ந்தெழுந்
திடித்ததிர்கருமுகிலெழும்பெய்தவால். ௨௧

செறிகதிர்மதிவலந்திரியுமாநிலம்
மறிதரவானகமடங்கவெற்புவேர்
பறிதரவுயிரெலாமிறந்துபாழ்பட
எறிதிரைக்கருங்கடலேழுங்கோத்தவே. ௨௨

மருவருநற்றவமார்க்கண்டேயன்மற்
றொருவனுங்குறுபொருளொன்றுங்கண்டிலன்
வெருவரவெளிமுகடுடையவீங்கிய
முரிதிரைக்கருங்கடல்வயிற்றுண்மூழ்குமால். ௨௩

எழுமெறிதிரையொடுமெழுமெழுந்திடை
விழுமுரிதிரையொடும்வீழும்வீழ்ந்துதன்
முழுவலிகெடவலைமொத்துண்டுள்ளழிந்
தழுமவன்மறுக்கம்யாரறையகிற்பரே. ௨௪

மழலையஞ்சுரும்பொடுவரிமிடற்றதேன்
உழுநறுந்துழாய்புனையொருவனவ்வழிப்
பழுமரப்பாசிலைப்பள்ளிமேற்பசுங்
குழவியாய்க்கண்வளர்கோலநோக்குமால். ௨௫

கரையழிந்தொழுகுமோர்கங்கைபூத்தமெல்
முருகவிழ்சேயிதழ்முளரித்தாண்மலர்
இருகையிலெடுத்தணைத்திதழ்வைத்தங்கனம்
பெருவிரலமுதுணும்பெற்றிபார்க்குமால். ௨௬

அகலும்வந்தணுகுநல்லங்கைபற்றிடும்
நகுதருசேயிதழ்நளினம்பூத்ததோர்
முகிலிளங்கன்றெனக்கிடந்தமுன்னவன்
புகலருவயிற்றிடைப்புகுமற்றென்பவே. ௨௭

மல்லலர்துழாயவன்வயிற்றிலோர்புடை
பல்லுயிர்ப்பகுதியும்பரவைஞாலமும்
செல்லொடுமதிதவழ்செம்பொற்குன்றமும்
கல்லெனவதிர்கருங்கடலுங்காணுமால். ௨௮

இந்திரன்முதலியரிருந்தவத்தினர்
சந்திரமௌலிசெஞ்சலசமேலவன்
சொந்தவிழ்துளவணிகொற்றவாழியான்
முந்தகட்டொருபுடைமொய்ப்பக்காணுமால். ௨௯

நண்ணிமுன்னிருந்துயர்நற்றவம்புரி
அண்ணலங்கடவுளாற்றடைகரைப்புறம்
கண்ணனைக்குளிர்ப்புறக்காணுங்கண்டுவந்
தெண்ணருங்கற்பமாங்கினிதிருக்குமால். ௩0

இந்நிலைநிகழ்வுழியெரிபொன்னாழியான்
மன்னியமாயையைவல்லைமாற்றலும்
அந்நிலைநாண்கிலனம்மவோவென
மெய்ந்நிலைவேதியன்வியப்புற்றானனோ. ௩௧

உடைத்தவெண்டிரையிடையொளிர்பொற்கொம்புபோல்
பொடித்தவளிளமுலைபொரவுடைந்தலர்
மடற்பசுந்தண்டுழாய்மாயன்மாயையார்
கடக்குநரொன்றுளங்கனியவேத்தினான். ௩௨

புரியுமாங்கவன்றவநோக்கிப்பொன்பிறழ்
வரைமகள்வழுத்தலும்வரமளித்திட
விரிதலைவிசும்பிடைவிடையிவர்ந்துலாம்
எரிமருளீர்ஞ்சடையிறைவனெய்தினான். ௩௩

பிறைபொழியிளநிலாப்பெருகுசெஞ்சடை
இறைவன்வந்திறுத்தலும்யாதுந்தேர்ந்திலான்
நிறைதவனிருந்துழிநிலவுவான்பொருப்
புறைபவன்மற்றவனுளத்தொடுற்றனன். ௩௪

மன்னியவலம்புரித்தடக்கைமாயனை
உன்னினனிருந்தநல்லுணர்வினானிஃ
தென்னெனவிழித்தலுமிமயமால்வரைக்
கன்னியோர்பாகனைக்கண்டிறைஞ்சினான். ௩௫

வேறலைமாயனுநாமும்வேட்டதென்
ஆறறியந்தணவென்னநின்னருட்
பேறலான்மற்றுநான்பெறுவதென்னெனாத்
தேறுநீர்தவழ்சடைச்செல்வன்கூறுவான். ௩௬

இறப்பொடுநிகழ்வெதிரென்னுமும்மையாம்
சிறப்புறுகாலநல்லறிவுஞ்சேர்குதி
அறப்பெருந்துணையெனுமன்பநின்புகழ்
மறப்பறநிச்சலுமுலகின்வைகுமால். ௩௭

சொன்னலம்பெறுமொருபுராணஞ்சொல்லுதி
என்னலுமடிமலரிறைஞ்சியேத்திட
மின்னவிர்சடைமுடிவிமலனேகிஞன்
மன்னினன்றவத்தொடுமார்க்கண்டேயனே. ௩அ

மார்க்கண்டேயர்தவமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௫௬௬.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## அ-வது, சூரியன்கதியுரைத்தவத்தியாயம்.

கலிவிருத்தம்.

மையறுதவத்தர்முதன்மற்றெழுவகைத்தாய்ச்
செய்யகதிரோன்வருதல்செப்பிணைசுருக்கி
வெய்யவன்விபூதிகள்விரித்துரைசெய்யென்னும்
துய்யமுனிவர்க்குரியசூதமுனிசொல்வான். க

எழ்வகையர்யாவரெனினெவ்வமறுமான்மாத்
தாழ்விலுருவாய்வடதடஞ்சிலையைநாளும்
சூழ்வருபதங்கனருடென்னுமுனிவோர்கள்
கேழ்விரவுபூஞெளிகிளைத்தவரமாதர். உ

காமரிசையாழுடையர்க்திருவர்நாகர்
நாமமுறிராக்கதர்நவின்றிடுமியக்கர்
எமமுறுமிவ்வகையரெய்துமதிதோறும்
வாமமொடுமேவுவர்வகைக்கொருவராயே. ௩

எல்லவர்கள்பன்னிருவரென்றொருவர்யாரும்
சொல்லும்வகையெவ்வகையெனிற்சுடர்செய்வெய்யோன்
ஒல்லும்வகைதானொருவனுகிமதிதோறும்
நல்லபெயர்வேறுறநயந்துலவுமாதோ. ௪

மீதார்செழும்பரிதிமேடமதிமேவித்
தாதாவெனும்பெயர்தழைத்துலவுமந்நாள்
போதாரயன்றருபுலத்தியனுமானேர்
மாதாமெனச்சொல்கிருதத்தலையுமாதோ. ௫

சுந்தரய்விளங்கவருதும்புருவெனச்சொல்
சந்திருவனும்மெழில்கலந்தபிலமீது
வந்தபணிநாதனெனும்வாசுகியுங்வீற்றல்
எந்தநிலமும்புகழுமேதியெனவேசொல். ௬

கலிநிலைத்துறை.

கேடிலாதசிரரக்கனுமாகிருத்தென்னும்
ஆடன்மேவியவியக்கனுந்தந்தொழிலாற்றி
நீடுதேரொடும்பொருந்துவர்நிகழ்த்துவைகாசி
பீடுசேர்பெயர்த்திங்களில்வருதல்பேசுதுமால். ௭

அரியமாவெனும்பெயர்க்கதிரோனடைந்தியங்கும்
தெரியுநான்மறைப்புலகனுஞ்சிறுநுதற்கருங்கட்
புரையிலாதநல்லெழிற்புகழ்ப்புஞ்சிகத்தலையும்
உரியயாழ்பயினாதனெனுமுரவோனும். ௮

அச்சமாரயில்சேர்பிரகேதியென்றறையும்
செச்சையார்புயத்தரக்கனுமுரகரிற்சிறந்த
கச்சநீரனுமோகனுமியக்கனுங்கலந்து
பச்சைமாப்பரித்தேரினனெஞ்டும்படர்குவரால். ௯

ஆனித்திங்களின்மித்திரனெனும்பெயரணிசேர்
பானுப்பெற்றிடுமத்திரியெனப்பகர்தவனும்
வானத்துற்றுறைமேனகையெனும்பெயர்மாதும்
தேனுற்றின்னிசைமுரன்றதார்சிறந்தகவாவும். ௧௦

தயங்குநன்மணியுரகரிற்றக்ககனும்வான்
இயங்கரக்கரிற்பவுருடேயன்னெனுமிறையும்
வயஞ்செய்தோங்கிரதச்சுவனப்பெயர்வாய்ந்த
வியந்தசீருடையியக்கனுமேவுவான்றே. ௧௧

ஆடித்திங்களின்வருணனென்பெயர்கதிரடையும்
நாடித்தொன்மறைநவிற்றுறுவசிட்டனுநதிபோல்
ஓடித்தண்மதுப்பாய்குழலரம்பையுமுவப்பால்
பாடிப்பண்பயிலூகுவென்பெயர்படைத்தவனும். ௧௨

நாகர்தங்களிற்சுக்கிரனெனநவில்பவனும்
சேகில்சித்திராச்சுவனனுச்செப்பிராக்கதனும்
வேகவெங்களிறெனுஞ்சகச்சன்னியவேந்தாம்
மாகமன்னியவியக்கனுமருவுவர்மகிழ்ந்தே. ௧௩

சிங்கமாமதியிந்திரனெனக்கதிர்சேரும்
அங்கிராவெனுமருந்தவக்கிழவனுமறலார்
மங்குனேர்குழற்பிரமிலோசைப்பெயர்மாதும்
பொங்கிராகயாழ்விச்சுவாவசுப்புரவலனும். ௧௪

எழினிறைந்தலர்புத்திரப்பெயராவிறையும்
மொழிசெய்கின்றவெவ்வரக்கரிற்சரியனுமுருக்கின்
தழைசெய்கின்றதாரியக்கரிற்சுரோகனுந்தத்தம்
தொழில்செய்கின்றனராய்ச்சுடரோனொடுஞ்சுழல்வார். ௧௫

கன்னிமாமதிவிச்சுவாவெனும்பெயர்க்கதிரோன்
மன்னியேகுவன்மாதவப்பிருகுவுமலர்வாழ்
அன்னநேர்நடையநுமிலோசைப்பெயரணங்கும்
நன்னர்யாழ்பயிலுக்கிரசேனநல்லோனும். கசு

சங்கபாலனுமுரகர்தந்தலைவனுந்தருக்கார்
வெங்கணுன் வியாக்கிரனெனுமரக்கர்சொல்வேந்தும்
துங்கமேயவர்சாரணனென்றுசொல்சுடர்சேர்
திங்கள்வாண்முகத்தியக்கனுஞ்செய்வர்தந்தொழிலே. கஎ

நல்லசெங்கதிர்நவிறுவட்டாவெனுநாமம்
மல்லலந்துலாமதியினிற்பெற்றெழுவ்வானோர்
சொல்லுறுஞ்சமதங்கியென்றுரைதொழுகுலனும்
அல்லுறுங்குழற்றிலோத்தமையாமெனுமணங்கும். கஅ

இசைவடித்தயாழ்த்திரிதராட்டிரப்பெயரியைந்த
விசையமுற்றொளிர்விஞ்சையர்க்கிதமுறுவேந்தும்
வசையகற்றியகம்பவாச்சுவனெனவழங்கும்
திசைபரப்பொளிச்செம்மணிசேரரவரசும். ககூ

ஏதநீங்கியவரக்கரிலெறழ்வலிப்பிரமா
பேதனும்பெயர்பெற்றிடும்புகழ்ப்பெரியோனும்
தாதுலாந்தொடையியக்கரிற்றனிச்சதசித்தென்
றோதுநாமனுந்தந்தொழிலியற்றுவருவந்தே. உ0

விண்டுவாம்பெயர்விருச்சிகமதியத்தின்மேவும்
பண்டைநான்மறைக்கோசிகமுனிவனும்பண்சேர்
தொண்டைவாயினளரம்பையுந்துலங்குவிஞ்சையரில்
அண்டமீதுயர்சூரியவற்சனுமாசும். உக

அரவவேந்தரிலச்சுவதானுநல்லணிதார்
விரவுதோண்மதாபேதனும்விறலிராக்கதனும்
பரவுசத்தியசித்தெனுமியக்கர்தம்பதியும்
இரவியோடுதத்தந்தொழிலியற்றியேகுவரால். உஉ

அருணவெங்கதிர்தனுமதித்திவச்சுவாவாம்பேர்
கருணைதங்கியவருமறைதெளிந்தகாசிபனும்
தருணவெம்முலையுருப்பசியெனுந்தளிரியலும்
இருநாம்புளரிசைதருசேனனென்பவனும். உங

பணிகடம்மின்மாசங்கனென்பெயர்படைத்தவனும்
தணிவில்வித்தியுஞ்சத்தருவெனும்பெயர்தழைந்த
இணையில்வெவ்வியவரக்கனுந்தாக்கியனெனும்பேர்
அணியிலங்கியவியக்கனுமாங்கியங்குவரால். உச

மகரமென்றுசொல்வயங்கியமதியின்மார்த்தாண்டன்
பகவனென்பெயர்பெறுகுவன்பன்னூனான்மறைதேர்ந்
தகமகிழ்ந்தருந்தவஞ்செயுமாயுவுமயிலோ
டிகல்பயந்தகட்பூருவசத்தியென்பவளும். உரு

அரிட்டநேமியாம்விஞ்சையர்க்கரசனுமுடலம்
சுருட்டராவரசாயகார்க்கோடனுந்தொலையா
இருட்டினேர்சிறப்பூற்சனுமிக்கவூருணனும்
உருட்டுநேமியொன்றுடையதேரினனொடுமுறுவார். உசு

மாற்றருஞ்சுடர்வெய்யவன்கும்பமாமதியின்
போற்றுகின்றபூடாவெனும்பெயர்பொருந்துவனூல்
சீற்றநீங்கியகோதமனெனுஞ்செழுந்தவனும்
ஏற்றநல்லெழில்சேர்கிருதாசியென்பவளும். உஎ

விஞ்சைவல்லவிண்ணவர்களிற்சுசேனனும்வேந்தும்
நஞ்சுமிழ்ந்தவாய்நாகரின்வீரநஞ்சயனும்
மஞ்செனப்பொலியரக்கரில்வாதனும்வனப்பார்
எஞ்சலில்வலிச்சதசிரவியக்கனுமியைவார். உஅ

பானுவான்பிரசன்னியனெனும்பெயர்பரித்து
மீனமாமதிமேவுவன்பாத்துவாசப்பேர்
ஞானமாதவமுனிவனுநவில்விசுவாசி
ஆனபூவையுஞ்சேனசித்தெனுமடலோனும். உகூ

ஆடல்சேரயிராவதனெனுமரவரசும்
எடுலாந்தொடையியக்கரில்வாசனென்பவனும்
கேடிலாவலியரக்கரிற்கிருதுவுங்கெழுமி
நீடுசூரியன்றேரொடுசிலவுவரன்றே. ௩0

இன்னவாறிருவகைக்குழுவாமுருவெடுத்துப்
பன்னூனான்மறைகாண்பருமாயனும்பரமன்
மன்னுசீருலகளிக்குவன்கதிரலான்மற்றைத்
துன்னுவோரிருமூவர்தந்தொழில்களுஞ்சோறும். ௩௧

மாயனுங்கதிர்வானவன்றிருமுனர்மருவித்
தூயநான்மறைசொல்லிநின்றிருந்தவர்துதிப்பார்
மேயசீரமங்கையர்வானடம்விளைப்பார்
நேயமாயநல்விஞ்சையரின்னிசைநிரைப்பார். ௩௨

பகர்ந்தநாகரத்தேரினைமுறைமுறைபரிப்பார்
புகழ்ந்திராக்கதர்மாதவன்வந்திதம்புகல்வார்
திகழ்ந்தபூணணிவெற்பெனத்திரள்புயத்தரக்கர்
மகிழ்ந்துபற்றுவாரிரதமுன்வளைமணித்தாம்பு. ௩௩

தழைத்தபேரொளிநவமணிதமனியத்தழுத்தி
இழைத்ததேர்மிசைப்பானுவுக்கெதிர்முகமாகி
வழுத்துவார்புகழ்வாலகில்லியர்மனத்தன்பு
பழுத்தசீர்பெறுமறுபதினாயிரர்பணிந்தே. ௩௪

இந்தவெங்கதிர்க்கடவுளேமுதலெழுவரையும்
உந்தியொன்றுடைத்தேரவனுதயமாங்காலை
அந்தியென்றுசொல்பொழுதினுநிச்சலுமன்பால்
சிந்தைசெய்திடிற்றினஞ்செயும்பவந்தினந்தீரும். ௩௫

சூரியன்கதியுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் சுOச.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## கூ-வது, பாயிரமுரைத்தவத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தாரணிமாதுஞ்செய்யதாமரைமாதுஞ்சேரும்
காரணிமேனிநம்மான்கலைகளின்கலைகளாலே
சீரணிவயிராசப்பேர்திகழுருவாதியான
பேரணிபடிவமாகிப்பெரிதருள்புரிந்தவாறும். ௧

நாரதமுனிதன்றேற்றநலம்பெறவுரைத்தவாறும்
பாரதாரயவைவர்பார்புரந்தோம்புமாறும்
மாரதர்களத்தின்மாயமண்டமர்முடித்தமாயன்
நீரதிர்பாவைசூழுநெடுநகரடைந்தவாறும். ௨

மாற்றருஞ்சிறப்புவாய்ந்தமாலவனுவிகாப்ப
வேற்றிறல்விண்டுராதன்விளங்கிவந்துதித்தவாறும்
பாற்றினஞ்சுழலுங்கூர்வாட்பாண்டவர்வனத்திேனகிப்
போற்றுறும்பெருமைசாலும்பொன்னுலகடைந்தவாறும். ௩

விளம்பெழில்விண்டுராதன்விளங்கிவந்துதித்தவாறும்
வளந்திகழ்வனத்தினன்னேன்மருவிவெஞ்சாபமேவித்
தெளிந்துறுமுனிவர்சூழத்திருநதிக்கங்கையெய்திக்
களங்கனிவண்ணன்றன்னைக்கருதினனிருந்தவாறும். ௪

தூயகல்லறிவுவாய்ந்தசுகமுனியரசுகூற
மாயவனிலைமையெல்லாமன்னவன்கேட்டவாறும்
வேயிசைவடித்தோன்பாதம்விரும்பியன்பியற்றுமாறும்
மேயதத்துவங்களெல்லாமியன்முறையுதித்தவாறும். ௫

மணிநிறமாயனுந்திமலரயனுதித்தவாறும்
அணுமுதலாயகாலத்தளவையையறைந்தவாறும்
இணையறுசனகனாதியிருந்தவர்பிறந்தவாறும்
பணைமருப்புடையாண்கேழல்பாரெடுத்தளித்தவாறும். ௬

அருத்தியுற்றுறையும்வானோராதியருதித்தவாறும்
கருத்தமன்மாயனாயகபிலனையளித்தவாறும்
திருத்தியயோகநன்னூறெறித்தருள்கபிலன்சீர்சால்
உருத்திகழன்னையுள்ளமொளிபெறத்தெருட்டியாறும். ௭

மரீசியேமுதலினோர்தம்மரபினையிசைத்தவாறும்
அராவணிசடிலன்றக்கனருமகமழித்தவாறும்
நராதிபன்றுருவனென்பானற்பதமடைந்தவாறும்
தராபதிபிருதுமன்னன்சரித்திரந்தெரித்தவாறும். ௮

பிரசநாண்மாலைவேணேர்பிராசிகன்பிருகச்சாய
அரசர்தாழாவிர்த்தாணியறிவுறவறைந்தவாறும்
புரசைமாகளிநல்யானைப்புரவலனன்னோனீன்ற
தனைசொல்சீர்ப்பதின்மராயோர்தக்கனைத்தந்தவாறும். ௯

தோடவிழலங்கன்மாலைச்சுவாயம்புமனுமுனீன்ற
ஆடலஞ்சிலைக்கைமைந்தனவனியேழ்காத்தவாறும்
நாடகம்புரந்தசெங்கோனரபதிபரதன்கான்போய்ப்
பாடகத்தொடர்ச்சிபோன்றபழவினைபற்றுமாறும். ௧௦

நாவலந்தீவின்வண்மைநலம்பெறநவின்றவாறும்
காவலர்காத்ததீவேழ்கடலளவுரைத்தவாறும்
பூவுலகாதிமேலேழ்பொருந்துலகிசைத்தவாறும்
தாவருந்தபனன்செல்லுந்தன்மைமற்றிசைத்தவாறும். ௧௧

கீழுலகுரைத்தவாறுங்கிளர்நரகிசைத்தவாறும்
ஆழிகைத்தரித்தோன்பேர்கூறசாமிளனுயர்ந்தவாறும்
தாழ்பெறுமகிலரூபன்றகைபெறுகுரவனாக
எழுயர்களிநல்யானையிந்திரனடைந்தவாறும். ௧௨

கருத்துறீஇக்காக்குமாயன்கவசநன்கிசைத்தவாறும்
உருத்தனன்வரவேந்தானுமுரைபெறுமகிலரூபன்
விருத்திராசுரனென்போனைவீட்டினனொளித்தவாறும்
அருத்திசெய்மறைவலோரவ்வல்வினையகற்றுமாறும். ௧௩

சித்திரகேதுமன்னன்செய்திறனுரைத்தவாறும்
மத்தவெங்களிறுபோலும்மருத்துவாதியாய
வித்தகர்பிறந்தவாறும்விழைபுஞ்சவனமென்றோனும்
உத்தமவிரதமன்பாலுஞற்றுதலுரைத்தவாறும். ௧௪

திறற்சிசுபாலன்வீடுசேர்ந்தமைதெரித்தவாறும்
மறக்கரிபோன்றவெற்றிமருவுவாட்கனகன்மார்வம்
அறத்துணைமாயனுயவாளரிகீண்டவாறும்
உறத்தகுவருணநான்கோருஞற்றறமுரைத்தவாறும். சரு

இல்லறமியற்றுவோர்பேறென்னெனுந்தருமற்கன்பால்
நல்லனசதியுண்டென்னுநாரதனவின்றவாறும்
மல்லலஞ்சிறப்புவாய்ந்தமனுக்களைமனுக்கள்காலத்
தொல்லுணர்தன்மைமாயனுதிப்பதையுரைத்தவாறும். சகூ

களிற்றரசுரைப்பவாவிகாத்துமாலளித்தவாறும்
துளித்திரையுத்திவெற்பாற்சுதையெழக்கடைந்தவிண்ணோர்
களிக்கடலன்னமாயனமுதுணவளித்தவாறும்
ஒளிப்புறவவுணர்ப்போரிலும்பர்வென்றுயர்ந்தவாறும். சஎ

பாகினுமினியசொல்லாள்பங்கினன்பாரவிவேட்ட
மோகினியுருவமாகிமுகுந்தன்முன்னுற்றவாறும்
மாகளிறனையவைவச்சுதன்முதன்மனுக்களோடும்
சேகறுமன்னகாலஞ்சேருநர்த்தெரித்தவாறும். சஅ

வாமனவுருவமாகிமாவலிமகஞ்சென்றுற்றுத்
தாமரையனையசெங்கட்டற்பான்வளர்ந்தவாறும்
நாமகள்கொழுநற்குற்றநலந்திகழ்மாலைக்காலம்
பூமகள்புணருமாமால்போற்றுமீனுயவாறும். சகூ

இரவிதன்குலத்துமன்னனிளன்கதையுரைத்தவாறும்
தரைசொல்சையாதிசெய்யுஞ்சரித்திரஞ்சாற்றுமாறும்
புரிதருமன்பின்மிக்கான்புகலம்பரீடன்றன்னை
அரவணைமாயனேவவாழிகாத்தளித்தவாறும். உ0

கருதுசீர்மனுமுன்பெற்றகாவலனிக்குவாகு
மரபின்மாந்தாதாவென்னுமன்னவன்பிறந்தவாறும்
விரைசெய்தார்ப்புயத்தான்மெய்ம்மைமேவரிச்சந்திரப்பே
பொருவிலான்புருடமேதம்புகாறப்புரிந்தவாறும். உக

தாதுகுமலங்கல்வெள்வேற்சகரனென்றுரைக்கும்வேந்தன்
மேதகுபுரவிவேள்விவிரும்பினனிழைத்தவாறும்
பாதலமிறந்துளோர்க்காப்பகீரதன்பணிந்துபல்கால்
மாதவமுயன்றுகங்கைமாநதிகொணர்ந்தவாறும். உஉ

வேந்தர்தம்வேந்தனுயமித்திரசகனென்றேறதும்
ஏந்தல்கன்மாடபாதனெனும்பெயரடைந்தவாறும்
மாந்தளிரனையமேனிமலர்மகள்கொழுநன்வந்து
சாந்தணிந்தோங்குதிண்டோட்டயாதற்குதித்தவாறும். உங

செய்யபங்கயநேர்கண்ணன்றேவர்தஞ்செல்லறீர்ப்பான்
வெய்யவெங்கானினேகிவிழுத்தவர்க்கபயநல்கி
ஐயிருதலையினானையமர்க்களத்தடர்த்தபின்னர்
வையகமுழுதுங்காத்துவைகுந்தமேயவாறும். ௨௪

விட்டசெங்கதிர்களீரைஞ்ஞூறுடைவிமலன்போற்ற
மட்டவிழலங்கன்மாலைமனுமகன்வழியிற்றோன்றி
எட்டெனுந்திசையுங்காத்தாங்கிலங்குநல்லறிவுவாய்ந்த
நெட்டிலைவேற்கைவேந்தனிமிமரபுரைத்தவாறும். ௨௫

சந்திரன்றாரையென்னுந்தையலைமணந்துபெற்ற
புந்திதன்மதலைசெங்கோற்புரூரவாப்புகழ்செய்யாறும்
கொந்தவிழலங்கன்மார்வன்கோசிகன்பிறந்தவாறும்
அந்தமில்பரசுராமனவதரித்தருளுமாறும். ௨௬

மன்னவன்யயாதியிந்தமாநிலப்புரந்தவாறும்
பன்னுமம்மரபின்வண்சீர்ப்பரதன்வந்துதித்தவாறும்
அன்னவன்மரபிலைவராதியர்பிறந்தவாறும்
எந்நிலத்தவரும்போற்றுமெதுமரபுரைத்தவாறும். ௨௭

மகபதிமலரோன்முக்கண்வானவன்வழுத்தமாயன்
புகழ்வசுதேவனென்னும்புரவலர்க்கரசும்பொற்பால்
திகழ்மதிவதனச்செவ்வாய்த்தேவகியென்னுமாதும்
அகமகிழ்ந்தன்புகூரவவதரித்தருளுமாறும். ௨௮

மாதவர்சாபந்தன்னான்மனமருள்சாம்பனென்போன்
ஓதிருப்புலக்கைபெற்றாங்குவரிநீரிட்டவாறும்
பூதலத்தரசர்போற்றும்புகழ்வசுதேவன்கேட்ப
நாதனையறியுமன்புநாரதனவிற்றுமாறும். ௨௯

தத்துவமுரைத்தியென்றுதாண்மலர்வணங்கிநின்றாங்
குத்தவன்கேட்பக்கண்ணனுளந்தெளிவுறுத்தவாறும்
பைத்தலையரவினாடும்பசும்புயறனாதுதாமம்
மெய்த்தவவமரர்போற்றவிருப்புடனடைந்தவாறும். ௩௦

நினைவுறுகலியின்காலநிகழ்செயலுரைத்தவாறும்
வினையுறுபிரளயஞ்சேர்விதமெடுத்துரைத்தவாறும்
முனிவறுவிண்டுராதன்முத்திபெற்றுயர்ந்தவாறும்
அனையவன்மதலைபாந்தளருமகமாற்றுமாறும். ௩௧

நன்மறைவியாதனென்னுநற்றவக்கிழவனாய்ந்து
தொன்மறைபுராணநன்னூல்சுருக்கினன்சொற்றவாறும்
முன்மறைமார்க்கண்டேயன்மொழிபிரளயங்காணாறும்
பின்மறைவில்லாவெய்யோன்விபூதியுற்றியங்குமாறும். ௩௨

உரைத்தனனுணர்ந்தவாறிங்கொளிபெறுதவத்தின்மிக்க
அருத்தியுற்றுறையுமாசிலந்தணரேயிக்காதை
தெரித்திடுபதினென்ருயதிதிதுவாதசியிற்கேட்போர்
பிருத்துவைக்கடந்துமேலாம்வீடுபெற்றுவப்பர்மாதோ.

பாயிரமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் சுங.எ.

ஸ்ரீகிருஷ்ண சகாயம்.

## க0-வது, புராணவளவையுரைத்தவத்தியாயம்.

கலிநிலைத்துறை.

புகன்றவொன்பதிற்றிரட்டியாம்புராணநல்லளவை
பகர்ந்திடிற்பதினுயிரம்பிரமமாம்பற்பம்
அகன்றவைம்பத்தையாயிரமாயறிவுறுத்தும்
திகழ்ந்தசொற்றொடைவைணவத்தளவையைத்தெரிக்கின்.

சாற்றுமூவிருபத்துமூவாயிரஞ்சாரும்
ஏற்றசைவமெண்மூன்றினுயிரமியைந்திருக்கும்
போற்றுபாகவதம்மெனச்சொல்லுமிப்புராணம்
ஆற்றல்சேர்ந்தசொற்றொடைபதினெட்டினுயிரமே.

நாரதீயமென்றுரைதருநவையறுநன்னூல்
சீரின்மேம்படுமிருபத்தையாயிரஞ்சேரும்
ஏரினன்மிகுவாக்கினேயப்பெயரியைநூல்
பாரினோர்புகழ்பதினையாயிரத்துநானூறே.

மருவுசொற்பெறுமார்க்கண்டேயப்பெயர்மதிநூல்
விரவுமொன்பதினுயிரமுற்றிடும்விரிந்த
தரைசொனல்லறஞ்சாற்றியபௌடிகத்தனிநூல்
உரைசெயேழிரண்டாயிரத்தோடுமைஞ்ஞூறே.

பேசுநல்லறிவுறுத்தியபிரமகைவத்தம்
ஆசிலாப்பதினெட்டினுயிரமெனவறைவார்
தேசுலாவியவிலிங்கமென்றுரைத்திடுந்திகழ்நூல்
மாசிலாப்பதினென்றினுயிரமெனவருமே.

நற்றவத்தினர்க்கிதஞ்செயும்வராகமாநன்னூல்
சொற்றிடின்னிருபத்துநாலாயிரத்தொகையாம்
கற்றுவல்லவர்நாடொறும்புகழுநற்காந்தம்
உற்றவெண்பத்தோராயிரத்தொடுமொருநூறே.

வாமனம்பதினாயிரத்தொகைபெறவயங்கும்
நாமநன்னெறிக்கூர்மமென்றுரைபெறுநன்னூல்
ஏமமன்னியவெழிற்பதினேழினாயிமாம்
ஆமரும்புகழ்மச்சமீரேழினாயிரமே. ௭

நீதிதுன்றுகாருடமெனும்பெயர்நிகழ்நன்னூல்
ஓதுகின்றபத்தொன்பதினாயிரமுறுமால்
வேதநுண்பொருள்வெளிப்படச்சொல்பிரமாண்டம்
கோதறும்புகழாறிரண்டாயிரங்குலவும். ௮

உண்ணயங்கொளவுரைத்தநூலொன்பதிற்றிரண்டும்
எண்ணுறுந்தொகைநான்குநூறாயிரமியையும்
நண்ணுறும்பதினெட்டினுணவின்றவிர்நன்னூல்
தண்ணறுந்துளவணிபரன்சதுமுகற்குரைத்தான். ௯

உந்திநாண்மலருதித்துறைசதுமுகற்குவப்பால்
இந்தநூலினையிசைத்ததென்காரணமென்னின்
அந்தமாதிமற்றிடையினுஞானமாமதனால்
சிந்தைசேரும்வெந்துயர்தவிர்த்திடவிதுதெரித்தான். ௧௦

இன்னநற்கதைகேட்குநரெழுதுநரிசைப்போர்
பின்னல்வெண்டிரைப்பார்புகழ்பெருந்திருவினராய்
மன்னுகின்றவராகியும்வல்வினைமருவார்
நன்னலந்தருமால்பரந்தாமநண்ணுவரால். ௧௧

புகன்றவிக்கதைகேட்குநர்பூசுரராயின்
அகந்தெளிந்தறிவடைகுவரரசர்மற்றாயின்
திகழ்ந்தசெங்கதிராமெனப்பகையறத்திகிரி
மகிழ்ந்துமாநிலமுழுவதுமோச்சுவர்மாதோ. ௧௨

வணிகராமெனின்வளந்தருமளகைமன்னவன்போல்
தணிவிலாநிதிபெறுகுவர்சாற்றுபின்னவரேல்
பணிகொடோல்விடுபொன்மைபோற்பாவவெங்குழுவிட்
டணியினன்மிகுந்தவனியின்விளங்குவரன்றே. ௧௩

பழுதிலிப்புராணத்தினிலொருபதமேனும்
எழுதினோர்கதையிசைக்குநர்கேட்குநரெவரும்
தொழுதகுந்திருமங்கையின்னருணனிசுரப்ப
முழுநலத்தினராகிநன்முத்திபெற்றுறைவார். ௧௪

கலிவிருத்தம்.

இனையநூல்கேட்குநர்யாதுவேண்டினும்
மனனுவந்தளிக்குவர்மனுக்கள்வானுளோர்
வினையறுதென்புலமேயமேலவர்
முனிவரர்விஞ்சையர்முதலினோர்களே. ௧௫

கனைத்துவண்டிமிர்துழாய்க்கண்ணன்மாக்கதை
மனத்துறவழங்குநர்மகிழ்ந்துகேட்குநர்
வினைத்திருக்கற்றுறுமெய்ம்மையாதியர்
நினைத்தனபெற்றிவணீடுவாழியே. ௧௬

புராணவளவையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௬௫.

கூ-வது, ஸ்கந்தம் முற்றிற்று.

## ஸ்ரீமத்பாகவதபுராணம் முற்றிற்று.

திருவிருத்தமுழுத்தொகை சகூ௭0.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

அபியுக்தரொருவர்செய்த

நேரிசைவெண்பா.

கம்பனென்றுங்கும்பனென்றுங் காளியொட்டக்கூத்தனென்றும்
கும்பமுனியென்றும்பேர்கொள்வாரோ—அம்புவியில்
மன்னுவலர்புடைசூழ் வாழ்குடந்தையாரியப்பன்
அந்நாளிலேயிருந்தக்கால்.



ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணுயநமஃ

# கந்தார்த்தியாயமுறையும்,

## திருவிருத்தத் தொகையும்.

### முதற்கந்தம்.



### உ-வது, ஸ்கந்தம்.



### ங-வது, ஸ்கந்தம்.

எண். பக்கம். பாட்டு.

## அ-வது, ஸ்கந்தம்.



## கூ-வது, ஸ்கந்தம்.



## க0-வது, ஸ்கந்தம்.

ஆ திருவிருத்தம் ௪௯௭௰.

